# அரசியலுக்கு ஓர் அறிமுகம்

(AN INTRODUCTION TO POLITICS)

ஆசிரியர்

ரோஜர் எச். சோல்ட்டௌ,

அரசியல் துறைப் பேராசிரியர்,
அமெரிக்கப் பல்கலைக் கழகம், பெய்ரூட்.

தமிழாக்கம்

டி. செல்லப்பா,

எம்.ஏ. (பொருளாதாரம்) எம்.ஏ. (அரசியல்)
பொருளாதாரத்துறைத் தலைவர், அரசினர் கல்லூரி, வேலூர்.



தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு - அரசாங்கம்

தமிழ் வெளியீட்டுக் கழக வெளியீடு - 50

# அரசியலுக்கு ஓர் அறிமுகம்

## (AN INTRODUCTION TO POLITICS)

ஆசிரியர்

ரோஜர் எச். ஸோல்ட்டா,

அரசியல்துறைப் பேராசிரியர்,
அமெரிக்கப் பல்கலைக் கழகம், பெய்ரூட்.

தமிழாக்கம்

செல்லப்பா,

எம்.ஏ. (பொருளாதாரம்); எம்.ஏ. (அரசியல்),
பொருளாதாரத் துறைத் தலைவர், ஊரிசுக் கல்லூரி, வேலூர்.




தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு - அரசாங்கம்

# அணிந்துரை

எம். பக்தவத்சலம், தமிழக முதலமைச்சர்

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக்கி நான்கு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ., வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்லமெல்ல மறைந்துவருகின்றன. நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித்தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே திருப்திகரமாக நடைபெற்றுவருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான அரசியலுக்கு ஓர் அறிமுகம் என்ற இந் நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 50ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 85 நூல்கள் வெளிவந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலையாசனத்தில் அமர்ந்துள்ளாள். எனவே, இவ் வன்னையை வாழ்த்துவோமாக. உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பலவகை உதவிகளுக்கும், ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

எம். பக்தவத்சலம்

# ஆசிரியரின் முகவுரை

பெய்ரூட் அமெரிக்கப் பல்கலைக் கழகத்தின் உபயோகத்திற்காக இந் நூல் முதலில் எழுதப்பெற்றது. 1945–1946 ல் இலண்டன் பொருளாதாரக் கழகத்தில் நடைபெற்ற அதுபோன்றதொரு பயிற்சிக்கு ஆதாரமாகவும் இந் நூல் உபயோகிக்கப்பட்டது. ஏனைய பல்கலைக் கழகங்களுக்கும் முதியோர் வகுப்புகளுக்கும் இது அதிகமாக உபயோகிக்கப்படலாம் என நான் நினைக்கிறேன். பொருளைப் பொறுத்த அளவில் நிரம்பிய முன்னறிவு எதையும் இது எதிர்பார்க்கவில்லை. ஆனால், பொதுவான வரலாற்றில் ஓரளவு பரிச்சயத்தைமாத்திரம் எதிர்பார்க்கிறது. அதுவும் சாதாரண எடுத்துக்காட்டுக்களைப் புரிந்துகொள்வதற்குத் துணையாக இருக்குமளவு பரிச்சயம் இருந்தால் போதுமானது.

பொருளடக்கம் மிக விரிவாகக் கொடுக்கப்பட்டிருப்பதாலும், விரிவான நூல் விவரப் பட்டியல் சேரப்பெற்றிருப்பதாலும், என்னுடைய வெளியீட்டாளர்களோடு கலந்த பின்னர்ப் பொருளகர வரிசை இதற்குத் தேவையில்லை என்று முடிவு செய்தேன்.

பெய்ரூட்டில் என்னுடைய துணையாளர்களான திருமதி. பமீலா லாக்கெட் பாராகட் (Mrs. Pamela Lochett Barakat), திருவாளர்கள் ஆல்பவி, டியூனி, சுவிய்யா (Messrs. Albawi, Tueni, Zuwiyyah) ஆகியோருக்கு என் நன்றி உரித்தாகுக.

அபரிஸ்ட்வித் வேல்ஸ் பல்கலைக் கழகக் கல்லூரியின் ஆசிரியர்களுள் ஒருவனாக இரண்டு பருவங்கள் நான் பணியாற்றியபோது என் உடன் பணிபுரிந்த திருவாளர்கள் சிட்னி ஹெர்பர்ட்டும், ஐயுவான் ஜானும் (Sydney Herbert, Ieuan John) எனது கையெழுத்துப் பிரதியைப் படித்துப் பார்த்து, விளக்கம் தேவையான இடங்களைச் சுட்டிக்காட்டியமைக்கு எனது நன்றி. எப்பொழுதும் போல அயராது ஊக்கமளித்தும், இந் நூலின் பிரதியை மறு பரிசீலனை செய்தும், பல பிரச்சினைகளைப்பற்றிய ஆராய்வுக்குப் பயனுள்ள பல ஆலோசனைகளைத் தந்தும் வந்த என் மனைவிக்கு முக்கியமாக என் நன்றி உரியதாகும்.

பெய்ரூட்,
அக்டோபர், 1950

ரோஜர் எச். ஸோல்ட்டா

# மொழிபெயர்ப்பாளரின் முன்னுரை

'சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம் தமிழ் முழக்கம் செழிக்கச் செய்வீர்' என்பது கவிஞனின் கட்டளை. அதை நிறை வேற்றும் பல வழிகளுள், 'பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்களைத் தமிழ் மொழியில் பெயர்த்தல்' ஒரு வழியாகும். இந் நூலும் அவ் வழியைப் பின்பற்றும் முயற்சியின்பாற்பட்டதே.

'அரசியல்' எவருக்கும் நுட்பமானதாகவோ புதிதாகவோ தோன்றுவதில்லை. அதன் அடிப்படைக் கருத்தோட்டங்களும், கொள்கைகளும் மேலெழுந்தவாரியாகப் பார்க்குமிடத்து எளிமை யானவையாகவும், தெளிவானவையாகவும் தோன்றினும், அவற்றை விளக்கப் புகும்போதுதான் அவற்றின் அருமை தெரிகிறது. பேரா சிரியர் ஸோல்ட்டா அவர்கள் தம் நூலின் பெரும்பகுதியை ஜன நாயக நடைமுறையை விளக்குவதற்காகப் பயன்படுத்தி யிருக்கிறார். அரசியல் விழிப்பும், உணர்ச்சியும் பெருகிவரும் இந் நாளில் அரசியற் கருத்துகளைப் புரிந்துகொள்வது அவ்வாறான வளர்ச்சிக்குப் பெரிதும் துணைபுரியும்; அவ்வகையில் இந் நூல் பொதுமக்களுக்கும் மாணவர்களுக்கும் மிகவும் பயன்தரும் என நம்பலாம்.

அரசியல் கருத்துக்கள் அனைத்தும் எல்லோராலும் ஒரு முகமாக ஒப்புக்கொள்ளக்கூடியவை யல்ல. கருத்து வேறுபாடுகள் இருப்பதே நமது அரசியல் சாத்திரத்தின் உயிர்நாடி யாகும். எனவே, இங்குச் சொல்லப்பட்டிருக்கும் கருத்துக்களனைத்திலும் நமக்கு உடன்பாடு இருப்பதாக எண்ணிவிடக்கூடாது. பெய்ரூட் நகரத்திலுள்ள அமெரிக்கப் பல்கலைக் கழக மாணவர்களுக்கும், பொதுமக்களுக்கும் பயன்தரும் வகையில் இந் நூல் எழுதப்பட்ட தாக மூல ஆசிரியர் கூறுகிறார். இப்பொழுது அது தமிழ் நாட்டிற்கும், தமிழ் மக்களுக்கும் பயன்தர இருக்கிறது. அவர் தம் எடுத்துக்காட்டுக்கள் ஐரோப்பிய வரலாறுகளிலிருந்து எடுக்கப் பட்டவை. எனவே, இதைப் படிக்கும் மாணவர்கள் ஓரளவிற்கு—ஐரோப்பிய வரலாற்றை—ஆரம்ப நூல்களைக்கொண்டு அறிந்து கொள்வது சாலப் பயனுடைத்தாகும்.

இனித் தமிழாக்கம்பற்றி ஓரிரு சொற்கள். பல கருத்துக்களை விளக்க வளமான சொற்கள் கிடைக்கவில்லை. இன்றைய தமிழ்

நாட்டில் செய்தித் தாள்களும், வார இதழ்களும் பெருகி வருகின்றன. பெரும்பாலும் அவை அரசியல் சார்புடையவை. எனவே, அவை பயன்படுத்தும் பல சொற்கள் இன்று வழக்கத்தில் வந்துவிட்ட காரணத்தால் நானும் அவற்றைப் பயன்படுத்தியுள்ளேன். 'ஜன நாயகம்', 'சர்வாதிகாரம்', 'ஏகாதிபத்தியம்', 'கம்யூனிசம்', 'சோஷியலிசம்', 'பாசிசம்' போன்ற சொற்கள் சாதாரண மனித னுக்கும் தெரிந்திருப்பவை யாதலின் அவற்றை அவ்வாறே பயன் படுத்தியுள்ளேன். அவற்றின் பொருள் கண்டு வேறு சொற்களைத் தூய தமிழில் அமைப்பது நல்லதுதான் எனினும், கருத்து வளர்ச் சிக்கு அஃது இடையூறாக அமையக்கூடும் என்ற காரணத்தால் வழக்கத்திற்கு வந்துவிட்ட சொற்களையே பயன்படுத்துவது தமிழ் மொழி ஆக்கத்திற்கும், கருத்து வளர்ச்சிக்கும் நல்லதெனக் கருது கிறேன்.

தமிழைக் கல்லூரிப் பயிற்சி மொழியாகவும், அரசாங்க மொழி யாகவும் ஆக்கப் பெருமுயற்சிகள் எடுக்கப்பட்டு வருகின்றன. சென்னை அரசினரும் பல்கலைக் கழகமும் செய்துவரும் இப் பெரும் பணியில், எனக்கும் பங்கு கிடைத்தமை நான் பெற்ற பேறேயாகும். இவ்வித வாய்ப்பினை நல்கிய தமிழ் வெளியீட்டுக் கழகத்தாருக்கு என் நன்றி உரித்தாகுக.

வேலூர்
10—3—1964

டி. செல்லப்பா

# பொருளடக்கம்

# 1. இவையெல்லாம் எதைப்பற்றி?

'வினவை யன்றி மனிதன் வேறு என்ன? இவன் இங்கிருப்பதே அதற்குத்தான். நியாயமான—துணிவான—கேள்விகளைக் கேட்கவும், பணிவடக்கத்துடன் பதில்களுக்குக் காத்திருக்கவும்தான். போதுமான அளவு துணிவுடன் கேட்காதது, தன்னைத்தானே திருப்தி செய்துகொள்ளும் வகையில் பதிலைக் கூறிக்கொள்வது ஆகியவையே எல்லாத் தவறுகளுக்கும் மூலமாகின்றன.'

—ரேச்சல் வான் ஹேகன் (Rachel Von Hagan)
(18ஆம் நூற்றாண்டின் பெண்ணுரிமைப் போராட்ட அங்கத்தினர்)[1]

எவையெவை எவ்வாறிருக்க வேண்டுமோ அவை அவ்வாறே இருக்கின்றன. அவைகளின் விளைவுகள் எப்படி ஆகவேண்டுமோ அப்படியே ஆகும். எனவே, ஏமாற்றமுற நீங்கள் ஏன் விரும்புகிறீர்கள்?

—பிஷப் பட்லர் (Bishop Butler)

## (i) 'அரசியல்' என்றால் என்ன?

அரசைப்பற்றிப் படிக்கிற இயல் அல்லது அரசியல் விஞ்ஞான நூல் அரசியலாகும். 'அரசைப்பற்றி' என்றால் என்ன? 'பாலிஸ்' (Polis) அல்லது நகரத்தைப்பற்றியது அல்லது அதைச் சேர்ந்த ஒவ்வொரு விஷயமும் அரசியல் சார்புடையதே. நகரம் இப்பொழுது முன்னைப்போலப் பொதுவாழ்வின் கேந்திரமாக அமையவில்லை. ஆகவே, மிகச் சரியாகச் சொல்ல வேண்டுமானால், சமுதாயத்தைப்பற்றி அல்லது அதைச் சேர்ந்த விஷயங்களைப்பற்றிப் படிப்பதுதான் அரசியல் ஆகும்.

[1] மேரி பியர்ட் (Mary Beard)ன் 'Rise of Women' என்ற நூலில் மேற்கோள் காட்டப்பெற்றிருக்கிறது. பக்கம் 477.

அப்படியானல், நாம் ‘அரசியல்’ என்று பேசும்போது நம்முடைய பொதுவாழ்வைப் பாதிக்கும் எல்லாக் காரியங்களையும் பற்றிக் குறிப்பிடுகிறோமா என்றால், அதற்குப் பதில், ‘இல்லை’ என்று தான் சொல்லவேண்டும். நம்முடைய பொதுவாழ்வின் எந்த அமிசமும், எப்பொழுதாவது எப்படியும் அரசியல் சார்பு பெறுமல் இருக்க முடியாது. என்றாலும் ‘அரசியல்’ என்ற சொல்லைச் சமுதாயத்தின் பெயரால், சமுதாயத்திற்காக அதன் விவகாரங்களை மேற்பார்வையிடுகின்ற ஓர் ஆணைக் குழுவோ அல்லது மாற்றாளோ (Agent) நிருவகிக்கின்ற பொது விவகாரங்களைமட்டுமே குறிப்பிடும் வண்ணம் இச் சொல்லைச் சிறப்பாகப் பயன்படுத்துகிறார்கள். இந்த ஆணைக் குழு அல்லது மாற்றாளை நாம் ‘அரசு’ என்று அழைக்கிறோம்.

அரசின் மேற்பார்வையிலும், அதன்மூலமாகவும் நடைபெறும் சமுதாயத்தின் செயல்கள் அரசியல் நடவடிக்கைகள் ஆகும். எனவே, எது அரசியல் நடவடிக்கை; எது அல்ல என்பது மாறிக் கொண்டே வந்திருக்கிறது. பல நூற்றாண்டுகளாக, அரசனது மதத்தின் சில முறைகளைக் கட்டாயப்படுத்தியும், மற்ற முறைகளைச் சட்டவிரோதமாக்கியும் வந்த காரணத்தால், மதம் ஓர் அரசியல் விவகாரமாகவே இருந்தது. இப்பொழுது உலகம் முழுவதிலும் ஒரே ஒரு நாட்டில்தான் அங்கு வாழும் மக்கள் எல்லாம் ஒரே மதத்தைச் சேர்ந்தவர்களாக இருக்கவேண்டும் என்ற கட்டாயம் இருக்கிறது. அது ஹெட்ஜாஸ் (Hedjas) என்று நம்புகிறோம். சில நாடுகளில் அரசர்கள், சட்டப்படி குறிப்பிட்ட ஒரு மதத்தைச் சேர்ந்தவர்களாக இருக்கவேண்டும் என்றிருக்கிறது (கிரேட் பிரிட்டன், சிரியா, ஸ்பெயின், ஸ்காண்டிநேவிய முடியரசு நாடுகள் இவை). ஒரு நாடு அதிகாரபூர்வமாக மதத்திற்கு ஊக்கம் கொடுக்காது, தங்கள் அதிகாரிகளுக்கு மதபோதனை செய்யும் உரிமையையும் மறுக்கிறது (ருஷ்யா). மதச் சார்புகளோடு நெருங்கிய தொடர்புகொண்ட பாராளு மன்றப் பிரதிநிதித்துவம் அராபிய நாடுகளில் காணப்படுகின்றது பெரும்பான்மையோர் மதங்களை அடிப்படையாகக்கொண்டு சமீப காலத்தில் இரண்டு புதிய நாடுகள் தோன்றியிருக்கின்றன (இந்தியாவும் பாகிஸ்தானும்). ஆனால், பெரும்பான்மையான நாடுகளில் மதத்தின் விவகாரங்களில் அரசு கவனம் செலுத்துவதோ அல்லது குறிப்பிட்ட மதத்திற்கு அதிகாரபூர்வமான ஊக்கம் அளிப்பதோ கிடையாது.

ஃபிரான்சு, ருஷ்யா ஆகிய நாடுகளில் உள்ளதுபோலக் கல்வி, அரசின் கட்டுப்பாட்டுக்குக் கீழ் இருக்கலாம். அப்படி இருந்தால் கல்விப் பிரச்சினைகள் அரசியல் சார்பு பெற்றுவிடுகின்றன. நியமனங்கள், கல்வித் திட்டங்கள் ஆகியவை அடியோடு கல்வியின் அடிப்படையில் அல்லாமல் வேறு காரணங்களைக் கொண்டு முடிவு

செய்யப்படலாம். மேலும், பொருளாதார வாழ்க்கையில், முழுவதாகத் தலையிடாமலிருத்தலிலிருந்து கண்டிப்பான விதிமுறை அமைப்பதுவரை பலவித முறைகளில் அரசின் குறுக்கீடு நிகழ்ந்திருக்கிறது. மக்களுள் பலவித வகுப்பாரும் என்னவித உடையணிந்திருக்க வேண்டும் என்பதை அரசு தீர்மானித்த காலங்களும் உண்டு. இடைக்காலத்தில் இப்படிப்பட்ட 'கொடூரச் சட்டங்கள்' (Sumptuary laws) அடிக்கடி இயற்றப்பட்டன.] அல்லது குறிப்பிட்ட மூலப்பொருள்கள் குறிப்பிட்ட நகரங்களில்தான் உற்பத்தி செய்யப்பட வேண்டும் என்று ஆணை பிறப்பிக்கப்பட்டது. [ஃபிரான்சில் புரட்சிக் காலத்துக்கு முந்திய முடியரசாட்சியில் (Ancien Regime) இது நிகழ்ந்தது.] கம்பளி நெசவுத் தொழிலுக்கு ஊக்கம் அளிக்கும் நோக்கத்தோடு கம்பளித் துணியால் சுற்றித்தான் இறந்தவர்களைப் புதைக்க வேண்டும் என்ற சட்டம் பதினேழாம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் இருந்தது. இடைக்கால நிலப் பிரபுத்துவத்தின் போது, அரசின் ஏகபோக அதிகாரங்களாக நாம் கருதுகிற போலீஸ், நீதி வழங்கல், நாணயம் அச்சடித்தல், இராணுவத்திற்கு ஆள் சேர்த்து யுத்தம் செய்தல் போன்ற அதிகாரங்கள் பெரும்பாலும் தனியார் கைகளில் இருந்தன. நாஜி ஜெர்மனியில் அநேகமாக எல்லாக் காரியங்களும் 'அரசியல் விவகாரங்கள்'தான். 'கட்டாயமாக்கப்படாதவை எவையோ அவை தடை செய்யப்பட்டன' என்று வேடிக்கையாக அந்த நாட்டைப்பற்றிச் சொல்லப்பட்டது. இன்றைய 'ருஷ்யா'வில் அநேகமாக எல்லாமே 'அரசியல்' சார்புடையவைதான். 18ஆம் நூற்றாண்டிலும் 19ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் இங்கிலாந்தில் அரசின் விவகார எல்லை மிகவும் குறைவாக்கப்பட்டு அரசு செயலாற்றுவதே கடினமானதொரு காரியமாக இருந்தது.

'அரசியல்', 'அரசியல் சார்பு' ஆகிய சொற்றொடர்கள் காலத்துக்குக் காலம், இடத்துக்கு இடம் மாறும் தன்மையுடையன. கொள்கையளவில் பார்க்கப்போனால், நமது கூட்டு வாழ்க்கையின் எந்தத் துறையும், அரசின் மேற்பார்வைக்குக் கொண்டுவரப்படும் போது 'அரசியல் சார்பாக' ஆகாமல் இருக்க முடியாது. ஆனால், இன்றைக்குள்ள எல்லாச் சமுதாயங்களிலும், குறிப்பிட்ட எந்தக் காலத்திலும் எது அரசியல் சார்புடையது, எது சார்பற்றது என்பது தெளிவாகப் பாகுபாடு செய்யப்பட்டிருக்கிறது. இதன் தன்மையிலும் போக்கிலும் அரசின் பங்கு மிகவும் மாறுபட்டாலும் இப் பாகுபாடு இருக்கத்தான் செய்கிறது.

அரசியலை எவ்வளவு குறுகிய ஒரு கண்ணோட்டத்தோடு பார்த்தாலும், 'அது பொறுப்புணர்ச்சியுடைய ஒவ்வொருவரின் கவலையுமாகும்' என்ற முடிவுக்கு வந்துதான் ஆகவேண்டும்.

ஏனெனில், ஒவ்வொருவரும் அதனுல் பாதிக்கப்படுகிருர்கள். நாம் பின்பற்றும் சட்டங்கள் அல்லது விதிகள் ஆகியவைகளின் தன்மைகள், அவற்றின் நேர்மை, அவற்றில் பொதிந்துள்ள கருத்து, அவற்றைப் பிரயோகிக்கும் திறமை, நமது நீதித்துறையின் தூய தன்மை, பொது நிதியை நல்லபடி நிர்வகிப்பது—அதாவது நிதி சேகரிக்கப்படும் வழியிலுஞ் சரி, அது செலவழிக்கப்படும் முறையிலுஞ் சரி—அதிகாரிகளின் நேர்மை, போதுமான அளவிற்குச் சுகாதாரத்தைப் பேணுதல், யுத்தம் தவிர்த்தல், போதுமான நாட்டுப் பாதுகாப்பு அமைத்தல் இவை போன்றவற்றிலும் இன்னேரன்ன பிரச்சினைகளிலும் எந்த மனிதனும் கவலையற்று இருக்க முடியாது. நவீன காலக் குடியாட்சி முறைகள், 'எல்லோரையும் பாதிக்கும் காரியங்கள் எல்லோராலும் ஒத்துக்கொள்ளப்பட வேண்டும்' என்ற பழைய கொள்கையை அடிப்படையாகக்கொண்டு எழுந்தவைதான்.

## அக்கறையின்மைப் பிரச்சினை

'அரசியலில் ஆர்வம் இல்லையென்று' பெருமையோடு பலர் எப்படிச் சொல்கிருர்கள்? நிச்சயமாகக் கற்பனையில்லாமை ஒரு பதிலாகும். தங்களைத் தவிர வேறு எதையும் கவனிக்காத மனிதர்களும் இருக்கிருர்கள். அவர்களால் அரசின் கொள்கைகள் எவ்வளவாகத் தங்களது நலனேடு பிணைந்திருக்கிறது என்பதை உணர முடிவதில்லை. இருந்தபோதிலும் இப்படிப்பட்டவர்களின் எண்ணிக்கை வெகுவாகக் குறைந்து வருகிறது. இந்த நூற்றுண்டின் ஆரம்ப நாட்களை நினைவுபடுத்திக்கொள்ளக்கூடியவர்கள், 1914ஆம் ஆண்டுவரை இங்கிலாந்தின் பொதுமக்கள் அபிப்பிராயம் எவ்வளவாக வெளிநாட்டு விவகாரங்களில் அக்கறை இல்லாமல் இருந்து, முதலாம் உலக யுத்தத்திற்குப் பின் அது எவ்வாறு மாற்றமடைந்தது என்பதை நினைத்துப் பார்க்கலாம். அந்தக் காலத்திற்குப் பின் போர், சமாதானம் போன்ற பிரச்சினைகள் எல்லோருக்கும் எவ்வளவு முக்கியமானதாகப் பட்டன என்பதைக் காணுதிருக்க எவராலும் முடியாது. நவீன அரசியல் குடிமகன் நேரடியாக ஒன்றுஞ் செய்துவிட முடியாது என்று, வேறு சிலர் கூறக்கூடும். ஒரே ஒரு வாக்காலும் ஒரே ஒருவரின் தனி அபிப்பிராயத்தாலும் என்ன பயன் விளைந்துவிடப்போகிறது என்று கேட்கலாம். அது உண்மைதான் எனினும், ஒன்றுமில்லாததற்குக் கொஞ்ச மிருப்பது நல்லது அல்லவா? சாதாரணத் தனி மனிதனின் எண்ணங்களை வெளியிடுவதற்கென்றும், அவன் செல்வாக்கைப் பிரயோகிப்பதற்கென்றும் பல சங்கங்கள், அமைப்புகள் இருக்கின்றன. இவற்றின்மூலமாகச் சாதாரண குடிமகன் தான் நினைப்பதற்கும் அதிகமாகச் சாதிக்க முடியும்.

அரசியல் வாழ்க்கையின் பெரும்பகுதி 'உண்மையற்றது'; தேர்தல்கள், பாராளுமன்ற விவாதங்கள், கட்சிகள் எல்லாமே பெரும்பாலும் பொம்மலாட்டங்கள்; உண்மையான அதிகாரம் நமது கைக்கு எட்டாத அளவில் திரைமறைவில் இருக்கிறது என்ற அபிப்பிராயங்கள் இன்னும் கெடுதலானவை. பின்னல் இதுபற்றி விரிவாக விவாதிக்கலாம். இப்போதைக்கு, மேற்சொன்னவை ஓரளவுக்கு உண்மைதான் என்று ஒத்துக்கொண்டாலும், எல்லாச் செயல்திறம் மிக்க குடிமக்களும் ஒன்று சேர்ந்து, இந்த 'மறைமுகமான அதிகாரத்தை' மிகக் குறைந்த அளவுள்ளதாக்கலாம். மேலும், அறிவுள்ள பொதுமக்கள் அபிப்பிராயத்தை அமைப்பதன்மூலம் மறைமுக அதிகாரத்தின் தீய சக்திகளை எதிர்க்கவும் செய்வது நல்லதல்லவா ?

அரசியலில் ஆழ்ந்த அக்கறை காட்டுவதற்கு எதிர்மறையாக விளங்குவது, பொறுப்பற்ற மனிதர்களிடத்தும் பழிக்கஞ்சாத பேராசை பிடித்த கட்சித் தலைவர்களிடத்தும் அரசியலை விட்டு விடுவதுதான். விவேகமான எதேச்சாதிகாரி ஒருவர் அல்லது தன்னலமற்ற ஆளும் வர்க்கம் ஒன்று சிறப்பாகப் பொது விவகாரங்களைக் கவனிக்கக்கூடும் என்று கொள்கையளவில் நினைப்பது சாத்தியமே. ஆனல், எதேச்சாதிகாரி விவேகமுள்ளவராகவும், ஆளும் வர்க்கம் தன்னலமற்றதாகவும் இருப்பது அபூர்வம் என்று வரலாறு காட்டுகிறது. பெரும்பான்மையோரின் ஆட்சியில் சந்தேகமின்றிக் குறைபாடுகள் உள்ளன. ஒருவரின் ஆட்சியையோ அல்லது சிலரால் ஆட்சி செய்யப்படுவதையோ விரும்புவது ஒவ்வொருவரின் தனியுரிமை. ஆனல், அப்படிப்பட்ட விருப்பம் ரோமாபுரியின் சக்கரவர்த்திகள், வெனிஸ் நகரத்துப் பிரபுக்கள், அல்லது நவீன காலத்துச் சர்வாதிகாரிகள் ஆகிய வரலாற்று முன் நிகழ்ச்சிகளைக்கொண்டு நியாயமானதென்று மெய்ப்பிக்கக் கூடாது. விளைவுகளில் அக்கறையுள்ள எல்லோரும், எவ்வளவு சிறியதாயினும், பொதுக்காரியங்களில் கொஞ்சமாவது பங்கெடுத்துக்கொள்ள அனுமதிப்பது இதைவிட நல்லது.

இன்றைக்குள்ள ஒரு நவீனத்தின் கதாநாயகன் பேசுகிறுன்: அரசியல் மிகுதியான முக்கியத்துவம் வாய்ந்தது. உலகம் சிறுகச் சிறுக, அதிகமாகச் சிக்கலில் மாட்டிக்கொள்ளக்கொள்ள, இன்னும் இரத்தக் களரியாக மாறமாற, அரசியல் முன்னைவிட அதிக முக்கியத்துவம் பெறுகிறது. அவனும் அவனது காதலியாகிய கார்லாவும் (Carla) இரண்டே பேர். ஆனல், இரண்டு பேர்களுக்குப் பதிலாக இரண்டு பில்லியன் மக்கள் ஒன்ருக வாழும் வழியைத் தேடிப் போராடி அதில் அவர்களுக்கு வெற்றி கிட்டாமலும் இருக்கின்றதுதான் அரசியல்.'

எனவே, அரசியல் ஒவ்வொரு மனிதரின் தொழில் என்ற நம்பிக்கையிலேதான் இந்த நூல் எழுதப் பெறுகிறது. வாசிப்பவருக்கு ஆசிரியரின் நோக்கம் அல்லது உட்கருத்து என்ன என்று ஒளிவு மறைவில்லாமல் அறிவிக்கப் பெறுவது நல்லது. 'எதேச்சாதிகார' அல்லது 'சர்வாதிகார' அரசாங்க முறைகளுக்கு எதிராகக் 'குடியாட்சி' முறைகள் என்று பொதுவாக அழைக்கப்படும் முறைகளில் நமது நம்பிக்கையை நாம் மறைக்க முயற்சி செய்யக்கூடாது. அது தனியாரின் பொறுப்புணர்ச்சிக்குக் கொடுக்கும் இடத்தைப் பொறுத்தும், குடியுரிமை உணர்ச்சி பரவி வளர்ந்திருக்கிறதைப் பொறுத்தும், சாதாரண மனிதனுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் தருணங்களைப் பொறுத்தும் ஓர் அரசின் நல்ல தன்மை அமைந்திருக்கும். இதைத் தவிர, வேறு ஒத்துக்கொள்ளக்கூடிய மரபை நாம் அறிவோம்.

## ஆய்வுப் பொருளாக அரசு

அரசைப்பற்றி ஆய்வது அரசியல் சாத்திரத்தின் பணியாகும். அரசின் நோக்கங்கள், எண்ணங்கள், இவைகளை நடைமுறைக்குக் கொண்டுவரும் ஸ்தாபனங்கள், தனி ஆட்களிடத்தில் அதன் தொடர்புகள், மற்ற நாடுகளோடுள்ள உறவுகள் இவையெல்லாவற்றையும்பற்றி மனிதர்கள் சிந்தித்து, பேசி, எழுதி வைத்தவைகளைப் படிப்பது அரசியல் நூல் ஆகும். இதற்கு மூன்று முக்கிய நோக்குகளுண்டு. முதலாவது மனித இயல்பு, அரசியல் நடவடிக்கையில் அது வெளிப்படுகின்ற முறை ஆகிய இரண்டையும் இன்று எவ்வாறு இருக்கின்றன என்று ஆராய்வது அரசியல் சாத்திரத்தின் பணியாகும். இதை விவரிப்பு என்று அழைக்கலாம். இரண்டாவது, கடந்த காலத்தில் எப்படி இருந்தது என்பதைப்பற்றிப் படிப்பது; இதை வரலாற்று முறை என்று அழைக்கலாம். மூன்றாவது, எதிர் காலத்தில் எப்படி இருக்க வேண்டும் என்பதை ஆராய்வது. இதை அறநெறி என்று அழைக்கலாம்.

சரியான முறையில் அரசியல் சாத்திரம் படிக்கப் பெற்றால், ஏனைய இயல்கள் அல்லது அறிவின் துறைகள் முதலியவற்றைத் துணைக்கு அழைக்கவேண்டி நேரிடும் என்பது வெளிப்படை. முதன் முதலாக அதற்கு வரலாறு தேவைப்படும். சில ஆசிரியர்கள் ஒரு பொருளின் கடந்த காலம்தான் உண்மையில் வரலாறு எனவும், நிகழ்காலத்தில் அதே பொருள் அரசியலாகவும் இருப்பதாகக் கூறுமளவிற்கு வரலாறும் அரசியலும் நெருங்கிய தொடர்புடையவையாக இருக்கின்றன. சீலி (Seeley) சொல்வதைப் போல, 'கடந்த காலத்திய அரசியலே வரலாறு; இன்றைய அரசியல் எதிர்காலத்திய

வரலாறு'. இவ்வளவு தூரத்துக்கு இவ் விரண்டையும் ஒன்றுக இணைக்காமல் போனுலும், அரசியல் விஞ்ஞானிக்கு மற்ற அறிவுத் துறைகளைக்காட்டிலும் இன்றியமையாதது வரலாறு என்று தயக்க மின்றிச் சொல்லலாம். அவனது மூலப்பொருளாகிய மனிதப் பண்பை ஆராய்வதற்கு உளவியலும் தேவைப்படுகிறது. அரசியல் நடத்தை எந்த உயர்ந்த அளவில் அமையவேண்டும் என்று காண அவனுக்குத் தத்துவம், அறநூல், மதம் ஆகியவைகளும் தேவைப் படுகின்றன. கூட்டுச் சுபிட்சத்திற்கான நிபந்தனைகளையும், பொரு ளாதாரத் துறையில் அரசாங்கத்தின் குறுக்கீடுகளையும் அறிந்து கொள்வதற்குப் பொருளாதாரம் அவனுக்குத் தேவைப்படுகிறது. அவன் படிக்கும் பொருள் மிகவும் முரணுனதும், இலகுவில் மனிதனின் அறிவுச் சக்தியை மழுக்கக்கூடிய பலாத்கார மனவெழுச்சி களும் கொண்டதாகையால், பாரபட்சமற்ற மனமும் அவனுக்குத் தேவைப்படுகிறது. இவை எல்லாவற்றிற்கும் மேலாக, நல்ல பொது அறிவும், உற்றுநோக்கி அறிந்துகொள்ளும் திறனும், நகைச்சுவையும் அவனுக்குத் தேவைப்படுகின்றன.

இது ஒரு பெரிய முயற்சி. இதை வெற்றிகரமாக நடத்திச் செல்ல 'மனிதக் கூட்டத்தின் தலைவிதியை அறிந்துகொள்ளும் அறிவும்', பேராசிரியர் ஹாக்கிங் (Hocking) கூறுகிற 'உலகத்தில் மனிதனுக்குரிய இடத்தைப்பற்றி அறிந்துகொள்ளும் விளக்கமான அறிவும்' அரசியல் ஆசிரியனுக்குத் தேவையாகின்றன.

## (ii) அரசியல் சாத்திரம் 'ஓர் இயலா'?

இன்னும் மேலே போவதற்கு முன்பு பல பிரச்சினைகளைப் பார்த்தாக வேண்டும். முதலாவது பிரச்சினை நமது நூலின் தலையங்கத்தைப்பற்றியது. 'அரசியல்' என்று நாம் அழைப்பது சரியானதுதானு? 'இயல்' என்ற சொல் சரியான விளக்கம் தருகிறதா?

இந்தக் கேள்விக்கு நாம் அளிக்கும் பதில், 'இயல்', 'விஞ்ஞான ரீதியான' ஆகிய சொற்களுக்கு நாம் கொடுக்கும் பொருளைப் பொறுத்திருக்கிறது. எல்லாவித கருத்தமைந்த படிப்பும் 'விஞ்ஞான ரீதி'யில்தான் இருக்க முடியும். அதாவது, கண்டறியக்கூடிய உண்மைகளின் அடிப்படையில் எல்லா முடிவுகளும் செய்யப் பெற்றிருக்க வேண்டும்; அதிகபட்சம் பகுத்தறிவு ஆராய்ச்சியோடும், உய்த்துணர்வோடும், குறைந்தபட்ச ஒருதலையான தன்மையோடும், மனவெழுச்சியோடும் ஆராய்ச்சி செய்திருக்க வேண்டும். ஆனுல், பின்னர் நிகழப்போகும் நிகழ்ச்சிகளைக் கணக்கிட்டு அறிந்து

கொள்வதை விஞ்ஞானம் என்று நாம் குறிப்பிட்டால் அரசியல் ஒரு விஞ்ஞானம் ஆகாது. ஏனெனில், இதன் முடிவுகள் பரிசோதனைச் சாலையில் பொருள்களின்மீது பெறும் முடிவுபோன்று இல்லாமல், மனிதர்களைப்பற்றி அறியப்பெறும் முடிவுகள் ஆகும். மனிதர்களை ஒன்றுசேர்த்து வாழச் செய்வனவும், பொது நலங்களுக்குரிய காரியங்களில் ஒத்துழைக்கச் செய்வனவுமாகிய ஒரு கலைதான் அரசியல் ஆகும். மனிதர்கள் ஒன்ருக வாழ வேண்டும் என்ற நிச்சயத்தையும், என்ன நிபந்தனைகளின்பேரில் அவர்கள் ஒன்ருக வாழக்கூடும் என்ற முடிவில்லா, நிச்சயமற்ற தன்மைகளையும், ஒருங்கே வேண்டுமென்றே வலிந்து ஏற்றுக்கொள்கின்ற மனிதன்தான் அரசியல்வாதி (பெருமளவிற்கு அரசியல் விஞ்ஞானியுங்கூட). இந்த நிபந்தனைகளை முன் மொழியும் பணிகளையும் தானே மேற்கொள்வதோடு, மனிதக் கூட்டத்தை வெற்றியுள்ளதாக மாற்றும் பணியையும் அவன் மேற்கொள்ளுகின்ருன்' என்று ஹாக்கிங் (Hocking) கூறுகிருர்.

## நுல்லியமான முடிவுகள் இல்லாமை

மனித உறவுகளாலான இத் துறையில் கணக்கியலில் போலத் துல்லியமான விடைகளைப் பெற முடிவதில்லை. குறிப்பிட்ட சந்தர்ப்பங்களில் மனிதன் என்ன செய்வான் என்பதைச் சொல்லவே முடியாது என்பது ஒரு விஷயம். இன்னென்று ஒரேவிதமான மனித நடவடிக்கைகளை உண்டுபண்ணக்கூடிய ஒரே வகையான இரு சந்தர்ப்பங்கள் நேருவதில்லை. விஞ்ஞான ரீதியில் நாம் படிக்கும் அரசியல் படிப்புச் சாதிக்கக்கூடியதெல்லாம் மிகவும் வரையறைக்குட்பட்ட பல முடிவுகளைப் பெறுவதுதான். முதலாவதாக, இறப்பு, நோய், குற்றம், எழுத்தறிவு, பொருளாதார வாழ்க்கை வளம், உற்பத்தி, வாணிபம், செலாவணி போன்ற நிச்சயமானதும், விளக்கமானதுமான பிரச்சினைகளின்மீது, கூடியமட்டிலும் துல்லியமான முடிவுகளை அரசியலில் பெற முடியும். இரண்டாவதாகப் பேரளவான நீண்டகாலச் சமுதாய, அரசியல்[1] இயக்கங்களைப் பொறுத்தமட்டில் திருத்தமற்ற—அல்லது மிகவும் திருத்தமற்ற—சில சட்டங்களை இது இயற்ற முடியும்.' இதற்கு மேலும் போவது கடினமாகும். மனித இனத்தை ஆட்சி செய்வதற்குரிய சட்டங்களையும் கொள்கைகளையும், உய்த்து உணரக்கூடிய ஓர் இயல் இருப்பதாக நம்பிக்கை வைத்தது, சமீப காலத்தில் எழுந்த பல

[1] இக் கருத்தின் விரிவான விளக்கத்திற்குப் பர்ன்ஹாம் (Burnham) அவர்கள் எழுதிய 'The Machiavellians' என்ற நூலைப் பார்க்கவும்.

அரசியல் கட்டுக் கதைகளில், மிகவும் அழிவைத் தரக்கூடியவைகளில் இது ஒன்றாகும்.[1]

இது இப்படியானால், 'அரசியல்' என்ற நமது சொல் குழப்ப முண்டாக்கக்கூடியதாக இருக்கிறது. அதற்குப் பதில் 'நாட்டாட்சி' (Politics) அல்லது 'அரசாங்கம்' என்ற சொல் பொருத்த முடையதாக இருக்கும். இருந்தாலும் 'அரசியல்' என்ற சொல் பரந்த வழக்கிலிருப்பதால் அதை முழுவதும் விட்டுவிடாது, இதைப் படிப்போர் அந்தச் சொல்லைக் கவனமாக உபயோகிக்கவேண்டும் என்ற எச்சரிக்கையோடு விட்டுவிடுவோம். 'அரசுக்குரிய இயல் ஒன்று இருக்கிறதா?' என்று ஃபிரெஞ்சு தத்துவஞானி டையின் (Taine) கேட்கிறார். அவரே அதற்குப் பதிலும் அளிக்கிறார். 'அரசியல் விவகாரங்களில் விவாதத்திற்குத் துல்லியத்தையும், தீர்வுகாண வழியையும், கோட்பாட்டாராய்ச்சி, மிகைப்படுத்தல், தவறு ஆகிய கூறுகளைக் குறைக்க நிச்சயமான பல படிப்பினைகளையும் கொண்ட தொகுதி இருக்கத்தான் செய்கின்றது.'

அரசியல் துறைகளில் மனிதனின் நடத்தைபற்றி நாம் அக்கறை கொண்டிருக்கிறோம். மனிதனது எண்ணம், மனவெழுச்சி, விருப்பங்கள் ஆகியவைகளோடு, அவற்றை வெளிப்படுத்தும் மூலங்களான நிறுவனங்களைப்பற்றியும் நாம் படித்தாக வேண்டும். மனிதனின் ஆளுந் தத்துவம் வெளிப்படும் பல துறைகளில், கூட்டு வாழ்க்கை அமைத்துக்கொள்ளும் துறைதான் நம்முடையது. இவ்வாறாக மனிதன் கூட்டு வாழ்க்கையைப்பற்றிச் சிந்திக்க ஆரம்பித்த நாள் தொட்டும், அவ் வாழ்க்கை முறையைத் தொடர்ந்து கடைப்பிடிக்க விருப்பு ஏற்பட்ட நாள்தொட்டும், லிண்ட்ஸே (Lindsay) கூறுவது போல, 'சில நிகழ்ச்சிகள் ஏற்பட்டபோது இன்னோரன்ன காரியங்கள் இப்படிச் செய்யப்பட வேண்டும் என்று அரசின் தன்மையைப்பற்றி மனிதர்கள் விவாதித்து, அவ் வாழ்க்கை முறையை மாற்றி அமைத்த நாள்தொட்டும், அரசியல் அல்லது அரசியல் கோட்பாடுகள் தோன்றின.

[1] கடந்த இரு நூற்றாண்டுகளில், அரசியலை இயற்கை இயலிலுள்ள அதே சொற்களால் விளக்கம் சொல்லவும், இயற்கை இயலுக்குரிய முறைகளை அரசியலுக்கு உபயோகிக்கவும் முடியும் என்று அரசியல் அறிஞர்கள் நம்புவது வழக்கமாகிவிட்டது. ஐரோப்பா அடைந்த சமுதாய அரசியல் அழிவுகளும் இப்பொழுதுள்ள பல ஆபத்துகளும்தான் இந்த வழக்கத்திற்குப் பொறுப்பாக இருக்கவேண்டும் என்பது மோர்கென்தாவின் (Morgenthau) கருத்தாகும். 'Scientific Man Versus Power Politics', Times Literary Supplement, June 21, 1947.

## (iii) அரசியல் படிப்பின் சில பிரச்சினைகள்

தன் பணியைத் துவங்கும்போது அரசியல் மாணவனை எதிர் நோக்கும் சில குறிப்பிட்ட பிரச்சினைகளுக்கு இப்பொழுது நாம் வருவோம்.

### ஏற்ற சொற்களில்லாமை

முதற் பிரச்சினை பாடத்தைப்பற்றி யல்லாது, பாடத்திற்குப் பயன்படும் உபகரணங்களைப்பற்றியதாகும். இயற்கை, விஞ்ஞான நூல்களில் உள்ளதுபோல ஒரே சீரான நுண்கலைச் சொற்கள் நமக்குக் கிடையா. வைத்தியர் ஒருவர் இடுப்பு நரம்பு (sciatic nerve) பற்றியும், வேதியியல் வல்லுநர் கடுவினை ஆக்கி (catalyst) பற்றியும், இயக்க நூல் வல்லுநர் அணு அளவு (atomic weight) பற்றியும் பேசினால், கேட்பவர்கள் இந்தச் சொற்கள் என்ன பொருளுடையன என்று சரியாகத் தெரிந்திருக்கிறார்கள். ஆனால், அரசியல் வல்லுநர் ஒருவர், குடியாட்சி, பொது உடைமை வாதம், ஏகாதிபத்தியக் கோட்பாடு, முடியரசு, குடியரசு ஆகியவைபற்றிப் பேசினால், கேட்பவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் சொந்தக் கருத்துகளை இச் சொற்களுக்குப் பொருளாகக் கொள்ள, அதனால் குழப்பத்திற்குமேல் குழப்பமுண்டாகக்கூடும். மேலும், ஒவ்வொரு காலமும் ஒவ்வொருவகைக் கலைச்சொற்களை உண்டாக்க முற்படுகிறது. இவை எல்லாச் சந்தர்ப்பங்களிலும் கையாளப்பெறுவதனால், நிச்சய மான பொருள் இவற்றிற்குக் கண்டிப்பாக இல்லாதுபோகிறது. திட்டமிடுதல், ஒதுங்கற்கொள்கை, சுதந்திரம், பிரசாரம், புத்தாக்கம் (Reconstruction), மறு சீரமைப்பு (Rehabilitation) ஆகிய சொற்களில் பொதிந்திருக்கும் சரியான பொருளென்ன ?

ஆகவே, அரசியல் நூலின் ஆரம்பத் தேவை அதற்கு வேண்டிய துல்லியமான கலைச்சொல் வளர்ச்சி அல்லது கலைச் சொல்லாக்கம் தான். இவை இன்னும் புரிந்துகொள்ளக்கூடியதும் பொருளுடைய தாகவுமுள்ள சொற்களாக இருந்தால் 'எல்லாப் பணிகளுக்கும் பயன்படும்.' சொற்களை முறையின்றிப் பயன்படுத்தி அதன்மூலம் சிக்கல்களை மேலும் குழப்ப முடியாத நிலையேற்படும். இற்றை நாளில் ஒருவேளை இது மிகையாக எதிர்பார்ப்பதாக இருக்கலாம்.

### வெளிப் பார்வைக்கு அரசியல் இலகுவானது போன்று தோன்றுதல்

நாம் எடுத்துக்கொள்ள வேண்டிய குறிப்பான சில பிரச்சினை களுக்கு இப்பொழுது வருவோம். ஒரு பிரச்சினையின் கடினத்

தன்மையிலிருந்தும், மிக நுண்ணிய தன்மையிலிருந்தும், அன்றாட நிகழ்ச்சிகளிலிருந்து அப்பாற்பட்ட தன்மையிலிருந்தும்தான் பெரிய பெரிய பிரச்சினைகள் மற்ற இயல்களில் தோன்றுகின்றன. ஆனால் இதற்கு மாறாக, மிகவும் இலகுவானது என்று தோன்றுகிறதுதான் அரசியலில் காணப்படும் இடையூறு. அரசியலைப் பற்றிய ஒவ்வொன்றையும் அறிந்துகொண்டுவிட்டதாக ஒவ்வொருவரும் நினைக்கிறார்கள். அதன் தன்மையானது மிகச் சமீபத்தில் கண்ணால் காணக்கூடியதாக இருக்கிறது. ஒவ்வொரு செய்தித்தாளும் நிரம்ப இதைப்பற்றியே எழுதுகின்றது. மக்கள் எங்குக் கூடினாலும் அங்கே ஏதாவதொரு பிரச்சினை விவாதிக்கப்படுகிறது.

எதைப்பற்றிப் பேசுகிற ஒவ்வொருவரும் உண்மையாக அதைப் பற்றி அறிந்திருப்பார்களானால் சிக்கல் ஒன்றுமிராது. எல்லாத் துறைகளிலும் வல்லுநர்கள் உண்டு. இவர்கள் சொல்லுகிறதைச் சாதாரண மனிதர்கள் மரியாதையோடு கேட்டுக்கொள்கிறதுமுண்டு. ஆனால், அரசியலில் 'விண்ணுலகத் தேவர்கள் போகத் தயங்கும் இடங்களுக்கு முட்டாள்கள் போகத் தயங்குவதில்லை!' என்னதான் சிக்கலான் பிரச்சினையாயிருக்கட்டும்; ஆயிரக்கணக்கான பேர் அதற்கு வழி வைத்திருப்பார்கள். வெளிநாட்டு விவகாரங்கள், தேசீயக் கடன், வீட்டுவசதி அமைப்பு, மறுப்பாணை, பட்ஜெட், பேரரசின் எதிர்காலம் ஆகிய காரியங்களில் பொறுப்புடையவர்களிடம் ஆலோசனைகளும், புத்திமதிகளும் வந்து குவிவதுண்டு. 'சாய்வு நாற்காலியில் அமர்ந்து போர்த் தந்திரம்' வகுப்பது போலவே சமாதான காலத்திலும் அமெச்சூர் அரசியல்வாதி மேற்கூறிய பிரச்சினைகளுக்கு விளக்கம் கூறுவது இருக்கிறது. இதை ஃபிரெஞ்சுக்காரர்கள், 'La politique du Cafe du Commerce' என்று அழைக்கிறார்கள். உபயோகமற்ற புத்திமதிகள், அவசரத்தில் சொல்லப்படும் ஆலோசனைகள், தெருவிலுள்ளவன் போடுகின்ற அறியாமைக் கூச்சல் ஆகியவை, முரணான வெறும் சத்தமாகவே ஒலிக்கின்றன! இது அரசியல் படிக்கிறவனுக்கும் இடையூறு. அரசியல்வாதிக்கும் தொந்தரவு. கவனமாகப் படிப்பதற்கோ அல்லது ஆட்சி செய்வதற்கோ நாம் விடப்பட்டால், காரியங்கள் எவ்வளவு இலகுவாக இருக்கும்!

எப்பொழுதாவது இது நடைபெறுமா? நோயாளி தன் வியாதியின் அறிகுறிகளை விவரிக்க அனுமதிக்காத வைத்தியனைப்பற்றி நாம் என்ன நினைப்போம்? வேண்டப்படாத இந்தப் புத்திமதி, அறிவற்ற இந்த ஆலோசனைகள், இலகுவான இந்தத் தீர்வுகள் ஆகியவை நமது பிரச்சினையின் கூறுகளே. அரசியல் வாழ்வில் மனிதர்கள் எவ்வாறு நடந்துகொள்கிறார்கள்; அவர்கள் விரும்புவதும்

வெறுப்பதும் எவை ; அவர்கள் தங்கள் கூட்டு வாழ்க்கையைப்பற்றி என்ன உணர்கிறார்கள், நினைக்கிறார்கள் என்பனவற்றைப்பற்றிக் கற்பிப்பதுதானே அரசியல் நூலின் வேலை.

## உயிருள்ள பாடம்

பல அமெச்சூர்களைக் கூட்டமாக அரசியற்றுறைக்குள் அனுமதிக்கும் இந்தப் பாடத்தின் இலகுவான தன்மை முதலாவது பிரச்சினை என்று பார்த்தோம். ஆனால், இது அரசியல் நூலின் கேந்திரத்திற்கே நம்மை அழைத்துச் செல்கிறது. இதிலிருந்து, உயிரற்ற பொருள்களைப்பற்றியோ அல்லது புலன்களுக்கப்பாற்பட்ட காரியங்கள்பற்றியோ பேசாமல் உயிரோடு வாழும் மனிதர்களைப் பற்றிப் பேசுவது அரசியல் ஆகும். வைத்தியரைப்போல, நோயாளியைப் பேச அனுமதித்து, அவன் பேசுவதைக் கேட்டு, அவன் கூறியவைகளைக் கவனத்தில் கொள்ளவேண்டும். எண்ணற்ற தனி மனிதர்கள் ஒருவரோடொருவர் தங்களைச் சரிசெய்து கொள்வது தான் அரசியல். இவைதான் புதிய நாடுகள் தோன்றுவதற்கு மூல காரணமாயிருந்திருக்கின்றன. இப்படியாக அரசியல் பொருளின் உயிருள்ள தன்மைதான் அதன் கவர்ச்சிக்கும், அதே சமயத்தில் சிக்கலுக்கும் காரணமாயிருக்கிறது. இந்தப் பொருளைத் தவறான தொரு வழியில் கையாண்டு பார்த்தால் தெரியும். அது பொது மக்கள் ஆர்ப்பாட்டமாகவோ அல்லது தேர்தலில் தோல்வியாகவோ, அல்லது சில சமயங்களில் புரட்சியாகவோ நேர்ந்து மிக விளக்கமாகத் தன் உயிருள்ள தன்மையை வெளிக் காட்டிவிடும். இவற்றை உயிருள்ள மனித நடவடிக்கையாகக் கணிப்பதும், தான் படிக்கும் கொள்கைகளையும் ஸ்தாபனங்களையும் உணர்ந்து கொள்வதும், அரசியல் மாணவன் இன்றியமையாது அறியவேண்டிய முதல் பாடமாகும். வெறுப்புக்களும், விடுப்புக்களும், தனி அக்கறைகளும், சிறந்த தனியான உய்த்துணர்வுகளும், வருந்தத்தக்க தவறுகளும் உடைய உயிருள்ள மனிதர்கள்தான் அரசர்களும் அமைச்சர்களும். இவை ஒவ்வொன்றும் அவர்கள் நாட்டிற்கு அழிவையோ, வெற்றியையோ அளித்து, அந் நாட்டு மக்களுக்குத் துன்பத்தையோ அல்லது இன்பத்தையோ அளிக்கவல்லது. பாராளுமன்றம் என்பது வெறும் கோட்பாடல்ல. ஆனால், நூற்றுக்கணக்கான ஆண்கள், பெண்கள் ஆகிய பலரும் அடங்கிய ஒரு சபையாகும். இவர்கள் புத்திசாலிகளாகவும் புத்தியற்றவர்களாகவும், தன்னலம் கருதாதவர்களாகவும் சுயநலமிகளாகவும், நேர்மையானவர்களாகவும் ஊழல் உடையவர்களாகவும், இளையவர்களாகவும் முதியவர்களாகவும் இருந்து, தங்கள் சொந்த குணநலன்களாகிய வலிமைகளையும் பலவீனங்களையும் அரசியலுக்குள் புகுத்தி, உயர்ந்த முடிவு

களையோ அல்லது கீழ்த்தரமான முடிவுகளையோ செய்யும் திறன் பெற்றவர்களின் கூட்டம்தான் இந்தச் சபை. (இந்த முடிவுகள் சில சமயம் சாவையும் வாழ்வையும் தீர்மானிப்பதாகவும், கிட்டத்தட்ட எல்லாச் சமயங்களிலும் யாருக்காவது நன்மையை அல்லது அதிகாரத்தை அளிப்பதாகவும் இருக்கின்றன.) காப்பு வரியிலோ அல்லது வரிச் சுமையிலோ ஒரு சிறிது மாற்றம் ஏற்படுவது, நிலச் சட்டங்களில் சிறிய மாற்றம் உண்டாக்குவது ஆகியவையெல்லாம் அன்றாட வாழ்க்கையைச் சிலருக்கு நல்ல மாதிரியாகவும் சிலருக்குக் கெட்ட மாதிரியாகவும் ஆக்கிப் பாதிக்கக்கூடியனவாக இருக்கின்றன. 'திருப்தியடையாத மனிதர்களின் எண்ணிக்கையைவிட மனத் திருப்தி பெற்றவர்களின் எண்ணிக்கை அதிகமாக இருக்கும் என்று நம்புவதுதான் அதிகபட்சம் நான் செய்யக்கூடியது' என்று அரசியல் வாதி கூறக்கூடும்.

எது யாருக்குத் திருப்தியளிக்கும் என்று முன்கூட்டியே சொல்வது மிகவும் கடினம். மனிதன் கணிக்கப்பட முடியாதவன்; அவனது மன இயல்புகள் எதிர்பார்க்கப் பெற முடியாதவை; அவனது ஆளுந் தத்துவத்தின் குண நலன்களில் எத் தன்மை ஒரு குறிப்பிட்ட காலத்தில் பிரதானமாக இருக்கும் என்று சொல்ல முடியாது. அவனது தியாக உணர்ச்சியை வேண்டுவதா அல்லது நலமாக வாழவேண்டும் என்ற அவன் விருப்பத்தை வேண்டுவதா? அமைதியான வாழ்க்கையை அவன் விரும்பும் தன்மையை வேண்டுவதா அல்லது அதிகாரம் விரும்பும் அவன் குணத்தை வேண்டுவதா? ஒரு நாள் அவன் விடுதலைக்காகக் கூப்பாடு போடு கிறான். ஆனால், அதற்கு அடுத்தநாள் நெப்போலியனின் அல்லது ஹிட்லரின் காலடிக்குள் தன் கழுத்தை நுழைத்துக்கொள்கிறான். 'ஓசன்னா' (வாழ்க) என்றும், 'சிலுவையிலடி' (வீழ்க) என்றும் கூச்சலிட்டது அதே மக்கள் கூட்டம்தான்.

## அரசியல் பிரச்சினைகள் அனைத்தும் மனிதர் சார்புடையவை

தேர்தல்களின் அழுத்தங்களும், பொதுமக்கள் அபிப்பிராயத்தின் ஏனைய வெளிப்படுத்தல்களும், அரசியல்வாதியைத் தான் ஈடுபட்டிருப்பது உயிரோடுள்ள மனிதர்களோடன்றி, புலனுக்குப்பாற்பட்ட போக்குகளோடல்ல என்பதை நினைவுகொள்ளச் செய்கின்றன. ஆனால், அரசியல் மாணவனுக்கு, ஏன் வரலாற்று மாணவனுக்கும் கூட, இந்த அடிப்படை உண்மையை நினைவிலிறுத்துவது மிகக் கடினம். சட்டங்களும் ஸ்தாபனங்களுமாகிய வெறும் எலும்புக் கூட்டிற்குச் சதையும் இரத்தமும் கொடுத்துப் பார்க்கச் செய்வது கற்பனைத் திறனையும் முடிவாற்றலையும் ஊக்குவிப்பதாகும்.

மனிதர்கள் செயல் முறையில் இயங்குவதை மாணவர்கள் நேரில் பார்க்கவேண்டும் என்பதற்குரிய பல காரணங்களில் இதுவும் ஒன்று. பாராளுமன்றக் கூட்டங்கள், நகராட்சி மன்றங்கள் ஆகியவற்றை நேரில் பார்த்துதான் பாடப் புத்தகங்களில் படித்த முறைகளைப்பற்றி அங்குக் கண்டறிவது மிக முக்கியமாகும். அவர்களிடத்தில் அவன் கொண்டிருந்த மரியாதையை இது நிச்சயமாக அதிகப்படுத்தாது. ஆனால், கற்பனையில் தோன்றிய மரியாதையால் பயன் என்ன இருக்க முடியும்? சமுதாயத்தின் வெவ்வேறு வகுப்பைச் சேர்ந்தவர்களோடு அன்றைக்குள்ள பிரச்சினைகளை ஆர்வமுள்ள மாணவன் விவாதிக்கும் தருணங்களை இழக்கக் கூடாது. இதன்மூலமாகத்தான் தனி மனிதர்களின்மீது இந்தச் சிக்கல்களின் பளு எவ்வளவாக இருக்கிறது என்று அளந்தறிய முடிவதோடு, சாதாரண மனிதர்கள் எவ்வளவு ஆர்வமும் விவேகமும் கொண்டவர்களாக இருக்கிறார்கள் என்பதையும் தெரிந்துகொள்ளக்கூடும். லண்டன் சுற்றுப்புற ரெயில் வண்டி ஒன்றில் தொழிலாளர் இருவர் 40 ஆண்டுகளுக்கு முன்பு ஆங்கிலோ - ஜப்பானிய உடன்படிக்கை ஏற்பட்டபோது, அதைப்பற்றிக் கூறிய ஆழ்ந்த தீர்க்கதரிசன ஆய்வுரையை இதன் ஆசிரியர் மறக்கவே இல்லை. ஆனால், இவர் நகர்ப்புற ரெயில்வேப் பெட்டிகளில் முட்டாள்தனமான அரசியல் பேச்சுக்களையும் கேட்டிருக்கிறார்!

தனி மனிதரின் வாழ்க்கைப் பிரச்சினைகளாக அரசியல் பிரச்சினைகளை மாற்றுவதன் அவசியத்தை மாணவர் நன்றாகப் புரிந்துகொண்டுவிட்டால், அதற்கு அடுத்துப் பிரச்சினையாகிய நன்னடத்தை அல்லது நெறிமுறை ஆகியவற்றிற்கும், அரசியல் பிரச்சினைகளுக்கும் உள்ள தொடர்பை அறிந்துகொள்ளத் தயாராயிருப்பார். பெரும்பான்மைகளைப்பற்றியும் சிறுபான்மைகளைப் பற்றியும் கணித்துக்கொண்டிருக்கும் அரசியல்வாதியிடம் அறநெறியாளர் வந்து, அவருடைய முடிவுகள் பலராலும் விரும்பத்தக்கனவாகமட்டுமிருந்தால் போதாது; நீதிக்குகந்ததாகவும் இருக்க வேண்டும் என்று அவருக்கு நினைவூட்டுகிறார். 'ஒரு மனிதனுக்கு இழைக்கப்படும் அநீதிமூலமாகப் பல்லாயிரக்கணக்கானவர்களை மகிழ்ச்சியுறச் செய்ய முடியும்.' அப்படிப்பட்டவைகளில் அந்த ஒரு மனிதர்தான் கணிக்கப்பட வேண்டியவர். அதாவது, அரசியல் நூலின் முடிவுகள் எண்ணிக்கையளவில் மாத்திரம் துல்லியமாக இராமல் பண்பாலும் சில உயர் மதிப்புகளுக்குக்கொத்ததாகவும் அமையவேண்டும். அரசியல் பிரச்சினையானது, லீகாக் (Leacock) கூறுவதுபோல, 'சமுதாய நீதியினின்றும் விடுவிக்கப்படாத ஒரு புதிர் ஆகும்.' ஒரு தனி மனிதனுக்கிழைக்கப்படும் அநீதியால் நீதி நிலைநிறுத்தப்பெறாது என்பது அதன் அடிப்படைக் கொள்கை.

## பண்பாட்டுப் பிரச்சினை

ஆனால், 'நீதி' என்பது என்ன ? நம்முடைய பாடத்தின் மையத்திற்கே இக் கேள்வி நம்மை அழைத்துச் செல்கிறது. மனித நடத்தை, 'பண்புகளின்' அடிப்படையில் ஏற்படுகிறது. இதைப் பாதுகாப்பதும் விளக்குவதும் நமது கடமை. பிளேட்டோவும், அரிஸ்டாடிலும், நல்ல குடிமகனை நல்ல மனிதனோடு சமப்படுத்திப் பேசிய நாள்தொட்டு, 'நல்ல' என்ற சொல்லின் பொருளைக் குறித்து மனிதர்கள் விவாதித்துவருகிறார்கள். தனி மனிதனின் 'நல்ல குணமும்' கூட்டங்களின் 'நல்ல குணமும்' எவ்வாறு ஒன்றாக ஆக முடியும் என்று ஆச்சரியப்பட்டும் வந்திருக்கிறார்கள். இங்கேயே இப்பொழுதே இந்தக் கேள்விக்கு நாம் பதிலளிக்க முயலாமல், அரசியலில் நடைமுறையை எவ்வளவு தேடுகிறோமோ அதற்குச் சிறிதும் குறையாமல் நீதியையும் தேடவேண்டியிருக்கிறது என்பதை இங்கே குறிப்பிட விரும்புகிறோம். ஏனெனில், வாழும் மனிதர்களின் நெறியோடுகூடிய ஆளுந் தத்துவமே அரசியலின் மூலப் பொருளாகும். அவர்கள் தலைவர்களாயிருந்தாலும் அல்லது அரசாங்கத்தின் சாதாரண ஆளோடிகளா யிருந்தாலும் அவர்களது செயல்கள் தங்களது மனச்சாட்சிக்கொப்ப மாத்திரமல்லாமல் உலகத்தின் அறநெறிக்கும் உகந்த முறையில் நியாயமாக இருக்க வேண்டும். ஜெர்மானிய விசாரணைகளிலிருந்து நாம் தெரிந்து கொள்ளும் முக்கிய பாடம் இது. அவர்கள் வெறும் குடிமக்களாக இருந்தால் ஒவ்வொருவரின் வாழ்க்கையும் வாழ்வதற்கே கொடுக்கப் பட்டிருக்கிறது என்பதை நினைவூட்டுகிறது. (தங்கள் சொந்த விருப்பத்தின்பேரில் அல்லாமல்) ஒருவர் மக்களுக்காக உயிர்த் தியாகம் செய்வது வழிமுறையான காரியமாகாது. 'இவர்களில் சிறியவனான ஒருவனை எவராவது தடுக்கி விழப்பண்ணினால், அவனது கழுத்தில் எந்திரக்கல்லைக் கட்டிக் கடலில் எறிவது அவனுக்கு நலமாகும்.'

நீதியைத் தேடுவது தடுமாற்றமுடையதும், தாமதமாக இயங்கக் கூடியதாகவுந்தானிருக்கும். எது சரியானது என்பதைப்பற்றி மக்களின் கருத்துக்கள் ஒத்துப்போவதில்லை. ஆனால், அரசியல் மாணவன் இதனால் மனம் இளைக்காமல், எது சரியென்று அவன் தேடியலைவது கொள்ளிவாய்ப் பேயைத் தேடுவது போன்றது என்றும், 'சமுதாய நீதியின் புதிர்' தீர்க்கப்படவில்லை என்று மாத்திர மல்லாமல் விடுவிக்கப்படவே முடியாது என்றும் நினைத்துவிடத் தனக்குள் இடங்கொடுத்துவிடக் கூடாது.

## மாற்றப் பிரச்சினை

அரசியல் மாணவனுக்குள்ள இன்னொரு சிரமம் அவன் படிக்கும் பொருளின் உயிருள்ள தன்மையில் அடங்கியிருக்கிறது. எல்லா உயிருடைய பொருள்களையும்போல எப்பொழுதும் மாறிக் கொண்டும், ஒரே மாதிரியாக அமர்ந்திராமலும் இருப்பதில் அவன் சிரமம் வெளிப்படுகிறது. ஒரு நாடும் நேற்றிருந்த மாதிரியோ அல்லது நாளை இருப்பதைப் போலவோ இன்று இருப்பதில்லை. தொடர்ச்சியாக இரண்டு நாட்களில் நான் ஒரே மாதிரியாக இராமல் இருப்பதைப் போலவேதான் அதுவும் உடல், மனம், அனுபவம், ஆட்சி ஆகியவையெல்லாம் சதா மாறுதலடைந்துகொண்டே இருக் கின்றன. ஒரு பெரிய நிகழ்ச்சி அல்லது அதிர்ச்சி, இவற்றிற்குப் பிறகு இன்னின்ன நபர் 'பழைய மனிதராக மீண்டும் இருக்கவே யில்லை' என்று சில சமயங்களில் நாம் சொல்வது குழுக்களுக்கும் பொருந்தும். இரண்டு உலகப் போர்களுக்குப் பிறகு 'பழைய மாதிரியே' இருக்கக்கூடிய நாடு உலகிலில்லை. எனவே, நிலவர மான அல்லது மாருத தன்மைத்தான காரியங்களைப்பற்றிச் சொல் லும் சூத்திரங்களிலிருந்து நம்மைக் காத்துக்கொள்ள வேண்டிய அவசியமிருக்கிறது.

அரசியல் என்பது உண்மையில் ஒரு நடைமுறையாகும். அது அனவரதமும் மாறிக்கொண்டேயிருக்கிறது. நாம் ஒரு சித்திரத்தை பார்த்துக்கொண்டிருக்கவில்லை. ஆனல், மெதுவான ஓட்டத்தில் சில சமயங்களிலும், மனோவேகத்தில் சில சமயங்களிலும், ஓடுகின்ற ஒரு சினிமாப் படத்தை நாம் பார்க்கிறோம். இச் சினிமாப் பட ஓட்டத்தின் வேகத்தைக் கணிப்பது அரசியல் விஞ்ஞானியின் பணி. இதில் வருந்தத்தக்க பல தவறுகள் இழைக்கப்பெறக்கூடும். இந்த அச்சமானது திரும்பத் திரும்ப ஏற்படும் இரு ஆபத்துகளிலிருந்து அவனைக் காத்துக்கொள்ளும். முதலாவதாக, மாறிக்கொண்டே இருக்கும் காட்சியைப்பற்றியும் அதன் நடிகர்களைப்பற்றியும் அவன் செய்யும் முடிவுகள், ஆராய்ச்சிக்குரியதும் தாற்காலிகமானதும் என்பதை நினைவுபடுத்திக்கொண்டு, அவன் முடிவுகளைக் காலத்தால் வரையறை செய்யக்கூடும். ஒரு சமயத்தில் துல்லியமாக ஒரு வேளை இருந்தாலும், மற்றச் சமயத்தில் பொருத்தமற்றவையாக இருக்கும் குணவியல்புகளுக்கு நிரந்தரத்தன்மை அளிப்பதைத் தவிர்க்கக்கூடும். எப்பொழுதுமே இல்லாவிட்டாலும், எதிர்பாராதது அவசியம் நிகழக்கூடும் என்பதை மனத்திலிருத்துவது வருமுன்னுரைக்கும் வழக்கத்தை முக்கியமாக அடக்கி வைக்கக்கூடும். 'அறிந்து கொள்ளப் பெருத மனிதன்' என்ற கேரல் (Carrel) அழைக்கும் இம் மனிதன் வருமுன் உரைப்போனை ஒரு முட்டாளாக ஆக்க

ஏதுவிருக்கிறது. அவனைப் 'புரிந்துகொள்ள' அவன் எப்பொழுதும் எதிர்பார்க்கக்கூடாது என்பதை மாணவன் மறக்கக்கூடாது. இரசாயன விஞ்ஞானியோ அல்லது பூகர்ப்ப விஞ்ஞானியோ தம்முடைய கருப்பொருளைப் புரிந்துகொண்டு அவற்றின்மீது சார்ந்து நிற்பதைப் போன்று, அரசியல் மாணவன் தன்னுடைய கருப் பொருள்மீது நம்பிக்கையாகச் சார்ந்துவிடக்கூடாது. "வைத்தியத் துறையில் நீங்கள் எப்பொழுதும் உபயோகிக்கக்கூடாத இரண்டு பதங்களுண்டு; 'எப்பொழுதும்', 'எப்பொழுதுமில்லை' என்பவையே அவை" என்று வைத்தியப் பேராசிரியர் ஒருவர் தம் மாணவருக்குக் கூறினர். இது அரசியல் படிப்புக்கும் பொருந்தும்.

## போலியும் உண்மையும்

கோட்பாட்டிற்கும், நடைமுறைக்கும் இடையேயுள்ள வேறுபாடு மேலும் ஒரு சிக்கல் என்று விவரிக்கலாம். வரிசையாகப் பல நிறு வனங்களையும் அவற்றின் தொடர்புகளையும் நாம் விரிவாக ஆராய்ந்து அவற்றை மிகவும் விளக்கமாக விவரித்துவிட்டு, அந்த அரசியல் அமைப்பு பணிபுரிவதைக் கூடியமட்டில் துல்லியமாகவும் விளக்கிய பிறகு பார்த்தால், நாம் வெளியே இருந்து பார்த்தால், தெரியக்கூடிய வெறும் முகப்பைத்தான் வருணித்திருக்கிறோம் என்று உணர்ந்து கொள்வோம். இந்தப் பொறி உள்ளூர எப்படி வேலை செய்கிறது என்பதைப்பற்றி நாம் விளக்கியிருக்கமுடியாது. 'யாருக்கு? என்ன? எப்பொழுது? எப்படிக் கிடைக்கிறது?' என்று ஒரு பிரபலமான நூலில் பேராசிரியர் லாஸ்வெல் (Laswell) கேட்கிறார். யார் சூத்திரக் கயிற்றை இழுப்பது? அரசபீடம், செய்தித்தாள், நிதித்துறை, சிவில் பணித்துறை, வெளிநாட்டு விவகாரம் ஆகியவற்றிலுள்ள உண்மையான இரகசிய அதிகாரங்கள் எவை?

1913 ஆம் வருடத்திய 'மேற்குக் கனடாவின் தானியம் விளைவிப் போர் கையேடு' (Grain Growers Guide for Western Canada of 1913) 'தானியம் விளைவிப்போர் செய்யக்கூடாதவை' என்ற தலைப்பில் குழாம்களின் நலன்களால் தாக்கப்பட்டு இருக்கும் அரசாங்க நிலையை மிக விரிவாக விளக்குகிறது. 'காப்பு வரிகளைக் குறைக்கப் போராடாதீர்கள்; ஏனெனில் கனடா நாட்டு உற்பத்தியாளர் சங்கத்தை நீங்கள் சினமுறச் செய்கிறீர்கள். இரயில்வே சரக்குக் கட்டணங்களைக் குறைக்கச் சொல்லிப் போராடாதீர்கள்; ஏனெனில் நீங்கள் மூன்று பெரிய இரயில்வே கம்பெனிகளைச் சினமுறச் செய்கிறீர்கள். செலாவணிப் பெருக்கம் வேண்டும் என்று போராடாதீர்கள்; ஏனெனில் நீங்கள் பாங்கர்கள் சங்கத்தைச் சின முறச் செய்கிறீர்கள். மரத்துண்டுகள் அதிக விலையாக இருக்கின்றன

என்று குறைசொல்லாதீர்கள்; ஏனெனில் நீங்கள் மரம் வெட்டுவோர் சங்கத்தைச் சினமுறச் செய்கிறீர்கள். ஈட்டின்பேரில் கொடுக்கும் வட்டி அதிகம் என்று குறைசொல்லாதீர்கள்; ஏனெனில் நீங்கள் ஈட்டுக்கடன் கம்பெனிகளைச் சினமுறச் செய்கிறீர்கள். கூட்டுறவுப் பண்டகசாலை வேண்டும் என்று சொல்லாதீர்கள்; ஏனெனில் நீங்கள் சில்லறை வியாபாரிகள் சங்கத்தைச் சினமுறச் செய்கிறீர்கள். நேர்மையான அரசியல்வாதிகள் வேண்டுமென்று சொல்லாதீர்கள்; ஏனெனில் நீங்கள் கட்சிகளையும், அரசாங்கத்தையும் சினமுறச் செய்கிறீர்கள்.'[1]

## மனிதத் தீர்மானம் என்னும் புரியாத புதிர்

பொதுவாழ்க்கையின் சில அம்சங்களில் மனிதர்களின் நடவடிக்கைகளையும், தீர்மானங்களையும்பற்றிப் படிக்கும்போது, அவர்கள் ஏன் இவ்வாறு செயலாற்றினார்கள்? ஏன் இவ்வாறு தீர்மானித்தார்கள்? என்று அநேகமாக நமக்குத் தெரியமுடியாது. ஒரு மனிதனைக் கன்சர்வேடிவாகவும் இன்னொருவனைச் சோஷியலிஸ்டாகவும் ஆக்குவது எது? அவர்கள் மனம்மாறினார்கள் என்றால், ஏன் மாறினார்கள்? விளக்கமற்ற பொதுவான சொற்களால் இதற்கு விடையிறுக்கலாம். ஆனால், ஒவ்வொரு காரியத்தின் தேர்வும் தனி மனிதனைப் பொறுத்தது. ஒவ்வொருவனும் தன் இரகசியத்தை மறைந்துவைத்திருக்கிறான். கிறிஸ்தவமதம், இசுலாமியமதம், சமயச் சீர்திருத்தம் ஆகியவை தோன்றிய காலத்திலிருந்த மக்கள் ஒவ்வொருவரும் தனித்தனியாகப் புது மதத்தை ஒத்துக்கொள்வதா அல்லது பழைய மதத்தில் விசுவாசத்தோடு இருப்பதா என்பதைத் தீர்மானிக்கவேண்டியிருந்தது. வெளியுலகிற்கு அறியப்படாத ஆயிரக்கணக்கான மனிதர்கள் அநேக தடவைகள் தங்கள் உயிருக்கே உலையாகும்படி ஒரு புதிய மதத்தில் சேர்ந்ததற்கு அல்லது பழைய மதத்தின்கண் விசுவாசமாக இருந்ததற்குக் காரணம் என்ன? வெளிப்பார்வைக்கு ஒரேமாதிரியான பின்னணி, நலன்கள், விருப்பு வெறுப்பு ஆகியவைகொண்ட மனிதர்களில் பிரெஞ்சுப் புரட்சியைச் சிலர் வரவேற்கவும், சிலர் கண்டிக்கவும் ஏன் செய்தார்கள்? நாம் அறியோம். பழங்காலத்தைப்பற்றிய நமது அறியாமை நிகழ்காலத்திற்கு மாற்றப்பெற்று, நமது பாடத்தின் மாறாத சிக்கலாக இருந்துவருகிறது. மேற்கோள் காட்டியபடி 'மனிதத் தன்மையின் உண்மைகள்' நமது மூலப்பொருள்களானால், அவை பெரிய விளங்காப் போக்குகளாக இருக்கக்கூடியனவாகவும், அவற்றின் நடத்தையில் விடுவிக்கப்படாத புதிர்களைக் காட்டக்

[1] American Political Science Quarterly, 1923, P. 639-ல் மேற்கோள்.

கூடியனவாகவும் இருக்கின்றன என்பதைத் துவக்கத்திலேயே நாம் ஒத்துக்கொள்ளத்தான் வேண்டும்.

## (iv) இப் பிரச்சினைகளை எவ்வாறு தவிர்ப்பது?

'இவை யெல்லாவற்றையும்பற்றி என்ன சொல்கிறீர்கள்?' என்று மாணவன் கேட்கிறான். 'நான் மேற்கொள்ளவேண்டிய சில சிரமங்களை வரிசையாகச் சொல்லிவிட்டீர்கள். இவைகளை நல்ல முறையில் தவிர்ப்பதற்கு ஏதாவது நிச்சயமான ஆலோசனைகளைக் கொடுக்க முடியுமா?' என்று கேட்கலாம்.

### நம் குறைபாடுகளை உணர்ந்துகொள்ளுதல்

திறந்த மனம், மனத்தாழ்ச்சி, இன்னும் அறிவைத் தேடும் ஆவல் ஆகியவை நமக்கு இருப்பதாகக் கொண்டால், காலத்திலும் இடத்திலும் ஒரு குறிப்பிட்ட கட்டத்தில் நாம் நிற்கிறோம் என்பதை உணருவது முதலாவது தேவையாகும். பல பிரச்சினைகள் உலக முழுவதற்கும் பொருத்தமாவதைப்போன்று தோற்றமளித்தாலும், அவைகளின் குறிப்பிட்ட அமைப்புக்கள் மிகவும் வேறுபாடுள்ளவை யென்பதையும், இதனால் அவைகளின் முக்கியத்துவமும், அக்கறையும், கால இடத் தொடர்புடையவை என்பதையும் நாம் மனத்தில் கொள்ள வேண்டும். மேற்கத்திய பாராளுமன்ற முறையைக் காட்டிலும் சிறந்த நாகரீகமான வேறு அரசாங்க அமைப்புகள் பல இருக்கின்றன. குடியாட்சி தனக்குரிய சரியான நிறுவனங்களை இன்னும் ஏற்படுத்திக்கொள்ளவில்லை என்று பலரும் நம்புகிறார்கள். நம்முடைய அரசாங்க ஒப்பீட்டு ஆராய்வுகள் என்னும் வலையை இன்னும் பரந்து வீசினால் நன்மை நேரலாம்.

### தாழ்மையுள்ள மனம் வேண்டும்

காலத்தைப் பொறுத்தவரை அறிவு அவனோடு செத்துவிடாது என்பதை அரசியல் விஞ்ஞானி நினைவிற்கொள்ளவேண்டியது அவனது முக்கிய வேலை. வரலாற்று ஆசிரியனோடு பொதுவாகச் சேர்ந்து (வரலாற்று ஆசிரியனுக்கும் அரசியல் விஞ்ஞானிக்கும் முக்கியமான வேறுபாடு இருக்கிறதா என்ன?) கடந்த காலத்தை நோக்குவது இலகுவானதென்பதையும் எதிர்காலத்தை நோக்குவது கடினம் என்பதையும் அரசியல் விஞ்ஞானி உணர்கிறான். அவனில்லாமல் இயங்கும் ஓர் உலகத்தை அவனால் கற்பனை செய்து பார்க்கமுடியாது. மனிதனுக்கு இனி எதிர்காலமில்லை என்று

நம்பிக்கையை இழந்தாலொழிய, இற்றைக்குள்ள நம் தவறுகளும், குற்றங்களும் மனித வர்க்கத்தின் சில பிள்ளைப்பருவ நோய்கள் என்றுதான் நம்பிக்கொண்டே இருக்கவேண்டும். இனி அதிக அறிவு, மற்றவர்களின் துன்பங்களுக்கு இன்னும் அதிகமான அனுதாப உணர்ச்சி, நம் சொந்த சகோதரரின் துன்பத்திலிருந்து இலாபமடைவதற்குத் தயங்கும் தன்மை ஆகியவை தோன்றும் வரையில் இன்னும் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு அரசியல் சாத்திரம் வெறும் முன்னுரையாகவே இருக்கும்.

## தனிநபர் நலச்சோதனை

புவி, காலம் ஆகியவற்றின் சூழ்நிலைகளைத் தாண்டிக்கொண்டு பார்க்க முற்படும் அரசியல் விஞ்ஞானி, தனித்தனி மனிதரின் வாழ்க்கையை ஒவ்வொரு கொள்கையும், ஒவ்வொரு முறையும் எவ்வாறு பாதிக்கிறது என்பதைச் சோதித்தறிய முயலவேண்டும். அவ்வாறு சோதித்தவர் நாளைக்கு வரப்போகும் மக்களுக்கு வரப் போவதாகச் சொல்லப்படும் நலனுக்காக இன்றுள்ள மக்களின் உடனடியான நலனைத் தியாகம் பண்ணவேண்டும் என்ற கோட்பாட்டை நிராகரிப்பார். எவரிடத்திலிருந்து தியாகத்தை எதிர்பார்க்கிறோமோ, அவருக்குப் பொருள் சார்ந்ததும், நெறி சார்ந்ததுமான நன்மைகளைத் தரமுடியாத தியாகங்கள் வேண்டப்பட மாட்டாமல், ஆண்களையும், பெண்களையும் தாங்கள் பங்கு பெருத முடிவுக்கு ஒரு மூலமாகக் கொள்வது சரியென்பதை அவர் முக்கியமாக நிராகரிப்பார்.

எவ்வளவுதான் உணர்ச்சி மரத்துப்போனதொரு விஞ்ஞான ரீதியில் மனிதவர்க்கத்தின் கூட்டு வாழ்க்கையை ஆராய்ந்தாலும், அது நிலையான விஞ்ஞானியின் பணியைக் காட்டிலும், வைத்தியனது பணிக்கு மிகவும் நெருக்கமாக ஒத்திருப்பதை அவர் நினைவில் கொள்ளவேண்டும்.[1] அவனது ஆராய்ச்சித்துறையின் பெரும்பகுதி (முழுவதாக இல்லாவிட்டாலும்) மானிடவர்க்கத்தின் குறைபாடு களையும், துன்பங்களையும், அவைகளை நிவர்த்திக்க முற்படும் முயற்சி

[1] 'சமுதாய விஞ்ஞானிகள் பின் தங்கியவர்களா ?' என்ற ஒரு கட்டுரையில் பேராசிரியர் கெம்மரர் (kemmerer), சமுதாய விஞ்ஞானிகள் பணிபுரிவதற் குரிய ஐந்து நிபந்தனைகளை விவரிக்கிருர். இவை நிலையான விஞ்ஞானி களுக்கு வெறியூட்டக்கூடியவை. பரிசோதனைகளை அவரால் செய்யமுடியாது; துல்லியமாக விளைவுகளை அளவிட முடியாது ; தம்முடைய பரிசோதனைகளின் சூழலை அவர் அடக்கியாளமுடியாது ; மெதுவாக இயங்கும் பொருளாதாரச் சக்திகளிலிருந்து அதிவிரைவான விளைவுகளை அவர் கொண்டுவரவேண்டும் என்று எதிர்பார்க்கப்படுகிருர். அவர் உயிரற்ற பொருள்களோடு அல்லாமல் மனிதர்களோடு இப் பணி புரியவேண்டும்.' (Bulletin of the American Association of University Professors, January 1949).

களையும்பற்றியதாகத்தா னிருக்கிறது. நல்ல எண்ணங்களைக் காணும்போது அவற்றிற்கு மதிப்புக்கொடுக்கவும், அதே சமயத்தில் ஏற்கனவே ஒத்துக்கொள்ளப்பட்ட நிலைகளிலிருந்து பிறழ்ந்து செல்லும் குற்றங்களைக் கண்டிக்கவும், அவற்றை வளர்ச்சியின் நிச்சயமான கூறுகள் என்று ஒருவேளை நினைத்துவிடாதபடியும் இருந்து தம்முடைய தீர்ப்புகளைக் கருணையோடு வழங்கவேண்டும். இதற்கும் மேலாக, அவற்றின் பலவீனங்கள், முரண்பாடுகள், தவறுகள், ஆகியவற்றை உணர்ந்திருப்பதால் தம்முடைய 'மூலப் பொருள்களி'டத்து அனுதாபமும், பொறுமையும் காட்டவேண்டும். ஏனெனில் இந்தப் பலவீனங்களிலும், முரண்பாடுகளிலும், தவறு களிலும் அவருக்கும் பங்கு உண்டல்லவா ? அவர் மனிதன் என்ற முறையில், அவர் ஆய்வுசெய்யும் மூலப்பொருளின் ஒரு பாகமாகவும் ஆகிறார். 'Homo sum et nihil humanum a me alienum puto.'

# 2. நாடும் அதன் மக்களும்

மக்களில்லாமல் சமுதாயம் இல்லை. கூட்டு வாழ்க்கையில் குறிப்பிட்டதொரு பரிசோதனையைச் செய்துபார்க்கத் திட்டவட்டமான நிலமில்லாமல் பொதுவாழ்க்கையுமில்லை. ஆகவே, கூட்டங்களில் சேர்ந்துவாழும் மனிதனைப்பற்றிய ஆய்வின் துவக்கம் நிலத்திலும், அதன் மக்கள்தொகையிலும் ஆரம்பமாகிறது.

## (i) அரசின் ஆட்சிநிலம்

### எல்லா நிலமும் ஏதாவதொரு அரசுக்குச் சொந்தம்

ஓர் உலகப்படச் சுவடியைப் புரட்டினால் பூமிப்பரப்பு முழுவதும், சில கடற்பரப்புங்கூட நாம் அரசு என்று அழைக்கும் கூறுகளாகப் பிரிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். எப்படி ஒவ்வொரு மனிதனும் ஓர் அரசைச் சேர்ந்தவனோ, அதைப்போலப் பூமியின் ஒவ்வொரு சதுரகெஜமும் ஓர் அரசைச் சேர்ந்ததுதான். அரசுகளைக் குறிப்பிட்டுக் காட்டும் எல்லைகள் அரசியல், பொருளாதார, சமுதாய முக்கியத்துவம் வாய்ந்தவை. பெரியதாகவோ அன்றிச் சிறியதாகவோ, ஒரு நிச்சயமான நிலப்பகுதியில்லாத அரசில்லை. பெரிய அரசினையோ அன்றிச் சிறிய அரசினையோ சேராத நிலப்பரப்பு மில்லை. தனித்தனியாக நம்மைப் பொறுத்த அளவில் ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியோடு நமக்குள்ள தொடர்புதான் சாதாரணமாக நம்மை அரசின் அங்கமாக ஆக்குகிறது. நீ அங்கே பிறந்த காரணத்தால் அதன் குடிமகன், அல்லது உன் தந்தை அங்கே பிறந்திருப்பார். அல்லது வேறெங்கோ பிறந்திருந்தாலும் உன்னுடைய வாழ்க்கை இடமாக ஒன்றை அமைத்துக்கொண்டு அதன்பிறகு நாட்டின் குடிமகன் என்னும் உரிமையளிக்கப்பட்டுக் குடிமகனாக ஆகியிருக்கலாம். சிலர் நீங்கலாக, மற்ற உடன்வாழ் குடிமக்களனைவரும் (fellow citizens) உடன் குடியிருப்போரே. இந்த

வகையாக ஒரே நிலத்தில் பங்கு பெறுவதுதான் நம்முடைய பொது அக்கறைகளை உண்டாக்குகிறது.

## அரசிற்கு நிலத்தோடுள்ள தொடர்புகள் யாவை?

இப்பொழுது பல நாடுகளில் நிலம் அரசுக்குச் சொந்தமாக இராமல் அதன் குடிமக்களின் தனியுடைமையாக இருப்பதை முதன் முதலில் கவனிக்கவேண்டும். இந்த விதியிலிருந்து ஒரே ஒரு விலக்குப் பெறுவது பொது உடைமை ருஷ்யா தான். பூர்வகாலத்தில் நிலமெல்லாம் சமுதாயத்தின் கூட்டு உடைமையாக இருந்தது பொதுவாகத் தெரிந்த விஷயம். இதன் அடிச்சுவடுகளைப் 'பொது நிலம்' இருக்கும் கிராமாந்திரச் சமுதாயங்களில் இன்னுங்காணலாம். உதாரணமாகச் சில ஆங்கிலக் கிராமங்கள் பொதுநிலங்களுடையனவாக இன்னும் இருக்கின்றன. நகராட்சிகள் சாலைகளையும், பூங்காக்களையும் தங்களுக்குச் சொந்தமாக வைத்திருக்கின்றன. எல்லாச் சாலைகளும் ஏதாவதொரு பொதுத்துறையின் சொத்தாக இருக்கின்றன. குறிப்பிட்ட ஏதாவது காரணத்துக்காக அரசு சில சமயங்களில் நிலம் வாங்கக்கூடும். அப்பொழுது நிலம் வாங்குகிற மற்றவர்களைப்போல அதுவும் விலை கொடுத்துத்தான் வாங்கவேண்டி இருக்கிறது.[1] இப்பொழுது கிரேட்பிரிட்டனில் உள்ளதுபோல, கனிச்சுரங்கங்கள் பெரும்பாலும் அரசின் உடைமையே. நிலம் எவ்வாறு பயன்படுத்தப்படவேண்டும் அல்லது பயன்படுத்தக்கூடாது என்பனபற்றி அரசு சட்டங்கள் விதிக்கலாம். சில அபூர்வமான சமயங்களில் நிலம் சரியானமுறையில் பண்படுத்தப்படவில்லை யென்ற காரணத்திற்காக அரசு நிலத்தை எடுத்துக்கொள்வதுமுண்டு.

## தனது ஆட்சிநிலத்திற்குள்ளாக அரசின் ஏகபோக அதிகாரம்

நில உடைமையில் ஏகபோக உரிமையை அரசு கோரவில்லை என்றாலும், அதன் எல்லைக்குள்ளாக அது ஏகபோக அதிகார உரிமையைக் கோருகிறது. அரசின் வகையைப் பொறுத்து இந்த அதிகார உரிமை பெரியதாகவோ அன்றிச் சிறியதாகவோ இருக்கலாம். அது சிறியதோ, பெரியதோ எவ்வாறிருப்பினும் இந்த அதிகாரத்தை வேறு எவரோடும், முக்கியமாக மற்ற அரசுகளோடு பகிர்ந்துகொள்ள

[1] பல நாடுகளில் பொதுக்காரியத்துக்காக வாங்கப்படும் நிலம் அரசின் உடைமையாக இருக்கும். இங்கிலாந்தில் அரசாள் நிலங்கள் (Crown Lands) முன்னர் அரசர்களின் உடைமையாயிருந்து பின்னர் வருடாவருடம் கொடுக்கப்படும் அரசர் செலவுப் பணத்திற்கு (Civil List) ஈடாக ஒப்படைக்கப் பட்டவையே. ஆனால் அரசரும் அவரது பிரஜைகளைப்போலவே அதே உரிமைகளும், கடமைகளுங்கொண்ட நிலக்கிழார்தான்.

முடியாது. (அரசியலில் அடிக்கடி கையாளப்படுவதும், நாம் இப்பொழுது பார்க்கப்போவதுமாகிய 'தலைமை உரிமை' என்ற சொல்லுக்கு இதுவும் ஒரு பொருளாகும்). அதன் எல்லைக் குள்ளிருக்கும் அதன் அங்கங்கள் வேறு அரசிற்குக் கீழ்ப்படிய வேண்டுவதில்லை. அப்படியே அவர்கள் வெளிநாட்டைச் சேர்ந்த வர்களெனினும், அவர்கள் தாங்கள் வசிக்கும் நாட்டின் ஆணை களுக்குக் கீழ்ப்படியாமலிருப்பதற்குத் தங்கள் நாட்டு ஆணையைக் காரணமாகக் காட்டி வாதிடமுடியாது. அப்படி அவர்கள் செய்வார் களானால் சீக்கிரமே அந் நாட்டினின்றும் வெளியேற்றப்படுவர்.

தனது ஆட்சி நிலத்திற்குள்ளாக அரசு தன் அதிகாரத்துக்குப் போட்டியை அனுமதிக்காது என்றால், அதன் எல்லைக்கு வெளியே அதற்கு அதிகாரம் கிடையாது என்பது தெளிவு. நாஜி ஜெர் மனியைப்பற்றிச் சொல்லப்பட்ட குறைபாடுகளில் ஒன்று, வெளி நாடுகளில் இருந்த தம் குடிமக்கள்மீது நாஜி ஜெர்மனி பன்னாட்டு உறவுச் சட்டங்கள் அனுமதிக்கும் சாதாரண அதிகாரத்திற்கும் அதிகமாகப் பிரயோகித்தது என்பதுதான். வேறு நாட்டின் குடி உரிமைபெற்று ஜெர்மனியிடமுள்ள விசுவாசத்தைச் சட்டப்படி ஒதுக்கிவிட்டு, வேறு நாட்டுக் குடிமக்களான போதும், இந்த மாதிரியான அதிகாரத்தை ஜெர்மனி உபயோகிக்க முயன்றது. அதன் எல்லா நிலப்பகுதிகள்மீதும் அரசிற்கு அதிகாரம் உண் டெனினும், இந்த அதிகாரம் ஒரே வழியில் பிரயோகிக்கப்படுவதில்லை. ஆறும் ஜார்ஜ் மன்னர் கிரேட் பிரிட்டனையும், 'அரசாள் குடியேற்ற நாடுகளையும்', வெஸ்மின்ஸ்டரிலுள்ள அமைச்சரவை, பாராளு மன்றம் ஆகியவை மூலமாக ஆட்சிபுரிகிறார்; டொமினியன் அந்தஸ்து பெற்ற நாடுகளில் அங்குள்ள அமைச்சரவை, பாராளு மன்றம் ஆகியவற்றின் மூலம் ஆட்சிபுரிகிறார். பல அரசுகள் கடல் கடந்த சார்புநாடுகளாயுள்ளன. இவற்றில் சிறிது சுயாட்சியோ அல்லது கொஞ்சங்கூடச் சுயாட்சி இல்லாமலோ, இருக்கலாம். தங்களது நிலங்களின் எல்லைக்குள்ளாகவே சில அரசுகள் இருக் கின்றன. கப்பல்களும், வெளிநாட்டுத் தூதரகங்களும் அவை எந்த நாட்டுக்குச் சொந்தமோ, அந்த நாட்டுப் பொருள்களாகவும் அரசாள் நிலமாகவுமே கருதப்படுகின்றன.

## ஆட்சிநிலம் பெறல்

வெவ்வேறு பல வழிகளில் அரசுகள் தங்கள் ஆட்சிநிலத்தைப் பெற்றன என்ற உண்மையோடு தொடர்புடையன. அவர்கள் பல்வகை அதிகாரங்களைப் பெற்றிருப்பது ஆதியிலிருந்த 'நடுப் பகுதி' அல்லது 'மையத்தைச்சுற்றிலும் பெருகியவைதான் பல

நாடுகள். இங்கிலாந்திற்கு வெஸ்ஸெக்ஸ் (Wessex), ஃபிரான்சிற்குச் சீன், லோவர் (Seine, Loire) நதிகளிடையேயுள்ள பகுதி, பிரஷியா விற்குப் பழைய நாடாகிய பிராண்டன்பர்க் (Brandenburg), அமெரிக்க ஐக்கிய நாடுகளுக்கு அட்லாண்டிக் கடற்கரை ஆகியவை 'நடுப்பகுதி'யாக இருந்தன; வழக்கமாக நாடுபிடித்தல் மூல மாகவே விஸ்தரிப்பு நிகழ்ந்தது. இன்றைய நெறிமுறைகளின்படி நாடுபிடித்தலை நாம் எவ்வளவுதான் கண்டனம் செய்தாலும், அது இல்லாமல் இன்று ஒரு நாடும் இருந்திருக்கமுடியாது என்ற முடிவை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும். ஆயிரம் வருடங்களுக்கு முன்பிருந்த அதே அதிகாரத்துக்கு இன்றும் கட்டுப்பட்டு இருக்கும் நாடு ஒன்றாவது இருக்கிறதா? எதிர்ப்போடோ அல்லது எதிர்ப் பின்றியோ, ஆட்சிநிலங்கள் எண்ணற்ற தருணங்களில் கைமாறி யிருக்கின்றன. நாட்டைக் கைப்பற்றி நிலம் பெறுவதற்கு எதிராக ஏற்பட்ட முதற்புரட்சி (போலந்தைத் துண்டாடியது) வந்து இன்னும் இரு நூற்றாண்டுகள் ஆகவில்லை. நாடு பிடித்தலைப்பற்றி ஒருவரும் 'முதற் கல்லெறிவது' கூடாதது.

நிலம் பெறுதலுக்குத் திருமண உறவுகள், மாற்று, விலைக்கு வாங்கல், ஒப்படைத்தல் போன்ற பல அமைதியான வழிகளும் உள்ளன. பெரிய நிலப்பகுதிகளுக்குச் சொந்தக்காரிகளாக வுள்ள பெண்களை அரசர்களுக்கு விவேகமாகத் திருமணம் செய்வித்ததுதான் பிரஞ்சு அரசு விரிந்ததற்குரிய ஒரு காரணம் ஆகும். ஆஸ்திரியாவும் இதையேதான் செய்தது. 'மற்றவர்கள் வெற்றிகாணும்போது, நீ தழுவு' என்பது ஆஸ்திரியாவின் குறிக்கோள். மாற்றுமுறை மிகவும் அபூர்வம். ஆனால், அப்படித்தான் 1766-ல் லோரெய்ன் (Lorraine) ஃபிரான்சு அரசின் பாகமாக ஆகியது. அதுபோலவே, 1890-ல் பிரிட்டனிடமிருந்து ஹெலிகோலாந்தை, (Heligoland), ஜான்சிபாருக்கு (Zanzibar) மாற்றாகப் பிரஷியா பெற்றுக் கொண்டது. லூசியானாவைப் (Lousiana) பிரஞ்சுக்காரரிடமிருந்தும், பிளாரிடாவை (Florida) ஸ்பானிஷ்காரரிடமிருந்தும் அமெரிக்க ஐக்கிய நாடுகள் விலைகொடுத்து வாங்கின. ருஷ்யா - துருக்கிப் போரில் (Russso - Turkish War) தூதாக ஆதரவு அளித்தமைக்கு நன்றி காட்டும் வகையில் துருக்கி 1878-ல் சைப்ரஸ் (Cyprus) தீவைப் பிரிட்டனுக்கு ஒப்படைத்தது.

## (ii) அரசின் எல்லைப்புறங்கள்

ஒரு சிறு நிலப்பகுதியின் உடைமையில் ஏற்படும் ஒவ்வொரு மாற்றமும் ஒரு பொது உடன்படிக்கையால் பதிவு செய்யப் படுகின்றது. ஆகவே, இன்றைக்குள்ள உலகத்தின் எல்லைப்

புறங்கள் எல்லாம் முற்காலத்திலோ அல்லது சமீப காலத்திலோ ஏற்பட்ட உடன்படிக்கைகளின் விளைவுகள்தான். உதாரணமாக, 1622-ல் ஏற்பட்ட உடன்படிக்கையின்படி இரண்டாம் சார்லஸ் ஃபிரெஞ்சுக்காரருக்கு டன்கிரிக்கை (Dunkirk) விற்றுவிட்டு, அதன் மூலம் பிரான்சு நாட்டிற்குள் ஆங்கில நிலமிருப்பதாக இனிமேல் எப்பொழுதும் கோருவதில்லை என்று ஏற்பட்ட பிறகுதான் இங்கிலீஷ் கால்வாய் (English Channel) ஒத்துக்கொள்ளப்பெற்ற எல்லையாக மாறியது. ஃபிரான்சு நாட்டின் ஸ்பானிஷ் எல்லைப்புறம் பிரனீஸ் உடன்படிக்கை (1659) யின் (Treaty of Pyrenees) படியும், பெல்ஜிய நாட்டோடு, வியன்னு உடன்படிக்கை (Treaty of Vienna) (1814) யின்படியும் ஏற்பட்டன. இதன்படிப் புரட்சிக்காலத்தில் கைப்பற்றப்பட்ட நிலங்கள் பிரிக்கப்பட்டுள்ளன. ஜெர்மனியோடு வார்ஸேல்ஸ் (Verseilles) உடன்படிக்கையின்படியும், இத்தாலியோடு 1947-ல் ஏற்பட்ட உடன்படிக்கையின்படியும், எல்லைகள் வகுக்கப் பட்டிருக்கின்றன. உலகப்படச் சுவடியொன்றை எடுத்து ஒவ்வொரு முக்கியமான எல்லைப்புறமும் என்னென்ன உடன்படிக்கையால் ஏற்பட்டது என்று சொல்வது சுவைமிக்கதொரு விளையாட்டாகும்.

## நல்லனவும், கெட்டனவுமான எல்லைப்புறங்கள்

ஆகவே, வரலாற்று ரீதியிலும், அரசியல் ரீதியிலும் எல்லைகள் மிக முக்கியம் வாய்ந்தவை. ஒரு 'நல்ல' எல்லை சில நிச்சயமான தன்மைகள் உடையதாக இருக்கவேண்டும்; அது பாதுகாப்பு அளிக்கக் கூடியதாக இருக்கவேண்டும். அது அதிகமாகப் பிரித்து விடுவதாகவும் அதே சமயத்தில் இருக்கக்கூடாது; இருதரப்பாருக் கும் ஏதாவதொரு கொள்கை அல்லது அக்கறையின் அடிப்படையில் அந்த எல்லை ஒப்புக்கொள்ளக்கூடியதாக இருக்க வேண்டும். இதிலிருந்து ஓர் எல்லைப்புறம் ஒரு வழியில் 'கெட்ட'தாகவும் இன்னொரு வழியில் 'நல்ல'தாகவும் இருக்க முடியும் என்று ஆகிறது. ஜெர்மனிக்கும், செக்கோஸ்லோவேக்கியாவுக்கும் இடையேயிருந்த பழைய புவியியல்படி பாதுகாப்பளிப்பதாக இருந்ததால், 'நல்ல தாகவும்', 3 மில்லியன் ஜெர்மானியரை மறுபக்கத்தில் விட்டுவிட்ட தால் 'கெட்டதாகவும்' ஆகியது. ஆல்ப்ஸ் மலையும், பிரனீஸ் மலையும் எல்லா வகைகளிலும் சிறந்த எல்லைகளாகும். பரந்த கடல் களும் கால்வாயும் (Channel) சிறந்த எல்லைகளாகும். இங்கிலாந் துக்கும் ஃபிரான்சுக்கும் 5 நூற்றுண்டுகளாகக் கால்வாய் எல்லையாக இருக்கவில்லை என்பதைக் கவனிக்கவும். 1066-ல் இங்கிலாந்தை நார்மானியர்கள் கைப்பற்றியதிலிருந்து 1558-ல் மேரி ராணியாரால் கலே (Calais) இழக்கப்படும்வரைக்கும், ஐரோப்பாக் கண்டத்தில் இங்கிலாந்துக்குச் சிறிதளவு நிலமாவது இருந்து வந்தது. மீண்டும் 80ஆண்டுகளுக்கு இங்கிலாந்தைக் காட்டிலும் ஃபிரான்சிற்குப் பக்கத்தி

லுள்ள சானல் தீவுகளில் (Channel Islands) ஒன்ருகிய ஹெலிகோலாண்டை இங்கிலாந்து வைத்திருந்தபோது இது நிகழ்ந்தது.

அடிக்கடி நதிகளை எல்லைகளாகக் கொள்கிருர்கள். ஏனெனில், அவை வெகு திட்டவட்டமாக எல்லையைக் குறிக்கக்கூடியன. எனினும் பெரிய நதியே பாதுகாப்பு அளிக்கக் கூடியது ஆகும். நதி மொழி, கலாச்சாரத் தொடர்புகளுக்குத் தடையாக இருப்பது அபூர்வம். பல எல்லைப்புறங்கள் செயற்கையானவை. வட கடலிலிருந்து (North Sea) யூரல் மலைகள் (Ural Mountains) வரை வெறும் தற்செயலான கோடுகளாலான பல எல்லைப்புறங்கள் இருந்தன. பல வருடங்களுக்குப் பிறகு இவை சரியான எல்லைகளாக மாறின. உதாரணமாகப் பெல்ஜியத்திற்கும், ஃபிரான்சிற்குமிடையேயுள்ள எல்லையானது 14 ஆம் லூயி மன்னனின் படைகள் கைப்பற்றிய பகுதிகளை அடிப்படையாகக் கொண்டு, ஸ்பானிய நெதர்லாண்டுக்கு நடுவே இழுக்கப்பட்ட கோடுதான் என்ருலும், இந்த எல்லையை மாற்றியமைக்கும்படி யோசனை தெரிவிக்கப்படவில்லை. டூர்னே, பிரஸ்ஸல்ஸ், மாலைன்ஸ், ஆண்ட்வெர்ப் (Tournai, Brussels, Malines, Antwerp) ஆகிய நகரங்கள் லூயி மன்னனல் கைப்பற்றப் படாமல் இருந்தது ஒரு தற்செயலான நிகழ்ச்சிதான். இப்பொழுதுங் கூட ஃபிரஞ்சு மொழி பேசுகிறவர் அவ்வெல்லைக்குள் இருக்கவில்லை. அதே மன்னன் ஆட்சிக்காலத்தில் அல்சாசு (Alsace) க்கு வடக்கே யுள்ள ரைனைத்தொட்டு அங்குள்ள ஜெர்மன் மொழி பேசும் மக்கள் வாழும் நிலப்பகுதிகளைச் சேர்ந்திருந்தால் அவர்களும் தெற்கேயுள்ள அல்சாசிலுள்ளவர்களைப் போலவே ஃபிரஞ்சு இன உணர்ச்சி பெற்றிருந்திருப்பார்கள். இப்படி நடக்காதது போர் நடைமுறைகளில் நிகழ்ந்த ஒரு தற்செயல் நிகழ்ச்சியாகும். லீபனேன் (Lebanon), சிரியா, பாலஸ்தீனம் (Syria, Palestine) ஆகிய நாடுகளுக்கிடையேயுள்ள எல்லைகளும் செயற்கையானவையே. துருக்கி ஆட்சிக்குட்பட்ட அராபிய நிலங்களை ஆங்கிலேயரும், ஃபிரஞ்சுக்காரரும் பேரம் செய்ததாலும், சீயோனின் (Zion), போர்வெற்றிகளாலும் ஏற்பட்ட விளைவுதான் அது.

## பொதுவாழ்க்கை பொதுஅக்கறைகளை உண்டாக்குகிறது

ஒரே ஆட்சியின்கீழ்ப் பொதுவாழ்க்கை நடத்துவது பொதுவான அக்கறைகளையும், உணர்ச்சிகளையும், பழக்கவழக்கங்களையும், மந்தமான தன்மையையும் உண்டாக்குவதோடு, திருப்தியற்ற பல எல்லைக்கோடுகளையும் பல ஆண்டுகளுக்கு நிலைத்திருக்கச் செய்கிறது. சமீபகாலத்தில் வளர்ந்துவருகின்ற தேசீய உணர்ச்சியானது பழைய பிரிவினைகள் பலவற்றை உடைத்து, நாட்டு இனக்

கொள்கை அடிப்படையில் புதிய கோடுகளை உண்டாக்க முயன்று வருகின்றது.

'இயற்கையான எல்லைகள்' பன்னூட்டு விவகாரங்களில் கொள்ளிவாய்ப்பேயாக இருந்து வருகின்றன. 'இயற்கையான எல்லைகள்' என்று அழைக்கப்படுகின்ற கோடுகள் மிகவும் சொற்பமாகவும், அவற்றின் அடிப்படையில் கொள்கைகள் எழுப்பப்பெற முடியாதனவாகவும் இருக்கின்றன என்பது தெளிவான செய்தி. மனிதர்களால் ஆக்கப்படுவன தான் எல்லைகள். இவை பல நோக்குகளை ஆதாரமாகக்கொண்டு உண்டாக்கப்பெற்றவை. எல்லைக்கோடுகளை அழித்து விடமுடியாதாகையால், அவைகளை முக்கியமற்றனவாக வாவது செய்வது செய்யக் கூடியவைகளில் மிகவும் நல்ல காரியம் என்று சொல்லத் தோன்றுகிறது. நுழைவுச்சீட்டு இல்லாத பிரயாணங்களும், தடையில்லாத குடியேற்றங்களும், வரையறையில்லாச் செலாவணிப்போக்குகளும் இருந்த நாட்களில் இப்பொழுதைப்போல இவ்வெல்லைகள் இருந்ததை நாம் உணரவில்லை. எல்லாச் சுங்கங்களையும் நீக்கிவிட்டால், மக்கள் போக்குவரத்தையும், குடியேற்றத்தையும் பொறுத்தவரை நடைமுறையில் எல்லைப்பிரச்சினை நீக்கப்படலாம். கூட்டுப்பாதுகாப்பு எப்பொழுதாவது ஏற்படுத்தப்பட்டால், போர் யுக்திகளில் கீழ்த்தரமான எல்லைப்புறங்களின் அபாயத்தை விலக்கக்கூடும். இப்படியாக ஒருவன் மகிழ்ச்சியான அந்தக் காலத்தைப்பற்றிக் கனவுகண்டுகொண்டே இருக்கமுடியும்.

## (iii) அரசின் இருப்பிடமும் அளவும்

### பெரிய அரசுகளும் சிறு அரசுகளும்

எல்லைகளிலிருந்து அவ் வெல்லைகளுக்குள் ளடங்கிய ஆட்சிநிலத்திற்கு வந்தால், அரசுகளின் அளவுகளில் பெரிய வேறுபாடு இருப்பதைக் காணலாம். (4 சதுரமைல் பரப்பு கொண்ட) மானகோ (Monaco) வும், ($10\frac{1}{2}$ மிலியன் சதுரமைல் பரப்புள்ள) ருஷ்யாவும் (அதாவது 2 மிலியன் மடங்கு பெரியது) அரசுகள்தான். அளவு என்பது அதன் அமைப்பிலிருந்து பிரிக்கப்பட முடியாது. ஃபிரான்சும், சில்லியும் ஒரே அளவினவைதான். ($\frac{1}{4}$ மிலியன் சதுரமைல்கள்) என்றாலும் சில்லி நீட்ட வாக்கிலும், ஃபிரான்சு கிட்டத்தட்ட அறுகோணமாகவும் அமைந்திருக்கின்றன. இதே வகையான நீள அகல வேற்றுமைகள் நார்வேக்கும், செக்கோஸ்லோவேகியாவுக்கும் இடையேயும் காணப்பட்டுப் பாதுகாப்பு, உள்நாட்டுத் தொடர்புகள், மேற்பார்வை, ஒருமைப்பாடு ஆகியவற்றில் சிக்கலுண்டாக்குகின்றன.

## பேரிடமும், அதிகாரமும்

ஆகவே ‘பேரிடம் பெற்றிருப்பது அதிகாரம் கொடுக்கிறதா ?’ என்ற வினு எழுகிறது. பேரிடத்தை மாத்திரம் எடுத்துக்கொண்டால் அது முக்கியமல்லாதது என்பதுதான் தவிர்க்கமுடியாத பதில். கனடா, பிரேசில் போன்ற நாடுகள் அமெரிக்க ஐக்கிய நாடுகளைக் காட்டிலும் பேரிடம் படைத்திருக்கின்றன வெனினும் அங்கு மக்கள் தொகை மிகக் குறைவு. ஏனெனில் அவர்களின் நிலப்பரப்பு மனிதனுக்குப் பயனளிப்பதாக இருக்கவில்லை. (பொருளாதார, பொறியியல் வளர்ச்சி இந்த நிலையை மாற்றக்கூடும்). ஆயிரக்கணக்கான சதுரமைல் பரப்புள்ள பாலைவனமோ அல்லது மலைகளோ, அல்லது பனிக்கட்டியோ, யாராவது படையெடுத்து வருபவர்களைத் தடுக்கும் என்பதைத்தவிர வேறு பயனைத் தருவதில்லை. அதற்கு மாருக, சில சிறிய நாடுகள் வசியும் வளனும் பெற்று, நாகரீகத்தின் உச்ச நிலையையும் அடைந்திருக்கின்றன.

எவ்வாறு இருப்பினும், பேரிடம் பாதுகாப்பு அளிக்கிறது என்பதாலும், சிறு பிரதேசங்கள் தாக்கப்படக்கூடும் என்பதாலும், பேரிடம் அதிகாரத்தை அளிக்கிறது என்று கூறலாம். சிறு நாடுகள் பெரிய நாடுகளைவிடப் பலவித இன்னல்களுக்குள்ளாகியிருக்கின்றன என்பதை வரலாறு காட்டுகிறது. அல்லது சுவிட்சர்லாந்தைப்போல் சக்திவாய்ந்த அண்டை நாடுகளால் பாதுகாக்கப்பட்டிருக்கவேண்டும் அல்லது போர்ச்சுகலைப்போல ஏனைய நாடுகளின் விஸ்தரிப்புப் பாதையை விட்டு விலகி இருந்திருக்க வேண்டும். நெதர்லண்ட்ஸ், டான்யூப் நதிப்புறத்தே அமைந்த நாடுகளின் வரலாறு சிறு நாடுகளின் அவல நிலைமையை எடுத்துக்காட்டுகிறது, சர்வதேசச் சங்கத்தையும் அதன் கூட்டுப் பாதுகாப்பு வாக்குறுதிகளையும் முழுவதாக நம்பிச் சிறு நாடுகள் பல அச் சங்கத்தில் கூட்டமாகச் சேர்ந்தன என்பதில் வியப்பில்லை. கடந்த 10 ஆண்டுகளின் ஏமாற்றங்களிலிருந்து இன்றும் அவர்கள் மீளவில்லை. பன்னுட்டு அரசியலில் வல்லமை ஒரு முக்கியமான அம்சமாகக் கருதப்படுகின்றவரை ஒன்று அரசுகள் பெரியனவாக இருக்கவேண்டும் ; இல்லையாளுல் அவர்கள் முக்கியமான அரசியல் பங்கு எடுத்துக்கொள்ள முயலக் கூடாது.

## இருப்பிடத்தின் முக்கியம்

அளவைக்காட்டிலும் இருப்பிடம் அதிக முக்கியத்துவம் வாய்ந்திருக்கிறது. உலக வல்லரசுகள் அனைத்தும் மத்திய நில நேர்க் கோட்டிலேயே அமைந்திருக்கின்றன. சிலவகையான தட்பவெப்ப

நிலைகள் சில பகுதிகளை அரசியல் முக்கியமில்லாதபடி ஆக்கிவிடுகின்றன. இவை கூட, பொறியியல் வளர்ச்சியால் செயற்கையாகச் சூடுண்டாக்கும் வழிகளையும் அல்லது குளிர்விக்கும் சாதனங்களையும் உபயோகித்து முன்னேறக்கூடும். பாசன வசதிகள் ஆச்சரியமான மாற்றங்களை ஏற்படுத்திவிடுகின்றன ; இன்னும் ஏற்படுத்தக்கூடும். ஆர்க்டிக் பகுதிகளிலிருந்தும், சஹாராப் பாலைவனங்களிலிருந்தும் இமாலய மலைகளிலிருந்தும் வல்லமையான சமுதாயங்களை எதிர்பார்ப்பது கடினம்.

கடலோடு ஒட்டியிருப்பது எப்பொழுதும் பயனுள்ளதாக இருக்கிறது. அதைப்போல நில இணைப்புக்கள், கடல் இடுக்குகள், முக்கிய கடற்பாதைகள்மீது அமைந்துள்ள தீவுகள், முக்கியமான கணவாய்கள் ஆகியவை போர்த்திறத்துக்குத் துணையாக அமைவதால் பயனுள்ளனவாக இருந்துவந்திருக்கின்றன. இவைகளுக்குப் பக்கத்திலிருப்பது சில சமயங்களில் போட்டியாக உரிமை கொண்டாடுபவர்களால் அரசியல் நெருக்கடிகள் ஏற்பட்டிருந்தாலும், எப்பொழுதும் அது பொருளாதார அடிப்படையில் இலாபகரமாகவே இருந்திருக்கும்.

முடிவாக, சாலைகள் அல்லது நதிகள் மூலமாக உள்நாட்டுப் போக்குவரத்துக்கு நல்ல சாதனங்கள் அமைப்பது மக்களை ஒன்றுக இணைப்பதற்கும், நல்ல அரசாங்கம் ஏற்படுவதற்கும் துணை புரிகிறது என்ருலும், படையெடுத்துவரக்கூடிய இராணுவங்களின் முன்னேற்றத்திற்கும் இவை உதவியாக இருக்கின்றன. மலைகளின் மீது செல்லும் மோசமான சாலைகள் உள்நாட்டுப் பொதுத்துறை ஆட்சிக்குத் தடையாக இருப்பினும் அவை ஆக்கிரமிப்பைத் தடை செய்கின்றன. சில சமயங்களில் நன்மை பயப்பதாயும், சில சமயங்களில் இடையூறு விளைவிப்பதாயும் இல்லாத இயற்கைக் கூறுகள் இல்லவே இல்லை என்பது வெளிப்படை. பிரிட்டனுக்கு அதன் தீவு நிலையில் உண்டான தனித் தொடர்பற்ற தன்மையானது வரையிலா நன்மை அளித்தது. ஆனல், அதே தன்மை அயர்லாந்துக்கு ஒரு நன்மையும் செய்யவில்லை.

## இயற்கை வளங்கள்

சில இயற்கை வளங்களைப் பெற்றிருப்பது இருப்பிடத்தைப் போலவே முக்கியமானதாகும். மக்கள் தொகைக்கு ஏற்ற வீதத்தில் மக்களுக்குப் போதுமான அளவு உணவு உற்பத்தி செய்யக்கூடிய பயிரிடும் நிலங்களை உடைய தன்மை இவைகளில் வெளிப்படையான ஒன்று. வெளி நாட்டாரிடமிருந்து உணவுப் பண்டங்களைப் பெறுவதானது இன்றைக்குக் காணப்படும் பல சிக்கல்களை உண்டாக்குகிறது.

நகரங்களின் விஸ்தரிப்பு, பயிரிடுவதற்கு இருந்த நிலங்களின் அளவைக் குறைத்து, சாப்பிடுவோரின் எண்ணிக்கையை அதிகரித்து இந்தப் பிரச்சினையை மிகவும் சிரமமுள்ளதாக்கிவிட்டது. கனிப் பொருள்களும் முக்கியமானவையே. நிலக்கரிதான் இன்றைய இங்கிலாந்தை ஆக்கியது; எண்ணெய் இருப்பது மத்திய கிழக்கைப் புரட்சிகரமாக மாற்றிவருகிறது; பலவகைக் கனிவளங்கள் ஏராளமாக இல்லாமலிருந்தால் அமெரிக்கா இன்றைக்குள்ள நிலையில் இருந்திருக்க முடியாது. இதைப் போலவே, எதிர்காலத்தில் ருஷ்யா ஒரு பெரிய வல்லரசாவது அதன் ஏராளமான கனிச் செல்வங்களைப் பெருக்குவதில்தான் இருக்கிறது. உலக அரசியலில் கம்பளி, ரப்பர் ஆகியவற்றின் முக்கியத்துவத்தைப் பற்றி அதிகம் இங்கு விளக்கவேண்டியதில்லை. இயற்கை மூலப்பொருள்கள் இல்லாமையை நவீன காலப் பொறியியலும் ஈடு செய்யும் என்பதை மாத்திரம் நினைவிற் கொள்ளவேண்டும்.

இயற்கை தன் மனம்போனபடி சில நாடுகளுக்கு நன்மையையும், சில நாடுகளுக்குத் தீமைகளையும் கொடுக்கிறது. இதை நாம் ஒன்றும் செய்யமுடியாது. எவ்வாறு இங்கிலாந்து இனிமேல் முன்னிருந்தபடி தானியம் ஏற்றுமதி செய்யும் நாடாக இருக்க முடியாதோ, அவ்வாறே ஸ்பெயின், சிரியா, பாலஸ்தீனம் ஆகிய நாடுகள் பெரிய இயந்திரத் தொழில்மயமான நாடுகளாக முடியாது. பெருநிலம் சார்ந்த நாட்டின் கொள்கை, கடல்சார் நாட்டின் கொள்கைகளிலிருந்து வேறுபட்டிருக்கும். பெரிய இடையூறுகளுக்கு எதிரே மனிதன் செய்யக்கூடிய காரியங்கள் அதிசயமாக இருக்கின்றன. முற்காலத்தில் மாற்றவே முடியாத இடையூறுகள் என்று கருதப்பட்டவைகளை நவீனகாலப் பொறியியல் அழித்துவிட்டிருக்கிறது.

## (iv) புவியியலும், அரசாங்கமும்

### அரசாங்கமும் பாதுகாப்பும்

புவியியல் சந்தர்ப்பங்கள் எவ்வளவு தூரத்துக்கு அரசாங்க அமைப்பு முறையைப் பாதிக்கிறது? பாதுகாப்பு குறைவாக இருந்தால், அரசாங்கம் வலுவுள்ளதாக இருக்கவேண்டும் என்பது வெளிப்படை. கிரேட் பிரிட்டன் மக்களுக்கு ஏராளமான சுதந்தரத்தை அளிக்கும் பிரதிநிதித்துவ நிறுவனங்கள் அமைப்பதில் வழிகாட்டியாக இருக்கிறது. அமெரிக்க ஐக்கிய நாடுகள் அதிகாரம் அதிகமாகப் பரவிநிற்கக்கூடிய மக்களாட்சி முறையைப் பின்பற்றுகிறது.

இதற்காகக் கால்வாய் (Channel), அட்லாண்டிக்குக்கும் நன்றி சொல்ல வேண்டும். அதன் இயற்கையான பாதுகாப்பின்மையைக் கருத்தில் கொள்ளாது அமைக்கப்பட்ட அரசியலமைப்பை மாற்றிக் கொள்ள மறுத்ததன் விளைவுதான் 18-ஆம் நூற்றாண்டில் போலந்து வீழ்ச்சியுற்றதற்குக் காரணம் ஆகும். அதன் சட்டரீதியான அரசியல் குழப்பங்கள் பேராசைமிக்க அண்டை நாடுகளின் முன்பு அதைப் பலமற்றதாகச் செய்துவிட்டன. யுத்தமானது மிகவும் ஜனநாயக நாட்டில் தற்காலிக எதேச்சாதிகார ஆட்சியை நிறுவுவதைப் போலவே, நிரந்தரமான பாதுகாப்பில்லாத நாட்டிற்கு நிரந்தரமாக நாட்டின் எல்லா வளங்களையும் ஒன்று சேர்த்து ஆட்சி செலுத்தக் கூடிய ஒரு வலுவான அரசாங்கம் தேவைப்படுகிறது. சில சந்தர்ப்பங்கள் பொதுவாழ்க்கையின் ஒரு குறிப்பிட்ட துறையில் வலுவான அரசாங்கத்தைத் தோற்றுவிக்கலாம். மிக விரிவான பாசனத் திட்டங்களைச் சார்ந்து வாழும் நாடுகள், தனியாரின் மனப் போக்குப்படி இத் துறையை விட்டுவிடாது, நீர்ப்பாசன வசதிகளை மையமாக்குவது அவசியமாகிறது. தன்னுடைய எல்லா இயற்கை வசதிகளையும் மேம்பாடுறச் செய்ய முற்படும் எந்தப் புதிய நாடும் அதன் ஏற்றுமதி இறக்குமதிகளைத் திட்டமாக அடக்கியாள வேண்டியிருக்கிறது.

## நிலவுலக அரசியல் (Geopolitics)

நாம் இதுகாறும் கையாண்ட தலைப்புக்கள், ஜெர்மானியர்கள் 'நிலவுலக அரசியல்'[1] என்று அழைக்கும் ஒரு புதிய இயலின் பாடங்கள்தான். நிலத்தின் அரசியல் அல்லது இயற்கைப் புவியியலின் தன்மைகள் எவ்வாறு அரசியல் வாழ்க்கையைக் குறிப்பாக நாட்டுக்கு நாடுள்ள தொடர்புகளைப் பாதிக்கிறது என்பதைப்பற்றிச் சொல்கின்றது. ஒரு வகையாகப் பார்த்தால் அரசியலைப் போலவே இதுவும் பழங்காலத்திய இயல்தான். இதைப் பற்றி அரிஸ்டாடில் (Aristotle) சில விவேகமான விஷயங்களைக் கூறியிருகிறார். நவீன காலத்தில் மான்டெஸ்கியூ (Montesquieu) விஞ்ஞானச் சார்பான அடிப்படைகளை இதற்குக் கொடுத்திருக்கிறார். என்றாலும் இன்றைக்குள்ள நிலவுலக அரசியல், அதிகமான, பொறி இயல் அறிவும், பரந்த வரலாற்று அனுபவமும் உடையதாக இருக்கிறது. 'எல்லா அரசியல் வளர்ச்சிகளும் நிலத்தின் நிரந்தர

[1] இந்த இயலின் உண்மையான ஸ்தாபகர் ஆக்லேபோர்ட்டைச் சேர்ந்த பேராசிரியர் மாக்கின்டர் ஆவார். முதலாம் உலகப்போருக்கு முன் வெளியிடப்பட்ட (Professer Mackinder) இவரது Democrate Ideals and Reality என்ற நூல் இத் துறையின் பிற்கால வளர்ச்சியின் ஆதாரமாக இருக்கிறது. அவர் காலத்தில் அந் நூல் கவனிக்கப்படாமலிருந்து நாஜி புவியியல் வல்லுநர்களால் உயிர்கொடுக்கப்பட்டது.

உண்மைத் தன்மையைச் சார்ந்துதானிருக்கின்றன என்பதைக் காட்டுகிறது நிலவுலக அரசியல்' என்று அதன் தலைசிறந்த ஆசிரியரான ஹாஷாபெர் (Haushofer) கூறுகிறார். 'அரசியல் கூறுகளின் நிலத்தொடர்புக் கோட்பாடு' இது. 'பேரிடத்திற்கும், அரசியலுக்குமுள்ள தொடர்பைக்' குறிப்பது இது. ஒவ்வொரு நாட்டிற்கும் 'தேவையான இடத்தை'ப்பற்றியும் அதன் வாழுமிடத்தைப்பற்றியும் இது பேசுகிறது. இன்னொரு நிலவுலக அரசியல் அறிஞன் அழைத்துள்ளது போல், இது 'அரசின் புவியியல் சார்ந்த மனச்சாட்சி' ஆகும். நாஜிகளால் உபயோகப் படுத்தப்பட்டபடி, இது ஜெர்மானிய விஸ்தரிப்புக்குத் துணையான ஓர் உபகரணமாகவும், இதன் விருப்பங்களுக்கு விரோதமாக நடக்கக்கூடிய எதுவும் மற்ற மக்களுக்குரிமையில்லை என்று மறுப்பதற்கும் உபயோகப்பட்டது. ஆனால் சரியான முறை யில் உபயோகப்படுத்தப்பட்டால் இது மிகவும் பயனுள்ளதாக இருக்கும். சில காரணிகள் நம்முடைய விருப்பம்போல் மாற்றப்பட முடியாதவை. எனவே காலமுடிவு மட்டும் அவை அரசியலில் செல்வாக்குப் பெற்றிருக்கும் என்ற உண்மையை நமக்கு நினைவூட்டு வது அதன் முக்கிய பயனாகும். எல்லாக் காரியங்களிலும் எப்படித் தனி நபர்கள் சமத்துவம் பெற முடியாதோ, அப்படியே நாடுகளும் பூரண சமத்துவம் அடைய முடியாது. இயற்கை அவர்களுக்களித்த நிலத்தின் குறிப்பிட்ட தன்மைகளோடு அந் நாட்டின் தன்மை மிக நெருக்கமாகப் பிணைக்கப்பட்டிருக்கும்.

## மனிதனும், இயற்கையும்

ஓர் அரசின் வாழ்க்கையில் இந்தப் புவியியல் சலுகைகள் ஒரு முக்கியமான அம்சமாகக் கருதப்பட்டு இடமளிக்கப்பட்டிருந்தால், நிலவுலக அரசியல் பலனுள்ளதாகும். ஆனால், புவியியல் சலுகைகள் ஒரே காரணியாக இருக்க முடியாது என்பதோடு அவை மாறாதனவும் அல்ல. புதுப்படைப்புக்கள் புவியியல் சலுகைகளை மாற்றக்கூடும். இயற்கையாக எல்லைப்புறம் அளிக்கக்கூடிய பாதுகாப்பை, ஆகாய விமானம் இல்லாது செய்துவிடுகிறது. 50 ஆண்டுகளுக்கு முன்பு வரை உபயோகமற்றதும், கப்பல் போக்குவரத்துக்குப் பயன்படாதது மான விரைவான நதிகள், ஃபிரஞ்சுக்காரர்கள் 'வெள்ளை நிலக்கரி' என்று அழைக்கும் மின்சக்திக்காக இன்று மிக முக்கியத்துவம் பெற்று விட்டன. நிலக்கரியின் முக்கியத்தை எண்ணெய் முழுவதாகப் போக்கிவிடும் என்று முன்னர் எதிர்பார்த்த அளவிற்கு இல்லை யென்றாலும், அதன் சிறப்பைக் கணிசமாகக் குறைத்துவிட்டு அந்த உடைமையின் மதிப்பையும் குறைத்துவிட்டது. இயற்கையின் வேறுபாடுகளை மனிதன் எப்பொழுதும் சமன்செய்ய முயல

முடியும். மலைகளைக் குடைந்து சுரங்கப் பாதைகள் அமைக்கப் பட்டிருக்கின்றன ; நீர்ப்பாசனமும், செயற்கை எருக்களும் உழவுத் தொழிலைப் புரட்சிகரமாக மாற்றியிருக்கின்றன. செலாவணிமுறை, வாழ்க்கையின் அத்தியாவசியப் பொருள்களை அடையச்செய்யும் வழியைப் பொதுவாக்கிவிட்டது. இந்த நூற்றுண்டின் இறுதிக் குள்ளாகப் பொறிஇயலால் என்ன சாதிக்க முடியாது என்று சொல்வதற்கில்லை. கலாச்சாரத்தை ஒருவேளை அது அழித்து விட்டிருக்கலாம். ஆனுல் நம்மை இதுகாறும் அலைக்கழித்த எண்ணற்ற பிரச்சினைகளுக்குத் தீர்வு கண்டிருக்கும். புவியியல் நிர்ணயக் கோட்பாட்டுக் கொள்கைகளைமாத்திரம் நிச்சயம் மறுத்து விடவேண்டியது அவசியம். ஏனெனில் மனிதன்தான் முக்கியம். ஆகவே, இப்பொழுது மனிதக் கூறுகளைப் பற்றி ஆராய முற்படுவோம்.

## (v) மக்கள் தொகை: எண்ணிக்கைப் பிரச்சினை

நிலத்தைப்பற்றி நாம் படித்தபோது அதன் இரு அம்சங் களாகிய அளவையும், அதன் மதிப்பையும்பற்றி ஆராய்ந்தது போல மக்கள்தொகையிலும் அப்படியே செய்வோம். ஆட்சி நிலத்தின் அளவுக்கொப்பவும், அதுவேயாகவும் மக்கள்தொகை எவ்வளவு பெரிதாக இருக்கவேண்டும்? இரண்டாவதாக, அது எப்படிப்பட்டதாக இருக்கவேண்டும்? குறிப்பிட்ட அரசின் சிக்கல் களைச் சமாளிப்பதற்கு எவ்வளவு எண்ணிக்கை பொருத்தமுடையது? ஒவ்வோர் அரசின் இருவகைத் தேவைகளாகிய வெளிநாட்டுத் தேவை, உள்நாட்டுத் தேவை ஆகியவற்ருேடு, ஒவ்வொரு காரியத் திற்கும் மக்கள் தொகையின் எண்ணிக்கையையும், தன்மையையும் தொடர்புபடுத்திப் பார்க்கவேண்டும்.

### மக்கள்தொகையின் நெருக்கம்

ஆட்சிநிலத்திலுள்ளது போல, மக்கள்தொகையிலும் பெரிய அரசுகளும் சிறிய அரசுகளு முண்டு. இரண்டு வகையிலும் ருஷ்யாவும், அமெரிக்காவும் தலைமையாக இருக்கின்றன. ஆனுல் பல நாடுகளில் மக்கள்தொகை அளவிற்கும், ஆட்சிநில அளவிற்கும் பலத்த வேறுபாடு இருக்கின்றது. கனடாவிற்கு ஆட்சிநிலம் மிகப் பெரியது; ஆனுல் மக்கள்தொகை சிறியது. கிரேட்பிரிட்டனில் இதற்கு மாருக, அதைப்போல நான்கு மடங்கு மக்கள், நாற்பதில் ஒரு பங்கு நிலத்தில் வாழ்கிருர்கள்.

ஆட்சிநிலத்தின் அளவுக்கும், மக்கள்தொகையின் அளவுக்கும் உள்ள வீதாச்சாரத்தை அல்லது 'மக்கள்தொகை நெருக்கத்தை'

ஒரு சதுர மைல் பரப்பில் வசிக்கும் சராசரி மக்களின் எண்ணிக்கையில் கூறுகிறார்கள். அப்படி எண்களை உபயோகித்தால், கனடாவுக்குக் கிடைக்கும் நெருக்கம் மூன்று ஆகும்; பெரிய பரப்புள்ள, ஆனால் மக்கள்தொகை மிகக் குறைவான பிரேசிலுக்குப் பன்னிரண்டு; இந்த அளவைகளின் மறுபுறத்தில் 700 உள்ள பெல்ஜியம், 600 க்கு மேற்பட்ட நெதர்லாந்து, கிட்டத்தட்ட 500 உள்ள கிரேட் பிரிட்டன் வருகின்றன. கிட்டத்தட்ட 300 எண்ணிக்கையோடு கூடிய ஜப்பான், இத்தாலி, (யுத்தத்திற்கு முந்திய) ஜெர்மனி முதலிய நாடுகள் இடையே வருகின்றன. ஃபிரான்சும், நார்வேயும் 200 உடையன. 90 உள்ள ருஷ்யாவும், இந்தியாவும், 36 உள்ள அமெரிக்க ஐக்கிய நாடுகளும், குறைவான நெருக்கமுள்ள நாடுகளுக்கு நம்மைக் கொண்டுவருகின்றன. எனவே தன்னியல்பாகவும், தொடர்பு நிலையாகவும் அதிக வேறுபாடுகள் உள்ளன என்று அறிகிறோம்.

## ஜனநெருக்கப் பிரச்சினைகள்

மக்கள்தொகை எண்ணிக்கையைக் கிடைக்கக்கூடிய சரக்குகளின் அளவு, எதிர்பார்க்கும் வாழ்க்கைத் தரம், பாதுகாப்புத் தேவைகள் உற்பத்தி ஆகிய மூன்று காரணிகளோடு பொருத்திப் பார்க்க வேண்டும். சரக்குகளின் அளவு, பயிரிடும் நிலங்களின் விஸ்தீரணத்தையும், அல்லது மூலப்பொருள்கள் கிடைப்பதையும் பொறுத்திருக்கிறது. அது போக்குவரவுச் சாதனங்களையும் பொறுத்திருக்கிறது. சமீப காலத்திய நிகழ்ச்சிகள் சுட்டிக் காட்டுவதுபோல, போக்குவரவுச் சாதனங்களில் நெருக்கடி ஏற்படுமானால் உணவு உற்பத்தி செய்யாத பிரதேசங்களில் பஞ்சம் நிலவுவதற்குச் சமமான நிலை உண்டாகலாம். ஆலைக்கு மூலப்பொருள்கள் கொண்டுவரப் படாததாலும், அல்லது ஆலையிலிருந்து பொருள்கள் அங்காடிக்கு எடுத்துச் செல்லப்படாததாலும் தொழிற்சாலைகளின் உற்பத்தியும் குறையலாம். உணவு உற்பத்திசெய்யும் நாடுகளில் ஏற்படும் கிடைத்தற்கரிய தன்மையும், உலகப் போக்குவரத்துக்களில் நெருக்கடியும் ஏற்பட்டால், உணவு இறக்குமதி செய்யும் நாடுகளில் பெரும் பிரச்சினைகள் உண்டாகலாம். சாதாரண காலத்தில் அதிகமாகத் தெரியாத மக்கள்தொகை அசாதாரண காலங்களில் தங்களின் அடிப்படை வளங்களுக்கெல்லாம் அதிகமான தேவையை உண்டாக்கி விடலாம்.

எதிர்பார்க்கப்படும் வாழ்க்கைத்தரமும் முக்கியத்தில் குறைந்ததன்று. ஓர் அமெரிக்கத் தொழிலாளியின் தேவைகளுக்கும், இந்திய உழவனின் தேவைகளுக்குமிடையே பெரிய மலைக்கும் மடுவுக்கு

முள்ள வேறுபாடு இருக்கிறது. மேற்கு ஐரோப்பிய நாடுகளுக்குள்ளேயே இங்கிலாந்தின் தொழிலாளர் தேவைக்கும், இத்தாலிய ஆலைத் தொழிலாளியின் தேவைக்குமிடையே பெருத்த வேறுபாடு இருக்கிறது. வாழ்க்கைத்தரம் குறைவாயுள்ள மக்கள்தொகைக்குக் கொஞ்சம் இடமும் சிறிது சரக்குகளுமே தேவைப்படுகின்றன. தட்ப வெப்ப நிலையால் இந்த வாழ்க்கைத்தர வேறுபாடுகள் ஏற்படுகின்றனவெனினும், பாரம்பரியம், பழக்க வழக்கங்கள் ஆகியவை காரணமாகவும், வாழ்க்கையின் பல துறைகளில் வெவ்வேறு வகையாகவும் வேறுபாடுகள் தோன்றுகின்றன. ஃபிரஞ்சு பூர்ஷுவாக்கள் நடுத்தர வர்க்கத்தார் (Bourgeois) அதே வகுப்பைச் சேர்ந்த ஆங்கிலேயரைவிடத் தங்களுடைய உணவு விஷயத்தில் மிகவும் உன்னிப்பாகவும், லௌகீகச் சௌகரியங்களைப் பொறுத்தமட்டில் கவனக்குறைவாகவும் இருக்கிறார்கள்.

சமுதாயத்தின் தேவைகள் முடிவாக வருகின்றன. தாக்குதலுக்கு உள்ளாகக் கூடிய நாடு பாதுகாப்பிற்காகப் படைவீரரைப் பெற்றிருக்கவேண்டும். அதற்கு மாறாக, தாக்குதலிலிருந்து காப்பான நாடு பெரிய இராணுவம் வைத்திருக்க வேண்டிய அவசியத்தைத் தவிர்க்கலாம். பெருமளவிலான தொழில் உற்பத்திக்கு, ஏராளமான தொழிலாளர் இருந்தாகவேண்டியிருக்கிறது. பரப்பில் பெரிதான விவசாயப் பண்ணைகளைக் கொண்ட நாடுகளில் சிறு பண்ணைகள் கொண்ட நாட்டைக் காட்டிலும் நிலத்தில் பணிபுரிய மிகவும் சொற்பமான தொழிலாளர்களே தேவைப்படுவார்கள்.

## அமித மக்கள்தொகை (over-population)

'அமித மக்கள்தொகை'யைப் பற்றிப் பேசுவது சரிதானா என்ற கேள்வி எழுகிறது. தனித்தன்மையான அமித மக்கள்தொகை இருக்கமுடியாது என்பது வெளிப்படை. சில காரணிகளோடு பொருத்திப் பார்க்கும்போது தோன்றுகிற நிகழ்ச்சிதான் இது. சாதாரண மக்கள்தொகையை இவர்கள் சாதாரணமாக எதிர்பார்க்கும் வாழ்க்கைத்தரத்தில் வாழ வகைசெய்ய முடியாதபோது அதை அமித மக்கள்தொகை என்று கூறலாம்.

ஒரு நாட்டில் அமித மக்கள்தொகை இருப்பதாகக் கருதினால் அது பின்வரும் கொள்கைகளில் ஒன்றைப் பின்பற்றலாம்: ஒன்று, பட்டினி இருக்கும் அளவிற்கு, ஒரு கீழ்த்தரமான வாழ்க்கைத் தரத்தை வழக்கமாக்கிக் கொண்டு விடலாம் (உதாரணமாக, இந்தியா); அல்லது, தங்கள் நாட்டில் உற்பத்தியாகும் உணவுப் பொருள்களின் அளவை அதிகரிக்கலாம்; அல்லது வெளிநாடுகளில் விற்று

அதன்மூலம் அதிகமான உணவுப் பண்டங்களேயும், மற்ற தேவைகளேயும் அங்கிருந்து பெற்றுக் கொள்வதற்காக வேறு பண்டங்களின் உற்பத்தியை அதிகரிக்கலாம்; அல்லது முடிவாகப் பிறப்பைக் கட்டுப்படுத்துவதன் மூலமாகவோ அல்லது 'மிகையான' மக்களே வேறு நாடுகளுக்குக் குடிபெயரச் செய்வதனுலோ, தனது மக்கள்தொகையைக் குறைக்கலாம்.

சில அவசியமான காரணங்களால் முதலாவது சொல்லப்பட்ட வழியைப் பின்பற்றும் நாடுகள் மிகவும் அனுதாபத்திற்குரியன. அந் நாடுகளின் பிழைப்பூழியமட்டம் குறைவாக இருப்பதன் காரணம், மிக நெருக்கமான மக்கள்தொகையானது,[1] நன்ருகப் பயிரிடப்படாத நிலங்களேச் சார்ந்திருந்தும், மோசமான உடல் நலமும், வலிவும் பெற்றிருப்பதாலும், தொழிலுற்பத்தியும் போதுமானதாக இல்லாமலிருப்பதனுலுந்தான். மூன்ருவது வழியைப் பின்பற்றும் நாடுகளில் பெல்ஜியமும், பிரிட்டனும் இன்னும் சிறிது குறைந்த அளவில் சுவிட்சர்லாந்தும் உள்ளன. அமோகமான ஏற்றுமதி வியாபாரம் அந் நாட்டு மக்களே மிக உயர்தர வாழ்க்கைத் தரம் பெற்றதாகச்செய்கின்றது. அவர்களது பண்டங்களுக்குத் தேவை போதுமானதாக இருக்கும்வரை எல்லாம் நன்ருக நடக்கின்றன. ஆனல் மிகப்பரந்த அளவில் பொருளாதார மந்தம் ஏதாவது ஏற்படுமானல் வேலேயில்லாத் திண்டாட்டத்தையும், இன்னலேயும் அது உண்டாக்கக் கூடும். இந்த நாடுகள் தங்களின் உணவு உற்பத்தியைப் பெருக்க முயற்சிசெய்யலாம். ஆனல் இது அவர்களுக்கிருக்கும் நிலத்தின் அளவையும், மண்ணின் வளத்தையும் பொறுத்தது. ஆகவே அந்த இரண்டு நாடுகளும் தங்களது இன்றைய மக்கள்தொகை முழுமைக்கும் சோறிட முடியாது என்பது நிச்சயம். அவர்களது பண்டங்களின் கிராக்கியில் ஏதாவது நிரந்தரமாகக் குறைவு ஏற்படுமானல், அவர்கள் ஒன்று, தங்கள் வாழ்க்கைத் தரத்தைக் குறைத்துக்கொள்ள வேண்டும்; அல்லது பிறப்பு-விகிதத்தைக் குறைப்பதன் மூலமோ அல்லது குடிப்பெயர்ச்சியின் மூலமாகவோ வேண்டுமென்றே தங்கள் மக்கள்தொகையைக் குறைத்துக்கொள்ளவேண்டும்.

## குடி வெளியேற்றம் (emigration)

குடிவெளியேற்றம் இரு வகைப்படும். வெளிநாடுகளுக்குக் குடிவெளியேற்றம் நேரலாம். அப்படியானல் பொருளாதாரச் சிக்கல்

[1] இந்தியாவின் சராசரி மக்கள்தொகை நெருக்கம் அதிகமில்லே. மக்கள் தொகை சமவெளிப் பிரதேசங்களில் அதிகமாகவும், வளமற்ற பிரதேசங்களால் ஆன ஆயிரக்கணக்கான மைல் பரப்பில் மிகக் குறைந்த அளவும் உள்ளன.

தீர்க்கப்படலாம். ஆனால் குடிவெளியேற்ற நாடு குடிமக்கள் பலரை நிரந்தரமாக இழக்க நேரிடுகிறது. அல்லது அந்த நாட்டின் குடைக் கீழுள்ள நாடுகளுக்கோ, குடியேற்ற நாடுகளுக்கோ அல்லது இதர சார்பு நாடுகளுக்கோ குடிவெளியேற்றம் ஏற்பட்டால் நேரடியான பொருளாதார நன்மை ஏற்படுவதோடு, அரசியல் இழப்பும் மிகக் குறைவாக இருக்கும். ஆனால் உண்மையில் காலனிகள் குடியேறுபவர்களை அதிகமான எண்ணிக்கையில் ஏற்றுக்கொண்டதில்லை. காலனி நாடுகளில் சுதேசியல்லாமல் குடியேறியவர்களின் எண்ணிக்கையை மாத்திரம் எடுத்துப்பார்த்தால் அது மிகக் குறைவே. தாய் நாட்டிலிருந்து இவர்களை வெளியேற்றிக் காலனியில் குடியேறச் செய்வது அமித மக்கள்தொகைப் பிரச்சினையை எந்த வழியிலும் தீர்க்காது. தலைநகரங்களில் ஆண்டுதோறும் நேரும் சாதாரண உயர்வுக்கும் குறைவான பங்கே, ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான் முதலிய நாடுகளின் காலனிகளில் ஏற்பட்ட குடியேற்றம் ஆகும். எல்லா நாடுகளின் சார்பு நாடுகளுக்கும் இது பொருந்தும்.

நாம் ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான் ஆகிய நாடுகளைத் தனியாக எடுத்துக்கொண்டதற்குக் காரணம், அவர்கள் அமித மக்கள் தொகைப் பிரச்சினையால் அவதிப்படுவதாகக் கூச்சலிட்டவர்கள். அதோடு அவர்கள் அதிக 'வாழும் இடம்' தேவை என்று கேட்டவர்களுங்கூட. ஆனால் இவையெல்லாவற்றோடும், தங்களின் மக்களுக்குக் குடிவெளியேற்ற வசதி தேடுகின்ற சாக்கில் தங்களது ஆட்சிநிலத்தை விஸ்தரிக்கும் கொள்கைகளையுமுடையவர்கள் அவர்கள். அவர்கள் காட்டிய காரணம் எவ்வளவு பொருத்தமற்றது என்பது அவர்கள் வசமிருந்த சார்பு நாடுகளை அவர்கள் சரியானபடி பயன்படுத்திக் கொள்ளாததிலிருந்து தெரிகிறது. மேலும் அவர்கள் விஸ்தரிப்பின் பிற்பகுதி, ஏற்கெனவே மக்கள் நிறைந்திருந்த பகுதிகளை நோக்கித்தான் இருந்தது. 'வாழும் இடம்' (Lebensraum) வேண்டும் என்ற கூப்பாடு வெறும் அரசியல் ஆக்கிரமிப்புக்காகத் தானேயொழிய, உண்மையான பொருளாதார இடரினால் ஏற்பட்டதன்று. வெறும் ஜனநெருக்கத்தின் அடிப்படையில் பெல்ஜியம், நெதர்லாந்து, பிரிட்டன் ஆகிய நாடுகளுக்குச் சிறப்பான காரணம் இருந்தது. பிரிட்டனுக்கு அவ்வளவு பெரிய பேரரசு இருந்தும், ஜனநெருக்கத்தை அப்படியே விட்டுவைத்திருப்பது, ஆட்சிநில விஸ்தரிப்பு, அந்தக் குறிப்பிட்ட பிரச்சினைக்குரிய தீர்வு ஆகாது என்பதை எடுத்துக்காட்டுகிறது. நோக்கம் எதுவாயினும் நேரடியான ஆட்சிநில விஸ்தரிப்பை இன்றைய உலகம் விரும்பவில்லை என்பதோடு, அமித மக்கள்தொகை என்று சொல்லப்படுகின்ற பிரச்சினைக்கு இந்த வகையான தீர்வு நிச்சயமாக ஏற்றதன்று என்று நீக்கப்பட்டுவிட்டது. எண்ணிக்கைக் குறைப்பு, தொழில்மய

மாக்குதல், உணவுப்பண்டங்களின் அளிப்பை அதிகரித்தல் ஆகிய மூன்று தீர்வுகள் தான் எஞ்சியிருக்கின்றன.

## உணவுப்பண்டங்களின் அளிப்பை அதிகரித்தல்

இந்த மூன்றில் கடைசியில் சொல்லப்பட்டதை முதலில் எடுத்துக்கொள்வோம். உலகத்தின் உணவு உற்பத்திச் சக்தி நடைமுறையில் வரையறையற்றது. அமெரிக்க ஐக்கிய நாடுகளில் உற்பத்தி செய்யப்பட்ட உணவுப் பண்டங்களில் பாதிகூட உண்போருக்குப் போய்ச் சேருவதில்லை என்று சொல்லப்படுகிறது. அப்படி இருந்தும் அங்கு அதிகமாக விரயமாகிறது. விரிவான முறைகளால் எல்லா நிலங்களும் முழுவதாகப் பயன்படுத்தப் பட்டால், உலகத்தில் இன்றுள்ள மக்கள்தொகைக்கு மாத்திரமல்லாமல் இன்னும் பல மடங்குபேருக்கும் உணவளிக்க முடியும்.

ஆனால்...பல ‘ஆனால்கள்’ இங்கே இருக்கின்றன. உற்பத்தியை ஒழுங்குபடுத்திக் கட்டுப்பாடு செய்யவும், எல்லா நிலங்களையும் அதிகமான பயன்தரும் வழிகளில் பயன்படுத்தவும், வீணாவதைத் தடுக்கவும், தேவையான தொழிலாளர்களைப் பெறவும், தேவையான போக்குவரத்தை மேற்கொள்ளவும் உலக அரசாங்கம் ஒன்று தேவைப் படும். மேலும், உணவு வேண்டும் ஒவ்வொருவரும் அதை வாங்கிக் கொள்ளவும், அதை வாங்கும் சக்தி பெற்றிருக்கவும் செய்யவேண்டும். போதுமான வேலைநிலையும், ஊதியமும், உலக அரசாங்கத்தால் உறுதிப்பாடு செய்யப்படவேண்டும். இதை வேறுசொற்களில் சொல்லப்போனால், உலகப் பொருளாதார அரசாங்கம் அமைக்கப்பட வேண்டும் என்றாகிறது. புதிய உலக உணவு ஸ்தாபனம் அதன் கருவாக இருக்கக்கூடும். ஆனால் அது ஆலோசனை கூறக்கூடியது தானேயொழிய, நிர்வகிக்கக்கூடியதாகவோ அல்லது கட்டாயப் படுத்தக்கூடியதாகவோ இல்லை. ‘மிகை’யான உணவுப் பண்டங்கள் வேண்டுமென்றே இனிமேல் எப்பொழுதும் அழிக்கப்படமாட்டாது என்று ஒருவர் நம்பக்கூடும். அமெரிக்காவின் பெரிய மந்த காலத்தில் ஏற்பட்டதுபோல உணவு உற்பத்தி அதிகாரபூர்வமாகத் தடை செய்யப்படாது என்றும் நம்பக்கூடும். உண்மையில் நாடுகள் தங்களது உணவுப்பொருள் அளிப்பை ஒருமுக முனைப்பான விவசாயத்தின் மூலம் அதிகரித்துக்கொள்ளலாம். இதற்கு மேல் வரம்பு ஒன்றுண்டு. இந்த வரம்பை அவர்கள் தொடும்போது, வெளி நாட்டிலிருந்து இப் பண்டங்களை வாங்கித் தங்களது தொழிலுற்பத்தி மூலமாக அவற்றிற்குப் பணம் செலுத்தவேண்டியிருக்கும்.

## வெளிநாட்டில் வாங்கப்பட்ட உணவிற்காக ஏற்றுமதி

மக்கள்தொகைச் சிக்கல்களைச் சமாளிக்கும் இந்த இரண்டாவது வழியிலும் சில குறைகளுள்ளன என்பது தெரிகிறது. உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள் விற்கப்படவேண்டும். அவர்களின் உற்பத்திச் செலவு மற்ற நாட்டில் சரக்குக் கட்டணம், போக்குவரத்து வசதி முதலியவைகளுட்பட ஏற்படும் செலவைவிடக் குறைவாக இருக்கவேண்டும். சில நாடுகளுக்கு உலகச் சந்தையில் போட்டி யிடுவது நடைமுறையில் சாத்தியமேயில்லை. ஏனெனில் முக்கிய மூலப்பொருள்கள் அங்கில்லை. அவைகளை அதிகச் செலவில் இறக்குமதி செய்தால் அவைகளின் விலைகளும் அதிகமாக இருக்கும். நல்ல பொறியியல் திறன், விற்பனை அமைப்பு முதலியவை இந்த வகைச் சாதகமின்மைகளை ஈடுசெய்ய முடியும். என்றாலும் இது சாதாரணமாக நடக்கக் கூடியதன்று. பெல்ஜியத்திற்கு எதிராகத் தொழிலுற்பத்தியில் இராக்கையோ (Iraq), மத்திய ஆப்பிரிக் காவையோ போட்டியாளர்களாக ஆக்கமுடியாது. பல நாடுகளில் தொழில்மயமாக்குதல் சாத்தியமேயில்லை. அதிக விலைகளில் தங்களது உள்நாட்டுத் தேவைகளைத் திருப்தி செய்துகொண்டு, கண்டிப்பாகத் தேவையான இன்றியமையாத பொருள்களை மாத்திரமே இறக்குமதி செய்துகொள்வதுந்தான் இவர்கள் இறுதியாகச் செய்யக்கூடிய ஒன்றாகும். மிக நுண்ணிய பொறியாகிய உலக செலாவணி முறையில் ஏதாவது சிறு தவறு நேருமாயின் பொருளாதார மந்தம், வேலையில்லாத் திண்டாட்டம் ஆகியவை தொழில்மயமாக்கப்பட்ட நாடுகளில் தோன்றி அவர்கள் நிலையை அவலமாக்குகின்றன. உலகத்தின் தொழிலையெல்லாம் இயங்கச் செய்ய ஏராளமான தேவை உலகத்தில் இல்லை என்று சொல்வதற் கில்லை. இதுவரை திருப்தியுறாத அத்தியாவசியத் தேவைகளைத் திருப்தி செய்தாலே (மனச் சாட்சிப்படி இது மிகவும் கேந்திரமானது) தேவை நிலையை நிலைநிறுத்தும். இதற்குப் பிறகுங்கூட உயர்ந்து கொண்டேவரும் வாழ்க்கைத் தரம் புதுத் தேவைகளை உண்டு பண்ணும். ஆனால் உணவுப் பொருள்களைப்போலவே தொழி லுற்பத்தியையும், பகிர்வையும் கட்டுப்பாடு செய்யும் உலக அரசாங்கம் இல்லாவிட்டால் இது நடக்காது. நமக்கு எட்டாத தூரத்தில் இது இருப்பதாக இன்னும் தோன்றுகிறது.

## மக்கள்தொகைக் குறைப்பு

எனவே, மக்கள்தொகைப் பிரச்சினைக்குத் தொழில்மயமாக்குதல் தவறற்றதும், நிச்சயமானதுமான ஒரு தீர்வு அன்று என்று ஆகிறது. ஆகவே நாம் கடைசியாகச் சொல்லிய, மக்கள்தொகைக் குறைப்புக்கு

வருவோம். இது ஏற்கெனவே நடந்துவருகிறது. பிறப்பு விகிதம் மிகவும் குறைந்துவிட்டது பொது விவாதப் பொருளாகிவிட்டது. மரண விகிதத்தின் குறைவு, முன்னதைப் போதுமான அளவுக்கு ஈடுசெய்வதாக இன்னும் ஏற்படவில்லை. ஒவ்வொரு திருமணமான தம்பதிகளுக்குப் பிறக்கும் குழந்தைகளைக் கொண்டுதான் ஒரு நாட்டின் மக்கள்தொகை முடிவில் நிர்ணயிக்கப்படுகிறது என்பது வெளிப்படை. எல்லோரும் திருமணம் புரிகிறார்கள் என்று வைத்துக் கொண்டால், ஒவ்வொரு குடும்பத்துக்கும் இரண்டு குழந்தைகள் இருக்கவேண்டும். அவர்களுக்கும் திருமணமாகி, இரண்டு குழந்தைகள் இருக்கவேண்டும். இது இவ்வாறு நேர்ந்தால்தான் இற்றைக்குள்ள மக்கள்தொகை நிலைநிறுத்தப்பெறும். சிலர் திருமணம் புரிந்துகொள்வதில்லை; சில தம்பதிகளுக்குக் குழந்தைக ளிருப்பதில்லை. ஆகவே குறைந்தபட்சம் ஒரு குடும்பத்திற்கு மூன்று குழந்தைகளாவது இருக்கவேண்டும். இந்த இனப் பெருக்க விகிதத் (reproduction rate) திற்கும் குறைவாக மக்கள்தொகை வீழ்ச்சி யுற்று, இறுதியில் இந்த வழியாகத் தங்கள் மக்கள்தொகைப் பிரச்சினையை நாடுகள் தீர்த்துக்கொள்கின்றன.

நாம் மேற்போக்காக விட்டுவிடக் கூடாதபடி இந்த நிலையினால் சில விளைவுகள் நேருகின்றன. முதலாவது, செல்வம் மிக்க ஐரோப்பிய, அமெரிக்கச் சமுதாயங்களை மாத்திரமே இது பாதிக்கிறது. இந்தியா, சீனா போன்ற அமித மக்கள்தொகைப் பிரச்சினையால் அவதியுறும் நாடுகளில் மிகையான குழந்தை இறப்பு விகிதம் இருந்த போதிலும் அதிக மக்கள்தொகை, பிறப்பு விகிதத்தால் அதிகரித்துக் கொண்டே போகிறது. இது ஒரு நிவாரணம். ஆனால், இந்த நிவாரணம் தவறான இடத்தில் பிரயோகிக்கப்பட்டு வருகிறது. அடுத்தாற்போல் பிறப்பு, இறப்பு விகிதங்கள் குறைவதானது மக்களின் சராசரி வயதை அதிகப்படுத்துவதால், பெரும் பான்மையான மக்கள் நாற்பதைத் தாண்டியவர்களேயொழிய அதற்குக் குறைந்தவர்கள் அல்லர். இதற்குப் பொருள் இவர்களில் பலர் நன்றாக வேலை செய்யும் காலத்தைத் தாண்டிவிட்டார்கள் எனினும் அவர்களுக்கும் உணவிட வேண்டும். சுகாதாரம், நல்ல உணவு, வைத்திய இயல் ஆகியவை மனிதனின் வேலை செய்யும் நாட்களை நீடிக்கக் கூடுமெனினும் அதற்கும் ஒரு வரையறையுண்டு. ஒரு நாட்டில் ஏராளமான, வலுவான இளைஞர்கள் இருக்கவேண்டும். குறைவான பிறப்பு விகிதமும், அதோடு ஒட்டிய குறைந்த இறப்பு விகிதமும் நாட்டின் உற்பத்திச் சக்திக்கு அவசியமானவைகளை நீக்கி விடுகின்றன.

மக்கள்தொகைக் குறைப்பு அளவுக்கு மீறிப்போய் விடக்கூடும சாத்தியமு மிருக்கிறது. அல்லது தவறான ஒரு திசையில் இது

நேரவும்கூடும். ஃபிரான்சில் நடப்பதைப்போல, கிராம மக்கள் தொகை குறைவுற்றும், நகர மக்கள்தொகை அமிதமாகவும் இருக்கும் நிலை மிகவும் வேதனைக்குரியது. மிக உயர்ந்த ஆரோக்கியமும், கல்வி நிலையும் நிலைபெறச்செய்யும் மக்கள்தொகையின் பிரிவிலே இவ்வாறு பிறப்பு விகிதம் குறைகிறதே என்று வருந்துவது வெளித் தோற்றத்தை மதிக்கும் ஒரு காரியமன்று. சுகாதார நிலையும் கலாச்சார நிலையும் உயர்த்தப்படும்வரையில் கீழான தரங்களின் பெரும்பான்மையைக் குறைசொல்லித்தான் ஆகவேண்டும். முடிவாக மக்கள்தொகைக் குறைப்பு அளவுக்கு மீறிப்போய், நாட்டின் பாது காப்புக்கும், தொழிலுக்கும் தேவையான மக்கள் எண்ணிக்கைக்கும் கீழே போய்விடலாம். 'காலித் தொட்டில்கள்' (Empty Cradles) 1940-ல் ஃபிரான்சின் தோல்விக்கு முக்கிய காரணமாக இருந்தன.

'திட்டமிடப்படாத' என்று அழைக்கக்கூடிய மக்கள்தொகைக் குறைப்பு மிகவும் அபாயங்கள் நிறைந்தது. எனினும் 'திட்டமிட்ட' மக்கள்தொகையைப்பற்றிப் பேசுவதும் கடினம். பெரிய குடும்பங் களுக்கு வாழ்க்கைக்கு உதவும் சாதனங்களைக் கொடுப்பதன் மூலம் அரசாங்கங்கள் பிறப்பு விகிதத்தை அதிகரிக்க ஊக்கமளிக்கலாம். முக்கியமான விஷயம் வீட்டுவசதியே. இது தனியார் துறையைச் சேர்ந்ததாகையால் இலாபம் கருதிச் செய்யப்படுகிறதேயொழியத் தேவையை ஒட்டி அன்று. கல்வி வசதிகளோ, வரிச்சலுகைகளோ பிரதான தேவையாகிய குடியிருப்புக்குமுன் ஒரு பயனுமற்றதாகத் தோன்றும். அதிகக் குழந்தைகள் வேண்டும் என்ற இயக்கமானது, வீட்டுவசதிகளைத் தேசியக் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவருவதுடன் சேர்ந்து இயங்கவேண்டும். வீடு கட்டுவதை மாத்திரமல்லாமல் வீடுகளைப் பகிர்வதும் தேசியக் கட்டுப்பாட்டிற்குள்ளாகக் கொண்டு வரப்பட வேண்டும்.

## (vi) மக்கள்தொகை : பண்புப் பிரச்சினை

இவ்வகை மக்கள்தொகை எண்ணிக்கைகளின் புறத்தே நாம் முன்னரே குறிப்பிட்ட பண்புக் கூறுகள் மறைவாக இருக்கின்றன. மக்கள்தொகைகளைக் கணக்கியலின் சொற்களின்படி முழுவதாகக் கணித்துவிட முடியாது. மக்கள் எப்படிப்பட்டவர்கள் என்பது அவர்களது எண்ணிக்கைக்கு முக்கியத்தில் குறைந்ததன்று.

மக்கள்தொகையின் பண்பு நான்கு முக்கிய காரணிகளைச் சார்ந்திருக்கும். அவையாவன : அதன் கலாச்சார நிலை, அதன் உடல் ஆரோக்கிய நிலை, அதன் ஒருமைப்பாடு, அதன் உறுதித் தன்மை ஆகியவை ஆகும்.

## கலாச்சார நிலை

கலாச்சார நிலைக்குள், நாட்டு மக்களின் இயற்கையான விவேகம், கல்வி, ஒழுங்கமைப்புத் திறன், பணிபுரியும் ஆர்வம் ஆகியவற்றையும் சேர்த்துக்கொள்ளலாம். கூட்டுமக்களின் சராசரி விவேகம் தனி மனிதர்களின் விவேகத்தைப்போலவே வேறுபாடுடையது என்பது நிச்சயம். இது கல்வியிலிருந்து வேறுபட்டது என்பதும் நிச்சயம். எழுத்தறியாமை அவசியமாக முட்டாள்தனம் என்று ஆகாது. அதற்கு மாருக, நல்ல நினைவுச் சக்தியையும், காட்சியறிவையும் வளர்ச்சியுறச் செய்கிறது. எப்படி இருப்பினும் அதே விவேக நிலையிலுள்ளபோது கல்வியறிவு பெற்றவன் எழுத்தறிவில்லாதவனைக் காட்டிலும் சிறந்தவனாகிருன். எனவே, இயற்கையான விவேகமும், பொறியியற் பயிற்சியும் பெற்றுச் சுதந்தரமாகச் சிந்திக்கவும் கூடிய மக்கள், இவையெல்லாம் இல்லாத மக்களைக்காட்டிலும் பயனுள்ளவர்கள் ஆவார்கள். இயற்கை வளங்களை வளர்ச்சியுறச் செய்வதிலும், இடையூறுகளைத் தாண்டிச் செல்வதிலும், தருணங்களைப் பயன்படுத்திக்கொள்வதிலும் மக்களுக்குரிய இந்த வகை அறிவுச் சிறப்பு பயன்படும். இயற்கையாகவே முட்டாள்தனமான 'கடற்பயணம் செய்யும் மக்களை'ப்பற்றி வரலாறு அறியாது.

பணிபுரியும் திறமையும், ஒழுங்குற அமைக்கும் திறனும் மற்றவைகளோடு தொடர்புடையவாகவும், ஒன்றுக்கொன்று தொடர்புடையவாகவுமிருக்கின்றன. சோம்பேறிக் கூட்டமான மக்கள் என்றைக்கும் வெற்றிபெறமுடியாது. திட்டமிடவும், முயற்சி செய்யவும் முடியாதவர்களும் வெற்றிபெற இயலாது. வெற்றிகரமான மக்கள் சுய ஆர்வத்தோடு, ஒழுங்கையும், சட்டத்திற்குப் பணிதலையும், திட்டமிடுதலையும் உடையவர்களாக இருப்பார்கள். அவர்கள் கல்வியிலும் எல்லாவிதக் கலாச்சார வளர்ச்சிகளிலும் நம்பிக்கை கொண்டவர்களாக இருப்பார்கள்.

## உடல் ஆரோக்கியநிலை

இரண்டாவதாக, நல்ல மக்கள் தொகையானது ஆரோக்கியமுள்ளதாக இருக்கும். வியாதி அறிவைக் குறைக்கிறது. அது வேலைசெய்யும் திறனையும், சக்தியையும், ஊக்கத்தையும் குறைக்கிறது. குறைந்த உற்பத்தி, சோம்பேறித்தனம், ஆர்வமின்மை ஆகியவற்றை உண்டுபண்ணுகிறது. மக்களின் உடல் நலத்தைப் பேணுது எந்த நாடும் இருக்கமுடியாது.

## ஒற்றுமையும் பாதுகாப்பும்

மூன்ருவதாக, ஒருமைப்பாடு வருகிறது. ஒற்றுமையையும், ஒருமைத் தன்மையையும் இதன் மூலம் குறிப்பிடுகிருேம். அப்படிப் பட்ட மக்கள்தொகை, சமய அல்லது அரசியல் வேறுபாடுகள் தங்களது கூட்டான நடவடிக்கைத் திறனைப் பாதிக்க அனுமதிக்கமாட்டார்கள். ஒவ்வொருவரின் உரிமையையும், நம்பிக்கைகளையும் மதிப்பதன்மூலம் பொதுவான விசுவாசத்தை ஏற்படுத்தும் சமயச்சார்புள்ள அல்லது ஒன்றுபடுத்தமுடியாத தேசியச் சிறுபான்மையர்களைப்போல மக்களைப் பலவீனப்படுத்தக் கூடியது வேறெதுவுமில்லை. சமுதாயத் துக்குள் புதிய கூறுகள் ஒருசேர இணைவது வரவேற்கத்தக்கதே யெனினும், செரிமானத்தை நிராகரித்துத் தனித்தியங்குவதைப் பெரிதும் விரும்புகிறவர்களை அதிக எண்ணிக்கையில் சமுதாயத் திற்குள் எடுத்துக்கொள்ளமுடியாது.

முடிவாக, 'நல்ல' மக்கள்தொகையாயிருக்குமாயின் திருப்தியை வளர்க்கக்கூடிய நல்ல நிறுவனங்கள் இருக்கும். உதாரணமாக, சொத்துடைமைகளில் அதிகமான வேறுபாடுகள் இல்லாமலும், கல்வி, சமுதாய அந்தஸ்து, கிராமீயத் தொழிலாளர்களுக்குப் பதிலாக நிலக்கிழார்கள் அதிகமாக இருந்து நிலையான தன்மையை உண்டு பண்ணும் சமுதாயப் பொருளாதார வகைகளுக்கு ஊக்கம் அளிப்பது, நல்ல மக்கள்தொகை ஆகியவை இருக்கும். பாதுகாப்பின்மையும் கீழ்த்தரமான மனப்பான்மையும் போல அமைதியற்ற நிலையையும், அதிருப்தியையும் தோற்றுவிக்கக் கூடியது வேறு எதுவுமில்லை என்பது உண்மையாளுல் விவேகமான அரசு இப்படிப்பட்டவைகளை உண்டாக்கும் சக்தியை அழித்து அதற்கு மாருனவைகளுக்கு ஊக்க மளிக்கும் அல்லவா ?

## 'இட்லசிய' மக்கள்தொகை இருக்கிறதா?

எண்ணிக்கை, பண்பு ஆகிய இருவகைகளையும் ஒன்ருக ஆராயும் போதுதான் இந்தக் கடைசி விஞவாகிய, ஒரு குறிப்பிட்ட அரசிற்கு, ஒரு குறிப்பிட்ட காலத்தில் தனிச்சிறப்பு வாய்ந்த அல்லது கருத்தியலான அல்லது பொருளாதார நிபுணர்கள் அழைப்பதுபோல 'உச்சநிலை' (optimum) மக்கள்தொகை இருக்கமுடியுமா? ஒருவேளை இந்த விஞவிற்கு விடை 'முடியும்' என்று சொன்ஞலும், சரியான எண்ணிக்கையைக் கண்டுபிடிப்பது கடினமான பிரச்சினை ஆகும். பண்பு, எண்ணிக்கைக் கூறுகள் ஆகிய அனைத்தையும் உள்ளடக்கி, நாட்டின் தேவைகளுக்கும், நாடு விரும்பும் வாழ்க்கைத் தரத்திற்கும் ஒப்ப ஒரு விரிவான அடிப்படையில் எழுப்பப்பெற்ற ஒரு சூத்திரமாக

அது இருக்கும். ஒருவேளை மற்றவை ஒவ்வொன்றையும் பாதிக்கக் கூடிய பொதுவான உலக நிலையையும் அதோடு சேர்க்கவேண்டி யிருக்கலாம். இவைகள் எல்லாம் நமக்குத் தெரிந்திருக்குமானால், நாம் நம்முடைய ஊகத்தைச் சொல்லமுடியும். ஆனால் அதுவும் ஓர் ஊகந்தான்.

இப்படிப்பட்ட உச்சநிலை வரம்பு நிர்ணயிப்பதிலுள்ள கஷ்ட மானது, ஒரு நாடு 'மக்கள்தொகைக் கொள்கை' என்று அழைக்கப் படும் கொள்கை அமைப்பது எவ்வளவு கடினம் என்பதை எடுத்துக் காட்டுகிறது. தனியாக ஒரு நாடு எதை விரும்புகிறது? என்று அறிவது மிகவும் சங்கடமான ஒரு காரியம் என்பதோடு, ஒரு நாடு தனக்கு என்ன தேவை என்று அறிந்திருப்பதும் அபூர்வமே. அப்படியே தெரிந்திருந்தாலும் கொள்கைகள் பயன் தருவதற்குப் பல ஆண்டு களாகின்றன. மேலும் மக்கள்தொகையின் அதிகரிப்பு அல்லது குறைப்பு ஆகியவைகளின் விளைவுகளைக் கணக்கிடுவது மிகவும் கடினம். பெல்ஜியத்தையும், பிரிட்டிஷ் தீவுகளையும் அமித மக்கள் தொகையுள்ள நாடுகள் என்று சொல்லிவிட ஆசைதான். ஆனால் உற்பத்தியைப் பொறுத்தமட்டில் முக்கியமற்ற கூறுகளை மக்கட் தொகைக்குறைப்பு பாதித்தாலொழிய, மக்கள்தொகை மாற்றம் இலகுவில் கெடுதலை உண்டாக்கக்கூடும். உற்பத்தியாளர் எண்ணிக் கையில் ஒன்று குறைந்து, சோம்பேறியாக இருப்பவர்களின் எண்ணிக்கையில் ஒன்று குறையாதிருக்குமானால் விசேடமான முன்னேற்றம் ஒன்றுமில்லை.

வளர்ச்சி தேவைப்படும் பல பெரிய பகுதிகள் உலகத்திலுள்ளன. மக்களின் சுதந்தரமான போக்குவரவை ஊக்குவிப்பதன் மூலம் உலக சுபிட்சமும் மனமகிழ்ச்சியும் பெறமுடியும் என்பது நிச்சயமான உண்மை. அரசுகளுக்கிடையில் இது கூட்டுறவை எதிர் பார்க்கிறது; அல்லது நுழைவுச் சீட்டுக்களையும், மற்ற தடை களையும் கொண்டு வாழ்ந்த மக்களுக்கு வெறும் கனவைப்போலத் தோன்றும் பரந்த ஒரே உலகக் கட்டுப்பாடு தேவைப்படுகிறது. குறைவுள்ளதாக இருந்தாலும், 19 ஆம் நூற்றாண்டு மறைந்த ஒரு பொற்காலத்தை நினைவூட்டுகிறது.

# 3. சமுதாயமும் அரசும்

## (i) சமுதாய வாழ்க்கையின் மூன்று ஆதாரங்கள்

சமுதாயங்களில், மனிதனது வாழ்க்கையானது, மனிதப்பண்பின் மூன்று சிறப்பான குணங்களில் வேரூன்றி இருக்கிறது. முதலாவது மனிதன் தனித்து வாழமுடியாது. இரண்டாவதாக, ஒவ்வொரு மனிதனும் மற்ற ஒவ்வொருவனையும் விட வேறுபட்டவன் என்பது. மூன்றாவது, ஒவ்வொருவனும் தன் சொந்த வழியையே பின்பற்ற விரும்புவதோடு, தன்னோடு வாழும் மனிதர்கள்மீதும் தனது விருப்பைச் சுமத்தவும் விரும்புகிறான். மனிதனது துணை நாடும் இயல்பைச் சமுதாயம் பூர்த்தி செய்கிறது. மனிதனுக்கு மனிதன் முரண்பட்டுக் கொள்வதால் ஏற்படும் சிக்கல்களை அரசு தீர்த்துவைக்கிறது.

### மனிதன் ஒரு சமூகப்பிராணி

கூடி வாழாத வாழ்க்கை, வாழும் தன்மையற்றது. எல்லாச் 'சமூக' நூல்களின் இந்தத் துவக்கந்தான், அரிஸ்டாடிலின் (Aristotle) புகழ்பெற்ற சொற்றொடராகிய 'மனிதன் ஓர் அரசியற் பிராணி' என்பதன் பொருள் ஆகும். ஒழுங்குறுத்தப்பெற்ற அரசியல் கூட்டு வாழ்க்கையிலன்றி, மனிதன் தனித்து வாழ்வதற்குத் தகுதியற்றவன் என்பதையே, அதிகம் கருதி இவ்வாறு சொல்லியிருக்கிறார். ஒருவனும் தானாகவே நீண்டகாலம், வாழ்க்கை நடத்த முடியாது. 2,000 ஆண்டுகளுக்குப் பிறகு வாழ்ந்த தத்துவ ஞானியாகிய ஹாப்ஸ் (Hobbes) கூறியது போன்று தனியான வாழ்க்கை 'ஊழலானது; மிருகத்தன்மை வாய்ந்தது; குறுகியது.' மனித வரலாற்றுச் சுவடிகளின் ஆதிகாலமட்டும் பார்க்கும்போது பொது வாழ்க்கை ஏதாவதொரு வழியில் தோன்றியிருந்ததைக் காண்கிறோம். பேராசிரியர் ஹாக்கிங்கோடு (Hocking) சேர்ந்து, 'கூட்டுச் சேரும் தன்மை மனிதனுக்குள்ளே காணப்படும் பண்பு' என்று

நாமும் சொல்லலாம்: அல்லது 'பிறவற்றை இரையாகக் கொள்ளும் பிராணிகளனைத்திற்குமே, துணைநாடும் இயல்புண்டு. அது தான் மனிதனையும் ஒன்றுசேர்க்கிறது' என்று ஹியூம் (Hume) கூறுகிறார். மனிதன், தனக்கும் மற்றவர்களுக்கும் இடையேயுள்ள மேலெழுந்தவாரியான வேறுபாடுகளைக்காட்டிலும், அடிப்படை ஒருமை இருப்பதை உணர்வதால் எழும் விருப்பமான இந்த 'இணைப்பு' அல்லது 'துணைநாடும் இயல்பு' தோன்றுகிறது. தன்னுடைய உள்ளுணர்வு, அவனது வெறுப்பு விருப்புகள், அவனது நோக்கு ஆகியவையெல்லாம் போதுமான அளவிற்கு ஒரே மாதிரியாக இருப்பதால் கூட்டுறவு வாழ்க்கை சாத்தியமானதும், இலாபகரமானதும் ஆகும் என்பதை அவன் அறிவான். இதை அறிந்து கொள்ளாமல் இருந்தால் தன்னை மற்றவர்கள் புரிந்துகொள்வது அல்லது தான் மற்றவர்களைப் புரிந்துகொள்வது நிச்சயமற்றதாக இருக்கும். அவனும் மற்றவர்களும் ஒரே காரியத்தைத்தான் செய்கிறார்கள் என்பதை அவன் உணரவேண்டும்.

## கூட்டுறவு

குடும்பத்தில் புருஷனும் மனைவியும் குழந்தைகளுமாகவும், அன்றாட வாழ்க்கையில் ஆணும் பெண்ணும் ஒன்று கூடி வாழ வேண்டுமென்று உள்ளத்தாலும் ஆத்மீக உணர்ச்சியாலும், விரும்பும் துணைநாட்டந்தான் சமுதாய வாழ்வின் துவக்கமாகும். ஒருவரிடத்து இருந்து ஒருவருக்குப் பல உதவிகள் தேவைப்படுகின்றன. கருத்துக்களைப் பரிமாறிக்கொள்ளவும், மற்றவர்களின் அநுபவங்களில் பங்கு பெறுவதன் மூலம், நமது சொந்த அனுபவம் செழுமை யடையவும், நம் உள்ளங்கள் ஆர்வத்தோடிருக்கின்றன. திட்டவட்டமான நோக்கங்களில்லாது வெறும் வாழ்க்கை நீண்ட நாளைக்கு நீடிக்கமுடியாது. எனவே சில காரியங்களைச் செய்து முடிக்கவேண்டும் என்ற ஆசை தோன்றுகிறது. கூட்டாகச் சேர்ந்து செயலாற்றுவதற்கு ஏதாவதொருவகை அமைப்பு அங்கிருக்கவேண்டும். ஒரே காரியத்தைச் செய்ய முயலும் மக்களிடையே கூட்டுறவு தேவைப்படுகிறது. சமூக இயலைச் சேர்ந்தவர்கள், 'பணிபுரியும் ஸ்தாபனங்கள்' என்று இவைகளை அழைக்கிறார்கள். இவ்வகைக் குழாங்களைக் கிட்டத்தட்டப் பொது நோக்கிற்காக நன்றாக உணர்ந்தே அமைத்துக்கொள்கிறார்கள் என்று கூறுகின்றனர். பெரிய அளவில் இப்படிப்பட்ட குழாங்கள் தோன்றும்போது, மனித சமுதாயம் அல்லது குடும்பம் பிறந்து விடுகிறது.

### தனியாள் வாதக் கோட்பாடு

இவ் வகை வாதத்திற்கு இன்னொரு புறமும் உண்டு. மனிதன் கூடி வாழ்வதைத் தவிர வேறு எதுவும் இல்லாத மனிதனை இருந்தால், பொதுவாழ்க்கை, சிக்கல் எதையும் எழுப்பாது. ஆனால் மனிதனின் கூட்டுறவு உணர்வும், குழாம் அமைக்கும் பண்பும், அவனது தனியாள் வாதத்தால் குறுக்கிட்டுத் தடை செய்யப்பட்டுப் போகின்றன. அவன், மிகவும் குறையுள்ளவனை இருப்பினும் தன்னை முதல்வனாகவும், முக்கியமானவனாகவும் கருதிக்கொள் கிறான். ஒவ்வொருவனும் தனித்தன்மை வாய்ந்தவன். ஒவ்வொரு வனுக்கும் ஒரே ஒரு வாழ்க்கைதான் கொடுக்கப்பட்டிருக்கிறது. அவன் தனியாகத் துயரனுபவிக்கிறான். அவனுக்கு மிகவும் நெருங்கியவர்கள் அல்லது மிகவும் பிரியமானவர்கள்கூட அவனது வேதனையில் பங்கு பெறமுடியாது. அவனுக்கென்றே சொந்தமான விருப்பங்களும், பசிதாகங்களும், ஆர்வங்களும் வாழவேண்டும் என்ற முனைப்பும் இருக்கின்றன. அதோடு சமூக வாழ்க்கையானது இவ் வகை விருப்பங்களின் வெளியீடாகவும், அவற்றை அடைதற்குரிய கருவியாகவும் இருக்க வேண்டும் என்று விரும்புகிறான். தானென்ற ஆணவமும், தனியாள் தத்துவமும் அவனுடைய மேலெழுந்த வாரியான தவறுகள் ஆகும். அவை பகுத்தறிவினாலும், அனுபவத் தாலும் நீக்கப்படும் என்று நம்பிக்கையோடு சுலபமாகச் சொல்லி விடக்கூடாது. மனிதத் தன்மையின் சாரத்தில் அவை வேரூன்றி இருக்கின்றன. மரணத்திற்கும் காலத்திற்கும் எதிராகத் தன் உயிரைப் பாதுகாத்துக்கொள்ளும் உணர்விலும் அல்லது மனிதனின் சுய பாதுகாப்பு என்னும் உணர்விலும் அது வேரூன்றி இருக்கிறது. இந்த உணர்வு – வாழவேண்டும் என்ற இந்த முனைப்பு – (அதுவும் தன் இச்சைப்படியே வாழவேண்டும் என்ற முனைப்பானது), நடை முறையில் மனிதன் தன் முனைப்பை மற்றவர்மீது சுமத்த முற்படு வதில் முடிகிறது; அல்லது நாம் சொல்லுகிறபடி 'அவன் இச்சைப் படியே நடக்கவேண்டும்' என்பதில் முடிகிறது. இதுதான் உள்ளுணர்வான அதிகார விருப்பம்.

## (ii) அதிகாரப் பிரச்சினை

### அதிகாரம் என்பது என்ன?

டானி (Tawney) என்பவர் இதற்கு இலக்கணம் வகுத் திருக்கிறார். 'தாம் முக்கியமான ஒருவராக இருக்கவேண்டும் என்ற பெருவிருப்பும், நம்முடைய தன்னல முனைப்பைப் பூர்த்தி செய்யும்

வண்ணம் காரியங்களும், மனிதர்களும் இயங்கும்படிப் பார்த்துக் கொள்வதும், தனியாள் அல்லது தனிக்கூட்டம் ஒன்று தங்கள் விருப்பத்தின்படி மற்றவர்களின் நடத்தையை அமைத்துக்கொள்ளச் செய்வதும், தமது விருப்பத்துக்கு விரோதமாகத் தம்முடைய நடத்தையை மாற்றியமைக்கப்படுவதைத் தடுக்கவும் வல்லது அதிகாரம்.' மேலாண்மை உரிமையையும், மேலாண்மை அதிகாரத்தையும் ஒன்று என நினைத்துக் குழப்பக்கூடாது. 'நடத்திச் செல்லவும், உத்தரவிடவும், அதன் பேச்சைக் கேட்கச் செய்யவும், அதற்குக் கீழ்ப்படியச் செய்யவும் வைக்கும் உரிமைதான் மேலாண்மை. கீழ்ப்படிதலைக் கட்டாயமாகப்பெற உதவும் சக்தி தான் அதிகாரம்' என்று மாரிடெயின் (Maritain) கூறுகிறார். கொள்ளைக்காரனுக்கு அதிகாரமுண்டு; ஆனால் மேலாண்மையில்லை. சாக்ரடீசுக்கு (Socrates) மேலாண்மை உரிமை இருந்தது; ஆனால் அதிகாரமில்லை. நல்ல ஒழுங்குற அமைக்கப்பட்ட சமுதாயத்தில் இவை இரண்டும் ஒருங்கே இயங்கும்.

இவ்வாறாக, ஒருவனது முனைப்பை, மற்றவர்களின் முனைப் புக்கும் எதிராக இவர்கள்மீது நிலவும்படிச் செய்யும் சக்தியே அதிகாரம். இந்த அதிகாரத்தைப் பிரயோகிக்க விரும்புவது, மனிதனின் இயற்கையில் ஊறியதுபோலத் தோன்றுகிறது. ஆதாரங்களையும், அதனால் மற்றவர்களது வாழ்க்கைகளையுங்கூடக் கட்டுப்படுத்துவது உயிர்பிழைத்து வாழ்வதற்கு உதவிபுரிவன என்ற உள்ளுணர்வை இது வெளிப்படுத்துகிறது. சூரியனுக்குக் கீழே நமக்கென்று ஓர் இடம்—கூடியமட்டில் பெரிய இடம்—வேண்டும் என்று நாம் விரும்புகிறோம். இந்த இயல்பான தூண்டுதல், மற்றெல்லாவகை இயல்புணர்ச்சித் தூண்டுதல்களைப் போலவே, கட்டுப்படுத்தப்படவேண்டும். ஆனால் இதை அடக்கிவிடமுடியாது. ஏனெனில் இது எல்லா ஆக்கவேலைக்கும் உண்மையில் இன்றியமையாதது. மனம், உடல் ஆகியவற்றின் வலிமையை வெளிப்படுத்திக் காட்டுவதுதான் இது. இப் பிரபஞ்சத்தோடு நமக்குள்ள ஒரே தொடர்பாகிய தன்னலமுனைப்பை வலியுறுத்திக் கூறுவதுதான் இது.

## மனிதருக்கிடையேயுள்ள உறவே அதிகாரம்

தடைசெய்யப்பட்டதோ அல்லது தடைசெய்யப்படாததோ, தன்னலமானதோ அல்லது தன்னலமற்றதோ எவ்வாறிருப்பினும், ஏதாவதொரு பொதுக்காரணத்திற்காக அல்லது செயலுக்காக, ஒருவருக்கொருவர் தொடர்புண்டாகும்படி கொண்டுவரப்பெற்ற, மக்களுக்கிடையேயுள்ள உறவுதான் அதிகாரமாகும். ஆட்சி செய்பவர், ஆளப்படுபவர், உத்தரவிடுபவர், கீழ்ப்படிபவர் என்று

ஏற்படும் உறவுநிலைகள்தான் அதிகாரமாகும். இதிலிருந்து எல்லா மனிதர்களும் அதிகாரத்தை உபயோகிப்பவர்களாகவும், அதற்குக் கட்டுப்பட்டவர்களாகவும் இருக்கிறார்கள் என்பது பெறப்படுகிறது.[1] எவருக்கும் உத்தரவு கொடாமலோ, எவரிடமிருந்தும் உத்தரவைப் பெறாமலோ மனிதன் இருப்பது அபூர்வம். சமுதாய வாழ்க்கை என்பது உண்மையில் பின்னிப் பிணைக்கப்பட்டிருக்கும் அதிகார இணைப்புகளேயாகும். மனிதன் ஆசைகளால் ஆனவன். ஒவ்வோர் ஆசையும் ஒரு சக்தியாகிறது. இது அவன் அங்கம் வகிக்கும் சமுதாயத்தின் கட்டமைப்பையும், பணியையும் ஆக்கும் அல்லது அழிக்கும் சக்தி பெற்றிருக்கின்றது. பலவீனப்படுத்தும் அல்லது வலுவுண்டாக்கும் சக்தி படைத்த ஆசைகள்தான் சமூக சக்திகளாக இருந்து சமூகத்தை இயக்குகின்றன. இவ் வாசைகளை இணைத்துப் பொருத்தும்போதுதான், மனித நோக்கங்கள் நிறைவெய்துகின்றன. அதனுடைய பண்படாத நிலையிலும், தொடங்கிவைக்கும் தன்மையும், ஒருமைப்படுத்தும் சக்தியும் அதற்குள் அடங்கியிருக்கின்றன. சமுதாயத்திற்கு முழுமையை உண்டாக்கவும், செயலாற்றும் திறனை அதற்குக் கொடுக்கவும் இவையெல்லாம் தேவைப்படுகின்றன. ஒழுங்குற அமைக்கப்பட்ட வாழ்க்கைக்கு அதிகாரம் அவ்சியமாகிறது. பெர்ட்ரண்டு ரசல் (Bertrand Russel) சொல்வதுபோல, இது சமூக வியலின் அடிப்படைக் கோட்பாடாகும். பௌதிகத்திற்குச் சக்தி எப்படியோ, அப்படியே சமூகவியலுக்கு அதிகாரம் ஆகும். இவ் வதிகாரம் இல்லாமல் ஒன்றும் எப்பொழுதும் நிகழாது. அது பலவித உருவ அமைப்புகளில் தோன்றக்கூடும். நேரடியாக வலுக்கட்டாயம் பண்ணுவது மாத்திரந்தான் அதிகாரம் என்று வரையறை ஒன்றும் செய்யப்படவில்லை. பரிசு கொடுத்தல் அல்லது தண்டனை வழங்கல் ஆகிய தூண்டுதல்கள் மூலமும் இயங்கலாம். இன்னொருவரின்மீது தம்முடைய மனம், விருப்புச்சக்தி ஆகியவற்றை மனத்தளவில் பிரதானமாக்கி அவர் உண்மையில் அதை உணராதபடி அவருடைய மனத்தையும், விருப்புச்சக்தியையும் தன் நோக்கங்களுக்காக வளைத்துப் பயன்படுத்துவதும் அதிகாரமே. செல்வத்தால், பிறப்பால், வெற்றியால் ஏற்படும் செல்வாக்கும் மதிப்பும் அதிகாரமே ஆகும். நிச்சயத்திலும், துணிச்சலிலும் வேரூன்றிய நெறிமுறை ஆணையாகவும் இது இருக்கலாம். ஆயிரக்கணக்கான மக்களின் வாழ்க்கையையும் உற்பத்தியையும் தம் கைக்கீழ்க் கொண்டிருப்பதால் ஒருவருக்கு ஏற்படும் சக்தி பொருளாதார அதிகாரமாகும். மதகுருவின் அதிகாரமாகவும், மந்திரவாதியின் அதிகாரமாகவும், வைத்தியரின் நுணுக்கத் திறமையின் அதிகாரமாகவும், அன்னையின்

[1] அல்லது கலைச்சொற்களைப் பயன்படுத்தினால், அதிகார 'நோக்கங்களும், அவற்றின் பொருள்களும்' என்று ஆகும்.

அன்பின் அதிகாரமாகவும் இது இருக்கலாம். 'ஆத்மீகச் சக்தி'யானது, மிக ஆழ்ந்த ஆவிக்குரிய சக்தியினுலும், பரிசுத்த வாழ்க்கையின் மதிப்பாலும் ஏற்படுவதாகும். இது போர்வீரனின் அல்லது போலீஸ்காரனின் அதிகாரத்துக்கு எவ்வகையிலும் குறைந்த தன்று. ஏனெனில் இது உடலால் மனிதனே வலுக்கட்டாயம் செய்யாமல் அவனே மேற்கொள்ளுகிறது. இதுவும் ஒரு வலுக் கட்டாயந்தான். ஏனெனில் இதைப் பிரயோகிப்பவர் தம் விருப்பங்களே அவை நியாயமானவையென்று ஒத்துக்கொள்ள மறுக்கும் இன்னெருவர்மீது சுமத்துவதாகும். தம்முடைய விருப்புச்சக்திக்கும் அல்லது உள்மனத்தின் திடநம்பிக்கைக்கும் மேம்பட்ட வலு இருப்பதால் இதை ஒத்துக்கொள்கிறது. மேலும், அதிகாரம் நடைமுறையில் பிரயோகிக்கப்பட வேண்டிய தேவையில்லே. அது உபயோகப்படுத்தப்படும் என்ற நிலேயே பொதுவாகப் போதுமானது. ஆயுதந்தரியாத போலீஸ்காரன் ஒரு கூட்டத்தைக் கலேக்கக்கூடும். சிறுதொகையினரான போர் வீரர்கள் ஒரு கலகத்தை ஒரு வெடிகூட வெடிக்காமல் அடக்கக்கூடும். எவராவது ஒருவருடைய உணர்ச்சியைப் புண்படுத்தக்கூடும் என்ற நினைப்பு, சிறைச்சாலேக்குப் போகும் சாத்தியத்தைவிட வலுவான தடையாகும். கடைசியாகச் சொல்லப்போனுல், அதிகாரம் என்பது ஓர் அதிசயமான சாரம். இது அரசியல் நூலாரைக்காட்டிலும் உளவியல் நூலாரின் ஆழ்ந்த கவனத்திற்குரியது.

## அதிகாரத்தின் நெறி

அதிகாரம் என்பது கேடானதா? இதை வெறுமனே விரும்புவதும் கேடானதா? டால்ஸ்டாயின் அல்லது நீட்ஸ்கேயின் (Tolstoy or Neitzsche) சீடன்தான் சாதாரண 'ஆம்' அல்லது 'இல்லே' என்ற ஒரு சொல்லால் இதற்கு விடை பகரமுடியும். அது முழுவதும் கேடானது என்று டால்ஸ்டாயைப் பின்பற்றுபவர்கள் கூறுகிருர்கள். ஏனெனில் அது உரிமைக்கும் நெறிக்கும் உட்படாத சுதந்தரம் பெற்றிருக்கிறது. சுதந்தர மனிதன் ஒருவனே அவனது சுதந்தர விருப்பாற்றலுக்கு எதிராக நடக்கும்படி இது கட்டாயப் படுத்துகிறது. அவனது செயல்களுக்கு இந்தச் சுதந்தர விருப் பாற்றல் ஒன்று மாத்திரமே மதிப்பு அளிக்கக்கூடியது. வாளே எடுக்கிறவன் வாளால் அழிந்து போவான். இன்னெருவரின்மீது நமது விருப்பாற்றலேச் சுமத்துவது எவ்வாறாயினும் தவறாகவே ஆகும். வன்முறையால் எதிர்ப்பதைக் காட்டிலும் நாமே துன்பத்தை அனுபவித்து விடுவது சாலச் சிறந்ததாகும். 'பாவத்தின் வலிமை' மற்றவர்களேவிட நாமே மிக முக்கியமானவர்கள் என்று நினேத்துக் கொள்ளும் தன்மை, நமது நலனை நோக்குநிலையாகக் கொண்டு

எல்லாப் பிரச்சினைகளையும் நோக்குவது ஆகிய காரணங்களால்தான் அதிகாரம் உபயோகப்படுகிறது' என்று நீபர் (Niebuhr) கூறுகிறார்.

வலிமையை மிகையாகப் புகழ்வதன் எதிர் நிகழ்ச்சிதான் இவ்வித நோக்கு என்பது வெளிப்படை. நீட்ஸ்கே (Nietzsche) எழுதுகிறார்: 'எவையெல்லாம் வலிமையுணர்ச்சியை அதிகப் படுத்துகின்றனவோ, வலிமையுள்ள விருப்புச்சக்தியைத் தூண்டு கின்றனவோ, மனிதனுக்குள்ள வலிமையை மேலும் வளரச் செய் கின்றனவோ அவையெல்லாம் நல்லனவாகும். பலவீனத்திலிருந்து வெளிவருபவையெல்லாம் கெட்டவையாகும். வலிமை அதிகரிக் கிறது என்ற உணர்ச்சியினாலும், எதிர்ப்பை மேற்கொண்டாயிற்று என்பதனாலும் ஏற்படுவதே மகிழ்ச்சி.' சகோதரர்கள் ஒருமித்து வாழ்தல் என்பதற்கு நேர்மாறான ஒன்று வலிமையாகும். மனம் ஒப்பிய கூட்டுறவுக்கும் இது எதிர்மறை ஆகும். வெற்றிகரமாக உபயோகப்படுத்தப்பெற்ற உடல் வலிமைக்கும், ஒரு காரண காரியத்தின் நியாயத்திற்கும் யாதொரு தொடர்பும் கிடையாது என்பதை இது நமக்கு நினைவூட்டுகிறது. வெற்றி என்பது நீதியின் உத்தரவாதமன்று. பல காரியங்களைச் செய்கிறது என்ற காரணத் தால் வலிமைக்கு இயற்கையாக மேலாண்மையுண்டு என்று சொல்வதை நாம் மறுத்தாகவேண்டியிருக்கிறது. வலிமை உரிமை யாகாது. 'உரிமை சம்பந்தப்பெற்ற ஒரு காரியத்தை, வலிமை ஒருக்காலும் முடிவு செய்ய முடியாது என்ற விலையிட முடியாத அடிப் படையான கருத்தை நாம் இறுகப் பிடித்துக்கொள்வோம். இது தான் சுதந்தரம், சமத்துவம், உண்மையான நாகரிகம் ஆகிய வற்றின் துவக்கநிலை' என்று அலெய்ன் (Alain) கூறுவதை நாமும் ஒத்துக் கொள்ளலாம்.

இப்படிச் சொல்வதால் டால்ஸ்டாய் கட்சியில் சேர்ந்துகொண்டு வலிமை எப்பொழுதும் உரிமையாகாது என்று சொல்வதாகக் கொள்ளக் கூடாது. அதிகாரம் நடுநிலைமையான ஒன்று என்பதை யும், இதை நல்ல வழியிலும், கெட்டவழியிலும் உபயோகிக்கலாம் என்பதையும் வலியுறுத்தவே இவ்வாறு கூறப்பட்டது. இப் பிரபஞ் சத்திலுள்ள ஒவ்வொன்றையும் போலவே இதுவும், தான் இருப் பதற்குரிய நியாயத்தைத் தேடியாகவேண்டும். நீபர் (Niebuhr) எழுதுகிறார்: 'தீய எண்ணத்தின் இயற்கையானதும், இன்றியமை யாததுமான வெளியீடே பலாத்காரம் என்றும் நல்லெண்ணத்தின் வெளியீடு அகிம்சை என்றும் கொள்வது தவறாகும். பலாத்காரம் எப்பொழுதுமே கேடென்றும் அல்லது அகிம்சை எப்பொழுதுமே நன்மை என்றும் கொள்வதும் தவறாகும். எல்லாவித மக்கள் கூட்ட உறவுகளுக்கும் ஏதாவது கட்டாயப்படுத்தல் தேவைப்

படுகிறது.' அதிகாரம் அபாயகரமானது என்பதை இதனுல் மறுப்ப தாகக் கொள்ளக் கூடாது. அதிகாரத்திலுள்ள மனிதர் அனைவரை யும் நம்பக்கூடாது என்று சொல்வதில் அதிக உண்மையிருக்கிறது. அதிகாரம் பெற்றிருப்பவர்களில் பலருக்கு இந்த அதிகாரம் தலைக்கேறி விடுகிறது.

'சிறிது அதிகாரமே பெற்றிருப்பினும், மனிதன் ஆணவம் படைத்தவனுக ஆகிவிடுகிருன். அவனது வாழ்க்கையின் நிச்சய மான குறிக்கோளை அவன் அறியாது அறிவிலியாகிருன். கடவுளுக்கு முன் அவன் சினமுற்ற குரங்குபோலத் தந்திர மந்திரமெல்லாம் செய்கிருன். அவனுடைய இரங்கத்தக்க நிலைகண்டு வானத்துத் தேவரும் கண்ணீர் வடிக்கின்றனர்.'

ஷேக்ஸ்பியர் (Shakespeare) எழுதிய காலத்தில் இது எவ்வளவு உண்மைக்கு உகந்ததாக இருந்ததோ, அவ்வளவுக்கு இன்றும் உண்மையாக இருக்கிறது. எந்தவித முன்னெச்சரிக்கையும், அதி காரத்தைத் தவருன வழியில் உபயோகிப்பதிலிருந்து முழுவதாக ஒருவரைக் காவாது. கேடு விளைவிக்கக்கூடிய அதிகாரம், உதவி யற்ற நிலையிலிருக்குமானுல், நல்லதற்கும் அது உதவியற்ற நிலையில் தானிருக்கும். வலுவற்ற அதிகாரங்களினுல் ஏற்பட்ட கேடுகளைப் பற்றி வரலாறு அதிகம் சொல்லுகிறது.

## அதிகாரத்திற்கு உரிமை கொண்டாடுபவர்கள்

நவீன சமுதாயத்தில், அதிகாரத்துக்கு உரிமை கொண்டாடு பவர்கள் பலர் இருக்கிருர்கள். தங்களது அதிகாரத்தை வலியுறுத்து வதற்குத் தருணம் பார்த்துக்கொண்டே இருக்கும் சர்வாதிகாரப் போக்கும் பேராசையும் கொண்ட நபர்களைத் தவிர,[1] பழைய அதிகாரங்களைக் காத்துக்கொள்ளவும், புதியவைகளைப் பெறவும் ஆர்வமுள்ள ஒழுங்குற அமைக்கப்பெற்ற எண்ணற்ற சங்கங்களை அல்லது குழாங்களை நாம் பார்க்கிரேும். பல நாடுகளில் இன்னும் குடும்பமானது ஒரு வெல்லமுடியாத அதிகாரத் தொகுதியாக இருக்கிறது. குடும்பத்திலுள்ள அங்கத்தினர்மீது மாத்திரமல்லாமல், சமுதாயத்தின்மீதும் தன்னுடைய விருப்புச் சக்தியைக் குடும்பம் சுமத்துகிறது. அரசில் சில முக்கியமான பதவிகளைப் பெற்றிருப்பதால்

[1] 'இரவிலே தலைக்கு மேலே நீ பார்க்கிருயே நட்சத்திரங்கள், நாம் என்றைக்கும் போய்ச் சேரமுடியாத பெரிய உலகங்கள்......................இந்தக் கிரகங்களை யெல்லாம் என்னுல் கூடுமானுல் ஆக்கிரமித்துக் கொள்வேன். இதைப்பற்றி அடிக்கடி நினைக்கிறேன். இவ்வளவு தெளிவாகவும் இவ்வளவு தூரமாகவும் இருப்பது மனவருத்தமாக இருக்கிறது.' (Cecil Rhodes quoted by Morgenthau, 'Scientific Man Versus Power Politics.'

இது சாத்தியமாகிறது. படைவலிகொண்ட ஆட்சிச் சமுதாயங்களில் தரைப்படையும், கப்பற்படையும் முக்கிய அதிகாரத்திலிருக்கும். ஏகாதிபத்திய ஜெர்மனியும், ஜப்பானும் இதற்கு உதாரணங்கள் ஆகும். இன்னும் சில நாடுகளில், திருச்சபைகள், உயர்ந்த ஆத்மீக சக்தியினுல் அதிகாரத்தைப் பெற்றிருப்பதாகக் கூறி, அரசோடு அதிகாரத்திற்குப் போட்டியிடுகின்றன. பல கத்தோலிக்க நாடுகளிலும் முஸ்லீம் நாடுகளிலும், ஒழுங்குற அமைக்கப்பட்டிருக்கும் சமயத்தோடு அரசு அதிகாரத்தைப் பகிர்ந்துகொள்ளவேண்டி இருக்கிறது. ஆனுல் இவையெல்லாவற்றையும்விட, எங்கும் காணப்படுகின்ற சில முக்கியமான பொருளாதாரச் சக்திகள் அரசாங்க அங்கீகாரம் பெற்றிராவிட்டாலும் உண்மையான அதிகாரத்தைப் பெற்றிருக்கின்றன. அவை பல உருவமைப்புகளில் தோன்றுகின்றன. ஒரு சமயத்தில் நிலஉடைமை வகுப்பு, எல்லா அதிகாரங்களேயும் உடையதாயிருந்தது. இப்பொழுது கட்டுப்பாடான தொழிலாளர் சங்கங்கள் வேலைநிறுத்தம் செய்வதன் மூலம் சமூக வாழ்க்கையையே ஸ்தம்பிக்கச் செய்யும் திறன் பெற்றிருக்கின்றன. 1917-ல் நடந்த பொது வேலைநிறுத்தம் ஒன்று போல்ஷ்விக் (Bolshevik) புரட்சியை ஏற்படுத்தியது. பல வாக்காளர்களை அது பெற்றிருப்பதால், அது ஆதரிக்கும் கட்சியின் கொள்கைகளின்மீது, செல்வாக்குச் செலுத்துகிறது. விசேஷமாக அக் கட்சி அதிகாரத்திலிருக்கும் போது அதன் கொள்கைகளின்மீது செல்வாக்கு பெற்றிருக்கிறது. இதற்கு, அடுத்த பக்கத்தில் முதலாளிகளும், வணிக இணைப்புகள், வணிகக் கூட்டுகள், வணிக மன்றங்கள் ஆகியவைகள் கட்டுப்பாட்டோடு இருக்கும்போது, அதிகாரம் பெற்றிருப்பதில் எவ்வகையாலும் தாழ்ந்தவர்களல்லர். ஜெர்மனியைச் சேர்ந்த தொழில்துறை இயக்குநரும், பொருளாதார அறிஞரும், அரசியலறிஞருமாகிய வால்தர் ராத்தெனுவ் (Walther Rathenau) ஐரோப்பாவின் பொருளாதார வாழ்க்கை முழுவதையும் 300 தனிநபர்கள் கட்டுப்படுத்தியிருக்கிருர்கள் என்று ஒரு சமயம் கூறியிருக்கிருர். மூன்ரும் பிரஞ்சுக் குடியரசை 200 குடும்பங்களே ஆட்சி புரிந்தன என்றும் சொல்லப்பெற்றது. அமெரிக்க ஐக்கிய நாட்டில், தொழில் துறையில் உள்ள ஆறு நிதிக்குழுக்கள், $2\frac{1}{2}$ மிலியன் தொழிலாளர்களைக் கட்டுப்படுத்தி வந்ததாகக் கூறப்பெறுகிறது. அல்லது ஒவ்வொரு நிதிக்குழுவிடமும் அரை மில்லியன் தொழிலாளர் கட்டுப்பட்டிருக்கின்றனர் எனலாம். இவ்வாருன கட்டுப்பாடு ஜனுதிபதி டாப்ட் (President Taft) சொன்னமாதிரியான அதிகாரத்தை உடையதாக இருக்கிறது. அவர் சொன்னுர்: ‘நாட்டின் பல பெரிய இணைப்புகளின் இயக்குநர்கள், கூட்டான கட்டுப்பாட்டு நோக்கத்திற்காக, மாநாட்டிலிருந்து பிரதிநிதிகளைத்

தேர்ந்தெடுக்கச்சொல்வதும், சட்டசபைகளுக்கு அங்கத்தினர்களைத் தெரிந்தெடுக்கச்சொல்வதும், அவர்களின் ஆலைகளில் இவ்வளவு இயந்திரங்களைப் பட்டுவாடாச் செய்யுங்கள் என்று இடும் ஆணைகளைப் போலவே இருக்கின்றன. அவை நிச்சயமாக நிறைவேற்றப்படும் என்ற முழு நம்பிக்கையில் ஆணைகள் பிறப்பிக்கப்பெற்ற காலங்களும் இருந்தன என்பதை நாம் எல்லோரும் அறிவோம்.

## அதிகாரத்தைச் சமநிலைப்படுத்தும் அரசு

கூட்டுவாழ்க்கையில் உபயோகப்படுத்தப்பெறும் அதிகாரத் தன்மை, அதிகார அளவு ஆகியவற்றைக் கட்டுப்படுத்தி, ஒழுங்கு செய்யும் அதிகாரத்தைச் சமுதாயம் ஏற்படுத்தும் ஏதாவதொரு துறையிடத்தில் கொடுக்கவேண்டும். இத் துறைதான் அரசு ஆகும். இதற்குரிய கட்டாயப்படுத்தும் ஏகபோக உரிமையினால், ஏனைய சமூகத்துறைகள் தங்களுக்குரிய கட்டாயப்படுத்தும் உரிமையை எம் முறையில் உபயோகப்படுத்துவது என்பதை நிர்ணயிக்கின்றன. வேறு சொற்களில் சொல்லப்போனால், தனியாட்களாலும், குழாங்களாலும், அல்லது அரசாலும், அந்தக் குறிப்பிட்ட சமுதாயம் பின்பற்றும் நோக்கங்கள், அவர்கள் உணர்ந்துகொண்டிருக்கும் நீதிக்குப் பொருத்தமாக அதிகாரம் எவ்வாறு பிரயோகிக்கப்பெற வேண்டும் என்பதை அரசு முடிவுசெய்கிறது. உண்மையில் சட்டம் என்பது, அதிகார உபயோகத்தை ஒழுங்கு செய்வதும், அனுமதி வழங்குவதுந்தான் என்று கூறலாம்.

இவ்விதமாக அதிகார உபயோகத்தைக் கட்டுப்படுத்துவது மிகவும் முக்கியம் ஆகும். ஏனெனில் ஒவ்வொருவரும் தமக்குரிய எந்த அதிகாரத்தையும் உபயோகிக்கவே விரும்புகிறார்கள். லாஸ்கி (Laski) கூறுவதுபோல, 'முரணான விருப்பங்களைப் பூர்த்திசெய்ய மனிதர்கள் வெவ்வேறு வழிகளில் இயங்குகிறார்கள்; இந்த இயக்கமானது சட்ட ரீதியில் இயங்குவதற்குரிய நிபந்தனைகளை விளக்குவதற்காக ஒரு கட்டாயப்படுத்தும் மேலாண்மை அவசியமாகிறது ; அனுமதிக்கக்கூடிய, சமூக நடத்தையின் விதிகளை விதிக்கவும் இது தேவைப்படுகிறது.'

அரசிற்கு அதிகாரம் அளிப்பது அல்லது அதிகாரமே தேவையில்லை என்று கூறுவது ஆகிய இரண்டுக்கும் இடையில் ஒன்றைத் தெரிந்தெடுக்காது, வலிமையுடைய குழாங்களில் பிரதானமாக இருக்கும்படி அரசைத் தெரிந்துகொள்கிறோம். அரசின் அதிகாரம் விளக்கமாக ஒத்துக்கொள்ளப்பட்ட கொள்கைகளின்படி உபயோகிக்கப்படவேண்டும். இதுவும் ஒரு சிறுபிரிவாருக்குமட்டும்

என்றில்லாமல் சமுதாயம் முழுவதற்கும் பயன்படுத்தப் பெற வேண்டும்.

## அரசின் அதிகாரப் பிரயோகம்

எந்தச் சந்தர்ப்பத்தில் அரசு அதிகாரத்தை உபயோகிப்பது அவசியம் என்று கருதலாம்? முதலாவதாக, தனியாருக்கிடையேயும், குழாங்களுங்கிடையேயும் பிணக்குகள் எழும்போது, இது உபயோகப் படுத்தப் பெறவேண்டும். அவர்களுக்குள் சமநிலை தவறும்போது பிணக்குகள் தோன்றுகின்றன. வேறு சொற்களில் சொன்னால், தனியாரும், குழாங்களும் தங்களது இயல்புக்குரிய அல்லது பணிக் குரிய அதிகாரத்தைத் தவறான வழியில் உபயோகிக்கும்போது பிணக்குகள் ஏற்படுகின்றன. எல்லோரையும் அடக்கி ஆள விரும்புவது, தனது சொந்தக் காரியங்களுக்காக மற்றவர்களைப் பயன்படுத்த முயல்வது, தாம் ஒருவரே முழுச் சமுதாயம் என நினைத்து ஒழுகுவது ஆகியவை தடுக்கப்பட அதிகாரம் தேவைப் படுகிறது. நன்றாகக் கட்டுப்பாடு செய்யப்பெற்ற சமுதாயம் இந்த விதமாக வலியுறுத்தும் குணங்களுக்கு வெளிப்போக்கு வைத்திருக் கும். மற்றவர்களுக்கும், தங்களுக்கும் துன்பத்தை விளைவித்து விடாதபடி, சமூக செயலாக்கப் பணிகளின் அடிப்படையில் இயல்பான தலைவர்கள், ஆதிக்க உணர்ச்சி உடையவர்கள், முன்னேற ஆர்வ முடையோர் ஆகியோருக்குச் சமுதாயம் பல சலுகைகள் காட்டி வைத்துக்கொள்கிறது. சமூகக் குழாங்களின் சுதந்தரமானதும் தாமாகவே இயங்குவதுமான செயலுக்கும் மேலே அரசுக்கு அதிகாரம் அளிக்கப்பெறுவதற்கு இன்னொரு முக்கிய காரணம் கூறப்படுறது. லிங்கன் (Lincoln) இதை அழகாகச் சொல்லி இருக்கிறார்:

'கூட்டு முயற்சிகளால் சில நோக்கங்களைப் பூர்த்தி செய்வதற் காகச் சேரும் மக்களின் இணைப்பே அரசாங்கம் ஆகும். 'அரசாங்கத் தின் சட்டபூர்வமான நோக்கம் மக்களுக்கு என்ன தேவையோ அவர்களால் செய்யமுடியாதது எதுவோ அல்லது நன்றாகச் செய்யக் கூடாதது எதுவோ அதைச் செய்வதுதான்.' அவர் மேலும் கூறுகிறார்: 'மனிதர்களுடைய அநீதிகளின் அடிப்படையில்தான் இந் நோக்கங்களிற் பல தோன்றுகின்றன.'[1] இச் சொற்களால் அரசு

[1] அரசின் பெரும்பான்மையான நடவடிக்கைகள் மனிதனின் அநீதிகளிலிருந்து எழுகின்றன என்று சொல்வது இன்றைக்கு உண்மையாக இராது. லிங்கன் காலத்திற்குப் பிறகு அரசின் நடவடிக்கை வரம்பு பெரிதும் விஸ்தரிக்கப்பட்டுவிட்டது. அவருக்குத் தெரியாத பல துறைகள் இன்று அரசின் நடவடிக்கைகளாக விளங்குகின்றன. இவையெல்லாம் கூட்டுறவு உணர்ச்சியிலிருந்து தோன்றியவையே யொழியத் தனியார் தத்துவத்தின் புறத்தே எழும்பியதல்ல.

ஏன் தேவை? அதன் நடவடிக்கை என்ன? என்ற இரு முக்கிய அம்சங்களையும் அவர் இணைக்கிறார். மனிதனிடம் காணப்படும் சமூகத்திற்கு எதிரான கூறுகளைக் கட்டுப்படுத்தி அரசு தடைபண்ணுகிறது. சமூகக் குழாங்களின் சுதந்தரமானதும், தாமாகவே இயங்குவதும் ஆன நடவடிக்கைக்கும் அப்பாற்பட்ட நிலையில் உள்ளபடி முறைகளை ஒருசேர இணைப்பதும் இதன் நோக்கமாகும். இதன் பணி பலவித உருவங்களில் தோன்றினாலும், நன்றாகக் கவனித்துப்பார்த்தால், இவை இவ்விரண்டு வகைக்குள் அடங்கும். முதல் தலைப்பின்கீழ், தன்னோடு வாழ்பவர்கள்மீது தனது விருப்பாற்றலைச் சுமத்தி அவர்கள் சொத்து விஷயத்திலோ அல்லது அவர்களின் சொந்த வாழ்க்கையிலோ தனது சொந்தக் காரியங்களுக்காகத்தான் அவர்கள் வாழ்கிறார்கள் என்று நினைத்து, அதன்படி நடப்பது போன்ற செயல்களைச்செய்ய முற்படும் தனியாளைத் தடைப்படுத்திவைப்பது இதன் முதல்வேலை. இரண்டாவது தலைப்பின்கீழ், கூட்டாகச் செயலாற்றுவதன் மூலம் என்னவெல்லாம் செய்யப்பெறவேண்டும் என்று முடிவுசெய்கிறது. இதற்காகச் சுயமுயற்சியால் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள நபர்களால் செய்யப்பெற முடியாத பணிகளை இது மேற்கொள்வதோடு, வெவ்வேறு காரியங்களை விரும்பும் அல்லது ஒரேவித காரியங்களை வெவ்வேறு வழிகளில் செய்யவேண்டும் என்று விரும்பும் மக்களின் போட்டி விருப்பங்களுக்குள் இது ஒன்றைத் தேர்ந்து முடிவுசெய்கிறது. (இவையெல்லாம் ஒன்றுக்கொன்று தொடர்பில்லாதவையெனினும், ஒரு வேளை நல்லனவாகவே இருக்கலாம்).

## அரசின் அதிகார உரிமை

சமுதாயத்தின் மாற்றாளாகிய (agent) அரசுக்குச் சொந்தமாக உரிமைகள் உண்டு. இவை அதன் முக்கியப் பணிகளுக்கு அத்தியாவசியம் என்று உணரப்பெறும் அதிகாரங்களை அளிக்கும் உரிமைகள் என்று உண்மையில் நியாயமானபடி வாதிடமுடியும். இந்த அதிகாரங்கள் இல்லாமல், தனியாட்களோ, குழாங்களோ சமூக விரோதமான செயல்கள் புரிவதைத் தடுக்கமுடியாது. மேலும் தனியார் சக்திகளையும், அடிப்படை வளங்களையும் கூட்டுநோக்கிற்காகப் பிணைத்து வெற்றிபெற முடியாது. ஆனால் எப்பொழுதுமே குறிப்பிட்ட காரியத்தோடு தொடர்புண்டோ இல்லையோ, எவ்வளவு அதிகமாக அதிகாரத்தை எடுத்துக்கொள்ள முடியுமோ அவ்வளவு அதிகாரத்தை அரசு எடுத்துக்கொள்ளும் போக்குடையது என்பதையும் இத்துடன் சேர்த்துக்கொள்ளவேண்டும். இது இயற்கைதானே! அதிகாரத்தை உபயோகிப்பவர்கள் அதை அனுபவிக்கிறார்கள்; மேலும் வேண்டுமென்று கேட்கிறார்கள்.

மக்களின் முக்கியமான பணி கீழ்ப்படிவது என்றும், அதிகாரம் மக்கள் கூட்டத்தின் நன்மைக்காகவும் அவர்கள் சார்பிலும் உபயோகிக்கப் பெறவேண்டியதில்லை என்றும் அவர்கள் நினைத்துவிடுகிறார்கள். அதிகாரத்துக்காகவே அவர்கள் வாழ்கிறார்கள். அதாவது அதிகாரத்தை அவர்கள் அனுபவிக்கவும், உபயோகிக்கவும் சாத்திய மேற்படுத்தும் வண்ணம் அவர்கள் இருக்கிறார்கள். அதிகாரத்தின் மூலப்பொருளாக மக்கள் கூட்டம் இவ்வாறு மாறுகிறது. ஃபிரஞ்சு அதிகாரிகள் (French Officials) அழைப்பதுபோல இவர்கள் 'ஆட்சி செய்யப்பட்டவர்கள்' (Administered Ones) ஆகிறார்கள். முடிவுக்கு ஒரு சாதனமாக இருப்பதற்குப் பதிலாக அதிகாரமும், அதை நிலைக்கச் செய்யும் முயற்சிகளும் முடிவுகளாகவே ஆகிவிடுகின்றன. சுயமாகத் தமக்குள்ள அதிகாரத்தை அதிகாரத்திலிருப்பவர் விட்டுக்கொடுப்பது என்பது வரலாற்றில் வெகு அபூர்வமான நிகழ்ச்சிகளில் ஒன்று ஆகும்.[1] சுயமான அரசு துறத்தல், கைவிரல்விட்டு எண்ணப்பெறக் கூடியது. உயர் பதவிகளிலிருந்து வேண்டுமென்றே விலகிக் கொள்பவர்கள் வெகுசிலரே. அதிகார நாட்டமும், அதை வைத்துக் கொள்ளும் நாட்டமும், அதைப் பெருக்கும் நாட்டமும் மனிதர்களிடத்தில் இருப்பது மிக அடிப்படையான அரசியல் உண்மைகளில் ஒன்றாகும்.

அவர்களுக்கே விட்டுவிட்டால், அரசும் அதன் மாற்றாட்களும் (agents) தங்களது அதிகாரத்தை அளவிலும் தன்மையிலும் பெருக்கி, தனியார் சுதந்தரத்தையும் துவக்க முயற்சியையும் மிகவும் குறைத்துவிடக்கூடும். 'இந்த வழி மிகவும் சுலபமானதும், திறமை மிக்கதும் ஆகும்' என்று அரசு வாதாடுகிறது. 'எங்களுக்குக் காலியான செக்கு (blank cheque) ஒன்றைக் கொடுத்து, என்னென்ன அற்புதங்களை உங்களுக்காகச் செய்யப்போகிறோம் என்று பாருங்கள்' என்று கூறுகிறார்கள். எனவே லிங்கன் (Lincoln) சொன்ன புகழ் மிக்க சொற்றொடராகிய 'சுதந்தரத்தின் விலை என்றென்றும் விழிப்போடிருப்பதுதான்' என்பதை நினைவில் கொள்வோம்.

எவர் அதிகாரத்தைப் பிரயோகித்தாலும், அதை உபயோகிப்பது எவ்வளவு நியாயமானதாக இருந்தாலும், அதிகாரத்திற்கு நோய்கள்

[1] 'பரந்த அதிகாரங்களைப் பெற்றிருக்கும் உலகத்தின் பெருந்தலைவர்கள் தங்களுக்குக் கிடைத்திருக்கும் அதிகாரத்தைத் தாங்களே குறைத்துக் கொள்வார்கள் என்றும் அல்லது தங்களது புகழைத் தாங்களே மறைத்துக் கொள்வார்கள் என்றும் கற்பனைகூடச் செய்யமுடியாது. ஆகவே, தங்கள் பாரங்களை உணர்ந்தவர்களாயும், இவ்வகைப் பாரங்களிலிருந்து விடுதலைபெற விழைபவர்களாயும் இருக்கும் மக்கள் முன்னணி வன்முறையாக, இவ் வதிகாரத்தை மாற்றினாலொழிய வேறு வழியில் முடியாது.'—ஜான் வார்டு (Johnward).

உண்டு. மெரியம் (Merriam) சொல்வதுபோல மனநோய் (Morbidity) ஒன்றுண்டு. அதிகாரத்தை மிதமாகவும், அறிவுக்கொத்த படியும் உபயோகிப்பது மெத்தக் கடினம் என்பதை இவ் வியாதிகளைப் பற்றி முதலாவதாகச் சொல்லலாம்.

'அரக்கபலம் பெற்றிருத்தல் அருமையிலும் அருமை. ஆனால் அரக்கனைப்போல் அதைப் பயன்படுத்தல் கொடுமையிலும் கொடுமை.' அதிகாரம் பெற்றிருந்தால் அதை உபயோகிக்காமலிருக்க எவராலும் முடிவதில்லை. சமூகப் பணியாற்றலிலுள்ள குறைபாடு, ஒற்றுமையின்மை, வலுவற்ற அலுவலர்கள், குறைபாடான தொழில் நுட்பம், குறைபாடான சட்டம், குறைபாடான இலட்சியங்கள் ஆகியவை மெரியம் (Merriam) அவர்கள் கூறியிருக்கும் பிற வியாதிகள் ஆகும்.

இவையெல்லாம் மிக நன்றாகத் தெரிந்தவை ஆகும். ஆனால் மெரியம் (Merriam) சொல்லாதுவிட்ட இன்னொரு வியாதியையும் சேர்த்துக்கொள்ளலாம். அதிகார வேட்கையானது வலுவானவர்களிடத்தில் இருப்பதைக்காட்டிலும் பலவீனர்களிடத்தில் அதிகமாக இருக்கிறது. 'தனியாள் முனைப்பு தனித்து நிற்கவும் வாழவும் முடியவில்லை என்பதன் கருத்தே இது. எங்கே உண்மையான வலிமை இல்லாதிருக்கிறதோ, அங்கே இரண்டாந்தரமான வலிமையைப் பெறச்செய்யும் துணிகர முயற்சியே இது.' நாசப்படுத்தும் போக்குகளும் அதிகார வேட்கையின் ஓர் உருவமே. இதுவும் அதே கருவூலத்திலிருந்து தோன்றியதே என்று ஃபிராம் (Fromm) தமது 'Fear of Freedom' என்ற நூலில் கூறுகிறார்: 'தனியாள் தன் வலிமையின்மை, ஒதுக்கப்பட்ட நிலை ஆகியவற்றைப் பொறுக்க முடியாதுபோன வேதனையினால், இது தோன்றியிருக்கிறது. எனக்கு வெளியேயுள்ள உலகத்தோடு என்னை ஒப்புநோக்கும்போது வலுவின்மையுணர்ச்சி ஏற்படுகிறது. இந்த உலகத்தை நாசப்படுத்திவிடுவதன்மூலம் இந்த உணர்ச்சியிலிருந்து நான் தப்ப முடியும். உலகம் என்னை நசுக்கிப்போடுவதிலிருந்து என்னைத் தப்புவிக்க எடுத்துக்கொள்ளும் துணிகரக் கடைசி முயற்சிதான் உலகத்தை நிர்மூலமாக்குவது ஆகும்.'

பொறுமைமிக்க பலவித நிறுவனங்களிடமிருந்தும், அவற்றின் பணியில் திருப்தியடையாதவர்களிடமிருந்தும், அனவரதமும் அரசின் அதிகாரத்திற்கு எதிர்ப்பு இருந்துகொண்டே இருக்கிறது. இவர்கள் தங்களை ஓர் ஒழுங்கான அமைப்பிற்குள் ஏற்படுத்திக் கொள்ளாமல் வீணாக முணுமுணுக்கிறார்கள். அல்லது நல்ல எதிர்க்கட்சி ஒன்று உருவாகக்கூடும். எதிர்க்கும் இந்தச் சக்திகளைச் சமாளிப்பதில் அரசு தன் உண்மையான தகுதிகளை வெளிப்படுத்துகிறது.

## அதிகாரத்தை நிலைக்கச் செய்வது எப்படி?

உள்ளும் புறமும் உள்ள சிரமங்கள் தெரிந்த பின்னும் அதிகாரத்தை நிலைநிறுத்துவது சுலபமான வேலையன்று. எதிர்ப்பதைக் காட்டிலும் கீழ்ப்படிவதையும் 'இல்லை' என்பதைக் காட்டிலும் 'ஆம்' என்று சொல்வதையும் தன்மையாகக் கொண்ட மனிதனின் உள்ளப்பாங்கு, ஒருவேளை இதற்குரிய அருமையான ஆதரவாக இருக்கலாம். இது தவிர, வெற்றிகரமாக அதிகாரத்தைப் பெற்றிருப்பது பல காரணங்களால் ஆனது. மற்ற அதிகார நாட்டமுள்ள குழாங்களைப்பற்றி அவர்களுக்குள்ளிருக்கும் தொடர்புகள், அவர்களின் விசுவாசங்கள், அவர்களின் கருத்துக் கொள்கைகள் ஆகியவைபற்றியெல்லாம் மிக ஆழ்ந்த அறிவு பெற்றிருத்தல் வேண்டும். பொதுமக்களின் மனநிலையைப் புரிந்துகொண்டு தமக்குத் துணைபுரிகிறவர்களுக்குப் பரிசுகள் அளிப்பது, விழாக்களும் கேளிக்கைகளும் அமைப்பதன்மூலம் பெற்ற ஆதரவைப் பேணிக் காப்பது ஆகிய முறைகளை அறிந்திருக்கவேண்டும். குறிப்பிட்ட சமுதாயத்தின் விசுவாசத்தைப் பெறக்கூடிய இலட்சியங்களையும் வளர்ச்சியுறச் செய்யவேண்டியது அவசியமாகிறது. எல்லாவற்றிற்கும் மேலாக, அதிகார உபயோகத்தில் மிதமாக இருப்பது, மிக்க வெளியரங்கமான ஆடம்பரங்களை ஒதுக்குவது, எப்படி ஆதிக்கத்தைக் காட்டாமல் தலைமைவகித்து நடத்திச்செல்லத் தெரிந்திருப்பது ஆகியவையெல்லாம் அதிகாரத்தைக் காப்பாற்றிக் கொள்ளும் வகைகள் ஆகும். இந்த அடிப்படை உண்மைகளைப் புறக்கணித்ததே நன்றாக அமைக்கப்பெற்ற அரசியல் அமைப்புகளின் வீழ்ச்சிக்குக் காரணமாகும்.

முடிவாக, அரசானது தனது கட்டாயப்படுத்தும் அதிகாரத்தை எவ்வளவு குறைவாக உபயோகிக்கிறதோ, அவ்வளவுக்கு எல்லோருக்கும் நல்லதாக இருக்கும். குடிமக்களின் வழக்கமான தன்னடக்கத்தில் நம்பிக்கை வைத்துத் தன்னுடைய மதிப்பைக் கொண்டே அதன் பணியைச் செய்துமுடிப்பதுதான் மிகச் சிறந்தது. ஆதிக்கத்தைக் காட்டிலும் நீண்டகால நோக்கில் கல்வியே நல்ல விளைவுகளைத் தரும். எல்லாவித மனித எத்தனங்களையும் போலவே அதிகார உபயோகமும் அதன் கனிகளால் அறியப்படும். சமூக விருப்பங்கள் பொதுவாகத் திருப்திப்படுத்தப்பட்டால், சுதந்தரமான, ஒழுங்கான வாழ்க்கை குடிமக்களுக்குக் கிடைக்குமானால், அதிகாரம் நல்ல வழியில் உபயோகப்படுத்தப்படுகிறது என்பது வெளிப்படை.

## (iii) சமுதாயம், அரசு ஆகியவைகளின் தனிப்பட்ட நோக்கங்கள்

இந்த இடத்தில் சமுதாயத்திற்கும் அரசிற்குமுள்ள முக்கியமான தனித்தன்மையை மனத்தில் கொள்வது அவசியம். சில சமூக நடவடிக்கைகள் மற்ற சமுதாயங்களின் நடவடிக்கைகளோடு நெருங்கிய தொடர்புடையவாக இருக்கலாம்.[1] எனினும் பொதுவாக, இவைகளின் நிலப்பகுதிகள் ஒன்றாகவே இருக்கும். அவைகளின் அங்கங்களும் ஒரே மாதிரியாக இருப்பினும், அவைகள் தோற்றத்தில், நோக்கத்தில், பணியில் வேறுபட்டிருக்கின்றன. சமுதாயம் இயற்கையாலும், உள்ளுணர்வாலும் ஏற்பட்டது. அரசு விருப்பாற்றலாலும், பகுத்தறிவாலும் ஆக்கப்பட்டது. 'அரசின் அமைப்பு முழுவதும் சமூக அமைப்பாகாது. அரசு தேடும் பயன்களெல்லாம், மனிதவர்க்கம் நாடும் பயன்களாகா. அரசு தன் நோக்கங்களை நிறைவேற்றும் வழிகளில் சிலவே, சமுதாயத்திற்குள் மனிதன் விருப்ப நிறைவேற்றத்திற்காகப் பின்பற்றுபவை' என்று மக் ஐவர் (Mac Iver) கூறுகிறார்.

### சமுதாயத்தில் வாழ்க்கை

சமுதாயத்தில்தான் நாம் பிரதானமாக வாழவும் இருக்கவும் செய்கிறோம். உன்னுடைய ஊரின் முக்கிய தெருக்களில் நடந்து சென்று அங்கு நடைபெறும் வேலைகளில் அரசியல் பணியல்லாது சமூக நடவடிக்கைகள் எவை என்பதைப் பார்க்கவும். கடைகள், ஆலைகள், சங்கங்கள், திருச்சபைகள், பள்ளிகள் முதலியன, சுதந்தர மனித நடவடிக்கைகளால் இயற்கையாக உண்டானவைதான்; தனி நபர்களில் யாரோ சிலர், எப்பொழுதோ இந்தக் குறிப்பிட்ட தொழிற் சாலையை நிறுவ முடிவு செய்ததனாலோ, கடையைத் திறக்க, சில பள்ளிகளை[2] நிறுவ, பிரச்சார அல்லது தரும நோக்கிற்காக ஒரு சங்கத்தைத் துவக்க, முடிவு செய்ததன் விளைவாகவோ, அவை இருக்கின்றன. இடையிடையே நின்று பணிபுரியும் போலீஸ்காரர், நடந்து செல்லும் போர்வீரர், போக்குவரத்துக் கட்டுப்பாட்டுக் குறிகள், நகரமன்றம் ஆகியவை, சுதந்தர நடவடிக்கைகளை மேற் கொள்ளச் சில நிபந்தனைகளை விதிக்கும் மேலாண்மையைப்பற்றி நமக்கு நினைப்பூட்டுகின்றன. மிகச் சுதந்தரமான நாட்டிலுங்கூட

[1] உதாரணமாகத் திருச்சபைகள் எப்பொழுதும் வெளிநாட்டிலுள்ள சகத் திருச்சபைகளோடு தொடர்புடையனவாகவே இருக்கின்றன.

[2] சில பள்ளிகள் அரசால் உண்டாக்கப்பட்டவை.

இது நடைபெறுகிறது. போட்டியிடுவோரின் வேண்டப்படாத தலையீடுகளினின்றும், குறும்புகள் புரிவோரிடமிருந்தும் மனிதர்களைக் காத்துக்கொள்ளும் மேலாண்மை இது. ஆனால் பொருளாதாரம், கலாச்சாரம், சமயம், தொழில், ஓய்வு முதலியவற்றிற்காக ஏற்பட்டிருக்கும் கழகங்கள், அரசின் குடிமக்களாவதற்கு முன்பே சமுதாயத்தின் அங்கத்தினர்களான மனிதர்களின் சுதந்தரமான துவக்க உணர்ச்சியால் நடத்தப்பெறுபவை ஆகும்.

## அரசும், சமூகக் குழாங்களும் (State and Social Groups)

சமூக நடவடிக்கைகளுக்கும் அமைப்புகளுக்கும் அரசுக்கும் இடையேயுள்ள உறவுப் பிரச்சினையைப்பற்றிப் பின்னர் ஆராய்வோம். பலவித முடிவுகள் அளிக்கப்பெற்றனவெனினும் ஒன்றுகூட முழுவதும் திருப்தி அளிப்பதாக இல்லை. அரசும், சமுதாயமும் தனித்தன்மை பெற்றிருக்கும் காரணத்தால் இப்பிரச்சினை இருக்கிறது என்பதை இங்கு வலியுறுத்தவே நாம் விரும்புகிறோம். இவை இரண்டும் ஒன்றேயெனின் பிரச்சினை ஒன்றுமில்லை. ஆனால் கொஞ்சமாவது சுதந்தரத்தை அடிப்படையாகக்கொண்டு எழுந்த சமுதாயங்களில், நிச்சயமாக இவை இரண்டிற்கும் வேறுபாடு இருப்பதை ஒத்துக்கொள்ளவேண்டும். அப்படி ஒத்துக்கொள்ளும் போதுதான் பிரச்சினை உடனே எழுகிறது. எனவே சமுதாயத் திற்குள் ஆனால், அதனின்றும் வேறுபட்டதாக, அரசை ஒரு சக்தியாக அல்லது அமைப்பாக நாம் நோக்குதல்வேண்டும். சமுதாயம் அரசிற்கு மிக முந்தியது. நாஜி ஜெர்மனி, பொதுஉடைமை ருஷ்யா ஆகிய நாடுகளில்கூட முழுவதாகச் சமுதாயத்தின் இடத்தை அரசு கைப்பற்றிவிட்டதாகக் கூறமுடியாது. அரசியல் நடவடிக்கைகளிலிருந்து வேறுபட்டுநிற்கும் சமூக நடவடிக்கைகள், நாட்டுக்கு நாடு, காலத்துக்குக் காலம் மாறும் தன்மையுடையது. இது உண்மையில் அரசியலின் பிரதான பிரச்சினைகளில் ஒன்றாகும். மொத்தத்தில், சமுதாயத்தின் அதிகார எல்லையைக் குறைத்து அரசின் வரம்பு விரிவது வரலாற்றுப் போக்காக இருந்துவந்திருக்கிறது. வளர்ந்துகொண்டே வரும் மத்தியக் கட்டுப்பாட்டுத் தேவைதான் இதற்குக் காரணம். ஆனாலும், சமுதாயமானது தோற்றத்திலும், முக்கியத்திலும் முதன்மையானது. அரசு அதனால் ஆக்கப்பட்ட மாற்றாள் ஆகையால் அதற்குக் கீழ்ப்பட்டதாகும். அரசு மறைந்து விட்டதென்றால் குழப்பமும், அராஜகமும் இருக்கவேண்டும் என்ற அவசியம் ஒன்றுமில்லை. தானாகத் தோன்றும் சமூக நடவடிக்கை, புதிதாக அரசு என்று தோன்றுகிறவரை நாட்டில் தோன்றும் அவசர நெருக்கடிகளைச் சமாளித்துக்கொள்ளும். (அரசின்வழி நடத்தலையே எல்லாக் காரியங்களுக்கும் பல நூற்றாண்டுகளாக நம்பியிருந்த

ஜெர்மனி போன்ற நாடுகளைவிட, சமூகக் கூறு வலிமையுள்ளதாக இருந்த இங்கிலாந்து, அமெரிக்கா போன்ற சமுதாயங்களுக்கு இது மிகவும் பொருத்தமாக இருக்கும்.)

புதிய பிரச்சினைகளை மேற்கொள்ளச் சமூக மாற்றுட்கள் திறன் பெற்றிருப்பது கூட்டு ஆரோக்கியத்தின் ஓர் அறிகுறியாகும். நமக்குத் தெரிந்தபடி ஒப்பிட்டு நோக்கும்போது அரசு சமீபகாலத்தில் தான் தோன்றியது என்பதை நாம் நினைவில் கொள்வது நல்லது. 50 ஆயிரம் ஆண்டுகள் மனிதன் இந்த நிலவுலகில் வாழ்ந்ததாகக் கொண்டால் (இது மிகவும் குறைந்தபட்ச அளவு) இதில் ஐந்தில் நான்கு பங்குக் காலம் அரசு இல்லாமல் வாழ்ந்த காலந்தான். ஏதாவது வரலாற்று அடையாளங்களை விட்டுவிட்டுச் செல்லக்கூடிய அளவுக்கு அமைப்புக்குட்பட்டிருந்த பழைய அரசுகள் 10 ஆயிரம் ஆண்டுக்கு முற்பட்டவை ஒன்றுமில்லை. அரசற்ற சமுதாயங்கள்தான் வழக்கமாக இருந்தன. இன்னும் இதன் அடிச்சுவடுகளை அமெரிக்காவிலுள்ள இந்தியக் குடிகளிடத்தும், சில தென்கடல் தீவுகளின் குடிகளிடத்தும் காணலாம். இச் சமுதாயங்கள் மத்திய ஆணை ஏதுமின்றி வாழ்ந்து வந்தன. பொதுவான விதிகளைப்பற்றி அவர்கள் அறிந்திருக்கவில்லை. 'சட்டம்' என்பது பரம்பரையாக நடந்துவந்த நடத்தைமுறையாகத்தானிருந்தது. இன்னலுக்குள்ளான எந்தத் தனி நபரும் தன்னுடைய வழியிலேயே அதற்குத் தீர்வு கண்டுகொண்டான். சில சமுதாயங்களில் மந்திரவாதிகள் அல்லது மூத்தோர் குழுக்கள் (Committee of Elders) ஏதோ ஒரு வகையான கட்டுப்பாட்டைப் பிரயோகித்தன. ஆனால், மொத்தத்தில் அந்த மக்கள் லார்டு (Lord) சொல்வதுபோல 'அரசியல் இல்லாமலே அமைதியாகவும், சௌகரியமாகவும் வாழ்ந்தார்கள். அரசியல் அமைப்பு எப்பொழுதாவது வளரும் என்பதற்கு அவர்கள் வாழ்க்கையில் யாதொரு வித அறிகுறியுமிருக்கவில்லை.'

## அரசின் நோக்கம்

அரசின் பணிகள் எவ்வாறு இருந்தாலும், அவைகள் சில திட்ட வட்டமான கொள்கைகளின்படியேதான் நிறைவேற்றப்பெற முடியும் என்பது தெளிவு. இந்தக் கொள்கைகள் சமுதாயத்தின் எல்லா அங்கத்தினர்களின் வாழ்க்கையையும், அல்லது பொது நோக்கத்தையும் உள்ளடக்கியதாக இருக்கவேண்டும். ஒவ்வோர் அரசும் அப்படிப்பட்டதொரு நோக்கமுடையதாக இருக்க வேண்டும். தங்கள் நோக்கங்களில் ஒரே விதமாக இருந்த இரு நாடுகள் உலகில் இருந்ததேயில்லை. அரசின் சரியான நோக்கங்கள் எவை என்ற பிரச்சினை நம்மை அரசியல் நூலின் அடிப்படைக்கே அழைத்துச்

செல்கிறது. சுதந்தர எல்லைக்கும் அதிகார எல்லைக்குமுள்ள விகிதாச்சாரப் பிரச்சினைதான் இது. பரவலான பொதுச்சிக்கல்களை எழுப்பி அவற்றை மாத்திரம் இங்கு ஆராய்ந்து விட்டு, முழுமையாக ஆராய்வதைப் பின்னர் வைத்துக்கொள்வோம்.

நலம் என்றால் என்னவென்று விளக்காதபடி, அங்கத்தினர்களின் நலத்தைப் பேணுவதற்காக அரசு இருக்கிறது என்று சொன்னால் அது பொருளற்றதாக இருக்கும். நிச்சயமாக எந்த அரசும் தன் மக்களைச் சந்தோஷமற்று இருக்கச்செய்வதற்கு இருக்க முடியாது; அரசானது உள்நாட்டில் அமைதி நிலவச் செய்யவும், சுபிட்சத்தைப் பெருக்கவும், வெளி நாட்டாரின் ஆக்கிரமிப்பிலிருந்து மக்களைப் பாதுகாக்கவும் வேண்டுமென்று சொல்வதைப் பெரும்பான்மையான அறிஞர்கள் ஒத்துக்கொள்வார்கள். ஆனால் ' உள் நாட்டு அமைதி', சுபிட்சம்', 'பாதுகாப்பு' ஆகிய ஒவ்வொரு சொல்லும் பலவிதமாகப் பொருள் கொள்ளக்கூடியவை ஆகும்.

## வரலாற்றில் அரசின் நோக்கங்கள்

எது அரசின் சரியான நோக்கம் என்பதைப்பற்றிப் பல வேறுபாடான கருத்துக்கள் இருந்திருக்கின்றன. சிலர், அரசுகளின் முக்கிய நோக்கமாக அதிகாரத்தை வைத்து, அங்கத்தினர்களின் தனிநபர் சுதந்தரத்தையும், கலாச்சார வளர்ச்சியையும் கீழ்ப்படுத்தியிருக்கிறார்கள். ஆதிகாலத்திய ஸ்பார்ட்டா (Sparta), நவீன காலத்திய பிரஷியா (Prussia), நெப்போலியன் காலத்திய ஃபிரான்சு (Napoleonic France), பாசிஸ இத்தாலி (Fascist Italy) ஆகிய நாடுகள் இதற்கு உதாரணங்கள் ஆகும். அதிகாரம் இராணுவத்தைச் சார்ந்ததாக இருக்க வேண்டும் என்று அவசியமில்லை. ஒரு நாட்டை வெளிநாட்டிலிருந்து வரும் இறக்குமதிகளை நம்பி யிருப்பதிலிருந்து விடுவிக்கும் பொருளாதாரச் சுயதேவைப் பூர்த்தியும் இக் கொள்கையின் இன்னொரு கூறேயாகும். ஏழாம் ஹென்றி (Henry VII) இங்கிலாந்தை அயல் சரக்குகளுக்கு வரி விதிக்கும் நாடாக மாற்றிய போது, 'இந்த நாட்டின் ஆதிக்கொள்கையை, செல்வத்தைப் பற்றிய நினைப்பிலிருந்து அதிகாரத்தைப் பற்றிய கவனத்திற்கு மாற்றினார்' என்று பேகன் பிரபு (Lord Bacon) கூறுகிறார். பின்னால் சொல்லப்பெற்ற அதிகாரத்தைப்பற்றிய கவனத்தை எந்த அரசும் அசட்டை பண்ண முடியாது. தன்னுடையதைக் காப்பாற்றிக் கொள்ள முடியாவிட்டால் அதன் வாழ்க்கை மிகவும் இன்னலுக்குள்ளானதாக இருக்கும். அப்படி இல்லாவிட்டால் சுவிட்சர்லாந்து, பெல்ஜியம், போர்ச்சுகல் போன்ற நாடுகளைப்போல நல்ல வலிமையுள்ள நண்பர்களைப் பெற்றிருக்க வேண்டும். சுய பாதுகாப்பிற்காக

மட்டும் ஏவப்படும் அதிகாரத்திற்கும் மிருகத்தனத்திற்காகவே அல்லது கீழ்த்தரமல்லாத ஒரு நோக்கத்துக்காகவே பிறர்மீது ஏவப்படும் அதிகாரத்துக்கும் வேறுபாடு உண்டு.

சில நாடுகள் தங்களை ஒரு குறிப்பிட்ட நாகரிகத்தின் பிரதிநிதிகள் என்று கூறிக்கொண்டு, உலகத்தில் தங்களுக்கென்று ஒரு கடமை கொடுக்கப்பெற்றிருப்பதாகக் கூறிக்கொண்டதுண்டு. ஆதிகாலத்திய இஸ்ரவேலர், புரட்சிப் ஃபிரான்சு, பொது உடைமை ருஷ்யா முதலிய நாடுகள் இதற்கு உதாரணங்களாகும். துரதிருஷ்டவசமாக, இந்த வகைக் கலாச்சார நோக்கம் பல தடவைகளில் தன் நாட்டின் அதிகாரத்தைப் பரப்புவதற்காகப் பலாத்காரத்தைப் பயன்படுத்துவதில் முடிகின்றன. 'தெய்வீகக் கட்டளை' (vocational) அல்லது 'இடர் தீர்க்கும் அவதார' (messiahnic) நாடுகள் தங்களது பிரதம சமயத்தொண்டர்களாக, இராணுவ வீரரைப் பலதடவைகளில் உபயோகித்திருக்கின்றன.

இதற்கு மாருக, ஆதி கிரேக்கர்கள் அரசின் அங்கத்தினர்களின் உலகத்துக்கடுத்த காரியங்களின் வளர்ச்சியைக்காட்டிலும், அவர்களது நெறி வாழ்க்கைக்கும், அறிவுக்கும் உற்ற துணைவனுக அரசைக் கருதினுர்கள். பூரண மனிதனை உண்டாக்குவது அரசின் பணி என்று கருதினுர்கள். நல்ல குடிமகன் அவனுக்கு விதிக்கப்பட்டிருக்கும் ஒரே வகை வாழ்க்கை முறைக்குள்ளாகத் தன்னை அமைத்துக்கொள்ள வேண்டும் என்ற நம்பிக்கையானது, அந்த உயர் குறிக்கோளைக் கெடுத்துவிட்டது. இதனுல்தான், பிளேட்டோவின் குறிக்கோளின்படி, நல்ல அல்லது நியாயமான மனிதனுக்கும் பிற்காலத்திய சர்வாதிகாரக் கருத்துக்களின்படி ஏற்பட்ட ஒரே சீராக்கப்பட்ட குடிமகனுக்கும் வேறுபாடு காண்பது எளிய காரியமன்று. பிளேட்டோவின் பெயரை நவீனகாலச் சர்வாதிகாரிகளின் பெயரோடு இணைப்பது நிச்சயமாக நியாயமான காரியமன்று. ஏனெனில் சர்வாதிகாரிகளின் நோக்கங்களும் முறைகளும், பிளேட்டோவின் மனத்தில் அருவருப்பு மிக்க அச்சத்தை உண்டாக்கியிருக்கும். என்ருலும் மனிதன் அரசு ஒன்றிலேதான் மனிதனுக இருக்கமுடியும் என்ற பொருள் பொதிந்து காணப்படும் அவன் தத்துவத்திற்கும், பணி, நோக்கம் முதலியனபற்றி அக்கறையில்லாமல் அரசே ஒரு முடிவு என்று தீர்மானிப்பதற்கும் உள்ள இடைவெளி மிகக் குறைவுதான்.

## அரசின் நோக்கங்களைப்பற்றிய மாறும் கருத்துக்கள்

'பெரிய சமுதாயத்தில் அரசுக்கு ஒரு வரையறை செய்யப்பெற்ற பணி ஒன்றும் கிடையாது. ஆனுல் அதுவே பிரதான சமுதாய

மாகவும், முழு உலகத்தின் பாதுகாப்பாகவும் இருக்கிறது' என்று ஆங்கிலத் தத்துவஞானி பொஸான்கே (Bosanquet) கூறுகிறார். 'நெறிமுறையான உறவுகள், ஒழுங்கு முறையான வாழ்க்கை முறையை ஏற்படுத்துகிறது. ஆனால் அப்படிப்பட்ட வாழ்க்கை அரசுக்குள் மாத்திரமே இருக்கமுடியும். அரசுக்கும் மற்றச் சமுதாயங்களுக்கு மிடையேயுள்ள உறவுகளில் இஃது இருக்க முடியாது.' முக்கால் நூற்றாண்டிற்கு முன்பாக எழுதிய ஜெர்மானிய ஞானி பிக்டே (Fichte) எழுதியதை ஆங்கில ஞானி எதிரொலிப்ப தாகத்தான் இருக்கிறது. 'இனத்தின் வாழ்வுக்காக எல்லாத் தனியாரின் சக்திகளையும் இயக்குவதும், அவர்களை அதற்குள் தூண்டி நடத்துவதும் அரசின் நோக்கமாகும். இது ஒரு கட்டாயப்படுத்தும் அமைப்பு.' இவ்வகைச் சிந்தனையாளருக்கும், அவர்களைப் பின் பற்றுகிறவர்களுக்கும், அரசிற்கு எவையெல்லாம் உதவி புரிகின்றனவோ, அவையெல்லாம் நல்லனவென்றும் எவையெல்லாம் இடையூறு செய்கின்றனவோ, அவையெல்லாம் கெட்டவையென்றும் ஆயின. அவை இருப்பதே அதன் ஒரே பணியும் நியாயமும் ஆகும். அப்படிப்பட்ட அரசு அதன் எல்லைக்குள் அபிப்பிராயங்களைத் தணிக்கை செய்தல், தனிநபர் வாழ்க்கைமுறைகளை ஒழுங்குபடுத்துதல் போன்றவைகள் உட்பட எல்லாச் சக்திகளையும் சர்வாதீன உரிமை பெற்றதாயிருக்கிறது. எனவே அப்படிப்பட்ட அரசியல் 'எவை யெல்லாம் கட்டாயமாக்கப்படவில்லையோ, அவையெல்லாம் தடை செய்யப்பட்டவை. 'எவையெல்லாம் தடைசெய்யப்படாதவையோ, அவை கட்டாயமாக்கப்பட்டவை' என்று கேலியாகவும் ஆனால் பொருத்தமாகவும் கூறப்படுகிறது.

இன்னொரு கோடியில் பொதுவாகப் புரிந்துகொள்ளப்பெற்ற பொதுமக்கள் நலனை உண்டாக்கும் பயன்பாட்டை வைத்துத்தான் அரசின் செயலைச் சோதித்தறியமுடியும் என்று கருதுபவர்களும் இருக்கிறார்கள். இந்தப் 'பயன்முதற் கொள்கையினர்' (Utilitarians) 170 ஆண்டுகளுக்கு முன் பெந்தாமில் (Bentham) தொடங்கி, இன்றுள்ள கோல் (Cole), லாஸ்கி (Laski) வரை அரசை நம்புவதில்லை. அதற்குச் சாத்தியமான கொடுங்கோன்மையினால், இவர்கள் குடிமக்களின் வாழ்க்கையில் பெரும் பகுதியை அதன் பிடிகளுக்குச் சிக்கவிடாது வைத்திருக்க விரும்புகிறார்கள். பொருளாதார வாழ்க்கையைக் கட்டுப்படுத்த அரசிற்கு உரிமையோ திறமையோ உண்டென்பதில் பெந்தாமுக்கு நம்பிக்கை இருந்ததில்லை. ஆனால், 'புதுப் பயன்முதற் கொள்கையினர்' (Neo - Utilitarians) பெரும் பாலும் சோஷியலிஸ்ட்களே. அவர்கள் பழைய தலையிடாத் தத்துவத்தின் (Laissez - Faire) தலையிடாமையானது இலாபத்திற்காகவே வாழும் வேலையளிப்போர், உற்பத்தியாளர் ஆகியோரின் கருணையில்

வாழும்படித் தனியாளான தொழிலாளியையும், நுகர்வோனை யும் விட்டுவிடுகிறது என்று கருதுகிறார்கள். வேறு சொற்களில் சொல்லப்போனால், கொள்கையில் ஒரு கட்டாயப்படுத்தும் மாற்றாளாக நம்பாமல், இயற்கையான சமூக ஏற்றத் தாழ்வுகளைச் சரிப்படுத்தும் உபகரணமாக அரசினர் விளங்க விரும்புகிறார்கள். கடைசியாக வருகிற பொதுஉடைமை வாதம் (Communism), தனியார் கட்டுப்பாட்டிற்குள் இன்று நிலவும் பொருளாதர உற்பத்தி முறைகளிலிருக்கும் நிச்சயமற்ற நிலைகளிலிருந்தும், இன்னல்களி லிருந்தும், தொழிலாளர்களை விடுதலை செய்யும் ஒரே கோணத்தி லிருந்து இந்தப் பிரச்சினையை அணுகுகிறது. மொத்த உற்பத்தி, பகிர்வு ஆகியவைகளை அரசின் கீழ்க்கொண்டுவர அது முயல் கிறது. இதன்படி அரசு தொழிலாளருக்கு வேலையளிக்கும் ஒரே நிறுவனமாகவும், ஒரே பெரிய அளவு விற்பனையாளராகவும் ஆகிச் சமுதாயத்தின் பொருளாதார வாழ்க்கையையும் சமுதாயத்தின் முழுக் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவரும் பிரதான நோக்கத்தையுடையதா யிருக்கிறது. சோவியத் ருஷ்யா ஒரு புதுவித அரசு என்பதில் எவ்வித சந்தேகமுமில்லை. அதன் கொள்கைகளின் விளைவுகளைப் பொறுத்தமட்டில் காலம்தான் முடிவு சொல்லமுடியும். முடிவாக, ஐக்கிய நாடுகள் சபையின் (United Nations Commission for the drawing up of an International Bill of Human Rights) பன்னாட்டு மனித உரிமைகள் மசோதா தயாரிக்கும் கமிஷன் முன்னிலையில் அமெரிக்க ஐக்கிய நாட்டின் பிரதிநிதிகள் சமர்ப்பித்த ஓர் அறிக்கையி லிருந்து மேற்கோளாக ஒன்று காட்டலாம். 'மக்கள் தங்களது நலத்தை முன்னேற்றுவதற்காகவும் ஒன்றுக்கொன்றான தங்களது உரிமைகளைக் காப்பதற்காகவும் ஆக்கப்பட்டது அரசு ஆகும். உடல், பொருளாதார, ஆத்மீக, கலாச்சார நலன்களை விருத்திசெய்து கொள்ளவும், நாகரிகத்தின் நன்மைகளில் பங்கு பெறவும் ஒவ்வொரு வருக்கும் நியாயமான, சமமான சந்தர்ப்பத்திற்கு உரிமையுண்டு. தன்னுடைய வளங்களை உயர்ந்தபட்சம் உபயோகப்படுத்தித் தனி யாரின் சுதந்தரத்திலும் தேவையான அளவு கவனம் செலுத்திச் சட்டங்கள் போடுவதாலோ, அல்லது வேறு பல பொருத்தமான முறைகளாலோ இந்த நோக்கங்களை நிறைவேற்றுவது அரசின் கடமையாகும். நம்முடைய அபிப்பிராயத்தில் இந்த விளக்கத்தை இன்னும் விளக்கமாக்க முடியாது. அரசு 'மக்களால் ஆக்கப் பெற்றது' என்று வலியுறுத்திச் சொல்வதன்மூலம், அரசை அதன் தோற்றத்திலும், நோக்கத்திலும், சமுதாயத்திற்குக் கீழ்ப்பட்டதாக்கி விடுகிறது.

அதனோடு அரசிற்கு எவ்விதத் தூய்மையான அந்தஸ்தும் இல்லையென்றும் வலியுறுத்துகிறது. இதன்மூலம் சட்டங்களின் கண்காணிப்புக்கும், நெறிமுறையின் கட்டுப்பாட்டுக்கும் அரசு

உட்பட்டதாக இருக்க நேரிடுகிறது. சட்டத்திற்கும், நெறி முறைக்கும் மேம்பட்ட தூய நிலை அரசுக்குக் கிடையாது என்பதை விளக்கி விடுகிறது (ஹாப்ஹவுஸ்-Hobhouse).

## (iv) அரசும், நீதியும், நெறியும்

### அரசு நடுநிலைமை வகிக்கக் கூடுமா?

சச்சரவிடும் கட்சிகளுக்கிடையே அரசு 'மத்தியஸ்தம்' செய்து வைக்கக்கூடும் என்று அடிக்கடி பேசப்படுகிறது. பல வழக்குகளில் அரசுக்கோ அல்லது அதன் மாற்றுட்களுக்கோ எந்தவிதமான அக்கறையு மில்லாமலிருக்கும்போது, ஒத்துக்கொள்ளப்பெற்ற கொள்கைகளின்படி, அரசின் அதிகாரமானது மிகவும் நடுநிலைமை யான முறையில் பயன்படுத்தப் பெறக்கூடும். ஆனால் சமுதாயத்தின் சிந்தனையிலும், வாழ்க்கையிலும் முக்கிய இடம் பெற்றிருப்பவைகளைக் குறித்துப் பிரச்சினை எழுமானல் அது வேறு விஷயம் ஆகும். பொதுஉடைமை நாட்டில் முதலாளித்துவ வாதம், முதலாளித்துவ நாட்டில் நேரடியாகச் சொத்துக்களைத் தாக்குதல், தூய்மையான நம்பிக்கைகளையும், மதிப்பிற்குரிய பழங்காலப் பழக்கவழக்கங்களையும் குறை கூறுவது ஆகியவை எதிலும் பட்டுக்கொள்ளாமல் நியாயம் தீர்க்கமுடியாத காரியங்கள் ஆகும். ஆதியில் எழுந்த தொழிற் சங்கங்களை அங்கீகாரம் செய்வதற்கு ஏற்பட்ட போராட்டங்களிலும், நசுக்கப்பட்ட தேசியச் சிறுபான்மையினர் வாழ்வதற்குச் செய்த முயற்சிகளிலும், மக்களாட்சிக்குரிய வாக்குரிமைப் போராட்டத்திலும், பாரபட்சமற்ற நடுவராக அரசு இருக்கமுடியவில்லை. இவைகளில் அரசு நீதிபதியாகவும், அதே சமயம் வழக்குரைக்கும் ஒரு கட்சி யாகவும் இருந்தது. அரசு அமைக்கப்பட்டிருக்கும் கொள்கைகளைத் தீவிரமாக எதிர்த்தால் இன்றைக்கும் இது முன்போலவே ஆகும் என்பது உண்மை.

### அரசு நியாயமுள்ளதாகத் தோன்றவேண்டும்

அரசியல் நூலின் பிரச்சினைகளில் ஒன்று, அரசானது செய்து முடித்த செயல்களை வைத்து அதன் திறமையை மதிப்பிடவேண்டும். அதோடு அவைகளின் நெறிமுறை வழியையும், பண்பையும் சேர்த்து மதிப்பீடு செய்யவேண்டும் என்று முன்னுரையிலேயே நாம் கூறினோம். வேறு சொற்களில் சொன்னல், அரசு சில நீதித் தரத்திற்கு ஒத்தவான செயல்களைப் புரியவேண்டும். கண்ணுக்குப் புலனாகாத எக் காலத்திற்கும் அல்லது எந் நாட்டிற்கும் பொருந்து வதான நீதிக்கொள்கைகள் இருப்பதைப்பற்றிப் பின்னர் சட்டத்தைக்

குறித்து எழுதும்போது ஆராய்வோம். நீண்ட காலப் போக்கில் அரசின் செயலானது அதன் பெரும்பான்மை அங்கத்தினர்களுக்கு நியாயமானதாகப்படவேண்டும் என்று சொல்வது இங்குப் போதுமானது. ஆண்களையும், பெண்களையும் அவர்கள் வதியும் இந்த உலகமானது, அவர்களின் நீதிக் கருத்துக்களுக்கு ஓரளவு ஒத்ததாக இயங்குகிறது என்று நினைக்கவைக்கும் கலையே, அரசாங்கச் செயலாற்றல் என்று, ஒரு வழியில் விளக்கம் கூறலாம்.'[1] மக்கள் தாங்கள் அநியாயமானதென்று கருதுகின்றவற்றை நீண்ட காலம் பொறுத்துக்கொள்ளமாட்டார்கள். எவ்வளவு ஏமாற்றுத்தன்மையிருந்தாலும், அவர்களுக்கு அது நியாயமானதென்று தோன்றும் படியாகச் செய்யவேண்டும். அநீதியைச் சரியானதென்று நிருபிக்கச் சொல்லப்பட்ட பல கொள்கைகள் வரலாற்றில் நிறைந்திருக்கின்றன. ஆனால் இவ்வகையான கொள்கைகள் இருப்பதே எவ்வளவு மோசமானதாக இருந்தாலும், மனித உள்ளத்திலே நம்முடைய நடவடிக்கை நெறிமுறைக்கு ஒத்ததாக இருக்கவேண்டும் என்ற விருப்பம் இருப்பதைக் காட்டுகிறது. உண்மையில் நீதியை நிலை நிறுத்துவது அரசின் முக்கிய நோக்கமென்பது உலகமெங்கும் ஒப்புக் கொள்ளப்பட்ட தொன்றாகும். இதன் நோக்கங்களில் அல்லாமல் முறைகளிலேதான், அபிப்பிராய பேதங்கள் இருக்கின்றன. கிட்டத் தட்ட ஒவ்வொருவரும் கொள்கையளவில், அரசு நல்லது செய்வதை ஊக்குவிக்கவேண்டும் என்றும், கெட்டது செய்வதைத் தடை செய்ய வேண்டு மென்றும் ஒப்புக்கொள்கிறார்கள். ஆனால் அதன் அங்கத் தினர்களின் நெறிமுறைக்கு மேம்பட்டதாக அரசு இருக்கமுடியாது என்பதும் தெளிவு. வார்டு (Ward) சொல்வது போல, 'சமுதாயம் அதை எவ்வளவு நல்லதாக இருக்க விடுகிறதோ' அவ்வளவு நல்லதாகத்தான் அரசு இருக்கமுடியும். அது நிறைவேற்றும் சீரமைப்புக்கள், அது வளர்க்கும் நெறிசார்ந்த ஆத்மீக நலன்கள் ஆகியவை அதன் அங்கத்தினர்கள் எது தேவையான சீரமைப்பு, அல்லது எது விரும்பப்பெற்ற நல்வாழ்வு என்று நினைக்கிறார்களோ, அதைப் பிரதி பலிப்பதாகத்தான் இருக்கும்.

## அரசும், நன்னெறியும்

இதிலிருந்து அரசு எந்த வகையிலும் நன்னெறியையோ அல்லது அதன் அளவு முறைகளையோ ஆக்குவதில்லை என்பது பெறப்படுகிறது. அரசு செய்கிறது அல்லது அங்கீகரிக்கிறது என்ற காரணத்தால் ஒரு செயலும் நன்னெறியாக மாறுவதில்லை. அதைப் போலவே, அதிகாரபூர்வமாகத் தடுக்கப்பெற்றோ அல்லது தடை

[1] J. L. and B. Hammond, 'The Age of Chartists.'

செய்யப்பெற்றே போன செயல்கள் எல்லாம் தீய நெறி என்றும் பொருளன்று. அரசின் நன்னெறி அதன் அங்கத்தினர்களால் ஆக்கப்படுவது ஆகும். எனவே, அது எந்தவித நன்னெறியும் அறியாத மக்கள் அளவுக்குக் கீழிறங்காமலும், தலைசிறந்த மனிதர்களின் அளவுக்கு உயர்ந்து இல்லாமலும், இடைநிலையில் அதன் நன்னெறி காணக்கிடைக்கும். தலைசிறந்த மனிதர்கள் தங்களின் சொந்த அளவுகளின்படி அரசின் நீதியும் இருக்கவேண்டுமென்று கேட்பது பயனற்றதாகும். உதாரணமாக, விவாகரத்து முறையை நீக்கிவிட வேண்டுமென்றோ, அல்லது மதுவிலக்கு வேண்டுமென்றோ கேட்பது பயனற்றதாகும். பொதுமக்கள் ஒப்புக்கொள்ளாத எந்த விஷயமும் நீண்ட காலத்திற்கு அமல் செய்யப்பெற முடியாது என்பதை அநுபவம் காட்டுகிறது. இது போலவே, பொதுமக்கள் அபிப்பிராயம் எவற்றைக் கெடுதலானவை என்று அழைக்கிறதோ, அவற்றிலிருந்து சாதாரண மக்களுக்குத் தடைவிதித்துக் காத்துக் கொள்கிறது. அப்படிப்பட்ட தடைகளை நீக்கிவிடவேண்டும் என்று தீவிரவாதிகள் கேட்பதும் வீணான காரியம்தான். உதாரணமாக, அபாயம் விளைவிக்கும் மருந்துகளைக் கட்டுப்பாடு செய்தல், பொது மேடை நிகழ்ச்சிகளில் குறைந்தபட்ச அளவு ஒழுக்க விதிகளுக்குட் பட்டதாக இருக்கச்செய்வது முதலியவைகளைச் சொல்லலாம். மற்ற இடங்களிற் போலவே இங்கேயும் நன்னெறிக்கும், குறுகிய மனப் பான்மை கொண்ட பாசாங்குகளுக்கும், வேறுபாடு காண்பது கடினமான காரியம் ஆகும். எனவே, தவறுகளும் சகஜம் பன்னிரண்டு சாதாரண குடிமக்கள் கொண்ட 'ஜூரியானது' (Juries) ஒரு கொலைக்குற்ற விசாரணையில் மனிதனின் குற்றத்தைத் தீர்மானிக்க முடியுமானால், நன்னெறித் துறையிலும் சமுதாயம் எதைப் பொறுத் துக்கொள்ளும் என்பதையும் தீர்மானிக்கக் கூடும் என்று தோன்று கிறது. ஒருவர் அரசிடம் கேட்கக் கூடியதெல்லாம், வார்டு (Ward) கூறுகிறபடி, 'சரியானவையென்று ஒப்புக்கொள்ளப்பெற்ற வழி களில் மனிதர்களை நடக்கச் செய்யவிடுங்கள்' என்பதுதான்.

## அரசு ஓர் 'உயிர்ப்பொருளா'?

இன்னொரு பதிலளிக்கப் பெறவேண்டிய கேள்வி அரசைப் பிறப்பு, வாழ்க்கை, வளர்ச்சி, நோய்வாய்ப்படும் தன்மை, சாவு ஆகியவை களுக்குட்பட்ட உயிர்ப்பொருளாகவும் அங்கரிதியான 'உயிர்ப் பொருளாகவும்' (organism) பேசமுடியுமா? அரசை உருவகப் படுத்துவது மிகவும் எளிதாகவும், கவர்ச்சியாகவும் இருப்பதைப் போன்றே, இதுவும் மிகவும் கவர்ச்சியாகவும் இருப்பதால் அப்படிச் செய்ய நாம் தூண்டப்பெறுகிறோம். முதலில், உயிர்ப்பொருளின் தனித்தன்மையான அடையாளங்கள் என்னென்ன என்று கேட்டுக்

சொள்வோம். பேராசிரியர் ஹாக்கிங், 'ஆறு அடையாளங்களுள்ளன' என்று கூறுகிறார் :

1. அது பொருளையும் சக்தியையும் மாற்றிக் கொண்டிருக்கும் இனம் புரிந்துகொள்ளக்கூடிய, அங்கச் சேர்க்கைகளால் ஆனது.

2. அதன் முழுமைக்கும் ஒரு பண்புண்டு. அதை ஒவ்வோர் அங்கமும் வெளிப்படுத்துகிறது.

3. அது முழுமையாக வாழ்கிறது. ஒவ்வோர் அங்கமும் என்ன செய்கிறதோ அதனால் அது வாழத் துணை புரிகின்றது.

4. அதன் பணி அதன் அமைப்பால் அல்லாமல் நோக்கத்தால் விளக்கப்பெறுகிறது.

5. முடிவில் அது செயலாற்றலைப் பாதுகாப்பதில் தோல்வி யடைகிறது. ஆகவே அது திட்டமான வாழ்க்கை வளர்ச்சி வீழ்ச்சிக் கட்டங்களை (life cycle) உடையது.

6. அதன் பிள்ளைகளின் வாழ்க்கையில் அது மீண்டும் வாழ்கிறது.

இது இப்படியானால், ஹாக்கிங்கோடு சேர்ந்து 'கீழ்த்தரமான பிராணிகளைவிட அரசில் அங்கரீதியான பண்பின் அடையாளங்கள் அதிகமாகக் காணப்படுகின்றன' என்று நாமும் கூறலாம். முக்கியமாக 'அதன் அங்கங்களின் சுதந்தரத் தன்மை, வேலைப் பங்கீடு, முழுமையில் செரிமானம் செய்துகொள்ளப் பெறும் அங்கங்கள்' ஆகியவை, அரசில் சிறப்பாகக் காணப்பெறுகின்றன. ஆனால் 'அது முழுவதாக உருமலர்ச்சியுற்ற ஓர் உயிர்ப்பொருள் அன்று'. ஓர் அரசின் ஒவ்வோர் அங்கமும் அதாவது குடிமகனும் அரசின் அங்கத்தினன் என்ற முறையில் அரசின் பண்பைப் பெற்றிருக்கிறான் எனக் கூறுவது உண்மையாகாது. மேலும் அதன் எல்லாப் பாகங்களும் பொருளையும் சக்தியையும் மாற்றுகின்றன என்றும் சொல்லமுடியாது. மேலும், அரசுகளுக்குத் திட்ட வட்டமான வாழ்க்கை வளர்ச்சி வீழ்ச்சிக் கட்டங்களும் இருப்பதற்கு நிரூபணம் ஒன்றுமில்லை.

அப்படியானால் அங்கரீதி ஒப்புவமை நமது ஆராய்ச்சிக்கு அதிகம் உதவிஅளிக்கிறதில்லை. அதை ஆக்கும் தனியாட்களை விடுத்து அரசு

என்றோ, சமுதாயம் என்றோ ஒன்று இருக்கமுடியாது. இவ் வடிப் படை உண்மைகளில் ஒன்றை மறந்துவிடச் செய்யும் அபாயம் இதில் இருக்கிறது. அரசுக்கு என்ன நேர்ந்ததென்றாலும், கண்ணுக்குப் புலனாகாத ஒன்றைப் பாதிக்காமல், வாழும் மக்களாகிய அதன் அங்கத்தினர்களை அது பாதிக்கிறது. ஒரு குறிப்பிட்ட நாட்டின் பண்பு, கொள்கை, தீய குணங்கள், நற்குணங்கள் ஆகியவை பற்றிப் பேசுவதிலுள்ள குறைபாடுகளிலிருந்து, நம்மைக் காத்துக் கொள்ளவேண்டும். அதன் தலைவர்களால் அதன் கொள்கை ஆக்கப்பெறுகிறது. அதன் நற்பண்புகளும், தீய குணங்களும் அதன் குடிமக்களினுடையதே. குறிப்பிட்ட காலத்தில் வாழும் மனிதருக்குத்தான் தண்டனையோ அல்லது பரிசோ அல்லது துன்பமோ கொடுக்கலாமேயொழிய, அரசிற்குக் கொடுக்க முடியாது. அதன் மனிதக் கூறுகளை விடுத்து, ஒரு நாளும் அரசைப் பற்றிச் சிந்திக்கக் கூடாது.

## அரசின் குணநலன்களைப்பற்றி முடிவுரை

சமுதாயத்தை அணைத்துக் காப்பது அரசு. அது தடை விதிக்கிறது; ஆணையிடுகிறது; அமைப்புக்களை ஏற்படுத்துகிறது. இப்படியெல்லாம் செய்வதனால் அதற்கெனச் சில குறிப்பிட்ட தன்மைகளை அவசியமாக அது பெற்றிருக்கவேண்டும். அது சர்வாதீனமுடையதாகவும், எல்லாவற்றையும் உள்ளடக்கியதாகவும், கட்டாயப்படுத்துவதாகவும், நிரந்தரமானதாகவும் இருக்கவேண்டும். சர்வாதீனம் ஏனெனில் ஒரே சமயத்தில் ஓர் அடிப்படை நோக்கத் திற்குமேல் வேறு இருக்கமுடியாது. பொதுவாழ்க்கையில் ஒரு வழிக்குமேல் வேறு மாற்றுவழி இருக்கமுடியாது. தனக்கெதி ராகவே பிரிவினைக்குள்ளாக்கும் குடும்பம் நிலைக்க் முடியாது. ஆகவே தன் வரம்பிற்குள்ளாக அரசு போட்டியாளர் எவரையும் பொறுத்துக்கொள்ள முடியாது. எல்லாவற்றையும் உள்ளடக்கியதாக இருக்கவேண்டும். ஏனெனில் அது பெற முயல்கின்ற பொது வாழ்க்கையை ஒன்றுமற்றதாக ஆக்கிவிடும் தன்மையுள்ள எவரை யாவது அதன் வரம்பிற்கு வெளியே விட்டுவைக்கமுடியாது. கட்டாயப்படுத்துவது ஏனெனில், அரசின் நோக்கங்களிலும், செயல் களிலும் ஒத்துழைப்பதைத் தனியாளின் சொந்த முடிவுக்கு விட்டுவிட முடியாது. இதனால் அரசின் அங்கம் வகிப்பதும், அதன் சட்டங்களுக் கொப்ப வாழ்வதும் சுயவிருப்பினால் ஏற்படும் காரியங்களாகா. மனிதன் ஓர் அரசின் அங்கத்தினனாகவே பிறக்கிறான். இதை அவன் வேண்டாமென்று தள்ளமுடியாது. இன்னொரு நாட்டின் குடிமையுரிமை பெறுவது என்பது ஒரு நாட்டின் உரிமைக்குப்

பதிலாக வேறொன்றைப் பெறுவது என்றுதான் பொருள்.[1] முடிவாக, அரசு நிரந்தரத்தன்மை பெற்றிருக்கிறது. ஏனெனில் அதன் நடவடிக்கைகளின்மீதும், அதன் வாழ்வின்மீதும் எவ்விதமான கால அளவும் குறிக்கப் பெற்றிருக்கவில்லை. சட்டங்களை மாற்றுவதோ அல்லது அரசாங்க முறையை மாற்றுவதோ, அதன் தொடர்ச்சியான வாழ்க்கையை மாற்றுவதில்லை. பின்னர் அடிக்கடி பேசப்போகிற இத் தன்மை, பன்னாட்டு உறவுகள் அமைப்பின் அடிப்படையாக இருக்கிறது. ஒவ்வோர் அரசியல் அமைப்பும் அதன் முந்தைய அமைப்பின் கடன்கள், உடன்படிக்கைகள் முதலிய கடமைகளை மரபுரிமையாகப் பெறுகிறது. இதே அடிப்படைதான் உள்நாட்டு விவகாரங்களிலும் நிலவுகிறது. ஓர் அரசாங்கத்தில் ஏற்படுத்தப் பெற்ற எல்லாச் சட்டங்களும், மீண்டும் திருத்தப்பெறும் வரை அடுத்த அரசாங்கத்திலும் செல்லுபடியாகின்றன. நீண்ட நாட்களுக்கு நீடிக்கப்பெறும் என்ற நம்பிக்கையில் அரசுகள் செயலாற்றுகின்றன. அவைகள் தாங்கள் மறைந்துபோகக் கூடும் என்பதற்கு இடம் வைத்துக் காரியங்கள் செய்வதே இல்லை.

[1] நவீன கால உலகத்தின் கொடூரத்தால் சில அதிருஷ்டமற்ற மனிதர்கள் அரசின்றி வாழும் நிலையேற்பட்டிருக்கிறது. ஆனால் இஃது ஒரு கடந்து செல்லக்கூடிய அவல நிலை என்று நாம் நம்புகிறோம்.

# 4. வரலாற்றில் அரசு

மனிதனின் தேவைகளினாலும், அவனது இயற்கைத் தன்மையினாலும், எவ்வாறு சமுதாயமும், அரசும் தோன்றின என்று நாம் பார்த்தோம். அதன் தோற்றத்தைப்பற்றிய கேள்வியை அங்கேயே விட்டுவிடலாம். ஆனால் மாணவர்களாகிய நாம் இந்தப் பிரச்சினையை ஆழ்ந்து கவனித்து வரலாறு நமக்கு இது குறித்து என்ன சொல்கிறது என்பதை அறிந்துகொள்ளக் கடமைப் பட்டிருக்கிறோம்.

## (i) அரசின் தோற்றுவாய்

### குடும்பங்களின் மூலம் நிகழ்ந்திருக்கக்கூடிய அரசின் தோற்றுவாய்

இவையெல்லாம்பற்றி நமக்கு அதிகம் தெரியாது என்பதை முதன்முதலில் ஒத்துக்கொண்டுவிடலாம். 'இன்றைக்குள்ள அறிவிற்குள், அரசியல் தோற்றுவாயைப் பற்றிய கேள்விக்குத் திட்டமாகப் பதிலிறுக்க முடியாது' என்று பேராசிரியர் ஹான்கின்ஸ் (Professor Hankins) கூறுகிறார். அப்படிச் சொல்லக்கூடியதெல்லாம் பெரிதும் ஊகமாகவே இருக்கமுடியும். இருப்பினும், குடும்பமானது, எல்லா மனிதக் கூட்டுச் சேர்க்கைகளிலும் பழமையானது. ஆகையால் இப்படிப்பட்ட ஆராய்ச்சியில் தொடக்கமாக அது அமையலாம் என்று துணிந்து சொல்வது ஆபத்து இல்லாதது என்று தோன்றுகிறது'. ஆதிச் சமூகக் கூறாகிய குடும்பத்தில், அரசாங்கத்தின் சாரமாகிய பல தடைகளும், கட்டுப்பாடுகளும் எப்பொழுதும் இருக்கின்றன..........குடும்பத்தில், ஏற்கெனவே மிக உயர்வான வளர்ச்சி பெற்றிருந்த கட்டுப்பாட்டு முறையை, தன்னுள் அடக்கி இருந்த சமுதாயமானது அதைத் தொடர்ந்து நடத்திவந்தது. எந்த அவசியத் தேவைகள் குடும்பத்தை

உண்டாக்கினவோ, அவையே அதன் கட்டுப்பாடுகளையும் உண்டாக்கின.........சிறிய அளவிலமைந்த அரசாங்கத்தை இங்கே காண்கிறோம். அதுவே மிகவும் விரிவடையும் தன்மை பெற்றிருந்தது'. என்று மாக்ஐவர் (Mac Iver) கூறுகிறார். திருமணத்திலும், மரபுரிமையிலும், அது ஆரம்பமாகி, குடும்பப் பொருளாதாரத்தைக் கட்டுப்படுத்தி, குடும்பப் பிரார்த்தனைகளை நடத்தி, பாதுகாப்புகளை அமைத்து, வேட்டைக்கும் மேய்ச்சல் தரைகளுக்கும் ஏற்பாடு செய்து, நீர் நிலைகளையும் தங்குமிடங்களையும், அவசியமான பண்டங்களையும் மேற்பார்வை செய்துவந்திருக்கிறது.

குடும்பங்கள், சில பொதுநலன்களுக்காக மற்றக் குடும்பங் களோடு இணைந்து, எவ்வாறு பரவின என்பதை அறிவது எளிது. முடிவாக, ஆதியிலே இருந்துவந்த பொதுஉறவு மறந்துபோன நிலையில், கூட்டங்கள் தோன்றின. இந்தக் கட்டத்தை அடைந் தபோது இரத்தக் கலப்பால் உண்டான உறவுமுறை, மரபுக் குழுவாக மாறியது. பொதுவான மரபைச் சார்ந்தும், முன்னோர்களின் வழிபாட்டினால் ஏற்பட்ட பரம்பரைகளைச் சார்ந்துந்தான் மரபுக்குழு வாழ்ந்திருக்க முடியும். ஆனால் மரபுக்குழுவுக்கு உறவு முறையோ, சமயமோ முக்கிய அடையாளங்களாக இருக்கவில்லை. தனியாளோ அல்லது குடும்பமோ சாதிக்கமுடியாத காரியங்களில் குழு ஒன்று கூடிச் செயலாற்றும். இக் குழுவை ஒன்றுசேர்க்க, ஒரு பிரதானி அல்லது தலைவனின் மேலாண்மை தேவைப்பட்டது. இப்படிப்பட்ட தலைவனுக்குக் கீழ்ப்படிதல் பொதுவான நியதியாய் இருந்து இக் குழுவை இயக்கியது.

## சொத்தும், பாதுகாப்பும்

இந்த வகையான விஸ்தரிப்புக்கு, இரு காரணங்கள் பெரிதும் துணைபுரிந்தன. முதலாவது, மேய்ச்சலை நம்பி வாழ்ந்த நாடோடி வாழ்க்கை ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியில் குடியேறிய வாழ்க்கையாக மாறியதாகும். இதன் பயனாக, இரத்தக் கலப்பு உறவிற்குப் பதிலாக, ஒரு நிலப்பகுதியில் அமைத்துக்கொண்ட பொது வாழ்க்கை அவர்களை இப்பொழுது இணைத்தது. அக் குழு வாழ்ந்த நிலப்பகுதியிலுள்ள நிலங்களைத் தனியாட்களுக்குப் பங்கிட்டுக் கொடுக்கும் உரிமையை விளக்கவும், செயலாற்றவும் ஒரு மேலாண்மை அவர்களுக்குத் தேவைப்பட்டது. வேறு வழியில் சொன்னால், சொத்துரிமை வளர்ச்சியோடு சம்பந்தப்பட்டு அரசு தோன்றியது எனலாம். முதலில் இந்தச் சொத்து நிலமாகவும், பிறகு வேறு பல செல்வங் களாகவும் படிப்படியே உண்டாக்கப்பெற்றன. சொத்தினால் உண்டாகும் பிரச்சினைகளாகிய திருட்டு, மரபுரிமை, தனியாட்களின்

தேவைக்கு மேறபட்டதாக உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களின் பரிவர்த்தனை, உடைமைகளின் வேறுபாடுகளால் ஏற்படும் ஏற்றத் தாழ்வுகள் ஆகியவை பின்னர் தோன்றின.

உண்மையில் உடைமைகள் அரசை ஆக்கின என்று கூறலாம். உடைமைகளைத் தாக்குவது வெறும் தனிப்பட்டவர் விவகாரம் மாத்திரமன்று. சமூக, அரசியல் அமைப்பையே கவிழ்க்கக் கூடியதும், நிலைநிறுத்தப் பெற்ற ஒழுங்குக்கு விரோதமாகச் செய்யப் படும் குற்றமும் ஆகும். 'எங்கே சொத்துக்கள் இல்லையோ, (இரண்டு அல்லது மூன்று நாட்கள் உழைப்பு மதிப்புள்ள சொத்துக்கள்கூட இல்லையோ) அங்குச் சிவில் அரசாங்கம் அவ்வளவாக அவசியமில்லை' என்று ஆடம் ஸ்மித் (Adam Smith) எழுதுகிறார்.

பாதுகாப்பும், குறைந்த முக்கியத்துவம் பெற்றதன்று. எதற்கும் மேலாக, அதற்கு ஓர் உறுதிப்பாடான தலைமை தேவைப்பட்டது. ஒழுங்காக அமைக்கப்பெற்ற சமுதாயங்களில் அந்தப் பிரச்சினை ஆதியிலேயே தோன்றியிருக்கவேண்டும். மனிதன் போரிடும் இயல்பை அதிகமாகப் பெற்றிருக்கிறானா என்பதைப்பற்றி இங்கு விவாதிக்க வேண்டியதில்லை. பல சமுதாயங்கள் இயற்கையிலேயே அமைதியாகவும் ஆர்ப்பாட்டங்களில்லாமலும் இருந்தன ; இருக் கின்றன என்பதற்கு நிறைய அத்தாட்சிகள் இருக்கின்றன.[1] உயிர் வாழவேண்டும் என்ற இயல்பு மற்றெல்லா இயல்புகளையும்விட அதிக ஆழமாக வேரூன்றியிருக்கிறது. எனினும் உணவிற்கான போராட்டங்கள், வளமான நிலத்திற்கான போராட்டங்கள், மேய்ச்சல் நிலங்களுக்கான போராட்டங்கள் ஆகிய போராட்டங்கள் அடிக்கடி நிகழ்ந்திருக்கவேண்டும். எனவே ஆக்கிரமிப்புக்காகவும், அண்டையி லுள்ள குழுவினரின் பொருளாதார வளங்களைத் தமதாக்கிக் கொள்ளவும், பலவீனமானவர்கள் தங்களைப் பாதுகாத்துக் கொள்ளவும் இராணுவ அமைப்புக்களும், தலைமையும் ஆதியிலேயே பல சமுதாயங்களுக்குத் தேவைப்பட்டன.

## ஒரு குழு மற்றொரு குழுவின்மீது ஆதிக்கம் செலுத்தும் ஆசை

எவ்விதமான போராட்டமாயினும் சரி, யுத்தமாயினும் சரி, அவை வெற்றி பெற்றவன், தோல்வியுற்றவன், அதிகாரம், பணிவு என்பன போன்ற உறவுகளை ஏற்படுத்தும். யுத்தம், நாடு கைப்பற்றல், பணிதல் முதலியன குடும்பங்களை வகுப்புக்களாகவும் (class) வகுப்புக்களை இனங்களாகவும், இனங்களைப் பின்னர் அரசாகவும்

[1] Kropotkin என்பவர் எழுதிய Mutual Aid என்ற நூலில் இயற்கையாகக் கூடிவாழும் தன்மையைப்பற்றிப் பல உதாரணங்கள் உள்ளன.

மாற்றியதற்கும், அலகுகளாக ஒன்றுசேர்த்ததற்கும், முக்கிய காரணங்களாக இருந்திருக்கவேண்டும். முறியடிக்கப்பட்ட தன் எதிரியை அழித்துவிடுவதற்குப் பதிலாக அவர்களைத் தம்முடைய இனத்திலே சேர்த்துக்கொண்டபோது அரசு தோன்றியிருக்கவேண்டும் என்று சொல்லலாம். வெற்றிகண்ட இனம், தோல்வியுற்ற இனத்தின்மீது ஆதிக்கம் செலுத்தும் ஒரு சிறுபான்மையாக நிலைநிறுத்திக்கொண்டதுண்டு. ஓடிப்போக முடியாத உழவன் வெற்றிபெற்றவர்களுக்காக நிலந்திருத்த முற்பட்டான். இதேபோலக் கொள்ளையடித்தல், கடற்கொள்ளை ஆகியவை கடல்சார்ந்த அரசுகளின் அடிப்படையாக இருந்திருக்கின்றன. போராட்டமும், யுத்தமும், அரசை அமைப்பதில் வரலாற்று ரீதியில் முக்கியமான காரணங்களாக இருந்திருக்கின்றன.[1] இரண்டு கூட்டங்களின் இணைப்பு வலிய உண்டாக்கப் பெற்றனவாக இருந்தாலும், காலப்போக்கில் பொது அக்கறைகளை உண்டாக்கியதால் ஒருவகையான ஒருமைப்பாடு ஏற்பட்டது.

அரசின் வளர்ச்சியில் அரசியல், பொருளாதார ஆதிக்கம் செலுத்தும் ஆசை முக்கியமான காரணங்களில் ஒன்ருகவோ அல்லது ஒருவேளை மிக முக்கியமான தனிக்காரணமாகவோ இருந்திருக்கின்றது. நவீன காலத்தில் பலாத்காரத்தை நாம் வெறுக்கிறோம். அதற்காக வருத்தப்படுகிறோம். இருப்பினும் அந்தக் காலத்தில் நிலவிய பலாத்காரம் அதைவிட மோசமான நிலைக்கு ஒரு மாற்ருக இருந்திருக்கவேண்டும் என்பதை நாம் நினைவில் கொள்ளவேண்டும். நன்ருக ஒழுங்குற அமைக்கப்பெற்ற அரசு எவ்வளவுதான் மிருகத்தனமுடையதாக இருந்தாலும், கொள்ளை, உயிருக்கே ஆபத்தான நிலை போன்றவற்றைவிட மிக நல்லது ஆகும். ஒழுங்கற்ற வலிமைக்கும், ஒழுங்கு சிறிது காணப்பெறும் வலிமைக்கும் இடையேதான் ஒன்றைத் தேர்ந்துகொள்ள வேண்டியிருந்திருக்கும். 'எல்லைப் புறத்து நீதி' (frontier justice) முரட்டுத்தனமானதும், சடுதியானதுமாக இருக்கலாம். ஆனுல் நீதியே இல்லாத நிலையைக் காட்டிலும் அது சிறந்ததுதானே?

## வளர்ச்சியில் குழப்பமான படிமுறை

முறையான படிமுறை என்று நாம் இப்பொழுது எடுத்துக் காட்டுவதெல்லாம் மிகவும் தாமதமானதும், குழப்பமானதுமாகும். கெட்டல் (Gettel) சொல்லுவதுபோல 'மனித வாழ்க்கை பொதுவாக

[1] 1792ல் அல்சாசும் லொரெய்னும் (Alsace, Lorraine) ஆக்கிரமிப்பு நடந்து 100-ஆண்டுகளுக்குப் பிறகு ஃபிரான்சோடு ஐக்கியமாகிவிட்டது நல்ல உதாரணம். 1860-க்குப் பிறகு நைஸ், சவாய் (Nice, Savoy) ஆகிய பட்டணங்கள் விஷயத்திலும் இது பொருந்தும்.

ஒரு பொதுக்கட்டத்தை அடைந்ததும், அதாவது சில பொது இயக்கங்களுக்குள்ளானபோது கிட்டத்தட்ட அரசியல் தன்மைபெற்ற, ஏதோ ஒரு வகையான ஒழுங்காக அமைக்கப்பெற்ற மேலாண்மை தோன்றியது. பல அரசுகள் அவைகளின் அடிப்படைக் கூறுகளுக்கு மாத்திரம் ஒப்பக்கூடிய படிமுறையில் வளர்ச்சிபெற ஆரம்பித்தன.' எண்ணற்ற பல சமூகக் கட்டுப்பாட்டு முறைகளிலிருந்து பிரிந்து, தனித்தன்மையான அரசின் அரசியல் மேலாண்மை தோன்றுவதற்கு மிக நீண்டகாலம் ஆயிற்று. இராணுவத் தலைமைதான் முதன் முதலில் விளக்கமாகத் தனித்தன்மை பெற்றிருக்கவேண்டும் என்று அனுமானிக்கலாம். முக்கியமான சச்சரவுகளைத் தீர்க்க முயலுகையில் முழுக் கூட்டமே அற்றுப்போய்விடுவதுபோலத் தோன்றும்போது, இது நிகழ்ந்திருக்கவேண்டும். அரசு என்றும், சமுதாயம் என்றும், இப்பொழுது நாம் மிகக் கவனமாகப் பாகுபாடு செய்கிறோமே, இது மிகவும் சமீப காலத்தில் தோன்றியதுதான். உதாரணமாகச் சொல்ல வேண்டுமென்றால் சமயக் கட்டளைகள் சட்டத்தைக் காட்டிலும் பெரும் பாலும் தீவிரமானவையாக இருந்தன. அவற்றைக் கட்டுப் படுத்திவந்த மந்திரவாதிகள் அரசியல் மேலாண்மையின் எந்த மாற்றாரின் அதிகாரத்தைக் காட்டிலும், அதிக அதிகாரம் பெற்றும் இருந்தனர். மனைவி, குழந்தைகள் (வழக்கமாக அடிமைகள்) முதலியோர்மீது தகப்பனின் அதிகாரம் பல சமுதாயங்களில் அங்கு நிலவிய சட்ட முறைகளோடு சேர்ந்தே முழு அதிகாரம் பெற்றதாக இருந்தது. பல நூற்றாண்டுகளாக ஓர் இரட்டைப் படிமுறை செயலில் இருந்ததை நாம் காண்கிறோம். ஒரு படிமுறையின்படி, சமுதாயம் இதுவரை அனுபவித்து வந்த அதிகாரங்களை அரசு எடுத்துக்கொள்வது; இன்னொன்று அரசிற்கு இனிமேலும் தேவைப் படாத அதிகாரங்களைச் சமுதாயத்திற்கு விட்டுவிடுவது. குடும்பங் களோடுள்ள தொடர்பு, நில உடைமை, சமயம் ஆகியவற்றில் அது அதிகாரத்தை விட்டுக்கொடுத்துவிட்டது. கலாச்சார, பொருளாதார வாழ்க்கையை மேலும் அதிகமாகக் கட்டுப்பாடுசெய்ய முற்பட்டிருக் கிறது. இங்குப் பிரித்துக் காட்டியிருக்கும் பல கட்டங்கள் ஒன்றை யொன்று தழுவியவை என்பதை நினைவில்கொள்ளவேண்டும். ஒவ்வொருவகை மனித வளர்ச்சியின் எல்லாக் கட்டங்களையும்போலவே இதுவும் விளக்கக் குறைவானதும் குழப்பமானதுமாகும்.

பூர்வீகக் குடிகளின் மேலாண்மையிலிருந்து பலவிதத் தனிப் படுத்தப்பட்ட கட்டுப்பாட்டுறுப்புகள் தனித்தன்மையான பணிகளோடு தோன்றுவதை நாம் இங்குக் காண்கிறோம். இதிலிருந்து, ஆட்சியாளருக்கும், ஆளப்படுவோருக்கும் உள்ள வேறுபாட்டையும், அரசியல் வாழ்க்கையிலும், அரசியல் சார்பற்ற வாழ்க்கையிலும் பொதுவாழ்க்கைக்குரிய பல அம்சங்களும்,

தோன்றுவதை நாம் பார்க்கிறோம். எனவே அரசானது இயற்கை யானது என்றும் செயற்கையானது என்றும் சொல்லலாம். அதன் தோற்றுவாய், வளர்வதற்கு அல்லது செயலாற்றுவதற்குத் தேவை யான உள்ளுணர்வுச் சக்திகள் ஆகியவைகளினால் அது இயற்கை யானது ஆகிறது. அதன் வளர்ச்சியினால் செயற்கையானதாகிறது. 'தானாகவே உள்ளுணர்வுச் சக்தியால் வளர்ச்சி பெறுவதற்குப் பதிலாக, முழுச் சமுதாயமுமோ அல்லது தனி மனிதன் ஒருவனோ செய்யும் ஆக்கவேலை சிலகால கட்டங்களில் தோன்றுவதுண்டு' என்று பௌமான் (Bawman) கூறுகிறார். பூர்வீகச் சக்திகளாகிய இரத்தக்கலப்பான உறவு, சமயம், உணவுத்தேவை, பாதுகாப்பு ஆகியவை செயலாற்றும் திறனுள்ள மனம்படைத்தோரின் கைகளில் ஓர் உபகரணமாகிறது. இவர்கள் தொடர்புடையதும், ஒழுங்குற அமைக்கப்பட்டதுமான காரியங்களைத் நிர்ணயிக்கிறார்கள்; அந்தக் கூட்டத்திலுள்ள தனியாட்கள்மீதும், பிற கூட்டங்களின்மீதும் வழக்கமாகத் தங்களது விருப்பாற்றலைச் சுமத்துகிறார்கள்.

## (ii) தலைமையும், வலிமையும், சமயமும், ஒப்பந்தமும்

### தலைமை

சில மனிதர்கள் தங்களது 'விருப்பாற்றலை மற்றவர்கள்மீது சுமத்தும்' முறையானது, அரசியலின் அடிப்படையைச் சார்ந்தது. இதற்கு உடல்வலிமையை ஒரு காரணமாகக் காட்டமுடியாது. ஏனெனில் மிக்க வலிமையுள்ள ஒருவனைக் கூட்டாகச் சேர்ந்த சிலர் அடக்கிவிடமுடியும். வேறுபட்ட ஆனால் ஒன்றுக்கொன்று தொடர்புள்ள இரு பண்புகளைப் பெற்றிருப்பதால்தான் தலைமை பெற முடிகிறது. இவற்றை 'மேலாண்மை' (authority) என்றும், 'தலைமை' (leadership) என்றும் நாம் அழைக்கலாம். இவற்றிற்கு விளக்கம் கூறுவது அல்லது இலக்கணம் வரைவதைக்காட்டிலும் இவற்றைப் புரிந்துகொள்வது சுலபம். துடுக்குத்தனம் வாய்ந்த சிறு பிள்ளைகளின் வகுப்பு ஆறடி உயரமுள்ள ஓட்டப்பந்தய வீரனை உபயோகமற்றவனாகவும், நம்பிக்கையற்றவனாகவும் ஆக்கிவிடுகிறது. அதே சமயத்தில் உருவளர்ச்சியற்றவனும், முக்கியமற்றவனும் ஆன ஒரு சிறுவனால் குச்சியின்றி, அதிகார அதட்டலின்றி, அவ் வகுப்பில் ஒழுங்கும் அமைதியும் நிலவச்செய்ய எப்படி முடிகிறது? ஒருவருக்கு மறுக்கப்பட்ட 'கட்டுப்பாடு செய்யும் திறமை' மற்றொரு வருக்குக் கொடுக்கப்பெற்றிருக்கிறது. ஒரு குழுவில் அமைதியாக, வலுக்கட்டாயமாகப் புகாமல் ஒதுங்கி நிற்பவர்களாகிய சிலர், எப்பொழுதும் தங்களது வழியையும் சில வாரிசுகளையும்

செல்வாக்கு மிக்கவர்களும், முக்கியமானவர்களும் கூட அமைதியாக ஒப்புக்கொள்ளும்படிச் செய்துவிடுவது ஏன்? சில அரசியல் தலைவர்கள் ஏன் தலைசிறந்து விளங்குகிறார்கள்? அதே சட்ட ஞானம் பெற்ற மற்றவர்களால் ஏன் அவ்வாறு சிறக்க முடிவதில்லை? ஒரு கிளாட்ஸ்டன் (Gladstone), ஒரு பிரையாண்ட் (Briand), ஒரு ஸ்டிரெஸ்மான் (Streseman), ஒரு பெய்ஸால் (Feisal) ஒரு பக்கமும், மற்ற பக்கத்தில் உலகிற்குத் தெரியாதவர்கள் பலரும் ஏன் இருக்க முடிகிறது? சில தலைவர்களைப் பின்பற்றி மக்கள் மிக்க அபாயகரமான காரியங்களுக்கும், அதிகத் தியாகத்திற்கும் ஏன் உள்ளாகிறார்கள்? 'இரத்தம், வியர்வை, கண்ணீர்' என்று சர்ச்சில் (Churchill) கூறினார். இதற்கு நூறாண்டுகளுக்கு முன்பு பசியையும் விரைவாகக் கால்நடையாகவே நடந்து செல்வதையுமே தன்னைப் பின்பற்றுகிறவர்களுக்குக் கரிபால்டி (Garibaldi) உறுதியளித்தார்.

இவற்றையெல்லாம் விளக்கிக் கூறமுடியுமா? மேலாண்மை, தலைமை ஆகியவற்றின் சில கூறுகளை வேண்டுமானால் நுணுகி ஆராய முடியும். இவைகளை விருப்பாற்றல், நல்ல தீர்க்கமான போக்கு, கற்பனை சக்தி, சாதாரண மனிதனைப் புரிந்துகொள்ளும் திறன், துணிச்சல், விடாமுயற்சி ஆகிய பண்புகள் என்று குறிப்பிடலாம். ஆனால், எல்லாம் சொல்லியான பிறகும் அங்கு ஏதோ கைக்ககப்படாத 'ஒன்று' இருப்பதை உணர்கிறோம். சராசரியான பிரதம மந்திரிகளுக்கும், சர்ச்சிலுக்குமுள்ள வேறுபாட்டை இந்த 'ஒன்று' காட்டுகிறது.

## அரசை உண்டாக்கும் தலைவர்கள்

இதை நாம் வலியுறுத்துவது ஏனெனில், ஒவ்வொரு புதிய கட்டத்திலும், முன்னேற்றத்திலும் ஆரம்பமாக இருப்பது மேலாண்மையுள்ள தலைமை, என்று வரலாறு சுட்டிக் காட்டுகிறது. ஆகையினால்தான் அலெக்சாந்தர் (Alexander) அல்லது முகமது (Mohammed) அல்லது லூத்தர் (Luther) அல்லது நெப்போலியன் (Napoleon) அல்லது ஹிட்லர் (Hitler) அல்லது லெனின் (Lenin) அல்லது இன்னும் இப்படிப்பட்ட எண்ணற்ற நல்லவர், கெட்டவர் ஆகிய அனைவரையும் வரலாற்றில் காணமுடிகிறது. தலைவர் தனியாகவோ அல்லது ஒதுங்கியோ நிற்பதில்லை. அவரது காலத்தின் பிரதான போக்குகளை, அவர் பிரதிபலிக்கவேண்டும். தமது படைக்கு வெகு முன்னதாக அவர் இருந்துவிடக் கூடாது. அல்லது அதன் சாதாரண அங்கத்தினரிடம் அதிக வேறுபாடு காட்டிவிடக் கூடாது. ஆனால், அவரிடத்தில் அந்த 'ஒன்று'

இருந்து அவரைப் பிரித்துக்காட்டி, மற்றவர்கள் அவரை இனம் புரிந்துகொள்ளவும் ஒத்துக்கொள்ளவும் செய்கிறது. இதனுல் அவரது தலைமையின்கீழ் ஒரு புது முன்னேற்றம் ஏற்படுகிறது. புதுச்சாதனைகளின் சிகரங்களை அவரால் எட்டமுடிகிறது.[1]

தற்காலப் பிரச்சினைகளைப்பற்றிப் பேசும்போது இதுபற்றி மீண்டும் ஆராய்வோம். பல அரசியல் சமுதாயங்களின் தோற்று வாய் பெரிய தலைவர்களின் தூண்டுதல்களினுல் இருந்திருக்க வேண்டும் என்ற உண்மையை இங்கே வலியுறுத்துவது போதுமானது. ஸ்தாபகர்கள் என்றும், சட்டம் இயற்றியவர் என்றும் வழங்கும் கதைகளெல்லாம் உண்மையில் நடந்தவையே ஆகும். நம் ஆதிக் குடிகளைப்பற்றிய ஆய்வுக்கு உபயோகமாக, மிக வளர்ச்சி பெற்றிருக்கும் சமுதாயத்தை உருவகமாகக் கொள்ளாமல், குழந்தைகளுக்கு மத்தியில் சாதாரணமாகத் தானுகவே தோன்றும் ஒன்றைப்பற்றிப் பார்ப்போம். 'சிறுவர் குழாத்தின் உட்குழுக்கள்' (Boys-gangs), எதிர்ப்பில்லாத தலைவர்களையும், விரிவான விதிமுறைகளையும், பழக்க வழக்கங்களையும் உடையதாகும். இவ் விதிகளுக்கு அவ் வுட்குழுவின், தலைவனும் கீழ்ப்படிந்தாக வேண்டும். இது நமக்கு ஆதியிலே காணப்பட்ட அரசியல் சங்கங் களின் காலத்திற்கு, நம்மை அழைத்துச்செல்கிறது. இவர்கள் தலைவரை மையமாகக் கொண்டிருந்தார்கள். தலைவர் பொதுச் செயல்களைத் தூண்டுகிறவராக இருந்தார். அவரிடத்தில் மிக்க ஈடுபாடும், விசுவாசமும் காட்டினுர்கள். அப்படி இருப்பினும் எண்ணற்ற விளக்குகளும் (taboos) வழக்காறுகளும் (conventions) அவரது ஆட்சியைக் கட்டுப்படுத்தியும், தடைசெய்தும் வந்தன. இவற்றை அவர் மீறத் துணிவதில்லை. இந்தத் 'தொகுதித் தன்மை'

[1] வேல்ஸ் நாட்டுப் பரம்பரைக் கதை ஒன்று பேங்கார் பல்கலைக் கழகக் கல்லூரிக்குத் (Bangor University College) தன் குறிக்கோளைக் கொடுத் திருக்கிறது. அக் கதையானது வெறும் ஆதிக்கத்துக்கு மாருக உள்ள உண்மையான தலைமை என்ன என்பதைப்பற்றி ஆணித்தரமாகக் கூறுகிறது. கதை இதுதான் : குடிகளின் தலைவன் ஒருவனும், அவனைச் சேர்ந்த அவன் ஆட்களும், தங்களை விரட்டிவரும் எதிரியிடமிருந்து தப்பி ஓடிக்கொண்டிருந்தபோது சாதாரண முறைகளிலே கடக்கமுடியாத பெரிய கணவாய் ஒன்றுக்கு வந்து சேர்ந்தார்கள். கணவாயின் மறுபுறம் சேர்ந் தால்தான் அவர்களுக்கு அபாயமில்லை. தலைவன் நல்ல உயரமானவன். அவன் கைகளை நீட்டி மலைப்பிளவின் மற்ற பக்கத்தைப் பிடித்துக்கொள்ள முடிந்தது. அங்குள்ள மரம் ஒன்றைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, கிடத்தியிருக்கும் தன் உடல்மீது நடந்து செல்லுமாறு பணித்தான். அதன்படி எல்லோரும் காப்பாற்றப் பெற்றனர். இதிலிருந்து பெறப்பட்ட குறிக்கோள் 'யார் அரசனுக விரும்புகிருனே, அவன் ஒரு பாலமாக இருக்க வேண்டும்' (He who wants to be king, let him be a bridge), என்பதாகும். துணையில்லாத நிலையில், அவர்களால் செய்யக்கூடாத காரியங் களைச் சாதிப்பதற்குத் தன்னைப் பின்பற்றுகிறவர்களை வழிநடத்திச் செல்பவனே உண்மையான தலைவன் ஆவான்.

(gang spirit) இன்னும் பெருமளவில் தற்கால அரசியலில் காணப்படுகிறது என்பதையும் இங்கு நினைவில் கொள்ளலாம்.

## அரசின் தோற்றுவாய்க்குப் பகுத்தறிவு விளக்கம்

தோற்றுவாய்ப் பிரச்சினையை அணுகுவதற்கு இன்னொரு வழி, வளர்ச்சிக் கொள்கை ஏதாவது நாம் அறிந்த உண்மைகளுக்குக் காரணம் கற்பிக்க முடியுமா? என்று பார்ப்பதாகும். அரசின் உண்மையான நிரந்தரத் தன்மையை உணர்ந்துகொள்வதற்குத் திருப்திகரமான ஒரு தடயம் கிடைக்கிறதா என்று பார்க்கலாம். கெட்டல் (Gettel) சொல்வதுபோல 'மேலாண்மையின் தன்மையை நியாயமானதாக்க நாம் எடுக்கும் பகுத்தறிவு முயற்சி' தான் இது.

இன்றைக்குள்ள நிலையை, உண்மையென நிச்சயப்படுத்துவதற்காக இது பழங்காலத்தை நோக்கும் முறையாகும். பழங்காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சியை எடுத்துக்கொண்டு அதை இன்றைக்குக் காணப்படுகின்றவற்றின் நியாயமாகவும், தடயமாகவும் இது கொள்கிறது. இந்தக் கொள்கைகளில் பொதிந்து கிடக்கும் வரலாற்றுக் கூறு எவ்வளவு சிறியதாக இருந்தாலும் பெரியதாக இருந்தாலும், அவைகளுக்கு ஒரு தனி மதிப்புண்டு. அவைகளை உளவியல் சார்பானவை என்றோ, நெறியியல் சார்பானவை என்றோ விவரிக்கலாம். நிகழ்காலத்து நிகழ்ச்சியை விளக்கும் தன்மையதான, அரசின் தோற்றுவாயின் முக்கிய காரணத்தை வலியுறுத்துவதாகவோ அல்லது அரசின் இன்றைய இயல்பு, அதன் முக்கியப் பணி ஆகியவற்றை விளக்குவதாகவோ இது அமைகிறது.

## அரசின் தோற்றுவாயும், வன்முறையும்

அரசின் தோற்றுவாயின் அடிப்படை வன்முறை ஆகும் என்று வாதிப்பவர்களின் கூற்று, வரலாற்று அடிப்படையில் ஓரளவுக்கு உண்மையெனப்படுகிறது. ஏனெனில் அரசின் அமைப்பில் பெருமளவு பலாத்காரத்தால் ஆனது என்பது உண்மை. ஆனால் அவர்கள் பலாத்கார வரலாற்றுக் கூறு என்று மாத்திரம் கொள்ளாமல், இன்றுள்ள அரசுக்கும் முக்கியமான இயல்பு என்றும் வலியுறுத்துகிறார்கள். அரசுகள் பலாத்காரத்தால் தோன்றின; அதிகாரம் அவர்களது தோற்றத்திற்கு முதற்காரணம் என்றும் கொள்கிறார்கள். இந்த அதிகாரத்தை அரசுக்குள்ளும், வெளியேயும் நிலைநிறுத்துதலும், விஸ்தரிப்பதுமே அதன் ஒரே நோக்கம் என்றும், அந்த நோக்கத்தை நிறைவேற்ற எந்த வழியையும் பின்பற்றலாம் என்றும் கூறுகிறார்கள். பிரஷியன் கொள்கை (Prussian theory)

என்று நாம் இதை அழைக்கலாம். இது மிகப் பழைமையானதொரு கொள்கையாகும். மிகப் பழைமையான அரசுகள் பலாத்காரத்தை அடிப்படையாகக் கொண்டு எழுந்த பேரரசுகளேயாகும். லார்டு (Lord) இவைகளைக் 'கொள்ளை வரப்புகள்' (plunderbunds) என்று அழைக்கிறார்.

இந்த வகையான அரசுக் கொள்கையை நாம் விரும்பா விட்டாலும், ஒரு கூட்டம் இன்னொன்றின் மீது தனது கட்டுப் பாட்டைச் சுமத்தும்பொழுதெல்லாம், இந்தக் கொள்கையை நியாய மானதென்று கொள்கிறோம். அதிகாரமே இவ்வாறான நியாயத் திற்குக் காரணமாகிறது. எண்ணற்ற வாதங்களால் காலனி முறை ஆதரிக்கப்படலாம்; காலனிகளுள்ள மக்களுக்கு நீண்டகாலப் போக்கில் இதனால் நன்மை விளைந்ததாகவும் நாம் நிரூபிக்கலாம். எப்படியிருந்தாலும் இது வலிமையான பலாத்காரத்தின் விளைவே யாகும். எங்கெங்கே ஒரு சிறு அரசு, ஒரு வல்லரசின் கொள்கை களுக்குத் தக்கதாகத் தன்னை அமைத்துக்கொள்ளவேண்டி நேரிடு கிறதோ, அங்கெல்லாம் இவ்வகைப் போக்கை நாம் காண்கிறோம். அரசின் தோற்றுவாயில் பலாத்காரம் காணப்பெற்றதை வலியுறுத்து வதானது, இன்று அதிகாரம் பெற்றிருக்கும் பாகத்தை நினைவுறுத்திக் கொள்வதாகத் தோன்றுகிறது.

## அரசின் தோற்றுவாயும், சமயமும்

அரசின் அடிப்படையாகவும், முக்கிய இணைப்பாகவும் சமயம் இருந்தது என்பதும் மேற்கூறியதைப் போலவே பெருமளவிற்கு உண்மையாகும். வழிபாட்டு ஒருமையை, குடிமை உரிமையின் சோதனையாகக் கொள்பவர்களும் இருக்கிறார்கள். திருச்சபையின் முக்கியமான சட்டங்களோடு அரசின் சட்டத்தையும் ஓரினப்படுத்து கிறவர்களும் இருக்கிறார்கள். சமயச் சட்டங்கள்தான் முடிவான அதிகாரம் பெற்றவை என்று சொல்பவர்களும் இருக்கிறார்கள். சில சமயங்களில் சமயச்சார்பு ஆட்சிமுறை (theocracy) என்று அழைக்கப்பெறும் முறை, பல அரசுகளின் வளர்ச்சியில் ஒரு கட்டமேயாகும். வரலாற்றில் அரசர்களின் இறைவழி உரிமைக் கொள்கை (Divine Right of Kings)யில் இதன் அடிச்சுவடு காணப் படுகிறது. இக் கொள்கையானது பல குடிகளின் வாழ்க்கையில் காணப்பெற்றது. ருஷ்யா, ஆஸ்திரியா, ஜெர்மனி (Russia, Austria, Germany) ஆகிய மூன்று பேரரசுகளும் மறைந்த பிறகு, இக் கொள்கையின் கடைசிப் பிரதிநிதி ஜப்பானியச் சக்கரவர்த்தி (Emperor of Japan) யாவார். ஒரு சமயக்கோட்பாட்டை அரசின் அதிகாரபூர்வமான கோட்பாடாக ஆக்கும் முயற்சிகளில் இதைக் காணலாம். இந்தப் பொருளில் பார்த்தால் ஸ்பெயினும் சவூதி

அரேபியாவும் (Spain and Saudi Arabia) மாத்திரமே உலகில் இன்றுள்ள சமயச்சார்பு ஆட்சிமுறைகளாகும். இந்தியாவை மத அடிப்படையில் பிரிவினை செய்ததானது அரசைச் சமயத்தோடு ஓரினமாக்கிய ஒரு காலத்திற்குத் திரும்பச் செல்வது போலாகும். இதிலிருந்து சிறிது மாறுபட்ட விதத்தில், கருத்துக் கொள்கை ஒன்றோடு, அரசை ஓரினமாக்குவதும் சமயச்சார்பு ஆட்சிமுறையின் மரபுரிமையாகும். நாஜி (Nazi) ஒருவருக்கோ, பொது உடைமை வாதிக்கோ (Communist) இது ஒருவேளை வேடிக்கையாகத் தோன்றலாம். அரசர்களுக்கு வழிபாட்டு முறையில் முடிசூட்டுவது, நமது வழிபாட்டுச் சுவடிகளிலுள்ள சில சொற்றொடர்களும், இன்னும் அரைகுறை உணர்ச்சியில் தயங்கி நிற்கும் சட்டமும், அரசின் ஆணைகளும் தெய்வீகமானவை என்ற நோக்கும், சமயத் திற்கும் அரசிற்கும் இருந்த நெருங்கிய தொடர்பின் எச்சங்களாகும். அரசியல் அதிகாரங்கள், தெய்வீகத் தோற்றுவாயுடையவை என்ற பழைமை எண்ணம் செத்துப்போவது கடினம்.

## அரசின் தோற்றுவாயும் மனித இயல்பும்

அரசு இயற்கையானது என்ற கொள்கை பல சிந்தனை யாளர்களை ஊக்குவித்திருக்கிறது. ஒரு கட்டம்வரை இதுவும் உண்மைதான். கிரேக்கர்கள் காலந்தொட்டு இன்றுவரை, இதர சங்கங்கள் அல்லது கூட்டங்களுக்கு மேலாக, அரசிற்கு ஒருவகை அறுதியான அதிகாரம் இருப்பதாக நினைக்கப்பெற்றுவந்தது. அரசிற்குள் மாத்திரமே மனிதன், மனிதனாக இருக்கமுடியும். அங்குத்தான் அவனது உண்மையான இயல்புகளை உணரமுடியும்; இதனால் அரசானது தனி மனிதனது முழு வாழ்க்கையையும் கட்டுப் படுத்தக் கூடியதாகவும் இருக்கவேண்டும். இவ்வகையான எங்கும் பரந்து நிற்கும் அரசிடமிருந்து, மனிதன் எவ்விதமான உரிமையும் கொண்டாட முடியாது.

மனிதர்களுடைய சௌகரியத்துக்காக மனிதர்களால் ஆக்கப் பட்டதே அரசு என்று சொல்லும் எல்லோருக்கும் எதிராக, அரசின் தோற்றுவாயில் இயற்கையான அல்லது தாமாகவே தோன்றிய சில கூறுகளை வலியுறுத்தினர்கள். இவை முக்கியமாகப் பயன் கருதுங் கொள்கை (Utilitarian)யை மறுப்பதாகும். இவை மனித விருப் பாற்றல், விருப்பங்கள், நலன்கள் போன்றவை ஆகும். இவை அரசின் தோற்றுவாயில் காணப்பெற்ற பாகத்தை ஒதுக்கிவைத்து விடுகின்றன. அறுதியான கட்டாயப்படுத்தும் தன்மையுள்ள அரசின் மேலாண்மையைப் பலவீனப்படுத்தும் ஒவ்வொன்றையும் இந்தக் கொள்கை ஒதுக்கிவைத்துவிடுகிறது. எதேச்சாதிகாரத்தை

நியாயமானதென்று காட்டுவதற்கு இந்தக் கொள்கை பெருமளவில் உபயோகப்பட்டிருக்கிறது. ஆனால் இந்தக் கொள்கையை உண்டாக்கியவர்களாகிய கிரேக்கர்கள், நல்ல வாழ்க்கை வாழ்வதற்குத் தேவையான அளவிற்குத்தான் அரசு இயற்கையானது என்று இக் கொள்கைக்கு ஒரு வரம்பு கட்டியே சொல்லிவந்தார்கள்.

## அரசின் தோற்றுவாயும், ஒப்பந்தமும்

எவ்வாருயினும், மனிதனுக்காக அரசு ஏற்படுத்தப் பெற்றது என்று நம்புகிறவர்களுக்கும், மனிதன் அரசிற்காக இருப்பவன் என்று நம்புகிறவர்களுக்குமிடையேயுள்ள போராட்டம் இன்னும் நீடித்து வருகிறது.

அரசின் நோக்கத்தை அதன் தோற்றுவாயின் மூலமாக நியாயமானதாக்க எடுக்கும் முயற்சிகள் எல்லாவற்றிலும், வரலாற்றிலும் சரி, முக்கியத்திலும்சரி, மிகவும் முக்கியமானது ஒப்புதல் அல்லது ஒப்பந்தக்கொள்கை (consent or contract) ஆகும். வேறெங்கும் இல்லாத அளவிற்கு, இங்கு வரலாற்றுண்மைக்கும், உளவியல் சார்ந்த உண்மைக்கும் உள்ள வேறுபாட்டை நாம் உணரவேண்டும். மனிதர்கள் துணிகரமாகச் செய்த முடிவினால் ஏற்பட்டதே அரசு என்று 'ஒப்பந்தவாதிகள்' (contractualists) கருதுகிறார்கள். ஒதுக்கப்பெறுவதன் கேடுகளைத் தவிர்க்க, மனிதர்கள் தங்களை அரசியல் அடிப்படையில் ஒழுங்கமைத்துக்கொண்டார்கள். பொது மேலாண்மை அளிக்கும் பாதுகாப்புக்கு ஈடாகத் தனியாள் சுதந்தரமாகச் செயலாற்றும் உரிமையை விட்டுக்கொடுத்தார்கள். இந்த 'ஒப்பந்த'க் கொள்கை, பல முறைகளில் காணப்பெறுவதை இப்பொழுது நாம் பார்க்கவேண்டுவதில்லை. இது நிச்சயமாக வரலாற்றில் நிகழாதது என்பது வெளிப்படை. ஏனெனில் அரசியல் ஞானம், சுயகட்டுப்பாடு போன்ற பல பண்புகளைப் பூர்வீக மனிதன் பெற்றிருந்ததாக இக் கொள்கை அனுமானிக்கிறது. இப் பண்புகள், மனிதனால் பல யுகங்களாக மிகுந்த சிரமத்தின்பேரில் பெறப்பட்டவையாகும்.

ஆனால், ஒப்பந்தக் கொள்கையானது எவ்வளவுதான் வரலாற்றுச் சார்பற்றதெனினும், அரசியல் உறவுகள் அமைப்பு முறையைக் கட்டவும், நிலைக்கச் செய்யவும் துணைசெய்யக் கூடிய, ஒரு சரியான அனுமானத்தை அளிக்கும் சிறப்பைப் பெற்றிருக்கிறது. நிலைத்த தன்மை பெற்ற எந்த அரசும் மக்களின் ஒப்புதல் இல்லாமல் நிலைக்கமுடியாது என்ற அடிப்படை உண்மையை இது வலியுறுத்துகிறது. மேலும் அரசானது மக்களாலேயே ஆக்கப்படுகிறது.

அவர்களுக்கு முந்தியோ அல்லது அவர்கள் இல்லாமலோ அரசு இருக்கமுடியாது. அரசிற்கு மக்கள் கொடுத்த மேலாண்மை தவிர வேறு இல்லை. அரசாங்கத்திற்கும் ஆளப்படுவோருக்குமுள்ள உறவானது முக்கியமாக ஒப்பந்தத்தின் அடிப்படையாலோ அல்லது பேரத்தினலோ ஏற்பட்டதாகும். அரசு தன் பங்காகிய அதாவது அதன் 'சாசனத்தில்' சொல்லப்பட்டிருக்கும் எல்லாவற்றையும் செய்து முடிக்கவேண்டும். அதில் காணப்படாத வேறென்றையும் செய்யக்கூடாது. இவ்வாறு தன் பங்கை நிறைவேற்றினல் மக்கள் அதற்குப் பணிவார்கள் என்றெல்லாம் இக் கொள்கை கூறுகிறது.

இவ் வொப்பந்தக் கொள்கைகள் எவ்வளவுதான் விஞ்ஞானத் திற்குப் புறம்பானவெனினும், மக்களைத் தாழ்த்தி அதன் அடிப் படையில் அரசு உயர்த்தப்படும் கொள்கைக்கு இவை மாற்றுக் கொள்கைகளாக இருக்கின்றன. நமது அரசியல் அமைப்பு முறைகளை ஒப்பந்தம் இருப்பதுபோல் நினைந்து நாம் அமைக்க வேண்டும். அதிகாரத்துவத்திலிருந்து நம்மைக் காக்கக்கூடியது இது ஒன்றே ஆகும். 'தனியாள்' உரிமைகளை வலியுறுத்திப் பெற்றுக்கொள்ளும் அடிப்படையும் இது ஒன்றேதான்.

## (iii) அரசின் பரிணமம்: ஆதி காலம்
## (The Evolution of the State: Ancient Times)

வரலாற்றில் அரசின் தோற்றுவாய்பற்றி ஆராய்வது, அறிஞர் களுக்குச் சுவையுள்ளதெனினும், நம்முடைய பிரச்சினைகளுக்குத் தீர்வுகாண அது உதவிபுரிவதில்லை. பழங்காலமாவது வெகு காலத்துக்கு முற்பட்டதாகவும் விளக்கமற்றதாகவும் இருப்பதால் நிகழ்காலத்திற்கும், இன்னும் குறைவான அளவில் எதிர் காலத்திற்கும் விளக்கம் தரக்கூடியதாக இல்லை. இப்படியாக அமைக்கப்பெற்ற ஆதி அமைப்புக்களிலிருந்து, கிடைக்கக்கூடிய சுவடிகளிலிருந்து அரசு எப்படிப் பரிணமித்தது என்பதை, இப்போது பார்க்கலாம். இதன் மூலமாகப் பலவிதமான அரசுகளின் பரிணமத்தைத் துல்லியமாக நாம் ஆராயமுடியும். ஒரே வகையான பரிணமம் இருந்ததில்லை. பல்வேறுபட்ட வகைகள் ஒருங்கே சேர்ந்து காணப்பட்டன; இன்றும் காணப்படுகின்றன.

### ஆதிகாலத்திய அரசின் முறைகள்

மிகவும் பழைமைவாய்ந்த அரசுகள், மத்திய நில நேர்க் கோடுகளிலுள்ள (middle latitudes) பெரிய நதிகளான நைல்,

யூப்ரடீஸ், டைக்கிரீஸ், சிந்து, கங்கை, மஞ்சள்நதி, யாங்ட்ஸீ (Nile, Euphrates, Tigris, Indus, Ganges, Yellow River, Yang Tse) ஆகிய நதிகள் மருங்கேஎழுந்தன. இயற்கையாக இந்தச்செழிப்பான சமவெளிகள் எச்சமான செல்வத்தின் உறைவிடங்களாக விளங்கின. இச் செல்வம் நகரங்களில் வந்து தேங்கியது. இந் நகரங்கள் வணிகப் பரிவர்த்தனைக்கும், ஆட்சித் துறைக்கும் மையங்களாக விளங்கின. இவ் வரசுகள், மேல்வாக்கில் விரிவடையும் போக்குடையவைகளாயிருந்தன. (கப்பற்போக்குவரத்துச் சாத்தியமில்லாத) நதியை விட்டுத்தள்ளி, உள்நாட்டிற்குள் இந்த விரிவு ஏற்பட்டு மலைகளோ அல்லது பாலைவனங்களோ குறுக்கிடும்வரை விரிந்துகொண்டே சென்றன. அவைகள் அதிகாரமும் சொத்தும் படைத்த அரசுகளாகச் செல்வத்தாலும், இராணுவ வலிமையாலும் கட்டப்பெற்றிருந்தன. அவைகள் வெளியேயுள்ள நாடோடிக் குடிகளின் பொருமையைக் கிளறிவிட்டன; அல்லது அவர்களுக்குள்ளேயே பொருமை மூண்டது. அவைகள் நிலைத்த தன்மை பெற்றிருக்கவில்லை. வெற்றிபெற்றவர்கள், தங்கள் முறையில் தோற்றவர்களானார்கள். சில சமயங்களில் கீழ்ப்பட்ட அதிகாரி ஒருவரால் உள்ளுக்குள்ளேயே புரட்சி ஆரம்பிக்கப்பட்டதால் இவை வீழ்ச்சியடைந்தன. இவ் வதிகாரிகள் தங்களிடத்தில் அளிக்கப்பட்ட மாகாணத்தைச் சுதந்தர அரசாக ஆக்கியதாலோ அல்லது தமக்கு மேலுள்ள அரசனை முறியடித்துத் தாமே பட்டம் சூட்டிக்கொண்டதாலோ இவை வீழ்ச்சியுற்றன. கைப்பற்றுதல்மூலம் நாட்டை விரிவுபடுத்துவது, பிறகு அங்குப் பிரிவு ஏற்படத் தகர்வது, பின்னர் மீண்டும் அமைப்பது, தங்களுக்குள்ளாகவோ அல்லது வெளியிலிருந்து வந்தோ நாடு கைப்பற்றப்படுவது ஆகிய படிமுறைகள் ஆதிப் பேரரசுகளில் சாதாரணமாகக் காணப்பட்டன.

ஆனால் அரசியல் வாழ்க்கையில் இவை நிலையற்றிருந்தாலும், சமூக வாழ்க்கையில் நிலையாக இருந்தன. ஏனெனில் அவைகள் நிலைப்படுத்தும் தன்மையுள்ள உழவுத்தொழிலை அடிப்படையாகக் கொண்டிருந்தன. உழவன் இடம் பெயரமாட்டான்; மாற்றத்தை விரும்பமாட்டான்; நிலத்தை அவன் பயிரிடுவதற்குக் குறைந்தபட்ச அளவு பாதுகாப்பு உறுதி அளிக்கப்பட்டிருக்கும் வரையில் அரசியல் ஏற்றத்தாழ்வுகளில் அக்கறை காட்டமாட்டான். 'எல்லாச் சமூகச் சூழ்நிலைகளிலும் உழவனே நிரந்தரமும் பழைமை விரும்பும் குணமும் பெற்றவன். எல்லாவற்றிற்கும் மேலாகப் பொறுக்கமுடியாததாக இல்லாத மட்டில், பழக்கமான வழியை நிலைநிறுத்த அவன் எப்பொழுதும் விழைகிறன்; காரியங்களின் ஒழுங்கு முறையை அவன் ஏன் என்று கேட்கவோ அல்லது அதை மாற்றியமைக்கவோ விரும்புவதில்லை. இயற்கையின் சக்திகள் தவிர்க்கமுடியாத

காரியங்களைப்பற்றிய உணர்வையும், மேலாண்மைக்குப் பணிந்து போவதில் தன்னைப் பிரதிபலிக்கும் நிலையையும் அதே சமயத்தில் மனம்போல் போவதுமான சக்திகளைப்பற்றியும் அவனுக்கு அறிவிக்கின்றன. அரசனுக்கும் கடவுளுக்கும் உள்ள தூரம் அவனைப் பொறுத்தமட்டில் ஒரு சிறு அளவுக்கூறுதான். எனவே, நிலப் பேரரசுகளின் வர்க்க அதிகாரத்தோடு உழவன் இணக்கம் உடையவனயிருந்தான்' என்று மாக் ஐவர் (Mac Iver) கூறுகிருர்.

முக்கியமான சமூக, பொருளாதாரக் கட்டுக்கோப்பின் நிரந்தரத் தன்மையானது இந்த ஸ்தாபனங்களின், வளர்ச்சியில் குறிப்பாகக் காணப்படுகின்றது இது இன்னும் பூர்வீகக் குடியாக இருக்கும் மக்களிடமிருந்து, உண்மையான அரசைப் பிரிக்கிறது. சட்டம், பரம்பரையையும், பழக்கத்தையும் மாற்றுகிறது. ஒழுங்காக அமைக்கப்பெற்ற இராணுவங்கள் இதில் மிக முக்கியமானவையாகும். யுத்தம் செய்வது, விரிந்த பன்னுட்டுத் தொடர்புகளுக்குரிய விதிகளை ஆக்கித்தந்தது.

## கிழக்கத்தியப் பேரரசுகள்

இவ் வரசுகள் பூர்வீகமானவை யென்றும், காட்டுமிராண்டித்தன மானவை என்றும் நினைத்துக்கொள்ளக்கூடாது. பாபிலோனி யர்கள், (Babylonians) எகிப்தியர்கள் (Egyptians) ஆகியவர்களின் விஞ்ஞான அறிவைப் பற்றியும், காலத்தைக் கூறுகளாக்கியதைப் பற்றியும், கணிதக் கணிப்புகளைப் பற்றியும் பெரும்பாலானவர்கள் அறிவார்கள். ஹமுராபி (Hammurabi) யின் சட்டத் தொகுப்பு (code) வாழ்க்கையின் ஒவ்வோர் அம்சத்தையும் விரிவான பகுத் தறிவோடு ஒழுங்குபடுத்தியிருந்தது. மிக உயர்வான முறையிலே அமைக்கப்பெற்ற, பணிகள்படி, மரபுப்படி, அமைக்கப் பெற்ற ஒரு செழிப்பான சமுதாயத்தை அது காட்டுகிறது. பதவிச் சுழற்சி (rotation of office), வருடாந்தர நியமனங்கள், இரகசிய வாக்குப் பதிவு முறையில் தேர்தல் முதலியவை சுமேரியர்களால் (Sumerians) ஏற்படுத்தப்பெற்றதாகச் சொல்லப்படுகிறது.

சட்டரீதியாகவோ அல்லது மறைமுகமாகவோ உள்ள அடிமை முறைமீதும், வரி வசூலிப்பவர்மீதும் எழுப்பப்பெற்ற கிழக்கத்தியப் பேரரசு முறையைப் பின்பற்றித்தான் சமீப காலம் வரையில் உலகத்தின் பெரும்பகுதி ஆளப்பட்டுவந்தது. கிழக்கு மத்திய தரைக்கடலைச் சேர்ந்த கடல் சார்ந்த நாடுகள், ரோமப் பேரரசு, (Roman Empire) பின்னர் ருஷ்யாவுக்கு மேற்கேயுள்ள ஐரோப்பா, ஆகிய நாடுகள் மாத்திரமே இதற்கு விதி விலக்குகளாக இருந்தன.

இவைகளைத் தவிர வேறு முறைகள் இருந்ததற்கு ஆதாரங்கள் இல்லை. ஆப்பிரிக்காவிலும், பசிபிக் தீவுகளிலும் பூர்வீகக் குடிகளின் முறை வழக்கிலிருந்தது. கிழக்கத்தியப் பேரரசு முறையை அதன் கொடுங்கோன்மைக்காகவும், கடுமைக்காகவும், யுத்த வெறிக்காகவும், குறைசொல்லும்போது, நாம் நினைவில் கொள்ளவேண்டியவைகளில் முதலாவது எதேச்சாதிகாரம். பழக்கங்களாலும், பரம்பரையாலும், சமயத்தாலும் நடைமுறையில் அது வரம்புக்குட்படுத்தப் பட்டிருந்தது. அடுத்தது உலகத்தின் பெரும் பகுதிகளைக் கூடிய மட்டும் ஒழுங்காகவும் அமைதியாகவும் வைத்திருந்தது. முடிவாக, இதன் அங்கத்தினர்கள் இந்த முறையைத் தவிர வேறு எதைப்பற்றியும் கனவுகூடக் காணவில்லை. பஞ்சம், மிகையான வரிப்பளு, குறிப்பிட்ட அதிகாரிகளின் மோசமான நடத்தை முதலியன அவ்வவ்விடங்களில் புரட்சிகளை உண்டாக்கி இருக்கலாம். ஆனால் அது பல நூற்றாண்டுகளாக முக்கியமானதாக இருந்துவந்தது. குறித்த சில சந்தர்ப்பங்களில் அதன் பணியைச் செய்யப் போதுமானதாக இம்முறை இருந்திருக்கவேண்டும் என்ற உண்மையை இது காட்டுகிறது. இவ்வகைப் பேரரசுகளில் பல பயனற்றும் இருந்த காலங்களுண்டு. சில காலம் அதிகமாக இருந்துவிட்டது என்பதால் அது மானிட வளர்ச்சிக்கு அளித்த கொடைகள் இல்லாதுபோய்விடா.[1]

அரசியல் மாணவரின் கண்ணோட்டத்தில், இந்தப் பேரரசுகளைப் பற்றிப் படிப்பது அதிகப் பயன்தராது. அவைகளில் ஒன்றுகூட ஆராய்வதற்குரிய முக்கிய ஸ்தாபனங்களைப் பரிணமிக்கவில்லை.[2] அவைகளுள் ஓர் இயங்காத் தன்மை இருந்து, பக்கவாதம் (உடலுறுப்புக்கள் செயலற்றுப்போகும் தன்மை) வந்தது போன்ற ஒரு நிலை இருந்தது. வெற்றிகரமாகப் போரிட்டு விரிவடைந்திருக்கலாம்; அல்லது தோற்கடிக்கப்பட்டு நசித்துப் போயிருக்கலாம். ஆனால் அவர்களது அரசியல், சமூக, பொருளாதாரக் கட்டமைப்புகளில் எந்தவிதமான மாற்றங்களும் ஏற்படவில்லை. அவர்களது கலாச்சார வாழ்க்கையில் எவ்வித வளர்ச்சியும் ஏற்படவில்லை. இயக்க ஆற்றல் சார்ந்த மேற்கு ஐரோப்பியர்களின் முன்பாக இவர்களின் வீழ்ச்சி, தவிர்க்கமுடியாத ஒன்றாக இருந்தது எனலாம்.

1 சீனு, இந்தியா, அரேபியா, துருக்கிப் பேரரசுகள், ருஷ்யா, மத்திய, தென் அமெரிக்கா முதலியன எல்லாம் பல நூற்றாண்டுகள் வரை இப்படிப்பட்ட பேரரசுகளாக இருந்தன.

2 போற்றத்தக்க சீனச் சிவில் பணியானது மிகப் பழங்காலந்தொட்டு போட்டித் தேர்வுகள் மூலம் ஏற்பட்டது என்பதைத் தவிர வேறு எந் நாட்டிலும் அது காணப் பெறவில்லை.

## மேற்கத்திய அரசுகள்

இவ்வாறாக உலகத்தின் ஒரு சிறு பகுதியே, மாறுதல் அடையக் கூடியதும், வேறு வகையானதுமான அரசாங்கங்களை உண்டாக்கின. இவைதான் அரசியல் மாணவனின் கவனத்தை இழுக்கின்றன. இந்த உலகமானது ஈஜியன் (Aegean) கடல், கிழக்கு மத்தியதரைக் கடல் (Eastern Meditteranean) ஆகியவைகளைச் சார்ந்ததாகும். இங்கே குடிகள் சிறிது வேறுபட்ட வழியிலும், பலவிதங்களிலும் வளர்ச்சி யடைந்தனர். இவைகள் எல்லாம் கடலை ஒரு தடையாகக் கருதாமல் நெடுஞ்சாலையாகக் (highway) கருதி அவ்வாறான அடிப் படையில் அமைந்தன. கடல்சார்ந்த நாடுகளாகிய டிராய் (Troy), கிரீட் (Crete), மிசினி (Mycenae), கிழக்கு மத்தியதரைக் கடலைச் சார்ந்த பினிசியர்கள் (Phoenicians), கிரேக்க நாட்டிலும் தீவு களிலும் இருந்த சிறு நகர அரசுகள் (city states) ஆகிய அரசுகளை ஏற்படுத்திய மக்களைப்பற்றி நமக்கு அதிகம் தெரியாது.

இவ்வகைக் கடல்சார்ந்த அரசுகள் எவ்வளவுதான் பல வழிகளில் வேறுபட்டிருந்தாலும், அவைகளின் தோற்றுவாய், கலாச்சாரம், நாகரிகம் ஆகியவற்றில் சில பொது இயல்புகளைப் பெற்றிருந்தன. அதாவது அவையெல்லாம் வாணிகத்திலிருந்து தோன்றியவை. உள் நாட்டுப் பொருள்களை ஏற்றுமதி செய்கிறவர்களாகவோ அல்லது கடற் கொள்ளைக்காரர்களாகக் கொள்ளையடித்த பொருள்களை வியாபாரம் செய்தவர்களாகவோ அல்லது இரண்டிலும் சேர்ந்தவர் களாகவோ இவர்கள் இருந்தார்கள். கடற்கரையை அடுத்த உள் நாட்டின் துறைமுகங்களைக் கேந்திரமாகக்கொண்டு வாழ்ந்ததால் இவ் வரசுகள் சிறியவைகளாகவும், எனவே பாதுகாப்பதற்குச் சுலப மாகவும் இருந்தன. பெரிய பிரதேசங்களைக் கைப்பற்றுவதன் மூலம் அவர்கள் விரிவடையாமல், வணிக ஸ்தலங்களையும், காலனிகளையும் ஏற்படுத்துவதன்மூலம் விரிவடைந்தார்கள். அவர்களுக்கு இயக்கமும், புதிய சூழ்நிலைக்கேற்பத் தங்களை மாற்றி யமைத்துக்கொள்ளும் தன்மையும் இருந்தன. அவர்களுடைய செல்வம் அவர்களின் கப்பல் களிலும் அவர்களது புத்திசாலித்தனத்திலுமிருந்தது. அவர்கள் நகரங்கள், மற்றெல்லாத் துறைமுகங்களையும் போலவே, பலவிதமான மக்கள் சந்திக்கும் இடமாகவும், பொருள்களுக்கு அங்காடியாக மாத்திர மல்லாமல் கருத்துக்களைப் பரிமாறிக்கொள்ளும் இடமாகவும் இருந்தன. பொறியியல் திறமை, சுறுசுறுப்புத் தன்மை, விரைவாகச் சிந்திக்கும் தன்மை முதலியன அவர்களது வாழ்க்கைக்குத் தேவைப் பட்டன. இவ்வகைப் பண்புகளும் அவர்கள் வாழ்க்கையின் சந்தர்ப் பங்களும் அவர்களது எண்ணிக்கைக்கோ அல்லது அவர்களது உடைமையின் அளவிற்கோ, மேற்பட்டதொரு செல்வாக்கை அவர் களுக்கு அளித்தன. மனித மனத்தின் மிகப்பெரிய படைப்புகளில்

ஒன்றுன, அகர வரிசைதான் (alphabet) துணிகரமான இந்தக் கடற் பயணக்காரர்களிடமிருந்து தோன்றியது. இது வெறும் தற்செயல் நிகழ்ச்சி அன்று.

## கிரேக்க நகர அரசுகள்

இவைகளில் ஏதோ ஒன்றிலிருந்துதான் அரசியல் தொடங்கியது என்று சொல்லலாம். ஏனெனில் அரசியல் பிரச்சினைகளுக்கு மனதாரச் சிந்தனை செலுத்திய முதற் குடிமக்கள் கிரேக்க நகர அரசுகளிலிருந்தவர்களே என்று தோன்றுகிறது. 'தோன்றுகிறது' என்று ஏன் சொல்லுகிறேமென்றால், ஆதிப் பேரரசுகள் நல்ல உயர்ந்த அரசியல் சிந்தனையை வளர்த்திருக்கக்கூடும். ஆனால் நமக்கு அது பற்றி ஆதாரம் ஒன்றும் கிடைக்கவில்லை. ஆகவேதான் கிரேக்கர்கள் நமது பாடத்திற்குச் சரியாகவோ அல்லது பிழையாகவோ, முன்னோடிகளாகக் கருதப்படுகின்றனர். அவர்களது அரசியல் ஸ்தாபனங்கள் தனித்தன்மை வாய்ந்தவைகளுமல்ல. பார்க்கப் போனால் அவை ஈஜியன் கடல், கிழக்கு மத்தியதரைக் கடல் ஆகிய கடல்களின் கரையோரங்களிலுள்ள மற்ற நகரங்களிலும் இவ்வகை அரசியல் ஸ்தாபனங்கள் காணப்பட்டிருக்கக்கூடும். இவ்வகையான சுயாட்சி அமைப்பதற்குரிய சூழ்நிலை மற்றவர்களுக்கும் இருக்கத்தான் செய்தது. அதாவது: கடலுக்கு அருகில் சிறு தீவுகள் அல்லது குறுகிய சமவெளிகள், விரிந்து போகாமலிருக்கத் தடைகள், ஒருமைப் படுத்தப்பெற்ற கட்டுப்பாடு, சுதந்தரத்தைப் பேணிக் காத்துக் கொள்வதற்குரிய சுலபமான வழிகள் ஆகியவை எல்லோருக்கும் பொதுவாக இருந்தன.

கிரேக்க நகர அரசு நமக்குப் புதிதாக ஒன்றையும் சொல்லா விட்டாலும், அரசாங்கமும், வாழ்க்கையும் மிக நன்ருக வளர்ச்சி யடையப்பெற்று அவற்றிற்கான ஆதாரங்களுடன், மிக நல்ல வளர்ச்சியின் உதாரணமாக நமக்குக் கிடைத்திருக்கிறது. வேண்டு மென்றே சிந்தித்துக் கூட்டு வாழ்க்கையைப்பற்றிச் சொல்லப் பெறும் சித்தாந்தம் இது ஒன்றேதான்.

இந் நகர அரசுகள் எண்ணற்ற சிறு சிறு கூறுகளாக வெளியார் கட்டுப்பாடில்லாமல் சுதந்தரமாக வாழ்ந்தன. தனித்தலைவர் ஒருவரின் மேலாண்மையின் கீழ்த் தங்களது அரசாங்கத்தை அமைக்காமல், பொதுவிருப்பாற்றல், தனியாள் ஒவ்வொருவரும் பங்கு பெறுதல் என்று எல்லாம் ஏற்படுத்தி அவர்களை ஆளப்படுபவர் களாக இல்லாமல் குடிமக்களாக ஆக்கின. இவைகள் மிகச் சிறியனவாக இருந்ததால்தான் இவர்களால் சுய ஆட்சி பெற்று

இருக்கமுடிந்தது. அரசாங்கத்திற்கும், ஆளப்படுவோர்க்கும் உள்ள தொடர்புகள் மிக நெருங்கியவை ; சிக்கல்களும் உடனடியானவை. எனவே பொறுப்புணர்ச்சியுள்ள தலைவன் ஒருவனின் கைகளில் விட்டுவிடுவதற்குப் பதிலாக இவ் வகை விவகாரங்களை இவர்களே தீர்க்க முற்பட்டிருக்கவேண்டும். இவ்வாறான உணர்ச்சியின் தோற்றத்தை, வரலாற்றில் குறிப்பாகக் கண்டுபிடிப்பது சிரமம். நமக்குத் தெரிந்ததெல்லாம், கிரேக்கர்கள் பரம்பரை ஆட்சி அல்லது அவர்கள் அழைத்ததுபோலக் 'கொடுங்கோன்மை' (tyanny) ஆட்சியை அடியோடு வெறுத்தார்கள்.

## கிரேக்கக் குடிமை (Greak Citizenship)

சமுதாயத்தின் விவகாரங்களைப்பற்றிய எல்லாப் பொறுப்புகளும் எல்லாக் குடிகளின்மீதும் இருந்தன. 'எவன் நகரத்திற்கான நல்ல ஆலோசனைகளை வைத்திருக்கிறானோ அவன் முன் வந்து பேசட்டும்' என்று குடிமையின் கடமையைப்பற்றிச் சுருக்கமாகக் கூறுகிறார் நாடகாசிரியர் யூரிப்பிடீஸ் (Euripides).

கிரேக்கக் குடிமை வரையறுக்கப்பெற்றதும், தனியுரிமை பெற்றதும் ஆகும் என்பதை நாம் மறக்கக்கூடாது. அடிமைகளுக்கும், நகரத்தில் பிறந்த குடிமக்களின் பிள்ளைகளாக அல்லாமல் அங்கே குடியிருக்கும் 'வெளி நாட்டாருக்கும்' குடியுரிமை கிடையாது. குடியுரிமைப் பேறு (naturalisation) அளித்தல் என்பது அவர்கள் அறியாத தொன்றாகும். பொது மரபுபற்றிய பழைய கோட்பாட்டின் ஒருகூறு நிலைத்து இருந்திருக்கவேண்டும். குடிமக்கள் வகுப்பு, மிகவும் சிறிய அளவினதாக இருந்தாலும், அவர்களுக்கு வேண்டிய எல்லா அதிகாரிகளையும் தேர்ந்தெடுத்தும், சட்டமியற்றுதல், நீதி வழங்குதல் ஆகிய பணிகளைத் தாங்களாகவே மேற்கொண்டும், நகரத்தின் கொள்கைக்குக் கூட்டான பொறுப்புடையவர்களாகவும் இருந்து உண்மையிலேயே ஆட்சி புரிந்தார்கள்.

தனியுரிமை பெற்ற குடிமை, எண்ணிக்கையில் சிறியது என்றாலும், அரசின் பெயரால் நடத்தப்பெறும் வேலைகளின் அளவு அவ்வாறிருக்கவில்லை. அதற்கு மாறாக, 'மனித வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும், எல்லா இயல்களிலும், எல்லாக் கலைகளிலும் ஒவ்வொரு பண்பையும், பூரணமான முறையில் தனக்குள் கொண்ட ஒரு கூட்டணி' என்று இருபத்திரண்டு நூற்றாண்டுகளுக்குப் பிறகு பர்க் (Burke) இதைப்பற்றிச் சொல்கிறார். இவ்விதமாகப் பரந்து எல்லாவற்றையும் தனக்குள் அடக்கிக்கொள்ளும் இயல்பானது அரசின் பணிகளை விளக்குவதும், அரசையும் ஏனைய சமூகத்

துறைகளைப் பாகுபடுத்துவதுமாகிய முக்கியமான அரசியல் பணியைக் கிரேக்கர்கள் செய்யாது ஒதுக்கிவிட்டார்கள். 'சமுதாயத்திலிருந்து அரசை வேருக இனம் பிரிக்கத் தவறியதால், அத்தீனிய (Athenian) சுதந்தரம் என்பது உடைந்துபோன, அங்கவீனப் படுத்தப்பட்ட ஒரு சின்னம்போன்றிருக்கின்றது. எல்லாம் தனக்குள் அடக்கிக்கொண்ட அரசு, அதன் பரிமாணம் நகரத்தளவாகவோ அல்லது நாட்டளவாகவோ இருந்தபோதும், சட்டத்திற்கும் வழக்கத்திற்கும், நிறைவேற்றப் பெறுவதற்கும், தானே இயங்குவதற்கும், ஒழுங்கின் நிபந்தனைகளுக்கும், கலாச்சாரத்தின் தேவைகளுக்கும், இடையில் கோடிழுத்துப் பிரிவு காட்ட முடிவதில்லை. அரசு எல்லாவற்றையும் சாதிக்கவல்லது என்ற கொள்கை இருக்கும் வரையில் அங்கே குழப்பங்களும், அடக்கு முறைகளும் இருக்கத்தான் செய்யும். அவ்வாருன ஒரு கொள்கையின் கீழ், இக் கொள்கையைப் பின்பற்றுகிறவர்களாகப் பார்த்து அரசாங்கத்தைக் கட்டுப்படுத்தினுலொழிய, எந்த உயிரும், சமயமும், அபிப்பிராயமும் தப்பிப் பிழைக்கமுடியாது. எனவே, உரிமையின் அடிப்படையில் நிலவும் பலவகைகள் நாகரிகத்தை வளமாக்குகின்றன. ஆனுல், அதுவே 'சர்வ கூட்டணி' என்ற கொள்கைக்குக் கீழ்க்கொண்டு வரப்படும்போது, பலாத்கார மிக்க பிரிவினைகள் நிறைந்த எதிர்ப்புகளாகி, வளப்படுத்துதற்குப் பதிலாக, அதையே அழித்து விடுகிறது' என்று மாக் ஐவர் (Mac Iver) கூறுகிருர்.

## அவையெல்லாம் தோல்விதாஞ?

கிரேக்க அரசியல் பரிசோதனையைப் புகழ்ந்து போற்றுவதில், அது எவ்வளவு குறுகிய காலம் உலகில் இருந்தது என்பதையும் மறக்கக்கூடாது. நிலையற்ற பாரசீகத்திற்கு (Persia) எதிராகத் தங்கள் சுதந்தரத்தைக் காப்பாற்றிக்கொள்ள முடிந்தாலும், மாசிடோனியப் (Macédonia) பேரரசில் பாரசீகமும், மத்திய கிழக்கும் உட்பட எல்லா நகர அரசுகளும் முடிவாக இணைக்கப்பட்டன.

உண்மையில் கிரேக்கக் 'குடியாட்சி'ப் பரிசோதனையானது, வாரிசில்லாமலும், எச்சமில்லாமலும் முழுவதாகத் தோல்வியுற்றுப் போனதுபோல் தோன்றியது. கிரேக்கக் குடியாட்சி அரசுகள் மறைந்துகொண்டிருந்த அதே தருணத்தில், அவைகளின் தத்துவத்தையும், சித்தாந்தத்தையும் இரு பெரும் எழுத்தாளர்கள் தங்களின் சாகாவரம் பெற்ற நூல்களில் வடித்துக்கொண்டிருந்தார்கள் என்பதை எவரும் ஊகித்திருக்க முடியாது. பிற்காலத்தில் அரசியல் சாத்திரத்திற்கு அவை அடிப்படையாக அமைந்தன.

நாடகங்களும், வரலாறுகளும் பிற்காலச் சந்ததியார்கள், கிரேக்க அரசியல் வாழ்க்கையின் அனுபவங்களை அறிந்துகொள்வதற்கு அடிப்படையாக அமைந்தன. 'கிரேக்கர்களின் புகழ்மிக்க அந்தக் காலத்தின்' மிக உயர்ந்த அற்புதமாகிய இவை தப்பிப் பிழைத்தன என்று கூறலாம்.

பிலிப், அலெக்சாந்தர் (Philip, Alexander) ஆகியவர்களின் வெற்றிகளுக்குப் பிறகு உலகம் மீண்டும் பழைய எதேச்சாதிகாரப் பேரரசுகளின் காலக் கட்டத்தை அடைந்தது. இவை 'கலாச் சாரத்திலும், அறிவு வளர்ச்சியிலும் மேம்பட்டவைகளாக இருந்தாலும் அடிப்படையில் முன்னதைப்போலவே இருந்தன. புவியியல் சார்புப்படி பார்த்தால் ஆசியாக் கண்டத்திற்கும், ஐரோப்பாவின் கிழக்கு மத்தியதரைக் கடற் பிரதேசத்திற்கும் மாத்திரமே இப் பேரரசுமுறை பொருந்தி இருந்தது. 'முன்னிருந்த நிலைக்கே' உலகம் மீண்டும் திரும்பிவிட்டாற் போன்று தோன்றியது. அப்பொழுது ஒரு புதிய அரசியல் நிகழ்ச்சி தோன்றியது. இந் நிகழ்ச்சியானது புதுமுறைகளைத் தோற்றுவித்ததோடல்லாமல், அப்பொழுதுதான் மறைந்துகொண்டிருந்த அமைப்பின் முக்கியக் கூறுகளைக் காப்பாற்றிப் பின்வரும் சந்ததிகளுக்கு மரபுரிமையாக விட்டுச்செல்லவும் செய்தது. ரோமின் (Rome) தோற்றமும், வளர்ச்சியுந்தான் இந்த நிகழ்ச்சியாகும்.

## ரோம் நகர அரசு

ஆதியில், இத்தாலியில் இருந்த எண்ணற்ற சிறுசிறு அரசுகளில் ஒன்றே ரோம் நகர அரசு. கிரேக்க நாட்டில் இருந்தவைகளைப் போலவே இவையும் அதே புவியியற் காரணங்களாலும், அதே போன்ற தோற்றுவாயுடையவைகளாகவும் இருந்தன. அவை கிரீஸோடு வாணிகத் தொடர்புடையனவாக இருந்தாலும், அவை விவசாய நாடுகளாகவும் ஒதுங்கி வாழ்பவைகளாகவும் இருந்தன. இத்தாலிக்குள்ளும், பின்னர், அதற்கு வெளியேயும் ரோம் விரிவடைய ஆரம்பிக்கும் வரையில் இவ்வாறிருந்தன.

கிரேக்கர்கள் எவ்வாறு தங்கள் 'கொடுங்கோலரை' (tyrants) விரட்டிவிட்டுக் குடியாட்சி அமைத்தார்களோ, அப்படியே ரோமிலும் அதன் முந்தைய ஆட்சியாளர்களாகிய அரசர்களை விரட்டி விட்டுக் 'குடியரசு' ஒன்றை அமைத்தார்கள்.[1] நகரத்தின் விவகாரங்களைக் கவனிப்பதற்கென்றே இங்கும் ஒரு குடிமக்கள் வகுப்புத்

[1] சாம்ராச்சியக் காலத்திலும், குடியரசு நாட்களிலும் 'அரசன்' (Rex) என்ற சொல் வசவுச் சொல்லாகவே ரோம் நகரில் வழங்கியது.

தோன்றியது. அதீனிய (Athenian) முறைக் குடியாட்சியை ரோம் ஒரு நாளும் பெற்றிருக்கவில்லை. ஒரு பாகம் பரம்பரை மரபாலும், மற்றொரு பாகம் சுயமாகத் தேர்ந்தெடுப்பதன் மூலமாகவும் அங்கத்தினர்களைக் கொண்ட 'செனட்' (senate) சபை மற்ற சபைகளைவிடத் தன்னிடத்தில் உண்மையான அதிகாரத்தை வைத்துக்கொண்டதுமல்லாமல் கான்சல்கள் (consuls), அதிகாரிகள் முதலியவர்களைத் தேர்ந்தெடுக்கும் தேர்தல்களிலும்கூடச் சூழ்ச்சித் திறம் காட்டித் தன் அதிகாரத்தை அதிகப்படுத்தியிருந்தது. எனவே ரோமை ஒரு குடியாட்சி அரசு என்று சொல்வதைவிட உயர்குடிச் சிறு குழுவாட்சி (aristocratic oligarchy) என்று அழைப்பது மிகப் பொருத்தமுடையதாகும். வலிமை மிக்க மனிதன் ஒருவனிடத்தில், செனட் தன் அதிகாரங்களை முழுவதும் இழக்கும் வரை இந் நிலை நீடித்தது. முதலில் வெற்றி வீரர்கள் வலிமையுள்ள மனிதர்களாக அந் நாளில் கருதப்பட்டார்கள். மாரியஸ் (Marius), சல்லா (Sulla), முடிவாக, சீசர் (Caeser) ஆகியவர்கள் முதலில் தலைவர்களாக இருந்தனர். பின்னர் சீசரின் மருமகனான அகஸ்டஸ் (Augustus) ஒரு மரபுரிமை கொண்ட எதேச்சாதிகாரத்தை நிறுவினர்.

நகர அரசாகவும், குடியரசாகவும் இருந்த ரோம் நகரம் அரசியல் ஞான வளர்ச்சிக்கு ஒன்றும் செய்துவிடவில்லை. ஒருவேளை, எதேச்சாதிகாரச் சார்பு அல்லது உயர்குடிச் சார்பு எவ்வாறு குடியாட்சிமுறையை ஒன்றுமற்றதாகச் செய்துவிடும் என்பதை வேண்டுமானல் அது காட்டலாம். இருக்கும் சுதந்தர ஸ்தாபனங்களை முழுக்க அழிப்பதன்மூலம் சச்சரவுகளையும், எதிர்ப்புகளையும் உருவாக்கிக்கொள்ளாமல், இரகசியமாகவும், படிப்படியாகவும் அவைகளின் உண்மையான அதிகாரத்தைக் குறைத்து அவர்களின் வெளி உருவமைப்பிற்குப் பெரிதும் மரியாதைகாட்டி நடந்துகொள்வது தான் கொடுங்கோன்மையை ஏற்படுத்துவதற்குச் சரியான வழியாகும் என்று பிந்திய சர்வாதிகாரிகளுக்கு ரோம் பாடம் போதித்தது என்று சொல்லலாம். இதைத்தான் இரண்டு நெப்போலியன்களும், முசோலினியும், ஹிட்லரும் செய்தனர்.

## ரோமாபுரிப் பேரரசு

பேரரசின் தலைநகராக இருந்தபோது ரோம் அதிக முக்கியமான நன்மைகளை அளித்திருக்கிறது. ஃபிரான்சு, ஸ்பெயின், இங்கிலாந்து, மேற்கு ஜெர்மனி, வட ஆப்பிரிக்கா ஆகிய நாடுகளை ஒன்று சேர்த்ததால் அன்று தெரிந்திருந்த அரசியல் உலகம் விரிவுடையதாக இருந்தது. மத்தியதரைக் கடல் ரோமாபுரிக்கு ஓர் ஏரியைப் போன்றும், இங்கிலீஷ் கால்வாய் 'ரோமாபுரி உலகத்தில்' உள்ள

பெரியதொரு நதியைப்போன்றும் அவர்களுக்கிருந்தது. பிரெனீஸும், ஆல்ப்ஸ் மலைகளும் எல்லைகளாக இருக்கவில்லை.

இரண்டாவதாக, பேரரசு நடத்தப்பட்ட முறைகளைப் பற்றிச் சொல்லலாம். விசுவாசமான உள்ளூர்த் தலைவர்களையே ரோமாபுரியின் மாற்றுருட்களாக நியமித்தல், தல வழக்கங்களுக்கும், விதிகளுக்கும் எங்கே அவை ரோமாபுரியின் அடிப்படைக் கொள்கைக்கு எதிராக இல்லையோ, அங்கே மரியாதை காட்டி, ரோமின் சட்டமுறையைக் கிட்டத்தட்ட எங்கும் நிலைநாட்டியமை ஆகிய முறைகளைக் குறிப்பிடலாம். ரோமாபுரிச் சட்ட அமைப்பின்படி அடிமையிலிருந்து, சுதந்தரமான குடிமகன் முழுச் சுதந்தரக் குடிமகன் என்றெல்லாம் அந்தஸ்துகளின்படிச் சட்டம் பிரயோகிக்கப் பட்டாலும், சட்டத்தை மிகவும் கடுமையாகப் பிரயோகித்ததன் பயனாகச் சட்டத்திற்கே ஒரு தனி மேன்மை ஏற்பட்டது. மேலும் விசுவாசமுள்ள பேரரசின் அங்கத்தினர் எல்லோருக்கும் முழுமையான ரோமாபுரியின் குடியுரிமை அளிக்கப்பெற்றதால், அவர்கள் எந் நாட்ட வராயினும் ரோமாபுரியின் அமைப்பைக் காத்துக்கொள்வதில் அக்கறை இருந்தது.

மூன்றாவதாக, இது நேரடியான அரசியல் சார்பற்றதெனினும், சொல்லப்படவேண்டிய ஒன்றாகும். திறமையான போலீஸ் படை ஏற்படுத்தியது; அருமையான சாலைகளை அமைத்தது; கப்பல்மூலம் சுலபமான போக்கு வரத்துக்களை அமைத்தது; குதிரை, கோச்சு முதலியவைகளின் மூலமும் போக்குவரத்து வசதிகளை ஏற்படுத்தியது; அப்பொழுதிருந்த நாகரிகமுள்ள நாடுகளனைத்தையும் கொண்ட பரந்த பிரதேசத்தில் வரையிலா வாணிகத்தை வளர்த்தது போன்றவைகள் குறிப்பிடப்படவேண்டியவை ஆகும். ரோமாபுரி உச்ச நிலையில் இருந்தபோது இவையெல்லாம் இதுவரை உலகம் கண்டிராத அளவுக்குச் செல்வத்தையும், மேன்மையையும் அதற்கு அளித்தன.

## ஏகாதிபத்திய முறையின் குறைபாடுகள்

அப்படியானால் எல்லாமே சரியாக இருந்தன என்பது பொருள் அன்று அடிமை முறை மிகவும் கொடூரமாயிருந்தது. கிறிஸ்தவ சகாப்தத்தில் மூன்று நூற்றாண்டுகள் வரை, மதத் துன்புறுத்தல்கள் அடிக்கடி ஏற்பட்டன. புல சக்கரவர்த்திகள் பொறுப்பற்ற கொடுங் கோலர்களாக இருந்தார்கள். இத்தாலியின் எல்லைக்கு வெளியே இந்தக் கொடுங்கோன்மை காணப்படவில்லையெனினும், மாநிலங் களில் நல்லாட்சி நிலவியதெனினும், ஆட்சித் துறையில் குறை

பாடுகள் மலிந்திருந்தன. அதிகார வர்க்கம் துணிச்சலற்றதாயும், வேலை யிழப்பதைப்பற்றி அச்சம் கொண்டதாயும், தன்னால் ஆளப் படும் மக்களை நம்பாததாயும் இருந்தது. பேரரசின் பல பகுதிகள் நன்றாக இணைக்கப்பட்டிருக்கவில்லை. அவர்களது ஒரே இணைப்பு, ரோமுக்குக் கட்டுப்பட்டிருப்பதில் மாத்திரமே காணப் பட்டது. தல ஆட்சியில் குடியாட்சி போதுமான அளவிற்குக் கொடுக்கப்பெறவில்லை. நல்ல சிவில் பணித்துறை அமைத்தல், கூட்டாட்சி ஒன்றை ஏற்படுத்தல், பிரதிநிதித்துவ அமைப்பு உண்டாக்கல் போன்ற பலவற்றைச் செய்யவும் தருணங்களிருந்தும், அவற்றை ரோம் தவறவிட்டுவிட்டது.[1] ஸ்தாபனங்கள் அமைப்பதில் அது ஆக்கியதெல்லாம், நகராட்சியில் சுய நிருவாகத்தை வளர்த்தது ஒன்றுதான் என்று சொல்லலாம்.

வேறு சொற்களில் சொல்லப்போனால், அது மிகவும் ரோமாபுரிச் சார்புடையதாக இருந்தது. மிகவும் மைய மயமாக்கப்பட்டிருந்தது. ரோமாபுரியின் விருப்பங்களும், நலன்களும் அந்த அமைப்பில் அதிக ஆதிக்கம் பெற்றிருந்தன. சக்கரவர்த்தியின் ஆளுந் தத்துவத் தின்மீது அதிகச் சார்புடையதாயிருந்தது. இவையெல்லாம் அந்த அமைப்பின் குறைபாடுகள் ஆகும். ரோமுக்கு அரசியல் ஞானம் ஓரளவிற்கு இருந்தது. ஆனால் ஆக்கப் படைப்பறிவு போதவில்லை. இன்னும் அதிக ஞானமும் சூழ்நிலைக்குத் தக்கவாறு மாற்றி யமைத்துக்கொள்ளும் திறனும் இருந்திருந்தால் ரோமப் பேரரசு நிலைத்திருக்கும். அதை எதிர்ப்பவர் எவரும் இருக்கவில்லை. ['புறச்சாதியார் (barbarians) படையெடுப்புகள்' என்பது உள் நாட்டுக் குழப்பமும், வெளியார் படையெடுப்பும் சேர்ந்த ஒன்றாகும். நல்ல அமைப்பும், ஒருமைப்பாடும் இருந்திருந்தால் அதை வெகு எளிதில் அடக்கியிருக்கலாம்.] கிறிஸ்தவ மதத்தைத் தழுவியதன் மூலம் எதிரியாகக் கூடிய ஒன்றைத் துணையாக்கிக் கொண்டது திருச்சபைக்கு ஒரு வேளை இல்லாவிட்டாலும், ரோமுக்குக் கிடைத்த இராஜ தந்திர வெற்றிகளில் ஒன்றாகும். வேறெந்த வரலாற்று நிகழ்ச்சிகளைக் காட்டிலும், ரோமின் வீழ்ச்சி தவிர்க்க முடியாதது என்று சொல்வதற்கில்லை.

[1] அச்சு முறையை ரோம் கிட்டத்தட்டக் கண்டுபிடித்திருந்தது. இயங்கும் அச்சுக்கள் உபயோகப்படுத்தப்பட்டன. ஆனால் நகல் எடுக்கும் அடிமைகள் எண்ணிக்கையில் அதிகமாகவும் மிகவும் மலிவாகவும் இருந்ததால், நூல்களை அச்சடித்துப் பெரிய அளவில் வெளியிடுவதற்குப் போதுமான தேவை இருக்கவில்லை.

## (iv) அரசின் பரிணமம்: இடைக்காலம்

### பைசாண்டைன் பேரரசு (Byzantine Empire)

நாகரிக உலகம் முழுவதையும் ஒரு குடைக்கீழ்க் கொணரும் நம்பிக்கை, ரோமின் வீழ்ச்சியோடு மறைந்தது. ஒற்றுமைக்குரிய கடைசி நம்பிக்கையும் மறைந்தது. அதன் கிழக்குப் பகுதியில் ஒரு சிக்கலும் எழவில்லை என்பது உண்மையே. இதற்கு நூறுண்டு களுக்கு முன்பே பேரரசு இரண்டு கூறுக்கப்பட்டு, சீசர்களின் வழி வந்தவர்கள் பைசாண்டியத்தில் (Byzantium) ஏகாதிபத்திய எதேச்சாதிகாரப் பரம்பரையைத் தொடர்ந்து நடத்திவந்தனர். அவர்களுக்குப்பின் வந்த அராபியர்கள், துருக்கியர்கள் (Arabs, Turks) அரசாங்கத்தில் புதுமையான கொள்கை எதையும் புகுத்தி விட வில்லை. இந்தக் கிழக்கத்தியப் பேரரசு, முதலாம் உலகயுத்தம் முடியும்வரையில் பொறுப்பற்ற கொடுங்கோலாட்சிக்குட்பட்டுத் தானிருந்தது. இப் பகுதி மக்களின் சுதந்தர உணர்ச்சியையும், தன்னுக்க உணர்ச்சிகளையும் இவ்வகை ஆட்சி அழித்துவிட்டது. மோசமான அரசாங்கம், திறமையின்மை, ஊழல்கள் ஆகியவைதான் இந் நாடுகள் பழைய பேரரசிலிருந்து பெற்ற மரபுரிமைச் சொத்துக் கள் ஆகும். ஆகவே முந்திய ஆட்டோமன் (Ottoman) பேரரசி லிருந்து தோன்றிய புதிய சுதந்தர நாடுகள் இந்தப் பயங்கரமான பளுவைத் தூக்கியெறிய வேதனையோடு இன்னும் முயற்சி செய்து கொண்டிருக்கின்றன.

இப் பேரரசின் மேற்குப்பகுதியின் தலைவிதி வேறுமாதிரி யாயிற்று. ரோமாபுரியின் ஆட்சி நசித்துப் போனபோது, இப் பகுதி சிறு சிறு துணுக்குகளாகப் பிரிந்து அரசு என்று சொல்வதற்கே முடியாமற் போய்விட்டது. ‘பூர்வீகக் குடிகளிலிருந்து மீண்டும் அரசை அமைக்கவேண்டி நேரிட்டது’ என்று மாக் ஐவர் (Mac Iver) கூறுகிருர்.

### மேற்கத்திய நிலப்பிரபுத்துவம்

இந்தக் குழப்பமும், கலவரமும் நிறைந்த ஒரு நிலைமையிலிருந்து மீண்டும் அரசை அமைப்பது மிகவும் கடினமானதாகவும், தாமத மாகவும் இருந்தது. ஆனல் இவையெல்லாவற்றிற்கும் அடிப் படையான உண்மையாக இருந்தது நிலம் ஒன்றுதான். நிலக்கிழார் தம் அடிமைகள்மீதும், பண்ணையாட்கள்மீதும் செலுத்திய அதிகாரம் உண்மையானதாக இருந்தது. அவருடைய நிலப்பகுதிக் குள்ளாக ஒழுங்கையும், குறைந்தபட்சம் பொருளாதார நடவடிக்கை

களையும், அவரால் நிலைக்கச்செய்யமுடிந்தது. ஒவ்வொரு மாவட்டமும் ஒரு பிரபுவுக்குக் கீழிருந்தது. அவர் ஒரு குட்டி அரசரைப் போல் அதை ஆட்சிசெய்தார்; பிரதான குத்தகைக்காரர்களுக்கு அவர்களிடமிருந்து பெறும் சில சொந்த சேவைகளுக்காகத் தம்முடைய அதிகாரத்தை ஒப்படைத்திருந்தார். இவ் வகையான சொந்தப் பணிகள் பெரிதும் போர்ப்பணிகளாகவும் கடன்களுக்காகப் பெற்ற சேவைகளாகவும் இருந்தன.

அரசியல் அதிகாரமானது, நில உடைமையோடு தொடர்பு படுத்தப்பெற்றிருந்தது என்ற முக்கியக் கொள்கையின்பேரில் எழுப்பப்பெற்றதுதான், நாம் பொதுவாக அழைக்கும் நிலப்பிரபுத்துவ முறை (feudal system) என்பது. 'முறை' என்று சொல்வது துல்லியமான ஒன்றைக் குறிக்கும். ஆனால் நிலப்பிரபுத்துவம் என்பது ஒரு நாகரிகமாகவும், சமுதாய அமைப்பாகவும் இருந்ததே யொழிய அரசியல் அல்லது பொருளாதார அல்லது சமூக ஒழுங்கமைப்பாக இருக்கவில்லை. அரசியல் ரீதியில் நோக்கினால், நிலப்பிரபுக்கள் மத்திய அதிகாரம் நசித்துப்போனபோது ஏற்பட்ட காலியிடத்தைப் பூர்த்திசெய்து ஆட்சி நடத்தியதைக் குறிக்கும். ஆட்சி செய்வதற்கு ஏதோ ஒரு கண்ணுக்குப் புலனாகாத உரிமை அடிப்படையில் விரும்பாது, குறிப்பிட்ட நிலப்பகுதியைக் கட்டுப் படுத்தி வந்ததே ஆட்சியின் அடிப்படையாக அமைந்தது. ஏனெனில் அது தவிர்க்க முடியாததும், நேருக்கு நேராக இருந்த ஒன்றுமாகும். இவ்வாறான பொருளில் பார்த்தால் வலிமையே உரிமை என்றாயிற்று.

பிறகு, படிப்படியாக அரசு மீண்டும் கட்டப்பெற்றது. வலிமை மிக்க பிரபுக்கள் வலிமை குன்றியவர்களை அடக்கினார்கள். அதிலிருந்து சிறு இராச்சியங்கள் தோன்றி, திருமணங்களாலோ அல்லது நாடு கைப்பற்றுதலாலோ கொஞ்சங் கொஞ்சமாக விரிவடைந்து, வலிமையான பெரிய இராச்சியங்கள் தோன்றின. சில சமயங்களில் பொதுமக்கள் பெரிதும் விரும்பியபடி, பிரபுக்களால் அன்றிப் புதிய அரசர்களால் ஒருமையாக்கப்பட்டு அல்லது பிரபுக் களின் அதிகாரம் அரசர்களால் கட்டுப்படுத்தப்பெற்றுப் புதிய இராச்சியங்கள் தோன்றின. இவ்வாறுதான் ஃபிரான்சும் (இப்பொழுதிருப்பதைக் காட்டிலும் சிறியது,) இங்கிலாந்தும் அரசுகளாயின. ஜெர்மனியிலும், மத்திய ஐரோப்பாவிலுமுள்ள சிறிய நிலக்கூறுகள் புனித ரோமச் சக்கரவர்த்தி (Holy Roman Emperor) என்று அழைக்கப்பெற்ற, தேர்ந்தெடுக்கப்பெற்ற தலைவர் ஒருவரின்கீழ், ஒரு நெகிழ்ச்சியான கூட்டாட்சியை அமைத்துக் கொண்டன. இவைகளும் இன்னும் கணக்கற்ற சிறு நகர

அரசுகளும், மேற்கத்திய உலகப்படத்தையே புதிதாக்கின. அரசு மீண்டும் இவ்வாறு வளர்ச்சியுறலாயிற்று.

## இடைக்காலத்தில் திருச்சபை

இவ்வாறான புனரமைப்பில் அரசியல் இன்றியமையாத தொன்ருக இருந்தது என்பது மட்டுமல்லாமல் திருச்சபையின் ஒருமைப்படுத்தும் செல்வாக்கும் மிக முக்கியமானதாக இருந்தது. ஒரே வழிபாடு, ஒரே கலாச்சாரம், வாழ்க்கையின் பல துறைகளில் ஒரே சட்டம், நாகரிகமாகப் பேசுவதற்கு என்று ஒரே மொழி ஆகியவைகளை அளித்துத் திருச்சபையானது ரோமர் ஆட்சியிலிருந்து சிதறிக்கிடந்த கூறுகளை ஒன்ருகக் கட்டிக் காத்துவந்தது. இதுவே பின்னர் எதிரெதிரான அரசியல் சக்திகளை உருவாக்கவும் துணை புரிந்தது. மதத்தின் ஒருமைப்படுத்தும் சக்திக்கும் மேற்பட்டதாக இச் சக்திகள் இருந்துவிட்டன.

ஆனல், அரசியல் புனரமைப்பில் திருச்சபை பங்குபெற்றமை திருச்சபைக்கும் அரசுக்குமுள்ள தொடர்பில் புதிய சிக்கலொன்றை உருவாக்கியது. இது ஒரு புதிய சிக்கல். ஏனெனில் ஒவ்வொரு குறிப்பிட்ட அரசிற்கும் தனியாகத் தெய்வங்களிருந்தன. அரசுகளைக் காப்பாற்றும் தெய்வங்களுமிருந்தன. மதமானது இத் தெய்வங்களுக்குச் செய்யப்படும் வழிபாடாக இருக்கும்வரை இப்படிப்பட்ட சிக்கல் எழுவதற்குச் சாத்தியமேற்படவில்லை. மக்களாலோ அல்லது மத குருக்களாலோ ஏற்படும் திருச்சபையின் அக்கறைகள் அல்லது கொள்கைகள் அரசோடு மோதுகின்றனவாக இருக்கக்கூடாது.

கிறிஸ்தவ மதம் பரவியபோது நிலைமை மாறியது. ஏனெனில், கிறிஸ்தவ மதம் உலக மதமாகையால் தனி அரசின் எல்லைகள் அதைக் கட்டுப்படுத்தக்கூடவில்லை. மேலும், அரசைக்காட்டிலும் கடவுளிடத்தும், போப்பாண்டவரிடத்தும் தங்கள் விசுவாசத்தைக் காட்டினர். எனவே, திருச்சபை ஒரு புதியவகையான சுதந்தரத்தைக் கோரியது. திருச்சபையானது ஆன்மாவுக்குரிய காரியங்களையும், அரசு உலகத்திற்குரிய காரியங்களையும் அல்லது திருச்சபை மனிதனது உள்ளத்தைப்பற்றியும், அரசு அவனது உடலைப் பற்றியும் அக்கறை காட்டவேண்டும் என்று திட்டவட்டமாக இவை இரண்டையும் பிரிக்க முடிந்திருந்தால் ஏதாவது சமரசம் ஏற்படுவதற்குச் சாத்தியமேற்பட்டிருக்கும். ஆனல், திருச்சபை சொத்துக்களை உரிமையாகப் பெற்றிருந்ததால் உலகத்துக்குரிய அமைப்பில் ஒரு முக்கியக் கூருக இருந்தது. நீதித் துறையிலும்

பொதுத் துறையிலும் அது முக்கியப் பங்கு பெற்றிருந்தது. மேலும், திருச்சபைகளைச் சேர்ந்த குருமார்கள் உலக காரியங்களில்கூடத் தாங்களே நியாயம் விசாரித்துக்கொள்வதாகக் கோரினர். அதற்குமாறாக, அரசு, திருமணம், மரபுரிமை, ஆகிய நடைமுறை விவகாரங்களை 'ஆன்மாவுக் குரியன' என்று விட்டுவிடுவதாக இல்லை; அல்லது திருச்சபை எதையெல்லாம் 'குற்றம்' என்று சொல்லுகிறதோ, அதைக் குற்றமாகக் கருதவும் அரசு விரும்பவில்லை.

இடைக்கால வரலாற்றில் பிரதான பாகம், இந்த ஆன்மாவுக்குரிய மேலாண்மைக்கும், உலகத்திற்குரிய அதிகாரத்திற்கும் இடையே நேர்ந்த சச்சரவுதான். சிறுசிறு வெற்றிகள் திருச்சபைக்குக் கிடைத்தனவென்றாலும் இப் போட்டியில் அரசுக்கே இறுதி வெற்றி கிடைத்தது. இதற்குப் பல காரணங்களுள்ளன. அவைகள் சிக்கல் நிறைந்தனவாகையால் இங்கே அவற்றை முழுவதாக ஆராய முடியாது.[1] ஒருதடவை அரசு தன் அதிகாரத்தை ஒருமைப்படுத்தி நிலை நிறுத்திக்கொண்ட பிறகு, அது போட்டியாளர்களைப் பொறுத்துக் கொள்ள முடியாதுபோயிற்று. அதனுடைய எல்லைக்குள்ளாக இருக்கும் திருச்சபைகளின்மீது தேவை என்று கருதும் கட்டுப்பாடுகளை அது சுமத்தியது. கத்தோலிக்க நாடுகளாகிய ஸ்பெயின், போர்ச்சுகல், ஃபிரான்சு ஆகிய நாடுகளில் நிதி விஷயமாகவோ, சட்டம் சம்பந்தமாகவோ அல்லது மதகுருமார் நியமனங்கள்பற்றியோ இறுதியான அதிகாரம் அந் நாட்டு அரசர்களிடத்திருந்தது. இவ் வரசர்கள் கத்தோலிக்க மதத்தில் எவ்வளவு பற்று உடையவர்களாயிருந்தாலும் இம் முறையையே பின்பற்றிவந்தனர். உதாரணமாக, ஸ்பெயின் நாட்டின் அரசரை, 'கத்தோலிக்க மாட்சிமைதங்கிய' என்றும், போர்ச்சுகல் நாட்டு அரசரை 'மகா விசுவாசமிக்க மாட்சிமை பொருந்திய' என்றும், ஃபிரான்சு நாட்டு அரசரை 'மகா கிறிஸ்தவ மாட்சிமை பொருந்திய' என்றும் (His Catholic Majesty in Spain; His most faithful Majesty in Portugal; His most Christian Majesty in France) அடைமொழிகளால் அழைக்கப்பெற்றாலும்-உண்மையில் - அழைத்தனர். மதமானது எங்கெல்லாம் துன்புறுத்தலுக்கு உள்ளாகிச் சட்டவிரோதமாக்கப்பெற்றதோ, அங்கெல்லாம் திருச்சபை ஆன்மாவுக்குரிய சுதந்தரத்தை அரசிடமிருந்து பெற்றது. உதாரணமாகப் ஃபிரான்சில் புராட்டஸ்டென்ட் திருச்சபையையும், இங்கிலாந்தில் கத்தோலிக்கத் திருச்சபையையும் குறிப்பிடலாம். இன்றைக்குள்ள பிரச்சினைபற்றிப் பின்னர்க் கவனிப்போம்.

[1] H. W. C. Davis 'Mediaeval Europe' (Home University Library) என்ற நூலில் இதைப்பற்றிய சிறப்பான விவரம் காணலாம்.

## இடைக்காலத்தில் அரசு

திருச்சபைக்கும் அரசுக்குமிடையே ஏற்பட்ட சச்சரவானது நவீன காலத்திற்கு இடைக்காலம் அளிக்கும் முதல் மரபுரிமையாகும். இரண்டாவது மரபுரிமை ஒரு ஸ்தாபனத்தில் பொதிந்திருக்கும் கொள்கையாகும். அதாவது அரசர்களின் மேலாண்மையைப் பிரதி நிதித்துவம் என்ற ஸ்தாபனத்தால் வரையறைக்குள்ளாக்கிய கொள்கையாகும்.

இவ்வாறு புதியனவாக ஏற்பட்ட அரசுகள் ரோமாபுரி அல்லது கிழக்கிந்திய வகையைச்சேர்ந்த எதேச்சாதிகாரங்களாக ஆரம்பத்தில் இருக்கவில்லை. நிலப்பிரபுத்துவ முறையானது பரஸ்பர ஒப்பந்தம் செய்துகொள்வது என்ற கொள்கையின் ஆதாரத்தின்மீது அமைக்கப் பெற்றிருந்தது. அம் முறையிலிருந்து தோன்றியதால் புதிய அரசுகளும் அக் கொள்கையைத் தொடர்ந்து கடைப்பிடித்தன. கிழக் கத்திய எதேச்சாதிகாரிக்குக் காட்டிய அடிமைத்தனமான பணிவைப் புதிய அரசர்களுக்குக் காட்டவில்லை. இதற்கு அதிகமான அதிகாரத்தை அரசர்கள் கேட்டிருந்தால், அரசைவிட உயர்வான திருச்சபை இருக்கிறது; அத் திருச்சபையின் தலைவர்களுக்குத்தான் இறுதி அதிகாரம் சொந்தமானது என்று மக்கள் கூறிவிட்டிருப் பார்கள்.

இடைக்காலத்தில் உண்மையிலே எதேச்சாதிகாரமான பூரண அதிகாரத்தைப்பற்றிய கருத்தே அவர்களுக்கிருக்கவில்லை. நிதி விஷயங்களில் அரசின் அதிகாரத்தை வரம்புக்குட்படுத்தியதிலிருந்து இது தெளிவாகத் தெரிகிறது. தங்களுடைய குடிமக்களின் சொத்துக்களைத் தங்களுடையதாகப் பாவித்து அரசர்கள் எடுத்துக் கொள்ளவே முடியாது. ஏதாவது சட்டத்தின்படிக் குற்றத்திற் குரிய தண்டனைக்காகவோ அல்லது பொதுவான காரியங்களுக் காகவோ அல்லது தன்னிச்சையாக அளிக்கப்பட்டதாகவோ இருந்தால்தான் சொத்தை எடுத்துக்கொள்ள முடியும். நிதியானது ஒருமைப்பாட்டை உண்டாக்கும் ஒரு செல்வாக்காகவும், ஒருமைப் படுத்தும் அதிகாரத்தைக் கட்டுப்படுத்துவதாகவும் இருந்தது. அரசாங்கத்தின் பணிகள் பலவகையாக அதிகமானபோது, அதிக வருவாயும் தேவைப்பட்டது. இதற்காக அரசர்கள் தங்களது இராச்சியங்களை விஸ்தரிக்கவும், அதன்மூலம் தங்களது செல்வத் தைப் பணமாகவும், மனிதர்களாகவும் அதிகமாகப்பெற முயன்றார் கள். ஆனால், அதிக வருவாயானது வரிகளை அதிகரிப்பதன் மூலந்தான் கிடைக்கமுடியும். ஆனால், மனிதர்கள் வரி கொடுப் பதற்கு மிகவும் எதிர்ப்புக்காட்டி, மிகுந்த தயக்கத்தோடுதான்

வரிகளைக் கொடுத்தார்கள். அரசர்கள் எவ்வளவுக்கு வரிகளை அதிகம் கேட்டார்களோ, அவ்வளவுக்கு மக்கள் தாங்கள் அனுமதிக்கும் நோக்கங்களுக்குமட்டுமே இவ் வரிப்பணம் செலவழிக்கப்பட வேண்டும் என்றும் கேட்க ஆரம்பித்தார்கள்.

இப்படியாக, அரசர்களின் பணத்தேவையும், மக்கள் அதைக் கொடுக்க விருப்பப்படாமையும், அப்படியே கொடுத்தாலும் அது தங்கள் விருப்பப்படிச் செலவு செய்யப்படவேண்டும் என்று கேட்டதும் ஆகிய காரியங்களிலிருந்து, இடைக்காலம் அரசியல் செயல்முறைக்கு அளித்த பெரிய அளிப்பாகிய பிரதிநிதிச் சபைகள் (Representative Assemblies) தோன்றின.

## பிரதிநிதித்துவ முறையைக் கண்டுபிடித்தவர் யார்?

மடாலயங்களின் மத்திய குழுவிற்கோ அல்லது கோயில் குருக்களின் கூட்டத்திற்கோ பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும் வழக்கம் இருந்தது. ஆகவே, திருச்சபை ஆங்கிலோ - சாக்ஸேனியக் குடிகளின் அமைப்பில் இம் முறையின் சுவடுகள் காணப்படுகின்றன. அரசுக்கு இம்முறை முழுவதும் பயன்படுத்தப்பெறுவதற்கு முன்பாக நகராட்சி விவகாரங்களில் உபயோகத்திலிருந்ததாகத் தெரிகிறது. தோற்றுவாயைப்பற்றிய ஆராய்ச்சி, வரலாற்று ஆசிரியருடையது. நம்முடைய அக்கறையெல்லாம் பல அரசுகளில் தோன்றிய சபைகளைப்பற்றியதுதான். டையட்ஸ், எஸ்டேட்ஸ், பார்லிமெண்ட்ஸ் (Diets, Estates, Parliaments) என்று தோன்றியவைகள் பலவகை வகுப்புகளுக்கும், கூட்டத்தாருக்கும் தங்களைப் பிரதிநிதிகள் என்று சொல்லிக்கொண்டன. அவை விவாதித்தலும், ஆலோசனை கூறுதலும், செலவு செய்தலும், வரி விதித்தலும், அனுமதி வழங்கலும் ஆகிய பணிகளைச் செய்தன.

நிதிக்காக மாத்திரம் பிரதிநிதித்துவ முறையைக் கையாளவில்லை. இடைக்கால அரசர்கள் எதேச்சாதிகாரிகளாகவோ அல்லது மக்களைக் கீழ்ப்படியச் செய்யக்கூடிய வலிமையையோ உடையவர்களல்லர். அவர்கள் ஏதாவதொரு காரியத்தைப் பெருவாரியான அளவில் செய்ய விரும்பினுல் அதற்காக அந் நாட்டுக் குடிமக்கள் சிலரின் கூட்டுறவைப் பெறுவது மிகவும் இன்றியமையாததாயிருந்தது. அப்படிப்பட்டவர்களை அரசர்கள் கலந்தாலோசித்துத்தான் ஆக வேண்டியிருந்தது. எனவேதான் பிரபுக்களையும், பிஷப்புகளையும் (bishops) சபைகளுக்கு அழைத்துவரச் செய்தனர். அரசின் க்க்ஷை சிக்கலடைய அடைய, அவர்கள் ஆலோசனைக்கு (wor'த வகுப்புகளும் அதிகமாயின. முக்கியமாக வாணிகம்

வளர்ச்சியடைந்தபோது செல்வம்மிக்க வணிகர் வகுப்பும் தோன்றியது. எனவே, படிப்படியாகப் பிரபுக்களும், பிஷப்புகளும் மாத்திரமே 'அழைக்கப்பெருமல் நன்மக்கட் குழுவிலிருந்தும், வாணிக நலன்களுக்காக நகரங்களிலிருந்தும் சிறு மத குருக்களிடமிருந்தும் பிரதிநிதிகள் ஆலோசனைக்கு அழைக்கப்பெற்றனர்.

பிரதிநிதிகளின் தேர்வோ அல்லது பிரதிநிதித்துவத்திற்காக வகுப்புகளைத் தேர்ந்தெடுப்பதோ பிரச்சினையாக இருக்கவில்லை. தேர்ந்தெடுப்பவர்கள் தங்களால் தேர்ந்தெடுக்கப்பெற்றவர்களோடு இணைந்து அவர்கள் செய்வதை ஒத்துக்கொள்வதுதான் பிரச்சினையாகும். அப்படி ஒப்புக்கொண்டால்தான் சபை எடுத்த முடிவு மக்கள் எல்லோரின் முடிவுமாகும். இந் நிலை ஏற்படச் சிறிதுகாலம் பிடித்தது. எத்துணையோ பிரதிநிதிகள் தங்கள் தொகுதிகளுக்குத் திரும்பியபோது அவர்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட முடிவுகள் ஒப்புக்கொள்ளப்படாமல் மறுக்கப்பட்டன. முக்கியமாகச் சபை தீர்மானித்த வரிச்சுமை அதிகமென இவர்களுக்குத் தோன்றியது. இது இவ்வாறு நிகழ்வதுண்டு. இதனுல்தான் பிரதிநிதிகள் திட்டவட்டமான மேலாண்மையை எழுதி வாங்கிவரவேண்டும் என்று அரசர்கள் வலியுறுத்திஞர்கள்.[1] இப்படியாகப் பிரதிநிதித்துவமுறை நிலை நிறுத்தப்பெற்றது. ஏனெனில், ஆளப்படுகிறவர்களோடு, ஆளுகிறவர்கள் எவ்வாறு தொடர்புகொண்டிருப்பது என்ற பிரச்சினைக்கு இது தீர்வு கண்டது. மேலும், ஆளப்படுவோர்மேல் அவர்கள் பொறுக்கமுடியாத அளவுக்குப் பளுவை ஏற்றிவைக்கவில்லை என்பதை அறிந்துகொள்ளவும் இது ஒரு வழியாயிற்று.

பல இடைக்கால மன்னராட்சிகளும், நகர அரசுகளும் ஏதாவது ஒருவகைப் பிரதிநிதிகள் சபைகளைப் பெற்றிருந்தன. ஆனுல், அவைகளின் தலைவிதிகள் வெவ்வேறு விதமாயிருந்தன. ஃபிரஞ்சு எஸ்டேட்ஸ் ஜெனரல் (French Estates General) ஃபிரஞ்சு அரசின் சபையும் ஸ்பானிஷ் நாட்டுச் சபையும் (Spanish Cortes), வரி விதிப்பின்மீது போதுமான கட்டுப்பாடு செலுத்த முடியாததால் அவை இன்றியமையாதனவாக இருக்கவில்லை. தேசீய நெருக்கடிகளைச் சமாளிக்கும் அதிகாரம் அவர்களிடத்தில் இல்லாததால், அவர்கள் எப்பொழுதாவது கூட்டத்திற்கு அழைக்கப்பட்டனர். முடிவில் அது கூட்டப்படாமலே போனதுமுண்டு. மேலும்

[1] பேராளையும், 'பிரதிநிதியையும்' ஒன்று என நினைத்துக் குழப்பக்கூடாது. பேராள் எப்படிப் பேசவேண்டும்; வாக்குத் தரவேண்டும் என்பதற்கெல்லாம் திட்டமாகக் கற்பித்து அனுப்பப்படுகிருர்; இவ் வாணையிலிருந்து அவர் பிறழத் துணியமாட்டார். ஆனுல், பிரதிநிதியோ அவரது [illegible] சாட்சிக்கும், அவர் அறிவுக்கும் எட்டியபடி முழுச் சமுதாயத்தின் [illegible]காகச் சுதந்தரமாகச் செயலாற்றும் உரிமை பெற்றவர்.

சில இடங்களில் சபைகள் பிரதிநிதித்துவ அமிசத்தையே இழந்து, ஆளும் வர்க்கமாக அல்லது கூட்டத்தின் மாற்றுருக்களாக மாறி விட்டன. இத்தாலியிலும், ஜெர்மனியிலும் வாணிகத்தில் ஈடுபட்டிருந்த நகர அரசுகளில் இம்மாதிரி நிகழ்ந்ததும் உண்டு. பிரிட்டனில்மட்டுமே பாராளுமன்றங்கள் நிலைத்து நின்றது மல்லாமல், முடிவாக உண்மையான அதிகாரத்தையும் தமதாக்கிக் கொண்டன. அதற்குள்ளாக இடைக்காலம் கடந்துபோயிற்று.

## இடைக்காலப் பிரச்சினைகள்

பிரதிநிதித்துவ முறையை நவீன காலத்திற்கு, இடைக்காலம் அளித்திருந்தபோதிலும், அக் காலப் பிரச்சினைகள் தற்காலப் பிரச்சினைகளோடு ஒப்பிட முடியாதவைகளாக இருந்தன.

இடைக்காலத்தை அதற்கு முந்திய காலத்தோடும், பிந்தியதோடும் ஒப்பிட்டு நோக்குங்கால் அக் காலம் அரசியல் சார்பே இல்லாததாக இருந்தது. ஆதிகாலத்திய நகர அரசுகளுக்கும், நமக்கும் மிகவும் அறிமுகமான கருத்துக்கள்—அவை யாவன: பொது நலனே அரசின் நோக்கம், மக்களின் உரிமைகள், பலவகை அரசாங்க முறைகளின் சிறப்புக்கள் ஆகியவை போன்ற கருத்துக்கள்—அவர்களுக்குத் தெரிந்திருக்கவுமில்லை. நடைமுறைச் செயல்களில் அவர்களை யறியாமலே அவை காணப்பட்டாலும், கொள்கையாக அவைகள் அவர்களால் உணரப்படவில்லை. பல மனிதர்களுக்கு அவை புரியவேயில்லை. இக் காலம் உலகிற்கு அளித்த ஒரே ஸ்தாபனம் நிலப்பிரபுத்துவ முறைதான். அதுவும் ஒரு சமூக, சட்ட அமைப்பாகத்தான் இருந்தது. மறைமுகமாகவும் ஒரு விளைவாகவுந் தான் இது அரசியல் சார்பு பெற்றது. இருப்பினும் மனித மனம் சோம்பியிராமல் மிகவும் சுறுசுறுப்பா யியங்கிற்று. இந்த உலகில் மனிதர் ஒருவருக்கொருவர் உள்ள உறவுகளைப்பற்றித் தெரிந்து கொள்ளாமல் இருக்கமுடியாது. அப்படிப்பட்ட கருத்துரைகள் இன்றைக்கு நிலவும் நிலைமையை விளக்குவதாகவும் அல்லாமல், பழைய காலத்திலிருந்து விஞ்ஞான ரீதியாக உய்த்துணர்ந்ததாகவும் இல்லாமல் இரண்டும் கலந்திருந்தன. அதற்கு முந்திய ஏகாதிபத்திய காலத்திலிருந்த சட்டத்திலிருந்தும், அரசாங்கத்தி லிருந்தும், சில காரியங்களை மரபுரிமையாகப் பெற்றும், இன்னொரு புறத்தில் டிலமைக்கொள்கையாக உருவாகிக்கொண்டிருந்த அடிப் படைத்தத்துவ இறையியலிடத்துச் சில காரியங்களைப்பெற்றும், அது பரிணமித்தது. ‘செத்துக்கொண்டிருந்த ஆதிகாலம் பிற்காலங் களுக்கு விட்டுச்சென்ற இரு பெரும் கருத்துக்கள் உலக மன்னராட்சி (world - monarchy)யும் உலக மதமும் (world - religion) ஆகும்.

என்று பிரைஸ் (Bryce) தமது 'ஹோலி ரோமன் எம்பயர்' (Holy Roman Empire) என்ற நூலில் எழுதியிருக்கிறார். மதச்சீர்திருத்தமும், நவீனகால இறைமை அரசுகளின் வளர்ச்சியும் ஆகிய இவ்விரு மாபெரும் கருத்துக்களையும் மறைத்துவிட்டதானது இடைக்காலம் முடிவுற்றதைக் குறிக்கிறது.

## (v) அரசின் பரிணாமம்: தற்காலம்

தற்கால அரசு படிப்படியாக நிலப்பிரபுத்துவ அமைப்பை ஒதுக்கி விட்டு, அவ்விடத்தைக் கைக்கொண்டது. எல்லாக் குடிமக்கள் மீதும், கூட்டங்களின்மீதும் அவற்றின் மத்திய மேலாண்மையின் முதன்மை சுமத்தப்பட்டது இக் கால அரசின் முக்கிய தன்மையாகும். நீண்ட காலமாக நடைபெற்ற நிலப்பிரபுத்துவ யுத்தங்களின் விளைவாக எழுந்த குழப்பத்தை அடக்குவதற்காக இவ்வகையான அதிகாரம் அதற்குத் தேவைப்பட்டது. எப்படிப்பட்ட வலிமை பொருந்திய குடிமகனும் சட்டம், நீதி ஆகியவைகளில், அரசனின் கட்டுப்பாட்டிலிருந்து தப்பமுடியாத நிலை ஏற்பட்டது. எவ் வகுப்பாரும், அரச நீதிபதியையோ அல்லது வரி வசூலிப்பவரையோ தவிர்க்கமுடியாது போயிற்று. திருச்சபைகள் அரசின் மேலாண்மையை ஏற்றுக் கொள்ள நேரிட்டது; அல்லது அவர்கள் சமயச் சட்டங்களுக்கு அரசின் ஒப்புதலைப் பெறவேண்டியிருந்தது. ஓர் அரசனுக்கும் இன்னொருவனுக்கும் உள்ள உறவு சுதந்தரமானதாகவும் பரிபூரணமானதாகவும் இருந்தது. அவன் இச்சைப்படிப் போரிடவும், அவன் விரும்பியவண்ணம் விரிவு செய்யவும் அவனது அண்டை நாட்டை அவனால் முடிந்தால் கைப்பற்றும் நோக்கோடு நடந்துகொள்ளவும், அவர்களுக்குள்ள உரிமை வரையற்றதாக இருந்தது.

## நாடும் இனமும்

தற்கால அரசின் பரிணாமத்தில், நாட்டுப்பற்று வளர்ச்சி ஒரு முக்கிய காரணமாகக் கூறப்படுகிறது. ஆனால், நாட்டுப்பற்று அரசு அமைக்கப்பட்டதன் காரணமாகவும், விளைவாகவும் தோன்றியது. ஓரளவுக்குப் பொதுவான மரபும், மொழியும் மக்களை இணைக்க உதவின என்பது உண்மையே. ஆனால், பொதுமொழியானது 1707ஆம் ஆண்டுமட்டும் பிரிட்டனை ஒற்றுமைப்படுத்தவில்லை. 1776-ல் அமெரிக்கா பிரிந்து போனதால் ஏற்பட்ட சிதைவையும் தடுக்க முடியவில்லை. 1922-ல் அயர்லாந்து பிரிந்து போவதையும் தடுக்க முடியவில்லை. ஃபிரான்சைப் பெல்ஜியந்தோடோ அல்லது ஃபிரெஞ்சு மொழி பேசும் சுவிட்சர்லாந்து நாட்டின் மாநிலங்க

ளோடோ (Cantours) இணைத்துவிடவில்லை. அல்லது ஜெர்மன் மொழி பேசும் சுவிட்சர்லாந்து மாநிலங்களை ஜெர்மானியப் பேரரசின் பாகமாக ஆக்கிவிடவில்லை. ஒரு பொது ஆட்சிக்குட்பட்ட வாழ்க்கை பொது அக்கறைகளைத் தோற்றுவித்தது. இவ் வக்கறைகள் ஒரு பொது நாட்டுப் பற்றுணர்ச்சியை உண்டாக்கின. இதன்மூலம் பொது வாழ்க்கை முறையும், அவர்களைப்போன்ற மற்ற கூட்டங்களி லிருந்து பிரிந்து ஒன்ருக வாழவேண்டும் என்ற விருப்பத்தையும் உண்டாக்கியது. பொது நாட்டுப் பற்றுணர்ச்சி, ஒரு தனித் தன்மையை உணரும்படி செய்வதையும், சுதந்தரமான நாடாக, நிரந்தரமாக, ஒன்ருக வாழவேண்டும் என்ற வலியுறுத்தலையும் நாம் பாகுபடுத்தவேண்டும். ஜோன் ஆப் ஆர்க்கின் (Joan of Arc) காலத்துப் ஃபிரான்சில் பெருமளவுக்கு நாட்டுப்பற்றுணர்ச்சி இருந்தது. ஆனால், அநேக ஃபிரெஞ்சுக்காரர்கள் இங்கிலாந்தின் ஐந்தாம் ஹென்றியை (Henry V of England) மகிழ்ச்சியோடு தங்கள் அரசராக ஏற்றுக்கொண்டார்கள். மத இணைப்பைவிட நாட்டுப்பற்று இணைப்பு வலிமையடைய நீண்டகாலம் ஆயிற்று. மதப்போர்களில் கத்தோலிக்கர்களும், புராட்டஸ்டென்ட்களும் தங்கள் மதங்களைச் சேர்ந்த வெளிநாட்டவர்களின் உதவியைப் பெரிதும் வரவேற்ருர்கள். பதினாறு, பதினேழு, பதினெட்டாம் நூற்ருண்டுகளில் அடிக்கடி கைமாறிய பல மாநிலங்கள் அதற்காக வருந்தியதாகவே தெரியவில்லை. சமகால நிகழ்ச்சிகளாகிய போலந்துப் பிரிவினையை எதிர்த்து நடந்த கிளர்ச்சியும், அமெரிக்கச் சுதந்தரப்போரும் ஒருவேளை நாட்டின் சுதந்தர வேட்கையை வெளிப்படுத்துவனவாகவும், அதை இழந்ததற்கு வருத்தமடைவ தாகவும் காணப்பட்ட முதல் நிகழ்ச்சிகள் ஆகும்.

## குடியாட்சியின் துவக்கம்

நிலப்பிரபுத்துவ அரசு படிப்படியாக எதேச்சாதிகாரச் சுதந்தர அரசால் எப்படி மேற்கொள்ளப்பட்டதோ, அப்படியே எதேச்சாதிகார அரசும் குடியரசால் மேற்கொள்ளப்பட்டது. பொதுமக்களின் இறைமை, பிரதிநிதித்துவ ஸ்தாபனங்களைப் புதுப்பித்தல் ஆகிய கொள்கைகளை ஆதாரமாகக் கொண்டது குடியாட்சி அரசு. இரண்டு படிமுறைகளிலும் பரிணுமமானது மிகவும் தாமதமாகவும், படிப்படி யாகவும் ஏற்பட்டது. எப்போதும் இங்கேயும் மற்றொன்றின்மேல் படிவதாயும், பின்னேக்கிச் செல்வதாயும் இது இருந்தது. ஆனால், 19ஆம் நூற்ருண்டின் பொதுப்போக்கு நேரானதாக இருந்தது. இங்கிலாந்தில்மட்டுமே எஞ்சிநிற்கும். பாராளுமன்ற அரசாங்க

முறையைப் பலர் திரும்பவும் பின்பற்ற ஆரம்பித்ததுதான் இக் காலப்போக்காக இருந்தது.[1]

பொதுமக்கள் இறைமைக்கோட்பாடு ஜெனிவாவில் நிலவிய இரு கருத்துக்களின் புறத்தே தோன்றிய ஒன்றாகும். பாராளுமன்ற முதன்மையை வலியுறுத்திய இங்கிலாந்தின் உள்நாட்டுப் போருக்கு உந்தும் சக்தியாக விளங்கியது புராட்டஸ்டென்ட் கால்வின் பரம்பரை ஒன்று. மற்றொன்று ரூசோ (Rousseau) போதித்த அரசியற் சமத்துவமும், எல்லா மக்களின் இறை உரிமைகளும், பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் பொதுமக்கள் உரிமைக் கோட்பாடும், அதன் பிரயோகமாகிய பொதுமக்கள் பிரதிநிதித்துவச் சபைகளின் முதன்மையும், 'முன்னேற்றமானது', 'நாகரிக மானது' என்று அழைக்கப்பெற்ற எல்லா அரசுகளிலும் சாதாரண மாக நிலவின.[2] பல நூற்றாண்டுகளாக ஏற்பட்ட அரசியற் பரிணமத்தின் சாதாரண விளைவுதான் இது. குடியரசுமுறை அல்லது வரம்பிற்குட்பட்ட முடியாட்சிமுறை ஆகியவைகள் பாராளுமன்ற அரசாகத் திகழ்வதற்குரிய காரணங்களாகும். ஆனால், பின்னர் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் இத் தோற்றம் பொய்யானது என்பதைக் காட்டிவிட்டன.

## அரசின் செயல்முறைப் பரிணமம்

முடிவாக, கிழக்கத்திய எதேச்சாதிகாரத்தில் துவங்கித் தற்கால மக்களாட்சி அரசுவரை வந்துவிட்டோம். ஆனால், இம் மாற்றம் வெளியாக உள்ள அமைப்பு முறைகளில் மாத்திரமல்லாமல் அல்லது அவைகளின் ஆதாரக் கொள்கைகளில் மாத்திரமல்லாமல், அரசு மேற்கொள்ளும் பணிகளின் தன்மையிலும், அதன் பிரச்சினைகளின் தன்மையிலும் மாற்றத்தை ஏற்படுத்தியது. அரசின் நடவடிக் கைகள் அரசியல் சார்பை முக்கியமாகக் கொள்ளாமல், சமூக, பொருளாதாரச் சார்புகளை முக்கியமாக்கிக்கொண்டதில் இப் பரிணமம் காணப்படுகிறது. தற்காலத்தில் உள்ள எந்த ஒரு நாட்டின் ஓராண்டுக்காலப் பணியை எடுத்துக்கொண்டாலும், அதில் காணப்படும் பெரும்பாலான அம்சங்கள் இடைக்கால அரசின் அதிகார வரம்பிற்கு அப்பாற்பட்டனவாகவே இருக்கும். கல்வி, குழந்தைகள் பராமரிப்பு, தொழிலாளருக்கு உறுதிப்பாடுகள்,

[1] வாட்டர்லூ (Waterloo)வில் பெற்ற வெற்றிதான் இம் முறையை ஏற்றுக் கொண்டதற்குக் காரணம் என்று லார்டு (Lord) கூறுகிறார். ஃபிரான்சு வெற்றி பெற்றிருந்தால் முன்னே ஐரோப்பாவில் பிரதானமாகவிருந்த சிறு குழு நகர அரசுமுறை ஐரோப்பா முழுவதற்கும் ஒருமுறையாக அமைந்திருக்கும்.

[2] 'குடியாட்சி அரசு' என்ற எட்டாம் அத்தியாயம் பார்க்க.

கலாச்சார நடவடிக்கைகள், சாலைகள் அமைத்தல், விரிவான தேசீயப் பொருளாதாரக் கொள்கைகள் ஆகியவை சில உதாரணங்களாகும். இவைகளில் எதுவுமே சட்டமியற்றுபவர்களின் கவனத்தை ஈர்த்திருக்காது. அதற்கு மாறாக மத விவகாரங்களிலும், அபிப்பிராயம் வெளியிடுவதிலும் அரசு நடுநிலைமையாக இருக்கும் என்று நாம் நிச்சயமாக எடுத்துக்கொள்கிறோம். அரசின் நடவடிக்கைகளின் எல்லை, விரிந்தும் குறுகியும் காணப்படுவதுபோல அதன் தன்மையும் முன்னைவிட மிகச் சிக்கலானதாக மாறியிருக்கிறது. அதிக ஞானத்தினாலும், பொறித்திறனாலும் இயற்கையை மனிதன் அதிகமதிகமாகக் கட்டுப்படுத்திவருவதன் விளைவே இது. வாழ்க்கை எவ்வாறு முன்புபோலச் சுலபமானதாக இல்லையோ அவ்வாறே அரசின் வாழ்க்கையும் சுலபமானதாக இல்லை. தற்கால அரசானது இன்றைய வாழ்க்கையின் ஒரு கூறாக அமைந்து, அதன் அங்கத்தினர்களிடமிருந்து அதிகமாக எதிர்பார்ப்பதோடல்லாமல் அவர்களின் தனியாள் பொறுப்புணர்ச்சியையும் அதிகமாகச் சார்ந்திருக்கிறது. எனவேதான் சாதாரண குடிமகனுக்கு வழிகாட்டும் அரசியல் இன்றியமையாததாகிறது.

# 5. சட்டமும் இறைமையும்

## (i) சட்டம் என்பது என்ன? அது ஏன் அவசியம்?

### பொதுவாழ்க்கைக்கு விதிகள் தேவை

எந்தச் சமுதாயமும் விதிகளின்றி வாழமுடியாது. மிகவும் ஒற்றுமையான ஒரு குடும்பத்தில்கூட, யார் முதலில் குளிக்குமறையை உபயோகிப்பது? யார் 'காரை' (car) எடுத்துச்செல்வது? என்பன பற்றிச் சில திட்டவட்டமான ஒழுங்கு இருக்கும். நாம் எதிர்பார்க்கும் ஒரு முறையிலே மனிதரின் நடவடிக்கை இருக்க, அதாவது குறைந்த பட்சமாவது ஒரே சீரான வாழ்க்கைமுறையை நிலவச் செய்ய, விதிகள் அவசியமாகின்றன. இவைகளில்லாமல் சமூக வாழ்க்கையை நடத்த முடியாது. பெர்னர்டு ஷா (Bernard Shaw) கூறுவதுபோல 'வாழ்க்கை ஆணைக்குட்பட்டதாய் இருக்கவேண்டும். ஸ்தாபன நடவடிக்கைகள் நிர்ணயிக்கப்பட்டதாயும், எதிர்பார்க்கப் பெறக் கூடியதாயும் இருக்கவேண்டும்.' 'கட்டுப்பாடில்லாத மனிதனுக்குச் சமூக வாழ்க்கை கிடையாது. சாப்பாட்டை வெளி இடங்களில் முடித்துக்கொள்வது, படத்திற்குப்போவது, கோவிலுக்குப் போவது, காதல் புரிவது, குடும்ப வாழ்க்கை நடத்துவது, கல்வி கற்பது ஆகிய எல்லாக் காரியங்களிலும் கடைப்பிடிக்கவேண்டிய சில விதிகளிருக்கின்றன' என்று மர்க்கீசன் (Murchison) கூறுகிறார். தாங்கள் செயலாற்றுவதற்கு எந்த அளவு சுதந்தரமிருக்கிறது, தங்கள் நடவடிக்கைகளுக்கு என்னென்ன வரையறைகள் இருக்கின்றன, தனியாட்களுக்கிடையே ஏற்படும் தவிர்க்கமுடியாத வேறுபாடுகளை எவ்விதக் கொள்கைகளின் அடிப்படையில் முடிவாகத் தீர்க்கலாம் என்பனபோன்ற விஷயங்களையெல்லாம் தனியாளோ அல்லது மக்கள் தொகுதியோ அறிந்திருக்கவேண்டும். எண்ணற்ற பொது வேலைகள் நடைபெறுகின்றன. இவையெல்லாம் எவ்வாறு செயல் படுத்தப்பெறவேண்டும் என்பதற்கு விதிகள் இருக்கவேண்டும்.

இவ்வாருகச் சமுதாய வாழ்க்கையின் பல துறைகளுக்கு விதிகள் விதித்தாகவேண்டியிருக்கிறது. அவைகளை ஒன்று சேர்த்துப் பார்த்தால் அவை 'பொது மக்கள் அபிப்பிராயத்தால் அங்கீகரிக்கப் பட்டதும், சமுதாயத்தால் ஆதரிக்கப்பட்டதுமான சமூக நடத்தையின் படிவத்தைப்' பிரதிபலிப்பதாக இருக்கும்.

## சமூக விதிகள்

இவைகளை விதிப்பது யார்? சமுதாயத்திற்குள்ளிருக்கும் தொகுதிகள் பல, தங்களின் அங்கத்தினர்களுக்காக விதித்த விதிகளிலிருந்து பல விதிகள் சமூகத்திற்குக் கிடைக்கும். திருச் சபைகளும், தொழிற் சங்கங்களும், சமூகத் தொகுதிகளும், வர்க்கங் களும், தங்கள் தங்களுக்கென்று ஒரு சமூக நடத்தை மாதிரியை அமைத்துக்கொள்கின்றன; இவற்றைத் தங்கள் கட்டளைகளின் துணைகொண்டு பிரயோகிக்கின்றன. திருச்சபையினின்றும் தள்ளி வைத்தல் (excommunication), விலக்கல் (expulsion), சில நன்மை களிலிருந்தும், கூட்டங்களிலிருந்தும், ஒதுக்கிவைத்தல் போன்ற ஆணைகள் இதற்கு உதாரணங்களாகும். 'நரகம், கவன்ட்ரி,[1] இரவலர் இல்லம் ஆகியவை, சிறைச்சாலை, தூக்குமேடை, வரி ஆகியவற்றைப் போலவே பயன் விளைவிக்கக்கூடியவை' என்று மெரியம் (Merriam) கூறுகிருர். பதிவுத் திருமணம் செய்து கொள்வதைக் கத்தோலிக்கர் பாவத்தில் வாழ்வதாகவேகருதி, அப்படிப் பட்டவர்களைச் சாக்கிரமெந்து (sacraments)களிலிருந்து தள்ளி வைத்துவிடுகிருர்கள். ஒரு சிலருக்கு விடுமுறை நாள் வெறும் பொழுதுபோக்காக இருக்கும். அது கடுந் தூய்மைச் சமயத்தினருக் கும் (Puritan) வைதீகமான யூதருக்கும் ஒய்வுநாளைப் பரிசுத்த மாய்ச் செலவழிக்காமற் போனதாகப்படும். இவ்வாறு செய்தால் அவர்களது சமுதாயத்தில் அவர்கள் சிரமத்திற்குள்ளாக வேண்டி வரும். மஞ்சள்நிறப் பூட்ஸோடு மாலை நேரத்திற்குரிய ஆடைகளும் அணிந்திருக்கும் மனிதரோ, அல்லது முன்னரே கட்டப்பெற்ற முடிச்சுடன் கூடிய டை (tie) அணிந்திருப்பவரோ சமூகக் கூட்டங் களில் இடம்பெறுவது சாத்தியமாகாது. இவ் விதிகளில் சில உருவ அமைப்புக் கொண்டவையாயும், வேண்டுமென்றே ஏற்படுத்திய தாயும் இருக்கும். மற்றவையெல்லாம் பரம்பரைப் பழக்கங்களே. இவ் விதிகள் தங்கள் எல்லைக்குள்ளாக மீறப்படமுடியாத விதிகளாக அமைந்திருக்கின்றன.

[1] Coventry என்பது வார்விக்ஷையரிலுள்ள ஊர். ஒருவனைக் கவன்ட்ரிக்கு அனுப்பு என்ருல் 'அவனோடு சேராதே' என்று பொருள்படும் வழக்குச் சொல்.

ஆனால், இதற்குச் சில தடைகளும் உண்டு. தொகுதிகளிலுள்ள அங்கத்தினர்களுக்கு மாத்திரமே இவ் விதிகள் பொருந்தும். அவர்களின் தடுப்பாணைகள் தொகுதியில் அங்கம் வகிப்பதையும், அதன் நடவடிக்கைகளையும் மாத்திரமே பாதிக்கின்றன. திருச் சபையின் அல்லது தொழிற்சங்கத்தின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிய மறுத்தால் அவர்களை வெளியே அனுப்புவது ஒன்றே அவர்களுக் கிடும் தண்டனையாக இருக்கமுடியும். சமூக நடத்தைபற்றிய சில விதிகளை ஒருவர் மறுத்தால் அவ் விதிகள் முக்கியமெனக் கருதப்படும் தொகுதிகளிலிருந்து ஒதுக்கிவைக்கப்படுவது ஒன்றே தண்டனை யாகும். இவ்வாறு எதிர்ப்பவர்களுக்கு வேறு திருச்சபைகள், வேறு பொருளாதாரச் சங்கங்கள், வேறு வகுப்புக்கள் அவர்கள் விரும்பினால், வரவேற்று இடமளிக்கக் காத்திருக்கின்றன. அங்கிருந்துகொண்டு தாங்கள் முன்பிருந்த சங்கங்கள் சொல்லும் குறைபாடுகளையும், அச்சுறுத்தல்களையும் துச்சமாக மதித்து வாழமுடியும். தொகுதியின் தடுப்பாணை அவரது வாழ்க்கையின் ஒரு பகுதியைத்தான் பாதிக்க முடியும். ஏனெனில் தொகுதியின் விதிகளும் அவர்களின் தடுப் பாணைகளும் குறுகிய எல்லையுடையவையே. குறைந்த எண்ணிக்கை யுள்ளவர்களையே அவை பாதிக்கக்கூடும். அதாவது அவைகள் அதன் அங்கத்தினர்களுக் கிடையேயுள்ள உறவுகளை மட்டுமே பாதிக்கும். அதோடுகூட அவர்களது வாழ்க்கையின் ஒரு சிறு பகுதியையே அது பாதிக்கும். வேறு சொற்களில் சொன்னால், தொகுதிகள் இயற்றிய விதிகள் வாழ்க்கையின் பொது ஒருமைப்பாடு முழுமையையும் பாதிக்காது என்பது வெளிப்படை. எல்லாத் துறைகளிலும் அம்சங்களிலும் பிரயோகிக்கப்பட வேண்டுமானால் இன்னும் அதிகமான விதிகள் தேவைப்படும். இது அரசின் வேலையாகும். இவைகள் சட்டங்கள் என்று அழைக்கப்பெறும்.

## அரசின் வாழ்க்கை விதிகளே சட்டங்கள்

சட்டம் என்பது ஓர் அரசின் அங்கத்தினர்களின் நடத்தை பற்றிய விதியாகும். இதை மீறினால் அரசின் அதிகாரத்தால் தண்டனைக்குள்ளாக நேரிடும். 'சட்டம் என்பது அடிப்படையில் ஒரு கட்டாயப்படுத்தும் முறைதான். சட்டம் சமூகத்தில் விரும்பப் படுகிற சில நிலைமைகளை நிலைநாட்ட விழைகிறது. குடிமக்களின் சட்டவிரோதமான செயல்களைக் கட்டாயமாகச் சில விதிகளுக்குட் படுத்துவதன் மூலம் இதைச் சாதிக்க முற்படுகிறது' என்று கெல்சன் (Kelsen) கூறுகிறார்.[1]

[1] 'சட்டமில்லாவிடில் ஒழுங்கு இல்லை. ஒழுங்கில்லாவிடில் மனிதர்கள் எங்கே போகிறோம், என்ன செய்கிறோம் என்று அறியாது அலைந்து போவார்கள். மனிதவாழ்க்கையின் ஒவ்வொரு கட்டத்திலும் ஒழுங்குறுத்தப்பெற்ற உறவு முறை பிரதானத் தேவையாக இருக்கிறது'—மாக் ஐவர் (Mac Iver).

அரசு சட்டமியற்றும் பொறிமாத்திரமன்று. ஆனால் அதுவே சட்டமுமாகும். அது சட்டங்களையும் இயற்றுகிறது. 'குறிப்பிட்ட ஆட்சி நிலத்திற்குள் சட்டத்திற்காக ஒழுங்குற அமைந்த மக்கள் தான் அரசு' என்று வில்சன் (Wilson) அரசிற்கு இலக்கணம் வகுக்கிறார். ஏனெனில் அரசின் எல்லைக்கு வெளியே அதன் சட்டங்கள் செல்லாது எனினும், அதன் எல்லைக்குள் ஒரே ஒரு சட்டத் தொகுப்புதான் இருக்கமுடியும். சட்டமியற்றும் அங்கம் ஒன்றால் இயற்றப்பட்டு, அரசால் சட்டம் என்று பிரகடனப்படுத்துவது சட்டமாகும். எதேச்சாதிகாரியின் விருப்பாற்றல், பாராளுமன்றம், உயர்நீதிமன்றம் ஆகியவை சட்டமியற்றும் அங்கங்கள் ஆகும். சட்டத்தை இயற்றி வெளியிடுவதனால் அரசு அரசாவதில்லை. ஆனால் அரசின் அதிகாரந்தான் சட்டத்தைச் சட்டமாக்குகிறது என்று ஹாக்கிங் (Hocking) கூறுகிறார்.

அரசின் சட்டங்களுக்கும், மக்கள்தொகுதிகளின் விதிகளுக்கும் இடையே வேறுபாடு காட்ட வேண்டுமா? அவை இரண்டிற்கும் பல விஷயங்களில் ஒற்றுமை காணப்படுகிறது. அவைகளால் செல்வாக்குக்குக் கீழுள்ளவர்களைக் கட்டாயப்படுத்திக் கீழ்ப்படியச் செய்யவும், கீழ்ப்படியாதவர்களுக்குத் தண்டனை வழங்கவும் கூடும். அவையிரண்டும் சமுதாயத்தின் விருப்பாற்றலை முழுவதாகவோ அல்லது அதன் ஒரு பாகத்தையோ பிரதிபலிப்பனவாக இருக்கின்றன. அவைகளிரண்டும் பயனுறப் பணியாற்றுவது சமுதாயத்தின் ஆதரவில்தா னிருக்கிறது. அபிப்பிராயங்களின் பரிணாம விளைவே அவை. அவற்றை ஓரளவுக்காவது பிரதிபலிப்பதாக அவை இருந்தாக வேண்டும். 'சமுதாய நடவடிக்கைகளின் தேக்கந்தான் சட்டங்களுக்குரிய சக்தியை அளிக்கிறது. அதுவேதான் நெறிமுறைத் தொகுப்பாகவுமிருக்கிறது' என்று வார்டு (Ward) கூறுகிறார். அந்தச் சக்தி இல்லாமல் எந்தச் சட்டமும், எந்த விதியும் பயனுறச் செயலாற்ற முடியாது.

## அரசின் சட்டங்களும், மக்கள் தொகுதியின் விதிகளும்

எனினும் அரசின் சட்டங்களுக்கும், தொகுதியின் விதிகளுக்குமிடையேயுள்ள வேறுபாடு அடிப்படையானது. ஒரே சீரான நிலைமைகளில் எவ்வித விலக்குமும் இல்லாமல் எல்லோருக்கும் பொருந்துவது சட்டம். சட்டங்கள் சமுதாயத்தின் ஒரு பகுதியை அல்லாமல், முழுச் சமுதாயத்தையும் பிரதிபலிப்பதாகக் கூறுகிறார்கள். அவைகளின் தடுப்பாணைகள் ஒரு புது ரகமானவை. ஏனெனில், அவை நீதிமன்றங்களாலும், நீதித் துறையாலும் அமல் செய்யப்படுகின்றன. கடைசியாகச் சொன்னது மிக முக்கியமான ஓர்

அம்சம். ஆணை அல்லது தடை அல்லது தண்டனை என்ற பிரச்சினை எதுவுமே இல்லாவிட்டாலும் கோர்ட்டுகளுக்கு ஒரு பணி இருக்கிறது. உதாரணமாக, உயில் (will) ஒன்று செல்லக் கூடியதுதானா என்று முடிவு செய்வது, ஒப்பந்தம் (contract) ஒன்றை நிறைவேறச் செய்வது, தொகுதியின் விதிகள் செல்லக்கூடியவையா என்று முடிவு செய்வது ஆகியவைகளைக் குறிப்பிடலாம். திருச்சபைகள் கூடக் கோர்ட்டுகளுக்குப் போகவேண்டி இருக்கிறது.

தொகுதியின் விதியை மீறிய ஒருவர் தொகுதியை விட்டு வெளியேறினாலும், சமுதாயத்தோடு அதன் அங்கத்தினர் என்ற முறையில் அதன் எல்லா உரிமைகளோடும் வாழ்கிறார். ஆனால் அரசின் கோர்ட்டுகள் வழங்கும் தீர்ப்புகளை யாரும் எதிர்க்கமுடியாது. ஆணையோ, தடையோ இல்லாதிருந்தும் ஓர் உயிலைப்பற்றிய கோர்ட்டின் தீர்ப்பையோ, அல்லது ஒரு தொழிற்சாலை நிறுவனத்தை அமைப்பதோ அல்லது வீட்டுரிமைபற்றிய முடிவையோ எவராவது எதிர்த்துப் பணிய மறுத்தால், தடையையோ அல்லது ஆணையையோ நேரடியாக மீறினால் கிடைக்கும் தண்டனையாகிய சிறைவாசம், இங்கும் கிடைக்கும். பலவிதச் சட்டங்களுக்கிடையே என்னதான் தனித்தன்மைகளைக் காட்டினாலும், எவ்வளவுதான் சட்டங்கள், பொதுப் பழக்கங்கள் அல்லது விருப்பங்களை வெளிப்படுத்துகின்றன என்று கூறினாலும், அரச நீதித்துறையினால் அவை அமலாக்கப் படுகின்றன என்பதே முடிவான உண்மை. அப்படி அமலாக்க முடியாதது எதுவோ அது சட்டமன்று. எந்தச் சட்டமும், அது என்ன பெயரால் அழைக்கப் பெற்றாலும், எப்படிப் பாகுபடுத்தப் பட்டிருந்தாலும், ஒரே ஒரு பணியைச் செய்வதாகத்தான் இருக்கிறது. 'மனித நடவடிக்கைக்குரிய பொது நிபந்தனைகளை வரையறை' செய்வதுதான் அந்த ஒரே பணியாகும். வார்டு (Ward), 'அது பொது அனுபவங்களை ஒன்று சேர்க்கும் செயலாகும். சட்ட அமைப்புக்களும், அதன் பணிகளும் சமுதாயத்தின் அங்கங்களாகும். சட்டம் வருங்கால வாழ்வுக்குரிய தன்மை பெற்றதாகவும், சிலவகை நடவடிக்கைகளை எளிதாக்குவதாகவும் இருக்கிறது.' 'சட்டம் உருவாவதற்கு உதவியாயுள்ள படிப்படியாகத் தோன்றிய கூட்டுறவு வழக்கங்களிலும், பழக்கமான நடத்தையிலும்' சட்டத்தின் தோற்று வாய் இருக்கலாம். இவைகளை அமலாக்குவது பொதுவான நடத்தை விதிகளுக்கு மக்கள் தங்களைக் கட்டுப்படுத்திக் கொள்வதைச் சார்ந்தது. இப்படிப்பட்ட பொதுவான ஒப்புதல் இல்லாவிட்டால் எவ்விதக் கூட்டுறவும் சாத்தியமாகாது. நிலைபெற்ற விவகார

நிலையையும், பொதுவான ஒப்புதல் உணர்வையும், ஒழுங்குறுத்தப் பெற்ற ஒருமைப்பாட்டையும் அது குறிக்கிறது.[1]

'சட்டத்தின் ஆணையிடும் - தடை விதிக்கும் - தன்மைகள்' குறித்து அதிகம் வலியுறுத்தப் பெறுகிறது என்பதும் உண்மையே. இவைகளைத் தன்னுள் கொண்டிருந்தாலும், சட்டத்தின் எல்லா அம்சங்களையும் இது விளக்கவில்லை. செல்லுபடியாகக்கூடிய உயில், மரபுரிமை பற்றிய விதிகள், நமது பொருளாதார வாழ்க்கையைச் சார்ந்த எண்ணற்ற சட்டங்கள், தனியார் சச்சரவுகள் சம்பந்தமான சட்டங்கள் இவைகளில் எதுவும் ஆணை அல்லது தடை என்ற சொற்களுக்குள் அடங்கவில்லை. முடிவாக, சட்டமானது, வழக்கங்களிலிருந்தும், பரம்பரையிலிருந்தும், தொகுதியின் விதிகளிலிருந்தும் மூன்று வழிகளில் வேறுபட்டிருக்கின்றன. முதலாவது அதன் தோற்றுவாயில் வேறுபட்டிருக்கிறது. சட்டமியற்றும் மேலாண்மையால் அது இயற்றப்பட்டாலொழியச் சட்டமாகாது. சட்ட மன்றங்கள், இவைகளால் அதிகாரம் அளிக்கப்பெற்ற பிற மன்றங்கள் (உதாரணமாக ரெயில்வேக் கம்பெனியின் துணை - விதிகள்) சட்டமாகப் பின்னராகும் தன்மையுள்ள நீதிபதிகளின் விளக்கவுரைகள் முதலியன சட்டமியற்றும் மேலாண்மை பெற்றவை. இது மிகவும் திட்டவட்டமானது. அதிகாரத்தையும், இடத்தையும் குறிப்பிட்டால் துல்லியமான குறிப்பெடுக்க முடியும். இரண்டாவதாக, அரசின் எல்லைக்குள்ளாக எல்லோரும் அதற்குக் கட்டுப்பட்டவர்களே. மூன்றாவதாக அதன் அறுதித் தன்மையும், அது அமலாக்கப்பெறும் விதமும் ஆகும். சட்டம் திட்டமாகவும், முடிவாகவும் ஒன்றைச் சொல்லிவிட்ட பிறகு, வன்முறையைத் தவிர, வேறு மேல் முறையீடு கிடையாது.

## சட்டங்களின் பல வகைகள்

சட்டங்கள் பொதுவாக அரசால் இயற்றப்பெற்று அமலாக்கப் பெறுகின்றன என்றாலும் அவை பல வகையாகவும், பலதிறப்பட்ட பணியுடையனவாகவும் இருக்கின்றன. ஆனால் அவைகளை இரண்டு பிரதான வகைகளாகப் பிரிக்கலாம். சமூக விரோதமான நடவடிக்கைகளையும், தனியாரின் சுயநலமானது மற்றொருவரின்

[1] 'விதிகள் அவற்றின் உபயோகத்தையும், அவசியத்தையும் புரிந்துகொள்ள விரும்பும் சாதாரண மனிதனும் புரிந்துகொள்ளும்படியான அளவு எளிதாகவும் பகுத்தறிவுக்கொத்ததாகவும் இருக்கவேண்டும். அவைகளைப் பிறப்பிக்கும் மேலாண்மை வெளிநாட்டினுடையதாகவோ அல்லது விரோதமானதாகவோ கருதப்படாததாக இருக்கவேண்டும். அவைகள் போதுமான அளவு நிலையுள்ளனவாகவும், எண்ணிக்கையில் குறைவானவையாகவும் ஒரே தடவையில் புரிந்துகொள்ளும் அளவுக்குச் சாதாரணமானவையாகவும் இருக்கவேண்டும்.' (Simone Weil '1' Enracinement, p. 17)

நலத்தைக் கெடுக்கக் கூடியதாக இராமலும் தடுப்பதற்காகச் சில சட்டங்கள் இயற்றப்பெற்றிருக்கின்றன. வார்டு (Ward) சொல்வது போலச் சட்டங்கள் 'பொறுக்க முடியாதவை என்று கருதப்பெறும் சிலவகைச் செயல்களைத் திட்டமிட்டும், கட்டாயமாகவும் நீக்கி விடுகின்றன. மேலும் சில வகையான நடத்தைமுறைகளையும் விலக்கி விடுகின்றன.' மேலும் பொதுநல வாழ்விற்கு அவசியம் என்று தோன்றும் சில செயல்களைக் கட்டாயமாகச் செய்யும்படி வற்புறுத்துவதும் இச் சட்டங்களேயாகும். முதலில் சொல்லப் பட்ட வகையில் சேர்ந்தவை திருடு, கொலை போன்ற குற்றங்கள். பின்னதில் சுகாதாரம், சாலை ஒழுங்கு, பள்ளிக்குக் குழந்தைகளை அனுப்புதல் போன்ற காரியங்களுக்காக ஏற்பட்ட கணக்கற்ற சட்டங்கள். தனியாரின் துவக்க உணர்ச்சிக்கு விடப்படமுடியாத சர்வீஸ்களின் (அரசாங்கப் பணிகள்) அமைப்புப் பற்றிய சட்டங்கள், கல்வி அளித்தல், தேசப்பாதுகாப்பு, தொழிற்சாலைகளைத் தேசீய மயமாக்குதல், போக்குவரத்துத் தொடர்புகள் ஆகியவைகளெல்லாம் மற்றொருவகைச் சட்டமாகின்றன. அவை மேலும் பொது வாழ்க்கை எவ்வாறு நடத்தப்பெறவேண்டும் என்பதை முடிவு செய்கின்றன. முக்கியமான பல பணிகளைப் புரியும் கணக்கற்ற இலாக்காக்களின் அதிகாரங்களை விளக்கவும் செய்கின்றன. திருமணம் போன்ற தனியார் விவகாரங்களையும் ஒழுங்குபடுத்து கின்றன. தனியாட்களுக்கிடையே ஏற்படும் சச்சரவுகளை எவ்வாறு தீர்ப்பது என்பதைப்பற்றியும் அவை கூறுகின்றன. ஒப்புக் கொள்ளப்பெற்ற சில செயல்முறைகளை விளக்கவும் அவசியமானல் அமல் நடத்தவுமே இச் சட்டங்களாகும். எதைத் தடை செய்வது அல்லது எதற்கெல்லாம் ஆணையிடுவது, எவையெல்லாம் பொது ஆட்சித்துறையின்கீழ்க் கொண்டுவருவது, எவையெல்லாம் தனியார் துறையில் விட்டுவிடுவது என்பன போன்ற காரியங்களில் அபிப் பிராயங்கள் மிகவும் வேறுபடுகின்றன. ஆனல் ஒருவரும் அரசு ஒழுங்கை நிலைநாட்ட வேண்டும் என்பதற்கு ஆட்சேபம் தெரிவித்த தில்லை. அதே போன்று, தனியார் உடைமைகளைக் காப்பாற்றுவது, பாதுகாப்பமைப்பது, தனியார் போரிட்டுக்கொள்வதைத் தடை செய்வது, குடிமக்களுக்குள் ஏற்படும் வழக்குகளை அமைதியான முறையில் தீர்த்துக்கொள்வதற்குரிய அமைப்பை உண்டாக்குவது ஆகியவைகளைப்பற்றியும் எவரும் ஆட்சேபம் தெரிவிப்பதில்லை. தனியார் அக்கறைகள் பொதுச் சட்டத்தால் பாதுகாக்கப்படுவது பிரதான சமூகத் தேவையாகும். ஒரு சிறிய 'கால் பந்தை' (foot-ball) கழகத்தின் விதி காக்கவில்லையானல் அது எங்கும் நிலைக்க முடியாது. குடும்பங்கூடச் சட்டத்தின் துணையை நாடுகிறது. உதாரணமாக, வயது வந்தோர் என்றால் என்ன என்பது, பெற் றோரின் கட்டுப்பாட்டிலிருந்து எப்பொழுது குழந்தைகளைப்

பிரிக்கலாம் என்பது, உடைமைகளைப் பின் சந்ததிக்கு விட்டுப்போவது என்பது, அவைகளை மரபுரிமையாகப் பெறுவது என்பது, திருமணம், விவாகரத்து போன்ற உரிமைகள் ஆகிய துறைகளில் சரியானதொரு விளக்கத்தைச் சட்டத்திடமிருந்து குடும்பம் எதிர்பார்க்கிறது.

## சட்டங்களின் பாகுபாடு

சட்டங்களின் தன்மைக்கும், செயல் எல்லைக்கும் ஏற்ப அவை பாகுபாடு செய்யப்பெறுகின்றன. உதாரணமாகப் பல அரசுகளின் உறவுகளைக் கட்டுப்படுத்துவதால் அவற்றிற்குப் பன்னாட்டுச் சட்டம் (international laws) என்று பெயர் வந்தது. தனியாட்கள் அரசோடு கொண்டிருக்கும் உறவுகளைக் கட்டுப்படுத்துவது பொதுத்துறைச் சட்டமாகும் (public laws). குடிமக்கள் ஒருவருக்கொருவர் உள்ள உறவு முறைகளைக் கட்டுப்படுத்துவது தனியார் துறைச் சட்டமாகும் (private laws). அரசு, அதன் துறைகள் ஆகியவற்றின் அதிகாரங்களை விளக்கி, அரசு எவ்வாறு இயங்கவேண்டும் என்று விதிகளை விதித்து அவற்றின் அடிப்படையில் எழுந்தவை அரசியல் அமைப்புச் சட்டங்கள் (constitutional laws) என்றும், சட்ட மீறுதல்களை கவனிக்கும் சட்டங்களைக் கிரிமினல்சட்டங்கள் (criminal laws) என்றும் தனியாட்களும், தொகுதிகளும் தங்களுக்குள் ஏற்படும் சச்சரவுகளைத் தீர்த்துக்கொள்ளப் பயன்படும் சட்டங்கள் சிவில் சட்டங்கள் (civil laws) என்றும் பாகுபாடு செய்கிறோம். அரசிலுள்ள சட்டமியற்றும் மேலாண்மையால் இயற்றப்பெறும் சட்டங்களாகிய பொதுச் சட்டங்களை (general laws) பொதுவான, நிரந்தரமான நடத்தை முறையை நிர்ணயிப்பது என்றும், ஒரு குறிப்பிட்ட காலத்தில் பொது விதியைப் பிரயோகிப்பதால் ஏற்படும் ஆணைகளை 'டிக்ரி' (decree) என்றும் மேலும் பிரிக்கலாம். இருபத்தொரு வயதும் அதற்கு மேற்பட்டுமுள்ள ஆண்களும் பெண்களும் ஐந்தாண்டுக்காலத்திற்குப் பாராளுமன்றத்தைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று சட்டம் கூறலாம். ஆணையானது பாராளுமன்றம் கலைக்கப்படும் நாளைக் குறிப்பிடும். இதன் விளைவாகத் தேர்தல்கள் நடைபெற்றுச் சட்டம் குறிப்பிடும் சில வரையறைக்குள் புதுப் பாராளுமன்றம் கூட்டப் பெறும். அரசில் ஒரு பதவி வகிப்பதற்கு என்ன தகுதிகள் வேண்டும் என்று சட்டம் முடிவு செய்யும். ஆணை ஒரு குறிப்பிட்ட நபரை அப் பதவிக்கு நியமிக்கும்.

சட்டம் இயற்றப்பெறும் முறைகளும் பலவகைப்பட்டவை. சட்டம் என்ற சொல் ஸ்தாபனங்களைக் குறிக்கக் கூடியதாக இருக்கிறது. சில நாடுகளில், பல்வேறு காலங்களில் நாட்டின் சட்டம் முழுவதும் ஓர் எழுதப்பெற்ற சட்டத்தொகுப்பாக வெளியிடப் பெற்றிருக்கின்றது. தற்காலத்தில் இவ்வாறு வெளியிட்ட நாடுகள்

நெப்போலியன் காலத்து ஃபிரான்சையும் அதைப் பின்பற்றிப் பல நாடுகளில் எழுந்த எண்ணற்ற முறைகளையும் உதாரணமாகச் சொல்லலாம். கிரேட் பிரிட்டனிலும், அமெரிக்காவிலும் நீதிபதிகளின் விளக்கவுரைகளும், தீர்ப்புக்களும், இயற்றப்பெறும் சட்டங்களைப் போலவே முக்கியமானவையாக இருக்கின்றன. எல்லா நாடுகளிலும் பெரும்பான்மையான சட்டங்கள், வழக்கங்களைச் சட்ட ரீதியாக்கியவைகளே.

## சட்டங்களும் கோர்ட்டுகளும்

ஆனால் சட்டங்கள் என்ன பெயரிலிருந்தாலும், என்ன உருவமைப்புக் கொண்டிருந்தாலும், என்ன பொருளடக்கம் கொண்டிருந்தாலும், அவைகளைப் பிரயோகிப்பதற்கென்று நியமிக்கப் பட்டிருக்கும் நீதி மன்றங்கள் (Courts of Justice) அவற்றை வகுத்துப் புரிந்துகொள்ளும் தன்மையன. எனவே அரசாங்கத் துறையால் அவை அமலாக்கப்பெறும். அரசின் சட்டமியற்றும் அங்கங்கள் இன்ன நினைப்போடு சட்டத்தைச் செய்தன என்று நீதிபதிகள் விளக்கம் கூறி, இதுதான் சட்டம் என்று அறுதியிட்டுக் கூறுகிறார்கள். இவ் வங்கங்கள் அவ் விளக்கத்தை ஒப்புக்கொள்ள மறுத்தால் என்ன முறைகள் அவசியமோ, அவற்றின் மூலமாக அச் சட்டத்தை மாற்றிப் புதுச் சட்டம் கொண்டுவர அவர்களுக்கு உரிமையுண்டு.

கடைசியாக நாம் சொன்ன அம்சம் முக்கியமானது. எவ்வளவு தான் நீதிபதிகள் சுதந்தரமாக இருக்கவேண்டும் என்று நாம் விரும்பினாலும், அரசின் அறுதியான விளக்கத்திற்குட்பட்டனவே நீதிபதிகளுடைய தீர்ப்புக்களும். அரசின் நடவடிக்கைகளைக் கட்டுப் படுத்தும் சட்டங்களுக்கு உகந்த ஒரு வழியில் நீதிபதிகளும் நடந்து கொள்ளவேண்டியிருக்கிறது. பிரிட்டனின் நீதித்துறை உலகிலுள்ள மற்ற நீதித் துறைகளைப் போலவே சுதந்தரமானது. அந் நாளின் அரசாங்கத்துக்கு இடையூறாக இருக்கக்கூடிய செயல்களையும், கொள்கைகளையும், சட்டம் என்று சொல்ல அது தயங்கியதேயில்லை. வில்க்ஸ் (Wilkes) என்பவர் வழக்கில் அரசாங்கம் பெற்ற தொடர்ச்சியான தோல்விகளை நாம் நினைவுபடுத்திக் கொள்ளலாம். சாமர்செட் (Somersett) என்ற நீக்ரோ வேலைக்காரன் அவனுடைய முதலாளியால் இங்கிலாந்திற்கு அழைத்துவரப் பெற்றபோது அவனது அடிமை அந்தஸ்து தானாகவே நீங்கிச் சுதந்தர மனிதன் அந்தஸ்தைப்பெற்றுவிட்டான் என்று தீர்ப்பளித்த மான்ஸ்பீல்ட் பிரபுவின் (Lord Mansfield) சிறப்புமிக்க தீர்ப்பையும் நாம் நினைவிற்குக் கொண்டுவரலாம்: 'இத் தீர்ப்பினால் என்ன இடையூறுகள் ஏற்பட்டாலும் இங்கிலாந்தின் சட்டப்படி இவ் வழக்கை

அனுமதிக்கவோ, ஒப்புக்கொள்ளவோ முடியும் என்று நான் சொல்ல முடியாது. ஆகவே இந்தக் கறுப்பு மனிதன் விடுதலை செய்யப்பெற வேண்டும்.'

ஆனால் அந் நாளின் பாராளு மன்றம் விரும்பியிருந்தால், இங்கிலாந்தின் சட்டத்தை மாற்றி யமைப்பதை எதுவும் தடை செய்திருக்க முடியாது. பாராளு மன்றத்தின் இரு சபைகளும் ஒப்புக்கொண்டு, அரசரும் ஒப்புதல் தந்துவிட்டால் அடிமை முறையை மீண்டும் ஸ்தாபிப்பதோ, அல்லது ரோமன் கத்தோலிக்க மதத்தை மீண்டும் கொண்டுவருவதோ அல்லது வேறெதற்கு வேண்டுமானாலும் சட்டம் இயற்றி யிருக்கலாம். ஹேபியஸ் கார்பஸையும் (Habeas Corpus) அது போன்று பிரிட்டனின் மக்களுக்குள்ள பிற உரிமைகளையும், பாராளு மன்றச் சட்டம் சிறிது காலம் நிறுத்தி வைத்ததைப் போலவே இவைகளையும் செய்திருக்க முடியும்.

இதைப் போன்றே, அமெரிக்காவில் அடிமை முறையைப் பல சட்டங்களும், எண்ணற்ற நீதித் தீர்ப்புக்களும் அது சட்டத்திற்குட்பட்டதெனத் தீர்மானித்திருந்தன. ஆனால் உள்நாட்டுப் போருக்குப் பின் அச் சட்டம் திருத்தப்பட்டது. இதற்குப் பல வருடங்களுக்குப் பிறகு மதுவிலக்கை அமெரிக்க நாட்டின் சட்டமாக ஆக்கினர். சிறிது காலத்துக்குப்பின் இன்னொரு சட்டம் இதை நீக்கியது.

எனவே அரசு எதையெல்லாம் சட்டம் என்று பிரகடனப் படுத்துகிறதோ, அவையெல்லாம் சட்டமாகும். மற்றெல்லா அரசின் நடவடிக்கைகளைப் போலவே சட்டமும் ஓர் அரசியல் துறையாகும். 'அரசிற்குச் சட்டமியற்றும் சர்வாதீனம் இருக்கிறது என்று சொல்வது விளக்கமற்ற ஒன்றாகும். அது அரசியலானது அரசியலைப்பற்றிய சர்வாதீனம் உடையது என்று சொல்வதைப் போன்றது' என்று மெரியம் (Merriam) மிகப் பொருத்தமாகக் கூறுகிறார்.

## (ii) சட்டமும், அரசும்

### அரசுடன் சட்டத்தின் தொடர்பு

அரசு சட்டத்திற்குட்பட்டதாக இருக்கவேண்டும் என்றும், சட்டந்தான் எல்லாவற்றிற்கும் பிரதானமானது என்றும் வாதாடலாம். பொறுப்புள்ள அதிகாரத்திற்கும், பொறுப்பற்ற அதிகாரத்திற்குமிடையேயுள்ள சாதாரண வேறுபாடு இதனால்தான் ஏற்படுகிறது. அரசின் துறைகள் பொறுப்புள்ளனவாக நடக்கும்படிச் செய்யப் பல வகை மாற்றுகளை நாம் பயன்படுத்தலாம் என்று ஆலோசனை

கூறலாம். இங்கிலாந்துக்கு இப்படிப்பட்ட ஒரு மாற்ருள் அவசியம் தேவையென்றும் கூறலாம். ஆனல், சில நாடுகளில் சட்டமானது அரசிற்கு இடையூருக இருந்தால் அதை அவர்கள் விருப்பப்படி மாற்றியமைத்துக்கொள்வதையும் அல்லது முழுவதாகச் சட்டத்தை ஒதுக்கி வைத்துவிடுவதையும் நாம் காணும்போது நமக்கு வியப்புண்டாகிறது.[1] ஆனல் அரசின் படைப்புத்தான் சட்டம் என்பது உண்மையே. மிகவும் ஜனநாயக அரசில் பெரும்பான்மையான குடிமக்கள் ஒரு வேகத்தில் நல்ல சட்டங்களையெல்லாம் முட்டாள் தனமாகவும், கொடூரத்தன்மையோடும் விலக்கிவிட்டுக் கெட்ட சட்டங்களை உண்டாக்கிக்கொள்ளும் அதிகாரத்தை எவரும் தடைசெய்யமுடியாது.[2] அநீதிக்கு எதிராக உள்ள ஒரே உறுதிப்பாடு சட்டத்தி லில்லை. ஆனல், முடியாட்சியில் அரசனுடைய நெறியுணர்ச்சியும், மனச்சாட்சியுமே உறுதிப்பாடுகள். குடியாட்சியில் குடிமக்களின் மனச்சாட்சியும், நெறியுணர்ச்சியும், சிறு குழுவாட்சியில் ஆளும் வர்க்கத்தின் மனச்சாட்சியும் நெறியுணர்ச்சியுமே உறுதிப்பாடுகளாகும். வெறியுணர்ச்சிக்கும், அறியாமைக்கும், மனவெழுச்சிக்கும் எதிராக எந்தச் சட்டமும் நீண்டகாலம் பாதுகாப்பு அளிக்கமுடியாது. அரசாங்கக் கொள்கை மாற்றங்களுக்குக் காரணமான வழக்கங்கள்தான் சட்டமாகின்றனவேயொழிய சட்ட மன்றங்களின் ஆக்க விருப்பாற்றலின் வெளியீடுகளாகக்கொள்ளக் கூடாது.

எதேச்சாதிகாரமான அரசாங்கத்திற்கும், அரசியல் அமைப்புக் குட்பட்ட அரசாங்கத்திற்கும் உள்ள வேறுபாட்டைச் சொல்லவந்த நாம் அதை மறந்துவிட்டதாகக் கொள்ளக்கூடாது. இதில் முன்னது சட்டத்திற்கு முதலிடம் அளிக்கவில்லை; பின்னது அளிக்கிறது. 'நாம் சட்டத்தின் ஆளுகைக்குட்பட விரும்புகிருேமா? அல்லது எதேச்சாதிகாரத்தால் ஆளப்பட விரும்புகிருேமா?' என்று பேராசிரியர் மாகல்வெய்ன் (MacIlwain) கேட்கிருர். அமெரிக்க உயர்நீதிமன்றத்தின் தீர்ப்பு ஒன்றைச் சுட்டிக்காட்டி அவர் மேலும் கூறுகிருர். 'சீர்திருத்தவாதிகள் சமூக நலனை உயர்த்துவதற்காக வடித்த திட்டங்கள், சட்டம் என்ற பாறையில் மோதி இவ்வாறு உடைந்துபோவதைக் கண்டு அவர்களுக்கு எரிச்சலாகவிருக்கும். ஆனல், அந்த எரிச்சலில் இதற்கு மாற்று என்ன என்பதை

[1] 'இனிமேல் அரசின் பிரதான கொள்கை அதிகாரத்தி லிருப்பவர்களுக்கு மகிழ்ச்சி யளிக்கக்கூடியதுதான் சட்டம் என்று நான் போதிக்கவேண்டுமா? பொய்யையும் புரட்டையும் சொல்லிக்கொடுப்பதற்குப் பதிலாக மானமுள்ள மனிதனுகிய நான் போதிப்பதையே விட்டுவிடுவேன்'—Judge Dahlmann, 1837.

[2] 'இங்கிலாந்து பாராளுமன்றத்தால் தவிர வேறு எவராலும் அழிக்கப்பட முடியாதது'—பிளாக்ஸ்டன் (Blackstone).

மறந்துவிடக்கூடாது. நீதிபதிகள் சட்டத்தை ஆக்குவதற்கல்லாமல் சட்டம் எது என்று எடுத்துச்சொல்வதற்கு இருக்கிறோம் என்பதை மறந்துவிடும்போது நாஜிகள் சொல்லுகிறமாதிரிதான் நடக்கும். கிரிமினல் சட்டத்தின் மூலமாக நேரடியாக ஒருவரைத் தண்டிக்க முடியாவிட்டால் அவரைத் தண்டிப்பதற்கு எச் சட்டம் உதவி புரிகிறதோ, அதை உபயோகிக்கவேண்டும் என்று நாஜிகள் பின் பற்றும் முறைதான் மிஞ்சும்.'

இப்படி எதேச்சாதிகாரத்திற்குள்ள ஒரே மாற்று, அரசியல் சட்ட அமைப்பை ஏற்படுத்துவதுதான். இப்படிச் செய்வது சட்டத்தை உயரத்தில் தூக்கிவைப்பதாகிறதே என்றால் அதை ஒப்புக்கொள்வோம். இப்படிச் சட்டத்திற்கு அதிக மதிப்புக் கொடுத்தால் பல முக்கியக் காரியங்கள் தடைப்பட்டுப்போகலாம். ஆனாலும் நமக்குள்ள மாற்று என்ன என்பதை மறந்துவிடக் கூடாது.[1]

## சட்டமியற்றுவதற்குள்ள வரம்புகள்

அரசின் விருப்பாற்றலே சட்டம் எனவும், சட்டமியற்றும் சர்வாதீனம் அரசினுடையதெனவும், அரசு ஆக்கியதால் அதன் ஆணையே சட்டம் எனவும் நாம் கொண்டால், ஒரு கேள்வி எழலாம். எவ்விதமான சட்டத்தையும் அரசு ஆக்கமுடியுமா? அல்லது அரசின் சட்டரீதியான விருப்பாற்றல்தான் சட்டம் என்று சொல்ல வேண்டுமா? இது நம் பிரச்சினைகளின் கேந்திரத்திற்கே நம்மை அழைத்துச்செல்கிறது. சட்டத்தின் பல பணிகளில் ஒன்று, அரசின் சட்டமியற்றும் அதிகாரம் எவ்வாறு உபயோகப்படுத்தப்பெற வேண்டும் என்றும், என்ன வழியில் சட்டம் இயற்றப்பெறவேண்டும் என்றும் இலக்கணம் வகுப்பது ஆகும். இது முரணல்லவா என்று சிலர் கேட்கலாம். அரசு சட்டத்தை ஆக்குமானால் சட்டம் அரசை ஆக்கமுடியாதல்லவா? ஆனால் இது மேலெழுந்தவாரியாகப் பார்க்கும் போது தெரியும் தோற்றந்தான். ஏனெனில், அரசு தோன்றுவதற்கு முன்பே பல வழக்கங்கள் சட்டத்தைப்போன்றே வலிமைபெற்றுச் சமுதாயங்களில் வழங்கி வந்தன. இவ் வழக்கங்களுக்கும் பரம்பரை வாழ்க்கை வழிகளுக்கும் கட்டுப்பட்டே அரசு தோன்றியது.

அரசின் சட்டமியற்றும் அதிகாரத்துக்கு விதிக்கப்பட்டுள்ள சட்டரீதியான தடைகள் பலவிதச் சக்திகளின் விளைவேயாகும். இப்பொழுது நாம் சொன்ன வழக்கங்கள் அல்லது பரம்பரை

[1] 'சட்டத்தால் கட்டுப்படாத ஓர் அதிகாரமே அரசு. அது வன்முறையைச் சார்ந்திருக்கிறது'—லெனின் (Lenin).

வாழ்க்கை வழிகள் முதலியவை காரணமாக இருக்கலாம். அல்லது சில சமயங்களில் அரசின் அங்கங்களில் சிலர், குடிமக்களோ அல்லது பிரஜைகளோ அரசின்மீது சில வரையறைகளைச் சுமத்தக் கூடியவர்களாக இருக்கலாம். 1689-ல் எழுந்த உரிமைச்சாசனம் (Bill of Rights) தொடங்கி, 1911-ல் ஏற்பட்ட பாராளுமன்றச் சட்டம் (Parliament Act) வரையிலுள்ளவை இங்கிலாந்தில் சட்டம் எவ்வாறு இயற்றப்படலாம் என்று விதிகளை வகுத்துக் கொடுக்கின்றன. இவையெல்லாம் குடிமக்களின் முயற்சியால் எழுந்தவையே. அமெரிக்கா, ஃபிரான்சு போன்ற நாடுகளிலும், எழுதப்பெற்ற அரசியல் அமைப்புச் சட்டம்கொண்ட இதர நாடுகளிலும் குடிமக்களாலும் அவர்களின் பிரதிநிதிகளாலும் அரசின் சட்டமியற்றும் அதிகாரத்தை ஒரு வரம்புக்குட்படுத்தி வைத்திருக்கின்றனர்.

இப்படிச் செய்யும் அரசியல் அமைப்புச் சட்டந்தான் அரசின் மாற்றுட்கள் தங்கள் அதிகாரத்தைத் தவறுன வழியில் உபயோகிக்காமல் இருப்பதற்குரிய ஒரே உறுதிப்பாடாகும். இதற்கு மாருகச் சில நாடுகளில் அரசனின் விருப்பமே சட்டம் என்று இருந்ததை நாம் நினைவில் கொள்ளலாம். மக்களின் அரசியல் மனவியல்புகளை அவர்களின் அரசியல் அமைப்புச் சட்டங்களில் எழுதப்பட்ட பகுதியில் அல்லாமல் அது நடைமுறையில் வேலைசெய்வதில் பிரதிபலிக்கக் காணலாம். எந்தவிதமான அதிகாரம் உபயோகிக்கப் பெறவேண்டும் என்று அவர்கள் விரும்புகிருர்கள்? என்னவிதமான சட்டங்கள் வேண்டுமென்று அவர்கள் விரும்புகிருர்கள்?

## சட்டமும், சமுதாயத்தின் அற உணர்ச்சியும்

குறிப்பிட்ட ஒரு காலத்தில் மக்களின் நியாய உணர்ச்சியைச் சட்டம் வெளிப்படுத்துவதாக அமைந்திருக்கிறது. பொது நலன்கள், தனியார் நலன்கள் ஆகிய இரண்டின் மதிப்பையும் குறித்துப் பொதுவான ஒப்புதல் ஏற்படுகிறது. இப் பொதுவான ஒப்புதலானது பொது நலன்களைக் காப்பதற்கு உபயோகப்படுவதல்லாமல், பொதுவான அறஉணர்ச்சியை வெளிப்படுத்தவும், விளக்கம் தரவும் கூடிய அங்கங்களாகவும் பரிணமிக்கின்றன. சட்டம், 'நலன்களைப் பற்றி ஏற்பட்ட ஒரு மதிப்பீடாக இருக்கிறது.' நடத்தையைத் தீர்மானிக்க இது அளவுகோலாகப் பயன்படுகிறது. எவ்வாறு இந்தப் பொது அற உணர்ச்சி பெறப்படுகிறது? இது பல காரியங்களைச் சார்ந்திருக்கிறது. மத வெறியினுல் ஏற்படும் பலாத்காரம் இப்படிப்பட்ட உணர்ச்சிக்கு இடையூருக இருக்கும். ஆனுல், பொதுச் சமயம் இருப்பது இவ்வுணர்ச்சிக்குப் பெரிதும் துணையாக

இருக்கும். 'நாம் நாட்டினப்பற்று என்று அழைக்கும் பல கருத்துச் சேர்க்கை'யானது பிற காரியங்களிற்போலவே சட்டத்திலும் வெளிப்படக்கூடும். சமுதாயங்கள் வெளியிடும் பொதுவான நோக்கை எவ்வாறு பெறுகிறார்கள்? ஒரு சந்ததியாருக்குச் சரியானதென்றும், மற்றொரு சந்ததியாருக்குத் தவறென்றும் ஒரு காரியம் படுவது எதனால்? என்பதை நாம் அறியோம்.

## ஒப்பீட்டு அடிப்படையில் சட்டத்தின் மேலாண்மை

ஆகவே சட்டமானது நிலவுகின்ற பிரதான அற உணர்ச்சியை மாத்திரம் வெளிப்படுத்துகிறது என்று கொண்டால், சட்டத்தை இயற்றியவர்களின் அதிகாரத்திற்கு மேம்பட்டதான அதிகாரம் அதற்கு இருக்கமுடியாது என்று ஆகிறது. அப்படியானால், சட்டம் இயற்றப்பெறும்பொழுது அரசியலில் பிரதானமாக இருந்த பகுதியினரின் விருப்பாற்றலைமாத்திரம் வெளியிடும் தன்மையதாகச் சட்டமிருக்கும். மேலும், அரசிற்குத் தெய்வீகத் தன்மையை நாம் அளிக்கவில்லையாகையால், அதன் சட்டங்களுக்கும் தெய்வீகத் தன்மையை நாம் அளிக்க வேண்டுவதில்லை. தனி அதிகாரத்தினால் பாகுபடுத்தப்பட்ட அரசின் ஒரு துறையானது தன் பணியினால் ஏற்படும் விளைவுகளால் நிலைநிறுத்தப்படுகிறது. அதைப்போலவே சட்டமும் குடிமக்களின் நல்வாழ்விற்கு என்ன செய்கிறதோ, அதைப் பொறுத்து அது நிலைக்கும்; அல்லது வீழ்ச்சியுறும்.

குறைபாடு நிறைந்த ஆண்களும், பெண்களும் ஒருங்கு சேர்வதுதான் அரசு. இதே குறைபாடுள்ள நபர்களால் ஆக்கப்பெறுவதுதான் அதன் அரசாங்கம். இவர்கள் பெரும்பாலும் வெறுப்பு, விருப்பு உடையவர்களாயும், சொந்த நலன்களைப் பாராட்டுபவர்களாகவும், அறியாமை மிகுந்தவர்களாகவும், அறிவற்றவர்களாகவும் இருக்கும்போது, இவர்கள் ஆக்கப்பெறும் சட்டங்களில் ஒரு தனித் தன்மையை நாம் எதிர்பார்க்கமுடியாது. பூரண ஞானத்தின் வெளிப்பாடுதான் சட்டம் என்றோ, தெய்வீக உணர்ச்சியால் உந்தப்பட்ட கட்டளைகளே சட்டம் என்றோ நாம் நினைக்கக்கூடாது. அந்தச் சமயத்தில் பதவியிலிருக்கும் மனிதர்களால் இயற்றப்பெற்ற நடத்தைக்குரிய விதிகளே சட்டங்கள். அவை அவர்களின் பிரதான அக்கறைகளைப் பிரதிபலிப்பனவாக அமைந்திருக்கின்றன. 'தன்னை ஆற்றலுள்ளதாக்கத் தெரிந்துகொண்ட சமுதாய விருப்பாற்றலின் தோற்றமே சட்டமாகும். சட்டபூர்வமான ஆணைகள் ஆற்றல் வாய்ந்த தேவையின் விளைவே. அரசியல் அதிகாரத்தின் கேந்திரத்தில் இருந்துகொண்டு தங்களுடைய விருப்பங்களை உணரச் செய்யும் வழி தெரிந்தவர்களின் விருப்பங்களே சட்டங்களாகின்றன.

போட்டி விருப்பங்கள் பலவற்றுள் சிலவே, சட்டபூர்வமான ஆணைக ளாவதற்கு ஆராய்ந்துகொள்ளப்படுகின்றன' என்று லாஸ்கி (Laski) கூறுகிறார். எத்துணையோ சட்டமுறைகள் சிலரின் நன்மைக் காகப் பலர் வாழ்ந்தும், பணிசெய்தும் கிடப்பதை அறமானதென்று கருதியிருக்கின்றன.

## தற்காலச் சட்டங்களின் வகைகள்

இன்று நம்மை எப்படிப்பட்ட சட்டங்கள் ஆளுகின்றன என்று பார்ப்போம். ஒரே சீரான நடத்தை தேவைப்படுகின்ற காரியங் களில் ஒரே சீரான நடவடிக்கையை அமலாக்குகின்றன சில சட்டங்கள். சாலையின் ஒரு மருங்கில் வண்டிகளை ஓட்டிச் செல்லப் பணிப்பது, இதற்கு ஓர் உதாரணம் ஆகும். பிற சட்டங்கள் பொது நல வாழ்விற்காகச் சமூகத் தேவையென்று சிலவகைச் செயல்களைக் கட்டாயப்படுத்துகின்றன. எல்லாப் பொதுச் சுகாதார விதிகளும் இத் தலைப்பின்கீழ் அமையும். இன்னும் சில சட்டங்கள் சமூக இலக்குகளை வெளியிடுவனவாக இருக்கின்றன. கட்டாயக் கல்வி முறை அல்லது மதச் சுதந்தரம் அல்லது பேச்சுரிமை முதலியன இதன்பாற்படும். இன்னும் சில, தனியாளாலோ அல்லது தொகுதியாலோ செய்யப்பெற முடியாத சில அவசியமான பணிகளைச் செய்யும் முறையாக அமைந்திருக்கின்றன. உதாரணமாக, நிலக் கரிச் சுரங்கங்களைத் தேசீய மயமாக்குதல் அல்லது மின்சாரபோர்டு (Electricity Board) நியமித்தல் போன்றவை இதன் வகையாகும். ஆனால், பெரும்பான்மையான சட்டங்கள் இன்றைக்குள்ள சமூக, பொருளாதார முறைகளை, முக்கியமாக உடைமைகளைக் காப்பாற்றும் நோக்குடையனவாக இருக்கின்றன. ஒரு குறிப்பிட்ட காலத்தில் குறிப்பிட்ட ஒரு சமூக அமைப்பின் வெளியீடே இவைகள். இதிலிருந்து பிரதிநிதிமுறை பரந்து இருந்தால் அவர்கள் கவனமும் பொது அக்கறைகளைப்பற்றியதாக இருக்குமேயொழியச் சிறு வகுப்பாருக்குரியனவாக இராது என்பது பெறப்படுகிறது. 'சட்ட பூர்வமான ஆணைகள் ஆற்றல் வாய்ந்த தேவையின் விளைவு' என்பதனால் பொருளாதாரச் சமத்துவம் மிக்க அவசியமாகிறது. அரசியலில் பெற்ற வாக்குரிமையானது பொருளாதாரச் சுதந்தரத் திற்குப் பெரிதும் துணை புரிந்திருக்கிறது. சுதந்தரமான தொழி லாளர்களாக இன்னும் அதிக முக்கியத்துவம் பெற்றால்தான் அரசியலில் அவர்கள் மதிப்புப் பெறமுடியும்.

இதிலிருந்து, சட்டம் எதுவாக இருந்தாலும் அது பாரபட்ச மற்ற நீதி வழங்கக்கூடியதாக இல்லை என்பது தெரிகிறது. ஒரு பிரதானமான வாழ்க்கை முறையின் காப்புத்தான் அரசே ஒழியச்

சட்டத்தின் காப்பு அன்று. ஏனெனில், சட்டமும் இப் பிரதான வாழ்க்கை முறையைக் கூறுவதுதானே? இந்தப் பிரதான வாழ்க்கைமுறை எல்லாத் தாக்குதல்களிலிருந்தும் காப்பாற்றப்பட வேண்டிய ஒரு குறிப்பிட்ட அமைப்பாக இருக்கலாம்; அல்லது எல்லா அமைப்புகளையும் சுதந்தரமாக விவாதிப்பதில் உள்ள நம்பிக்கையாக இருக்கலாம்; அல்லது இரண்டுஞ் சேர்ந்த ஒரு குழப்பமான சேர்க்கையாக இருக்கலாம்.

### சட்டம் இருப்பதன் நியாயம்

சட்டம் என்ன செய்ய முயல்கிறதோ, அதைக்கொண்டுதான் அதை நாம் நியாயம் தீர்க்கலாம். 'அது என்ன முடிவுகளுக்காகப் பணியாற்றுகிறதோ, அதில்தான் அதன் நியாயம் அடங்கி யிருக்கிறது.' அவை ஒருவேளை சட்டத்திற்குள் நேரடியாகக் காணப்படாமலிருக்கலாம். நோக்கங்கள் வெளிப்படையாகத் தெரிவதில்லை. அரசியல் மேடையிலிருந்து விலகி நிற்கும் பல சக்திகள், அக்கறைகள் ஆகியவற்றின் உபகரணமே சட்டமன்றங்கள் ஆகும்.

## (iii) சட்டமும் நீதியும்

### சட்டமும், சமுதாயத்தின் அற உணர்ச்சியும்

ஒரு குறிப்பிட்ட சமுதாயம் எதை நியாயம் என்று கருதுகிறதோ அதன் வெளியீடே சட்டம் என்றால், சமுதாயம் எவ்வளவுக்கு நியாயமானதாக இருக்கிறதோ, அவ்வளவுக்குத்தான் சட்டமும் நியாயமானதாக இருக்கும் என்பது பெறப்படுகிறது. சமுதாயம் அதன் சட்டபூர்வமான உறவுகளிலாவது ஓரளவுக்கு நீதியைப்பெற முயல்கிறது. ஒரு சட்டம் சில மக்களின் கண்ணோட்டத்தில் மிகவும் நியாயமற்றதாகக் காணப்படலாம். ஆனால், பெருவாரியான மக்களின் பார்வைக்கு அது அப்படித் தோன்றாம லிருக்கலாம். அப்படி இல்லாதிருந்தால் அச் சட்டம் அமலாக்கப்பட முடியாமல் விரைவில் மறைந்துபோகும். 16, 17-ஆம் நூற்றாண்டுகளில் சமயத் துன்புறுத்தல்கள் பெருவாரியான மக்களால் நியாயமானவை என்று ஒப்புக்கொள்ளப்பட்டிருந்தவரையில் அவை சட்டபூர்வமான காரியமா யிருந்தன. வெகு குறைந்த எண்ணிக்கையினரே அதை நியாயமற்றதாக உணர்ந்திருந்தனர். தொழிலாளர் சங்க நடவடிக்கைகளை நொறுக்கிய தொழில் தொகுப்பு இனச் சட்டங்களும் (Combination Acts) அது போன்ற இதர சட்டங்களும் நாம் இன்று அவைபற்றி என்ன நினைத்தாலும், அந் நாளிலிருந்த சட்ட மன்ற

உறுப்பினர்களுக்கு நியாயமற்றனவாகவே தெரியவில்லை. 5 ஷில்லிங் மதிப்புள்ள பொருளைத் திருடினால் அதற்கு மரண தண்டனை வழங்கப் பெற்ற கொடூரச் சட்டங்களும் இவ்வாறு எழுந்தனவே. அல்லது நீதி முறையின் பெயரால் சித்திரவதை முறையை ஏற்படுத்தியதும் இதன்பாற்பட்டதே. அக் கால நீதி யுணர்ச்சியைத்தான் குறை சொல்ல வேண்டுமே தவிர வேறு எதையுமன்று. இப்பொழுதுங்கூடப் பொதுவாக ஒப்புக்கொள்ளப்பெறும் பல சட்டங்கள் சிலரின் நோக்கில் நியாயமற்றனவாகப்படுகின்றன. உதாரணமாகப் பெற்றோர்க்குத் தங்கள் குழந்தைகளை வளர்ப்பதற்குள்ள சுதந்தரத்தைக் கட்டாயக் கல்வி பறிமுதல் செய்வதாக நினைக்கிறார்கள். குழந்தைகளை எழுத்தறிவற்றவர்களாக வைத்திருப்பதற்கும் பெற்றோருக்கு உரிமையுண்டு என்று மிக உண்மையாகச் சிலர் நம்புகின்றனர்.[1] மதச் சுதந்தரம் அந் நாட்டின் பிரதான சமயத்தின் நோக்கில் நியாயமற்றதாகக் குறை கூறப்படுகிறது. அப்படியே அரசினர் பள்ளிகளுக்கு முதலிடம் அளிப்பது, தனியார் துறைப் பள்ளிகளுக்கு நேர்மையற்றதாகப்படுகிறது. வேலையளிப்போருக்கும், முதலாளிகளுக்கும் நியாயமற்ற செயல் தேசீய மயமாக்குவது என்று கூறப்படுகிறது. 1927ஆம் வருடத்திய தொழிற் சங்கச் சட்டம், தொழிற் சங்கங்களால் நியாயமற்றவையெனத் தீர்மானிக்கப் பெற்றமையால் அச் சட்டம் திருத்தப்பெற்றது. அப்பொழுது திருத்தப்பட்டதை நியாயமற்றதாக வேலையளிப்போர் கருதினார்கள்.

ஒரு சட்டமானது 'நேர்மையற்றதென' இரு கோணங்களிலிருந்து சொல்லலாம். முதலாவது இலட்சிய, நபர் சாராத, என்றென்றும் நிலைத்திருக்கும் நீதியின் கோணத்திலிருந்து சொல்லலாம். ஆனால் யார் அதன் ஆதாரத்தை விளக்க முடியும்? சிலர் திருச்சபையின் போதனைகளில் இதனைக் காண்கிறார்கள். இன்னும் சிலர் திருச்சபையைக் காட்டிலும் பெரிதான சமயப் போதனைகளில் இதைக் காண்கின்றனர். இன்னும் சிலர், மிகவும் விவாதத்திற்குள்ளான இயற்கைச் சட்டம் (நியதி) தேவையான அளவுக்கு வழி காட்டுகிறது என்று நம்புகிறார்கள்.

## இயற்கைச் சட்டம்

கடைசியாகச் சொன்னதை நாம் ஒப்புக்கொள்கிறோம். பாரபட்சமற்ற நீதியை உலகில் நிலவச் செய்வதற்கு ஒரு முக்கிய

[1] கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலையில் முதல் வகுப்பில் முதலாவதாகத் தேறியவரும் (Senior Wrangler) கணிதப் பேராசிரியராக இருப்பவருமாகிய ஒருவர் 40 ஆண்டுகளுக்கு முன்பு இவ்வாறு வாதமிடக் கேட்டோம்.

காரியமாக இதை நாம் கொள்ளுகிறோம்.[1] 'நம் கோர்ட்டுகள் அநேக சட்டங்களை ஆக்கிக்கொண்டே போகின்றன. அவர்களுக்குத் தெரியுமோ, தெரியாதோ, அவையெல்லாம் இயற்கைச் சட்டங்களே ஆகும். அவர்களிடத்தில் கொண்டுவரப்படும் ஒவ்வொரு சிக்கலுக்கும் அவர்கள் தீர்வுகாண வேண்டியிருக்கிறது. குறிப்பிட்ட மேலாண்மை சரியான ஆதாரங்கள் தராமல் தவறிப் போகும்போது, பொதுவான நீதிக்கான வாதங்களும், வசதிகளும் அவர்களுக்கு ஆதாரமாக வேண்டி நேருகிறது' என்று தலைசிறந்த சட்ட வல்லுநராகிய சர். பிரடரிக் போலக் (Sir Frederick Pollock) கூறுகிறார். இக் கொள்கையைக் கண்டிப்பாக ஒப்புக் கொள்வதில் தான் போர்க்குற்றவாளிகளை விசாரிக்கப்படுவதில் உள்ள நியாயம் பொதிந்திருக்கிறது. காலத்தையும் இடத்தையும் பொருட்படுத்தாதபடி இயற்கையாகவும் மொத்தமானதாகவும் மனித நடத்தைக்குரிய கொள்கைகள் இல்லாதிருந்தால் இவ் வகை விசாரணைகள் நீதியின்படியும் நெறிமுறையின்படியும் நியாயமற்றனவாகவே இருந்திருக்கும்.

ஆனால் நாம் இயற்கைச் சட்டத்தை ஒப்புக்கொண்டால், சில சட்டங்கள் அடிப்படையிலும், ஆதாரத்திலும் நேர்மையற்ற சட்டங்கள் என்று விவரிக்கப்படவேண்டி நேரிடலாம். இயற்கைச் சட்டத்தைத் தங்கள் சட்டமியற்றுதலுக்கு ஆதாரமாகக் கொள்ளாத அரசையும் நியாயமற்ற அரசு என்றுகூடச் சொல்லலாம். அப்படிப்பட்ட அரசின் சட்டங்களெல்லாம் நெறியியலின்படிச் செல்லுபடியாகாதவை ஆகும். உதாரணமாக, பாசிஸ, நாஜி, போல்ஷ்விக் முறைகளில் சட்டத்தை அரசின் பணியாளாகக் கொண்டிருந்தபடியால் அவைகளை நேர்மையற்ற அரசுகளெனச் சொல்லலாம். இதற்குச் சில உதாரணங்களைப் பார்க்கலாம். 1935ஆம் வருடத்திய ஜெர்மானியப் பீனல் கோடு திருத்தச் சட்டம் (German Penal Code Amendment Act of 1935) சொல்லுகிறது. தண்டிக்கப்படவேண்டியிருந்தும் இந்தச் சட்டத்தொகுப்பின்படி தண்டிக்கப்பட முடியாதவர்களைப் பீனல் கோடுக்கு ஆதாரமான கருத்தின் அடிப்படையிலாவது அல்லது பொதுமக்களின் உணர்ச்சிக்கு உகந்த முறையிலாவது, கோர்ட்டுகள் தண்டனை வழங்கலாம்..........நம் மக்களின் இன்றியமையாத தேவைகளுக்காகச் சேவை செய்வது தவிர வேறு கோட்பாடுகளைப் பற்றிப் பேசுவது ஜெர்மானியச் சட்டக் காப்பாளரின் இலட்சியம்

[1] எப்படியாவது, கிறிஸ்தவ சமயத்தின் உண்மையைப்பற்றி யில்லாவிட்டாலும், ஒரு தெய்வீக ஒழுங்கு, ஓர் இயற்கை நியதி, மனித நிலைக்கு மேற்பட்ட பொது நிலை ஆகியவைகளைக் குறிப்பாகக் கொண்டு எல்லா மனித நடவடிக்கைகளையும் நியாயம் தீர்க்க முடியும் என்பதை மக்கள் நம்பும்படிச் செய்ய வேண்டும்.' (Prof. H. A. Smith 'The Law of Nations 1948 quoted in the Times Literary Supplement, November 1948.)

அன்று. ஜெர்மானியச் சட்டக் கழகம் (German Academy of Law) ஆரிய நீதிமுறையின் கருத்தை மேலும் வளர்க்க முற்படும்.' இது எதில் கொண்டுபோய்ச் சேர்த்தது என்று நாம் அறிவோம். டாக்காவ் (Dachau) முறை முகாம், வாயு அறைகளில் மக்களைக் கொன்றது ஃபிரான்சில் மாத்திரம் 27,000 யுத்தக் கைதிகள் சுட்டுக் கொல்லப்பட்டது முதலியனவெல்லாம் இதன் விளைவே ஆகும்.

'ஒரு குறிப்பிட்ட அரசானது ஆதாரமாகக் கொண்டிருப்பதாகச் சொல்லும் நீதிக்கருத்துக்களுக்கு முரணான சட்டம்' நியாயமற்ற தெனக் கூறுவதற்குரிய இன்னொரு விளக்கமாகும். உதாரணமாக, சுவிட்சர்லாந்தில் வாக்குரிமையை ஆண்களுக்கு மாத்திரம் வழங்கும் சட்டம் நியாயமற்ற சட்டமென வாதாடலாம். ஏனெனில் அது சுவிட்சர்லாந்து முழுத்தனியாள் உரிமைகளின் ஒப்புதலின் மீது எழுப்பப்பட்டிருக்கிறது. ஆகவே, பெண்களுக்கு வாக்குரிமை அளிக்காதது நெறிமுறையின்படிப் பொருந்தாச்செயலாகும். ஆனால், அதே வகையான தடை சமத்துவ உரிமையை ஒப்புக்கொள்ளாத அரசில், நியாயமற்றதென்று சொல்ல முடியாததாகும்.

## 'நியாயமற்ற' சட்டம் என்றால் என்ன?

சட்டங்களிலுள்ள இவ் வேறுபாட்டை மனத்திலிருத்துவது மிகவும் அவசியம். எந்தக் கொள்கைகளின்மீது சமூக மரபு ஏற்படுத்தப்பெற்றிருக்கிறது என்பதை விளக்கிச் சொல்லாமலேயே, நெறி மரபுகளின்படி அடிக்கடிப் பல காரியங்களைச் சதா கண்டனம் செய்துவருகிறோம். எல்லோரும் மனம் ஒப்புக்கொள்ளக்கூடியதும் எக் காலத்துக்கும் பொருத்தமானதுமான நடத்தைக்குரிய கொள்கை கள் இல்லையெனில், ஒரு குறிப்பிட்ட காலத்தைச் சேர்ந்தவர்களின் மனச்சாட்சி ஒப்புக்கொள்ளக்கூடியதாயும். இப்படிப்பட்ட மனச் சாட்சியை எச் சட்டமாவது மீறுமாகில் அச் சட்டம் நியாயமற்ற தாகவும் இருக்கும். எனவே, மதத் துன்புறுத்தல், அல்லது சித்திரவதை முறையில் நீதி வழங்குதல், அல்லது அடிமைமுறை முதலியவைகளின்மீது அவை அக் காலத்து மனச்சாட்சி நிலையை மீறியது என்று ருசுப்படுத்த முடியாவிட்டால் கண்டனம் தெரிவிக்க முடியாது. உண்மையில் அக் காலத்து மனச்சாட்சிக்கு விரோதமாக இவையெதுவும் இருக்கவில்லை. இதேபோன்று சோவியத் ருஷ்யா வின் மதவிரோதச் சட்டங்களை நாம் குறை கூறவில்லை. ஏனெனில் ருஷ்யர்கள் தங்களது வரலாற்றிலே எப்பொழுதும் மதச் சுதந்தரம் விரும்பத்தக்கதென்று ஒப்புக்கொண்டதேயில்லை. அதற்கு மாறாக, யூதர்களுக்கு விரோதமான சட்டங்களையும், நாஜி ஜெர்மனியின் கொடூரத்தையும் கண்டிக்கிறோம். ஏனெனில் ஜெர்மானிய மனச்

சாட்சியானது சம உரிமைக் கோட்பாட்டையும், நீதித்துறையிலும், அரசியல் விவகாரங்களிலும் மிக உயர்தரமான கொள்கைகளேயும் ஒப்புக்கொண்டிருந்தது. நியூரம்பர்க் (Nuremburg) சட்டங்களும், கைதிகள் முகாம்களும், அதை நடத்தியவர்களின் பார்வையிலேயே பிழையானவையாகப்பட்டன. எனவே அவை ‘நியாயமற்றவை’. ஏனெனில் அவை அன்று நிலவிய தரங்களுக்கும், ஆதாரமான கொள்கைகளுக்கும் விரோதமானவையாக இருந்தன. இதேபோன்று முஸ்லீம் அல்லாதார்மீது துருக்கி தனிவரிகளே விதித்ததானது, துருக்கியின் குடியாட்சிக்கு விரோதமான ஒரு காரியம். எனவே அவை நியாயமற்றவை. ஆனுல் சிரியாவில் தலேவராக முஸ்லீம் தான் இருக்கமுடியும் என்று சட்டமியற்றியது நியாயமே. ஏனெனில் சிரியா வெளிப்படையான முஸ்லீம் அரசு ஆகும். இதுவரை ஒப்புக் கொள்ளப்பட்ட அடிப்படைகளிலிருந்து சட்டம் பின்னேக்கிப் போகிறதா? என்று பார்ப்பதும், இச் சட்டத்தை ஆக்கியவர்கள் உண்மையாகவே, ‘அதிகம் தெரிந்தவர்களா?’ என்று தெரிந்து கொள்வதும் இதில் அடங்கியுள்ள கருத்தாகும். ஒரு சட்டம் உள்ளூர ஒன்றும் அவ்வளவு நியாயமற்றதாக இராதிருந்தும், அதை அமல் நடத்துவதில் நியாயமற்றுப்போகுமாயின், அச் சட்டம் நடைமுறையில் நியாயமற்றதாக ஆகிவிடுகிறது என்பதையும் சேர்த்துக்கொள்ளவேண்டும். சில நாடுகளில் தங்களது அந்தஸ்து காரணமாகச் சட்டத்தைத் துச்சமாக மதிக்கிருர்கள். அல்லது இலஞ்சம் சட்டத்திலிருந்து அவர்களுக்கு விடுதலே அளித்து விடுகிறது. இப்படி இருக்குமாயின் நியாயமாக இருக்கும் சட்டம் நியாயமற்றதாக ஆகிவிடுகிறது. உண்மையில் அப்படிப்பட்ட நாட்டில் நியாயமுள்ள சட்டமென்பதே இருக்கமுடியாது. முடிவாக, நாம் வெறுப்புக் காட்டும் காரணத்தால் ஒரு சட்டம் நியாயமற்றதாக ஆகிவிடாது என்பதை நினேவில் கொள்ளவேண்டும்.

## சட்டமும், அரசின் நோக்கங்களும்

முடிவாகப் பார்க்கப்போனுல் ஒரு சட்டத்தை நிலேநிறுத்துவது அச் சட்டத்தை இயற்றும் அரசு வெளியிட்ட நோக்கங்களோடு சட்டத்திற்குள்ள உறவுதான். ஏதாவது குறிப்பிட்ட ஒரு சட்டம் இதற்கு மாருக இருக்குமாயின் அதை மாற்றிக்கொள்ளலாம். அப்படி இல்லாவிட்டால் அரசின் நோக்கம் மாருதமட்டில் சட்டத்தையும் மாற்றமுடியாது. அரசின் நோக்கத்தை மாற்ற, அதன் அங்கத்தினர்களின் மனப்போக்கை மாற்றினுல்தான் முடியும். கிரேட்பிரிட்டனில் இப்பொழுது பொருளாதார, சமூகக் கட்டமைப்பில் பெருத்த மாறுதல்களே விளேவிக்கும் சட்டங்களே இயற்றிக்கொண்டிருக்கின்றனர். ஏனெனில் வாக்காளர்த்

தொகுதியில் பெரும்பான்மையோர் கொண்டிருக்கும் மாறிய நோக்கங்கள் அரசின் நோக்கங்களையும் மாற்றியிருக்கின்றன. இவ்வாறு மாறியிருக்கும் நோக்கங்களோடு இணைவதாக இருக்கின்றன, புதிதாக இயற்றப்படும் சட்டங்கள். பெரும்பான்மையோர் முதலாளித்துவக் கொள்கையையும் வரம்பிலாத் தொழிற்றுணிவு முறையையும் நம்பியிருந்தமட்டில் இப்படிப்பட்ட தேசீய மயமாக்கும் சட்டங்கள் வெற்றிகரமாகக் கொண்டுவந்திருக்க முடியாது. இதே போன்று, நாஜி முறையானது உருவளவில் அழிக்கப்பட்டு விட்டாலும், சுதந்தரமான அரசாங்கமுறை எதுவும் அங்கு ஏற்படுத்துவது தேசீய சோஷியலிசத்தை நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ ஆதரித்தவர்களில் பெரும்பான்மையோர மனம் மாறினலொழியச் சாத்தியப்படாது.

## (iv) சட்டத்திற்கு எதிர்ப்பு

### நியாயமற்ற சட்டத்தை ஒருவர் எதிர்க்கவேண்டுமா?

கெட்ட சட்டத்தை எதிர்க்கும் பிரச்சினையைப்பற்றி இங்கு விரிவாக ஆராயமுடியாது. ஏனெனில் அது பின்னர் வர இருக்கும் தனியாள் உரிமைகளின் வரையறைபற்றிப் பேசும்போது விவாதிக்க வேண்டியிருக்கிறது. இருந்தபோதிலும் இதைக் குறிப்பிடா திருப்பதும் இயலாத காரியமே.

நம்முடைய ஆராய்ச்சியை, ஒருவேளை எது முடிவாக இருக்கும் என்று கருதுகின்றேமோ, அதிலிருந்து ஆரம்பிக்கலாம். எதிர்ப்பது எப்பொழுதும் ஓர் உரிமையாக இருக்கமுடியாது. அது ஒரு குற்றமாகவோ அல்லது கடமையாகவோ தானிருக்கமுடியும்.[1] நியாயமற்ற சட்டமானது துன்பம் விளைவிக்கிறது என்பதால் எதிர்க்கப் படத்தான் வேண்டும் என்று நாம் ஒப்புக்கொண்டால், பொறுப்புள்ள எந்த மனிதனுக்கும் எதிர்ப்பதைத் தவிர வேறு வழி கிடையாது. எதிர்க்காமலிருப்பது தனது மனச்சாட்சிக்கும், சமுதாயத்துக்கும் துரோகம் விளைவித்ததாகும். எதிர்ப்பு சமூகக் கட்டுகளைத் தளர்த்தி ஒற்றுமையைக் குலைக்கிறது. சரியான சிந்தனையின்றியோ அல்லது வேடிக்கையாகவோ இதில் இறங்கிவிடக்கூடாது. ஒருவரின் மனப் போக்குப்படி இது, 'அனுமதிக்கக் கூடியதாகாது.'

எதிர்ப்பது எப்பொழுதாவது சரியானதாகுமா? அப்படியானல் எப்படிப்பட்ட எதிர்ப்புச் சரியானது? எந்தச்சட்டத்திற்கும், எப்படிப்

[1] தாமஸ் ஹில் கிரீனின் (Thomas Hill Green's) Principles of Political Obligation என்ற நூலைப் பார்க்கவும்.

பட்ட சட்டத்திற்கும் எப்பொழுதும் கீழ்ப்படியவேண்டுமென்று எவரும் வலியுறுத்தமாட்டார்கள். நாட்டிற்கு ஆற்றவேண்டிய கடமை என்று ஆங்கிலக் கத்தோலிக்கர்களும், பிரஞ்சுப் புராட்டஸ்டென்டுகளும் தங்களது மனச்சாட்சியை மறுதலித்து, சட்டத்தை அனுசரித்துப் போயிருந்தார்களானல் அவர்களது செயல் நியாயமானதாக இருந்திருக்கும். ஆனல் அவர்கள் அச் சட்டத்திற்குப் பணிய மறுத்து, அதன் விளைவாகிய வேதனையையும், சாவையும் ஏற்றுக்கொண்டார்கள். ஒருவரும் உயிர்த் தியாகிகளைக் குறைகூற முடியாது; அல்லது கெட்ட குடிமக்கள் என்று அழைக்க முடியாது. சட்டமியற்றுபவர்களின் பக்கத்தில் பாவம் இருந்தது. இருந்த போதிலும், உயிர்த்தியாகியின் எதிர்ப்புக்கூட ஒரு பொறுப்பான காரியமாகும். தாங்கள் வெறுக்கும் சட்டங்களுக்கு எதிராக ஒவ்வொருவரும் இதேமாதிரியான போக்குடையவர்களானல் சமுதாயத்திற்கே முடிவு ஏற்பட்டுவிடும். கீழ்ப்படியாமைக்கு விதிக்கப்படும் தண்டனை போதுமான அளவிற்குக் கடுமையாக இருக்குமானல், நல்ல காரணமின்றிக் கீழ்ப்படியாமலிருக்க எப்பொழுதும் முயலமாட்டார்கள். தன் உயிரையே அர்ப்பணிக்கத் துணிபவன், தனது இலட்சியத்திற்குச் சாத்தியமான அளவு விசுவாசம் காட்டுகிருன். எனவே அவன் மரியாதைக்குரியவன். தண்டனை குறைவாக இருக்குமானல் அரசு அந்தச் சட்டத்தைப் பின்பற்றுவதில் அதிக முக்கியத்துவம் காட்டவில்லை என்பது பொருள். சமூகத்தில் குற்றத்திற்குக் காட்டப்படும் முக்கியத்துவத்திற்குச் சமமாகத் தண்டனைகள் கொடுக்கப்படுகின்றன.[1] எப்படி இருத்தாலும், சாத்வீக எதிர்ப்பு உடனடியாகப் பலன்தருவதாக இருப்பதில்லை. உயிர்த்தியாகியின் இரத்தம் திருச்சபையின் வித்தாகும். ஆனல் அறுவடை மெதுவாகத்தான் கிடைக்கும். ஏனெனில் உயிர்த்தியாகங்கள் உடனடியான சட்ட மாற்றங்களைக் கொண்டுவருவதில்லை.

நேரடியான எதிர்ப்பு பலாத்காரத்தைக் கொள்வதால் வேதனையும் படுகிறது. இது ஒரு வேறுபாடு; நெறிமுறையின்படி இது சிறிது தாழ்ந்ததும் அவ்வளவாகப் போற்றமுடியாததுமான நிலையிலிருக்கிறது. உயிர்த் தியாகிகளுக்குள்ள மரியாதை புரட்சிக்காரர்களுக்குக் கிடைப்பதில்லை. ஏனெனில் உயிர்த் தியாகத்தைக்காட்டிலும் புரட்சி இலகுவானது. ஆனல் முடிவு என்னவோ இரண்டிலும் ஒன்றுதான். ஒரு நியாயமற்ற சட்டம் பெரும்பான்மையான மக்களின் விருப்பங்களை வெளியிடுவதாக இருக்கவில்லை என்பது பலபேர் புரட்சியில் சேருவதிலிருந்து வெளிப்படையாகத் தெரியும். இதைப்

[1] நெறிமுறையின்படிக் குற்றத்துக்கு முக்கியத்துவம் அன்று. பொய்க் கையெழுத்திடும் குற்றத்திற்குக் கொடுமைப்படுத்தும் குற்றத்தைக் காட்டிலும் அதிகத் தண்டனை கொடுக்கப்படுகிறது.

பொறுத்துத்தான் புரட்சி வெற்றி பெறும். முன்னுளில் பெரும் பான்மையான மக்களின் விருப்பத்திற்கிணங்க மாற மறுக்கும் ஒரு சட்ட அமைப்பை மாற்றுவதற்குப் பலாத்கார எதிர்ப்பையே காட்ட வேண்டியிருந்தது.

## சில சோதனைகள்

முடிவாகப் பார்க்குமிடத்து எதிர்ப்பு ஒரு தனி மனிதனின் சொந்தக் காரியமாகையால் இதற்கு விதிகள் விதிக்க முடியாது. ஆனுல், சில அடிப்படைக் கொள்கைகளைப் பொது உபயோகத்திற் காகக் கொடுக்கமுடியும். முதலாவது, சட்டத்திற்குக் கீழ்ப்படிய மறுப்பது, முக்கியமாக எச் சட்டத்திற்கும் கீழ்ப்படிய மறுப்பது, மிகவும் முக்கியமான ஒரு காரியம். எனவே அதை விளையாட்டுத் தனமாக மேற்கொண்டுவிடாமல் எப்பொழுதும் தங்கள் முன் இந்தக் கேள்வியை நிறுத்திப் பார்க்கவேண்டும். 'நான் இப்பொழுது செய்யப்போவதைப்போல ஒவ்வொருவரும் செய்தால் என்ன நடக்கும்?' முக்கியமாக, 'இந்தச் சட்டத்திற்கு எதிராக நான் உணருகிறபடி இன்னொருவர் நான் ஒப்புக்கொள்ளும் ஒரு சட்டத் திற்கு இப்பொழுது நான் செய்வதைப்போல் எதிர்ப்புக் காட்டினுல் நான் ஒப்புக்கொள்ளுவேனு?'

இரண்டாவது, நாம் வெறுக்கும் சட்டம் நியாயமற்ற சட்டம் என்று குழப்பிக்கொள்ளக்கூடாது. மனச்சாட்சி என்பது ஒன்று, வெறுத்தல் என்பது வேருென்று. நபர்கள் நேரடியாகக் கலந்து கொள்ளக் கட்டாயப்படுத்தும் சட்டத்திற்கும், நபர்களின் சில நடவடிக்கைகளைத் தடுக்கும் சட்டத்திற்கும் முக்கியமான வேறுபாடு இருக்கிறது. உதாரணமாக, இராணுவ சேவை, அல்லது சமய வழிபாடு, அல்லது ஒரு கட்சியில் சேரவேண்டும் என்று கட்டாயப் படுத்துவது முதலியன முன்னதைச் சார்ந்தவை. தவருகத் தடை செய்யப்பட்டிருக்கும் கூட்டங்கள் என்று நாம் நினைக்கும் கூட்டங் களில் கலந்துகொள்வது, அல்லது தவருகத் தடை செய்யப்பட் டிருக்கும் நூல்களைப் படிப்பது, அல்லது சட்டவிரோதமான பிரச் சாரத்தில் கலந்துகொள்வது முதலியன பின்னதைச் சாரும். முடிவாகப் பணமோ, கட்டணமோ செலுத்தக் கட்டாயப்படுத்தும் சட்டங்களையும் நாம் வேறுபடுத்த வேண்டும். சில பணிகளைச் செய்ய மறுப்பது, சில நடவடிக்கைகளைச் செய்யாமல் இருப்பதைக் காட்டிலும் சுலபமாக நியாயப்படுத்த முடியும். ஆனுல், வரி கொடுக்க மறுப்பதை ஒருவேளை எப்பொழுதும் நியாயமாக்க முடியாது. ஏனெனில் கட்டணம் செலுத்துவது நமது ஆளுந் தத்துவத்தைப் பாதிப்பதில்லை.

மூன்றாவதாக, நாம் எதிர்க்கத்தான் வேண்டுமானால், நமது மனச்சாட்சியைத் திருப்தி செய்யும் வகையில் அது துணிகரத்தோடு கூடிய வெளியரங்கமான செயலாக இருக்கவேண்டும். இரகசியமாகச் சட்டத்தை மீறுவது எப்பொழுதும் சரியான காரியமாகாது. ஏனெனில் நெறிமுறையின்படி அதற்கு ஒரு மதிப்பும் கிடையாது. எதிர்ப்புக்குரிய முழு மதிப்பும், பொதுமக்கள் அபிப்பிராயத்தை விளிப்பதிலோ, அல்லது உலகத்திற்கே முறையிடுவதிலோ அல்லது ராயனுக்கு (Caesar) முறையிடுவதிலோ அடங்கி இருக்கிறது. அரசாங்கத்திற்கு அது எதிர்க்கப்படுகிறது என்பது தெரிந்திருக்க வேண்டும். அப்படியே ஏனைய குடிமக்களும் அதை அறிந்திருக்க வேண்டும்.

நான்காவதாக, எதிர்ப்பின் துல்லியமான நோக்கம் மனத்திலிருத்தப்பெறவேண்டும். நாம் ஓர் ஒழுங்கோடு சட்டத்திற்கு இணங்க மறுப்பது சட்டத்தைச் செயலாற்ற விடாமல் தடுப்பதற்காகவா? அப்படியானால் சரியானதென்று உணர்ந்துகொண்ட ஒன்றை ஒரு சிறுபான்மையினர் பெரும்பான்மையினர்மீது பிடிவாதமாகத் திணிக்கிறார்கள் என்றுதான் நடைமுறையில் அதற்குப் பொருளாகும். அதுதான் குடியாட்சிக்கு ஒரு முடிவை உண்டாக்கும். இது சரியாக இருக்கலாம்; ஆனால், அபாயகரமானது. அல்லது பொதுமக்கள் அபிப்பிராயத்தின் ஆதரவைப் பெற்று அதன்மூலம் சட்டத்தை மாற்றுவதற்காக ஓர் அநீதியைப் பொதுமக்களின் அபிப்பிராயத்தின் கவனத்திற்குக் கொண்டுவர நாம் முயல்கிறோமா? அப்படியானால் அது மிகவும் நல்லது. ஆனால், வெற்றி பெறுவது அபூர்வமான காரியம். அல்லது நமது அந்தராத்துமாவின் கட்டளைக்கிணங்க, நமது மனச்சாட்சி, 'வருவது வரட்டும்; நான் செய்யக்கூடிய வேறு காரியமில்லை. கடவுள் காப்பாராக' என்று கூறி எதிர்ப்பைக் காட்டுகிறோமா? இது மிக அபூர்வமாக நிகழும் நிகழ்ச்சி. ஆனால், இது மிகவும் நம்பிக்கையான ஒரு நிகழ்ச்சியாகும். ஏனெனில் எந்தச் சமுதாயமும் தனது அங்கத்தினர்களின் மனச்சாட்சியை விற்றுவிடச் செய்வது நல்லதன்று. உடனடியான பலன்களை இது எதிர்பார்ப்பதில்லை. வெற்றியைக் குறித்து இது கவலைப்படுவதில்லை. எல்லா நல்ல வாழ்க்கையின் ஆதாரமாகவும் சுதந்தரமான மனச்சாட்சியின் சுதந்தரச் செயலாகவும் இருக்கிறது. இப்படிப்பட்ட மனப்போக்குகள் ஓர் அரசில் சாதாரணமாகத் தோன்றுமானால் அது மிகவும் சீரழிந்த நிலையில் இருக்கிறது என்று கொள்ளலாம்.

## சுதந்திரப் போக்கின் தேவை

குடிமக்களின் நோக்கிலிருந்து சட்டத்தை நிலைநிறுத்துவது பற்றி நாம் சிந்திக்கும்போது, குடிமக்களின் அடிவருடித் தன்மை நல்ல அரசாங்கத்தை ஆக்கித்தர முடியும் என்ற உறுதிப்பாடு இல்லை என்பதை நாம் நினைவில் கொள்ளவேண்டும். அநேக அரசுகளின் இறுதியான ஆதாரமாகிய சுதந்தர உணர்ச்சி முழுவதும் செத்து விடாமல் அதைத் தூண்டும் காரியங்கள் நிகழும்போது அது விழித்துக் கொள்ளும் தன்மையானது என்பதை அதிகாரத்திலிருப்பவர்கள் உணர்ந்துகொள்ள வேண்டும். 'சட்டத்திற்குக் கீழ்ப்படிவது ஒரு கடமை. ஆனால், மற்றெல்லாக் கடமைகளையும் போல இதுவும் இடம் பொருள் ஏவலைப் பொறுத்துத்தானே ஒழிய முழுமையாக அன்று. ஒரு சட்டரீதியான சட்டமியற்றும் துறையிலிருந்து வெளி வருகிறது சட்டம் என்ற அனுமானத்தில் இது கடமையாகக் கருதப்படுகிறது. மேலும் நியாயமான எல்லைக்குள்ளாகச் சட்டம் அமைந்திருக்கிறது என்ற அனுமானத்தின்பேரிலும் இவ்வாறு கருதப்படுகிறது. நமக்குச் சட்டப்படிச் சொந்தமான உரிமைகளைக் கட்டுப்படுத்துகின்ற சட்டங்களுக்கு நாம் கடமைப்பட்டிருக்க வேண்டியதில்லை. என்றும் நிலைவரமான நீதி, அன்பு ஆகிய கொள்கைகளுக்கு விரோதமாக நம்மைச் செயலாற்றச் சொல்லும் ஆணைகளுக்கும் நாம் கடமைப் பட்டிருக்க வேண்டியதில்லை,' என்று பெஞ்சமின் கான்ஸ்டன்ட் (Benjamin Constant) நூற்றாண்டுகளுக்கு முன் எழுதினார். அதற்கு ஐம்பது ஆண்டுகளுக்கு முன் ஜெபர்சன் (Jefferson) இன்னும் ஆணித்தரமான சொற்களில் இவ்வாறான சுதந்தர உணர்ச்சியை வெளிப்படுத்தி இருக்கிறார். (விவசாயிகள் அதிக வரியை எதிர்த்துப் புரட்சி செய்ததைக் குறிப்பிட்டு), 'இப்படிப்பட்ட புரட்சியின்றி இருபது ஆண்டுகள்கூடக் கழிவதைக் கடவுள் தடுப்பாராக. தங்கள் மக்கள் எதிர்ப்புணர்ச்சியை இன்னும் கொண்டிருக்கிறார்கள் என்பது நாட்டை ஆள்பவர்களுக்கு அடிக்கடி எச்சரித்துக்கொண்டே இருக்க வேண்டும். அவ்வாறு இருக்காத எந்த நாடும் தன்னுடைய உரிமை களைக் காப்பாற்றிக்கொள்ள முடியாது................ஒரு நூற்றாண்டு அல்லது இரு நூற்றாண்டுக் காலத்தில் சில உயிர்த் தியாகங்கள்தான் செய்யப்பட்டனவென்றால் அதற்கு என்ன மதிப்பு இருக்க முடியும்? சுதந்தரத் தருவானது காலாகாலங்களில் தேச பக்தர்களின் இரத்தத் தாலும், கொடுங்கோலரின் இரத்தத்தாலும் வளர்க்கப்பெற வேண்டும்.............அரசாங்கத்தை எதிர்ப்பது சில தருணங்களில் மிக முக்கியமானது. ஆகையால் அந்த உணர்ச்சி எப்பொழுதும் நிலைத்திருக்க விரும்புகிறேன். அது அடிக்கடி உபயோகப்படுவதால் அது பிழையாகலாம். ஆனால், உபயோகிக்காமல் இருப்பதைக் காட்டிலும் இது நல்லது. நான் அடிக்கடிச் சிறு புரட்சிகளை விரும்பு

கிறேன். அது சூழ்நிலையில் புயலைப் போன்றது' என்று ஜெபர்சன் எழுதினர். நம்மில் ஒருவரும் இவ்வளவு தூரத்துக்குப் போக முடியாது. எனினும் மனிதனுக்காகச் சட்டம் ஏற்பட்டதே யொழியச் சட்டத்திற்காக மனிதன் அல்லன் என்பதை நாம் மறக்கக்கூடாது.

## சட்டத்தின் பயனுறுதன்மைக்கு வரையறை

சமுதாயத்தின் பெயரால் எதிர்பார்க்கப்படுவதும் ஒப்புக் கொள்ளப்படுவதுமான நடத்தைக்குரிய விதிகளை ஏற்படுத்துவது தான் சட்டத்தின் முக்கியத்துவம் என்று இதுகாறும் நாம் வலி யுறுத்திஞேம். ஆனல் இப்படிப்பட்ட நடத்தையை ஏற்படுத்துவதில் சட்டத்திற்குத் தராதர முக்கியத்துவந்தான் இருக்கும் என்பதும் உண்மையே. ஒரு சமுதாயம், தான் வெறுக்கும் கெட்ட சட்டங் களாலேயே ஆளப்படுகிறது என்று கற்பனையால் கூட நினைத்துப்பார்க்க முடியாது. பெரும்பான்மையான மக்களின் ஆதரவு இல்லாமல் எந்தச் சட்டமும் அமலாக்கப்பெற முடியாது. சிறு தொகையினரின் எதிர்ப்பே சட்டத்தைப் பயனற்றதாக ஆக்கப் போதுமானது.[1] 'அரசாங்கங்கள் கட்டாயப்படுத்துவதனுலோ அல்லது வலிமையினுலோ வாழ்வதில்லை. ஆனல் நம்பிக்கை என்னும் மூலதனத்தை நம்பியே வாழ்கின்றன.' இந்த நம்பிக்கை மக்களால் அளிக்கப்படுகிறது' என்று லிண்ட்சே (Lindsay) கூறுகிருர்.

சமுதாயம் தன் பல வாழ்க்கைத் துறைகளையும் பல செயல் களையும் எவ்வாறு கவனித்துக்கொள்ளவேண்டும் என்று விரும்பு கிறதோ அதன் குறிப்புக்களே சட்டங்கள் என்று பார்த்தோம். தனக்கு விதிகள் தேவை என்று சமுதாயம் உணர்ந்திருக்கிறது. அதன் பொது அமைப்பிற்கும் விருப்பங்களுக்கும் தக்கதாக அவை அமைகின்றன என்றும் சமுதாயம் அறியும். எனவே கட்டாய உணர்ச்சி எதுவுமின்றி அவைகளை ஒப்புக்கொண்டு அனுசரித்துப் போகிறது. இதனுல் அதை எதிர்க்கவேண்டும் என்று விரும்பு வதும் இல்லை. அது தன்னுடைய விருப்பாற்றலின் பிரதிபலிப்பை இச் சட்டங்களில் பார்க்கிறது. அப்படிப்பட்ட சட்டங்களைக் கட்டாயமாக அமல் நடத்தவேண்டியதேயில்லை. அப்படியே அமலாக்கினுலும் சமுதாயத்தில் பெரும்பாலோர் அதை உணருவதில்லை. உதாரண மாகக் கிரிமினல் சட்டங்கள் மக்கள் தொகையின் ஒரு சிறு பகுதியின் மீதுதான் செலுத்தப்படவேண்டியிருக்கிறது. இயற்கையாகவும்,

[1] இராணுவத்திலிருந்து ஓடிப்போவோர் பத்து சதவிகிதமேயானுலும் கட்டாய இராணுவ சேவை அமல் நடத்தப்பட முடியாது என்று சொல்லக் கேட்டிருக்கிறேம்.

உள்ளுணர்ச்சி காரணமாகவும் மக்கள் நேர்மையாக இருக்கிறார்களே யொழியச் சட்டத்தினால் அல்ல.[1]

## சட்டத்தின் பயன்

முடிவாக, சமுதாயத்திற்குச் சட்டத்தால் ஏற்படும் பயன் இருவகைப்படும். முதலாவது, உயிரையோ, உடைமையையோ, அல்லது வாழ்க்கையின் பொது நோக்கங்களையோ துச்சமாக மதிக்கும் சமூக விரோதமனப்பான்மை கொண்ட சில நபர்களைத் தடை செய்து வைக்கிறது சட்டம். இவர்கள் போலீஸ்காரனைக் கண்டு அஞ்சியே அடங்கி நடக்கிறார்கள். இரண்டாவதாக, ஆலோசனை மூலமும் தடைகள் மூலமும் சில பணிகள் செய்யச் சட்டம் துணை புரிகிறது. எதிர்பார்க்கப்படும், விரும்பப்படும் வாழ்க்கை முறைக்குச் சட்டம் ஒருவனைப் பழக்கப்படுத்துகிறது. அதோடு அனுசரித்துப் போவதை உணராமலும், தானாகவே இயங்கக்கூடியதாகவும் ஆக்கி விடுகிறது. இந்தப் பொருளில் தடை விதிக்கும் தன்மையைவிடக் கல்வி-புகட்டும் தன்மை இதில் அதிகம் காணப்படுகிறது. சட்டத்திற்கும், நெறி முறைக்குமுள்ள உறவு, அரசிற்கும், நெறிக்கும் உள்ள பரந்த பிரச்சினையில் கலந்துவிடுகிறது. இங்குச் சட்டம் எப்பொழுதாவது நெறிப்படுத்தும் தன்மையதாக இருக்க முடியுமா என்பதே சந்தேகந்தான். சரியான வாழ்க்கை முறைக்கு எதிரான நடவடிக்கைகளைச் சட்டம் தடுக்கக்கூடும். அதுவும் சரியான வாழ்க்கைமுறை எது என்று ஐயந்திரிபற விளக்கப்பட்டும், தீர்மானிக்கப்பட்டும் இருந்தால்தான் முடியும். ஆனால், தனியாட்களைச் சரியாக நடந்துகொள்ளும்படி வற்புறுத்த முடியாது. அது இந்தக் காரியத்துக்காகச் செய்யக்கூடியதெல்லாம் நல்ல செயல்களுக்கு ஊக்கமும், கெட்ட செயல்களுக்கு இடையூறுகளும் விளைவிப்பதுதான். பொதுமக்கள் அபிப்பிராயம் எதைச் சரியானதென்று நினைக்கிறதோ அதைச் செய்பவர்களுக்குப் பாதுகாப்பு உறுதியும் அது அளிக்கிறது. ஆனால், இவற்றுள் சரியானது எது என்பது நமக்குள்ள விருப்பத்தைச் சார்ந்ததாகும்.

[1] 'கருப்புச் சந்தை (Black Market) வியாபாரக் குற்றங்கள் அதிகமாவதைப் பார்த்தால் இப்படிச் சொல்வது உண்மையற்றதென்று சொல்வதைப் போல் இருக்கிறது. ஆனால் சில நாடுகளில் பங்கீட்டு முறையையும், விதிகளையும் தீர்மானமாக எதிர்க்கும் மக்களுக்கு முன்பாகச் சட்டம் பயனற்றதாக இருக்கின்றது. சட்ட மீறுதல்களுக்குள்ள தண்டனைகளை விலக்கிவிட்டால் எத்துணை பேர், நம்மையும் சேர்த்து, உள்ளூரக் குற்றமனப்பான்மை உள்ளவர்கள் என்பது வெளிப்படும் என்பதை ஒப்புக்கொள்வோம்.

## (v) 'இறைமை' என்பதன் பொருள் என்ன?

### இச் சொல்லின் தோற்றுவாய்

அரசின் இறுதியான கட்டாயப்படுத்தும் அதிகாரப் பிரயோகத்தைப் பொதுவாக 'இறைமை' (Sovereignty) என்று அழைக்கிறோம். ஆகவே அரசுகளை, 'இறை அரசுகள்' (Sovereign States) என்று அழைக்கிறோம். பதினாறும் நூற்றாண்டில் முதன் முதல் இச் சொல் உபயோகிக்கப்பட்டபோது, இறுதியான கட்டுப்பாடு இருக்கவேண்டும் என்ற உண்மையைக் குறிப்பிட்டது. அதாவது வழக்குகளில் முடிவாகக் கூறும் அதிகாரத்தையும், பொறுப்பையும், பகிர்வதில் முடிவான பகிர்வைச் செய்யக்கூடிய அதிகாரத்தையும் இச் சொல் குறித்தது. அரசைத் தவிரப் பிற சமூக சக்திகள் இவ் விறுதி அதிகாரத்தை உபயோகிக்கக்கூடாது என்றும் இருந்தது.

கொள்கையிலும், நடைமுறையிலும் இக் கருத்து மிக்க பழைமை யானது. 'அரசு நியமிப்பது எதுவாக இருந்தாலும் அதற்கு ஒவ்வொரு காரியத்திலும், சிறியதிலும், பெரியதிலும், நியாய மானதிலும், நியாயமற்றதிலும் கீழ்ப்படிய வேண்டும்' என்று சோபக்ளீஸின் அவல நாடகமாகிய ஆன்டிகோனில் கிரியோன் சொல்லுகிறான். (Creon in Sophocles's tragedy Antigone) பிளேட் டோவிலும், அரிஸ்டாடிலிலும் அரசின் மேலாண்மைக்கு மரியாதை, சட்டத்தின் இறுதித் தன்மை ஆகியவை சாதாரணமாகக் காணப்படுபவையாகும். கிரேக்கர்களுக்கு வெகு காலத்துக்கு முந்தியே கிழக்கத்தியப் பேரரசுகள், கொள்கையிலும் நடைமுறை யிலும் அரசுக்கு உள் நாட்டிலுஞ்சரி, வெளி நாட்டிலுஞ்சரி, போட்டி யாளர் இல்லை என்ற அடிப்படையில் அமைந்திருந்தன.

இடைக்காலம் இந்தக் கோட்பாட்டையோ அல்லது உறுதியான இறுதி அதிகாரம்பற்றியோ அறிந்திருக்கவில்லை. அக் காலத்து அரசியல் அமைப்பின் தன்மையே—அதாவது, நிலப் பிரபுத்துவமே- இக் கோட்பாட்டிற்கு நேர் எதிரான கருத்தாகும். நிலப் பிரபுத்துவம் சிறு தொகுதிகளுக்குள் நபர்வாரியாகச் சார்ந்திருப்பதும், விசுவாசம் காட்டுவதுமாகும். இவைகள் முறையே இது போன்ற நபர்வாரி விசுவாசத்தால் இணைக்கப்பட்டிருந்தன. யாராவது முடிவான அதிகாரம் இருப்பதாகச் சொல்லி இருந்தால் அது திருச்சபைதானே ஒழிய அரசு அன்று. 'நிலப் பிரபுத்துவத்தின் மேலாண்மையும் இயற்கை அல்லது கடவுளின் சட்டம் மனிதனது சட்டத்தைவிட உயர்ந்தது என்ற நம்பிக்கையும், தற்காலக் கருத்தான அரசிற்குக் குடிமக்கள் மீதுள்ள வரம்பிலாததும் பகுக்கப்பட முடியாததுமான

இறைமை அதிகாரத்தை உணர்ந்துகொள்ளவிடாமற் செய்து விட்டது.'—வார்டு (Ward)

பதினாறும் நூற்றாண்டில் சமயப் போர்களினால் ஏற்பட்ட குழப்ப வான நிலையும், சமய ஒற்றுமையின் முடிவும், திருச்சபைக்குக் கீழ் எல்லோரையும் ஒருமைப்படுத்த முடியும் என்ற நம்பிக்கையும், மேலாண்மையை மீண்டும் வலியுறுத்த வேண்டிய அவசியத்தை ஏற்படுத்தின. விளக்கமான எல்லைகளுக்குள் வரையறை செய்யப் பட்ட நிலப்பகுதிகளில் வாழ்ந்த சமுதாயங்களில் இவ்வாறாகக் கடைசியில் ஒரே அதிகாரம் தோன்றியது. இது தோன்றுவதற்கு முன் போட்டியாளர்களை அடக்கியோ அல்லது தம்முள் சேர்த்துக் கொண்டோ, தனக்கும் தன் குடிமக்களுக்கும் ஊடே நின்ற, திருச் சபை உட்பட எல்லோரையும் விலக்கிவிட்டு இவ் வதிகாரம் தோன்றியது. அவ்வாறு அதிகாரம் பெற்றவர் அரசின் தலைவரான அரசர் ஆவார். நாம் முன்னர்ப் பார்த்தபடி இவ்வாறாகத் தற்கால அரசு தோன்றியது.

இங்ஙனம் ஒவ்வோர் அரசிலும் ஓர் அரசர் இருந்தார். ஒவ் வோர் ஆட்சி நிலத்திலும் வாழும் சமுதாயத்தில், சட்டத்தை வெளி யிடவும் விளக்கவும், அங்கு அதிகாரம் வேண்டுவோர்களாகிய போட்டியாளர்களுக்குள் சமரசம் ஏற்படுத்திவைக்கும் இறுதியான அதிகாரம் பெற்றும் உள்ள ஓர் அங்கமாக அல்லது அமைப்பாக இது இருந்தது என்று கூறலாம்.

## போடினும், ஹாப்சும் (Bodin and Hobbes)

அரசின் முதன்மையைச் சிந்தாந்த ரீதியில் விளக்கிக் கூறிய வர்கள் போடின் என்ற பிரஞ்சுக்காரரும், ஹாப்ஸ் என்ற ஆங்கி லேயரும் ஆவார்கள். உள் நாட்டு, சமயப் போர்கள் இவர்களின் நாடுகளிலே நடந்து கொண்டிருக்கும்போது இவர்கள் இதை எழுதினார்கள். போடின் 17 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும், ஹாப்ஸ் 17 ஆம் நூற்றாண்டின் மத்தியிலும் எழுதினார்கள். ஒரே அதிகாரம் இருக்கவேண்டியதன் அவசியத்தை இவர்கள் ஆதரித் தார்கள். எந்தத் தனியாளோ அல்லது தொகுதிமக்களோ தங்களுக்கு ஆதியில் சுயாட்சிக்கு இருந்த உரிமைகள் அல்லது எதிர்ப்பு ஆகிய வற்றைக் காட்டமுடியாத ஒரு தனி அதிகாரம் வேண்டும் என்று கூறினார்கள். அரசு ஒழுங்கிற்கும், ஒற்றுமைக்கும் தீது வராமல் எது நல்லது என்று நினைத்து வழங்குகிறதோ அதுவே உரிமை என்று அவர்கள் கூறினார்கள்.

போதினும், ஹாப்சும் அரசியல், சமய ஒற்றுமையைக் குலைக்கக் கூடிய உரிமை வலியுறுத்தல்களையோ அல்லது வேட்டல்களையோ பற்றி முக்கியமாகச் சிந்தித்தார்கள். சமயச் சிறுபான்மையினரின் சமரச வேண்டலையும், பொருளாதார அமைப்புக்களாகிய தொழிற் சங்கங்களும், தொழிலிணைப்புகளும், நகராட்சிகளும், மாநிலங்களும் கோரிய சுயாட்சியையும் இவர்கள் நிராகரித்தார்கள். சமுதாயத்தில் ஒரே ஒரு அதிகாரமே இருக்கமுடியும் என்று இவர்கள் வலியுறுத்தினர்கள். அதிகாரம் வரம்பிற்குட்படுத்தப்பட முடியாதது, பங்கு தர முடியாதது, பகுக்க முடியாதது. இடைக்காலம் இவ்வாருன முரணுன அதிகார உரிமை கொண்டாடுவதில் முறிந்து வீழ்ச்சி யுற்றது. இப்படி ஏற்பட்ட குழப்பத்திற்கு ஒரே மாற்று அரசு ஏகபோக அதிகாரம் பெறுவதுதான் என்ருயிற்று.

## இறைமையும் வரம்பிலா அரசும்

புதிதாக எழுந்த இறைமைக் கோட்பாட்டிற்கு இவ்வாருகப் பொருள் கூறுவது ஏற்கெனவே அரசியல், சட்டரீதியாக நிகழ்ந்து விட்ட ஓர் உண்மையை அதாவது தற்கால முடியரசில் காணப்பட்ட இறுதியான முதன்மை அதிகாரத்தை விரிவாக விளக்குவதாகும். வரம்பின்மையைச் சித்தாந்த ரீதியில் நிலைநிறுத்துவதுதான் இக் கோட்பாடு. எல்லாக் குடிமக்களும் பணிவு காட்டக்கூடிய ஒரே அதிகாரமாகிய அரசு திருச்சபைக்கோ அல்லது ஒரு தொகுதிக்கோ மேம்பட்டதாகவே இருக்க முடியும். வார்டு (Ward) சொல்வது போல, 'நிலப் பிரபுத்துவ, சமய விளக்கமின்மையின் குழப்பங்களி லிருந்து உலகியல் சார்ந்த அரசன் தோன்றுவதை ஆதரித்தும், சலுகை காட்டியும் தற்கால அரசின் தோற்றுவாயிலுள்ள சூழ் நிலையை இது விளக்குகிறது.'

'வரம்பிலா அரசர்களின் மறைவுக்குப் பின்னர், இறைமை என்ற சொல் அரசியற் கொள்கையிலிருந்து நழுவிப் போயிருக்கலாம் என்று கருத இடமுண்டு. நசித்துக் கொண்டிருக்கும் நிலப்பிரபுத்துவத்தின் குழப்பங்களுக்கு இடையில் அதிகாரத்திற்காகப் போராடிக் கொண்டிருந்த மன்னர்களின் கைகளில் இக் கோட்பாடு சிறந்ததொரு சொந்த ஆயுதமாக விளங்கியது. தற்கால அரசை அமைப்பதில் சிறப்பான சேவை செய்திருக்கிறது. இவ்வாருகத் தற்கால அரசு அமைக்கப்பட்டுவிட்டது' என்று மேலும் கூறுகிருர் வார்டு.

பத்தொன்பதாம் நூற்ருண்டில் இச் சாதாரண நடைமுறை பற்றிய அமைப்பு விளக்கமானது, வரம்பின்மையையும், அதன் தீவிரமான முறையில் சகல அதிகாரங்களும் அரசு பெற்றிருக்க

வேண்டும் என்ற கொள்கையையும், ஆதரிக்கும் ஒரு சிக்கலான கோட்பாடாக மாற்றப்பட்டது.

## இறைமையும், தற்காலக் குடியாட்சி அரசும்

இவ்வாறான மாற்றத்திற்கு முதற் காரணமாகவிருந்தது ஃபிரஞ்சுப் புரட்சியாகும். இதற்கு முந்திய சித்தாந்தங்களும் இதற்குத் துணை புரிந்தன. முன்னுளைய சிந்தனையாளர்கள் சட்டரீதியான இறைமையை அரசுக்கு அளித்தனர். ஆனால் அந்த அரசு மக்களுக்குப் புறம்பே இருந்தது. ஃபிரஞ்சு வழக்கறிஞர்கள் அரசனையும், குடிமக்களையும் வேறுபடுத்தியே பேசுவர். குடிமக்களை, 'நாட்டினம்' என்று அப்பொழுதுதான் அழைக்க ஆரம்பித்தனர். அப்படிப்பட்ட சூழ்நிலையில் அரசன் தன் அதிகாரங்களைச் சில வரையறைகளுக்குட் பட்டே உபயோகிக்கமுடிந்தது. இவ் வரையறைகள் பரம்பரை, வழக்கம், ஆள்குழுநிலங்கள், உள்ளூர்ப் பழக்கங்கள், திருச்சபையின் உரிமைகள், முக்கியமான குடும்பங்களின் உரிமைகள், நகர வாக்கு உரிமைகள், இணைப்புக்களின் உரிமைகள், அதோடு 'செய்வது வழக்கமில்லை' என்று கூறப்படும் சில காரியங்களின் எழுதப் படாத சட்டங்கள் ஆகியவற்றின் வரம்புகளுக்குட்பட்டுத் தன் அதிகாரத்தைச் செலுத்தினான். 'இறை அரசன்' உண்மையிலேயே மிக்க அதிகாரம் படைத்தவனாகச் சட்டரீதியாகவும், கொள்கையளவிலும் தனது அதிகாரத்திற்குத் தடையில்லாதவனாகவும் இருந்தான். ஆனால் நடைமுறையில், அவன் ஒரு கட்டுப்படுத்தும் மாற்றாளாக, ஒழுங்கை நிலைநிறுத்தவும், பொது நடவடிக்கைகளையும் அக்கறைகளையும் இணைக்கவும் பரந்த அதிகாரங்கள் பெற்றவனாக இருந்தான். அரசன் மக்களின் சார்பில் செயலாற்றுவதாக உரிமை கொண்டாடலாம். ஆனால், அரசன் மக்களாக முடியுமா ?

ஃபிரஞ்சுப் புரட்சி மக்களை இறைமை பெற்றதாக ஆக்கியது. இது பழைய தெய்வீக உரிமை மன்னராட்சியின் எல்லாத் தன்மைகளையும் முன்னர் இருந்த தடைகளை அவைகளிலிருந்து நீக்கி விட்டு மக்களுக்கு மாற்றியது. மக்கள் தங்களையே ஆட்சி செய்து கொள்ளும்பொழுது எதற்காக அதற்குத் தடை விதிக்கவேண்டும் என்று அதற்குக் காரணமும் கூறப்பட்டது. தொகுதியோ அல்லது தனியாளோ எவ்வாறு எல்லா மக்களுக்கும் எதிராக அதிகார உரிமை வேண்டமுடியும் ? மக்கள் சட்டமியற்றியபோது, ஒவ்வொரு தொகுதியும், ஒவ்வொரு தனியாளும், தனக்காகவும் சட்டமியற்றிக் கொள்கிறான். ஏனெனில் பிரயோகப்படுத்தப்படும் இறைமை அதிகாரத்தில் அவனும் பங்கு பெற்றவன்தானே ? இப்படிப்பட்ட வாதத்திற்கு எதிராக ஆக்டன் பிரபு (Lord Acton) வின் வாதத்தைக்

குறிப்பிடலாம் : 'ஒரு சிறுபான்மையின் அடக்குமுறைக்குள்ளாவது கடினமானது. ஆனால், பெரும்பான்மையால் அடக்குமுறைக் குட்படுத்தப்படுவது மிகவும் மோசமானது. ஏனெனில், எல்லா மக்களின் வரம்பிலா விருப்பாற்றலிலிருந்து மேல்முறையீடோ, மீட்போ, துரோகத்தைத் தவிர வேறு புகலிடமோ கிடையாது.'

## தேசீயம்

புதிதாகத் தோன்றிய 'குடியாட்சி' அரசு நிலைபெறுவதற்கு இரண்டு காரியங்கள் பெரிதும் துணையாயிருந்தன. முதலாவது, நாட்டிற்குச் சேரவேண்டிய காரியங்களைத் தேசீயம், இறைஉரிமை பெற்ற மக்களுக்குச் சேர்த்துவைத்தது. இதன் விளைவாக, தேசீய அரசானது உள்நாட்டில் தனது குடிமக்களின்மீது வரையிலா அதிகாரம் கோரியதுமல்லாமல், மற்ற மக்களை அடிமைப்படுத்தி வெளிநாடுகளில் விஸ்தரிக்கும் உரிமையையும் கோரியது. ஒவ்வொரு தேசீய அரசும் வெல்ஸ் (Wells) சொன்னபடி 'அது தான் சமுதாயம் முழுவதும்' என்று நினைத்துக்கொண்டது.

மற்றொரு காரணம், தொழிற் புரட்சிக்குப் பிறகு அரசின் நடவடிக்கைகள் மிகவும் பெருகியதால் உண்டானது. அரசு வெறும் போலீஸ்காரராகவும், ஆட்சியாளராகவும், நீதிபதியாகவும் மாத்திரம் இராமல் பொருளாதார வாழ்க்கையை அமைப்பதாகவும், கல்வி புகட்டுவதாகவும், கூட்டு வாழ்க்கையின் ஒவ்வோர் அம்சத்திற்கும் ஒரு மாற்றாளாகவும் இச் சூழ்நிலை ஆக்கியது. இது நாள்தோறும் அதிகரிக்கும் சட்டங்களாகவும், அரசை ஒரு பிரதான சட்டமியற்று பவராகவும் ஆக்கி அதன் முக்கியத்துவத்தை அதிகப்படுத்தியது. இதனால் இறைமைக் கோட்பாடு பரந்த எல்லையில் அதன் பிரயோகம் அமைந்ததால் வலுப்பெற்றது.

## ரூசோ (Rousseau)

ஃபிரஞ்சுப் புரட்சிக்கு முப்பது ஆண்டுகளுக்கு முன் ரூஸோ தமது 'சமுதாய ஒப்பந்தம்' (Social Contract) என்ற நூலில் எழுதிய மக்கள் இறைமைக் கோட்பாட்டை (Concept of Popular Sovereignty) நடைமுறைக்குக் கொண்டுவருவதாகத்தான் இவை யெல்லாம் இருந்தன. ரூசோ இதை ஒரு தனியாள் சுதந்தரத்தின் கோட்பாடாக ஆக்கியிருந்தால் நலமாயிருந்திருக்கும்.[1] ஆனால்,

[1] ஏற்றத் தாழ்வுகளின் காரணத்தை ஆராயும் அவரது முந்தைய ஆய்வுக் கட்டுரையில் அவர் விளக்கியிருந்த அமைப்பில் அரசையும், தனி மனிதனை யும் ஒன்றாகக் கருதவில்லை.

அவரோ பிளேட்டோவிற்குப் பிறகு வந்த எவரும் தரத்துணியாத அளவு மிகையான அதிகாரத்தை அரசிற்கு அளித்து, அரசின் அதிகாரத்தை நியாயமானதாகத் தம் கோட்பாட்டினுல் காட்டிவிட்டார். மக்களும் அரசும் ஒன்ருனபிறகு தனியாளின் ஆளுந்தன்மை, சமூக முழுமையோடு இரண்டறக் கலந்துவிடுகிறது. அதற்குப் பிறகு தனியாளுக்கு அரசிடமிருந்து பாதுகாப்பு என்று பேசுவது அபத்தம். இப்படி இணைந்துவிட்டது, கூட்டு மனத்தில், கூட்டு எண்ணத்தில் குடிமகனின் மனமும், எண்ணமும் ஒரு பிரிக்கப்படமுடியாத பாகமாக ஆயிற்று.

வேறு சொற்களில் சொன்னுல், இவ்வாருகச் சமுதாயத்தோடு தன்னையே கலக்கவிட்டதால், தனியாளின் விருப்பாற்றல் (individual will) இப்பொழுது அரசின் விருப்பாற்றலில் (state will) காணப்படுகிறது. எனவே, அரசின் விருப்பாற்றல் தனியாளின் விருப்பாற்றலாகிறது. இதை ஒப்புக்கொள்ள அவன் மறுப்பானுனல், அவன் சுயநலமான காரியங்களைத் தேடியலைபவனுக இருக்கவேண்டுமாதலால், அதை நாம் பொருட்படுத்த வேண்டியதில்லை. அவனது உண்மையான உள்ளம் அல்லது ஆத்மா, அவனது உண்மையான விருப்பாற்றல், இப்பொழுது பொதுநலத்திற்காகப் பொது விருப்பாற்றலில் ஒரு (general will) பாகமாக ஆகிவிட்டது.

## ஹெகல் (Hegel)

உருவ முழுமை பெருத ரூசோவின் கொள்கை, ஜெர்மானியத் தத்துவஞானி ஹெகலின் கைகளில் உருவ முழுமையும் ஒருமையும் பெற்றது, மேலும் அவர் அதற்குச் சித்தாந்த வடிவம் சமைத்து அடிப்படைத் தத்துவமாக்கினுர். 'பகுத்தறிவின் பூரணத்துவமே அரசு; என்றைக்கும் அழியாததும், அத்தியாவசியமானதுமான ஆன்மாவுக்குரிய சாரம் இது; இது தானுகவேயும், தன்னிலும் பகுத்தறிவுடையது; வரையற்ற அறுதியான முடிவே இது' என்று கூறினுர். சுலபமான சொற்களில் சொன்னுல், அவர் சமுதாயத்தையும் அரசையும் ஒன்ருகக் கலந்துவிட்டுத் தனியாள் தன் வாழ்க்கை பயனுள்ளதாக இருக்க விரும்பினுல், அரசில் ஓர் அங்கமாக இருக்கவேண்டும். அரசின் மூலமாகப் பெறும் முழு வாழ்க்கையால்தான் அது முடியும். அரசின்றி அவர் ஒன்றுமற்றவர். இதன் விளைவாக அரசின் உரிமைகள் வரையறையற்றவை. சட்டரீதியாக இக் காரியம் நிகழாமல், நெறிமுறையின்படி இது ஓர் அரசின்

உரிமையாக ஆகிறது. தனி மனிதன் தன்னுலானதைப் பொது வாழ்க்கைக்குக் கொடுக்கவே அரசில் வாழ்கிருன். அரசு குறிப்பிட்ட நோக்கங்களுக்காகவும், விளக்கமாக வரையறுக்கப்பட்ட பணிகளுக்காகவும் ஏற்பட்ட சமுதாயத்தின் மாற்ருளன்று. ‘அதுவே பிரதான சமுதாயம். முழு உலகத்தின் பாதுகாவலர் அதுவே. ஒழுங்குறுத்தப்பெற்ற அறவாழ்க்கை அரசிற்குள்மாத்திரமே சாத்தியமாகும். அரசுதான் அறத்தின் கருவூலமாகவும், நாகரிகப்பண்பின் உறைவிடமாகவும் திகழ்கிறது’ என்று ஹெகலைப் பின்பற்றியவர்களில் ஒருவரான பொசான்கே (Bosanquet)[1] எழுதுகிருர்.

இக் கோட்பாட்டில் பொதிந்துள்ள முழுப்பொருளும், அதன் ஆய்வும் பின்னர் நாம் சுதந்தரத்தைப்பற்றி எழுதும்போது முழுவதாக விவாதிப்போம். கருத்துக்கொள்கை (‘idealistic’ theory of State)[2] தனி மனிதன் சுதந்தரமாகச் செயலாற்றுவதையும், சுயமாகச் சிந்திப்பதையும்கூட நீக்கிவிட்டது. பொது நோக்கத்தை வெளியிடுகின்ற சட்டத்திற்குப் பணியும் ஒரே உரிமையோடு அவனது உரிமையையும் ஒன்ருகக்கலந்து காட்டியது. ரூசோவின் சொற்களில், ‘தனி மனிதன் தன் சுய மனஎழுச்சிகளைப் பின்பற்ருமல், பொது விருப்பாற்றலோடு இரண்டறக் கலந்துகொள்வதனுல்மாத்திரம் அவன் உண்மையான சுதந்தரத்தைக் காண முடியும். இவ்வாறு அவனைச் சுதந்தரமாக இருக்கக் கட்டாயப் படுத்தியது.’

## பொது விருப்பாற்றல் (The General will)

வில்சன் (Wilson) சுட்டிக் காட்டுவதுபோல, இந்த அரசுக் கொள்கையானது மூன்று தவருன (அல்லது ஐயத்திற்கிடமான) புனைகோள்களின்மீது சார்ந்திருக்கிறது. முதலாவதாக, தனியாளின் நிகழ்நிலை விருப்பாற்றல் (actual will) உண்மை விருப்பாற்றலுக்குப் (real will) பெரிதும் முரணுக உள்ளது. இரண்டாவது அவனது உண்மை விருப்பாற்றல் என்பது பொது விருப்பாற்றலே ஆகும்.

[1] ஆக்ஸ்பர்டு பல்கலைக் கழகத்தின் ஆசிரியர்; ‘The Philosophical Theory of the State’ என்ற நூலின் ஆசிரியர். இது ஹெகலின் வாதத்தை ஆங்கிலத்தில் சிறப்பாக விளக்குகிறது. ஹெகலிய—பொசான்கே கருத்தோட்டத்தின் மிக ஆழமான ஆய்வுரைகள் காலஞ்சென்ற பேராசிரியர் லாஸ்கி (Laski) இறைமைபற்றி எழுதிய முந்திய கட்டுரைகளில் காணக்கிடக்கும்.

[2] ‘பொதுமையின் குறிக்கோளைத் தனியாளின் குறிக்கோளைக்காட்டிலும் உண்மையானதாகக் கொள்கிறது. வேறு சொற்களில் சொன்னுல் தனியாளைப் பரந்த எல்லையை அல்லது எல்லாவற்றையும் பிரதிபலிக்கும் அரசிற்குக் கீழ்ப்படுத்துகிறது. ஆகவேதான் இது ‘கருத்துக் கோட்பாடு’ என்று அழைக்கப்பெறுகிறது.

மூன்றுவது பொது விருப்பாற்றல் அரசின் விருப்பாற்றல் என்ருகி, அதனுல் அரசும் சமுதாயமும் ஒன்றே என்ருகிறது. ரூசோ தம் நாடாகிய சுவிட்சர்லாந்தின் சிறு குடியரசுகளில் கண்ட உண்மையைக்கொண்டு தமது கோட்பாட்டை விவரிக்க ஆரம்பிக்கிருர். அவர் கண்டது, உண்மையாகவே நெறி வழியிற் பொதுநலத்தை நாடும் விவாதங்களால் காணும் நல்லதொரு முடிவை. இம் முடிவு ஒரு மனிதனின் விருப்பாற்றலாக இராமல் பொது முடிவாகவே இருக்கிறது. இந்த முடிவு தனியாட்களின் அபிப்பிராயங்கள் மற்றவர்களின் அபிப்பிராயங்களோடு மோதி அதனுல் ஒருசேரக் கலந்து, சமன் செய்யப்பட்டும், நேராக்கப்பட்டும், மாற்றப்பட்டும் முடிவில் பொது முடிவாக வெளிவருகிறது. இதுவேதான் பொதுவான ஆத்மீகக் கண்ணேட்டமும் நோக்கமும் கொண்ட மதத் தொகுதிகளின் பொதுவான அனுபவமுங்கூட.[1] அதுதான் உண்மையான பொது விருப்பாற்றல். இப்பொழுதெல்லாம் அரசாங்க அலுவலகங்களிலோ அல்லது சட்ட மன்றங்களிலோ உள்ள சிறு எண்ணிக்கையினரே முடிவுகளைச் செய்கிருர்கள். எனவே, மிலியன் கணக்கில் எண்ணப்படும் இந் நாளைய குடியாட்சி அரசுக்கும், பொது விருப்பாற்றலுக்கும் தொடர்பொன்றுங் கிடையாது. இன்றுள்ள அரசிற்குப் பொது நோக்கம்[2] உலகியல் சார்பாகவே கிடையாது. வேற்று நெறிச் சார்பிலும், ஆத்மாவிற்குரிய வாழ்விலும் நோக்கம் என்ன இருக்கப் போகிறது? பொது விருப்பாற்றல் என்பது ஒரு புனைவு. அரசை ஓர் 'ஆளாக' உருவகப்படுத்தி, அதற்கென்று 'விருப்பாற்றல்' கொடுத்து, ரூசோ 'நெறிசார்ந்த உண்மைகளின் தொகுப்பு' (Moral and Collective Body) என்று அழைத்த ஒரு புனைவின்மீது எழுந்த புனைவுதான் இது. புனையும் உருவகங்கள் உபயோகமுள்ளவை; இன்றியமையாதவையுங்கூட. ஆனல், கால் பந்துக் கழகம் முதல் தொழிற் சங்கங்கள், திருச்சபை, அரசியல் கட்சி, அரசுவரை பலவிதக் கூட்டுகளைக் கட்டுப்படுத்துபவர்களின் செயல்களையும், கொள்கைகளையும் குறிப்பிடுவதற்காகக் கையாளும் பேச்சுமுறை அல்லது புனையப்பட்ட ஒன்றுதான் இது என்பதை எப்பொழுதும் மறந்துவிடக் கூடாது. நாம் இவ்வாருக உருவகங்களைப்பற்றி ஆராய்கிரேமே

[1] குவேக்கர்கள் (Quakers) வெறும் எண்ணிக்கையாலான பெரும்பான்மையை ஒப்புக்கொள்வதில்லை. அப்படி ஏற்படும் முடிவுகளைக் 'கூட்டத்தின் உணர்ச்சிப்'படி இல்லையென்று சொல்லி ஒரு முடிவுக்கும் வருவதில்லை. இந்தத் துறையைப்பற்றி லிண்ட்சே பிரபு (Lord Lindsay) தமது 'Modern Democratic State' என்ற நூலில் விவரிக்கும்போது இதை மனதில் கொண்டுதான் எழுதியிருக்க வேண்டும் என்று நாம் நம்புகிரேம்.

[2] யுத்த காலம் அல்லது பொது நெருக்கடிக் காலம் ஆகிய அக் காலத்திலும் எதிர்க்கும் சிறுபான்மையினர் இருக்கவே செய்வர்,

தவிர உண்மைகளைப்பற்றியல்ல.[1] அரசின் 'விருப்பாற்றல்' அதை நடத்திச் செல்லுபவர்களின் விருப்பாற்றலே. ஒருவேளை இது பெரும்பான்மை மக்களாக இருக்கலாம். இது திட்டவட்டமான காணக்கூடிய கொள்கைகளைத்தான் வெளியிட முடியும். நெறி சார்ந்த நோக்கங்கள் தனியாட்களுக்கே உரியன. ஏனெனில் அவர்களுக்குத்தான் ஆத்மாவும் மனச்சாட்சியுமிருக்கின்றன.

இலட்சிய நோக்குடையதாக, எல்லாத் திறனும் பெற்றதாக, எல்லாம் வல்லதாக அரசு இருப்பது சரியானதுதான் என்பதை நிரூபிப்பதற்காக எழுந்த இவ் விரிவான கொள்கை, உண்மைக்கு மாமுனது. தேசீய அரசில் நிலவும் எதிர்மாறான ஒரு போக்கினுல் இது. மேலும் உண்மையற்றதாயிற்று; எவ்வாறெனில், தேசீய அரசின் செல்வாக்கும், அதிகாரமும் வளர்ந்துகொண்டு வந்த போதே, அத்துடன் அதற்கு எதிர்மாருகப் பொறுப்பற்ற அதிகாரத்தைக் கட்டுப்படுத்துவதற்காகத் தடைகளையும், கட்டுப்பாடுகளையும் வளர்க்கும் ஒரு போக்குக் காணப்பட்டது. இதன்படி, எல்லோருக்கும் வாக்குரிமை, பொதுமக்கள் தேர்தல், பாராளுமன்றத்திற்கும், பொதுமக்கள் அபிப்பிராயத்திற்கும் கட்டுப்பட்ட அரசாங்கங்கள், தனியார் உரிமைகள், தல ஆட்சிச் சுதந்தரங்கள், எழுத்துச் சுதந்தரம், கூட்டம், சங்கம் முதலியவற்றிற்குச் சுதந்தரம் ஆகியவை தோன்றின. தன்னிச்சையான பொறுப்பற்றதொரு அரசை உருவாக்க ஏற்பட்ட கொள்கைகளோடு இவை பொருத்தப்படமுடியாதவையாகும். சில உண்மையான ஜனநாயக வாதிகள், அவசியமான சமூக சீர்திருத்தத் திட்டங்களையும், அடிப்படை ஜனநாயகத்தையும் சரியானவையென்று நிரூபிக்கப் பொது விருப்பாற்றல் கோட்பாட்டைப் பயன்படுத்தியதிலிருந்து எவ்வளவு குழப்பம் ஏற்பட்டிருக்கிறது என்பது வெளிப்படை.[2]

[1] 'உருவகத்தை, விவாதத்தால் பெற்ற பொதுநோக்குடைய மக்களின் முடிவுகளின் விவரிப்போடு குழப்ப வேண்டாம். மேலும் விவாதத்திலுலோ அல்லது அது இல்லாமலோ சமுதாயத்தின் எந்த நோக்கத்தின் நன்மைக்காக முடிவு செய்யும் 'உண்மையான ஆளோடு' உருவகத்தை ஒன்றெனச் சொல்லிக் குழப்பவேண்டாம்' (லிண்ட்சே: Lindsay quoted by Carritt 'Morals and Politics' p. 205)

[2] குறிப்பாக ஆக்ஸ்பர்டைச் சேர்ந்த T. H. Green எழுதிய 'Principles of Political Obligation' (ஏற்கெனவே மேற்கோள் காட்டியிருக்கிறேம்.) என்ற நூலைப் பார்க்க.

## (vi) இன்றைய இறைமைக் கோட்பாடு

### இன்றுள்ள குழப்பநிலை

வெவ்வேறு கண்ணோட்டங்களும், நோக்குகளும் இறைமைக் கோட்பாட்டைக் குழப்பிவிட்டன என்பது தெளிவு. முதலாவதாக, அரசு எப்படி இருக்கிறது என்பதற்கும் சிலர் விரும்புகிறமாதிரி எப்படி இருக்கவேண்டும் என்பதற்கும் குழப்பம் ஏற்படுகிறது. இது முன்னும் இருந்தது; இப்பொழுதும் இருக்கிறது. தீவிர இலட்சிய வாத இறைமைக்கோட்பாடு ஜெர்மனியில் தோன்றியது. பிரஷியாவின் பரம்பரைக் கொள்கையான வரம்பிலா அரசைச் சரியானதென்று நிரூபிக்கும் போக்குடையதாயிருக்கிறது. ஹெகல், பிரஷியா நாட்டைச் சேர்ந்தவர். பிரஷியா பிற்காலத்திலும் பாசிச, நாஜி, கம்யூனிச முறைகளில் சர்வாதிகாரத்தைக் கொண்டிருந்தது.

இரண்டாவதாக, இறுதியான முடிவு செய்வதற்கும், எல்லாம் வல்ல அதிகாரத்திற்கும் குழப்பம் உண்டாயிற்று. கால்பந்தாட்டத்தில் 'ரெபரி' (referee) நடுவாளராக இருக்கிறார். அவர் ஒரு கட்சிக்குத் தலைமை தாங்கி, தாமே 'கோல்' (goal) போட்டு, எதிர்க்கட்சியினர் போட்ட 'கோல்'களை யெல்லாம் அனுமதிக்க மறுத்து இருப்பாரானால் நிலைமை எப்படி இருக்குமோ, அப்படித்தான் சர்வாதிகார அரசுகளும் நடந்துகொள்ளுகின்றன. இனி ஜனநாயக நாடுகளாகப் போகும் நாடுகளில் உள்ள அரசியல்வாதிகளின் இலட்சியமும் இதுவாகத்தா னிருக்கிறது. தாங்கள் பதவிவகித்த காலத்தில் நிகழ்ந்தவற்றிற்குக் கணக்குக் கொடுக்கவேண்டும் என்றும், ஒவ்வொரு தேர்தலிலும் தமது வாக்காளர் தொகுதியின் முன்பு தம்முடைய காரியங்களைச் சரியானவையென்று நிரூபிக்க வேண்டும் என்றும் பாராளுமன்றத்தில் காலைவாரிவிடும் கேள்விகளுக்குப் பதிலளிக்க வேண்டும் என்றும், ஒருமுறை இருந்தால் எவ்வளவு வேதனையாயிருக்கும்! ஆனாலும், நமது ஜனநாயக முறையிலுள்ள இவ்விதத் தடைகளும், சமநிலைகளும் ஒழுங்கான அரசாங்க அமைப்பிற்குப் பொருத்தமானவைதான். இவை மேலாண்மையின் திட்டவட்டமான, தெளிவான வலியுறுத்தல்கள் ஆகும்.

### ஆஸ்டின் (Austin)

மூன்றாவதாகச் சட்டக்கொள்கைக்கும் அரசியல் நடைமுறைக்கும் முரண் இருக்கிறது. சட்டம் நிலவவேண்டும் என்பதும், ஒரே ஒரு சட்டந்தான் முதன்மையாக இருக்கமுடியுமென்பதும், ஒரே, இறுதியான சட்டரீதியான முடிவு இருக்கவேண்டும் என்பதும்

சாதாரணமாக எல்லோருக்கும் தெரிந்தனவே. ஒரு நூற்ருண்டிற்கு முன்பாக ஆங்கில வழக்கறிஞர் ஆஸ்டின் என்பவரால் சட்டரீதியான, ஒழுங்கான முறையில் இறைமைக் கோட்பாடு எடுத்துரைக்கப்பெற்றது. அவரது விளக்கம் சில பகுதிகளில் விளக்கமற்றும், உருவத்திற்கு மிகையான மதிப்பு அளிப்பதாகவும் இருந்தாலும் அது உண்மையே ஆகும். 'கொடுக்கப்பெற்ற சமுதாயத்தின் பெரும்பாலோரிடமிருந்து வழக்கமான கீழ்ப்படிதலைப் பெறும் உறுதிமிக்க முதன்மையானவனே இறை உரிமை பெற்றவன் ஆவான்'. நிரந்தமான, குறிப்பிட்ட, திட்டவட்டமான ஒரு நபரிலேதான் தவிர்க்கமுடியாதபடியும், தெளிவாகவும், இறைமை சார்ந்திருக்கும் என்று வலியுறுத்தப்படுவதில்தான் இவ் விளக்கத்தின் குறைபாடு இருக்கிறது. இறுதியான அதிகாரம் எங்குக் காணப்படும் என்று கேட்போமாஞல், அக் கேள்விக்கு ஒன்றுக்கு மேற்பட்ட விடைகள் கிடைக்கும் என்று அறிகிரும். நாட்டுக்கு நாடு அது வேறுபடும் என்பதோடு, ஒரே நாட்டிலும் எப்பொழுதும் ஒரே மாதிரியாக இருக்காது அல்லது குறிப்பிட்ட ஓர் உறுதியான நபரையும் காட்டாது என்பதும் தெளிவு. பிரிட்டனில் பாராளுமன்றத்தின் சட்டந்தான் இறுதியானது. ஆனல் இன்னொரு சட்டத்தால் இச் சட்டத்தை ஒதுக்கிவைக்கமுடியும் அல்லது இப்பொழுதுள்ள பாராளுமன்றத்தை வேறு பாராளுமன்றம் மாற்றலாம். ஆனல் எப்படியிருப்பினும் இறைமை சட்டமியற்றும் அதிகாரத்தில்தான் இருக்கமுடியும். எனினும், அமெரிக்க ஐக்கிய நாட்டில் காங்கிரசின் (congress) சட்டங்கள் இறைமை பெற்றவை அல்ல. ஏனெனில் அவை உயர்நீதிமன்றத்தின் தீர்ப்புக்குக் கீழ்ப்பட்டவையே. ஒரு சட்டத்தை அரசியலமைப்புச் சட்டத்திற்கு விரோதமானதென்று கூறி விலக்கிவிடும் முடிவான அதிகாரம் சுப்ரீம் கோர்ட்டிடம் இருக்கிறது. ஒரு பொருளில், சட்டரீதியான இறைமை நீதிவழங்கும் அதிகாரத்திடந்தான் காணப்படுகிறது. ஏனெனில் நீதிபதிகள் நீக்கப்படமுடியாதவர்கள் என்பதோடு பெரும்பான்மையினருக்குச் சாதகமான தீர்ப்பைப் பெறுவதற்கு மேலும் நீதிபதிகளை நியமிக்கவும் முடியாது. சர்வாதிகார அரசுகளில், இறைமை நிர்வாக அதிகாரத்திடம் உறைகிறது. ஏனெனில் நீதி வழங்கும் அதிகாரமும், சட்டமியற்றும் அதிகாரமும் அங்கு நிர்வாக அதிகாரத்திற்குக் கீழ்பட்டிருக்கின்றன.

## சட்டப்படியான இறைமையும், அரசியல் இறைமையும்

இவைகளெல்லாம் கோர்ட்டுகளில் எது முடிவாக ஏற்றுக் கொள்ளப்படுமோ அவற்றை விளக்கும் சட்டரீதியான கருத்துக்களாகும். இதோடுகூட இன்னொரு கோட்பாடும் வளர்ந்திருக்கிறது.

இது சட்டப்படியான இறைமையிலிருந்து வேறுபட்ட அரசியல் இறைமையாகும். பிரிட்டனில் ஒரு பாராளுமன்றச் சட்டத்திற்குப் பின்னால் வாக்காளர்கள் அதைத் தாங்கிநிற்கிறார்கள். அவர்கள் தீர்ப்புப் பாராளுமன்றத்தைக் கலைத்துப் புதிய கொள்கைகளைக் கொணரும் தன்மையது. மீண்டும், அமெரிக்க ஐக்கிய நாடுகளில் உயர்நீதி மன்றத்தின் தீர்ப்பானது அரசியல் சட்ட அமைப்புக்குக் கொண்டுவரப்படும் திருத்த மசோதாவால் மாற்றப்பெறலாம். உயர்நீதிமன்றம் அரசியல் சட்ட அமைப்பிற்கு விரோதமானது என்று சொன்னதை அரசியல் சட்டமாக மாற்றலாம். ஆக, இரண்டு நாடுகளிலும், ஏன்? எல்லாக் குடியாட்சி நாடுகளிலும், அரசியல் இறைமை, வாக்காளர் தொகுதியாகவுள்ள பொதுமக்கள் வெளியிடும் அபிப்பிராயத்தில் உறைகிறது. ஆனால், மக்களே சில குறிப்பிட்ட நபர்களின் அல்லது தொகுதிகளின் அல்லது அக்கறைகளின் செல்வாக்குக்குக் கட்டுப்பட்டிருக்கலாம். அவர்களது வாக்குப் பதிவின்மீது இவர்களது செல்வாக்கு ஆதிக்கம் பெற்றிருப்பதால் இறைமை உண்மையிலே எங்கு உறைகிறது என்று சொல்வது கடினம். அரசியல் சட்ட அமைப்பு, கொள்கையளவில் ஜனநாயகமாக இருந்து, பெரும்பான்மையோர் அரசாங்கத்திற்கு எதிராக இருந்தாலும், போர்ப்படைகள் எல்லாம் அரசாங்கத்தின் முழுக் கட்டுப்பாட்டிற்குள் இருக்குமானால், மக்கள் தங்கள் இறைமை அதிகாரத்தை வலியுறுத்த முடியுமா என்பது ஐயத்திற்குரிய காரியமே. 1917-ல் இருந்து ருஷ்யாவில் இறைமை எங்கு உறைகிறது? 1933-க்கும் 1945-க்கும் இடையே ஜெர்மனியில் எங்குக் காணப்பட்டது? சரியாக இறைமை உறைவிடத்தைக் காணும் பிரச்சினை இன்னும் தீர்க்கப்படவில்லை. சட்ட இறைமை என்பது உண்மையான இறைமை அதிகாரத்தின் பிரதிநிதியாகும். ஏனெனில் பின்னது முன்னதைக் கட்டுப்படுத்துகிறது. வெவ்வேறான சூழ்நிலைகளில் இறைமை வதியும் நிலைகளும் மாறலாம். 'அரசைச் சார்ந்த குடிமக்களின் இறுதியான கீழ்ப்படிதலைப் பெறும் விருப்பாற்றலைக் கொண்டதே அரசியல் இறைமையாகும்' என்று டைசி (Dicey) கூறுகிறார்.

நான்காவது குழப்பம், உண்மையான அதிகாரத்துக்கும், அதன் ஆதாரம் எது என்பதற்குமிடையே ஏற்படுகிறது. எல்லா அதிகாரமும் மக்களிடமிருந்தே வருகிறது என்று சொல்வது ஒன்று. மக்களே தங்களை ஆட்சி செய்கிறார்கள் என்று கூறுவது மற்றொன்று. இதை அவர்கள் நிச்சயமாகச் செய்ய முடியாது. அரசாங்கம் என்பது சிலரது செயலாகத்தான் இருக்க முடியும். ரூசோ, சில சமயங்களில் இதை உணர்ந்ததாகத் தெரிகிறது. உதாரணமாக, மக்கள் இறைமையும், பிரதிநிதித்துவ

முறையும் ஒன்றுக்கொன்று பொருத்தமில்லாதவை என்று கூறும் போது இது தெரிகிறது. ஏனெனில் சுவிட்சர்லாந்தின் சிறு குடி அரசுகளிற்போல, மக்கள் இறைமை நேரடியாகப் பிரயோகிக்கப் படவேண்டும். ஆனல் ரூசோ, எப்பொழுதும் இந்த வேறுபாடு காட்டுகிருரில்லே. அவரைப் பின்பற்றியவர்கள் அதை மேலும் குழப்பி விட்டார்கள். எல்லாத் திறனும், எல்லா வல்லமையும் பெற்ற இறைமை கொண்ட 'மக்கள்' அரசுக்கு இவர்கள் தீவிரமான ஆதரவு காட்டுவதில் இக் குழப்பம் ஏற்படுகிறது. ஏனெனில் உண்மையில் இந்தவிதமான அரசில் அரசாங்கத்தை அமைத்து நடத்தும் ஒரு சிலரின் கைகளில்தான் இறைமை இருக்கமுடியும்.

முடிவாக உள்ள ஒரு குழப்பம் சட்டப்படியும், அரசியல் ரீதியிலும் அரசாங்கத்தைப்பற்றிய கொள்கைக்கும், அன்ருட நடை முறையில் அரசாங்க நிகழ்முறைக்கும் உள்ள வேறுபாட்டில் காணப் படுகிறது. நமது சமூக, அரசியல் வாழ்க்கையின் பெரும்பகுதி 'பகுத்தறிவான ஆய்விலும், உணர்ந்ததை ஒப்புக்கொள்ளுவதிலும் விடப் பழக்கவழக்கத்திலும், பரம்பரையிலுந்தான்' அதிகமாகச் சார்ந்திருக்கிறது என்ற உண்மையை விரிவான இறைமையின் உறைவிடம் பற்றிய விவாதங்கள் பார்க்க மறந்துவிடுகின்றன. ரோமாபுரியிலுள்ள ஒரு தகப்பன் எவ்வளவு தூரத்துக்குத் தன் பிள்ளேகளின் சாவுக்கும், வாழ்வுக்கும் உள்ள உரிமையைப் பயன் படுத்தினன்? நமது அன்ருட வாழ்க்கை வழக்கத்தால் ஏற்படும் சமரசங்களாலும் சமநிலேப்படுத்தல்களாலும் நிறைந்தது. பொறி யின் ஒவ்வொரு பாகமும் தன் வேலேயைச் செய்கிறது. இந்த விவாதம் நம்மை எங்கும் அழைத்துச் செல்லவில்லே. லிண்ட்சே (Lindsay) கூறுகிறபடி இவை விளக்கமற்றனவாகவும், பொருளற்ற தில் வளமாகவும் இருக்கின்றன. அதிகமாகச் சட்டப் பிரச்சினேகளே எழுப்பாதிருப்பது நலமாயிருக்கும். 'சட்டப்படியான துல்லியம் காண முற்படுவது உறங்கிக் கிடக்கும்போதும், யார் இறுதியான அதிகாரம் படைத்தவர்கள் என்ற கேள்வியை மிக வலியுறுத்திக் கேட்காமலிருக்கும்போதும், அரசு ஒரு புனேவாகவே இருக்கும் போதும், அரசியல் அதிகாரம் தங்குதடையின்றிச் செலுத்தப் படலாம். முன்பின் இணேப்பானது உண்மை நிலேயோடு இணேயாது இருக்கலாம்.' பேராசிரியர் மெரிய (Professor Merriam) மின் சிறப் பான இக் கருத்தை நாம் முழுதும் ஒப்புக்கொள்கிருேம்.

## கொள்கை வாதமான காரியம்

ஆகவே, இவ்வளவு குழப்பங்கள் இருப்பதாலும் வார்டு (Ward) கூறுகிறபடி, பலவிதமான விளக்கங்கள் இதை வளேத்து, சித்திர

வதை செய்வதாக இருப்பதாலும், 'இறைமை' என்ற இச் சொல்லே விடுபட்டுப்போனால் நலமாயிருக்கும். 'வரலாற்றிலே அதற்குரிய பணி முடிந்தபிறகும் நீடிக்கப்பெற்று இருக்கும் கருத்து இது. ஆகவே இது காலங்கடந்த ஒன்று. பொறுப்பற்ற வரம்பின்மையும், சட்டத்தின் இயற்கையான முதன்மையும், தேசீயத் தனித்த தன்மை, பிறப்புரிமைகள், நெறிவரம்பின்மை, சட்டத்தின் சர்வ வல்லமை ஆகிய கருத்துக்களைத் தங்களுக்குள் கொண்டு, இன்றைய கருத் தோட்டங்களைக் குழப்பவும், குலைக்கவும் செய்கிறது' என்று அவர் மேலும் கூறுகிறார்.

இறைமையில் பொதிந்துள்ள சட்டத்தின் சர்வ வல்லமை எங்கும் இருந்திருக்காவிட்டாலும், மெரியம் (Merriam) சொல்லுகிறபடி 'பொது நன்மைக்காக ஏற்படும் ஒப்புக்கொள்ளப்பெற்ற அதிகாரக் குவிப்புக்கும், பொதுச் செயலாற்றுதற்காக வேண்டிய அதிகாரத் துக்கும்' நமக்கு ஒரு பெயர் தேவைப்படுகிறதாகையால் இச் சொல்லை உபயோகிக்கலாம். 'பெரும்பாலான குடிமக்களின் விசுவாசத்தைப் பெறக்கூடிய இறுதியான சமூக மேலாண்மை'யை இச் சொல்லால் அழைக்கலாம். ஆனால் அப்படிப்பட்ட அதிகாரமோ அல்லது மேலாண்மையோ ஒப்புதலை ஆதாரமாகக் கொண்டுதான் இருக்கமுடியும். நடைமுறையில் அது நெறி, சமய, விஞ்ஞான, சமூகக் கட்டளைகள் ஆகிய சக்திகளால் வரையறுக்கப்பெற்றும் தடை செய்யப்பெற்றும் இருக்கவேண்டும். மேலும் இச் சக்திகள் அரசின் செயலை முடிக்கவும் உதவுகின்றன. நூற்றுக்கணக்கான சக்திகள் இறைமை விருப்பாற்றலை நிர்ணயிக்கின்றன. எப்படி அவைகள் வேலை செய்கின்றன என்று ஆராய்வது மிகச் சிக்கல் நிறைந்த ஒன்றாகும்.

# 6. அரசின் பணிமுறை

## (i) அரசின் பதிலாளாக அரசாங்கம் (Government as the Agent of the State)

சட்டப்படித் தனது அதிகாரத்தைப் பயன்படுத்துவதற்கு அரசுக்கு ஒரு கருவி தேவைப்படுகின்றது. இக் கருவியையே நாம் அதன் அரசாங்கம் என்று அழைக்கிறோம். 'அரசு என்பது ஓர் இலட்சிய நபர் போன்றது. அது தொட்டுணர முடியாதது; காண முடியாதது; நிலையானது. அரசாங்கம் ஒரு பதிலாள். அதன் பதிலாண்மையின் எல்லைக்குள்ளாக அது ஒரு நல்ல பிரதிநிதி. ஆனால், அதற்கு வெளியே அது அக்கிரமமான ஆதிக்கமாகும்' என்று அமெரிக்க ஐக்கிய நாட்டின் உயர்நீதிமன்றம் கூறுவதை வில்சன் (Wilson) மேற்கோள் காட்டுகிறார். அவர் மேலும் கூறுவதாவது: 'அரசு என்பது சட்டரீதியாகவும் முழுமையாகவும் அரசாங்கத்தில் அமைந்திருக்கிறது. எனவே அரசாங்கத்தின் மூலமாக மட்டுமே அரசால் பேசமுடியும்.' அரசிற்கு இயற்கையான மேலாண்மை உண்டு. ஆனால், அதை அதன் பதிலாளாகிய அரசாங்கத்தினால் மாத்திரமே பயன்படுத்தமுடியும். அரசாங்கம் இல்லாமல் சாதாரணமாக அரசு இருப்பதில்லை. சாதாரணமாக என்று ஏன் கூறினோம் என்றால் அரசின் வரலாறுகளில் சில காலங்களில் ஓர் அரசாங்கம் வீழ்ச்சியுற்ற பின் இடைக்காலத்தில் ஆட்சி குலைந்த நிலை ஏற்படுகிறது. ஆனால், இப்படிப்பட்ட இடைக்காலங்கள் மிகவும் குறுகியவை. ஏனெனில், சிறிது காலத்திற்குள்ளாகவே வேறோர் அரசாங்கம் பணியை மேற்கொண்டுவிடுகிறது.

### அரசின் தொடர்ச்சியான நிலை

'அரசாங்கங்கள் வருகின்றன; அரசாங்கங்கள் போகின்றன; ஆனால், அரசு எப்பொழுதும் தொடர்ந்திருக்கிறது' என்று சொல்வது அவ்வளவு பொருத்தமாக இராது. ஏனெனில், அரசுகள்

சாசுவதமானவை அல்ல. அவைகளும் முடிவுறுவதுண்டு. சாதாரண மாகப் பலாத்காரமான இணைப்பினாலும், அபூர்வமான சில சமயங் களில் தாமாகவே வேறொரு அரசுடன் இணைவதாலும், முடிவு நேருவ துண்டு.[1] ஆனால், அரசாங்கங்கள் மாறுகின்றன ; மாறவும்கூடும். இம் மாற்றம்கூட அரசின் நிரந்தரத் தன்மையைக் குலைக்காமலே அடிக்கடி நேரலாம். 1789 க்கும் இன்றைக்குமிடையே ஃபிரான்சு பல அரசாங்க முறைகளைக் கண்டாயிற்று.[2] இதில் ஒவ்வொரு மாற்றமும் அரசியல் அமைப்பில் புதிய துவக்கம் செய்யப் போவதாகச் சொல்லி ஆரம்பித்ததுண்டு. ஆனால் 'ஃபிரான்சு' மாறாதிருந்தது. பன்னாட்டுச் சட்டத்தின்படி ஃபிரான்சு ஓர் உறுப்பாக இருந்தது. மாறிமாறி வந்த ஒவ்வோர் அரசாங்கமும் முன்னர் ஏற்பட்ட உடன்படிக்கைகள், முன்னாள் அரசாங்கங்களின் கடன் ஆகியவற்றால் பிணைக்கப் பெற்றிருந்தது. உள் நாட்டிற்குள்ளும் அதன் முன்னோடிகளின் சட்டங்களை ஒப்புக்கொள்வதன்மூலம் ஒரு தொடர்ச்சி இருந்திருக் கிறது. சட்டங்களைச் சில சமயங்களில் திருத்துவதோ அல்லது மாற்றுவதோ தவிர மற்றபடி அவைகள் அப்படியே தொடர்ந்து இருந்தன. 1870-ல் மெட்சி (Metz)ல் சரணாகதி யடைந்ததற்குச் சாக்காக இராணுவ நீதிமன்ற விசாரணையின்போது, பேரரசர் முடி துறந்துவிட்டார். ஆகவே, சரணாகதியைத் தவிர 'ஒன்றும் எஞ்சி யிருக்கவில்லை' என்று மார்ஷல் பெசைன் (Bazine) வாதித்தார். இதற்குப் பதிலாக இராணுவ நீதிமன்றத்தின் தலைவர், ஃபிரான்சு இன்னும் அரசியல் உறுப்பாக இருப்பதாகக் கூறினார். 'ஐயா, ஃபிரான்சு இன்னும் எஞ்சியிருக்கிறது' என்று அவர் கூறினார். ஃபிரான்சு வெறும் ஆன்மீகப் பொருளில் மட்டுமல்லாமல் உண்மை யிலும் நிலைத்து இருந்தது. அரசாங்கங்கள் மாறலாம் ; பேரரசர்கள் பட்டம் துறக்கலாம் ; ஆனால், ஒருவராலும் நாட்டின் அரசியல், ஆட்சித்துறைக் கட்டுக்கோப்பு ஆகிய எல்லாவற்றையும் மாற்ற முடியாது. ஃபிரஞ்சுப் புரட்சிக்கு முந்தியிருந்த மன்னராட்சிக் காலத்தில் பணிபுரிந்த சிவில் பணியாளர்துறை முழுவதும் ஃபிரஞ்சுப் புரட்சியால் மாற்றப்பட்டிருக்கலாம். ஆனால், புதிதாகப் பணியில் சேர்ந்த பெரும்பாலோர் நெப்போலியனின் கீழ்ப் பணிபுரிந்தனர். மீண்டும் மன்னராட்சி ஏற்பட்டபோது இவர்கள் அவ் வாட்சிக் காலத்திலும் பணியாற்றினர். இப்படியே இன்னும் நடந்துவருகிறது. புரட்சிகரமான மாற்றங்கள் ஏற்படும்போது பல நாடுகள் தங்கள் தன்மையை இழக்காமல் இருப்பதன் காரணம் இவ்வாறான ஆட்சித் துறையின் தொடர்ச்சிதான்.

[1] உதாரணமாக, 1707 ஐக்கியச் சட்டத்தின்படி (Act of Union) ஸ்காட்லாந்து இங்கிலாந்தோடு இணைந்தது.

[2] அரசாங்க முறை மாறிய ஆண்டுகள் : 1790, 1792, 1795, 1799, 1804, 1814, 1815 (இரு முறை), 1830, 1848, 1852, 1870, 1940, 1944.

இவ்வாறே 'இத்தாலி' இத்தாலியாகவே, அரசியல் சட்ட அமைப்புக் காலத்திலும், பாசிச மன்னராட்சிக் காலத்திலும், இப்போதைய குடியரசின் காலத்திலும் இருந்துவருகிறது. இங்கிலாந்து பொதுநலக் கூட்டு ஏற்பட்டபோதும் (Commonwealth) காப்பரசு நாடானபோதும், (Protectorate) 1688-ல் நடந்த புரட்சிக்குப் பின்னும் இங்கிலாந்தாகவே இருந்துவந்திருக்கிறது. போல்ஷ்விக் ருஷ்யா, ஜார் மன்னர்கள் கால ருஷ்யாவின் தொடர்ச்சிதான். ஜெர்மனி, 1871 ஜனவரியில் ஜெர்மனியாகப் பிரகடனப்படுத்தப் பட்டதிலிருந்து நாஜி அரசாங்கம் வீழ்ச்சியுறும்வரை ஜெர்மனியாக இருந்தது. இதற்கிடையில் பேரரசாகவும், ஜனநாயகக் குடியரசாகவும், தேசீய சோஷியலிச அரசாங்கமாகவும் பல அரசாங்க முறைகளைக் கையாண்டபோதும் அது ஜெர்மனியாகவே இருந்தது. ஆனால் அதன் மத்திய அரசாங்கம் வீழ்ச்சியுற்று, டன்னாட்டு அந்தஸ்து இழந்து, வெளிநாட்டார் அதைப் பிரதேசங்களாகப் பகுத்துக் கைப்பற்றிக் கொண்டபோது அந்த அரசும் வீழ்ந்தது.

## அரசாங்கமும் அரசும் நடைமுறையில் ஒன்றே

அரசிற்கும் அரசாங்கத்திற்கும் நாம் பாகுபாடு காட்ட வேண்டுமென்றாலும், ஒரு குறிப்பிட்ட காலத்தில், ஒரு குறிப்பிட்ட ஆட்சி நிலத்திற்குள், அரசாங்கமானது அரசின் பதிலாளாகவும், பிரதிநிதியாகவும் இருப்பதால் அரசின் அவதாரமாகவே ஆகிவிடுகிறது. ஏனெனில், அரசின் பெயரால், அரசிற்காக, அரசின் இயல்பான சட்டப்படிக் கட்டாயப்படுத்தும் அதிகாரத்தை அரசாங்கம் உபயோகிக்கிறது. மேலும், அன்றாட வாழ்க்கையில் சாதாரண மனிதனின் புலன்களால் அறியப்படாத அரசோடு தொடர்பேற்படாமல் அரசாங்கத்திடம் தொடர்பு ஏற்படுகிறது. குரோசே (Croce) சொல்வது போல, 'புலன்களுக்கு அப்பாற்பட்ட ஒன்றை வேண்டாமல், பருப்பொருளான ஒன்றைக் காண விழைபவருக்கு அரசைவிட அரசாங்கமே எல்லாமாக இருக்கும். எல்லா உண்மையும் அரசாங்கத்தில்தான் காணப்படுவதாக அவர் அனுமானித்துக்கொள்கிறார்.' பதவியிலிருக்கும் அரசாங்க வகைதான் அரசிற்குத் தனித்தன்மையான அரசியல் முறையைத் தருகிறது. ரோம் முதலில் குடியரசாக இருந்து, பின்னர் பேரரசாக மாறியது என்னும்போதும், 1814-க்கும், 1870-க்கும் இடையில் ஃபிரான்சு, முறையே முடியாட்சி, குடியரசு, பேரரசு, மீண்டும் குடியரசு ஆகியவைகளாக இருந்தது என்னும்போதும், இங்கிலாந்து சட்ட அமைப்புக்குட்பட்ட முடியாட்சி என்னும்போதும், இந்நாட்டின் அரசாங்கங்கள் இவ்விதக் குறிப்பிட்ட அமைப்பு முறைகளில் இருந்தது அல்லது இருக்கிறது என்றுதான் பொருளாகிறது.

## அரசாங்கம் எதனுல் ஆகியது?

அரசின் கொள்கையையும், விருப்பாற்றலை வெளியிடவும், செயலாற்றவும் செய்கின்ற எல்லா நபர்களும், நிறுவனங்களும் பதிலாண்மைகளும் (agencies) சேர்ந்தவைதான் அரசாங்கம் என்று நாம் குறிக்கிருேம். பேச்சு வழக்கில் நாம் அரசாங்கம் என்று பேசும்போது அதன் கட்டுப்படுத்தும் உறுப்பையே குறிப்பிடுகிருேம். பிரிட்டனிலும் ஃபிரான்சிலும் அமைச்சரவையையும், அமெரிக்காவில் குடியரசுத் தலைவரையும் அவர் தம் அமைச்சர்களையும், ஏதாவது இவர்களில் மாற்றம் ஏற்படுமாஞல், 'அரசாங்க மாற்றம்' என்றும் வழக்கமாகக் கூறப்படுகிறது. இது நமது கலைச்சொற்களின் விளக்கமற்ற தன்மைக்கு எடுத்துக்காட்டாக இருக்கிறது. இதை ஏற்கெனவே நாம் வருத்தத்தோடு கூறியிருக்கிருேம். கட்டுப்படுத்தும் இக் கூறுகள் மாறியது முக்கியமானதுதான் என்ருலும் அமைச்சர்கள் முழு அரசாங்கமுமாக ஆக முடியாது. பின்னிப் பிணைந்து கிடக்கும் தல ஸ்தாபனங்களையும், தேர்ந்தெடுக்கப்பட்ட சபைகளையும், நியமிக்கப்பட்ட அதிகாரிகளையும், முழுச்சிவில் துறையின் பணியாளர்களையும், அதன் எல்லாக் கிளைகளையும், கொள்கையைச் செயலாற்றும் மிகக் கீழான அதிகாரியையும் தன்னுள்ளே கொண்டது தான் அரசாங்கம் ஆகும்.

இது எவ்வளவுதான் எண்ணிக்கையில் அதிகமாக இருந்த போதிலும், அரசாங்கங்களிலேயே மிகப்பெரியதுகூட அரசின் எஞ்சிய பகுதியோடு ஒப்பிடும்போது மிகச் சிறியதாகத்தான் இருக்கும். 'முடிவுகளைச் செய்யும்படியாகச் சட்டப்படியான அதிகாரம் வழங்கப் பெற்றிருக்கும் அந்தச் சிறு மக்கள் தொகுதி'[1] என்று இதை லாஸ்கி (Laski) அழைக்கிருர். எந்தவிதமான முடிவுகள்? அரசாங்கங்கள் என்ன செய்யவேண்டும் என்று நாம் எதிர்பார்க்கிருேம்? எண்ணற்ற விடைகள் இக் கேள்விக்குப் பதிலாக அளிக்கப்பெற்றிருக்கின்றன. பின்னர் இதுபற்றி விரிவாக ஆராய்வோம். இப்பொழுது நாம் செய்யக் கூடியவெல்லாம், அரசாங்கத்தின் அடிப்படையான, தவிர்க்க முடியாத நோக்கங்களையும். பலதரப்பட்ட அரசாங்க நடவடிக்கைகளோடு அவைகளின் தொடர்பையும்பற்றிச் சுருக்கமாகப் பார்ப்பது மட்டுந்தான்.

சமுதாயம் முழுவதற்குமாகச் செயலாற்றுவது எல்லா அரசாங்கங்களுக்கும் அடிப்படையான உண்மை. முதலாவது, முழுச்சமுதாயமும் அதன் கட்டுப்பாட்டிற்குக் கீழ்வரும். ஒரு தனி மனிதனே

[1] அரசாங்கத்திற்கும், சமுதாயத்திற்குள்ளிருந்து ஆளும் வர்க்கத்துக்கும் இடையே உள்ள உறவுப் பிரச்சினை பற்றிப் பின்னர் ஆராய்வோம்.

அல்லது தொகுதியோ, எல்லோருக்கும் பொருந்தும்படியாகச் செய்யப்பெறும் காரியங்களிலிருந்து தப்பமுடியாது. ஆனால், சில சமயங்களில் இங்கொன்றும், அங்கொன்றுமாக இந்த உரிமையைக் கேட்டு வெற்றியும் பெறுகிறார்கள். சமூக வர்க்கங்களுக்கோ அல்லது திருச்சபை போன்ற தொகுதிகளுக்கோ, சிறப்பாக வரி விதிப்பிலிருந்து விலக்கு அளிப்பது போன்ற தனியுரிமைகள் கொடுக்கப்பட்டிருந்தன. நீண்டகாலத்தில் படிப்படியாக இவை மறைந்து வருகின்றன. பல நாடுகளில் மத குருக்களுக்கு இராணுவத்தில் சேவை புரிவது, ஜூரராகப் பணியாற்றுவது ஆகிய கடமைகளிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. இதற்குப் பிரதியாக, மதகுருக்கள் பொதுப்பதவிகளுக்குத் தகுதியில்லை என்றும் கூறி வருகிறார்கள். பொதுவாக, எப்படியிருந்தாலும் சட்டம் எல்லாவற்றையும் உள்ளடக்கிய ஒன்றாகும் என்று ஒப்புக்கொள்கிறார்கள்.

ஒழுங்குற அமைக்கப்பெற்றிருக்கும் மனித நடவடிக்கையின் எந்தத் துறையும், அரசாங்கத்தின் செயலாற்றலிலிருந்து நிரந்தரமாக ஒதுங்கி இருப்பதை உரிமையாகக் கேட்கமுடியாது என்பது இதிலிருந்து தெரிகிறது. பொதுப்பயன்பாடு ஒன்றுதான் அளவுகோல்.

## அரசாங்கத்தின் முக்கியப் பணிகள்

சமுதாயத்தைப் பொறுத்த அளவில் எல்லா அரசாங்கங்களும் சில ஆதாரமான கடமைகள் ஆற்றவேண்டியிருக்கின்றன. போலீஸ் முறையினாலும் குற்றங்களைத் தண்டிக்கும் நீதி முறையினாலும் ஒரு குறைந்தபட்ச அளவாவது அமைதியையும், ஒழுங்கையும் நாட்டில் காக்கவேண்டும். தனியார் சச்சரவுகளை அமைதியான முறையில் தீர்த்துக் கொள்வதற்காகச் சிவில், நீதி வழங்கும் ஸ்தாபனங்கள் ஆகியவைகளை அமைத்துத்தரவேண்டும். ஒருவரின் ஒழுங்கான அன்றாட வாழ்க்கையில், பிறமக்களோ அல்லது அரசாங்கத்தின் பதிலாட்களோ தலையிடாமலிருப்பார்கள் என்ற உறுதி சமுதாயத்திலிருக்கும் அங்கத்தினர்களுக்குத் தரப்படவேண்டும். இப்பொழுதெல்லாம் குடிமக்களுக்கு ஏற்படும் வாழ்க்கையின் எதிர்பாரா நிகழ்ச்சிகளாகிய வியாதி, எல்லா வசதிகளையும் இழந்து வறியராதல், வேலையின்மை ஆகியவைகளிலிருந்து குடிமக்களைக் காப்பதற்குரிய அமைப்புகளை ஏற்படுத்த வேண்டும். முடிவாகப் பொதுப்பாதுகாப்பு அமைப்புகளை ஏற்படுத்திச் சமுதாயத்தை வெளியார் படையெடுப்பிலிருந்தும், தாக்குதலிலிருந்தும் பாதுகாக்கவேண்டும். அவற்றுடன் வெளிச்சமுதாயங்களோடு அமைதியான உறவுகள் கொண்டிருக்கவும் வேண்டும். பல சமூக நடவடிக்கைகள் ஒரே சீராக நடைபெற

ஒழுங்கு செய்யவேண்டும். ஏனெனில் முக்கியமான காரியங்கள் செய்யப்பெறவேண்டும் என்பதோடு, முயற்சிகளை ஒருமைப்படுத்தி அவை ஒரே வழியில் செய்யப்பெறல் வேண்டும். இரயில்வேக் கம்பெனிகளைத் தேசீய மயமாக்குவது ஒருவேளை புத்திசாலித்தன மற்றதாக இருக்கலாம்; அல்லது தேவையில்லாதிருக்கலாம். ஆனால் இரயில்வேக் கம்பெனிகள் தங்கள் இஷ்டம்போலக் கட்டணங்களை உயர்த்துவது நல்லதன்று. பொதுமக்களுக்குத் தாங்கள் எவ்வளவு கட்டணம் செலுத்தவேண்டும் என்று ஏற்கெனவே தெரிந்திருக்க உரிமையுண்டு. இதனால்தான் கட்டணங்களைக் கட்டுப்படுத்தும் சட்டம் அவசியமாகிறது. இன்னும் பல காரியங்களுக்கு இதே மாதிரிதான். 'சமூக நடவடிக்கைகளில் யார் என்ன செய்யவேண்டும் என்ற உறுதி இருக்கவேண்டும்' என்று மெரியம் (Merriam) கூறுகிறார்.

மேற்கூறிய வேலைத்திட்டமானது மிகவும் விளக்கமற்ற ஒரு திட்டம். நடைமுறையில் இவைகளை 18 ஆம் நூற்றாண்டு இங்கிலாந்தில் நிலவிய தலையிடா அரசாங்கத்திலிருந்து (laissez-faire government) கூட்டுத் தத்துவம் (collectivism) கொண்ட ருஷ்யா பாசிச சர்வாதிகாரம் ஆகிய எல்லாவற்றிற்கும் பொருந்தும். ஆனால், எல்லா விஷயங்களிலும் ஆதார நோக்கங்கள் ஒன்றாகத் தானே இருக்கும்? 'நிலையான வாழ்க்கை முறைமையை நிலைக்கச் செய்து, புதிய சூழ்நிலைகளுக்கும், அவசரத் தேவைகளுக்குமேற்ப அவற்றைச் சரிசெய்து கொள்வது' என்று மாக் ஐவர் (MacIver) கூறும் இரட்டை வேலைகளைச் சமுதாயம் அரசாங்கத்திற்குக் கொடுத்திருக்கிறது. 'எங்கள் ஏழைகள் மகிழ்ச்சியாக இருக்கிறார்கள். அவர்களிடையே அறியாமையோ, இன்னலோ காணக் கிடைக்காது. என்னுடைய சிறைச்சாலையில் கைதிகள் இல்லை. என் தெருக்களில் பிச்சைக்காரர்கள் இல்லை. வயது முதிர்ந்தோர் தேவையினால் அவதியுறவில்லை. வரிச்சுமை அதிகக் கொடுமையாக இல்லை.—இவையெல்லாம் சொல்லப்படக் கூடுமானால், அந்த நாடு அதன் அரசாங்கத்தைப்பற்றிப் பெருமைகொள்ளலாம்' என்று பெயின் (Paine) 150 ஆண்டுகளுக்கு முன்னே எழுதுகிறார்.

## அரசாங்க நோக்கங்களும், கடமைகளும்

அரசினால் ஏற்படுத்தப்பெறும் அரசாங்கம் அரசின் தீர்மானங்களை இவ்வாறாக நிறைவேற்றுவதுதான் அரசாங்கத்தின் பணி என்போமானால், அதன் முறைகளும் இவ்வாறான நோக்கங்களுக்கிணங்க மாறக்கூடும். மிகச் சிறந்த சிந்தனையாளரான ரூசோகூட இவ் விஷயத்தில் 'மாட்டுக்கு முன்னால் வண்டியைக்

கட்டுவது போன்ற' ஒரு தவறு செய்கிறார். அவர் கூறுகிறார்: 'ஒவ்வொரு விஷயமும் அரசியலைச் சார்ந்தது என்று உணர் கிறேன். அரசாங்கம் எந்த இயல்பை மக்களிடத்தில் உண்டாக்கு கிறதோ, அவ்வாறே மக்களின் இயல்பும் இருக்கும். எனவே எது மிக நல்ல அரசாங்கம் என்ற கேள்விக்குப் பதில் இவ்வாறிருக்கும்; மக்களை மிகவும் பண்புடையவர்களாகவும், பரந்த அறிவுடையவர்க ளாகவும், எந்த அரசாங்க முறையால், மனித சக்திக்குட்பட்ட அதிக பட்ச அளவில் ஆக்கமுடியுமோ அதுவே சிறந்த அரசாங்கம்.' இது மிகவும் பிழையான ஒரு முடிவாகும். எந்த அரசாங்கமும் அதன் மக்களின் நெறித்தன்மையைத்தான் பிரதிபலிப்பதாக இருக்க முடியுமே ஒழிய மாறாக அன்று அறிவாற்றல் மிக்க ஒரு காலத்தில் அமைக்கப்பட்ட அரசாங்க வகை மக்களையும் அறிவொளியில் நடத்திச் செல்லக்கூடும். அதுபோல, அரசியல் மனக்கசப்பு அல்லது நெறி யற்ற நிலை ஆகியவை நிலவும்போது அமைக்கப்படும் அரசாங்கங்கள், அப்படிப்பட்ட நிலையிலிருந்து மக்கள் மீள்வதைச் சிரமத்திற் குள்ளாக்கக்கூடும். மக்களின் தகுதிக்கேற்பவே அவர்களுக்கு அரசாங்கம் கிடைக்கும்[1] என்ற பழங்கருத்தின் உண்மையை மிகைப் படுத்த விரும்பவில்லை. ஏனெனில், அவர்கள் தற்காலீகமாக முட்டாள்தனமாகவோ அல்லது அதிர்ஷ்டமற்றவர்களாகவோ இருந்திருக்கலாம். அப்புறம் அவர்கள் தங்களுக்குக் கிடைத்த கொடுங்கோலனை விரட்டமுடியாதவர்களாக இருக்கலாம். எனினும், பழங்கருத்து பலவகைகளில் உண்மையாகவே இருக்கிறது.

எனவே, ஒரு காலத்தில் அரசின் குறிப்பிட்ட நோக்கங்களை வெளியிடுவதாகத்தான் அரசாங்கத்தின் முறை அல்லது தன்மை அமையும். பயனுறுத்தும் தன்மை பெற்ற அரசின் அங்கத்தினர் களின் கொள்கைகளை அரசாங்கம் வெளியிடுகிறது. அவற்றைச் சட்டமியற்றுதலின்மூலம் பிறரை ஒப்புக்கொள்ளச் செய்கிறது. நாம் 'அரசியல்' என்று அழைப்பதானது, பெரும்பாலும், அமைதி யான முறையிலோ அல்லது அப்படி அல்லாமலோ அரசில் உள்ள பலவகைத் தொகுதிகளும், அக்கறைகளும் அரசாங்கப்பொறியைக் கைப்பற்றுவதற்காக நிகழ்த்தும் போராட்டந்தான். பொருளாதார உற்பத்தியையும், பகிர்வையும் கட்டுப்படுத்துபவர்கள்தான் குறிப் பிட்ட எந்தக் காலத்திலும் வெற்றிபெற்றவர்களாக இருக்கக் கூடும்.

எனவே, அரசியல் முறையில் ஏற்படும் மாற்றமானது பொருளாதார முறையிலும் மாற்றத்தை ஏற்படுத்துகிறது. அரசின்

[1] அல்லது அவர்களின் அரசியல் முதிர்ச்சிக்குத் தக்கவாறு அரசாங்கம் அவர்களுக்கு அமையக்கூடும்.

விருப்பாற்றலும், கொள்கையும் அதன் வர்க்க உறவுகளால் பெரிதும் நிர்ணயிக்கப்படுகின்றன. ஒரு குறிப்பிட்ட காலத்தில் காணப்படும் நிறுவனங்கள், அரசியல், பொருளாதார ரீதியில் பிரதானமாக இருக்கும் வகுப்பாரின் அக்கறைகளைப் பாதுகாப்பதற்குரியவாக இருக்கும்.

## (ii) அரசாங்க முறைகள்

### அரசாங்க முறைகளின் உருமலர்ச்சி

வரலாறு, புவியியல், சமூகம், பொருளாதாரம், உளவியல் சார்ந்த பல எண்ணற்ற காரணிகளால் உருவாக்கப்பெறுவது அரசாங்கமுறை. அவைகளில் சிலவற்றை ஒப்பிட்டுப்பார்த்தால் நிரந்தரமானவையாகவும், ஸ்தாபனங்களின் உருமலர்ச்சியில் ஓரளவுக்குத் தொடர்ச்சியைத் தரத்தக்கனவாகவும் இருக்கின்றன. பிற மாறும் தன்மையவாகையால், இவ் வுருமலர்ச்சிக்குள் ஏற்படும் மாற்றங்களுக்குக் காரணமாகின்றன. எவ்வாறு இரண்டு மனிதர்கள் எவ்வளவுதான் உருவ ஒற்றுமைகள் பெற்று இருந்தபோதிலும் ஒரேமாதிரி இருப்பதில்லையோ, அப்படியே இரு அரசாங்க முறைகள் ஒன்றைப்போல் மற்றொன்று இருப்பதில்லை. மனிதனைப்போலவே, அரசாங்கமும் மாறாமல் ஒரேமாதிரி இருப்பதில்லை. நாளுக்குநாள் தெரியாவிட்டாலும், நீண்ட காலப்போக்கில் இம் மாறுதல்கள் ஏற்படுவதை நாம் உணரமுடியும். பிரிட்டன், அமெரிக்கா ஆகிய நாடுகளிலுள்ள அரசியல் அமைப்புகளைக்காட்டிலும் நிலையான அரசியல் அமைப்பை வேறெங்கும் காணமுடியாது. அப்படி இருப்பினும் பேஜ்ஹாட் (Bagehot) எழுதிய, ‘ஆங்கில அரசியலமைப்பு’ (English Constitution) என்ற நூலும், பிரைஸ் (Bryce) எழுதிய ‘அமெரிக்கப் பொதுநலக் கூட்டரசு’ (American Commonwealth) என்ற நூலும் இப்பொழுது காலங்கடந்த நூல்களாக ஆகிவிட்டன.

மாறுகின்ற நோக்கும் ஒரேமாதிரி மாறுதிருப்பதில்லை. சில சமயங்களில் ஒருவகையான அமைப்பை நோக்கி மாறும்போக்கு காணப்படலாம். சட்ட அமைப்பிற்குட்பட்ட முடியாட்சி, குடியரசு, சர்வாதிகாரம், கூட்டுடைமைவாதம் ஆகிய ஏதாவதொரு முறையை நோக்கி மாற்றம் ஏற்படலாம். ஆனால், அது எல்லாவற்றையும் உள்ளடக்கியதாக இராததால், பொதுத்தன்மையாகக் கூறிவிட இயலாது. ஓர் அரசில்கூட மாற்றம் ஒரே சீராக இருப்பதில்லை. பல ஆண்டுக் காலத்தில் பார்க்கும்போது, பெரும்பான்மையான அரசுகளில் வெவ்வேறான, ஆனால், ஒன்றுக்கொன்று தொடர்புள்ள இரு வழிகளில்

மாற்றங்கள் தோன்றுவதை அறியமுடியும். அரசியல் முறைகளில், பொறுப்பற்ற நிலையிலிருந்து வரையறுக்கப்பெற்ற முடியாட்சிக்கும்,[1] வரையறுக்கப்பெற்ற முடியாட்சியிலிருந்து குடியரசாக மாற்றம் ஏற்பட்டது. அதாவது, வேறு சொற்களில் சொல்வதானால் அதிகமான பொதுமக்களின் கட்டுப்பாட்டை நோக்கி மாற்றம் நிகழ்ந்திருக்கிறது. சமூக அமைப்பைப் பொறுத்தமட்டில், பொறுப்பற்ற தலையிடாக் கொள்கையிலிருந்து, பலவகையான பொருளாதாரக் கட்டுப்பாடுகள் அல்லது திட்டமிடுதல் ஆகியவற்றை நோக்கி மாற்றம் ஏற்பட்டிருக்கிறது. இதுவும் பொதுமக்களின் சக்தியினால் ஏற்பட்டதுதான். ஆனால், ஒரு நாடாவது ஒரே சீராக இம் மாறுதல்களைக் கண்டதில்லை. ஏனெனில் ஒவ்வொரு செயலுக்கும் மாற்றுச்செயல் உண்டென்பது விதியாகும். இப்படிப்பட்ட உரு மலர்ச்சியில் மறக்கப்பெற்ற செல்வாக்குகள் மீண்டும் தோன்றுவதுண்டு. ஒதுக்கி வைக்கப்பெற்ற கருத்துக்கள் எதிர்பாராத வலிமை பெறுவதுமுண்டு. சில ஆண்டுகளுக்கு முன்பு தேசீயமும், மதமும் அரசியல் சக்திகளாக இருந்து மறைந்துவிட்டதாகக் கருதப்பட்டன. ஆனால், இப்பொழுது எவரும் அவ்வாறு கூறத் துணியமாட்டார்கள். ஒருநாளும் இவ் விஷயங்களைப்பற்றி முடிவாகச் சொல்லமுடியாது.

## பயனுறுதியுடைய அரசாங்கங்களின் முக்கியக் காரணக் கூறுகள்

ஒரு குறிப்பிட்ட அரசின் முறையை ஆராய விரும்பும் எவரும் அதன் வெளிப்படையான அரசியற்பொறிக்கும் அப்பாற் பார்க்க வேண்டும். அவர் அதன் பொருளாதாரக் கட்டமைப்பைக் கவனிக்க வேண்டும். அது விவசாயத்தை ஆதாரமாகக் கொண்டதா? அல்லது தொழில் மயமானதா? அல்லது வியாபார அடிப்படை கொண்டதா? என்று பார்ப்பதோடு, ஒவ்வொரு வகையிலும், அதிக எண்ணிக்கையில் கூலியாட்களை உபயோகிக்கும் பெருமளவுள்ள நிலங்களுக்கும், அல்லது நிலச் சொந்தக்காரர்களே பயிரிடும் முறைக்கும் உள்ள வேறுபாட்டையும் கவனத்தில் கொள்ளவேண்டும். அதுபோன்றே பெருவாரித் தொழிலுக்கும், சிறு கைத்தொழில்களுக்கும், ஏற்றுமதிக்காகச் செய்யப்படும் உற்பத்திக்கும், உள்ளூர் உபயோகத்துக்காக ஆக்கப்படும் உற்பத்திக்கும், உள்ளூர் நுகர்வுக்காக உள்நாட்டிலே செய்யப்பட்ட பண்டங்களை விற்பனை செய்வதற்கும் பரந்த

[1] 'பாராளுமன்றங்களைக் கூட்டுவது என் அதிகாரத்தில் இருக்கிறது. அவை எப்படி இருக்கவேண்டும் என்று நிர்ணயிப்பதும் என் அதிகாரத்தில் இருக்கிறது' என்று 1593-ல் எலிசபெத் ராணியார் கூறினார். 'நாட்டின் சட்டம் அரசருக்கு என்ன அனுமதிக்கிறதோ, அதைத் தவிர வேறு தனியுரிமை அவருக்கில்லை' என்று சில ஆண்டுகளுக்குப்பிறகு பிரதம நீதிபதியாகிய கோக் (Coke) இதற்குப் பதிலிறுத்தார்.

பரப்பில் இடை வணிகராக இருந்து பகிர்வு செய்வதற்கும் உள்ள வேறுபாடுகளையெல்லாம் கவனத்தில் கொள்ளவேண்டும். ஒவ்வொரு நிலையிலும், சொத்துரிமை முறை எத் தன்மையதாக இருக்கிறது என்பதையும் கவனிக்கவேண்டும். இது பூர்வீகக் குடும்பப் பொருளாதார அமைப்பிலிருந்து கூட்டுடைமை வாதம் வரை பல வகைப்படும். அடுத்து, ஆய்வாளர் சமூக அமைப்பை ஆராய்ந்து பார்க்கவேண்டும். எவ்வகையான தொகுதிகள் பிரதானமாக விருக்கின்றன; பரம்பரைச் சாதிகள் அல்லது திருச்சபைகள் போன்றவற்றின் செல்வாக்கு, நிலவும் கல்விநிலை, கலாச்சார வகை ஆகியவற்றை ஆராயவேண்டும். மக்கள் இயல்பாகவே அமைதியையும், சட்டத்திற்குக் கீழ்ப்படிதலையும் கொண்டவர்களா? அல்லது பலாத்கார வேகமும் புரட்சி மனப்பான்மையும் கொண்ட வர்களா? என்றும், நாட்டினத்திலும் வர்க்கத்திலும் மக்கள் தொகை ஒரே மாதிரியுள்ளதா? அல்லது கூறுகப் பிரிக்கப்பட்டிருக்கும் சாதி களாலும், சமரச சாத்தியமில்லாத சிறுபான்மைத் தொகுதிகளாலும் நிறைந்திருக்கின்றனவா? என்றும் அறிந்துகொள்ள அவர் விரும்பக் கூடும். கடைசியாக, (ஆனால் முக்கியமற்றதாக அன்று) அவர், 'இந்த அரசின் நோக்கம் என்ன? இதன் மக்கள் எதை விரும்பு கிறார்கள்? சொத்தா? அதிகாரமா? சுதந்தரமா? ஒழுங்கா? பாதுகாப்பா? நீங்கள் என்ன வேண்டும் என்று சொல்வீர்களானால் நீங்கள் எந்தவிதமான அரசாங்கமுடையவர்களென்று நான் சொல்லி விடமுடியும்,' என்று சொல்லக்கூடும்.

ஒரு குறிப்பிட்ட அரசின் வெளித்தோற்றமான முறையைப் பார்த்து ஏமாறக்கூடாது. பழைய வகைப்படுத்தலாகிய, முடியாட்சி, உயர்குடிப் பிறந்தோராட்சி, குடியாட்சி என்பவெல்லாம் நடை முறையில் பொருளற்றனவாக ஆகிவிட்டன. ஏனெனில் அவை அரசின் உண்மையான நோக்கத்தை அறிவதற்கு அவற்றில் யாதொரு தடயமும் இல்லை. எல்லா அரசாங்கங்களும் இம் மூன்று வகைகளிலிருந்தும் சில கூறுகளுடையனவாக இருக்கின்றன. மேல் நிலையில் உள்ள ஒரு சிலரின் கணிசமான அதிகாரத்தில் முடியாட்சி யின் கூற்றையும், பிரதிநிதிச் சபைகளுக்குத் தேர்ந்தெடுப்பதில்[1] உயர்குடிப் பிறந்தோர் ஆட்சிக் கூற்றையும், வாக்குரிமை எல்லோருக் கும் வழங்கப் பெற்றிருப்பதில் குடியாட்சியின் கூற்றையும் காண்கிறோம். இக் கூறுகளில் ஏதாவது ஒன்று அதிகமாகும்போது அல்லது குறையும்போது அரசாங்க முறையில் வேறுபாடு தோன்று கிறது. ஒரு பொருளில் பார்த்தால், எல்லா அரசாங்கங்களும் சிறு குழு

[1] 'பாராளுமன்றம் தேர்தல் முறைகொண்ட உயர்குடிப் பிறந்தோர் ஆட்சி. குழந்தை, குற்றத்திற்குத் தண்டனை யடைந்தவன், பைத்தியக்காரன் முதலியவர்களுக்கு வாக்குரிமை இல்லை எனப்படுவது உயர்குடிப் பிறந்தோர் ஆட்சிச் சார்பே.'—சீலி (Seeley)

வாட்சியே. ஏனெனில், முக்கியமான கொள்கைகளைச் சிலர் மாத்திரமே இறுதியாக முடிவு செய்கிறார்கள். சிலர் எல்லா அரசாங்கங்களும் செல்வராட்சியாக மாறுகின்றன என்று கூறுவர். ஏனெனில், இறுதிநிலையில் பொருளாதார அதிகாரமே முக்கியமானது.

மற்றொரு வகைப்படுத்தலான குடியரசுக்கு எதிராக முடியாட்சி என்று பகுப்பதும் தவறானதே. ஜனநாயகத்திற்காக இருக்கும் குடியரசைக் காட்டிலும் முடியாட்சி ஒருவேளை ஜனநாயக இலக்குக்குச் சமீபமாக இருக்கலாம். மேல்தோற்றத்திற்கு அடிப்படையை ஆராய்பவர் பார்க்கவேண்டும். ஃபிரஞ்சுக் குடியரசானது முடியாட்சி முறைகொண்ட இங்கிலாந்தைவிட அதிகப் பிரதிநிதித்துவம் கொண்டது என்று எவரும் சொல்லமாட்டார்கள். அல்லது புதிய இத்தாலியக் குடியரசு, டச்சு அல்லது ஸ்காண்டிநேவிய (Scandinavian) முடியாட்சிகளைவிட அதிகமான ஜனநாயகத்தைப் பெற முடியும் என்று எவரும் சொல்லமாட்டார்கள். தென் அமெரிக்காவின் பல 'குடியரசுகளும்,' அவைபோன்ற வேறு பலவும் வெறும் சிறு குழுவாட்சியே ஆகும். அதாவது ஜனநாயகத்தை உதட்டளவில் பேசி, சுதந்தரத்திற்கோ, பொதுமக்கள் அபிப்பிராயத்திற்கோ சிறிதும் இடமளிக்காத சிறு குழுக்கள் ஆட்சியை நடத்துகின்றன.

## வெளித்தோற்றமான முறைகளும், உள்தோற்றமான உண்மையும்

வெறும் அரசியல் முறைகளைப்பற்றி மட்டும் பார்க்கும்போதுகூட வெறும் சொற்களால் ஏமாற்றப்படுவதைத் தவிர்க்கவேண்டும். முக்கியமான காரியங்களைக் கவனத்திற்கு எடுத்துக்கொண்டு வெளித்தோற்றங்களை விட்டுவிடுவோம். நாம், ஓர் அரசின் தலைவர் எந்தப் பெயரால் அழைக்கப்படுகிறார் என்பதில் கவனம் செலுத்தாமல், அவர் எவ்வளவு உசிதமான அதிகாரம், (discretionary power) பெற்றிருக்கிறார்? அமைச்சர்களைத் தேர்ந்தெடுப்பதில் அவருக்குத் துவக்க உரிமை எவ்வளவு இருக்கிறது? சட்டசபைகளைத் தேர்ந்தெடுக்கும் வாக்காளர் தொகுதி எவ்வளவு பரந்த அடிப்படை கொண்டது? (ஜனநாயகச் சுவிட்சர்லாந்துகூட இன்னும் பெண்களுக்கு வாக்குரிமை அளிக்க மறுக்கிறது) தேர்தல்கள் எந்த அளவிற்குச் சுதந்தரமாக நடைபெறுகின்றன? சட்டசபைகள் பொதுமக்கள் அபிப்பிராயத்தைப் பிரதிபலிக்கின்றனவா? சட்டசபைகள், அமைச்சர்கள் தேர்விலும், அவர்களது அன்றாட ஆட்சி முறையிலும் எவ்வளவு நேரடியான கட்டுப்படுத்தல் இருக்கிறது? பாரபட்சம், உயர்குடிப் பிறப்பு, வேலைக்குரிய தகுதி ஆகியவைகள் தேர்தலில் அதிகம் காணப்படுகின்றனவா? எல்லோரும் சட்டத்திற்குக்

கீழ்ப்படிகிருர்களா? அல்லது கீழ்ப்படியாமையின் விளைவுகளைத் தடுப்பதில் இலஞ்சத்திற்கு எவ்வளவு ஆற்றலிருக்கிறது? அன்ருடம் நீதி வழங்குதலில் எவ்வளவு பாரபட்சமற்ற தன்மையும், விரைவும் கவனிக்கப்படுகின்றன? பொது வாழ்க்கையில் அரசாங்கத்தின் கட்டுப்பாடு எவ்வளவு விரிவானது? வாக்காளர் தொகுதி எவ்வளவு கல்வி அறிவுடையது? என்பனவற்றில் கவனம் செலுத்தவேண்டும். அதுதான் தீர்மானிக்கவேண்டிய பிரச்சினைகளைப்பற்றிப் பரந்த விவேகமான கண்ணேட்டத்தோடு முடிவு செய்யக்கூடும்.[1] இப்படிப் பட்ட கேள்விகளுக்கு விடை தெரிந்தால்தான் குறிப்பிட்ட அரசாங் கத்தைப் பொருத்தமான இடத்தில் வைத்து, அதற்குரிய பெயரைச் சரியாகத் தரமுடியும். எனினும், மேலே கேட்கப்பட்ட கேள்விகளுக் கெல்லாம் விடைபகர்வது சுலபமன்று. பெருமளவிற்கு வெளிப் பார்வைக்குத் தோன்றும் முறைகளைக்கொண்டே நமது வகைப் படுத்தலைச் செய்து திருப்திப்பட்டுக்கொள்ளவேண்டியிருக்கிறது. ஆனுலுங்கூட, வாக்காளர் தொகுதியின் அளவும், சுதந்தரத் தன்மை யும், அரசாங்கத்தின் வேலையிலும், அதைத் தேர்ந்தெடுப்பதிலும் அதற்குள்ள செல்வாக்குநிலை ஆகியவற்றை அறிதல் முடியாட்சி, குடியரசு, ஆகியவற்றிற்குள்ள வேறுபாடுகளைக் காட்டிலும் முக்கிய மானவை. மேலும், 'சோஷியலிசத்தை' அடிப்படையாகக்கொண்ட அரசுகள், 'தனியார் தொழிற்றுணிவு' அரசுகள் என்ற வேறுபாடும் மிகக் குறைந்துகொண்டே வருகிறது.

## (iii) அரசாங்கமும் அரசியலமைப்பும்

### அரசியலமைப்பு வகைகள்

எவ்வாறெனினும் ஓர் அரசின் அரசியலமைப்பைக்கொண்டு அது எவ்வகை அரசாங்கமுடையது என்று தீர்மானிக்குமாறு கட்டாயப் படுத்தப்படுகிரேம். அரசாங்கங்கள் அரசின் பதிலாளாக, அதற்குக் கொடுக்கப்பட்டிருக்கும் அதிகாரங்களை உபயோகிப்பதற்குரிய விதி களையும், கொள்கைகளையும் கொண்டது அரசியல் அமைப்பு எனப் படும். 'ஆற்றல்மிக்க ஒழுங்குறுத்தப்பெற்ற தடையின் நுணுக்க முறை' என்று பேராசிரியர் பிரடரிக் (Friedrich) இதை அழைக்கிருர். அரசியல் அமைப்புக்கள், பல வழிகளிலும் பெரிதும் வேறுபடுகின்றன.

[1] 'அரசியலமைப்பு என்பது அடிப்படையில் ஒரு பாதுகாப்புச் சட்டமாகும். அதனிடமிருந்து ஆட்சியுரிமையைப் பெற்ற அதிகாரிகள் ஒரு நாட்டு மக் களின் உரிமையைப் பறிக்காதவண்ணம் பாதுகாப்பளிக்கும் ஒரு சட்டம் இது. பெரும்பான்மையினரின் சர்வ வல்லமையுள்ள அதிகாரத்தினின்றும் சிறு பான்மையினரைப் பாதுகாக்கும் சட்டம்' என்று சுவிட்சர்லாந்து நாட்டுச் சட்ட வல்லுநராகிய போர்ஜாட் (Borgeaud) கூறுகிருர்,

அவை விளக்கும் அரசாங்கங்களைப் போலவே, இரு அரசியலமைப்புக்கள், ஒன்றைப்போல் ஒன்று இருப்பதில்லை. இவற்றில் சில பழைமையானவை. சில இளமையானவை. பிரிட்டனின் அரசியல் அமைப்பு மிகப் பழைமையானது. புதிதாக ஆசியாவில் தோன்றியிருக்கும் அரசுகளின் அரசியலமைப்பு, சமீப காலங்களில் தோன்றியது. சில அரசியலமைப்புக்கள் மிகவும் விரிவான விவரத்தோடு கூடியவை. சில வெறும் பொதுக்கொள்கைகளைமட்டும் சொல்லிப் பல அம்சங்கள் அன்றாட நடைமுறையில் தீர்க்கப்படுவதற்காக விட்டுவிடப்படுகின்றன. உதாரணமாக, 1875-ல் எழுதப்பெற்ற ஃபிரஞ்சு அரசியலமைப்பில் பிரிட்டிஷ் பாராளுமன்ற நடைமுறை வழக்கம் பெரிதும் கையாளப்பெற்றது. ஆனால், 1946ஆம் வருடத்திய அரசியலமைப்பில் (1919ஆம் வருட ஜெர்மன் குடியரசின் அரசியலமைப்பைப் பின்பற்றியது) அமைச்சரவைகள் எந்தச் சந்தர்ப்பங்களில் இராஜிநாமாச் செய்யவேண்டும் என்றும், எப்படிப் புது அமைச்சரவைகளைத் தேர்ந்து, ஒப்புதல் பெறுவது என்றும் விவரமாகக் கூறப்பட்டுள்ளது. மேலும், பெரும்பாலான அரசியல் அமைப்புக்கள், ஒரே ஆவணமாக (document) அவற்றின் பிந்திய திருத்தங்களோடு காணப்படும். ஆனால், பிரிட்டனின் அரசியல் அமைப்பு, பல சட்டங்களில் காணப்படுகிறது. இச் சட்டங்களின் பட்டியலில் எதைச் சேர்ப்பது? எதை விடுவது என்பதுபற்றி எந்த இரு மாணவரும் ஒத்துப்போனதில்லை.[1] முடிவாக, இங்கிலாந்தின் அரசியல் அமைப்பைப்போன்ற சில அமைப்புகளைச் சாதாரணமாகச் சட்டமியற்றும் முறையிலேயே திருத்தலாம். ஆனால் அமெரிக்கா போன்ற பெரும்பாலான அரசியல் அமைப்புகளைத் திருத்துவதற்குத் தனியான முறைகள் தேவைப்படுகின்றன. பல சமயங்களில் மிகவும் விரிவான முறைகளும் தேவைப்படுகின்றன.

எனினும், நெகிழும் (flexible) அல்லது நெகிழாத (rigid) அரசியலமைப்புச் சட்டங்களால் மட்டுமே எந்த ஓர் அரசியல் அமைப்பும் ஆக்கம் பெற்றிருப்பதில்லை. விளக்கமும், குறை நிரப்பவும் செய்த அநேக நீதித் தீர்ப்புகளை இவற்றோடு சேர்த்துக் கொள்ளவேண்டும். பத்திரிகை, கூட்டம் கூட்டுதல், சங்கம் அமைத்தல் ஆகியவற்றிற்கான உரிமையை அரசாங்கம் குறைத்து

[1] 1662 ஆம் வருடத்திய ஹேபியஸ் கார்ப்பஸ் (Habeas Corpus) சட்டத்தையும்' 1689 ஆம் ஆண்டின் உரிமைச் சாசனத்தையும் (Bill of Rights), 1693 ஆம் ஆண்டின் படைக்கலகச் சட்டம், ஸ்காட்லாந்து, அயர்லாந்து, டொமினியன்கள் ஆகியவற்றோடு இங்கிலாந்தின் உறவுகளைப்பற்றிய சட்டங்கள் (1707 முதல் இன்றுவரை) 1701 ஆம் வருடத்திய செட்டில்மெண்ட் சட்டம் 1911 ஆம் வருடத்திய பாராளுமன்றச் சட்டம், வாக்குரிமைச் சட்டங்கள் 1832 முதல் 1928 வரை; தல அதிகாரங்களை வரையறுக்கும் எல்லாச் சட்டங்கள் ஆகிய சட்டங்களை இதில் சேர்க்கிறார்கள்; இந்தப் பட்டியலை இன்னும் நீட்ட முடியும்.

விடாதபடி, அதற்குள்ள உரிமையைப் பல நாடுகளில் நீதி மன்றங்கள் நிராகரித்து விடுவதன் மூலம் இச் சுதந்தரம் பாதுகாக்கப்படுகிறது. அரசியலமைப்பின் 'வழக்காறுகள்' (conventions) என்று அழைத்த சட்டத்தின் தன்மைபெற்ற நடைமுறைப் பழக்கங்களையும் மறந்து விடக்கூடாது. உதாரணமாகத் தோல்வியுற்ற அமைச்சரவை இராஜி நாமாச் செய்யவேண்டும் அல்லது பாராளுமன்றத்தைக் கலைத்து விட்டுப் பொதுமக்களுக்கு முறையீடு செய்யவேண்டும். பிரிட்டனின் பிரதம மந்திரி மக்கள் சபையைச் சேர்ந்தவராக இருக்கவேண்டும். லீபனேனின் (Lebanon) அரசுத் தலைவர் கிறிஸ்தவராக இருந்தால், அதன் பிரதமர் முஸ்லீமாக இருக்கவேண்டும் அல்லது தலைவர் முஸ்லீமாக இருந்தால், பிரதமர் கிறிஸ்தவராக இருக்கவேண்டும். இதுபோன்ற வழக்காறுகளும் அரசியலமைப்பில் இடம் பெறு கின்றன. உண்மையில் சட்டத்திற்கும், வழக்காற்றுக்கும் உள்ள வேற்றுமையானது மிகைப்படுத்தப்படுகிறது. வழக்காறு என்பது வழக்கமாகப் பின்பற்றப்படும் ஒன்று. எனவே அதற்கு விளக்கம் தேவையிருப்பதில்லை. மேலும் வழக்காறு மீறப்படுமானல் ஏதாவ தொரு சட்டத்தை அரசாங்கம் மீறும்படியாகும். அல்லது அரசாங் கத்தை ஸ்தம்பிக்கச் செய்யும் அளவுக்கு எதிர்ப்புகள் தோன்றக் கூடும். பாராளுமன்றத்திற்கு எதிராகப் பதவியிலிருக்கும் அமைச் சரவை கூடிய விரைவில் காலியான கருவூலத்தைத் (treasury) தான் காணவேண்டியிருக்கும். வரிவிதிப்பதற்கான சட்டங்களையும் இயற்றமுடியாத நிலை ஏற்படும். மேலும் பிரிட்டனில் போர்ப்படை களையும் வைத்துக்கொண்டிருக்க முடியாத நிலை ஏற்படும்.

எவ்வழியில் பார்த்தாலும், எழுதப்பெற்ற அரசியலமைப்புக்கள் தேசீய அரசியலின் எல்லாச் சிக்கலான அம்சங்களையும் உள்ளடக்கிய தாக இருக்கமுடியாது. ஏனெனில் வாழ்க்கை முறையானது எப் பொழுதும் மாறிக்கொண்டே இருக்கும் இயல்புடையது. புதிய சூழ்நிலைக்கேற்பச் சட்டம் தன்னைச் சரிசெய்துகொள்ளக் காலம் பிடிக்கும். எல்லா நடைமுறை நோக்கங்களுக்கும், பொருத்தமாகும்படி 'அரசாங்கத்தின் பல துறைகளும், மக்களும் தங்கள் கடமைகளை ஆற்றும்போது, எதைச் சரியாக உணர்ந்துகொண்டு, பின்பற்று கிறார்களோ, அது அரசியலமைப்பு ஆகுமேயொழிய வேறெதுவுமன்று' என்று விளக்கம் கூறலாம்.

## 'அரசியலமைப்புக்குட்பட்ட' என்றால் என்ன?

'அரசியலமைப்புக்குட்பட்ட' என்ற சொல்லுக்குப் பொருள் என்ன? எவையெல்லாம் அரசியலமைப்புச் சட்டத்தால் ஒப்புக் கொள்ளப்படுகின்றனவோ, அவையெல்லாம் அரசியலமைப்புக்குட்

பட்டவை என்று கூறுவது முழுவதும் சரியான விடையன்று. ஏனெனில் அரசாங்கத்தின் நடைமுறையில் பெரும்பகுதி இதில் சேர்க்கப்படவில்லை. ஒரு குறிப்பிட்ட நாட்டில், குறிப்பிட்ட ஒரு காலத்தில், அங்குள்ள நீதிமன்றங்களும், பொதுமக்கள் அபிப்பிராயமும், அரசியலமைப்புக் குட்பட்டவை என்று எவற்றை ஒப்புக்கொள்கின்றனவோ அவையெல்லாம் சட்டப்படி அரசியலமைப்புக்குட்பட்டனவாகும்.

இதற்கு மேலும் அச் சொல்லுக்குள் பொருள் பொதிந்திருக்கிறது. அரசியல் உரு மலர்ச்சியில் பரம்பரையாக ஒப்புக்கொள்ளப் பட்ட சில கருத்துக்களைத் தீர்மானங்களோ, அல்லது மசோதாக்களோ மீறும்வண்ணம் அமையும்போது, அரசியல் விவாதங்களில், 'அரசியல் அமைப்புக்குட்பட்ட' என்ற அடைமொழி உபயோகிக்கப்படுகிறது. அவர்களது சட்டத்தன்மை இங்கு விவாதிக்கப்படவில்லை. ஆனால், நாடு நிரந்தரமாகச் சில வளர்ச்சி, செயல்முறைக் கொள்கைகளை ஏற்றுக்கொண்டிருக்கிறது. இவற்றை மாற்றுவதற்கு மக்களின் அரசியல் ஞானத்திலிருந்தும், கொள்கைகளினின்றும் கிட்டத்தட்ட புரட்சிகரமாக வேறுபட்டால் ஒழிய அவற்றை மாற்றமுடியாது என்ற பொருள் இதில் அடங்கி இருக்கிறது.

இதற்குச் சில உதாரணங்களைப் பார்க்கலாம். அயர்லாந்துக்குச் சுயாட்சி உரிமை அளித்ததைக் கன்சர்வேடிவ் கட்சியினர், 'அரசியலமைப்புக்குட்படாதது' என்று கூறி அதைக் கண்டித்தார்கள். பிரிட்டன் இன்னும் நெருங்கிய ஐக்கியத்தை நோக்கி உருவாகிக் கொண்டிருக்கிறது. இவ் விதமான ஐக்கியத்தைப் பலவீனப் படுத்துவது அந் நாட்டின் பரிணும வளர்ச்சியைத் தடைசெய்வதாகும் என்ற காரணத்தால் இதைக் கண்டித்தார்கள். பிரபுக்கள் சபையின் சீரமைப்பையும் பிரிட்டனின் அரசியலமைப்பு முறையின் அடிப் படையில் குறுக்கிடுவதாக அவர்கள் குறைகூறி எதிர்த்தார்கள். இதே காரணங்களுக்காகச் சமீப காலத்தில் தேசீய மயமாக்கும் கொள்கைகளையும் எதிர்த்தார்கள். இதற்கு மாருக; லிபரல்கள் 1902 ஆம் வருடத்திய கல்விச் சட்டம் அரசியலமைப்புப்படிக் கொடுக்கப் பெற்ற சமயச் சுதந்தரத்திற்கு இடையூறு செய்வதாகக் குற்றம் சாட்டி எதிர்த்தார்கள்.[1] 1927 ஆம் வருடத்திய தொழிற் சங்க வழக்குகள் சட்டத்தைத் தொழிற் (labour) கட்சியானது சங்கம் அமைக்கும் உரிமையை இது மறுப்பதால் அரசியலமைப்புக்கு எதிரானது என்று குறைகூறினர்கள்.

[1] ஆங்கிலிக்கன் திருச்சபையைச் சேர்ந்த ஆரம்பப் பள்ளிகளுக்குச் சலுகை காட்டுவதாகக் குறைகூறி இதை எதிர்த்தார்கள்.

அமெரிக்க ஐக்கிய நாட்டில் 'புதிய சமூகப் பொருளாதார ஏற்பாடு' (New Deal) இதே மாதிரியான எதிர்ப்புக்குள்ளாகியது. அதன் சில செயல்கள் அமெரிக்காவின் உயர்நீதிமன்றத்தால் சட்டப்படி 'அரசியலமைப்புக் குட்படாதவை' என்று தீர்ப்பளிக்கப் பெற்றன. ஆனால், இந்தப் புதிய சமூகப் பொருளாதார ஏற்பாட்டை எதிர்த்தவர்கள் 'அரசியலமைப்புக்குட்படாத' (un-constitutional) என்ற சொல்லை மிகவும் பரந்த ஒரு பொருளில் உபயோகித்தார்கள். நிலைநிறுத்தப்பட்ட ஒப்பந்த உரிமை, பொருளாதார விவகாரங்களில் அரசின் கட்டுப்பாடு இல்லாதிருத்தல் ஆகிய நிலையான கொள்கைகளுக்கு விரோதமாயிருக்கிறது என்று குறை கூறினார்கள்.

இந்தச் சொற்களை இவ்வாறெல்லாம் பயன்படுத்துவது, 'அரசியலமைப்பு' 'அரசியலமைப்புக்குட்பட்ட' என்ற சொற்களின் பொருளை மிகவும் மிகைப்படுத்தியதாகத்தான் ஆகும். அரசியலமைப்பு என்பது விதிகளையும், சட்டப்படி ஒப்புக்கொள்ளப்பட்ட முறைகளையும் கொண்டதாகும். உலகத்தின் வரலாற்றில் அரசியலமைப்புக்கள் மிகவும் மாற்றப்பட்டு, அவற்றை ஆக்கியவர்களே இப்பொழுது பார்த்தால் அடையாளம் தெரிந்துகொள்ள முடியாதபடி இருக்கின்றன. நேற்று ஆக்கிய புத்தாக்கம், இன்று ஒப்புக்கொள்ளப்பெற்ற பரம்பரை வழக்கமாக ஆகிறது. நாளைக்கு அது பழைமை என்று தள்ளப்படுகிறது. நமது பேச்சு வழக்கில் துல்லியமாக இருப்பது நல்லது. நமக்குப் பிடிக்காத ஒரு செயல் அரசியலமைப்புச் சட்டத்திற்குப் புறம்பானதாகாது.

## அரசியலமைப்பின் பணிகள்

வெளிப்பார்வைக்குத் தெரியக்கூடிய முறைகளைத்தான் அரசியல் அமைப்பு விளக்க முடியும் என்றாலும், வேறு பல பணிகளையும் அது செய்கிறது. அரசாங்கத்தின் எதேச்சாதிகாரமான நடவடிக்கைகளிலிருந்து அவை, குடிமக்களுக்குப் பாதுகாப்பு அளிக்கின்றன. எதை எதிர்பார்ப்பது, முக்கியமாக எதை எதிர்பார்க்கக் கூடாது என்பனபற்றி மக்கள் அறிந்துகொள்ளும்படி அவை செய்கின்றன. அவை அரசாங்கத்தை அமைதியான முறையில் மாற்றுவதற்கு வசதி செய்து தருகின்றன. இதன் மூலமாக அரசின் கொள்கை மாற்றத்திற்கும் அவை வசதி ஏற்படுத்தித் தருகின்றன. 'பொதுத் தேர்தல் என்பது ஒருவகை அமைதியான புரட்சியாகும்,' என்று சர் ஜான் சீலி (Sir John Seeley) கூறுகிறார். அவை பொதுமக்கள் தங்கள் அபிப்பிராயத்தை வெளியிடுவதற்கான வாய்ப்புக்களைச் செய்து தருகின்றன. அரசு என்னும் இரயில் வண்டியானது ஊர்மீதெல்லாம் ஓடிவிடாதபடித் தண்டவாளம் அமைப்பது போன்று, அரசியலமைப்பு

அமைந்திருக்கிறது. உருவத்திற்கு முக்கியம் கொடுக்கும் அரசியல் அமைப்புக்கள் தண்டவாளங்களைப் போலவே நெகிழாத் தன்மையுடையவை. அவை வெளிப்புறமான காரியங்களையே கவனித்துச் சட்டத்தின் எழுத்துக்கெழுத்து மாருதிருக்க முயலும். குடிமக்கள் அரசியலமைப்புக்கு உயிர் தரவேண்டும். உருவகப் படுத்திச் சொல்லப்போனால், அரசியல் அமைப்பு, சொற்களின் ஒரு கோவை ஆகும். குடிமக்கள் அதற்கு இராகம் அமைக்கவேண்டும். ஒரே இராகத்தில் பாடப்பட்ட வெவ்வேறு சொற்கள் ஒரே சீராக இருப்பதாகத் தோன்றுவதும், ஒரே வகைச் சொற்கள் வெவ்வேறு இராகங்களில் பாடும்போது வெவ்வேறு சொற்களாகக் காணப் படுவதும் உண்மை. இதனால் அரசியலமைப்பின் உருவத்தைவிட அதற்குள்ளிருக்கும் உயிரூட்டும் பொருளே முக்கியம் என்பது இதன் கருத்தாகும். உதாரணமாகப் பிரிட்டனின் மன்னராட்சியில் உள்ள குடிமகன், சுவிட்சர்லாந்துக் குடியரசின் குடிமகன் ஆகிய இருவரும் ஒருவருக்கொருவர் தங்கள் அரசியல் வாழ்க்கை முறையை மிக நன்ருக அறிந்து உணர்ந்துகொள்ள முடிகிறது. ஆனால், ருஷ்யாவும் சுவிட்சர்லாந்தும், கூட்டுக் குடியரசுகளாகவே இருந்தும் ஒருவருக் கொருவர் வாழ்க்கை வழியினைப் புரிந்துகொள்ள முடிவதில்லை. மேலும் பால்கன் (Balkan) பகுதியிலிருந்த இராச்சியங்களுக்கும் அவை போன்றே இருக்கும் ஸ்காண்டிநேவிய (Scandinavian) இராச் சியங்களுக்கும் உருவ ஒற்றுமை இருந்தும் இரண்டிற்கும் பொது வானது ஒன்றுமில்லை. ‘அரசாங்கங்களுக்கிடையே உள்ள வேறு பாடுகள் கொள்கை வேறுபாடுகள் அல்ல. ஆனால், பல அக்கறைகள் தங்கள் தொகுதிகளின் தேவைக்காக ஏற்றுக்கொண்ட பணிமுறை கள்தான் வேறுபடுகின்றன. தொகுதித் தேவைகளுக்கேற்ப இது மாறிக்கொண்டே இருக்கும்’[1] என்று பென்ட்லி (Bentley) எழுதுகிருர்.

## பிரதான நான்குவகை அரசாங்கங்கள்

வெளித்தோற்றத்தை உண்மையென்று எடுத்துக்கொண்டு விடக்கூடாது என்று எச்சரித்த பிறகு, உருவமைப்புக்களை மாத்திரம் எடுத்துப் பார்த்தால் உலகத்தின் அரசாங்கங்கள் நான்கு பரந்த வகைகளில் அடங்கக் காணலாம்.

1. பாராளுமன்ற வகை: இவ் வகையில், அரசாங்கமானது தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபைகளின் மாருத ஆதரவை

[1] ‘வெளியிடுவதற்காகப் போராடும் ஆளுந் தத்துவப்பாணிகளை ஒழுங்கு செய்யும் ஒரு முறையே அரசாங்கம். சக்திகள், அக்கறைகள், மதிப்பீடுகள் ஆகிய வற்றைப் புதிய சூழ்நிலைக்கேற்பப் பயன்படுத்திக்கொள்வது, எல்லா அரசியல் சமூக வகைகளிலும், அரசாங்கப் பிரச்சினைகளின் கேந்திரமாக இருக்கின்றது’ என்று மெரியம் (Merriam) கூறுகிருர்.

நம்பியிருக்கிறது. இவைகளிற் பெரும்பாலானவை முடியாட்சிகளே ஆகும். (பிரிட்டன், பெல்ஜியம், நெதர்லாந்து, டென்மார்க், நார்வே, சுவீடன்). சில குடியரசுகளும் இதில் உண்டு. [ஃபிரான்சு, இத்தாலி, தென் அமெரிக்காவின் சில அரசுகள், 1919—1933 வெய்மார் அரசியலமைப்பின்படி (Weimar Constitution) இருந்த ஜெர்மனி].

2. நேரடியாளுமை: இதன்படி, மக்களாலோ அல்லது சட்டசபைகளாலோ தேர்ந்தெடுக்கப் பெற்ற அரசாங்கம், ஒரு குறிப்பிட்ட காலத்திற்குப் பதவியிலிருக்கும். பாராளுமன்றத்தின் ஆதரவைப்பற்றி இதற்கு அக்கறையில்லை. ஆனால், அந்த ஆதரவில்லாமல் சுதந்தரமாகச் செயல்பட முடிவதில்லை. இவைகளெல்லாம் குடியரசுகள். அமெரிக்க ஐக்கிய நாடு இதில் அடங்கும். ஆனால் முந்தைய ஏகாதிபத்திய ஜெர்மனி, ஆஸ்திரியா ஆகியவையும் இதன்கீழ் வரலாம்.

3. சர்வாதிகார வகை: ஏதாவதொரு வழியில் இந்தவகை அரசாங்கம் பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப்படுவதால் நாட்டின் பிரதிநிதியாக இருப்பதாக உரிமை கொண்டாடும். ஆனால், இது பாராளுமன்ற ஆதரவில்லாமல் இயங்குகிறது. ஸ்பெயின், போர்ச்சுகல், கம்யூனிசக் குடியரசுகள், நாஜி ஜெர்மனி, பாசிச இத்தாலி ஆகியவை முக்கிய உதாரணங்களாகும். இவைகளிற் சில இந்த வகைப்படுத்தலை ஒப்புக்கொள்ள மறுத்துத் தங்களை இரண்டாவதாகச் சொன்ன வகையிற் சேர்த்துக்கொள்ள விரும்பக்கூடும் என்பது குறிப்பிடத்தக்கது.

4. வரம்பிலாதவை: பரம்பரையாக வரும் பொறுப்பற்ற மன்னர் கைகளில் அதிகாரம் இவ்வகை அரசாங்கத்தில் காணப்படும். ஜப்பானியப் பேரரசின் வீழ்ச்சிக்குப் பிறகு சவூதி அரேபியா ஒன்றுதான் இவ்வகை அரசாங்கத்திற்கு உதாரணம் என்று நம்புகிறோம். பழைய ருஷ்ய மன்னராட்சி இதற்கு மற்றோர் எடுத்துக்காட்டு. புதியனவாகத் தோன்றியிருக்கும் குடியரசுகளை எந்தவகையிற் சேர்ப்பது என்று தீர்மானிக்க இன்னும் சில காலம் ஆகவேண்டும்.

பிரதிநிதித்துவச் சபைகளின் மூலமாக வெளியிடப்படுகின்ற பொதுமக்கள் அபிப்பிராயத்திற்கும், இறுதியாகக் கட்டுப்படுத்தும் அதிகாரத்திற்கும் உள்ள தொடர்பை ஆதாரமாகக் கொண்டது இந்த வகையைச் சேர்ந்தது. ஆனால், ஒரே மேலாண்மைக்குக்கீழ்

இருப்பவையென்றும் (ஒருமுக), மேலாண்மை பல கூறுகளிடத்துப் பகுத்துக் கொடுக்கப்பெற்றவை (கூட்டு) என்றும், அரசுகளை வேறு வகையாகவும் வகைப்படுத்தலாம். பிரிட்டன், ஃபிரான்சு, பெல்ஜியம், ஸ்காண்டிநேவிய அரசுகள், இத்தாலி முதலியன முன்னதைச் சார்ந்தவை. அமெரிக்க ஐக்கிய நாடுகள் சுவிட்சர்லாந்து, ருஷ்யா, பிரேசில் ஆகியவை பின்னதைச் சார்ந்தவை. ஆனால் இவ்வாறு வகைப்படுத்துவது அவைகளின் இறுதி அதிகாரத்தின் உண்மையான இயல்பைத் தெரிந்துகொள்வதற்குத் துணைபுரியாது. அதேபோன்று, நெகிழும் அரசியலமைப்பு (இலகுவில் மாற்றப்படக்கூடியவை) என்றும், நெகிழா அரசியலமைப்பு (இலகுவில் மாற்றப்படமுடியாதவை) என்றும் பிரிப்பதும் மேற்சொன்ன மாதிரியே இறுதியான அதிகார இயல்பைத் தெரிந்து கொள்ளத் துணைபுரியாது.

இரண்டே இரண்டு அரசாங்க வகைகள். அவையாவன—குடியாட்சி முறை, சிறு குழுவாட்சி முறை ஆகியவையே—இருக்கின்றன என்று குக் (Cook) சொன்னதை ஒப்புக்கொள்ள விரும்புகிறோம். கடைசி அத்தியாயத்தில் காணப்படும் கேள்விக்குரிய இருவிடைகளில் ஒவ்வொன்றையும் இந்த இரண்டு முறைகளும் தருகின்றன. 'தன் அங்கத்தினர்களின் சுதந்தரத்தையும், தானாகவே ஏற்படும் அவர்களின் ஆக்கச் செயல்களையும் ஊக்குவிப்பதை அரசு நோக்கமாகக் கொண்டிருக்கிறதா? அல்லது உள் நாட்டிலும், வெளியிலும் அதிகாரத்தைப் பரப்புவதை முதன்மையாகவும், மேற்சொன்னதை இரண்டாவதாகவும் கொண்டிருக்கிறதா?'

## (iv) அரசாங்கத்தின் கருவிகள்: அரசியல் நிறுவனங்கள்

அரசாங்கங்கள் தங்கள் பணிகளைப் புரிவதற்குச் சில 'கருவிகள்' அல்லது பதிலாண்மைகள் அவசியமாகின்றன. இவைதான் அரசின் நிறுவனங்களாகும்.[1] (institutions) ஒரு பொருளில் பார்த்தால், இவைகளிற் பெரும்பாலானவை பொது அமைப்பில் ஒரே மாதிரியாகத் தோன்றலாம். ஆனால் அவர்களின் பணி எல்லையிலும், விவரத்திலும் அவை மிகவும் வேறுபாடுடையனவாக இருக்கின்றன. எந்த இரு அரசுகளும் ஒரே மாதிரியான முறைகளைக் கொண்டிருந்ததே இல்லை. வரலாறு, பரம்பரை, வழக்கங்கள், மனப்

[1] 'தனியாட்களுக்கிடையே நிலவும் நபர் சார்பற்ற உறவுகளின் சாதனமே நிறுவனங்கள். எல்லாச் சமுதாயங்களும் இந் நபர் சார்பற்ற உறவுகளையே சார்ந்திருக்கின்றன. ஏனெனில் எல்லா ஆதிச் சமுதாயங்களும், மிகச் சிறியதுங்கூட, தனிநபர் சொந்த உறவுகளின் குறுகிய வட்டத்திற்குள் அல்லாமல் பரந்த ஆதாரத்தின்மீது அமைக்கப்பெற்றிருக்கின்றன.'

போக்கு ஆகியவைகளுக்கேற்ப இவை மாறும் தன்மையன. அவை வளர்ச்சியுறும்போதே மக்கள் அதன் உருமலர்ச்சி நோக்கத்தையும், தன் இயல்பையும் வெளியிடுவதன்மூலம் அதை உருவாக்குகிறார்கள். அதன் வளர்ச்சியும் ஓரளவுக்கு அவர்கள் செல்வாக்குக்கு உட்பட்டு வளருகிறது. 'தனியாட்கள் சமுதாயத்தை ஆக்கக் கூடும். ஆனால் நிறுவனங்கள் நாட்டை உருவாக்கக்கூடும்' என்று டிஸ்ரேலி (Disraeli) எழுதுகிறார். இது எவ்வளவு உண்மையானது என்பதைப் புதிதாக அமைக்கப்பெற்ற நாடுகள் தங்களுக்குத் தேவையான நிறுவனங்களை ஆக்க முயற்சி செய்யும்போது தெரிய வருகிறது. முதன்முதலில் பொதுவாக அவைகளைப் பிற அரசுகளிலுள்ள நிறுவனங்கள் மாதிரியே இங்கும் நிறுவப்பெற வேண்டியிருக்கிறது. பெரும்பாலும் அவைகளை மாதிரியாகக்கொண்டு ஆக்கும்போது விவேகமற்ற முறையிலும், கற்பனை சிறிதும் இல்லாமலும் அப்படியே 'நகல்' ஆக்கிவிடுகிறார்கள். போகப் போகத்தான் தங்கள் தேவைகளுக்கேற்ப இந் நிறுவனங்களைப் பொருத்தமுள்ளனவாக்கிக் கொள்கிறார்கள். நாம் பின்னர் பார்க்கப் போகிறபடி, கொள்கையளவில் விவரிக்கப்பட்டிருக்கும் நிறுவனங்கள் வேறு; நடைமுறையில் செயலாற்றும் நிறுவனங்கள் வேறு என்பது உண்மையே.

## முக்கிய நிறுவனங்கள்

பல நூற்றாண்டுகளாக அரசியலமைப்பு வழக்கறிஞர்கள் அரசாங்க அங்கங்களை மூன்று வகையாக அவைகளது பணியின் அடிப்படையில் பிரித்திருக்கிறார்கள். அவை முறையே சட்டமியற்றும்முறை, நிர்வாகத்துறை, நீதித்துறை ஆகிய துறைகள் ஆகும். அவை சட்டம் இயற்றுதல், சட்டத்தை நடைமுறையில் செயலாற்றுதல், சட்டத்தை விளக்கிப் பிரயோகித்தல் என்ற மூன்று பணிகளாகும். தற்கால அரசு ஒன்றை எடுத்துப் படிக்கும்போது, இந்தப் பரம்பரை மூவகைப் படுத்தல் உண்மையாக இருக்கிறதா, அல்லது இல்லையா என்று பார்ப்போம். ஒரே ஒரு குறிப்பு: 'சட்டம்' என்பதை இங்கே, பொதுக்கொள்கையின் வெளியீடு என்ற பரந்த பொருளில் எடுத்துக் கொள்ளவேண்டும். எவ்வகை அரசிற்காகச் செயலாற்றுகிறதோ, அவ்வரசின் நோக்கங்களை நிறைவேற்றுவது அரசாங்கத்தின் முதல் வேலையாகும் என்று பார்த்தோம். இந் நோக்கங்கள் பல செயல் முறைகளில் காணப்பெறக்கூடும். வெறும் சட்டம் இவற்றின் ஒரு பகுதியேயாகும். கொள்கையைத் தீர்மானிக்கும் நிறுவனங்கள் எவை? அது எவ்வாறு நிறைவேற்றப்பெறுகிறது? என்பதே அடிப்படையான கேள்வி.

எந்தெந்த அரசாங்க நிறுவனங்களை இந்தத் தலைப்பிற்குக் கீழ்க் கொண்டுவருவது? இங்கிலாந்தை நமது துவக்க இடமாகக் கொண்டால் மன்னர், பாராளுமன்றம், பல துறைகளுடைய அமைச்சரகங்கள், கழகங்கள், குழுக்கள், உள்நாட்டுக்கும், வெளிநாட்டுக்கும் ஆன சிவில் பணித்துறை, நீதித்துறை அமைப்பு, போலீஸ், தல அதிகாரங்கள், போர்ப்படைகள், ஏற்றுக்கொள்ளப்பெற்ற ஸ்காட்லாந்து, இங்கிலாந்து திருச்சபைகள் ஆகியவை இருக்கின்றன. எது அவ்வாறான நிறுவனம் என்பதைக் கண்டுபிடிக்க நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ, ஒரு பாராளுமன்றச் சட்டத்தினிடமிருந்து தன் அதிகாரத்தைப் பெறுகிறதா என்று சோதித்துப் பார்க்கவேண்டும்.[1] மற்ற நாடுகளிலும் கிட்டத்தட்ட இதே மாதிரியான பட்டியல் ஒன்றைத் தயாரிக்கலாம். சில சமயங்களில் மன்னர் என்பதற்குப் பதிலாகத் தலைவர், இரண்டு சபைகளுக்குப் பதிலாக ஒரு சபை அல்லது மூன்று சபைகள் என்று கொள்ளவேண்டி இருக்கும். பல உதாரணங்களில் காலனிகளுக்கான சிவில் பணியாளர் இருப்பதில்லை. ஏனெனில், காலனி வைத்திருப்பது ஒரு சிலரே. ஏற்படுத்தப்பெற்ற திருச்சபையும் அநேகமாக இருப்பதில்லை. சில சமயங்களில் ஏதாவது ஓர் அமைப்பு இங்கிலாந்தில் இல்லாததாகவும் இருக்கக்கூடும்.[2] கூட்டாட்சி அரசில் இந்த அங்கங்களில் பல மத்தியிலும், தலத்திலும் ஆக இரட்டையாக இருக்கக்கூடும். எவ்வளவு அதிகமான வேலைகளை ஓர் அரசு மேற்கொள்கிறதோ, அவ்வளவு அதிகமான நிறுவனங்கள் தேவைப்படும்.

## பணித்துறைத் தொடர்பற்ற பதிலாண்மைகள்: (Unofficial Agencies)

அரசின் நிறுவனங்கள் மாத்திரமே ஓர் அரசாங்கத்தின் கருவிகளல்ல என்பதையும் நாம் நினைவிற் கொள்ளவேண்டும். வழக்கம், பரம்பரை, சமய உணர்ச்சி ஆகிய சக்திகளின்மீதும் அது சார்ந்திருக்கலாம். பத்திரிகை, பள்ளி, வானொலி ஆகியவற்றையும் அது உபயோகிக்கக்கூடும். விழாக்கள், அடையாளங்கள் முதலியவற்றால் அது மக்களின் கற்பனையைத் தூண்டலாம். மகத்தான தலைவர் அல்லது வெற்றி வீரர் ஒருவரின் செல்வாக்கில் அது புகலிடம் தேடிக்கொள்ளலாம். 'பொதுமக்கள் உள்ளத்தை எப்படிக் கவருவது என்பதை நான் சொல்லக்கூடும்' என்று ஹிட்லர் (Hitler),

[1] இப்படிப்பட்ட நிறுவனங்களின் முழுப் பட்டியலையும் பார்க்க விரும்புபவர்கள் 'விட்டேகர் அல்மனக்கில்' (Whitaker's Almanack) காணலாம்.

[2] பிரான்சிலுள்ள Conseil D'Etat (Council of State), அமெரிக்காவிலுள்ள சுப்ரீம் கோர்ட்டு போன்றவை.

ஹிண்டன்பர்க் (Hindenburg) கிடம் கூறியதாகச் சொல்லப்படுகிறது. 'பொது உடன்பாடு பெறுவதற்காகத் தூண்டல்களைச் சூழ்ச்சித் திறத்துடன் கையாள்வது' என்று எளிமையாக மோஷர் (Mosher) இதை அழைக்கிறார். அரசியல் சார்பற்ற நிறுவனங்கள் இருப்பதையும் நாம் ஒதுக்கிவிடமுடியாது. அதாவது, இவை பாராளுமன்றச் செயலால் ஏற்பட்டனவல்ல. ஆனால், அரசாங்கங்கள் இவற்றின்மீது சார்ந்திருக்கக்கூடும். சில சமயங்களில் இவை சொந்த அதிகாரத்தை வளர்த்துக் கொள்ளக்கூடும். இதை அரசாங்கத்துக்கு விரோதமாகவும் பயன்படுத்துவது உண்டு. நிலைநாட்டப் பெறாத திருச்சபைகள், தொழிற் சங்கங்கள், கட்சிகள், பொறுப்புக் குழு, பொருளாதாரச் சங்கங்கள் முதலியன வலிமையற்ற அரசாங்கத்திற்கு மிகவும் அபாயகரமான நண்பர்கள் ஆகும். ஏனெனில், அவைகள் பயங்கரமான எதிரிகளாக மாறும் தன்மையும் பெற்றவைகளாகும். மெரியம் (Merriam) சொல்வதுபோல, 'தங்கமும், அரசாங்கத்திற்கு எந்தவிதத்திலும் குறைவில்லாத சமூகக் கட்டுப்பாடு செய்யும் பதிலாண்மையாகும்.' கட்சியுங்கூடக் கடிவாளத்தை ஏற்றுக்கொண்டு அரசாங்கத்தைவிட அதிக வன்மை பெற்றதாக ஆகிவிட முடியும். அரசாங்கம் சமுதாயத்தின் பிரதிநிதியாக இருந்தால் இச் சமூகக் கழகங்களின் பொதுப்போக்கின்படியே அதுவும் நடந்துகொள்ளும். 'அரசாங்கத்தின் செயல்முறையானது சமூகத் தொகுதிகளின் செயல்முறையைப் போலவே அமையவில்லையானல் அரசியற் செயலாற்றல் என்பது நடவாத காரியமாகும்' என்று மெரியம் (Merriam) மேலும் கூறுகிறார். அரசாங்கத்தைப் போலவே இந்த நிறுவனங்களும் சமுதாயத்தின் நோக்கத்தையும், கொள்கையையும் தெரிவிக்கின்றன. அதன் அங்கத்தினரின் வாழ்க்கையையும் நடத்திவைக்கிறது. பொது அல்லது அரசியல் அரசாங்கத்திற்குப் பக்கத்தில் இவை தனியார் அல்லது சமூக அரசாங்கம் ஒன்றை அமைக்கும் போக்குடையவை. சட்டமன்றம் அல்லது ஆட்சித்துறை ஆகியவற்றின் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவரப்படமுடியாத பல தனிப்பட்ட அல்லது நபரின் சொந்தச் சிக்கல்களை இவ் வமைப்புக்கள் கவனித்துக்கொள்கின்றன.

## நிறுவனங்கள், நல்லனவும், தீயனவும்

கெட்ட நிறுவனங்களிலிருந்து நல்ல நிறுவனங்களை வேறு காண்பதெப்படி? முதலாவதாக, அவைகளுக்குள்ளே சில நல்லனவாகவும், சில தீய தன்மையுடையனவாயு மிருக்கின்றன என்று சொல்லலாம். நோக்கங்களில் நல்லது, கெட்டது என்று இரண்டிலுஞ் சேராமல் இருக்கும் கருவிகளான நிறுவனங்கள் பல உள்ளன. போலீஸ், விசாரணைக் குழு, ஆட்சித்துறைப் பணிகள் முதலியன

நல்லதற்கும் பயன்படுத்தலாம்; தீயதறகும் உபயோகிக்கலாம். இது அதை உபயோகிப்பதன் நோக்கத்தைப் பொறுத்தது. முதலாவதாக, இது பொதுவான உண்மையென்றாலும், ஒரு நோக்கத்தோடுள்ள நிறுவனம் தனக்குள்ளே தீயதாயிருக்குமானால், நல்ல நிறுவனமாக முடியாது. கெஸ்டாபோ (Gestapo) அல்லது இடைக் காலத்திலிருந்த கடுமையான விசாரணை மன்றம் முதலியன 'நல்ல' நிறுவனங்கள் என்று சொல்லமுடியாது. இரண்டாவதாக, ஒரு நிறுவனத்தின் தன்மையில் தீய எண்ணம் இல்லாதிருந்தாலும், அதன் நோக்கங்கள் கோணலாக்கப்பட்டும், சிதைக்கப்பட்டும் போகுமானால் நிறுவனம் கெட்டதாக ஆகிவிடும். 'ஸ்டார் சேம்பர்' (Star Chamber) ஆரம்ப காலத்தில் 'சாதாரண நீதி மன்றங்கள்' தொட அஞ்சும் 'பெரிய மனிதர்' களிடத்திலிருந்து சாதாரண மக்கள்வரை பயனுள்ள பாதுகாப்பளிப்பதாக இருந்ததுமாறிச் சாதாரண ஏழை மக்களுக்கு விரோதமான கொடுங்கோன்மையின் பொறியாக மாறியது. மூன்றாவதாக, சரியான முடிவுகளைப் பெறுவதற்கெனினும் தவறான முறைகளைக் கையாளும் நிறுவனங்கள் தீயவையே. 'சித்திரவதை' முறை எவ்வளவு மோசமான குற்றவாளிகள்மீது உபயோகப்படுத்தப்பட்டாலும் எந்தப் போலீஸ் அமைப்பையும் அவமானத்திற்குள்ளாக்கத்தான் செய்யும்.

எனினும், ஒரு நிறுவனத்தின் தன்மை, எந்த நோக்கத்திற்காக ஏற்பட்டதோ அதை நிறைவேற்றும் திறனைப் பொறுத்திருக்கிறது. அது சுமுகமாகவும், விரைவாகவும், விரயமில்லாமலும் பணியாற்றுகிறதா? செய்த முயற்சிக்கும் அடைந்த பலனுக்கும் ஏதாவது தராதரமான தொடர்புண்டா? குறிப்பிட்ட சமுதாயம் இறுதியாகப் பின்பற்றும் நோக்கத்திற்கு இது வளைந்து கொடுத்துப் பயன் தருகிறதா? என்பனவற்றைப் பொறுத்திருக்கின்றது. இன்னொரு சோதனை அதன் நெகிழ்ச்சியைப்பற்றியது. மாறும் சூழ்நிலைகளுக்கேற்ப விரைவாகத் தன்னைப் பொருத்தமாக்கிக்கொள்ளும் திறமை நிறுவனத்திற்கு இருக்கவேண்டும். சூழ்நிலைகளுக்கேற்ப மாற்றியமைத்துக்கொள்வதோடு, நிலையானதாகவும் அது இருக்கவேண்டும்.

இந்த இரண்டு சோதனைகளிலும் வெகு சில நிறுவனங்களே வெற்றிபெற முடியும். அடிக்கடி அவை சூழ்நிலைக்கேற்ப மாற்றியமைத்துககொள்ளும் தன்மையை நிலையான தன்மைக்காகக் கைவிட்டுவிடுகின்றன. 'தடைகளாலும் சம நிலைகளாலும் அவை மிகவும் பாதுகாக்கப்பட்டிருப்பதால் சூழ்நிலைக்கேற்பத் தங்களைச் சரிசெய்து கொள்வது மிகவும் கடினமாகிறது. புதிய சமூக சக்திகள், புதிய போக்குகள், மனவெழுச்சிகள் அல்லது கருத்துக்கள் முதலியவற்றின் அழுத்தத்தைத் தாங்கும் சக்தி இவற்றிற்கில்லை,

ஏனெனில், ஆரம்பத்தில் இவைகளை எந்த நிறுவனமும் தாங்கிக் கொள்ளும்படி வகை செய்யவில்லை.' மேலும் டாயின்பீ (Toynbee) கூறுகிறார்: 'மூன்றில் ஒரு காரியம் நடக்கிறது. ஒன்று புதிய நிறுவனங்கள் மூலமாக அவை செயல்படுகின்றன அல்லது பழையன வற்றைச் சூழ்நிலைகளுக்கேற்ப மாற்றி அவை உபயோகிக்கின்றன. அல்லது இருக்கும் நிறுவனங்களுக்குள் அவைகள் கருத்தின்றிப் புகுந்துகொண்டுவிடுகின்றன. அதனால், அந்த நிறுவனங்கள் சிதைந்துவிடுகின்றன. அல்லது நிறுவனங்கள் ஆயத்தமாக இல்லை யென்றாலும் எப்படியாவது அவற்றைப் புதிய பாதையில் செயலாற்ற வைக்கின்றன இச் சக்திகள். அல்லது முடிவாக, ஒரு பழைய நிறுவனத்தை, புதிய சக்திகளோடு இணைக்கும் முறை, சமூகமாகத் தேக்கக்கூடியதாக இராமல் உடைக்கக்கூடியதாக இருக்கும். பிழைக் காகச் சமுதாயம் மாறாத காலவழுப்போன்ற சமூகப் பெருங்குற்றங் களுக்கு ஆளாகித் தண்டனை பெறுகிறது.' இன்னும் நான்காவது வழியாகிய புரட்சியும் இருக்கிறது.

## மாற்றத்தின் காரணங்கள்

அரசாங்க முறைகளின் மாறுதலுக்குச் சமூக சக்திகளின் அழுத்தம் மாத்திரம் காரணமாகாது. பழைய முறையானது தேசீயத் தோல்வியோடும், அவமானத்திற்கும் காரணமாக இருந்த தால், அதற்குப் பதிலாகப் புதிய அரசாங்கம் அமைக்கப்படலாம். இரண்டு நெப்போலியன்களின் வீழ்ச்சியும் இதற்கொரு எடுத்துக் காட்டு. அது போலவே, ரோமனவ் (Romanov), ஹோகன் சாலர்ன்ஸ் (Hohenzollerns), சவாய் (House of Savoy) ஆகிய வமிசங்களின் ஆட்சி வீழ்ச்சியுற்றதும் இக் காரணத்தாலேதான். சில சமயங்களில் ஓர் அரசாங்க முறையானது திறமையான ஆட்சி முறை அல்லது ஒரு சூழ்நிலையின் தேவைகளைப் புரிந்துகொள்ளாமல் தன் பணியைச் சரிவரச் செயலாற்ற முடியாது போவதாலும் மாற்றப் படுவதுண்டு. ஸ்டூவர்ட்டுகள் (stuarts) பிரிட்டனிலிருந்து இறுதி யாக விரட்டப்பட்டதற்குக் காரணம், இரண்டாம் ஜேம்ஸ் மன்னன் ரோமன் கத்தோலிக்கச் சமயத்தைப்பற்றி மக்களின் மனப்போக்கைப் புரிந்துகொள்ளாததுதான். அல்லது ஒரு குறிப்பிட்ட அரசன் மக்க ளால் மிகவும் வெறுக்கப்பட்டுப் போவதால், அவனும் அவன் வமிச மும் ஆட்சியைவிட்டே போகவேண்டி நேரலாம். ஆனால், நிலவும் முறையானது சீரமைப்பை வேண்டி நிற்கும் புதிய சூழ்நிலைகளுக் கேற்பத் தம்மை மாற்றிக்கொள்ளாமல் அல்லது மாற்றிக்கொள்ளக் கூடாமல் இருப்பதுதான் மாற்றத்திற்கு முக்கிய காரணமாகிறது. இப்படிப்பட்ட புமையான சூழ்நிலைகள் அரசில் புதிய கூறுகள்

தோன்றுவதில் முடிகின்றன. அவர்களுக்குக் கிடைத்திருக்கும் புதிய அதிகாரத்தின்படி அரசாங்கத்தில் தங்களுக்குப் பங்கு கேட்கின்றன.

## (v) அரசியலமைப்பு மாற்றத்தின் காரணக் கூறுகள்

பொருளாதார மாற்றங்களின் காரணமாக அரசியல் மாற்றம் ஏற்படுவதாகத் தோன்றுகிறது. அதாவது, மக்களின் ஒரு புதிய வர்க்கத்தாரிடம் பொருளாதார அதிகாரம் மாறுவது அல்லது புதியதொரு வர்க்கம் தோன்றுவது ஆகியவை அரசியல் அதிகாரம், உறைவிடத்தில் தவிர்க்கமுடியாத மாற்றத்தை ஏற்படுத்துகிறது. புதிய பொருளாதாரப் படிமுறைகள், புதிய செய்முறைகள், புதிய செல்வ ஆதாரங்கள், புதிய சாத்தியங்கள் ஆகியவற்றிலிருந்து பொதுவாக இந்தப் பொருளாதார மாற்றங்கள் தோன்றுகின்றன. பொருளாதார அமைப்பின் மாற்றத்தைப் புதிய அரசியல் ஆட்சி பிரதிபலிக்கிறது.

### புதிய முறைகள்

மற்றெல்லா அமைப்புக்களின் கடந்த காலத் தோல்வியும், வேறு மாற்றுகள் இல்லாமையும் புதிய அமைப்பின் முறையை நிர்ணயிக்கின்றன. ஒரு குறிப்பிட்ட அரச வமிசத்திடம் கொண்ட அதிருப்தி, வேறு வமிசம் மாற்றுக்கு இல்லாமற் போகும்போது குடியரசு உண்டாவதற்கு வழியாகிறது. இல்லாவிட்டால் சிங்காதன உரிமை கொண்டாடும் வேறொருவனை வைத்து ஒரு பரிசோதனை செய்யக் கூடும். பாராளுமன்றத்திலும், பொதுமக்கள் அபிப்பிராயத்திலும் மன்னராட்சிக்கு ஆதரவாகப் பெரும்பான்மைக் கருத்திருந்தும், 1870-ல் ஃபிரான்சு ஒரு குடியரசாகியது. ஏனெனில், மூன்று வமிசங்களாகிய போர்போன், ஆர்லியான்ஸ், போனபார்ட்டே (Bourbon, Orleans, Bonaparte) ஆகியவைகளைப் பதவியிலிருத்திப் பார்த்து அவை குறைவுள்ளவை என்று கண்டுபிடிக்கப்பட்டது. அதற்கு மாறாக இங்கிலாந்தில் 1688-லும், 1714-லும் பணியை மேற்கொள்வதற்கு விருப்பமும், திறமையும் உள்ள அரச குடும்பங்கள் கிடைத்தன. தகுதிவாய்ந்த அரசன் கிடைக்காததால் பல நாடுகள் குடியரசுகளாக இருக்கின்றன.[1]

உலக அபிப்பிராயத்தின் செல்வாக்கையும் நாம் கணக்கில் கொள்ளவேண்டும். சில குறிப்பிட்ட காலங்களில் சில அரசாங்க

[1] அமெரிக்க ஐக்கிய நாடுகள்கூட இப்படித்தான். ஏனெனில், வாஷிங்டனை (Washington) அரசனாக ஆக்க அவர்கள் விரும்பினார்கள்.

முறைகள் பெரிதும் ' வழக்கிலிருக்கின்றன.' 19 ஆம் நூற்றுண்டின் முற்பகுதியில் இங்கிலாந்தின் அமைப்பைப்போன்று அரசியலமைப்புக் குட்பட்ட முடியாட்சியை அமைக்கப் பெரிதும் ஆர்வமிருந்தது. பெல்ஜியம், ஸ்காண்டிநேவியா ஆகிய நாடுகளிலும் இத்தாலியிலுங் கூட இம்முறை வெற்றி பெற்றது. ஆனால், ஃபிரான்சு, ஸ்பெயின், போர்ச்சுகல் ஆகிய நாடுகளில் இது தோல்வியுற்றது. ஃபிரான்சின் மூன்றுவது குடியரசால் ஊக்குவிக்கப்பட்டும், முதல் உலக யுத்தத்தைப் பின்பற்றி, மன்னராட்சி நாடுகளான ஜெர்மனி, ஆஸ்திரியா, ருஷ்யா, ஸ்பெயின் முதலியன அவமானமுற்றதன் விளைவாகவும், குடியரசுமுறை வழக்கிற்கு வந்தது. முடிவாகப் பாசிச அல்லது கம்யூனிசப் பாணியில் எதேச்சாதிகார அரசுகள் வழக்கிற்கு வந்தன. நாளைக்கு எதுவோ ?

## மாற்ற முறைகள்

மாற்றம் எவ்வாறு நேர்கிறது என்ற கேள்வியைப் பார்ப்போம். சட்டரீதியான மாற்றமாக அது இருக்கலாம்; அல்லது புரட்சிகர மானதாக இருக்கலாம். மாற்றமேற்படும் வழிகள் சட்டத்தால் ஒப்புக் கொள்ளப்படுமானல் அவை சட்டரீதியானவை. அதாவது, மாற்றத் தின் சாத்தியத்தையும், தேவையையும் சட்டம் உணர்ந்திருந்து, ' அரசியல் அமைப்புத் திருத்த முறைகள் ' என்று வழக்கறிஞர் குறிக்கும் சில வழிகளை இதற்காக வகுத்துத் தந்திருக்கவேண்டும். ஆனால், அடிக்கடி சட்டத்தைத் துச்சமாக மதித்தோ அல்லது மீறியோ நடக்கும் செயலால்தான் மாற்றம் ஏற்படுகிறது. இது ' புரட்சி ' யாகும். புரட்சி பலாத்காரமாகத்தான் இருக்கவேண்டும் என்ற தேவையில்லை. பிரிட்டனிலிருந்து ஸ்டூவர்ட்டுகளை விரட்டியமை, ஃபிரான்சிலிருந்து இரண்டு நெப்போலியன்கள், போர்போன்கள், விச்சி ஆட்சியாளர்கள் ஆகியோரை விரட்டியமை ஆகிய எல்லாமே இரத்தம் சிந்தாதவை ; அல்லது கிட்டத்தட்ட அப்படித்தான். முதல் உலக யுத்தத்திற்குப் பிறகு ஜெர்மனியிலும், ஆஸ்திரியாவிலும் மன்னராட்சி முறையை மாற்றிக் குடியரசாக்கியதும் இரத்தமின்றியே தான். அப்படியேதான் இரண்டாம் உலக யுத்தத்திற்குப் பிறகு, யூகோஸ்லேவியாவிலும், இத்தாலியிலும் ,ருமேனியாவிலும், பல்கேரி யாவிலும் நடந்தது. இதற்கு மாறுக, வெவ்வேறு வழிகளில் பலாத் காரத்தோடு சேர்ந்து மாற்றம் ஏற்பட்டதற்கு ஃபிரான்ஸ், அமெரிக்க ஐக்கிய நாடுகள், ருஷ்யா போன்றவை உதாரணங்கள் ஆகும். இங்கெல்லாம் அவை வெளிநாட்டோடு நடத்திய யுத்தமாகவோ, அல்லது உள்நாட்டுக் குழப்பமாகவோ அல்லது இரண்டுஞ் சேர்ந்தோ நேர்ந்தன.

## புரட்சி

இன்று நிலவும் அரசியல் அமைப்புக்களில் கிட்டத்தட்ட ஒவ்வொன்றும் புரட்சியான செயலைத்தான் தோற்றுவாயாகக் கொண்டிருந்தது என்ற அம்சம் மிகவும் ஆச்சரியமும், கவர்ச்சியானதுமான ஒரு செய்தியாகும். அதாவது சட்டப்படியான தொடர்ச்சியை மீறிய செயலால் ஏற்பட்டது. ஐரோப்பிய அரசாங்கங்களிலேயே இதற்கு விதிவிலக்கு சுவிட்சர்லாந்து ஆட்சியும், டென்மார்க்கு ஆட்சியுமே. மூன்றரை நூற்றாண்டுகளுக்கு முன்பு நடந்த வெற்றிகரமான சுதந்தரப் போரின் காரணத்தால் ஏற்பட்டது தான் டச்சு அரசக் குடும்ப ஆட்சி. 1688-ல் நடந்த புரட்சியால் இங்கிலாந்திலும், 1830-ல் நடந்த புரட்சியால் பெல்ஜியத்திலும், 1810-ல் மார்ஷல் பெர்னடட் (Marshall Bernadotte) என்ற ஃபிரஞ்சுக்காரரைத் தேர்ந்தெடுத்ததால் சுவீடனிலும், 1905-ல் சுவீடனிலிருந்து பிரிந்ததால் நார்வேயிலும், இவ்வாறே ஏற்பட்டன. மத்திய ஐரோப்பிய அரசுகளிலும், கிழக்கு ஐரோப்பிய அரசுகளிலும், போர்ச்சுகல், ஸ்பெயின், ஃபிரான்சு ஆகிய நாடுகளிலும் உள்ள ஆட்சி சமீப காலத்தில் நடைபெற்ற புரட்சியினால் ஏற்பட்டவை என்பது நமக்கு நன்றாக நினைவிருக்கிறது. இதில் மிகப் பழையது 30 ஆண்டுகளுக்கு முன்பு தோன்றிய ருஷ்ய ஆட்சிதான். ஐரோப்பாவுக்கு வெளியேயும் இதே கதைதான். 1776-ல் நடந்த புரட்சிக்குப் பிறகு அமெரிக்க ஐக்கிய நாடுகள் ஏற்படுத்தப்பெற்றன. ஸ்பானியரின் ஆட்சியைப் புரட்சிகரமாகத் தூக்கி யெறிந்ததன் விளைவாகத் தென் அமெரிக்கக் குடியரசுகள் தோன்றின. 1912-ல் நடந்த சீனப் புரட்சிவரை இம்மாதிரியே நடந்து வந்தது.[1]

## மாற்றுவதற்கு மக்களின் உரிமை

அரசியலமைப்புச் சட்டங்கள் மாற்றம் ஏற்படுவதற்குச் சட்டப்படி வழி ஏற்படுத்திக் கொடுக்கவில்லையென்றால் மக்கள் அரசியல் அமைப்பை மீறி ஆட்சியாளர்களை மாற்றும் உரிமையையே மேற்கொள்கிறார்கள். இந்த உரிமையை ஆதாரமாகக் கொண்டே இன்றுள்ள பெரும்பான்மையான அரசாங்கங்களின் அதிகார உரிமை அமைந்திருக்கின்றது. இந்த உரிமை மறுக்கப்பட்டிருந்தால், ஸ்டூவர்ட்டுகளின் சந்ததியார் இங்கிலாந்தை இப்பொழுது ஆட்சி

[1] புதியனவாகத் தோன்றியிருக்கும் சுதந்தர அரசாங்கங்களான பர்மா, இந்தியா, பாகிஸ்தான் முதலியன சட்டப்படியும், அமைதியான முறையிலும் ஏற்பட்டன. ஆனால், இந்தோனேஷியாவும் பொதுவுடைமைச் சீனாவும் புரட்சியைத் தோற்றுவாயாகக் கொண்டவை.

செய்ய வேண்டும் ;[1] போர்போன் சந்ததியின் தோன்றலாகிய காம்டி டி பாரிஸ் (Comte de Paris) ஃபிரான்சின் அரசனாக இருக்க வேண்டும் ; ஹோஹன்சாலர்ன்ஸ், ரோமனுவ், ஹாப்ஸ்பர்க் முதலிய வமிசங்கள் இன்னும் தங்கள் தங்கள் பதவிகளிலிருந்திருக்க வேண்டும் ; அமெரிக்க ஐக்கிய நாடுகள் இன்னும் பிரிட்டனின் காலனியாக இருந்திருக்கவேண்டும் ; ஸ்பானிஷ் அரசன் மாட்ரிட் (Madrid)டில் மாத்திரமல்லாமல், அன்ட்வெர்ப்பிலும் (Antwerp) தி ஹேக் (The Hague) கிலும், தென் அமெரிக்காவிலும் ஆட்சி செலுத்திவரவேண்டும். உலகம் பல நூற்றுண்டுகளுக்குப் பின்னுல் போகவேண்டியிருக்கும். புரட்சி உரிமைகளை ஒப்புக்கொள்ளா விட்டால் வரலாறு ஒரே குழப்பமாகிவிடுகிறது. அநேகமாக நேற்றைய புரட்சிக்காரனின் வழித்தோன்றல்தான் இன்றைய பழைமை விரும்பி ஆவான்.

## அரசாங்கம் சட்டப்படி ஆனதுதானு ?

புரட்சியால் ஏற்பட்ட ஆட்சி அரசியலமைப்புக்குட்பட்டிருக்க முடியுமா என்பது கேள்வியன்று. எப்பொழுது அது அப்படி ஆகிறது என்பதே கேள்வி. ஓர் அரசாங்கத்தின் தோற்றுவாய் சட்டப்படி இல்லாதிருக்கும்போது அந்த அமைப்பைச் சட்டரீதியாக்குவது எது ? அரசாங்கத்தின் தோற்றுவாய் எப்படி இருந்தாலும், சில நிபந்தனை களை அது பூர்த்திசெய்வதில் சட்டப்படி ஆகிறது என்பதே இதற்குரிய பதிலாகத் தோன்றுகிறது.[2]

முதலாவதாக, அது சில காலமாவது நீடித்திருக்க வேண்டும். எவ்வளவு காலத்திற்கு ? இதற்கு ஒரே பதில் கிடையாது. பெரும் பான்மையான மக்கள் இதை ஒப்புக்கொள்ளும் அளவுக்கும், புதிதான புரட்சி ஒன்றினுல் தானே புரட்டப்பட்டுப் போகக்கூடுமோ என்ற அச்சம் இல்லாதுபோகும் அளவுக்கும், அரசாங்கங்கள் தங்கள் அதிகாரப் பிடிப்பு நிலையானதாக இல்லை என்று உணரும்போது உபயோகிக்கும் தடைகள் இல்லாமல் ஆட்சி நடத்தும் அளவுக்கும் நீண்டதான காலம் வேண்டும். ‘மன்னராட்சியாக இருக்கட்டும், அல்லது குடியரசாக இருக்கட்டும், பரம்பரையாக அல்லது தேர்தலின் மூலம் வருவதாக இருக்கட்டும், உயர்குடிப்பிறந்தோர் ஆட்சி யாகவோ அல்லது மக்களாட்சியாகவோ இருக்கட்டும், பல வருடங் களில் அதன் முறையும், இருப்பும், செயல்முறையும், வலிமை

[1] ஏன் 1688 ஆம் ஆண்டோடு நிற்கவேண்டும் ? ஏன் 1485-1399-1066-55க் குப் போகக்கூடாது ?

[2] பின்வரும் வாதம் பெர்ரரோ (Ferrero)வின் Principles of Power) என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்டிருக்கிறது.

பெற்றவையாகவும், ஒப்புக்கொள்ளப்பட்டனவாகவும் ஓர் அரசாங்கம் ஆகும்போது அது சட்டப்படியான அரசாங்கமாகிறது. இப்படிப் பல நூற்றாண்டுக்காலம் இருக்கவேண்டும் என்றுகூடச் சொல்வேன். எப்படிப் பழைமையான உடைமை தனியாளின் சொத்தாக இருக்கிறதோ, அப்படியே பழைமையிலிருந்த அதிகாரத்திலிருந்து தான் இறைமை அதிகாரம் சட்டப்படியாகும்' என்று டாலிராண்டு (Talleyrand) கூறுகிறார். அடுத்து, அந்தக் காலத்திற்குள் அரசாங்க மானது தேசிய வரலாறு, தன்மை ஆகியவற்றின் போக்குகளுக் கேற்பத் தன்னைப் பொருத்தமாக்கிக் கொள்ளவேண்டும். ஃபிரான்சில் விச்சி ஆட்சியும் (Vichy regime), ஸ்பெயினில் பிராங்கோ (Franco) ஆட்சியும், அல்லது பாசிச, நாஜி ஆட்சிகளும் இந்தப் பொருளில் சட்டப்படியான தன்மை பெறவில்லை என்று சொல்லக்கூடும். முப்பது ஆண்டுகளுக்குமேல் ஆட்சியிலிருந்தும் சோவியத் முறைக்குச் சட்டப் படியான தன்மை இல்லையென்று இவர்கள் மறுக்கக்கூடும். ஆனால், முப்பதாண்டுகள் என்பது ஒரு சந்ததிக் காலம். ஆகவே, அதற் குள்ளாக அந்தமுறை சட்டப்படியான ஒன்றாக ஆகியிருக்க வேண்டும்.

ஆகவே, மக்கள் பயனுள்ளன என்று கருதும் சில கொள்கைகளை அரசாங்கம் பிரயோகிக்கிறது என்பதை ஆளப்படுவோர் உணர்ந்து கொள்வது அரசாங்கத்தைச் சட்டப்படியாக்குவதன் நிபந்தனை யாகிறது. அரசாங்கம் அந்தக் கொள்கைகளைப் பகுத்தறிவுக்கு ஒத்த முறையிலும் நேர்மையான வழியிலும் பிரயோகிக்க வேண்டும்.

## அரசாங்கம், ஒப்புதலை ஆதாரமாகக் கொண்டது

மேலே குறிப்பிட்ட இரண்டு கொள்கைகளும் ஒரே கொள்கையாக முடிவில் மாறுகின்றன. ஆளப்படுவோர் சுயேச்சையாக ஓர் அரசாங் கத்தை ஒப்புக்கொள்வதே அரசாங்கத்தைச் சட்டப்படியாக்குவதாகும். வரலாறு வேறு எந்த அடிப்படையையும் காட்டவில்லை. 'சுயேச்சை யான' ஒப்புக்கொள்ளுதல் ஊக்கமற்றதாக இருக்கலாம். ஆனால், நீண்ட காலப்போக்கில் எந்த அரசாங்கமும் அதன் முறைகள் எவ்வளவுதான் கடுமையானவையாக இருந்தாலும், பெரும்பான்மை யான குடிமக்களின் எதிர்மறையான ஒப்புதலாவது பெறாமல் பதவியி லிருக்க முடியும் என்று ஒப்புக்கொள்வது கடினமானது. அல்லது அதற்கு மாறாக, அரசியலமைப்பு முறைகளுக்குட்பட்டவையெல்லாம் குடியாட்சியையும், விடுதலையையும் உத்தரவாதமாக்கும் என்று சொல்வதற்கில்லை; பொதுமக்கள் அரசியல் அமைப்பு உத்தரவாதங் கள் நிச்சயமாகப் பயன்தரவேண்டும் என்ற உறுதியோடு இருக்கும் போதுதான் அவை உத்தரவாதமாகின்றன.

இங்கு எழுப்பப்பட்ட பல கேள்விகள் பின்னர் விரிவாக விவாதிக்கப்பெறும். குடியரசு, மன்னராட்சி ஆகிய முறைகளின் நன்மை தீமைகள் குடியாட்சியின் நிறுவனங்களைப்பற்றி நாம் விவாதிக்கும்போது ஆய்வு செய்யப்படும். ஒப்புதல் பிரச்சினைக்கு இன்னும் முழுவதான ஆய்வு தேவை. அரசாங்கத்தின் அவசியப் பணிகளைப்பற்றி நாம் ஒன்றுமே சொல்லவில்லை. இரண்டு உபயோக முள்ள காரியங்களை நினைவுபடுத்தி இதை முடிக்கலாம். முதலாவது, அமெரிக்கச் சட்டவல்லுநர், ஃபிராங்க்பர்ட்டர் (Frankfurter) கூறியது. 'அரசாங்கம் என்பது இலகுவானதன்று. அது மிகவும் கடினமான காரியம். அது ஒரு கலையாகும். அதிலும் மிகவும் நுண்ணியதொரு கலையாகும். அது வியாபாரம் போன்றதன்று. பொறிநுணுக்கமும் அன்று. விஞ்ஞானப் பிரயோகமும் அன்று. ஆனால், மனிதர்களை அமைதியோடும், நியாயமான மகிழ்ச்சியோடும் கூட்டமாக வாழ வைக்கும் கலையாகும்.' மற்றையது குடியரசுத் தலைவர் வில்சன் (Wilson) கூறியதாகும். 'அரசாங்கம் என்பது ஒரு பொறியன்று. பொறி இயக்க அடிப்படையில் அதை நடத்தமுடியாது. அது உயிருள்ள பொருள். அகண்டத்தின் கொள்கைக்குக்கீழ் அதைக் கொண்டுவரமுடியாது. ஆனால், அங்கரீதியான உயிர்ப்பொருளின் கொள்கைக்குக் கீழ்க் கொண்டுவரவேண்டும். டார்வினின் (Darwin) கொள்கைக்கு அது கட்டுப்பட்டதேயொழிய நியூட்டனின் (Newton) கொள்கைக் கன்று.' .

# 7. சுதந்தரமும் உரிமைகளும்

## (i) சுதந்தரப் பிரச்சினை

அரசியல் அமைப்பு அதன் வரலாறு, தோற்றுவாய், அதன் அமைப்புக் கூறுகள், அதன் செயலாக்கத்தின் ஆதாரம் ஆகியவை எவ்வாறுயிருப்பினும் அதன் முக்கிய இயல்புகளை நாம் பார்த்து முடித்துவிட்டோம். ஆனால், அரசுகள் அனைத்தும் ஒரே மாதிரியா யில்லை. அவைகள் பல வழிகளிலும் வேறுபடுகின்றன. குடியரசு களும், மன்னராட்சிகளும் இருக்கின்றன. ஒரு சபை அல்லது இரண்டு சபைகள் கொண்ட பாராளுமன்றங்கள்; மத்தியமயமாக்கப் பட்டதும், பரவலாக்கப்பட்டதுமான ஆட்சி முறைகள் ஆகியவைகளும் இருக்கின்றன. முறைகளிலும் வேறுபாடுகளிருக்கின்றன. மேலும் அரசு மேற்கொள்ளும் அல்லது கட்டுப்படுத்தும் செயல்களின் எண்ணிக்கையிலும், வகையிலும் பெருத்த வேறுபாடுகளும் இருக் கின்றன. சுரங்கங்கள், போக்குவரத்துச் சாதனங்கள், தொழில்கள் ஆகியவற்றை அது தேசீயமயமாக்குமா? அது பத்திரிகையைத் தணிக்கை செய்யுமா? திருச்சபைகள், தொழிற்சங்கங்கள், அரசியற் கட்சிகள், பிரச்சார நிலையங்கள் ஆகிய அந் நாட்டின் எல்லைக் குள்ளிருக்கும் நிலையங்கள் செயற்படுவதைக் கட்டுப்படுத்துமா அல்லது தடை செய்யுமா? அது கல்வியின் எல்லா முறைகளையும் கட்டுப்பாடு செய்யுமா? அது எவ்வளவு வரி விதிக்கும்? எவ்வாறு விதிக்கும்? நாடகசாலைகள், ஆஸ்பத்திரிகள், ஆய்வுக்கூடங்கள் முதலியவற்றை அது நிறுவுமா, நிறுவாதா? இப்படிப்பட்ட கேள்விப் பட்டியல் முடிவின்றி நீண்டுகொண்டே போகலாம்.

### அரசியலின் கேந்திரமான பிரச்சினை சுதந்தரம்

இக் கேள்விகளை நாம் கூர்ந்து நோக்கினால், இக் கேள்வி களெல்லாம், முறை அல்லது செயல் ஆகிய எதைப்பற்றி இருப்பினும் அடிப்படையில் ஒரே பிரச்சினையின் அம்சங்கள் என்பதை அறியலாம்.

ஒருவேளை பல்வேறு வழிகளில் இதைச் சொல்லக்கூடுமானாலும் இது உண்மையில் ஒன்றே ஒன்றுதான். சமுதாயத்தின் பெயரால் எந்த அளவுவரை பொதுவாழ்க்கை அரசின் மூலமாகவும், அரசினாலும் ஒழுங்குறுத்தப் பெறலாம்? தனி நபர்களிடம் அவர்கள் பிரியப்படி, அவர்கள் சொந்த முயற்சியைக் கொண்டோ அல்லது சுயமாகச் சேரும் தொகுதிகளின் கூட்டு முயற்சியாலோ, எந்த அளவுவரை அவர்கள் வாழ்க்கையை அமைத்துக்கொள்ள விடலாம்? அதாவது, மனிதனின் வாழ்க்கையிலும், நடவடிக்கைகளிலும் எந்த அளவு சட்டப்படிக் கட்டுப்பாடும், ஒழுங்குபடுத்தலும் இருக்கலாம்; எந்த அளவு சட்டப்படி அவனது சொந்தத் துவக்க உரிமைக்கு விட்டு விடலாம்?

அரசாங்கத்தின் அதிகார விருப்பு, ஆளப்படுவோரின் எதிர்ப்பு ஆகிய இரு முரண்பாடான சக்திகளுக்கிடையேயுள்ள இடையறாத இழுப்பாற்றலே அரசியல் வாழ்க்கையாகும். அரசாங்கத்தின் அதிகார விருப்புப்பற்றி முன்னர் அரசின் அதிகாரத்தைப்பற்றி விவாதிக்கும்போது எழுதியிருக்கிறோம். அரசாங்கங்கள் எப்போதும் மேலும் மேலும் அதிகாரம் தேடுகின்றன என்று நாம் பார்த்தோம். ஒன்று, பலரும் அதிகாரத்தைப் பிரயோகிக்க உள்ளூர விரும்புகிறார்கள். வழக்கமாக அப்படிப்பட்டவர்கள்தான் ஆளும் பணியில் அக்கறை கொண்டிருப்பார்கள். மற்றொன்று, அதிகாரம் அதிகமிருந்தால் ஆட்சிமுறைப் பணி அதிக இலகுவாகிறது. ஆட்சிப் பொறுப்புடையவர்கள் தடைகளால் இடையூறு செய்யப்படுவதை வெறுக்கிறார்கள். என்ன செய்யலாம், என்ன செய்யக்கூடாது என்று சொல்லப்படுவதையும், தங்கள் ஆட்சியைப்பற்றிக் கணக்குத்தர வேண்டுவதையும் அவர்கள் வெறுக்கிறார்கள். அரசாங்கங்கள் வழக்கமாகப் பரந்த அதிகாரத்தை வேண்டுகின்றன. இவைகளின்மீது ஏதாவது தடை விதிக்கப்பட்டால் அதைத் தயக்கத்தோடுதான் ஏற்றுக்கொள்கின்றன. ஒரு தடை துல்லியமான அரசியலமைப்புச் சட்டப்படியான தடை. மற்றொன்று, அவ்வளவு துல்லியமாக இராவிட்டாலும், எதைப் பொதுமக்கள் பொறுத்துக் கொள்ளமாட்டார்களோ அந்தத் தடையேயாகும். வரலாறு முழுவதிலும் தனியாட்களாகவும், தொகுதிகளின் அங்கங்களாகவும் மனிதர்களிடத்தில் ஒழுங்கற்றதும், துடிப்பானதும்; குழப்பமானதுமான, அதிகார வெறுப்பும், எதிர்ப்பும் காணப்படுகின்றன. எக்காலத்திலும், எவ்விடத்திலும் அது காணப்பட்டது என்றில்லை. அது பெரும்பாலும் நியாயமற்றதாகவும், பலாத்காரமானதாகவும் இருக்கிறது என்றாலும் அதிகாரவிருப்பம் அரசியலில் எவ்வளவு முக்கியமானதோ, அவ்வளவு சுதந்தர விருப்பமும் அரசியலின் முக்கியக் கூறாகும்.

## சுதந்தரமாயிருப்பது என்றால் என்ன?

ஆதியில் சுதந்தரமாயிருப்பது என்றால் அடிமையாக இல்லாம லிருப்பது; அதாவது ஒரு மனிதன் தன் உடம்பில் சட்டப்படி யான—உத்தரவாதமான—கட்டுப்பாட்டைத் தானே பெற்றிருப்பது என்று பொருள். அதன் அடிப்படையான பொருள் இன்றைக்கும் இதுவேயாகும். ஒருவன் என்ன செய்ய விரும்புகிறானோ, அதைச் செய்வதிலிருந்து தடுக்கப்படாமலிருப்பதும், அவன் எதைச் செய்ய வெறுக்கிறானோ அதைச் செய்யும்படிக் கட்டாயப்படுத்தப்படாமல் இருப்பதுமே சுதந்தரமாயிருப்பதாகும். இந்த இரு வகையான அதிகாரத்தின் எந்தத் தடையும், அதன் நோக்கங்கள் எவ்வளவு சிறப்புடையவையெனினும், அச் செயல் எவ்வளவுதான் அவசியம் எனினும், சுதந்தரத்திற்கு இடையூறு செய்வதாகும். சில மனிதர் களின் சுதந்தரத்தில் குறுக்கிடுவது அவர்கள் வேறு மனிதர்களின் சுதந்தரத்தில் தலையிடுவதைத் தடுப்பதாகவும் இருக்கலாம். இதனால் பின்னர்ச் சொல்லப்பட்டவர்களின் சுதந்தரத்திற்கு உத்தரவாத மாகலாம். நான் திருடுவதையும், கொலை செய்வதையும் தடை செய்யாமலிருந்தால் என்னுடைய உடைமைகளோ அல்லது உயிரோ பாதுகாப்பாக இராது. எவ்வாறாலும் அது அவ் வழிகளில் என் செயல் சுதந்தரத்தில் தலையிடுவதுதான். இதே போன்றதுதான் சாலையின் ஒரு மருங்கே ஓட்டிச் செல்லவேண்டும் என்ற விதியும். போக்குவரத்தில் அது ஓர் ஒழுங்கை உண்டுபண்ணிப் பாதுகாப்பை அளிக்கிறது. ஆனாலும், அது ஒருவர் சாலையின் மற்ற பக்கம் மேடு பள்ளம் இல்லாதிருப்பதால் அங்கு வண்டியை ஓட்ட விரும்புவதைத் தடை செய்வதாகும். முக்கியமாகத் தடையில்லாதிருத்தல்—அதாவது 'பொறியிலிருந்து நழுவ என்ன நேருகிறதோ' அது தான் சுதந்தரம் என்பது. எது நிச்சயமாகத் தடையிலிருந்து தப்பும், எது பொறியிலிருந்து நழுவும் என்பதுபற்றிப் பின்னர் ஆராய்வோம். ஆனால், ஒவ்வொன்றும் இதைச் செய்ய முடியாது என்பது வெளிப் படை. மிகவும் தாராளமான போக்குடைய அரசில்கூடச் சில தடைகள் இருக்கவே செய்யும்; அப்படி இல்லையானால், அரசு எதைத் தவிர்ப்பதற்காக ஏற்பட்டதோ, அந்த அரசியல் குழப்பம் விருப் பாற்றலும், விருப்பங்களும் முரண்படுவதால் ஏற்படும். இதற்கு மாறாக, மிகுந்த எதேச்சாதிகாரமான அரசு மக்களைச் சில காரியங் களில் சுதந்தரமாக விட்டுவிடும். உதாரணமாகத் தான் செய்ய வேண்டிய வேலையைத் தெரிந்துகொள்ளுதல், மனைவி, புருஷன் ஆகியவர்களைத் தெரிந்துகொள்ளுதல், உறைவிடத்தைத் தெரிந்து கொள்ளுதல் முதலியவற்றிற்குச் சுதந்தரமளித்துவிடக்கூடும். சுதந் தரமோ அல்லது அதிகாரமோ வரம்பில்லாமலும், முழுமையாகவும் இருக்கமுடியாது.

## சுதந்தரம் என்பது பொருந்தவைப்பதாகும்

அப்படியானால் இது அவசியமான, நியாயமான இரண்டு சக்திகளுக்கிடையே உள்ள உறவைப்பற்றிய பிரச்சினையாகும். சொந்த வெளியிடுதலுக்கான தனி நபரின் விருப்பமும், சமூக நடத்தைக்குரிய பொதுவானதும் கட்டுப்பாடு செய்யக்கூடியதுமான விதிகளை வகுக்கும் சமுதாயத்தின் கடமையும் இவ்விரு சக்திகளாகும். 'பொறுப்பினால் தடை செய்யப்படாத சுதந்தரம் வெறும் கட்டற்ற விடுதலையாகிறது' என்று டூயி (Dewey) கூறுகிறார். 'பொறுப்பு சுதந்தரத்தால் தடை செய்யப்பெறுவிட்டால் வெறும் எதேச்சாதிகாரமாகிறது. அப்படியானால் சுதந்தரமும், பொறுப்பும் ஒருமைப்படுத்தப்பட வேண்டுமா என்பதன்று பிரச்சினை. ஆனால், அவை எப்படி ஒருமைப்படுத்தப்படலாம், எவ்வாறு மிக நல்ல பயன்தரும் வகையில் இணக்கத்தை ஏற்படுத்தலாம் என்பதே பிரச்சினையாகும். இதுதான் எல்லா அரசியல் தத்துவங்களுக்கும் செயல் முறைகளுக்கும் கேந்திரமான பிரச்சினையாகும்' என்று அவர் மேலும் கூறுகிறார்.

இப்படியாக இது மிகவும் நுண்ணியதாகப் பொருத்தமாக்கும் காரியமாகும். எப்படியெனினும், இந்த நுண்ணிய பொருத்தமாக்குதலானது அரசுகளுக்கிடையேயுள்ள முக்கிய வேறுபாட்டு அம்சமாகும். இவை, அரசாங்க முறைகள் ஒருபுறமிருக்க, அவைகளின் பிரதான முக்கியத்துவம் சுதந்தரத்தின்மீதா, அல்லது கட்டுப்பாட்டின்மீதா என்ற அடிப்படையில் இரு பரந்த வகைகளாகப் பிரிகின்றன. சுதந்தரமே நோக்கமாக இருக்கக் கட்டுப்பாடு அவசியத்திற்காக உபயோகப்படுவதாக இருக்கிறதா? அல்லது அதற்கு எதிர் மாறாகவா? சில அரசுகளை இவ் வகைகளுக்குள் ஒன்றில் அல்லது மற்றொன்றில் சேர்க்க முடியாதிருக்கலாம். ஆனால், இந்தக் கொள்கை பொதுவாக உண்மையானதே.

## சுதந்தரம், அதிகாரம் ஆகியவற்றின் மாறுபாடுகள்

குறிப்பிட்ட சமுதாயங்கள் ஏன் இவ்வகைகளுக்குள் ஒன்றில் அல்லது மற்றொன்றில் காணப்படுகின்றன? 'அதிகாரமும் தனியாளும்' (Authority and Individual) என்ற தலைப்பில் வெளிவந்த ஹார்வர்டு கட்டுரைகளில் (Harward Essays) டாக்டர் கினி (Dr. Gini), 'காலத்திலும் இடத்திலும் சுதந்தரம், அதிகாரம் ஆகியவற்றின் மாறுபாடுகளைப்' பற்றி ஒரு நல்ல உபயோகமுள்ள பட்டியல் கொடுத்திருக்கிறார். சுதந்தரத்திற்குத் துணைபுரியும் காரணக் கூறுகள் எவை? வெளியாரிடமிருந்து பாதுகாப்பு, சராசரியான குடிமகனிடம் தன்னம்பிக்கை, தற்சார்பு, துவக்க ஊக்கம், சமூக - தேசீய -

ஒருமைப்பாடு, ஒரு நல்ல சராசரியான அளவுக்கு நெறிப் பண்புகளும், அறிவுப் பண்புகளும், போதுமான பொருளாதார வளங்கள், திருப்தி கரமான சம நிலையில் உள்ள மக்கள்தொகை, இதற்கு மாறாக, வெளி நாட்டு அபாயம், மக்களிடத்தில் அக்கறையற்ற தன்மையும், விளை யாட்டுத்தனமும், காரணமாகத் தோன்றும் சமூக, தேசீய வேற்றுமை கள், மிகையான பொருளாதார ஏற்றத்தாழ்வுகள், வறுமை, வேலை யின்மை, மிகையானதும் அல்லது போதுமானதாகவுமில்லாத மக்கள் தொகை ஆகியவை நிலையற்ற பாதுகாப்பில்லாத நிலையை உண்டாக்கிச் சுதந்தரத்தை அபாயகரமானதாகத் தோன்றும்படிச் செய்யும்.

சுதந்தரத்தைப்பற்றிப் பொதுவாகப் பேசுவதைவிட்டு அதன் பருப்பொருளான பயன்பாடுகளைப் பார்ப்போம். 'சுதந்தரத்தைச் சதாகாலமும் உரிமைகளாக விளக்கிக்கொண்டே இருக்கவேண்டும். அன்றாட வாழ்க்கையில் நீ விரும்புவது உரிமை. எல்லா உரிமை களுக்கும் ஒரு பொதுப்பண்பு உண்டு—அதாவது சுதந்தரம் என்பதே நீ செய்ய விரும்புவதைச் செய்யுந் திறன்தானே'[1] என்று திருமதி. உட்டன் (Mrs. Wootton) அம்மையார் கூறுகிறார்.

## சுதந்தரத்தின் பருப்பொருள் தன்மைகள்

சுதந்தரமாயிருப்பது என்றால் முதலாவதாக, செயலாற்றுவதற்கு, அதாவது தானாகவே ஆக்கப் பணிகள் புரிவதற்கு, வேலை, திருமணம், இருப்பிடம், ஓய்வுநேர உபயோகம் ஆகியவற்றில் ஒருவர் விரும்பியபடி தன் வாழ்க்கையை வாழ்வதற்குத் திறனிருக்கிறது என்று பொருள் ஆகும். பிராம் (Fromm) தம்முடைய 'சுதந்தரத் திடம் அச்சம்' (Fear of Freedom) என்ற நூலில், 'வாழ்க்கைக்கு ஒரே ஒரு பொருள்தான் உண்டு. அது வாழ்க்கைக் கலையே ஆகும்.' என்று ஆணைகளாலும், தடைகளாலும் நாம் சூழப்பட்டிருந்தால் இந்தக் கலையைப் பழகிக்கொள்ள முடியாது கட்டாயப்படுத்தப் படுவதும், தடை செய்யப்பட்டதுமான எல்லைகளை நாம் குறைக்க வேண்டும். அதோடு செயலாற்றும் சுதந்தரமும் நமக்கு வேண்டும். ஏனெனில், நாம் பாதுகாப்பாக இருப்பதாக உணரவேண்டும். இப்படிப்பட்ட சுதந்தரம் இல்லையானால் பாதுகாப்பிற்கு உத்தரவாத மில்லை.' 'குடிமக்கள் ஒவ்வொருவரும் தாம் பாதுகாப்பாக

[1] 'Introduction to Political Science' என்ற தமது நூலில் பௌமான் (Bowman) சுதந்தரத்தின் ஐந்து அம்சங்களை இனம் பிரிக்கிறார் : அடிமைத் தனத்திற்கு எதிர்ப்பு அல்லது மெய்சார்ந்த விடுதலை ; எதேச்சாதிகாரமாகக் கைது செய்தலிலிருந்து விடுதலை ; தேசீய விடுதலை : அல்லது வெளியார் ஆட்சி இல்லாமை ; கொடுங்கோன்மைக்கு மாறாகத் தன்னாட்சி ; மிகையான ஆட்சிக்கு மாறான ஆட்சி.'

இருக்கிறோம் என்ற உணர்ச்சியில் எழுகின்ற மனஅமைதியே அரசியல் சுதந்தரம் ஆகும். இவ்வாறான நிலை நிலவுவதற்கு ஒரு குடிமகன் இன்னொரு குடிமகனிடத்தில் அச்சம் கொள்ளாதபடி அரசாங்கம் செய்திருக்க வேண்டுவது அவசியம். இவ்விதமான பாதுகாப்புணர்ச்சி இல்லாவிட்டால், ஆளுந் தத்துவம், துணிவான செயல்கள் ஆகிய எதுவும் இருக்க முடியாது—மனிதன் மற்றவர்களுக்கு ஓர் அபாயமாக இராமல் சுதந்தரமாய் இருப்பதற்குரிய சூழ்நிலைகளை அமைத்தல்' என்று 200 ஆண்டுகளுக்கு முன்பு மாண்டெஸ்கியூ (Montesquieu) எழுதினார்.

ஒருவன் தன்னுடைய வாழ்க்கையையே மாற்றிக்கொள்வது, ஒவ்வொரு நாளும் புதிய வாழ்வாக ஆக்குவது, நம்முடைய சூழ்நிலைகளை மாற்ற முயல்வது, நாம் வாழும் உலகத்தை மாற்ற முயல்வது ஆகியவை செயலாற்றும் சுதந்தரத்தில் பொதிந்துள்ளன. வாக்குரிமை பெற்றிருப்பதன் மூலம் நாட்டின் அமைப்பிலும், அரசாங்கத்திலும் குறைந்தபட்ச அளவு பங்கு பெறுவதும், ஒரு குறிப்பிட்ட அக்கறை அல்லது கருத்தோட்டத்தைப் பாதுகாக்கும் தொகுதிகளைச் சேர்ந்திருப்பதும், அவைகளை உண்டாக்குவதும், முக்கியமாகக் கருத்துக்களைப் பரப்பவும், அவைகளைச் சமூக அமைப்பில் ஏற்றுக்கொள்ளும்படிச் செய்வதும் ஆகிய திறமையை இது குறிக்கிறது. முடிவாக, 'தானாகச் சிந்திக்கும் கடமையே சுதந்தரத்தின் சாரமாகும். ஒரு மனிதன் தனது சிந்தனையை உபயோகிக்க முடியவில்லையானால் அவனது குடிமை உரிமைகள் பயனற்றவையாகும்' என்று பவிக் (Powicke) கூறுகிறார்.

'தனி நபர்களும், தனி நபர்களாலான தொகுதிகளாகிய நாடு, திருச்சபை, தொழிற் சங்கம் ஆகியவையும் தம் எண்ணங்களைத் தாமே சிந்தித்துக்கொள்ளும் திறன் பெற்றும், அவைகளை வெளியிடவும் அவற்றைச் செயலாற்றவும் பெற்றிருக்கும் அனுபவத்தையே நான் சுதந்தரம் என்று குறிப்பிடுகிறேன். சட்டத்தின் ஆதரவின் கீழ் அவர்களுக்குக் கிடைத்திருக்கும் வரங்களை மற்றவர்களின் இதே மாதிரியான உரிமைகளைக் குலைத்துவிடாமல், பயன்படுத்திக்கொள்ளும் அனுபவமே சுதந்தரம்' என்று ராம்சே மூர் (Ramsay Muir) எழுதுகிறார்.

## (ii) சிந்தனைச் சுதந்தரம்: சகிப்புத் தன்மை

உண்மையான அறிவுச் சுதந்தரம் என்றால் என்ன? சில நூற்றாண்டுகளுக்கு முன் கியார்டானோ புருனோ (Giordano Bruno) இதற்கு விளக்கம் தந்திருக்கும் சொற்களைவிட நாம் சிறப்பாகச்

சொல்லிவிடமுடியாது. அவை பின்வருமாறு: அறிவுச் சுதந்தரம் பெற்ற மனிதன், உறங்கும் உள்ளங்களைத் தட்டி எழுப்பக் கூடியவன்; வரம்புக்குட்படாத பிடிவாதமான அறியாமையை அடக்குபவன்; காரியங்களிலெல்லாம் மனிதன்மீது பொதுவான அன்பு காட்டுபவன்; இங்கிலாந்துக்காரனைக் காட்டிலும் இத்தாலிக் காரனிடம் அதிக அக்கறை காட்டாதவன்; பெண்ணைக் காட்டிலும் ஆணையும், சாதாரண மேலங்கி அணிந்தவனைவிட அதிகார உடை யணிந்தவனையும், அரசனைவிடப் பிரதான மத குருவையும், பொது மனிதனைவிட மத குருவையும் அதிகமாக அவன் மதிப்பதில்லை. ஆனால், எல்லோரிடமும் ஒரே விதமாக அன்பு செலுத்துவான். அமைதியான, அடக்கமான, நட்புறவு காட்டக்கூடிய, உபயோக மானவனாக வாழ்க்கையில் காணப்படுபவன்; இப்படிப்பட்டவனைப் பிழையானவற்றைப் பிரச்சாரம் செய்கிறவர்களும், கபட வேடதாரி களுந்தான் வெறுப்பார்கள். அவனை நேர்மையானவர்களும், உழைப்பாளர்களும் நேசிப்பார்கள்; அவனை உயர் குடிமக்கள் வாழ்த்துவார்கள்.'

'அதிகாரம், பெரும்பான்மைகள், வழக்கம், அபிப்பிராயம் ஆகிய வற்றின் செல்வாக்கிலிருந்து ஒரு மனிதன் தன் கடமையெனக் கருதும் காரியத்தைச் செய்வதற்குப் பாதுகாப்பளிக்கிறது என்ற உத்தரவாதமே சுதந்தரம் என்று நான் கருதுகிறேன். சிறந்த அரசியல் முடிவுக்குச் சுதந்தரம் ஒரு வழியாகாது. நல்ல பொது ஆட்சித்துறை வேண்டுமென்பதற்காக இது தேவைப்படவில்லை. ஆனால், குடிமக்கள் சமுதாயமும், தனியார் வாழ்க்கையும் பாது காப்போடு நடைபெற வேண்டுமென்பதற்காக இது தேவைப் படுகிறது. பரந்த மனமுள்ள மனிதன் தன் நாடு வல்லமையுள்ள தாகவும், வளமானதாகவும் இருந்து ஆனால், அடிமைப்பட்டு இருப் பதைவிட எந்த வகையிலும் சுதந்தரமாக இருந்து வறுமையாகவும், வலுவற்றதாகவும் இருக்கவே விரும்புகிறான்' என்று ஆக்டன் பிரபு (Lord Acton) கூறுகிறார்.

## சமயச் சகிப்புத் தன்மை

இவ் வகையான சிந்தனைச் சுதந்தரம் பூரண சமயச் சகிப்புத் தன்மையையும் குறிக்கிறது. இது மிகவும் அவசியமானது. ஏனெனில் மனித ஆளுந் தத்துவத்தின் உட்சாரமே சமயமாக இருக் கிறது. ஆகவே, வேறெங்கேயும்விட அங்கே கட்டாயப்படுத்துதல் இல்லாமலிருக்க வேண்டும். மேலும், மதச் சுதந்தரம் மற்றெல்லாக் கலாச்சார நடவடிக்கைகளின் சுதந்தரத்திற்கு அடிப்படையாக இருக் கிறது. இது இல்லாவிடில் மற்றெல்லாச் சுதந்தரங்களும்

பொருளற்றவையாய்ப் போகின்றன. 'ஆன்மாவுக்குரிய உலகு, அரசியல் கட்டுப்பாட்டிற்குள்ளிருக்கக் கூடாது.'

கொள்கையளவில் கிட்டத்தட்ட ஒவ்வொருவரும் இதை ஒப்புக் கொள்வார்கள். நடைமுறையில் சமயச் சுதந்தரம் பொதுவாகச் சட்டங்களால் உத்தரவாதமாக்கப்பட்டிருக்கிறது. இதிலிருந்து ஒரே விலக்கு, சில முஸ்லீம் நாடுகளில் மத மாற்றத்திற்குத் தடைகள் இருப்பதுதான். ஆனால், இப்பொழுது ஒரு குறிப்பிட்ட சமயத்திற்கோ அல்லது திருச்சபைக்கோ சட்டப்படியான உதவி செய்வதும் அல்லது முன்னுரிமை அளிப்பதும் அது எவ்வளவு சிறியதாக இருந்தாலும், ஏனைய சமயங்களுக்களிக்கப்பட்ட சுதந்தரத்தைத் தடை செய்த தாகும். இங்கிலாந்தின் ஆங்கிலிக்கன் திருச்சபைச் சார்பு (Anglicanism) ஸ்காட்லாந்தின் பிரிஸ்பிடீரிய திருச்சபைச் சார்பு (Presbyterianism), அயர்லாந்து, ஸ்பெயின், இத்தாலி, பல தென் அமெரிக்கக் குடியரசு ஆகியவைகளின் ரோமன் கத்தோலிக்கத் திருச் சபைச் சார்பு, ஸ்காண்டிநேவியாவின் லூத்தரன் திருச்சபைச் சார்பு (Lutheranism) ஆகியவை இதற்கு எடுத்துக்காட்டுகளாகும். ருஷ்யாவில் சட்டப்படியான சகிப்புத்தன்மை பிரகடனப்படுத்தப் பட்டிருக்கலாம். ஆனால் கடவுள் நம்பிக்கையுள்ளவர் எவரும் அதிகார பதவியை எதிர்பார்க்க முடியாது. சிறிது காலத்திற்கு முன்பு ஃபிரான்சு நாட்டில் ஆலயத்திற்குப் போய்வருவது அரசாங்கப் பதவி உயர்வைத் தடைசெய்வதாக இருந்தது. சமயச் சுதந்தரத்துக்கான சட்டரீதியான எல்லா உத்தரவாதங்களிலிருந்தும், அமெரிக்காவில் ரோமன் கத்தோலிக்கராக இருப்பது சில பதவிகள் வகிப்பதற்குத் தடையாகவே இருக்கிறது. 1928-ல் திரு. ஆல்பிரட் சுமித் (Mr. Alfred Smith) அவர்களுக்கேற்பட்ட பாதகத்திலிருந்து இதை அறிந்து கொள்ளலாம். 1936-ல் ஃபிரான்சின் பிரதமராக லியான் புளும் (Leon Blum) நியமிக்கப்பட்டமை யூதர்களிடத்துக் காட்டும் சகிப்புத் தன்மையின் வெற்றியாகக் கருதப்பட்டது.

## அரசியலைக் குற்றங்கூறச் சுதந்தரம் : (Freedom of Political Criticism)

அரசு, அங்கு நிலவும் சமூக, அரசியல், பொருளாதார அமைப்பு ஆகியவைகளைக் குறைகூற இருக்கும் சுதந்தரம் சமயச் சுதந்தரத் தின் முக்கியத்துக்குச் சிறிதும் குறைந்ததன்று. 'ஏளனம் செய்வதற்கும், திட்டுவதற்கும் ஒரு மனிதனுக்குள்ள முழுச்சக்தி யோடும், இழித்துப் பேசுவதற்கு இடமளித்துவிட்ட . ஜனநாயக நிறுவனங்களை இழித்துப் பேசும் சுதந்தரம் சமுதாயத்தின் உயிர்

நாடியான இரத்த 'ஓட்டம் போன்றது' என்று ஜோட்[1] (Joad) கூறுகிறார். அமெரிக்கப் பிரதம நீதிமன்றத்தில் ஜனவரி 1937-ல் பிரதம நீதிபதி ஹியூக்ஸ் (Hughes) வெளியிட்ட கருத்தை இங்கு மேற்கோள் காட்டுவது மிகவும் பொருத்தமாயிருக்கும். அது பின்வருமாறு: 'நம் நிறுவனங்களைப் பலாத்காரத்தினாலும், வலிமையாலும் மாற்றிடும் தூண்டல்களிலிருந்து சமுதாயத்தைக் காத்துக்கொள்ளும் அவசியம் எவ்வளவு அதிகமோ, அவ்வளவு அரசியல் அமைப்புக்குட்பட்ட உரிமைகளாகிய பேச்சுரிமை, பத்திரிகை உரிமை, கூட்ட உரிமை ஆகியவையும் மிக அவசியமாகின்றன. ஏனெனில் அரசாங்கம் மக்களின் விருப்புக்கு இணங்கவும், ஏதாவது மாற்றங்களை அவர்கள் விரும்பினால் அமைதியான வழிகளில் அதைப் பெறவும், சுதந்தரமான அரசியல் விவாதத்திற்கு வாய்ப்பு ஏற்படுத்தித் தருவதற்காகவும் இது வேண்டியிருக்கிறது. குடியரசின் பாதுகாப்பு இதில் அடங்கியிருக்கிறது. அரசியல் அமைப்புக் குட்பட்ட அரசாங்கங்களின் ஆதாரமே இதிலிருக்கிறது.'[2]

'ஆங்கிலோ சாக்ஸன் டிரெடிஷன்' (Anglo-Saxon Tradition) என்ற தமது நூலில் பேராசிரியர் கார்டன் கேட்லின் (Professor Gordon Catlin) அபிப்பிராய சுதந்தரத்தை நிலைநிறுத்துவதற்கான நான்கு காரணங்களைக் கூறியிருக்கிறார். முதலாவது, எவருடைய வழுவாத தன்மையிலும் நம்பிக்கையின்மையும், ஆராய்வதற்குரிய விருப்பமும், இரண்டாவது நிகழக்கூடியவைகளின் திரட்சிக்கு அப்பாற்பட்டதாக உண்மையை உணர்தல் இருக்கமுடியாதாகையால் அதைத் திணிக்கக்கூடாது. மூன்றாவது, சகிப்புத் தன்மையானது புது உண்மைகளைக் கண்டுபிடிக்கும் சூழ்நிலையை வளமாக்குகிறது. நான்காவது வாழ்வதிலும், சிந்திப்பதிலும் பலவகைகள் இருப்பது வாழும் வாழ்க்கை முறையின் ஒரு பகுதியேயாகும். எனவே இவ்வித வாழ்க்கை முறையைப் போதிக்கவும், பாதுகாக்கவும் வேண்டியிருக் கிறது. இதைப் பின்கண்டவாறு நார்மன் ஏஞ்சல் (Norman Angell) விளக்குகிறார்.'[3] ஏன், யுத்த காலத்தில்கூடச் சுதந்தரம் முக்கிய

[1] 'மேற்கத்திய பண்புகள் (Western Values) என்ற சொற்றொடர் விளக்கும் நம்பிக்கைகளின் அமைப்பிலுள்ள தனித்தன்மையான ஓர் அம்சம், எல்லா இடத்துக்கும் காலத்துக்கும் பொருத்தமான அறநெறிச் சட்டம் ஒன்று இருப்பதாகும். இச் சட்டத்தின் சாரத்தில் ஒரு பகுதி, மனிதர்கள் பரந்த ஓர் எல்லைக்குள் இதன் ஆணைக்குக் கீழ்ப்படியாதிருக்கும் உரிமையுடையவர்களாக இருக்கவேண்டும் என்ற கொள்கையாகும். இப்படி இருப்பதால் மனிதர்கள் சுதந்தரமாகவும், துணிவாகவும் சட்டத்திற்கு இணங்க வாய்ப்பு ஏற்படும்.' (Times Literary Supplement, March 6, 1948).

[2] C. J. Hughes in the De Jonge Case, January 5, 1937.

[3] இங்கிலாந்தில் யுத்த காலத்தில் பேச்சுச் சுதந்தரம் எந்த அளவுக்குச் சகித்துக்கொள்ளப்பட்டது என்பது ஆலன் (Allen) என்பவர் எழுதிய 'Democracy and the Individual' என்ற நூலில் அவர் எடுத்துக்காட்டாகக் காட்டியிருக்கும் குறிப்புரையில் மிக நன்றாக விளக்கப்பட்டிருக்கிறது.

மானதுதான்.' 'அபிப்பிராயம் சம்பந்தப்பட்ட காரியங்களில் அரசின் அடிவருடியாகும் பழக்கம் அரசியலில் சொந்தமாகத் தீர்மானங்கள் செய்யும் தனி நபரின் திறமையை அழித்துவிடும் போக்குடையதா யிருக்கிறது. முடிவான ஆய்வில் இத் திறமைதான் மக்களாட்சியைத் தம்மை ஆண்டுகொள்ளும் தன்மை பெற்றதாக்குகிறது. சொந்த மாகத் தீர்மானஞ் செய்யும் உரிமையை அழிப்பது, பொதுவாகத் தீர்மானஞ் செய்யும் திறமையையும் முடிவில் அழித்துவிடும். பொறுப் பற்ற அதிகாரப் பழக்கம் ஒரு புறமும், உணர்ச்சியற்ற அடிவருடித் தனம் இன்னொருபுறமும் இருக்குமானல் சுய ஆட்சி நிலைக்கவும், வளரவும் தேவையான பொது உள்ளுணர்வு வளரக்கூடிய சூழ்நிலையை இயலாத தாக்கிவிடும்.'

ஆனல் இத் தலைப்பில் எழுதப்பட்டிருக்கும் ஆய்வுக்குக் கடைசி வார்த்தையைச் சொல்லக்கூடிய தகுதி 'விடுதலை பற்றிய கட்டுரை' (Essay on Liberty) எழுதிய மில் (Mill) லைச் சாரும்.[1] 'ஒரே ஒரு மனிதனைத்தவிர மற்றெல்லா மனித குலமும் ஒரு கருத்துக் கொண்டிருந்து, அந்த ஒரே மனிதன் வேறு மாருன கருத்துக் கொண்டிருந்தால், அந்த ஒரே மனிதனை வாய் அடங்கச் செய்வது, எப்படி அந்த ஒரே மனிதனுக்கு அதிகாரமிருந்து மனித குலத்தையே வாய் அடங்கச் செய்வது நியாயமற்றதோ, அப்படியே மனிதகுலத் துக்கு நியாயமற்றதாகும்.'

## ஆளுந் தத்துவத்தின் பயன்பாட்டில் நம்பிக்கை

விலைமதிக்க முடியாத சுதந்தரத்தில் உள்ள நம்பிக்கையின் இறுதியான ஆதாரம் என்ன? ஆளுந் தத்துவமே இறுதியான மதிப்பு என்ற நம்பிக்கையின்பேரில்தான் அது நிச்சயமாகச் சார்ந் திருக்கிறது.

முடிவாகப் பார்க்கும்போது 'தனியாளின் எண்ணமும் மனச் சாட்சியுந்தான் அங்குள்ள ஒரே எண்ணமும், மனச்சாட்சியுமாகும். கள்ளமுடையதாகவும், முட்டாள்தனமாகவும், அறிவற்றதாகவும் நமது மனச்சாட்சி இருக்கலாம். என்றாலும் நமக்குள்ள வழிகாட்டி அது ஒன்றேதான். அது நமதாகவாவது இருக்கிறது. அதன் தேவைகளின்மீது நடைபெறும் செயலிலிருந்து சுதந்தரம் வருகிறது'

[1] இதுவும், மில்டன் (Milton) எழுதிய Areopagitica வும் சுதந்தரக் கொள்கை களின் இரு சிறந்த வாதங்களாகும். அரசியல் மாணவர்கள் அனைவராலும் இவை படிக்கப்படவேண்டும். இவை அவர்களை ஒப்புக்கொள்ளச் செய்ய வில்லையானல் வேறெதுவுஞ் செய்யமுடியாது. லாஸ்கியின் (Laski) 'Liberty in the Modern State' என்ற இந்தப் பிரச்சினையைப் பயனுள்ள முறையில் மீண்டும் எடுத்துரைக்கிறது.

என்று லாஸ்கி (Laski) கூறுகிருர்.[1] ஒவ்வொரு காரியமும் தனியாளின் மனித உள்ளத்திருந்து வந்ததுதான். தனி நபர்களுக்கான மதிப்புக்களும், எல்லோருடைய நன்மையும் மற்றெல்லா நன்மைகளையும்போலவே நபர்களுக்கு நல்லதாகவே இருக்க வேண்டும்.

வரலாற்றில் ஒவ்வொரு விஷயமும் இறுதியில் தனி நபர் சார்ந்த காரியமாகத்தான் இருக்கிறது. 'சிந்தனை ஓட்டங்கள்' அங்கில்லை; ஆனுல் பல நபர்கள் ஒரே வழியில் சிந்திக்கிருர்கள். 'படைகள்' என்று அங்கில்லை; ஆனுல் தனக்கே ஓர் உலகமான, தனியாளான, போர்வீரர்களைக் கொண்டதே படையின் பிரிவு. தனிநபர் சாராத சமூக சக்திகளே இல்லை. அத்தகைய எல்லாச் சக்திகளும் 'தனியாளில் பொதிந்து கிடக்கின்றன. சக்தியைத் தனியாளிடத்திலிருந்து பெறுகின்றன. தனியாள் மூலமாக இயங்குகின்றன' சமூக சக்திகள் என்பது தனிநபர் செல்வாக்குகள்தான். இவை ஒரு நபரிலிருந்து இன்னெரு நபருக்குக் கடந்துசென்று நடத்தையை அமைக்கும் செயல்களை உண்டாக்குகின்றன.

'வெவ்வேறு மதிப்புள்ள பொருள்களுக்கிடையே ஒன்றை நியாயமான முறையில் தேர்ந்துகொள்ள முடியும். ஆனுல் விடுதலைக்கும், விடுதலை அடக்குமுறைக்குமிடையே ஒன்றைத் தேர்ந்தெடுப்பது பொருள்களில் ஒன்றைத் தேர்ந்தெடுப்பது போன்றன்று. ஏனெனில் முன்னது மனிதனின் மதிப்பையும், அவன் நாகரிகத்தையும் குறிக்கிறது. பின்னது மேய்ச்சலுக்கு ஓட்டிச் செல்லப்படும் கால்நடைக் கூட்டமாகவோ, அல்லது பிடித்துப் பயிற்சியளித்துக் கூண்டிற்குள் அடைக்கும் விலங்காகவோ மனிதனை இழிவுபடுத்தும் தன்மையது. மனிதர்கள் சுதந்தரத்தை வேண்டுகிருர்கள். ஏனெனில் அவர்கள் தனித்த நபர்களாக இருக்கிருர்கள். ஒவ்வொரு தனி நபரின் அனுபவ வேறுபாடு, மனித விருப்பாற்றல்களின் தவிர்க்கமுடியாத வேறுபாடுகள் காற்றின் தேவையைப்போலச் சுதந்தரத் தேவையை உண்டாக்குகின்றன'—டைரல் பாதிரியாரின் (Father Tyrrell) கருத்தாழம் மிக்க சொற்களே இச் சொற்றெடர்கள். 'உலகத்தின் இருதயத்தையே பிளப்பதாக இருந்தாலுங்கூட, மனிதன் தன்

[1] 'தனியாள், அவரது உணர்வு, அவரது அறிவு, அவரது பகுத்தறிவு ஆகியவைகளை நெறி ஒழுங்கு முறையின் சட்டங்களுக்கெல்லாம் அடிப்படை என்று உடனே ஒப்புக்கொள்ளாவிட்டால் பிறகு ஒருவர் அமைக்கும் எந்த முறையும் எதேச்சாதிகாரமான சமுதாய அமைப்பாகத்தான் தவிர்க்க முடியாதபடி இருக்கும். இவ் வகண்டமும் தத்துவஞானி, அல்லது மதகுரு ஆகியவர்களின் மனப்போக்குப்படி—அல்லது அவர்களின் ஆசைகளின்படி அமைக்கப்பெறும்.—அப்படியானுல் அங்கு நீதிக்கு உத்தரவாதம் கிடையாது' —லாஸ்கி (Laski)

வாழ்க்கையின் பிரதான செல்வாக்கைப் பின்பற்றுவதற்குத் தூண்டப் படுகிறுன்.''

## சுதந்தரத்திற்கு உத்தரவாதமளிக்க வேண்டும்

மேலே சொன்ன வாசகங்களெல்லாம் பெரிதும் அனுமானங்களே ஒழிய நிரூபிக்கப்பட்ட உண்மைகளல்ல. 'மனிதன் அதற்காகவே பாதுகாக்கப்பட வேண்டிய ஒரு பண்பைப் பெற்றிருக்கிறுன் என்ற கருத்தானது நம்பிக்கைக்குரிய அல்லது அவாவுதற்குரிய அல்லது தருமத்துக்குரிய அல்லது மூன்றுஞ் சேர்ந்த ஒரு காரியமாகும்' என்று ஆலன் (Allen) கூறுகிருர். எந்த வழிகளில் இந்த அனுமானங்கள் எதிர்க்கப்படுகின்றன என்று சிறிது நேரத்தில் பார்ப்போம். இந்த வாதத்தையும் அதன் அனுமானங்களையும் இப்போதைக்கு ஒப்புக்கொண்டால், சுதந்தரம் அரசின் மீது சார்ந்தில்லை. ஆனல், அரசு சுதந்தர மனிதர்களைச் சார்ந்து நிற்கிறது என்ருகிறது. தனியாளுக்காகவும், தனியாள் சேர்ந் திருக்கும் சமுதாயத்துக்காகவும் சுதந்தரம் விரும்பத்தக்கது என்ருல், அது உத்தரவாதமாக்கப் பெறவேண்டும். அரசாங்கங்கள் தங்களின் அதிகார எல்லையை எப்பொழுதும் அதிகரிக்கவே விரும்புகின்றன. அவைகள் குடிமக்களின் குறைகூறும் அதிகாரத்தையும், குறுக்கிடும் அதிகாரத்தையும் நீக்கிவிடுகின்றன. ஆகவே தனியாளின் சுதந்தரம் அரசாங்கத்தின் கைக்கெட்டாதபடி தூரத்தே இருக்கச் செய்யவேண்டும். குறைகூறுவதை அரசாங்கங்கள் இயற்கையாக வெறுக்கக்கூடும். ஆகவேதான் தணிக்கை அல்லது எதேச்சாதி காரமான சிறைக்கு அனுப்புதல் ஆகிய தடுக்கும் அதிகாரம் அவர் களிடத்தில் இல்லாமலிருப்பது முக்கியமாகிறது. எப்பொழுது பொது ஒழுங்கு மீறப்படுகிறது என்பதைத் தீர்மானிக்கும் அதிகாரத்தை, கூடுமானவரையில் ஜூரிகளோடு கூடிய நீதி மன்றங்களே பெற்றிருக்கவேண்டும்.

உண்மையில் சமுதாயம் அதன் அங்கத்தினர்களிடத்தில் சுதந்தரம் இருக்கவேண்டுகிறது. முதலாவதாக எந்த உயிர்ப்பு உள்ள நாகரிகமும் புதுக்கருத்துக்களால் சதா புதுப்பிக்கப்பட வேண்டியிருக்கிறது. ஏனெனில் தேக்கத்தை அது ஒன்றே தவிர்க்க முடியும். புரட்சி அல்லது கொடுங்கோன்மை ஆகியவற்றின் ஒரே மாற்ருகிய அமைதியான முறையில் ஏற்படும் மாற்றத்திற்குச் சுதந்தரம் உத்தரவாதமளிக்கிறதாகையால் அது மீண்டும் தேவைப் படுகிறது. முடிவாக, தடைகளிருப்பது நலமான நிலையில்லை யாகையால் சுதந்தரம் தேவைப்படுகிறது. சமுதாயங்கள் தங்களின் பொதுவாழ்க்கை வழியைச் சுதந்தரமாக வகுத்துக்கொள்ள

முடிந்தால்தான் வளமாக வளரமுடியும். இந்தக் கொள்கைகளின் அடிப்படையில்தான் சில சமுதாயங்கள், குறிப்பாக ஆங்கிலோ-சாக்ஸன் சமுதாயம் கிளாட்ஸ்டன் (Gladstone) அவர்களின் வார்த்தைகளில், 'அதன் சொந்தக் காரணத்துக்காகவே விடுதலைக்கு மிக அதிக மதிப்பை வைத்திருக்கிறார்கள். மக்களிடத்துள்ள தற்சார்புக்கொள்கைகளுக்கு முழு வாய்ப்பையும் அளிக்க அவர்கள் விரும்புகிறார்கள். அதிகாரக் குவியலை அவர்கள் நம்பாமல் வெறுக்கிறார்கள். பொதுப்பண்புகளையும், சுதந்தர உணர்ச்சியையும் வளர்க்கும் பொதுப் பயிற்சி நிலையங்களாக, நகராட்சி உரிமையையும் தல உரிமைகளையும், உள்ளூர் உரிமைகளையுங்கூட அவர்கள் விரும்பி வளர்க்கிறார்கள். விளம்பரத்தை அவர்கள் அரசியலின் மூச்சுக் காற்றாகக் கருதுகிறார்கள்.'

எவ்வாறெனினும் சமுதாயத்திற்குச் சுதந்தரமான தனிநபர்கள் தேவைப்படுவதும், அவர்களுக்குச் சமுதாயம் தேவைப்படுவதும் சமமாக இருக்கிறது என்பது சொல்லாமலே விளங்கும். ஒதுங்கிய நிலையில் சுதந்தரம் பயனற்றது – மற்றவர்களோடு சேர்ந்து பொதுவாகக் காரியங்களைச் செய்யவும், அனுபவிக்கவும் கூடிய திறனில்தான் உண்மையான சுதந்தரம் காணக்கிடைக்கிறது. எந்தத் தனிநபரும் தன்னுடைய நன்மையைப் பொது நன்மையிலிருந்து பிரிக்கமுடியாது. சொல்லப்பட்டதுபோல நாம் 'மந்தைக்குள்ளும் வெளியிலுமாக இயங்குகிறோம்.' எப்பொழுது தனது சுதந்தரத்தேவையை வற்புறுத்துவது, எப்பொழுது சமூக வாழ்க்கையில் தவிர்க்கமுடியாமல் பொதிந்துகிடக்கும் தடைகளுட்பட எல்லா நன்மைகளையும் முழுவதாக அடைவது என்பதை அறிந்திருப்பவனே ஆரோக்கியமான - சுதந்தரமான - தனியாள். 'தனியாக மனிதன் சிந்திக்கிறான். ஆனால் மற்றவரோடு சேர்ந்து செயல்புரிகின்றான்.' என்று கவிஞர் லாமார்ட்டினே (Lamartine)[1] கூறினார். சமூக வாழ்க்கையின் திறவுகோலாக இது இன்றும் இருக்கிறது.

தனியாளுக்காகவும், சமுதாயத்துக்காகவும் நாம் விவாதித்த முக்கிய சுதந்தரங்களுக்கு நிச்சயமாக உத்தரவாதமும், பாதுகாப்பும் அளிக்கப்படவேண்டும் என்பது பொருளாகிறது. இவ்வாறாகப் பாதுகாக்கப்பட்ட சுதந்தரங்களை உரிமைகள் என்று அழைக்கிறோம். 'ஏனைய குடிமக்கள், அரசாங்க அதிகாரிகள் ஆகிய இருதரத்தாரிடமிருந்தும் எதேச்சாதிகாரமான குறுக்கீடு வராதபடிச் சுதந்தரமானது சில வழிகளில் பாதுகாக்கப்படும் என்ற உறுதிப்பாடு'தான் உரிமை என்று லிண்ட்சே (Lindsay) கூறுகிறார்.

[1] 'Il Faut, pour mediter, sisoler de la foule.
Et sy Confondre pour agir'.
('Man thinks alone and acts with others')

## (iii) சுதந்திரத்தின் உத்தரவாதமான உரிமைகள்

எல்லாச் சுதந்தரக் கோட்பாடுகளும் உரிமைகள் இருப்பதை அனுமானம் செய்துகொள்கின்றன. இந்த விடுதலையுரிமைகள் இல்லாமல் மனிதன் மிகச் சிறந்தவனாக முடியாது. தனக்குள்ள மிகச் சிறந்ததையும் வெளிப்படுத்த முடியாது என்பதே இதன் விளக்கம் எனலாம். அவனது ஆளுந்தத்துவம் வெளிப்படவும், போதுமான அளவு வளர்ச்சியடையவும், என்ன தேவைப்படுமோ அதுதான் இது. நாம் எதிர்மறையாகவும் உரிமைகளைப்பற்றிப் பார்க்கலாம். உரிமைகள் என்பவை சில வாய்ப்புக்கள். இவ் வாய்ப்புக்கள் இல்லையெனில் மனிதன் முக்கியமான சிலவற்றை இழக்க நேரிடுகிறது. மேலான அதிகாரத்தின் மனம்போன போக்கின்மீது அன்றாடம் முழுவதாகச் சார்ந்திருக்கும் உரிமைகளற்ற மனிதன் ஓர் அடிமை ஆவான்.

### ஆதார உரிமைகள்

இவ் வுரிமைகள் இடத்தாலும் காலத்தாலும் மாறுபடுகின்றன. சாதாரண காலங்களில் நாகரிகமடைந்த சமுதாயங்கள் கீழ்க்கண்ட உரிமைகளை உத்தரவாதமாக்குகின்றன; எதேச்சாதிகாரமாகக் கைது செய்யப்படுவதிலிருந்து சுதந்தரம் (அதாவது நிகழவேண்டிய ஒழுங்கு முறையின்படி இல்லாமல் கைது செய்யப்படுவதிலிருந்து சுதந்தரம் மிகத் துல்லியமாக விளக்கப்பட்டிருக்கும் சட்டங்களின்படி விசாரணையும், தண்டனையளித்தலும் இருப்பது) உடைமைகளைச் சேகரிக்கவும், வைத்துக்கொள்ளவும் உள்ள உரிமை, (அரசின் வரிகளுக்குட்பட்டு) வெளியிடுதலுக்காக எழுதவும், பேசவும் உள்ள உரிமை, பொதுக் கூட்டம் கூடும் உரிமை, அமைதியான நோக்கங்களுக்காகச் சங்கங்கள் அமைக்கும் உரிமை, குறிப்பாகச் சட்ட விரோதமானது தவிர மற்றெல்லாக் காரியங்களுக்கும் ஒப்பந்தம் ஏற்படுத்திக்கொள்ளும் உரிமை ஆகியவை. இவற்றோடு பல நாடுகளில் வயதுவந்தவர்களில் பெரும்பாலோர் வாக்குரிமை பெற்றுத் தேர்ந்தெடுக்கப்பெறும் உரிமை, அதிகாரமுள்ள பதவிகளை வகிக்கும் உரிமை ஆகியவைகளைப் பெற்றிருக்கின்றனர். மேலும் பல நாடுகள் பொருளாதாரப் பாதுகாப்பின்மைக்கும், சுரண்டலுக்கும் எதிராக உத்தரவாதங்கள் அளிக்கின்றன; இலவசக் கல்வி வாய்ப்புக்கள் அளிக்கின்றன. கருணையினால் அல்லாமல் உரிமையினால் இன்னும் பல சமூக வசதிகளைச் செய்துதருகின்றன. ஒவ்வோர் அரசும் அனுமதித்திருக்கும் உரிமைகளின் வகைகளும், அவற்றை எவ்வாறு கடைப்பிடிக்கிறார்கள் என்பதும் அரசுகள் பிரிக்கப்படுவதற்குரிய பல வழிகளில் ஒன்றாகும். குறிப்பிட்ட அந்த அரசின் இயல்பிற்கும்

நோக்கத்திற்கும் ஏற்ப அதன் அங்கத்தினர்கள் தங்கள் பணிகளை நிறைவேற்றுவதற்கு அவசியமானவை என்று எவற்றை அரசு கருதுகிறதோ, அவைகளே உரிமைகளாகும். பொதுநலத்திற்காக இவை உபயோகப்படுத்தப்படும் என்று எப்பொழுதும் அனுமானித்துக்கொள்வதன் பேரிலேயே இவை தரப்படுகின்றன.[1]

சாதாரண காலங்களில் சாதாரண உரிமைகளை உபயோகிப்பது பல மக்களுக்குச் சிக்கலாக இருப்பதில்லை என்று இப்பொழுது விளங்குகிறது. பெரும்பான்மையினர் தாங்கள் என்ன அனுபவிக்க வேண்டும் என்று விரும்புகிறார்களோ, அதைத்தான் இவ்வுரிமைகள் குறிக்கின்றன. இந்த உரிமைகளை மொத்தமாக அடக்குமுறை செய்வதை அது பொறுத்துக்கொள்ளாது என்பது வெளிப்படை. ஏனெனில் அதுதான் முதலில் வேதனையுறவேண்டியிருக்கும். அப்படியே எந்தப் புது உரிமைகளை அது வேண்டினாலும் அவை அனுமதிக்கப்படத்தான் வேண்டும் என்பதும் வெளிப்படை.

## சிறுபான்மையோர் உரிமைப் பிரச்சினை

சிறுபான்மையோரின் உரிமையை மதிப்பதுபற்றிச் சிக்கல் எழுகிறது. சில தனி நபர்களோ அல்லது தொகுதிகளோ, அரசைக் கட்டுப்பாடு செய்யும் பெரும்பான்மையோருக்கு விருப்பமில்லாததும், ஏன், விரோதமானதுமான முறையில் உரிமையை உபயோகிப்பதை இங்குக் குறிப்பிடுகிறார். இணங்க மறுக்கும் மதத் தொகுதிகள் ஏற்படுத்தப்பட்ட திருச்சபைக்கு எதிராக இருக்கக்கூடும். சமாதான வாதமும், ஏகாதிபத்திய எதிர்ப்பும் ஒரு நாட்டின் உலக அந்தஸ்தைக் குறைக்கக்கூடும். பொது உடைமை வாதம் பொருளாதாரச் சமூக அமைப்பின் ஆதாரத்தைப் பலவீனப்படுத்துகிறது. பாசிசம் எந்தச் சுதந்தர வாழ்க்கையையும் அடிப்படையில் அரிக்கிறது.

அப்படியானால் தான் ஒப்புக்கொள்ளமுடியாத பெரும்பான்மையிடமிருந்து ஒரு மனிதன் நியாயமாக வேண்டக்கூடியது என்ன? இப்பொழுது எதிர்க்கட்சியில் இருப்பவர்களைத் தன்னுடைய

[1] 'மனிதன் என்ற முறையில் மனிதனுக்குரிய இன்னொருவருக்கு மாற்ற முடியாத மனித உரிமைகளோடு, மனித இயல்பின் ஆதாரமான காரணக் கூறுகளாகிய வேறு மூன்று உரிமைகளையும் சேர்த்துக்கொள்ளவேண்டும். இவற்றை வார்த்தை ஜாலங்களால் நிரூபிக்கமுடியாது. சமநிலையான மனிதத்தீர்ப்பு• இல்லையென்று மறுக்கமுடியாது. இவைகள் குடும்பத்தின் தூயதன்மை உணர்ச்சி, நமது நாட்டுக்கு நம்மீதுள்ள வேட்டல், நமது மனச்சாட்சிக்கும் கடவுளுக்கும் விசுவாசமாயிருக்கவேண்டிய கடமை' என்று டாக்டர் நத்தானியேல் மிக்லெம் (Dr. Nathaniel Micklem) தமது 'Theology and Politics' என்ற நூலில் வேறு உரிமைகளையும் இவற்றோடு சேர்க்கிறார்.

நோக்கத்தை ஒப்புக்கொள்ளும்படிச் செய்ய என்ன தேவையோ அவையெல்லாவற்றையும் அவன் வேண்டலாம். இப்படித் தான் சேர்ந்திருக்கும் சிறுபான்மையைப்பெரும்பான்மையாக்கும் வாய்ப்பைப் பெறுகிறுன். நூல்கள், பத்திரிகைகள், வாஞெலி, பொதுக்கூட்டம், பிரசாரக் கழகங்கள் ஆகியவையே அமைதியான முறையில் மற்றவர் களை வசப்படுத்துவதற்கு அவசியமான கருவிகளாகும். நேரடியாகப் பலாத்காரத்தைத் தூண்டாமலும், சட்டத்தை மீருமலும், அவன் என்ன விரும்புகிருனே, அதைப் பேசட்டும் ; என்ன விரும்புகிருனே, அதை எழுதட்டும். இதில் ஐயப்பாடுகள் எழுமாயின் அதிகாரிகளால் அல்லாமல் சட்டமன்றங்களால் அது தீர்க்கப்படட்டும்.

முக்கியமல்லாத விஷயங்களின்மீது அனுமதிக்கப்பட்ட குற்றங் காணுதலையும், அடிப்படையான காரியங்கள்மீது தடுக்கப்பட்ட குற்றங்காணுதலையும் சிலர் வேறுபடுத்துகிறுர்கள். ஆனுல், நிச்சய மாக அப்படிப்பட்ட பாகுபாடு பயனற்றதாகும். யார் இந்தப் பாகுபாட்டைச் செய்வது ? எந்தவகையில் குற்றங் கூறப்படுகிறது என்பதில் ஒதுக்கீடு இருப்பது, அதன் பொருளில் ஒதுக்கீடு இருப்பதைக்காட்டிலும் மிகவும் நல்லது. ஹைட் பார்க்கில் (Hyde Park) பேசும் சொற்பொழிவாளர் அமைதியான முறையில் மன்ன ராட்சியை நீக்குவதற்காக வாதமிடலாம். ஒரு குடியரசுக் கட்சி அமைப்பது சட்டப்படியானதாகும். ஆனுல், எழுத்தாளரோ, பேச்சாளரோ, தங்கள் நோக்கத்திற்காக ஆயுதந் தாங்கி, பக்கிங்ஹாம் (Buckingham) அரண்மனையைப் படையெடுக்கச் சொல்வோம் என்று சொன்னுல், சட்டம் அதில் தலையிடும். மன்னராட்சி என்ற நிறுவனத்தைப் பாதுகாக்க அல்ல. ஆனுல், மன்னரைக் காக்கவும், அமைதியான முறையில் பிரச்சாரம் என்ற கொள்கையை நிலை நாட்டவும் தலையிடும். பொதுவுடைமைவாதிகள், இதேபோன்று சமூக, பொருளாதார அமைப்பில் புரட்சிகரமான மாற்றத்தின் தேவையைப் பிரகடனப்படுத்தலாம் ; செல்வர்களைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும் என்று வலியுறுத்தலாம். ஆனுல், அவர் இங்கிலாந்தின் பாங்கை (Bank of England) நெருப்பில் கொளுத்தும்படிச் சொல்லக் கூடாது. அல்லது முதலாளித்துவ ஆதரவாளர் கூட்டங்களைப் பலாத்காரத்தைப் பயன்படுத்திக் கலைக்கக்கூடாது.

இந்தவிதமான இணங்காமையைப் பரந்த அளவில் சகித்துக் கொள்வதன் காரணம், வரம்பில்லாத பேச்சுச் சுதந்தரமானது ஒரு காப்புக் கதவாகச் செயலாற்றுவதனுலும், நடைமுறையில் வேறு எந்த விளைவையும் உண்டாக்காததாலுந்தான். ‘நான் விரும்பு வதை நான் செய்யுமட்டும் என் பிரஜைகளும் அவர்கள் விருப்பம் எதுவோ, அதைச் சொல்லட்டும்’ என்று பிரஷியாவின் மகா பிரடரிக்

(Frederick the Great of Prussia) கூறினர். ஆனல், இவைகளில் ஒரு பகுதிதான் உண்மை. பிரிட்டனில் தொழிலாளர்கட்சி பெரும் பான்மையாவதற்கு அஸ்திவாரமாக அமைந்தவை திறந்தவெளிக் கூட்டங்களே ஆகும். இதுபோன்றே பெண்ணுரிமைச் சங்கங்களும். பேச்சுரிமை எங்கு அழைத்துச்செல்லும் என்பது நமக்குத் தெரியாது.

## இணங்காமையைச் சகிப்பதன் தேவை

சுதந்தரமான சமுதாயங்கள் சிறுபான்மையோரின் உரிமைகளைப் பாதுகாக்கவேண்டும். ஏனெனில், அவற்றை மறுப்பதன்மூலம் தங்களையே அவர்கள் மறுத்துக்கொள்கிறார்கள் என்பதே நாம் இங்கு அறியும் முடிவாகும். இவ் வுரிமைகளை நல்லமுறையில் பயன் படுத்துவதற்குச் சில நிபந்தனைகளுண்டு. பேச்சுரிமையின் பயனைச் சிறுபான்மை பெரும்பான்மையாக மாற்றப்படும்வரையிலும், பெரும் பான்மையோரின் முடிவுகளை ஏற்றுக்கொள்வதே, ஒப்புக்கொள்ளாம லிருப்பதை வெளியிடுவதற்காக நாம் கொடுக்கும் விலையாகும். பிலெடெல்பியா மாநாட்டில் (Philadelphia Convention) புதிய அமெரிக்க அரசியலமைப்பின் எதிர்ப்பாளர்கள் அவர்கள் வெறுத்த ஓர் அமைப்பை ஏற்றுக்கொண்டதுமல்லாமல், அன்றாடச் செயல் முறையில் அதைச் சிதைக்க முயற்சி செய்யாமல், அந்த அமைப்பில் குறைகளிருப்பதாகச் சொல்லப்பட்டாலும் அதை வெற்றிகர மாக்கியது இதற்கு ஓர் எடுத்துக்காட்டாகும். மற்றப்படிப் பெரும் பான்மையினரும் தங்கள் அதிகாரத்தைத் தவறாகவும் பயன்படுத்தக் கூடாது. ஒரே வார்த்தையில் சொன்னல், இரண்டு பக்கங்களிலும் நடுத்தரமான போக்கும், கொடுத்து வாங்கும் தன்மையும், வேறு படுவதை ஒப்புக்கொள்வதும் ஆகிய ஒருவகையான ஒருமைப்பாடு உண்மையில் நிலவவேண்டும். ‘அடிப்படையில் மக்கள் ஒன்றாக இருப்பதாக நமது அரசியற்பொறி கருதுவதால் அவர்களுக்குள் பிணக்குகளை அது தாங்கிக்கொள்ளக்கூடும்’ என்று பால்போர் பிரபு (Lord Balfour) ஒருசமயத்தில் கூறியிருக்கிறார்.

எல்லாம் சொல்லி முடித்தபிறகும், உரிமைகளுக்கு உத்தரவாத மளிக்கும் ஓர் அரசு, இவ் வுரிமைகள் தனக்கு எதிராகப் பயன்படுத்தப் படக்கூடும் என்ற உண்மையை ஏற்றுக்கொள்ளவேண்டும். அப்படி யானல், உரிமைகளைப் பயன்படுத்தும் விதத்தைத் தான் ஒப்புக் கொள்ளாததால் அது கொடுத்த உரிமைகளை எடுத்துவிடாம லிருக்கும்படி எவ்வாறு அவற்றைப் பாதுகாப்பது என்ற பிரச்சினை எழுகிறது. இதற்கு முழு உத்தரவாதம் அளிக்கமுடியாது என்பதே இதன் விடையாகும். அமெரிக்காவிலும், ஃபிரான்சிலும் செய்யப் பட்டிருப்பதுபோல, உரிமைகளை அரசியல் அமைப்புச் சாசனத்தில்

பொறித்துவைக்கும் முயற்சிகள் செய்யப்பட்டிருக்கின்றன. ஆனால், அரசியல் அமைப்பானது திருத்தப்படலாம். அல்லது அதற்கும் மோசமாக, அதன் எல்லா முக்கியத்தையும் இழக்கும்வகையில் அதற்கு விளக்கம் கூறப்படலாம். அல்லது அது இருப்பதையே மதிக்காது விட்டுவிடலாம். அப்படியாயின் அதனுல் துயருறுகிறவர்களின் குறை தீர்க்கப்படாமற்போகும்.[1] பிரிட்டனில் (இங்குத் தனியாள் உரிமைகள் வேறெங்குமுள்ளதுபோல நிச்சயமாக மதிக்கப்படுகின்றன.) இப்படிப்பட்ட அரசியல் அமைப்புக்குட்பட்ட உத்தரவாதங்கள் எதுவுமில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இங்குப் பாராளுமன்றச் சட்டத்தினுல் எந்த உரிமையும் தற்காலீகமாக நிறுத்திவைக்கப்படலாம். அல்லது நீதிமன்ற விளக்கமாகிய உசித அதிகாரத்திற்குட்பட்டுமிருக்கலாம்.

## உரிமைகள் பொதுமக்கள் அபிப்பிராயத்தின்மீது சார்ந்திருக்கின்றன

உரிமைகளுக்குரிய ஒரே உத்தரவாதம் ‘மக்கள் எதுவரை பொறுத்துக்கொள்வார்கள்’ என்பதில் அடங்கியிருப்பது இதிலிருந்து தெரிகிறது. முடிவாகச் சொல்வதானுல் சமுதாயத்தின் தாராள மனப்பான்மையைப் பொறுத்தே உரிமைகள் இருக்கின்றன எனலாம். விவேகமான சமுதாயம், சுதந்தரம் ஒரு சமூகத் தேவை என்பதை அறிந்திருக்கிறது. நியாயமான குற்றம் காணுதலுக்கு அது அஞ்சுவதில்லை. வளர்ச்சிக்குப் பலவகையான அபிப்பிராயங்கள் இருப்பது நல்லது என்பதை அது அறிந்திருக்கிறது. மனமொத்த கூட்டுறவு, திணிக்கப்பட்ட ஒருமைப்பாட்டைக்காட்டிலும் சிறப்பானது என்று அது அறியும். ஒரே சொல்லில் சொன்னுல், அது சுதந்தரத்தில் நம்பிக்கையுடையது. சுதந்தரமானதொரு சூழ்நிலையில் பொதுவாக மனிதர்கள் தங்கள் சுதந்தரத்தைக் குற்றங் காணும் உரிமை உட்படச் சமுதாயத்தின் உண்மையான நலன்களுக்குக் குந்தகமாக, நீண்ட காலப்போக்கில் உபயோகிக்க மாட்டார்கள் என்று அனுமானிக்கிறது. இதற்குமேல் போவது கடினம். குறுகிய பொதுநோக்கை எதுவும் சமன்செய்யமுடியாது. அதேபோல அரசாங்கத்திடமிருந்தோ, அல்லது அபிப்பிராயங்கள் மூலமாகவோ வரும் ஒவ்வோர் உறுதிக்கும் நீதித்துறை இடங்கொடுக்குமானுல் வேறெதுவும் அதைச் சீர்செய்யமுடியாது.

[1] அமெரிக்காவின் சில பகுதிகளில் நீக்ரோக்களின் நிலை இதுதான்.

## (iv) இயற்கை உரிமைகள் (Natural Rights)

### 'இயற்கை' உரிமைகள் உண்டா?

உண்மையான சொந்த வாழ்க்கையில் உரிமைகள் முக்கிய மானவையாக இருந்தமையால், சில உரிமைகள் மிக முக்கியமானவை யாகக் கருதப்பட்டு அவை இயற்கை உரிமைகள் என்று அழைக்கப் படலாயின. ஆதி உற்பத்திச் சக்தியாகிய 'இயற்கை'யானது ஒவ்வொரு மனிதனுக்கும் தன்னுடைய பகுத்தறிவினாலே தன்னுடைய வாழ்க்கையை அமைத்துக்கொள்ளச் சரியான கொள்கை களைக் கண்டுகொள்ளும் சக்திகளைக் கொடுத்திருக்கிறது என்ற நம்பிக்கையின்மீது இந்தக் கருத்து அமைந்திருக்கிறது. இது ரோமாபுரியில் தோன்றிற்று. பல இனங்களையும், நாடுகளையும் சேர்ந்த மக்கள் ரோமர் ஆட்சியின்கீழ் வாழும்போது பொது வாழ்க்கை விதிகள் சில அவர்களுக்கிருப்பதாகத் தோன்றின. மானிட இயல்பு கொண்ட மனிதர்கள் என்ற ஒரே உண்மையால் பாரபட்ச மற்ற முறையில் நல்லது கெட்டது ஆகியவைகளை அறியும் ஓர் அறிவு அவர்களுக்கு அளிக்கப்பட்டிருந்தது. எல்லா மனிதருக்கும் பொதுவானதாக வெளிப்படையாகத் தோன்றிய இந்தக் கொள்கைத் தொகுதியை ரோமர்கள் 'இயற்கைச் சட்டம்' (Natural Law) என்று அழைத்தார்கள். அவர்தம் சட்டங்களின் பெரும்பகுதிகள் இதனைச் சார்ந்தனவாக இருந்தன. இக் கொள்கையின் முக்கிய ஆதாரத்தைச் சிசரோ (Cicero) தம் சொற்களில், 'மனித இயல்பு, இயற்கை ஆகிய இரண்டிலும் காணப்படும் பகுத்தறிவோடு ஒன்றாக இருக்கக் கூடிய உலகம் முழுவதற்கும், எக் காலத்திற்கும் பொருந்தக்கூடிய சட்டம் இருக்கிறது. பகுத்தறிவு படைத்து ஒவ்வோர் உயிர்ப் பொருளையும், கடவுளாயினுஞ்சரி, மனிதனாயினுஞ்சரி, பொதுச் சமூகக்கட்டுக்குள் ஒன்றாக இச் சட்டம் இணைக்கிறது. இயற்கைச் சட்டத்தின் கொள்கை மானிட ஆளுந் தத்துவத்தின் உள்மதிப்பை உணர்வதாக அமைகிறது. இதனுள் பொதிந்திருக்கும் சமத்துவம், எல்லாவற்றையும் உள்ளடக்கிய சகோதரத்துவம் ஆகியவையும் சேர்த்துத்தான் நாம் மதிப்பை உணரமுடிகிறது' என்று கூறுகின்றார்.

இறையியல் சார்பு மனம்பெற்ற இடைக்காலம் இந்த இயற்கைச் சட்டத்தையும், கடவுளின் சட்டத்தையும், திருச்சபையின் சட்டத்தை யும் ஓரினமாகக் கண்டது. ஆனால், அரசியற்கட்டமையின் ஆதார மானது நடைமுறைச்சிக்கலாக இல்லாதவரைக்கும் இந்தக் கோட் பாடு நிறுத்திவைக்கப்பட்டிருந்தது. 17 ஆம், 18 ஆம் நூற்றாண்டு களில் இது முக்கியப் பிரச்சினையாக மாறியதால் மீண்டும் இதில்

அக்கறை தோன்றியது. இருப்பினும் இடைக்காலத்திய மறை பொருள் உருவம் இக் கோட்பாட்டினின்றும் கழற்றப்பட்டு, இங்கிலாந்து, ஃபிரான்சு, அமெரிக்கா ஆகிய நாடுகளில் தத்துவ ரீதியாக இக் கோட்பாடு விளக்கப்பட்டது. 'இயற்கை நிலையி லிருந்த அரசை ஆளுவதற்கு இயற்கைச்சட்டம் ஒன்றிருந்தது. இச் சட்டமே பகுத்தறிவாகும். மனிதர்கள் அனைவரும் சமமாகவும், சுதந்தரமாகவும் இருப்பதால் ஒருவரும் மற்றொருவரின் வாழ்க்கை, ஆரோக்கியம், விடுதலை அல்லது உடைமைகள் ஆகியவற்றில் இடையூறு செய்யக்கூடாது என்று அதனிடம் ஆலோசனை கேட்கும் எல்லா மானிடவர்க்கத்துக்கும் அச்சட்டம் போதிக்கிறது.' 18 ஆம் நூற்றாண்டில் வெளிவந்த கலைக்களஞ்சியம் (Encyclopedie) ஒன்றின் சொற்களின் அடிப்படையில்தான் பின்னர் இதுபற்றி எழுந்த வாசகங்கள் ஊக்கம் பெற்றிருக்கின்றன. அதில் கூறப்பட்டிருப்பது பின்வருமாறு: 'எல்லா மனிதர்மீதும் கடவுள் நியமித்திருக்கும் இயற்கைச் சட்டத்தின் எல்லைக்குள்ளாகத் தங்கள் உடைமை களையும், தங்களையும் எது அதிக மகிழ்ச்சிக்குள்ளாக்கக்கூடும் என்று நினைக்கிறார்களோ, அந்த வழியில் உபயோகித்துக்கொள்ளும் படியாகத்தான் இயற்கை, மனிதனுக்கு உரிமைகளை அளித்திருக் கிறது. அவர்கள் கவனமாகத் தங்கள் இயல்பையும் தங்கள் நிலையை யும் கவனித்துப் பார்த்தால் பகுத்தறிவின் துணையினால் இதைக் கண்டுபிடிக்க முடியும். சட்டமும், உரிமையும் 'இயற்கை' என்ற அடைமொழியோடு அழைக்கப்படுவதன் காரணம் சமுதாயங்கள் ஏற்படுத்தப்படுவதற்கு முன்பே நாம் உண்டாக்கப்பட்டிருந்தோம் என்ற தனித்தன்மையான கருத்திலிருப்பது பெறப்பட்டது என்பதால்தான்.'

## இயற்கைச் சட்டம்

இயற்கைச் சட்டத்தின் கோட்பாடுகளும், ஆங்கிலோ—சாக்ஸோனியப் பரம்பரைப் பழக்கமான தன்னாட்சியும் ஒன்றாகச் சேர்க்கப்பட்டு, டாக்டர் ஸ்டேப்பில்டன் (Dr. Stapleton) குறிப்பிடுவது போல, 'அரசியல் உறவுகளைப்பற்றிய நடைமுறைக் கருத்துக்களின் அரிய சுருக்கமாக' இது அமைந்தது. அமெரிக்கச் சுதந்தர இயக்கம், ஃபிரஞ்சுப்புரட்சி ஆகியவற்றின் தலைவர்கள் இக் கோட்பாட்டை இவ்வாறு கண்டனர். அவர்கள் கொள்கைகளுக்கு அவர்கள் கோரிய [illegible]யும் உள்ளடக்கிய உண்மைத்தன்மையை இக் கோட்பாடு வழங்கியது. ஒன்று இயற்கைச்சட்டமானது கற்பனை யாக ஆக்கப்பட்டது அல்லது காலத்திற்கும் இடத்திற்கும் அப்பாற் பட்ட உண்மையாக இருந்தது. அது நான்கு அடிப்படையான உண்மைகளை வலியுறுத்தியது. முதலாவது, நீதி என்பது மனிதனின்

வெறும் விருப்பம் மாத்திரமல்லாமல் இயற்கையின் பகுதியாகவும் இருக்கிறது. இரண்டாவது, நீதி என்பது அறிவுக்குப் புலப்படக் கூடியது. அதாவது மனித மனத்தால் அதை அறியமுடியும். ஏனெனில் இயற்கைச்சட்டம் என்பது பகுத்தறிவுச் சட்டமேயாகும். ஆகவே, எதேச்சாதிகாரமான அல்லது அறிவுக்குட்படாத எதுவும் நியாயமானதாக இருக்கமுடியாது. மூன்ருவதாக, பெரும்பான்மை முடிவுகள் வழுவற்றனவாக இருக்க முடியாதெனினும், மனித குலத்துக்கு எது நல்லது என்பதைத் தீர்மானிக்க அதைத்தவிர வேறு நியாயமான வழியொன்றும் கிடையாது. இதனுல் ஒவ்வொரு மனிதனையுங் கலந்தாலோசிக்க வேண்டும் என்ற நிலை ஏற்படுகிறது. நான்காவதாக, இயற்கைச்சட்டம் எல்லாவற்றையும் உள்ளடக்கியது. எல்லாவற்றையும் உள்ளடக்கும் தன்மையே நீதிக்கும் அளவு கருவியாக இருக்கிறது. மான்டெய்ன் (Montaigne) கூறுவதுபோல நேர்மையும், நீதியும் ஒரு குறிப்பிட்ட நாட்டைச்சார்ந்தனவாக மட்டும் இருக்கமுடியாது.[1] 'நேற்று அது கவுரவிக்கப்பட்டதைப் பார்த்தேன். நாளைக்கு அது கவுரவிக்கப்படமாட்டாது. ஒரு நதியைக் கடந்ததால் அது ஒரு குற்றமாக மாறிவிட்டது. இப்படிப்பட்டது எவ்வகையான நல்ல தன்மையைச் சேர்ந்ததாக இருக்கக்கூடும்?' என்று பாஸ்கல் (Pascal) எழுதுகிருர்.

## உரிமைகளின் பிரகடனங்கள்

அமெரிக்கர்கள் சுதந்தரத்திற்காகவும், வெளிநாட்டுக் கட்டுப்பாட்டிலிருந்து விடுதலைக்காகவும் போராடியதை நியாயப்படுத்த ஏதாவதொரு கொள்கையைத் தேடிக்கொண்டிருந்தார்கள். ஃபிரஞ்சுக்காரர்களும் தங்களது தன்னுட்சி விருப்பத்தையும், எதேச்சாதிகார ஆட்சியிலிருந்து விடுதலையையும் நியாயப்படுத்தக் கொள்கையொன்றைத் தேடினுர்கள். இயற்கைச்சட்டம் இந்த நியாயத்தை அளித்தது. இரு நாடுகளும் அவர்களுடைய புதிய அரசியல் நம்பிக்கைகளை மனித உரிமைகள் என்ற வரலாறு போற்றும் பிரகடனங்களில் வெளியிட்டார்கள். 'இவைகள் தாமாகவே தெளிவாக விளங்கக்கூடிய உண்மைகள் என்று நாங்கள் கருதுகிரும். மனிதர்களனைவரும் சமமாகவே படைக்கப்பெற்றிருக்கிருர்கள். அவர்களை உண்டாக்கியவர் வேருெருவருக்கு மாற்றமுடியாத பல உரிமைகளை அவர்களுக்கு அளித்திருக்கிருர். இவைகளில் வாழ்க்கை, விடுதலை, மகிழ்ச்சியை நாடுதல் ஆகியவை அடங்கியிருக்கின்றன.

[1] நாம் மேற்கோளாகக் கையாண்டு வருவதை எழுதிய டாக்டர் ஸ்டேப்பில்டன் (Dr. Stapleton) இந்த நான்கு அம்சங்களையும் நான்கு சொற்களாக வடித்துத் தருகிருர்: அவை உண்மைநிலை, அறிவுக்குப் புலப்படக்கூடும்நிலை, பிரதிநிதித்துவத் தன்மை, நீதியை அறிவால் அறிந்து கொள்ளும் நிலை.

இந்த உரிமைகளைப் பாதுகாப்பதற்காக அரசாங்கங்கள் மனிதர்களுக்குள்ளே அமைக்கப்பட்டிருக்கின்றன. ஆளப்பெறுவோரின் ஒப்புதலிலிருந்து நியாயமான அதிகாரங்களை இவைகள் பெறுகின்றன. இந்த முடிவுகளை எந்த அரசாங்கமாவது அழிப்பதாக இருப்பின், அதை மாற்றவோ அல்லது நீக்கவோ செய்வது மக்களின் உரிமையாகும்.'

பதின்மூன்று ஆண்டுகளுக்குப்பிறகு ஃபிரஞ்சுத் தேசிய சட்டசபை (French National Assembly) ஜெபர்சனின் (Jefferson) சொற்களை எதிரொலிக்கும் வகையில், 'மனிதனின் உரிமைகளில் அறியாமை அல்லது நினைவின்மை அல்லது வெறுப்பு ஆகியவைகளே பொது இடையூறுகளுக்கும், அரசாங்க ஊழல்களுக்கும் காரணங்களாகும்.' ஆகவே, 'இயற்கையான, இன்னொருவருக்கு மாற்றமுடியாத, தெய்வத்தன்மைபெற்ற மனித உரிமைகளை ஓர் உயர்ந்த சாசனத்தில் பிரகடனப்படுத்தத் தீர்மானித்தார்கள். இவைகளில் முதலாவது உரிமைகளில் சமத்துவம்'. அடுத்தது, விடுதலை, உடைமை, பாதுகாப்பு அடக்குமுறைக்கு எதிர்ப்பு, அதோடு இறைமை மக்களிடத்தில் துஞ்சுகிறது என்ற உண்மையாகும்.

இந்தச் சாசனங்களின் முக்கியத்துவம் என்ன? 'உரிமைகள் பிரகடனம் எல்லோருக்கும் நன்ருகத் தெரிந்ததாயும், எல்லோராலும் மரியாதை செய்யப்படுவதுமான சுதந்தர சமுதாயத்திற்குத் தரப்படுத்தப்பட்டதொரு முதுமொழியை அமைத்துத் தருவதற்காகச் செய்யப்பட்டது. சதா அதை நோக்குவதற்கும், சதா அதற்காக முயற்சிகள் செய்துகொண்டும், பூரணமாக அடையமுடியாவிட்டாலுங் கூடச் சதா அதற்குத் தோராயப்படுத்திக்கொண்டும், அதனல் சதா விரிந்துகொண்டும், அதன் செல்வாக்கை ஆழ்ந்ததாக்கிக்கொண்டும், எங்குமிருக்கும் மக்களின் வாழ்க்கையின் மதிப்பையும் மகிழ்ச்சியையும் அதிகப்படுத்திக்கொண்டும் இருப்பதற்காகப் பிரகடனம் செய்யப்பட்டது', என்று லிங்கன் (Lincoln) கூறியிருக்கிருர். இன்னொரு வாசகத்தில் லிங்கன் இதை 'உரியகாலத்தில் மனிதர்களின் தோள்களிலிருந்து பாரங்கள் அகற்றப்படுவதற்கும், எல்லாருக்கும் சமமான வாய்ப்புக்கொடுக்கப்படும் என்பதற்குமுரிய உறுதிமொழி' என்று குறிப்பிடுகிருர்.[1]

1. 'இது மனிதனின் கடமைகளெல்லாம் ஒப்பந்தத்திற்கு அல்லது அக்கறைகளுக்கு அல்லது வலிமைக்கு உட்படக்கூடியவை அல்ல என்ற கோட்பாட்டை வெற்றிகரமாகப் பிரகடனப்படுத்தியதாகும்,' இந்த ஓர் அச்சடித்த பக்கம் பெரிய நூலகங்களைவிட முக்கியமானதாகிறது. நெப்போலியனின் எல்லாப் படைகளையும்விட அதிக வலிமைபெற்றது' என்று பிரகடனம்பற்றி ஆக்டன் பிரபு (Lord Acton) கூறுகிருர்.

## இயற்கைச் சட்டங்களின் அனுமானங்கள்

இயற்கைச் சட்டமாவது அல்லது உரிமைகளின் இயற்கையான நியாயமாவது வரலாற்று மூலமாகவோ அல்லது நுண்பொருள் ஆராய்ச்சி மூலமாகவோ நிரூபிக்க முடியாது என்பது வெளிப்படை. வடிவ இயலின் இயல் ஒழுங்குகளும் (Axioms of Geometry) இவ்வாறே நிரூபிக்கமுடியாதவை. இவைகளை மறுப்பது எப்படிக் கணக்கியலில் அபத்தமாகுமோ, அப்படியே இந்தப் புலன்களுக்கு அப்பாற்பட்ட கருத்துக்களும் மறுக்கப்பட்டால் அவை சமூக, நெறிமுறைக் குழப்பத்தை உண்டாக்கும். அரசின் மனம்போன போக்கைச் சார்ந்தனவாக உரிமைகள் இருக்குமானால் பாதுகாப்போ அல்லது நாகரிக வாழ்க்கையோ இருக்கமுடியாது.[1] இதற்குரிய ஒரேமாற்று 'இயற்கை' உரிமைகளில் தீவிர நம்பிக்கை கொள்வதாகும். அதாவது, இந்தச் சக்திகள் இல்லாமல் மனிதன் பகுத்தறிவுள்ளவனாக இருக்கமுடியாது. ஏனெனில் அவனுடைய செயல்களுக்காக அவனது மனச்சாட்சிக்குக் கணக்குக் கொடுக்க வேண்டியவனாயிருக்கிறான். இந்தக் கோட்பாடு நிரூபிக்கப்பட முடியாததென்றால், இதன் எதிர்மறை நினைக்கப்படவே முடியாதது. சர்வாதிகார முறைகளில் நடக்கும் கொடுமையான செயல்களைக் காணும்போது இதன் உண்மை மேலும் மேலும் உணர்ந்தறிந்து கொள்ளப்பட்டு வருகிறது. 'பொய்க்கால்கள்மீது நிற்கும் முட்டாள்தனமே இயற்கை உரிமைகள்' என்று ஒரு நூற்றாண்டுக்கு அல்லது அதற்குச் சிறிது முன் சொல்லப்பட்டதுபோல இப்பொழுது சொல்லப்படுவதில்லை. ஆனால், 'செய்யவும், செய்யக்கூடாததுமான காரியங்களின் முழுத் தோற்றமே இயற்கைச்சட்டம். இது—மனிதன் மனிதனாக இருக்கிறான்—நாம் தீயவர்களாக இல்லாமல் நல்லவர்களாக இருக்க வேண்டும் என்ற சாதாரண உண்மையைப் பின்பற்றுகிறது.'

## உரிமைகளின் பன்னாட்டு உத்தரவாதங்கள்

உரிமைகளின் கோட்பாட்டைப் புலங்கடந்த நுண்பொருள் ஆராய்ச்சி அல்லது வரலாற்று முட்டாள்தனம் என்று தள்ளிவிடுவதற்குப் பதிலாகப் பல அறிஞர்கள் இந்தக் கோட்பாட்டை மீண்டும் எடுத்துச் சொல்லித் தனித்த அரசு, அதன் சட்டம் ஆகிய இவைகளுக்குள் மட்டுமல்லாமல் அதைப் பரந்ததொரு அடிப்படையில்

[1] மேலும் அரசு எந்த 'உரிமை'யைக் கொண்டு உரிமைகளை வழங்கவோ மறுக்கவோ முடியும்? ஒன்று ஆளப்படுவோரின் ஒப்புதல் இந்த உரிமையை அளிக்கிறது. இங்கு ஒப்புதல் பகுத்தறிவற்ற இயற்கை உரிமையாகிறது அல்லது வலிமை இந்த உரிமையை அளிக்கிறது. அப்படியானால் நாம் மிருக பலத்தின் ஆட்சிக் காலத்திற்குத் திரும்பவும் போய்விடுகிறோம்.

அமைக்க முயற்சிகள் செய்கிருர்கள். பல திட்டங்கள் தோன்றி யுள்ளன. அவைகள் எல்லாம் ஒரு வழியில் இல்லாவிட்டால் மற்ருெரு வழியில் மனிதன் மனிதனுக இருப்பதால் அடிப்படையாக அவனுக்கு உள்ள சில உரிமைகளை ஒவ்வோர் அரசும் ஒப்புக் கொள்ளவேண்டிய கடமையை எடுத்துரைக்கின்றது.[1] இவைகள், வாழ்க்கை, விடுதலை, சொத்து, மதச்சடங்குகள், பேச்சு, எல்லாச் செய்தித் தொடர்புச் சாதனங்களையும் பயன்படுத்தல், தேசீயச் சிறுபான்மையினருக்காக உள்ள தனிப்பள்ளிகளில் அவர்கள் தாய் மொழி பயன்படுத்தப்பெறல், பொதுக்கல்வி நிலையங்களில் எல்லோரையும் சேர்த்துக்கொள்ளுதல், பொருளாதார வேலை சம்பந்தமான நடவடிக்கைகளில் ஈடுபடுதல், கூட்டம் கூட்டும் உரிமை, தொகுதிகளாகவும், கட்சிகளாகவும் சேரும் உரிமை என்பவற்ருேடு, சுதந்தரமான தேர்தல் மூலமாக அரசாங்கத்தில் பங்குபெறும் சுதந்தர உரிமையும், போதுமான வாழ்க்கைத்தரத்திற்கும், தொழிலாளர் நிலை உயர்வுக்குமான உரிமையும் இரண்டு திட்டங் களிலாவது காணப்படுகின்றன.

ஆக இந்த உரிமைகள் இருவகைப்படுகின்றன. சில உரிமைகள் பல்லின அரசுகளிலுள்ள இயற்கையான சிறுபான்மையோருக்குத் தனித்த முறையில் பயன்படுகின்றவை. ஆகவே இனப்பிரச்சினைகள் பற்றி நாம் ஆராயும்போது இவற்றையும் சேர்த்துக்கொள்வது நல்லது. மற்றவை எல்லாக் குடிமக்களுக்கும் பொருந்துபவை. இரண்டு பாலாருக்கும் சமமாக இவை பயன்படுத்தப்படவேண்டும் என்ற வலியுறுத்தல் தவிர வேறு புதிய உரிமைகள் இப்பொழுது இருப்பதைக் காட்டிலும் வேண்டியிரா. எந்த ஒரு நாகரிகமான அரசும் இந்த உரிமைகளை ஒப்புக்கொள்வதைத் தவிர வேறு மாற்று வழியில்லை என்றும், குறிப்பிட்ட சமுதாயத்தின் சூழ்நிலை களின்மீது இவைகள் சார்ந்தில்லாமல் எல்லோருக்கும் அடிப்படை யானவையாக இருக்கின்றன என்றும் கூறும் ஆணித்தரமான வாசகம் மிக முக்கியமானதும் கவர்ச்சியானதுமாகும்.

[1] எச். ஜி. வெல்ஸ் அவர்களின் திட்டத்தை அவருடைய New World Order (1940) என்ற நூலில் காணலாம்; அமைதியை நிலைநாட்டுவதற்கு அமைக்கப்பட்ட விசேஷ குழுவின் திட்டங்கள் (1943-44) கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த டாக்டர் லாட்டர்பேக்ட் (Dr. Lauterpacht) அவர்களின் 'International Bill of Human Rights; Statement on Essential Human Rights drafted by an International Committee of the American Law Institute (1944).

## ஐக்கிய நாடுகள் பிரகடனம்

ஐக்கிய நாடுகள் சபையின் பொருளாதார சமூகக் கழகம்[1] இந்தப் பிரச்சினையின்மீது வேலை செய்து வருகிறது. பன்னாட்டு மனித உரிமைச் சாசனம் ஒன்றைத் தயார் செய்வதற்காக ஒரு குழுவை நியமித்திருக்கிறது. இப்பொழுது இந்தத் திட்டம் தயாரிக்கப்பட்டுக் கருத்தை அறிவதற்கும் குற்றங் குறைகளை அறிவதற்கும் சுற்றி அனுப்பப்பட்டிருக்கிறது. இந்த உரிமைகளும் சுதந்தரங்களும் பயனுள்ள முறையில் உத்தரவாதமளிக்கப்படும் வழியோ வாய்க்காலோ இந்தச் சாசனத்தில் கூறப்படவில்லை என்று பன்னாட்டு உறவுப் பயிற்சிக் கழகம் (International Academy of Diplomacy) கூறியிருப்பது இங்குக் கவனிக்கவேண்டிய காரியம். 'ஒவ்வோர் அரசும் (கட்டாயமாக)......வேண்டும்......எவ்வளவு...... வேண்டும்? பல வழிகள் கூறப்பட்டிருக்கின்றன. உலக நீதி மன்றத்திற்கு முறையீடு, அல்லது விசேஷ உலக விசாரணைக் குழுவிடம் முறையிடுதல் முதலியன குடிமக்களுக்குத் தங்களது அரசாங்கத்திற்கு எதிராக மனுச் செய்துகொள்ளும் உரிமையை அளிப்பதாகுமா? உரிமைகள் மறுக்கப்பட்டால் மறுத்த அரசு உட்பட எல்லா அரசுகளிலும் வானொலி மூலமாக விளம்பரப்படுத்தும் வசதிகள் அளிக்கலாமா? மறுக்கும் அரசுகளை ஐக்கிய நாடுகள் சபை, அதன் துணைச்சபைகள் முதலிய பன்னாட்டுக் கூட்டுறவு அங்கங்களி னின்றும் ஒதுக்கிவைக்கலாமா? சாதாரண பொருளாதார உறவுகளை மறுப்பதும், முக்கிய மூலப்பொருள்கள் போவதைத் தடைசெய்து, பகிஷ்காரம் அல்லது யுத்தம் செய்தல் என்ற அளவிற்குப் போகலாமா? போலந்து நாட்டுப் பிரதிநிதிகள், எந்த ஒரு நாடு மனித உரிமைகள் சாசனத்திற்கு மாறான சட்டம் இயற்றுகிறதோ, அந்த நாட்டை ஓர் ஆக்கிரமிப்புச் செய்யும் நாடாகக் கருதவேண்டும் என்று ஆலோசனை கூறினார்கள்.[2]

இந்தப் பிரச்சினை மிகவும் கடினமானது. குறிப்பிட்ட அரசு களில் உரிமைகளின் உத்தரவாதத்தைப்பற்றிப் பேசிய பழைய

[1] ஐக்கிய நாடுகள் சபையின் அங்கத்தினர்களை உரிமைகளின் உண்மைத் தன்மையும், அவைகள் இருப்பதையும் ஐக்கியநாட்டுச் சாசனமும், இதர பிரகடனங்களும் ஒப்புக்கொள்ளும்படிச் செய்கின்றன என்பது கவனிக்கத் தக்கது. ஐக்கிய நாட்டுச் சாசனத்தில் மனித உரிமைகளுக்குள்ள மதிப்பை வளர்ப்பது, ஊக்குவிப்பது ஆகியவைபற்றி 5 இடங்களில் காணப்படு கின்றன. அமெரிக்க நாடுகளின் சமாதான—யுத்த மாநாடு மெக்ஸிகோ நகரில் நடைபெற்றது. அவர்களது தீர்மானத்தில் இவை பலமுறைகள் கூறப்பட்டிருக்கின்றன.

[2] ருஷ்யாவின் தலைமையிலுள்ள ஸ்லாவ் (Slav) நாடுகளில் ஒன்றுகூடச் சாசனத்தை இறுதியில் ஒப்புக்கொள்ளவில்லை என்பது வருத்தத்தோடு குறிப்பிடவேண்டிய நிகழ்ச்சியாகும்.

நிலைக்கே திரும்பவும் வந்துவிட்டோம். இவையெல்லாம் அபிப்பிராயத்தைச் சார்ந்து இருக்கின்றன. அது ஒன்றே, அரசாங்கங்களைத் தங்கள் உள்நாட்டு இறைமையைப் போதுமான அளவுக்கு விட்டுக் கொடுக்குமாறு செய்யமுடியும். அப்படி இருந்தால் பன்னாட்டு விசாரணைக் குழுவோ அல்லது பன்னாட்டுச் சட்டமோ அந்த அரசுக்கும் அதன் குடிமக்களுக்கும் இடையே புகுந்து நியாயம் வழங்க முடியும். பதிவு செய்யப்பட்ட வரலாற்றிலே இதுவரை இப்படி நடந்ததில்லை. எனவே அப்படிப்பட்ட அபிப்பிராயத்தின் ஆதரவு இல்லையெனில் எந்தப் பன்னாட்டு விசாரணை மன்றமும் பாதுகாப்புடையதாகவும் சுதந்தரமானதாகவும் இராது. 'தங்கள் உறுதிமொழிகளையும், வாக்குறுதிகளையும் பயனுறச் செய்வதற்கு அவசியமான எந்தச் சட்டத்திற்கும் பணிவதாக' ஐக்கிய நாட்டுச் சாசனத்தில் கையெழுத்திட்ட அங்கத்தினர்கள் அனைவரும் வாக்குறுதி அளித்தனர் என்பது உண்மையே. ஆனால் அவர்கள் உண்மையில் அப்படி நடந்துகொள்வார்களா ? பொது மக்கள் அபிப்பிராயத்திற்குப் போதனை இன்னும் அதிகம் தேவை.

## மனிதருக்கிடையே இயற்கையான சமத்துவம்

நிரூபிக்கமுடியாத, ஆனால் முக்கியமான இயற்கைச் சட்டத்தின் கொள்கைகளில், மனிதர்களின் இயற்கையான சமத்துவத்தைக் காட்டிலும் வேறொன்றும் அவ்வளவு அடிப்படையானது அன்று. (கலைக்களஞ்சியம்) 'Encyclopedic' யின் சொற்களில் அது ஒரு வேளை மிக நன்றாகச் சொல்லப்படலாம். 'மனிதர்களுக்கிடையே காணப்படும் அவர்களது இயல்பின் அமைப்பே இயற்கையான சமத்துவமாகிறது. பிறப்பது, வளர்வது, வாழ்வது, இறப்பது எல்லாம் ஒரே வழியாக எல்லா மனிதருக்கும் உள்ள பொதுவான இயல்பை இது அடிப்படையாகக்கொண்டது. ஆகவே, ஒவ்வொருவரும் மற்றவரனைவரையும் தமக்குச் சமமாகவே நடத்த வேண்டும். இதன் விளைவு, முதலாவது, மனிதர்கள் அனைவரும் இயற்கையாகவே சுதந்தரமானவர்கள் ; இரண்டாவது, நமக்குக் கீழ்ப்பட்டவர்களையும் இயல்பினால் சமமானவர்கள் என்று நடத்த வேண்டும். மூன்றாவது, பிறப்பால் அல்லது செல்வத்தால் அல்லாமல் வேறு வழியாக அந்த உரிமைகளை அடைந்திருந்தாலொழிய மற்றவர்களுக்குரிய உரிமைகளைவிட அதிகமாகத் தனக்கு உரிமைகளை ஒருவனும் கோரக்கூடாது.

## சமத்துவம் எதை உள்ளடக்கியிருக்கிறது?

அப்படி இருக்கிறது இக் கோட்பாட்டின் ஆதாரம். இது எதை உள்ளடக்கி இருக்கிறது? முதலாவது, தனியாளுக்கோ, தொகுதிக்கோ, வர்க்கத்துக்கோ, இனத்துக்கோ எதிராகச் சட்டரீதியான வேறுபாடின்மை. அடுத்தது, குறைந்தபட்சக் கல்வி, வீட்டுவசதி, உணவு, பொருளாதாரப் பாதுகாப்பின்மையிலிருந்து உத்தரவாதங்கள் சமமாகக் கோரப்படுகின்றன. இதை இன்னொரு வகையில் சொல்வதானால், மனிதர்களுக்கிடையே அவர்களின் மகிழ்ச்சி வேட்கையில் இயற்கையான அடிப்படை வேறுபாடு இருக்க முடியாது எனலாம். முக்கியமாக ஒரு தனி நபரையோ, தொகுதியையோ இன்னொன்றின் நலத்திற்காகத் தியாகம் செய்யமுடியாது. 'கீழான பிராணிகள் நமக்காகப் பலியிடப்படுவதுபோல, நமக்குள்ளே அப்படிப்பட்ட கீழடங்கிய தன்மை இருப்பதாகச் சொல்ல முடியாதாகையால் ஒருவரையொருவர் அழிப்பதற்கு நமக்கு உரிமை இல்லை' என்று லாக் (Locke) கூறுகிறார்.

மனிதர்கள் மூளைவிருத்தியிலும், ஆரோக்கியத்திலும், பார்வையிலும், செல்வத்திலும் ஒரே மாதிரியாகப் பிறந்திருக்கிறார்கள் என்று எவரும் நம்புவதில்லை. இயற்கைச் சமத்துவம் சொல்வதெல்லாம், இந்தவகையான ஏற்றத்தாழ்வுகள் எதுவும் உரிமைகளில் ஏற்றத் தாழ்வுகளை உண்டாக்குவதாகச் சட்டப்படி ஒப்புக்கொள்ள முடியாது. சட்டம் எல்லோரையும் ஒரேமாதிரியாக நடத்தவேண்டும். எல்லாக் கதவுகளையும் எல்லோருக்கும் திறந்துவைக்கவேண்டும். எல்லோரும் காட்டுவதற்கு முயற்சிக்கக்கூடிய புறநிலை மெய்ம்மை சார்ந்த நிரூபணங்களால் நிறுவப்பட்ட திறமை தவிர வேறெதனாலும் அதிகார முக்கியத்துவம் அளிக்க அனுமதிக்கக்கூடாது. சட்டமானது இருக்கக்கூடிய ஏற்றத் தாழ்வுகளைக் குறைக்கவேண்டுமேயொழிய, நிலைத்திருக்கச் செய்ய முயலலாகாது என்பதும் இதனால் பெறப்படுகிறது. வாய்ப்புக்களைச் சமமாக்கும் சமூக, பொருளாதார வாய்ப்புக்களை ஏற்படுத்தித் தரவேண்டும் என்பது இதன் பொருளாகும். இயற்கைச் சமத்துவம் என்பது உண்மையான நிகழ்ச்சி என்று சொல்வதைக் காட்டிலும் ஓரளவுக்கு இலட்சியம் என்று சொல்லலாம். ஆனால் இந்த இலட்சியத்தை உடனடியான நடைமுறையில் நடத்திச்செல்ல உகந்ததாகவும், விரும்பத்தக்கதாகவும் கொள்ள வேண்டும். 'சமத்துவக் கோட்பாடு ஏதோ பொறியியல் தத்துவம் போன்றும் கணக்கியலைச் சார்ந்தாற் போன்றும் காணப்படுகிறது' என்று குரோசே (Croce) சொல்வதைச் சரி என்று ஒப்புக்கொள்ளலாம். மேலும் அவர் கூறும் 'சமூக வாழ்க்கையானது கண்ணுக்குப் புலனாகாமலும், இடையிடையே தடை செய்யப்பட்டது

மாகிய ஏற்றத்தாழ்வுகளின் படிமுறைதான். இதில் ஒவ்வொரு மனிதனும் தனக்கு உயர்ந்தவர்களாலும், தாழ்ந்தவர்களாலும், சமமானவர்களாலும் சூழப்பட்டிருக்கிறான்' என்பதையும் ஒப்புக் கொள்வோம். அப்படியானால் பிறகு என்ன? சட்டம் இந்த ஏற்றத் தாழ்வுகளை நிலைக்கச் செய்யாமல் எவ்வாறு ஏற்றுக்கொள்ள முடியும்? இவைகளின் மதிப்பைக் கணிக்க, இன்னும் அதிகமாகப் பொறியியல் தத்துவம் சேர்ந்ததும் கணக்கியலைப் போன்றதுமான கோட்பாடு களின் துணையில்லாமல் எவ்வாறு முடியும்? 'எல்லோரையும் ஒரே மாதிரியாகப் பாவிக்கவேண்டும்' என்பது முரட்டுத்தனமாகவும், முன்னேற்பாடானதாகவும் இருக்கலாம். சில சமயங்களில் அவை அநீதிகளை விளைவிக்கக்கூடியனவாகவும் இருக்கலாம். ஆனால், 'அவர்களை எல்லாம் வெவ்வேறாகப் பாவியுங்கள்' என்று சொல்வது அதைக் காட்டிலும் மோசமானது. ஏனெனில் இவ் வேறுபாடுகளை மதிப்பீடு செய்யப் பாரபட்சமற்ற கருவியொன்றும் நம்மிடமில்லை.

## சுதந்தரமும் சமத்துவமும்

சில சமயங்களில் சமத்துவமும், சுதந்தரமும் ஒன்றுக்கொன்று முரணான கோட்பாடுகள் என்று வாதிக்கப்படுகின்றன. ஏனெனில், தன்னோடு வாழ்பவர்களிடமிருந்து தன்னை வேறுபடுத்தக்கூடிய இயற்கையான சில வரங்களோடு ஒவ்வொரு மனிதனையும் சுதந்தர மாக விட்டுவிடவேண்டும் என்று சுதந்தரக் கோட்பாடு கூறுகிறது. ஆனால், இதற்கு மாறாக, இயற்கையானதும், சட்டரீதியானதுமான ஏற்றத்தாழ்வுகள்தான் சுதந்தரத்திற்கு இடையூறாக இருக் கின்றன. ஏனெனில், சுதந்தரத்தோடு சேர்ந்து போகக்கூடிய சுய வெளிப்படுத்தலும், சுய வளர்ச்சியும் போதுமானபடி இருக்கத் தேவையான வாய்ப்புக்களை இது இழக்கச்செய்கிறது. நாம் பார்த்த படி, சுதந்தரம் பாதுகாப்பைக் குறிக்கிறது. பாதுகாப்பு இந்த ஏற்றத் தாழ்வுகள் மறையவேண்டும் என்று கோருகிறது. ஏனெனில், இவை வலுவற்றவனை வலுவானவனின் கருணைக்கு விட்டு விடுகின்றன.[1] இவையெல்லாம் நிரூபிக்க முடியாதவையாகும். சமத்துவமோ அல்லது ஒவ்வொரு மனிதனிடமுள்ள மதிப்பில் நம்பிக்கையையோ நியாய வாதத்தாலோ அல்லது சூழ்வினைத் திறத்தாலோ நிரூபிக்கப்பட முடியாதவைதான். ஆனால், 'நீங்க ளிருக்கிறீர்கள். உங்கள் அண்டை வீட்டுக்காரரும் இருக்கிறார். நீங்கள் அவரைக் காட்டிலும், நற்குடியில் பிறந்திருக்கிறீர்கள்.

[1] 'உண்மையான சுதந்தரத்தின் உத்தரவாதமாக அரசியல் சமத்துவத்தைக் கருதியிருந்த நம்பிக்கைகள் சிதைந்து போனதுதான் பத்தொன்பதாம் நூற்றாண்டின் அவலம்' என்று 'Adam and Eve' என்ற தமது நூலில் மிடில்டன் மர்ரி (Middleton Murry) மிகப் பொருத்தமாகக் கூறுகிறார்.

அவரைக் காட்டிலும், அதிகமான செல்வம், அழகு, அறிவு, அன்பு பெற்றவர்கள். அவரைக் காட்டிலும் நல்லவர். மற்றவர் விரும்பக் கூடியவர். உங்களோடு வாழும் ஏனையோரிடமிருந்து எடுத்துக் கொண்டதைவிடக் கொடுத்ததுதான் அதிகம். அறிவு, பண்பு, பயன் ஆகிய எவ்வழியில் ஆராய்ந்தாலும் நீங்கள் குறிப்பிடத்தக்க தகுதிகள் அவரைக் காட்டிலும் பெற்றவர். அப்படி இருப்பினும்—அபத்தமான சத்தமாகப்பட்டாலும்—இந்த வேறுபாடுகள் அவ்வளவு முக்கியமல்ல. ஏனெனில், அவன் பண்புகளில் கடைசிப் பகுதி தீண்டமுடியாதது; ஒப்பிடமுடியாதது; தனித் தன்மை வாய்ந்தது; எல்லாவற்றையும் உள்ளடக்கியது. ஒன்று இதை நீங்கள் உணர்கிறீர்கள் அல்லது நீங்கள் உணரவில்லை.' என்று வால்டர் லிப்மான் (Walter Lippmann) கூறுகிறார்.

## சமுதாயத்திற்கு வெளியில் உரிமைகளில்லை

இந்த உரிமைப் பிரச்சினைபற்றிய விவாதத்தை முடிப்பதற்கு முன், உரிமைகளும் அவற்றைச் சார்ந்த கோட்பாடுகளும் ஒழுங்காக அமைக்கப்பட்ட சமுதாயத்திற்கு வெளியில் பொருளற்றவை என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. சமுதாய வாழ்க்கைக்கு அப்பாற்பட்டபொழுது அவைகள் பயனற்ற, புலனுக்கு அகப்படாத வாசகங்கள்தான். உரிமைகள் பொதுவாழ்க்கையைக் குறிப்பதால் அவை கடமைகளையும் குறிக்கின்றன. ஏனெனில், நம்மிடத்து மற்றவர்கள் காட்டும் கடமைகளே நம் உரிமைகள். நாம் அவர்களிடத்துக் காட்டும் கடமைகளே அவர்களின் உரிமைகள். 'மனிதர்களை ஒருவருக்கொருவர் பிணைக்கும் உரிமைகளும் கடமைகளும் சேர்ந்த சேர்க்கை'யில் வெளியிடப்பட்டிருக்கும் பொது நலத்தோடு உரிமைகள் பொருத்தமுடையனவதாகத்தான் இருக்க வேண்டும் என்பது இதிலிருந்து தெரிகிறது. ஹாப்ஹவுஸ் (Hobhouse) கூறுவதுபோல, 'மற்றவர்களிடமிருந்து நாம் என்ன எதிர்பார்க்கிறோமோ, அதுவும், நம்மிடமிருந்து மற்றவர்கள் என்ன எதிர்பார்க்கிறார்களோ அதுவும் உரிமைகள் ஆகும். எல்லா உண்மையான உரிமைகளும் சமூக நலத்தின் ஆதாரங்களாகும். இப்படி, எவராவது கோரும் உரிமைகள் ஒவ்வொரு மனிதனும் ஒரு பகுத்தறிவுள்ள மனிதனாக இருப்பதற்குத் தேவையான ஒரு பகுதியும்; மற்றொரு பகுதி, சமுதாயம் அவனிடமிருந்து எதிர்பார்க்கும் பணிகளை நிறைவேற்றத் தேவையாகும். ஆக, சமூகப் பொறுப்புக்களால்

அவை ஆக்கப்பட்டும் பொறுப்புக்களோடு இணைக்கப்பட்டு மிருக்கின்றன.[1]

## (v) சுதந்திரத்திற்கு இடையூறுகள்

### மற்றவர்களின் சுதந்தரம்

இதுவரை சுத்ந்தரத்தை வரம்பற்றதாகவும், எல்லோராலும் விரும்பப்படுவதாகவும் கருதியே நமது வாதத்தை வளர்த்து வந்தோம். ஆனால், இந்தப் பிரச்சினைக்கு மற்றொரு புறமும் உண்டு என்பது தெளிவு. சுதந்தரம் என்பது வரம்பில்லாதது அன்று. உள்ளும், புறமும் அது பல தடைகளையும், இடையூறுகளையும் சமாளிக்க வேண்டியிருக்கிறது. முதன் முதலாக, அயலாரின் சுதந்தரத்துக்கு ஒவ்வொரு மனிதனின் சுதந்தரமும் ஓர் எல்லை வகுக்கிறது. அதே போன்று அவர்களின் சுதந்தரம் இவனுடைய சுதந்தரத்திற்கு எல்லை வகுக்கிறது. அவர்கள் சுதந்தரம் என்பது அவர்களுடைய பாதுகாப்பையும் உள்ளடக்கியதுதான். பேராசிரியர் லாஸ்கி (Professor Laski) கூறுகிறபடி, 'சமூக அமைதிக்கு அபாயம் விளைவிக்கக்கூடியவை சுதந்தரத்திற்கு எல்லை வகுக்கின்றன.' இந்த அபாயம் எதனால் ஏற்படுகிறது என்று கண்டுபிடிக்கப் பாரபட்சமற்ற இறுதியான சோதனைமுறை இருக்கமுடியாது என்பது வெளிப்படை. சாதாரண காலங்களைப் போலவே யுத்த காலங்களிலும் அது அப்படியே இருப்பதில்லை. கலாச்சாரத் தரத்துக்கும், ஒவ்வொரு சமுதாயத்தின் நிலையான தன்மைக்கும், ஒருமைப்பாட்டுக்கும் தக்கவாறு இது மாறும் தன்மையது. அரசாங்கங்கள் இந்த அபாயத்தை மிகைப்படுத்திக்கூறும் போக்குடையன என்று மட்டும் சொல்லமுடியும். ஆகவே, பொதுமக்களின் அபிப்பிராயமானது பேச்சுச் சுதந்தரத்தைத் தடைசெய்யும் போக்குகளின்மீது எப்போதும் கவனம் செலுத்திவரவேண்டும்.

### தடைகளும் மகிழ்ச்சியும்

அடுத்து, சுதந்தரம் மகிழ்ச்சியை உத்தரவாதமாக்காது. சுதந்தரத்துக்கு உள்ள தடைகள் மகிழ்ச்சியை அதிகப்படுத்துவனவாக இருக்கின்றன. சதா ஆரம்பக்கொள்கைகளுக்குத் திரும்பவும் போவதிலிருந்தும் அல்லது பேரிழப்பை உண்டாக்கிய பரிசோதனைகளை

[1] உரிமைகளின் உண்மைத் தன்மையை மறுத்தல், சுதந்தரத்தின் உண்மைத் தன்மை அல்லது அதை விரும்புவதை மறுப்பவர்களிடமிருந்தே எழுகிறது. இதே அத்தியாயத்தில் பின்னர் இதைப்பற்றிப் பார்ப்போம்.

மீண்டும் மீண்டும் செய்து பார்க்காவண்ணம் மீட்பதிலிருந்தும் இவை சமுதாயத்தில் குறைந்தபட்சம் சில அங்கத்தினர்களையாவது தடுக்கின்றன. வெளிப்படையாக நெடுஞ்சாலையாகத் தோன்றுபவை உண்மையில் மொட்டைச் சந்துகள்தான் என்பதை அவைகள் எடுத்துக் காட்டுகின்றன. விவாகச் சட்டங்கள், பொதுவாக நெறியற்றவை என்று விளக்கப்படும் நடத்தை முறைகளின்மீதுள்ள தடைகள், ஆகியவை இது போன்றவையாகும். அவை பழைய அனுபவத்தையும், வெற்றி தோல்விகளையும் பிரதிபலிக்கின்றன. சில வழிகளில் சென்றால் நிச்சயம் சச்சரவு வரக்கூடும். தடைகள் நம்மை இவ்வழிகளிலிருந்து தாமாகவே தடை செய்வதால் பாதுகாப்புக்கும் அவை வழி செய்கின்றன. அரசின் நடவடிக்கை வழக்கங்கள் அல்லது பரம்பரை ஆகியவற்றின் பிடிப்பினின்றும் குடும்பத்துக்கு அல்லது தொகுதிக்கு அடிவருடித்தனமாக இருப்பதிலிருந்தும் தனி நபரை விடுதலை செய்து சுதந்தரத்துக்குத் துணைபுரிகின்றன. அடிமைகள் விடுதலை செய்யப்பட்டு, அவர்கள் சுதந்தரம் உத்தரவாதமாக்கப்பட வேண்டியிருந்தது. 'தற்செயல் நிகழ்ச்சி அல்லது இயந்திரம் போன்று மாறாது நிகழும் நிகழ்ச்சிகளிலிருந்து அதன் கூறுகளை விடுதலை செய்வதன்மூலம் சமூக வாழ்க்கையைப்பற்றிய பகுத்தறிவுள்ள கருத்தை அரசு வளர்க்கக்கூடும்' என்று ஹாக்கிங் (Hocking) கூறுகிறார். ஆனால், இந்தப் பரம்பரைப் பழக்கத்தையோ அல்லது தற்செயல் நிகழ்ச்சியையோ நிலைக்கச்செய்யவேண்டும் என்று விரும்புபவர்களின் சுதந்தரத்தைத் தடைசெய்வதன் மூலமே இதைச் செய்கிறது.

'எவைகளில்லாமல் மனித சக்திகளைச் சுதந்தரமாகப் பயன்படுத்துவது இயலாத காரியமாகிவிடுமோ, அப்படிப்பட்ட சூழ்நிலையை உருவாக்குவதற்காகத் தற்காலச் சட்டங்களில் பல, ஒப்பந்த சுதந்தரத்தில் குறுக்கிடுவதாக இருக்கின்றன' என்று டி. எச். கிரீன் (T. H. Green) கூறுவதும் உண்மையே. உழைப்பு நேரத்தைக் கட்டுப்படுத்தும் சட்டங்கள் தொழிலாளர்மீதும், அதே அளவுக்குத் தொழிலதிபர்கள்மீதும் தடை விதிப்பதாகும். தொழிலாளர்கள் அதிக வேலை செய்து தங்களது ஆரோக்கியத்தைக் கெடுத்துக்கொள்வதிலிருந்து அவர்களைக் காப்பாற்றுவதற்காகத் தடைகள் விதிக்கப்பட்டன. இவை அவர்களுக்கு நன்மை செய்வதற்காகப் போடப்பட்டாலும் ஆரம்பத்தில் கடுமையாக இவற்றை எதிர்த்தனர். குழந்தைகளை வேலைக்கமர்த்துவதைத் தடைசெய்த சட்டங்களும், கட்டாயக் கல்வியை அவர்களுக்காக ஏற்படுத்திய சட்டங்களும் இதே மாதிரியானவையே. குழந்தைகள் சம்பாதிக்கக்கூடிய பணத்தை இழக்க மனமில்லாத பெற்றோர்கள் இதை எதிர்த்தனர். சில நல்ல மனம் படைத்த நேர்மையாளர்களும் இது சுதந்தரத்திற்கு இடையூறு

செய்கிறது என்று கண்டித்தார்கள். அப்படித்தான் சுதந்தரத்தைத் தடை செய்தது என்ருலும் குழந்தைகளுக்கு நீண்ட ஆயுளைப் பெற்றுக் கொடுத்ததோடு முடிவில் பெற்ருேருக்கும் இது நன்மை செய்தது. ஒரு மனிதனும் தன்னை அடிமையாக விற்றுக்கொள்ள அனுமதிப்பதில்லை. இது அவனது சுதந்தரத்திற்கு நன்மையான தடையாகும். சுகாதாரத்தை ஏற்படுத்துவது போன்ற எண்ணற்ற பல சட்டங்களுக்கும் இது பொருந்தும். ஒரு காலத்தில் தானுகவே சுதந்தரம் என்று ஒப்புக்கொள்ளப்பட்டது பிறிதொரு காலத்தில் தானுகவே ஒப்புக்கொள்ளப்பட்ட தடையாகக்கூடும் என்பது விந்தையே! உதாரணமாக, செலாவணி, வர்த்தகம் ஆகியவற்றின்மீது இன்றுள்ள கட்டுப்பாடுகளை, 17 ஆம் நூற்ருண்டில் வரையப்பட்ட கட்டுரை, 'ஒவ்வொரு மனிதனுக்கும் எந்தப் பண்டத்தையும் கடலுக்கு அப்பால் உள்ள எந்தப் பகுதியில் இலாபம் அதிகம் கிடைக்குமோ அங்கு ஏற்றுமதி செய்வது அவனது பிறப்புரிமையாகும்' என்ற வலியுறுத்திய வாசகத்தோடு ஒப்பிட்டு நோக்கவும்.[1] ஒயிட்ஹெட் (Whitehead) மிகவும் நடுநிலையுணர்வோடு கூறியுள்ளதாவது: 'ஒருவனுக்குச் சொந்தமல்லாத மற்ற தொகுதிகளின் விதிகளும் வழக்காறுகளும் எப்பொழுதும் இடையூறு விளைவிப்பதாகவே தோன்றும். வெளியாருக்கு விதி ஒரு தடையாகத் தவிர வேறு எதுவுமாகத் தோன்ருது. ஆனல் உள்நாட்டிலிருப்பவனுக்கு அது தான் நடத்தைக்குரிய சரியான வழி. அது அவனது துவக்க உரிமைக்கு அவன் உணரக்கூடிய வகையில் தடையாக இருப்பதில்லை. விவேகமான சட்டங்களாலும் வழக்காறுகளாலும் சாத்தியமாக்கப்பட்ட ஒழுங்கு, மற்றபடி இருந்திருக்க முடியாத எண்ணற்ற சாத்தியங்களை உண்டாக்கித் தருகிறது.'

## மனிதனின் சகிப்பற்ற தன்மை

வெளியிலிருந்து சுதந்தரத்துக்கு வரும் இடையூறுகளைப் பார்க்கலாம். மனிதனின் இயற்கையான சகிப்பற்ற தன்மை முதலாவது இடையூருக இருக்கிறது. அவன் தனக்காக எப்பொழுதும் உரிமைகளைக் கோருகிருன். ஆனல், அவன் அயலாரின் கோரிக்கைகளை அறிந்துகொள்ளச் சிரமப்படுகிருன். நாம் மற்றவர்களை நம் நம்பிக்கைகளுக்கும், வாழ்க்கை வழிகளுக்கும் இசைய வைக்க விரும்புகிருேம். சமயத்திலோ, அரசியலிலோ, உடையிலோ, ஊணவிலோ இணங்காது மறுப்பவர்களைக்கண்டால் நமக்குப் பிடிப்பதில்லை. அவர் இணங்க மறுப்பது ஏதோ குற்றம்போன்று தோன்றுகிறது. நமக்கு

[1] 'The Golden Fleece Defended', 1647.

நல்லதாக இருப்பது அவருக்கும் நல்லதாகத்தானே இருக்க வேண்டும்? ஆகவே, வரலாறு முழுவதிலும், எல்லாவகைப் பெரும் பான்மையினரும் சிறுபான்மையினரைத் தங்களது தரத்தை அவர்கள் ஒப்புக்கொள்ளச் செய்யவும், அதுவே எல்லாவற்றையும் உள்ளடக்கியதாகவும், ஒரே வழியாகவும் ஆக்க முயற்சி செய்திருக்கிறார்கள். அவர்கள் துணையில்லாதவர்களாக இருந்ததாலோ அல்லது போராட்டம் பயனற்றது என்று கருதிய காரணத்தாலோ சிறு பான்மையோர் இதை ஒப்புக்கொள்கிறார்கள்; எப்பொழுதோ ஒரு தடவை அவர்கள் புரட்சி செய்கிறார்கள். இதன் பயனாக ஒன்று, தங்களது சிந்தனைக்கு அல்லது வாழ்க்கை வழிக்குச் சகிப்புத்தன்மை பெறுகிறார்கள். அல்லது தோற்றுப்போய் மற்றொரு தருணம் வரும் என்று அமைதியற்றுக் காத்திருக்கிறார்கள்.

உண்மையில் சமீப காலங்களில்தான் சிறுபான்மையோரைப் பெரும்பான்மையோர் விருப்பத்தோடு சகித்துக்கொண்டு போவதாகக் கூறலாம். சிறுபான்மையினர் அடக்கமுடியாத அளவுக்குச் சக்தியுள்ளவர்களாக இருப்பதால்தான் அவ்வாறு நடக்கிறது. கட்டாயப்படுத்தும் அதிகாரத்தைத் தாங்களாகவே விட்டுக் கொடுக்கும் செயல் மிகவும் அபூர்வமானது. இப்படிப்பட்ட மன நிலையானது கட்டாயப்படுத்துவது பயனற்றது என்ற முடிவுக்கு வந்திருக்கும் சமுதாயங்கள் அல்லது அரசியல் அறிவும், தன்னைக் கட்டுப்படுத்தும் தன்மையும் நன்றாக வளர்ந்திருக்கும் சமுதாயங்கள் ஆகியவை மாத்திரமே இவ்வாறு முடிவு செய்யக்கூடும்.[1]

நிலைமை மேலும் கீழுமாக மாறும்போது, மிகவும் கொடுங்கோன்மையுடன் நடந்துகொள்வதற்கு அடக்குமுறைக்குள்ளான சிறுபான்மையைப்போல வேறு எதுவும் இல்லை என்பதை இங்குக் கவனிக்கலாம். சமயத் துன்புறுத்தலைத் தவிர்ப்பதற்காகக் குடிவெளியேற்றம் செய்த நியூ இங்கிலாந்தின் சமயப் பிரிவைச் சேர்ந்தவர்களின் சமய வெறியை இங்கு மதத்தில் உள்ள ஓர் எடுத்துக் காட்டாகக் கூறலாம். புதிதாக விடுதலைபெற்ற போலந்தும், ருஷ்யப் பொதுவுடைமைவாதிகளும் பல ஆண்டுகளாகக் கொடூரமான அடக்குமுறையின்கீழ் அவதியுற்றிருந்தனர். ஆனால், அவர்கள் அதிகாரத்துக்கு வந்தபோது தேசீயச் சிறுபான்மையினரை மிகவும் கசப்பான முறையில் நடத்தினர் என்பது அரசியல் எடுத்துக் காட்டு. மனிதன் இயற்கையான அவனது சகிப்பற்ற தன்மையினால்,

[1] அதிகாரத்தை உபயோகிக்காமலிருப்பது சுதந்தரம். இது தலைசிறந்த தருமம்- பெரும்பான்மையோர் சிறுபான்மையோருக்கு அளித்த உரிமைகள் - தன் இருக்கையை எதிரிகளோடு பங்கிட்டுக் கொள்ளுதல்.—(Ortega y Gasset, The Revolt of the Masses, p. 83)

தான் மிகவும் விரும்பும் சுதந்தரத்தை மற்றவர்களுக்குக் கொடுக்க முடியாதவனாகிவிடுகிறான்.

> 'முடிந்தால் எவனும் கொடுங்கோலனாகும்படி இந்த விஷத்தை நமது குருதியில் கரைத்து விட்டது இயற்கை' என்று டிபோ (Defoe) எழுதினார்.

அவ் வரிகளை எழுதியபோது அவை எவ்வளவு உண்மையாக இருந்தனவோ அவ்வளவும் இன்று சோகமான உண்மைகளாகும்.

இவ்வாறாகச் சுதந்தரம் நிலையற்றதாக இருக்கிறது. பெரும்பான்மையினரின் சிரத்தையற்ற நிலை, அல்லது அவர்களின் பகுத்தறிவு, கருணை ஆகியவற்றை நம்பிச் சுதந்தரம் இருக்கவேண்டியிருக்கிறது. ஆகவே, நாம் ஒரு சுதந்தரச் சிறுபான்மையைச் சேர்ந்திருந்தால், அசட்டையாக இருந்துவிடாமல், நமக்குக் கிடைத்த சுதந்தரத்தைப் பேணிப் பாதுகாப்போம். 'என்றும் விழித்திருப்பதே அதற்களிக்கும் விலையாகும்.' நாம் எண்ணிக்கையில் அதிகமானவர்களின் பக்கத்தில் இருந்தால், இன்றைக்குள்ள நிலைமை நாளை மாறிவிடக்கூடும் என்பதை நினைவில்கொண்டு நம்மிலுள்ள சகிப்பு உணர்ச்சியை எப்பொழுதும் கிளர்ந்து இருக்குமாறு வைத்துக் கொள்ள விழிப்போடிருப்போம்.

## தனியுரிமை

இயற்கையான சகிப்பற்ற தன்மையோடு நெருங்கிய தொடர்புடையது அடுத்த இடையூறாகும். ஒரு பொருளில் ஒரு வகையான சுதந்தரமாகிய தனி உரிமைகளைப் பெற்றிருப்பவர்கள் இவ் வுரிமையை மற்றவர்களோடு பகிர்ந்துகொள்ள விரும்புவதில்லை. உதாரணமாகத் தங்களைக் காட்டிலும் கீழான நிலையிலுள்ளவர்களுக்கு உரிமைகள் அளிப்பதை விரும்பாதவர்களோடு, வாக்குரிமை அளிக்கப்படுவதைக் கோரியவர்கள், அமைதியான முறையில் அல்லது பலாத்காரமாக ஒவ்வொரு கட்டத்திலும் போராடவேண்டி இருந்தது. அதிகாரத்தையோ, செல்வாக்கையோ மக்கள் தாமாகவே விட்டுக் கொடுப்பதில்லை. உரிமைகளைத் தாங்களே வைத்துக்கொள்வதற்காகப் போலியானதும், பிழையுள்ளதுமான பல வாதங்களை அவர்கள் தருவது வழக்கம். 'சமுதாயத்தில் மிகவும் கீழ்த்தரமான, அருவருக்கத்தக்க, அடிவருடித் தன்மையான பணிகளைப் புரிவதற்காக ஓரளவுக்கு எதிர்காலத்தை உணராதிருக்கும் ஏழை மக்கள் இருக்க வேண்டும் என்பது இயற்கையின் விதியாகத் தோன்றுகிறது. இதன் மூலமாக மக்களின் மகிழ்ச்சிப் பெருக்கு அதிகப்படுகிறது. தங்களைத்

துன்புறுத்தக்கூடிய வேலைகளினின்றும் விடுவிக்கப்படுவது மாத்திர மல்லாமல், மென்மையானவர்கள் ஊழிய வேலை செய்வதினின்றும் விடுவிக்கப்படுகிறார்கள். அவர்களது பல்வேறு மனப்போக்கு களுக்கு ஒத்த முறையிலும், அரசுக்கு மிகவும் பயனுள்ள வகையிலும் உள்ள பணிகளை விடாது புரிவதற்கு அவர்கள் சுதந்தரமாக விடப் படுகிறார்கள். ஏழைகளில் மிகவும் கீழானவர்கள் அபாயகரமான பணிகளையும், மிகவும் சிரமமான தொழில்களையும், மிகவும் கேவலமான ஊழியத்தையும் செய்வதற்கு மனம் ஒப்பிவிடுகிறார்கள். அவர்களின் அபாயங்கள், இன்னல்கள் ஆகியவற்றின் மத்தியிலும் வெகுமதி கிடைக்கும் என்ற நம்பிக்கை அவர்களுக்கு மகிழ்ச்சியளிக்கிறது. பசி வந்திடின் அல்லது வரும் என அச்சம் தோன்றிடின் அல்லது உணவு வேண்டும் என்று விரும்பிடின் மிகப் பெரிய சிரமங்களையும் மேற்கொள்ளும் மனப்போக்கை அது உண்டாக்கும். கடுமையான உழைப்பையும் இனியதாக்கும். சிங்காதனத்தில் வீற்றிருக்கும் இளவரசனைக் காட்டிலும், கையில் கொடுவாளோடு பணிபுரியும் உழவன் மகிழ்ச்சியாயிருக்கிறான்' என்று அருள்திரு. டவுன்சென்டு Rev. Townsend) 25 ஆண்டுகளுக்கு முன் எழுதியிருக்கிறார்.

## சுதந்தரம் கடினமானது

இவைகளைப் பின்பற்றி மூன்றாவதாக ஓர் இடையூறு இருக் கிறது. அதிகாரத்திலிருப்பவர்கள் சுதந்தர எல்லையை விஸ்தரிக்க மனமில்லாமலிருப்பது இந்த இடையூறாகும். ஏனெனில், சுதந்தர மில்லாமல் ஆட்சி செய்வது மிகவும் சுலபமானது. 1817-ல், நடந்து கொண்டிருந்த அரசர்களின் மாநாட்டின் ஆஸ்திரியச் செயலாளருக் கும் ராபர்ட் ஓவனுக்கும் (Robert Owen) நடந்த பேச்சைக் கேளுங்கள்: 'விஞ்ஞான வளர்ச்சியினால் சமுதாயத்தைப் பூரண மாகத் திருப்திபடுத்தப் போதுமான அளவு செல்வத்தை உண்டாக்கி வாழ்க்கையின் எல்லாத் தேவைகளிலும் முழுவதாகத் திருப்தி யுண்டாக்க எல்லா வழிகளும் நம்மிடம் இருக்கின்றனவே என்று நான் சொன்னேன். மிகவும் அறிஞரான அந்தச் செயலாளரின் பதிலைக்கேட்டு எத்துணை ஆச்சரியமடைந்தேன் தெரியுமா? அது உண்மைதான். அதை நாங்கள் நன்றாக அறிவோம். ஆனால், எங்கள் மக்கள் கூட்டம் செல்வர்களாகி எங்களிடத்திலிருந்து சுதந்தரமாகப் போவதை நாங்கள் விரும்பவில்லை. அப்படி யிருந்தார் களானால் நாங்கள் அவர்களை ஆட்சிபுரிவது எப்படி?'

## (vi) சுதந்தரத்திடம் அச்சம்

இந்த இடையூறுகளெல்லாம் வெளியிலிருந்து வரும் இடையூறுகள். ஒழுங்கான அமைப்பினுலும், கல்வியினுலும், பிரச்சாரத்தினுலும் இவைகளைச் சமாளிக்கக்கூடும். இந்த முறைகளில்தான் எவ்வளவு குறைவுள்ளதாயினும் சுதந்தரத்தை இதுவரை பெற முடிந்தது. இவற்றைக்காட்டிலும் மிகவும் கடுமையானது மனிதனுக்குள்ளே இருக்கும் சுதந்தரப் பகைவர்கள் என்பதைச் சமீபகால வரலாறு காட்டுகிறது. 'மக்கள் கூட்டம் முழுவதும் அடிமைத் தனத்தில் ஆர்வம் காட்டுவதாகத் தோன்றுவதோ அல்லது உண்மையில் காட்டுவதோ நமது யுகத்தின் மிக முக்கியமான நிகழ்ச்சியாகும்' என்று பேராசிரியர் பார்தெல்மி (Professor Barthelmy) எழுதுகிருர்.[1]

சுதந்தரத்துக்காக எவ்வளவு உரக்கக் கோரினுலும் மனிதனின் ஒரு பகுதி அதைக்கண்டு அஞ்சுகிறது; ஆகவே, அவனில் ஒரு பாதியே சுதந்தரத்தில் நம்பிக்கை கொண்டிருக்கிறது.

### சுதந்தரத்திடம் அச்சம்

எதற்காக மக்கள் சுதந்தரத்தைக் கண்டு அஞ்சுகிருர்கள்?[2] பெரும்பாலும் அது பொறுப்புக்களைக் குறிப்பதாலும், பொறுப்புக்களைக் கண்டு மக்கள் அஞ்சுவதாலும், சுதந்தரத்திடம் அச்சம் கொள்கிருர்கள். தங்களது வாழ்க்கையைத் தாங்களே அமைத்துக் கொள்ள மனிதர்கள் விரும்புகிருர்கள் என்ற கருத்து, பெரிதும் போலியான தோற்றமே. சிலர் அப்படி அமைக்க விரும்புகிருர்கள் தான். ஆனுல், பெரும்பாலோர் என்ன செய்யவேண்டும் என்பதைத் தொட்டில் முதல் சுடுகாடுவரை யாராவது சொல்லவேண்டும் என்று விரும்புகிருர்கள்.[3] ஒரு சிலர் தங்கள் சொந்தக் காரியங்களில் சுதந்தரத்தை விரும்பினுலும், பொது விவகாரங்களில் அதன் தேவையை உணருவதில்லை. மற்றவர்களை ஆட்டிப்படைக்கும் பங்கு, தங்களுக்கு இருக்கும்வரையில், தங்களை ஆட்டிப்படைப்பதை ஆட்சேபிப்பதில்லை. 'மனிதனில் மிலியனில் ஒரு பங்கு கொடுங்கோலனின் பண்பு. எச்சமெல்லாம் அடிமைப் பண்பு.' 'ஒழுங்கின்'

[1] French Academy Proceedings, October, 1933.

[2] See Fromm's Fear of Freedom: இந்தப் பிரச்சினையை மிக ஆழமாக விளக்குகிறது.

[3] 'ஆட்சி செய்யவேண்டும் என்று விரும்புபவர்களைக்காட்டிலும் ஆட்சி செய்யப்பட விரும்புபவர்களிடமிருந்துதான் மக்களாட்சிக்கு அபாயம் தோன்றுகிறது.' (Petre–'Life of Loisy')

பெருமைகளை நிலைநாட்ட விரும்புபவர்களும் இதனை வரவேற்கிறார்கள். தங்களிடமிருந்தே தப்பித்துக்கொள்ள விரும்புபவர்களும் அதை வரவேற்கிறார்கள்.

'கராமசாவ் சகோதரர்கள்' (Brothers Karamazov) என்ற டாஸ்டாவ்ஸ்கியின் (Dostoievsky) நவீனத்தில் வரும் பிரதான விசாரணைக்காரன் (Great Inquisitor) மனிதர்களிடமிருந்து அவர்களது சுதந்தரத்தை எடுத்துவிட்டதன்மூலம் அவர்களை மகிழ்ச்சியாக்கிவிட்டதாகத் தன்னைப் பெருமைப்படுத்திப் பேசுகிறான்: மனிதனுக்கும் சமுதாயத்துக்கும் விடுதலை, பொறுக்கமுடியாதது என்று வாதாடுகிறான். மனிதன் உணவு படைக்கப்பட விரும்புகிறானேயொழியச் சுதந்தரமாக இருக்க அல்ல. நல்லது. கெட்டதைத் தெரிந்துகொள்ளும் சுதந்தரத்தைக் காட்டிலும் அதன் அமைதியையும், ஏன் சாவையுங்கூட அதிகமாக விரும்புகிறான். ஏனெனில், தேர்ந்துகொள்ளும் சுதந்தரம்போல வேதனையானது வேறெதுவுமிருக்கமுடியாது. விடுதலையின் பளுவைத் தாங்கும் அளவுக்கு மனிதன் வலிமை பெற்றிருக்கவில்லை.

## மனிதன் சுதந்தரத்தை விரும்புகிறானா?

அரை நூற்றாண்டுக்கு முன்பு பிரைஸ் (Bryce) எழுதினார்: 'பழைய அரசாங்கத்தின் அடக்குமுறைகளை விரும்பவில்லை என்பதாலோ அல்லது அதன் திறமையின்மையின்மீது வெறுப்புற்றதாலோ, ஏற்படுத்தப்பட்ட அந்தப் பழைய அரசாங்கத்தைத் தூக்கியெறிய அனுமதிக்கிறார்கள். ஆனால், அவர்கள் தாங்களே ஆட்சிபுரிய வேண்டும் என்று விரும்புகிறார்கள் என்று பொருளில்லை. மக்கள் கூட்டத்தின் விருப்பம் தாங்களே ஆட்சி செய்துகொள்ள வேண்டும் என்றில்லாமல் நன்றாக ஆட்சி செய்யப்படவேண்டும் என்று விரும்புகிறார்கள் என்பதே பொருளாகும்.'

'வெளிநாட்டில் எதேச்சாதிகார அரசுகள் இருப்பது சுதந்தரத்துக்கு அபாயமில்லை. ஆனால், நம் சொந்த நோக்குகளிலும், நம் சொந்த நிறுவனங்களிலும், வெளியார் அதிகாரத்துக்கும், ஒழுங்குக் கட்டுப்பாட்டிற்கும், ஒரே சீராக்கும் தன்மைக்கும், வெளிநாடுகளிலுள்ள தலைவர் ஒருவரின்மேல் சார்ந்துகொள்வதும் ஆகிய நிலைகளுக்கு வெற்றிகரமான இடம் அளித்ததுதான் சுதந்தரத்துக்கு அபாயம் விளைவிக்கக்கூடியது ஆகும். நமது போர்க்களம் இங்கிருக்கிறது' என்று கூறிய டியூயி (Dewey)யின் சொற்களோடு இதை முடிக்கலாம். இந்த உண்மையை விளக்க இன்னும் நேரம் செலவு செய்வது அவசியமா? தற்கால ஜெர்மனி இதற்கு எடுத்துக்காட்டாக

இருப்பது தவிர வேறென்ன ? ஃபிரான்சில் ஏற்பட்ட சோக நிகழ்ச்சியான விச்சி ஆட்சி (Vichy Regime), வரலாற்றையும் பரம்பரையையும் சாதாரணமாக விடுதலை விரும்பும் மக்கள் எவ்வாறு மறந்துவிடக் கூடும் என்பதைக் காட்டுகிறது—இது முதல் தடவையாகவுமன்று. ஏனெனில், அவமானத்திற்குரிய இரண்டாம் பேரரசும் இதையே காட்டுகிறது. ஆங்கிலோ - சாக்ஸோனியர்களாகிய நம்மில் நிற்பதாக நினைப்பவன் விழுந்துவிடாமலிருக்க எச்சரிக்கையாயிருக்கட்டும்.[1]

## சுதந்தரமும், பொது விருப்பாற்றலும்

முழுமையாக ஆராய்ச்சி செய்யப்பட்டதும், ஆழமான தத்துவ ஆதாரத்தில் அமைக்கப்பட்டதுமான சமுதாயத்தின் 'பொது விருப்பாற்றலை'ப் பிரதிபலிக்கும் அரசிடமிருந்து தனியாள் சுதந்தரத்துக்கு ஏற்படும் எதிர்ப்பு, மற்றவைகளைக் காட்டிலும் அபாயகரமானது. தனியாளின் சுத்தமான 'பகுத்தறிவை'யும் 'நெறியையும்' கொண்ட பகுதிக்காக அரசு இருக்கிறது என்பது இக் கொள்கையின் அஸ்திவாரம் என்று இறைமைபற்றிய அத்தியாயத்தில் நாம் பார்த்தோம். ஆகவே, எதிர்க்கும் உணர்ச்சியுள்ளது அவனது 'கீழான' பகுதியே. அவனது 'மேலான' பகுதி இணங்கிப் போகத்தான் விரும்பும். ஆகவே, அவனது 'கீழான' விருப்பாற்றலுக்கு எதிராக, அவனைக் கட்டாயப்படுத்தும் உரிமை அரசுக்குண்டு. ஏனெனில் அந்தச் சமயத்தில் அவனது 'மேலான' விருப்பாற்றல் மரத்துப்போயிருந்தாலும் அதன் ஆதரவு அரசுக்கு உண்டு என்பதை அது அறியுமாகையால் கட்டாயப்படுத்தும் உரிமையை உபயோகிக்கிறது. அரசு பூரணமான பகுத்தறிவின் உருவமாகையால் தனியாள் தனக்கு நல்லது எது என்று அறிந்து கொள்ளக்கூடியதைக் காட்டிலும் அது நன்றாக அறிந்திருக்கிறது.

இந்த நோக்கின்படி 'நல்ல' காரியங்களுக்குச் சுதந்தர உத்தரவாதம் அளிப்பதும், 'கெட்ட' காரியங்களுக்கு அதை மறுப்பதும் அரசின் பணி என்றாகிறது. சுதந்தரத்தின் இயல்பைக் குறித்த கருத்திலிருந்தே இது வேறுபடுகிறது என்பது தெளிவாகிறது. தடைகள் பொதுவாக இல்லாமல் இருப்பதே சுதந்தரம் என்று இல்லாமல் நற்செயல்களுக்கு மாத்திரமே சுதந்தரம் என்றாகிறது. 'சுய திருப்திக்காக மனிதன் பல நோக்கங்களை நிறைவேற்ற வழக்கமாக நாடுகிறான். இவை எல்லாம் மனிதனுக்கு மிக நல்லது எதுவோ அதை அடைவதற்குத் துணைபுரியுமானால், அதில்தான்

[1] அப்டன் சிங்கிளேரின் (Upton Sinclair) 'It Can't Happen Here' என்ற நவீனத்தில் அமெரிக்காவில் பாசிசப் புரட்சி நடப்பதாகக் கற்பனை செய்திருப்பதைக் காண்க.

மனிதனது உண்மையான முன்னேற்றம் அடங்கி இருக்கிறது என்று டி. எச். கிரீன் (T. H. Green) கூறுகிறார். வேறு சொற்களில் சொல்லப்போனால், சுதந்தரம் என்பது தன்னையும், தனது விருப் பாற்றலையும் குறிப்பிடத்தக்க ஒன்றோடு ஐக்கியப்படுத்துவதில்தான் இருக்கிறது. அந்தக் குறிப்பிடத்தக்க ஒன்றிடம் நமது சொந்தச் சுதந்தரத்தை விட்டுவிடுகிறோம். சில மாதங்களுக்குமுன் பெல்கிரேடில் (Belgrade) ஒரு பொதுவுடைமைக் கட்சியைச் சேர்ந்த இளம் மாணவர் சுதந்தரத்தைப்பற்றிக் கூறிய கருத்தும், இதுவும் ஒன்றேயாகும். 'கட்சியின் நலனுக்காக ஒருவனின் சுதந்தரத்தை விட்டுவிடுவதே சுதந்தரமாகும். பொதுவுடைமைக் கொள்கையின் சார்பில் செயலாற்றுவதற்கு வேண்டிய அதிக சுதந்தரத்தை இது தருகிறது.'[1]

## கோட்பாட்டுக் குழப்பம்

வெவ்வேறு பல விஷயங்களை இக் கொள்கை குழப்புவதாக நமக்குத் தோன்றுகிறது. நாடு, கட்சி, நபர் ஆகிய ஏதோ ஒரு குறிக்கோளுக்காக ஒருவனின் சுதந்தரத்தைத் தியாகம் செய்வது வரலாற்றின் அறம்மிக்க ஆற்றல் பெற்ற காரியங்களில் ஒன்றாகும்.[2] தியாகம்புரிவது மனிதனின் உரிமைகளில் மிக அடிப்படையானது. அது மிக்க மனச்சாந்தியையும், உயர்ந்த மகிழ்ச்சியையும் அளிக்க வல்லது. போர் அல்லது பொருளாதார நெருக்கடிக் காலங்களில் இப்படிப்பட்ட தியாகங்களைக் கேட்கும் உரிமையை எல்லா அரசுகளும் கோருகின்றன. தனியாள் சுதந்தரத்தைத் தீவிரமாக ஆதரிப்பவர்கள்கூட இந்த உரிமையை மறுக்கமுடியாது. இவ்வாறாகச் சுதந்தரத்தைத் தியாகம் செய்வதை உண்மையான சுதந்தரம் என் றழைப்பது வெறும் வார்த்தைஜாலமே. இதன்படி, சொந்தமாக முடிவு செய்வது, சொந்தமாகத் தேர்வு செய்வது ஆகியவைகளையும், சில சமயங்களில் மனச்சாட்சியையுங்கூட விட்டுவிடுவதாக இருக்கிறது. ஏனெனில் எனக்கு எது நல்லது, எது கெட்டது என்பதைப்பற்றி வேறொருவரின் முடிவை நம்பும்படி ஆகிறது. அதேபோன்று எது என்னுடைய 'மேலான கூறு', 'கீழான கூறு' என்று முடிவு செய்வதையும் வேறொருவரிடம் விட்டுவிடவேண்டி யிருக்கிறது. இப்படிப்பட்ட ஒன்றைச் சுதந்தரம் என்றழைப்பது மிகவும் முரண்பட்ட

[1] 'தாபோய் அம்மையார் (Madame Tabouis) பெய்ரூட்டில் (Beirut) நிகழ்த்திய சொற்பொழிவில் எடுத்தாண்ட மேற்கோள் இது. ஜனவரி 1948.

[2] 'மனிதன் தன் உயிரைவேண்டுமானால் தியாகம் செய்யலாம்; ஆனால் தன் ஆள்தத்துவத்தைத் தியாகம் செய்யக்கூடாது. அவனுக்குள்ளிருக்கும் மனிதனை அவன் உணரவேண்டும். அந்த ஆள்தத்துவத்தை உணர்ந்து கொள்ளத் தியாகம் ஒரு நிபந்தனை.' (Berdyaev, 'Origins of Russian Communism', P. 216)

செயலாகும். 'அனுபவ வாயிலாகப் பெறுவது சுதந்தரம் என்ற கருத்துக்கொள்கையினரின் கருத்து, நாம் அனுபவத்தில் காணும் உண்மைகளோடு ஒவ்வாததாக இருக்கிறது. எது சரி என்று தீர்மானிக்கும் என்னுரிமையைக் கீழ்ப்படுத்துவதன்மூலம் நான் அதிகச் சுதந்தரம் பெற்றுவிடமுடியாது' என்று லாஸ்கி (Laski) எழுதுகிறார்.

நமக்கு உண்மையிலேயே எது நல்லது என்பதை நம்மைவிட நன்றாகத் தெரியக்கூடிய ஏதோ ஒன்று - அரசு - இருப்பதாகக் கொண்ட அனுமானத்தின்பேரில் எழுந்ததுதான் பொது விருப் பாற்றல் கோட்பாடு. இது நாம் சிறு குழந்தைகளாக இருந்தபோது உண்மையாயிருக்கலாம். அப்பொழுது நாம் இன்னொருவருக்குக் கீழ்ப்படிய வேண்டியிருந்தது. ஆனால் அப்பொழுது சுதந்தரம் பெற்றிருக்கவில்லை; சுதந்தரமாயிருப்பது ஒரு காரியம். நம்மைக் காட்டிலும் நன்றாகத் தெரிந்தவருக்குக் கீழ்ப்படிவது இன்னொரு காரியம். மாலுமி கப்பலை ஓட்டும்போது, அவன் தலைவனாகிறான். கப்பல் பணியாளர் அவனுக்குக் கீழ்ப்படிகிறார்கள். இது அவர்களது நன்மைக்குத்தான் என்றாலும், அவர்களைச் சுதந்தரம் உள்ளவர் களாக ஆக்குவதில்லை. எனக்குப் பரிச்சயமில்லாத மலையில் ஏறும் போது எனது பாதுகாப்புக்கும், நன்மைக்கும் வழிகாட்டி ஒருவனைப் பின்பற்றிப்போகிறேன். ஆனால் அது எனக்குச் சுதந்தரம் அளித்து விடுவதில்லை. நாம் செய்யும் தவறுகளிலிருந்து அறிவைப் பெறுகிறோம் என்று வைத்துக்கொண்டாலும், முட்டாள்தனமான அல்லது பிழையான செயல்களில் ஈடுபடாமல் அடங்கி இருப்பது நல்லதாக இருக்கும். அப்படி அடங்கி இருப்பது சுதந்தரமாகி விடாது. அது மிகவும் பயனுள்ளது என்று வாதிடலாமேயொழிய, சுதந்தரத்தை அளிக்கிறது என்று வாதிடுதல் கூடாது.

### தடை, சுதந்தரமாகாது

நாம் அரசுக்குக் கீழ்ப்படியவேண்டும். அதை அரசு கோருகிறது. இந்தப் பிரச்சினையை நாம் ஆராயவேண்டும். திருச்சபையில் முழு நம்பிக்கை கொண்டிருக்கும் ஆஸ்திகன் தனது திருச்சபை தெய்வீக வழிநடத்துதலைப் பெற்றிருக்கிறது என்று நம்புகிறான். நாம் பின்பற்றும் இந்த அரசு எப்படிப்பட்டது? மிகவும் ஜனநாயக அரசில், அரசின் ஆணை என்பது பெரும்பான்மையோரின் ஆணையென்றுதானே பொருள்? பின்வரும் பகுதியில் மிக நன்றாகச் செயல்படக்கூடிய அரசாங்கம் ஜனநாயக அரசாங்கந்தான் என்று நாம் வாதிக்கப்போகிறோம். ஆனால் ஒன்றைச் சொல்லிவிட வேண்டும். பெரும்பான்மையானது அறநெறிப்படிச் சரியாகத்தான்

இருக்கும் என்று நம்பக்கூடியவன், எதையும் நம்பக்கூடியவன் என்றுதான் சொல்லமுடியும்.

சுதந்தரம் வேண்டுமென்ற தேவையையும், அரசாங்கம் வேண்டும் என்ற தேவையையும் சமரசப்படுத்த முயற்சி செய்த பெரு விருப்பாற்றல் கோட்பாடானது, சுதந்தரத்தைத் தியாகம் செய்துவிட்டது என்பது உண்மையாகும். ஹாப்ஹவுஸ் (Hobhouse) கூறுவதுபோல, 'சமத்துவ விதியோடு சுதந்தரத்தை ஒன்ருக்கிச் சுதந்தரக் கொள்கையின் கூர்மையை மழுக்குவதற்காகத்தான் அரசைப்பற்றிய ஹெகலின் (Hegel) கோட்பாடு எழுந்தது. ஹெகல் தனிநபரை அரசோடு இரண்டறக்கலந்து அதன்மூலம் ஆள் தத்துவத்தை ஒழுங்குக் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவந்தார். மனிதனின் சங்கங்களிலே இறுதியானதும், பிரதானமானதுமாக அரசை உயர்த்தி அதன்மூலம் மனித சமுதாயத்தை ஒழுங்குக் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவந்தார்.

முடிமக்களின் சொந்த சுதந்தரத்தை உள்ளடக்கியதாகப் பொது விருப்பாற்றல் இருக்கிறது என்று கூறுவது இன்னெரு குழப்பத்தை உண்டுபண்ணுகிறது. பொதுவாக இருக்கவேண்டுமானுல் விவாதத்தில் எல்லோரும் எந்தவிதத் தடைகளுமின்றிக் கலந்து கொண்டிருக்கவேண்டும். அப்படியானுல் எடுக்கும் முடிவு பொதுவாக இருக்கும். அப்படியில்லையானுல் தனித்தனி வகுப் பாற்றல்களை ஒன்று சேர்த்ததாகவே ஆகிவிடும். சுதந்தரக் குடிமக்களின் இடையருத ஒத்துழைப்பை பொது விருப்பாற்றலைப் பிரதிபலிக்கும் அரசு நாடுகிறது. கட்டாயத்தின் பேரிலும், தடைகள் விதிப்பதன்பேரிலும் ஏற்படும் பொது விருப்பாற்றல் முரண்பாடானதாகும்.

பொதுவுடைமைக் கட்சியைச் சேர்ந்த இளம் மாணவர் தமது சுதந்தரத்தையும், கட்சியையும் ஒன்ருக ஆக்கினுர். இளம் நாஜி ஒருவர் தாம் ஃபிரான்சிலிருந்தபோது சுதந்தரத் தேவையை உணர்ந்ததாகக் கூறினுர். ஃபிரான்சில் உண்மையான சுதந்தரம் இல்லை. அங்கு நடப்பவை எதுவும் முக்கியமில்லை. எது வேண்டு மானுலும் நடக்கலாமாகையால் எந்தச் செயலுக்கும் முக்கியத்துவ மில்லை. அங்குள்ள ஒருவர் அதிக சுதந்தரம் பெற்றிருப்பது போன்று தோன்றுவது இயற்கையே. ஆனுல், அந்தவகைச் சுதந்தரத்திற்குப் பயன் ஏதுமில்லை. அவருடைய நாட்டில் சகிப்புத்தன்மை கொஞ்சம் குறைவுதான். ஆனுல், ஒவ்வொருவரும் ஏதோ ஒரு பெரிய காரியத்தைச் சாதிப்பதாக உணர்கிருர்கள். ஒவ்வொருவரும் ஒரு

புதிய சமுதாயத்தை உருவாக்குவதில் தங்களது பங்கைச் செலுத்துவதாக உணர்கிறார்கள். இவ்வாறு அந்த ஜெர்மன் நாஜி இளைஞர் விளக்கினார்.[1]

வல்லமையுள்ள அரசு ஒன்றால் மிகவும் கட்டுப்பாடு செய்யப்பட்டிருந்தால் சமுதாயம் மகிழ்ச்சியாகவும், பயனுள்ளதாகவும் இருக்கும் என்று நம்பலாம். இப்படிப்பட்ட அமைப்பில் அரசின் விருப்பே மக்களின் விருப்பு. ஆகவே, அதற்கு மக்கள் கீழ்ப்படிவார்கள். இல்லாவிடில் இதை இன்னொரு வகையாக நம்பலாம். ஒரு நல்ல சமுதாயம் பெருமளவுக்குத் துவக்க உரிமையைத் தனது அங்கத்தினர்களிடம் விட்டுவிடும். அரசின் கட்டுப்படுத்தும் அல்லது தடைவிதிக்கும் அதிகாரத்தை மிகக் குறைந்த அளவுதான் உபயோகிக்கும். இப்படியும் நம்பலாம். ஆனால், இரண்டும் ஒன்று என்று கூற முடியாது.

## சுதந்தரம் ஒரு பொய்த் தோற்றமா?

சிலர் சுதந்தரம் இருக்க முடியாதென மறுக்கின்றனர். தற்கால உலகத்தில் மனிதனுக்கு என்ன சுதந்தரம் விடப்பட்டிருக்கிறது? 'நம் எண்ணங்களை வெளியிடும் உரிமையானது நமக்குச் சிந்திக்கும் திறனிருந்தால் பொருளுள்ளதாகும்' என்று பிராம் (Fromm) கூறுகிறார். கூட்ட மனப்பான்மை வளர்ந்துவிட்ட ஒரு காலத்தில் நாம் வசிக்கிறோம். நம் கல்விச்சாலைகள் எல்லாம், ஆலைகள் போன்று ஒரே மாதிரியான எண்ணங்களை உற்பத்தி செய்கின்றன. இதே போன்று வானொலி, செய்தித்தாள் ஆகியவையும் வியாபாரப் பொருள்களாக ஆகிவிட்டன. ஆகவே, 'ரெடிமேட்' (Ready-made) சிந்தனையிலிருந்து ஒருவன் தப்புவது வரவரக் கடினமாகிக் கொண்டிருக்கிறது. 'உண்மையான தனி மனிதன் நடத்தை என்று ஒன்றில்லை. ஏதோ ஒரு சிறு அளவு தனித்தன்மை ஒவ்வொரு மனிதனிடமும் இருக்கக்கூடும். ஆனால், அவனது பெரும் பகுதி மற்றவர்களைப் பார்த்து நடப்பதாலும், கலாச்சாரப் பாணிகளைக் கைக்கொள்வதாலும் ஆகியதுதான். நமது உள்ளப் பாங்குகள் சமுதாயத்தால் வரையறைப்படுத்தப்பட்டிருக்கின்றன. நமக்கென்று உண்மையில் உள்ளம் ஒன்றுங்கிடையாது. சுதந்தரம் கோருவதற்கு உள்ளம் வேண்டுமே' என்று ஒரு பொது உடைமை வாதி கூறுகிறார். ருஷ்யக் கிறிஸ்தவரும், தத்துவப் பேரறிஞருமாகிய பெர்டியாவ் (Berdyaev) இவருக்குப் பதில் கூறுகிறார்: 'பொது உடைமை இளைஞராகிய உங்களுக்கு மனச்சாட்சியின்

[1] Caillois 'The Two Faces of Freedom' in La France Libre,

சுதந்தரம் இருக்க முடியாது. ஏனெனில் சமுதாயத்தைச் சார்ந்திராத ஆன்மீகக் கொள்கை ஒவ்வொரு தனி மனிதனிடமும் இருப்பதாக இது அனுமானம் செய்கிறது.'

இரு வகைச் சவால்களோடு பொருளாதார அறிஞர் வருகிறார். 'நீங்கள் வசிக்கும் பொருளாதாரமுறை உங்களது வாழ்க்கை வழியைத் தீர்மானிக்கும். இதுதான் உங்கள் இயல்புகளை ஆக்கிப் படைப்பதால் உங்களது இயல்பு அல்லது நடத்தை பொருளாதார முறையினால் வரையறை செய்யப்பட்டதாக இருக்கிறது. மேலும், பொருளாதாரப் பாதுகாப்பின்மை நிலவும்போது எந்த 'சுதந்தரம்' இருந்துவிட முடியும்? பட்டினி கிடப்பவனுக்குப் பேச்சுரிமை அளிப் பதனால் பயன் என்ன? முதலில் உயிர்வாழப் பாருங்கள். அப்புறம் தத்துவப் பேச்சை வைத்துக்கொள்ளலாம் (primum vivere, deinde philosophari). நெற்றிவேர்வை நிலத்தில் விழப் பாடுபடும் பாட்டாளிக் குப் பேச்சுரிமை எங்கிருக்கிறது? புரட்சிகரமான கருத்துக்களைப் பேசி முதலாளியின் கோபத்துக்கு உள்ளாக எவருக்குத் துணிச்சலிருக்க முடியும்? மதம் எந்த அளவுக்கு மக்களின் அபினியாக இருக்க முடியுமோ, அந்த அளவுக்குச் சுதந்தரக் கோட்பாடும் இருக்க வில்லையா? நீங்கள் அழைக்கிறீர்களே உரிமைகள் என்று, அவை எல்லாம் வெறும் பொய்த்தோற்றமேயாகும்.'

## சுதந்தரமும், பாதுகாப்பும்

மேலே குறிப்பிட்ட குறைபாடுகளுக்கு என்ன பதிலைக் கூறலாம்? பொருளாதாரப் பாதுகாப்பின்மை சுதந்தர வாழ்க்கைக்குப் பெரிதும் இடையூறாயிருப்பது முற்றிலும் உண்மையே. முதலாவதாகச் சிலர் இந்தத் தடையை மேற்கொள்ள முடிந்திருக்கிறது. இரண்டாவதாக, இந்தக் குறை நிவர்த்திக்கப்பட்டுவருகிறது. பல சமூகச் சீரமைப்புப் பணிகளும், இன்சூரன்சு வசதிகளும் பொருளாதாரப் பாதுகாப் பின்மையை நிச்சயமாகக் குறைத்துவருகின்றன. அதன்மூலம் சுதந்தரத்துக்கு நல்ல இடம் கிடைத்திருக்கிறது. இதற்கு மாறாக, ருஷ்யா நிலைநாட்டியிருப்பதாகச் சொல்லும் பொருளாதாரப் பாது காப்பு, தனிநபர் சுதந்தரத்தை ஒன்றும் அதிகப்படுத்திவிடவில்லை. அப்படியே பொருளாதாரப் பாதுகாப்புதான் சுதந்தரம் என்று சொன்னாலும், ருஷ்யா பாட்டாளி மக்களின் சுவர்க்கமாக இன்னும் ஆகிவிடவில்லை.

நாம் விவாதித்த மற்ற இடையூறுகள் எல்லாம் மனத்திலிருந்து எழுபவை. சகிப்பற்ற தன்மை, அதிகார விருப்பம், பொறுப்பேற்க அச்சம், மற்றவர் வழி நடத்த விரும்பல் ஆகியவை நெறியைப் பாழ்

செய்யும் வியாதிகள். இவைகளுக்கு நிவாரணம் இல்லையெனில், சுதந்தரத்தின்பாடு திண்டாட்டந்தான். எல்லா இடங்களிலும் காலங்களிலும் பிரயோகிக்கப்பட முடியாதவையெனினும், சில இடங்களிலும் காலங்களிலும் பயன்படுத்தப்பட்டிருக்கும் காரணத்தால் சில நிவாரணங்கள் இருக்கத்தான் செய்கின்றன என்பது தெளிவாகிறது. பல்வகைக் கல்விமுறைகளாலும், சுதந்தர உள்ளத்தையும் உணர்ச்சியையும் வளர்க்கக்கூடிய எல்லா வழிகளும் நிவாரணங்களாகும். இங்கு நாம் குறிப்பிட்ட பல 'உறுதிகள்' எல்லாம் மனிதச் சார்புடையவை என்று அறிவோம். அதாவது மனத்திற்கு எதிராக மனம் உண்டாக்கும் உறுதிகள் இவை. மற்றவர்களை ஆட்டிப்படைக்கும் உரிமை சிலருக்குண்டு. எல்லா மனிதர்களும் ஒருவரிடம் ஒருவர் அடிமைகளாக இருக்கமுடியாது. சுதந்தரத்தின் ஆதரவாளர், மனிதர்களெல்லாம் சுதந்தர உரிமையுடையவர்களாக வேண்டும் என்று கோருகிறார். அல்லது மனிதர்களும் சுதந்தரம் அடைவதற்குரிய வாய்ப்புக்கள் தரப்படவேண்டும் என்று கோருகிறார். மனிதன் சுதந்தர உரிமையோடு பிறந்தாலும், சுதந்தரமாக வாழ்வதற்குத் திறமை பெற்றிருந்தாலும், இந்தச் சுதந்தரத்தை அவன் பாடுபட்டுத்தான் பெறமுடியும். அது ஒரு பெரிய சாதனையாகும். தன்னுடைய உண்மையான ஆள்தத்துவத்தை நிலைநிறுத்துவதற்கு மனிதன் பல சிரமமான முயற்சிகளைச் செய்ய வேண்டியிருக்கிறது. அவனை இணங்கவைக்க முயலும் எண்ணற்ற வெளி முயற்சிகளிலிருந்து அவன் விடுதலை பெற வேண்டும். சுதந்தரத்தை வெறுக்க வைக்கும் பல உள்ளுணர்ச்சிகளையும் அவன் அடக்கியாளவேண்டும். 'அவனது அற வாழ்க்கையில் முன்னேற்றத்தைக் காணத் தன்னையே கட்டுப்படுத்திக்கொள்ளும் பண்பை வளர்க்கத் துணைபுரிவதே விடுதலையின் நோக்கமாகும்' என்று ரகீரோ (Ruggiero) கூறுகிறார்.

## மனிதன் சுதந்தரமாக இருக்கத் தகுதி உள்ளவன்தானா?

இருப்பதிலேயே பெரிய பிரச்சினை மனிதன்தான். 'மனிதர்கள் தங்களைத் தாங்களே ஆண்டுகொள்ள முடியும்; ஆண்டுகொள்வார்கள். அவர்கள் பகுத்தறிவு படைத்தவர்கள். தங்களது நலன் இன்னதென்று அறிந்திருக்கிறார்கள். மற்றவர்களின் உரிமைகளை மதிப்பார்கள். அவர்கள் தேடிப் பெற்ற சுதந்தரத்தை நல்வழியில் பயன்படுத்துவார்கள். இவைதான் 'அரசியல் முன்னேற்ற' வாதத்தின் (லிபரலிசத்தின்) அடிப்படையாகும்' என்று கேனன் லாய்டு (Canon Lloyd) எழுதுகிறார். மனிதர்கள் உண்மையாகச் சொந்தமான கருத்துக்களும் வாழ்க்கையும் உடையவர்கள் என்று லிபரலிசம் அனுமானம் செய்துகொள்கிறது. ஆனால், தனிநபர்கள் சொந்தமற்ற

வாழ்க்கை நடத்துவது இன்றைய பிரச்சினையாக இருக்கிறது. ஸ்பானியத் தத்துவ அறிஞராகிய ஆர்டிகா ஒய் காஸெட் (Ortega Y Gasset) தமது ‘மக்கள் கூட்டத்தின் புரட்சி’ (Revolt of the Masses) என்ற சிறப்பான நூலில் ‘தங்கள் சக்திகளைத் தாங்களே உபயோகிக்க விரும்பும்’ நபர்களுக்கும், ‘ஏற்கெனவே எப்படி இருந்தார்களோ, அப்படியே ஒவ்வொரு கணமும் வாழ்வதுதான் வாழ்க்கை’ என்று நினைக்கும் மக்கள் கூட்டத்திற்கும் உள்ள வேறுபாட்டை எடுத்துக்காட்டுகிறார். இந்த மாதிரியான மக்கள் கூட்டம் ‘மற்ற ஒவ்வொருவரையும்போல இருக்க’ விரும்புகிறது. ‘தன்னுடைய தனித்தன்மையின்மீது குறிப்பிட்ட மதிப்பு எதுவும் இவர்கள் வைத்திருக்கவில்லை. மற்றவர்களிலிருந்து வேறுபட்டிருப்பது கீழ்த்தரமானது’ என்று இவர்கள் நினைக்கிறார்கள்.

‘சாதாரண மனம் பெற்றவர்கள் தாங்கள் சாதாரண மனம் பெற்றிருப்பதை அறிந்தும், சாதாரண மனம் பெற்றவர்களின் உரிமைக்குரலை உயர்த்தும் உத்தரவாதம் பெற்றிருக்கிறார்கள். இதோடு அதை எங்கு வேண்டுமானாலும் திணிக்கவும் உரிமை கொண்டாடுகிறார்கள்.’ கூட்டத்தைச் சேர்ந்த மனிதன், ‘தன்னைப் பூரண மனிதனாக’க் கருதுகிறான். மற்ற மனிதர்களோடு தன்னை ஒப்பிட்டுப்பார்க்க வளர்ச்சியற்ற அவன் மனநிலை இடந்தருவதில்லை. தன்னைவிட்டு வெளியே நோக்கவும் கூடுவதில்லை.[1] கூட்டத்தைச் சேர்ந்த ஒருவன் சுதந்தரத்தைச் சரியான முறையில் எவ்வாறு பயன்படுத்த முடியும்? அவன் பூரணமான மனிதனாக ஆகாதமட்டில் அவனால் முடியாது என்பது தெளிவு. ஒன்று, இப்படிப்பட்ட கூட்டம், தன் உரிமைகளை உதறித்தள்ளி எதிலும் பற்றில்லாமல், நாட்டங்கொள்ளாமல் இருக்கும். இவர்கள் வாக்குப் பதிவுகளுக்குப் போகமாட்டார்கள். வரிகளைக் கொடாது தப்பிக்க முயலுவர். பொறுப்புக்களைத் தட்டிக்கழிப்பார்கள். அல்லது தமது சாதாரண வாழ்க்கைமுறையை எல்லோர்மீதும் திணிக்கத் தமது உரிமையைப் பயன்படுத்துவர். இந்தக் கூட்டம் அறிவிலும் ஆன்மீகத்திலும் புத்துயிர் பெற்றாலொழிய, ருஷ்யாவுக்கும், ஜெர்மனிக்கும் நேர்ந்த கதி உலகத்தின் ஏனைய பகுதிகளுக்கும் நேரக்கூடும். எல்லாவற்றையும் தரப்படுத்தலும், வாழ்க்கையை ஒழுக்கக்கேடுள்ளதாக

[1] கூட்டத்துக்கும், தனியாளுக்குமிடையே நிகழும் மோதல் முதிர்ச்சிக்கும் குழந்தைத் தன்மைக்குமிடையே நேரும் மோதல்தான். சமூக ரீதியில் இது சமூகத்தில் எங்காவது காணப்படும். அறிவு முதிர்ச்சியை எப்பொழுதும் குழந்தைத்தனமான குணம்படைத்த மக்கள் தடைசெய்ய முயலுவதை எதிர்த்து நடக்கும் போராட்டமாகிறது. குழந்தைத்தனமான உலகிலிருந்து முதிர்ச்சியைப் பெறுவதற்கு ஒரு நபர் என்ன போராட்டம் நடத்தவேண்டியிருக்கிறதோ அதே போன்றதுதான் சமூகத்தில் தனியாள் தன் தன்மையை உணர முற்படுவதாகும்.

ஆக்குவதும் அதிகமாகி, உலகத்தின் சுதந்தர நாடுகளை அச்சுறுத்திக் கொண்டிருக்கிறது.

## சுதந்தரத்தை எழுப்ப முடியாது

எந்தவழியாய் ஆராய்ந்தாலும், எந்த வாதமுறையில் இதை அணுகினாலும், சுதந்தரம் என்பது அனுமானங்களின்மீது எழுப்பப்பட்டிருக்கிறது என்பதை நாம் உணருகிறோம். இந்த அனுமானங்கள் அனைத்தும் ஆன்மீக அடிப்படையுடையனவாக இருக்கின்றன. அதாவது சுதந்தரம் என்பது மனிதனின் உள்ளத்திலும், ஆத்மாவிலும் உறைகிறது. அல்லது இருப்பதே இல்லை. 'இன்னல்களையும் இடையூறுகளையும் களைப்பின்றிக் கடந்து சுதந்தர வேட்கைகொண்டிருந்த நாடுகள் பல இருந்திருக்கின்றன. அது தரும் நன்மைகளுக்காக அவர்கள் அதை நாடவில்லை. சுதந்தரத்தை அவர்கள் தலைசிறந்த வரமாகக் கருதினார்கள். எதை இழந்தாலும் ஆறுதல் அளிக்கவல்ல சுதந்தரத்தை இழந்தால் வேறு எதுவும் அவர்களுக்கு ஆறுதல் தராது என்ற காரணத்தால் அதை நாடினார்கள். இதை உணர முடியாதவர்களுக்கு இந்த மன வெழுச்சியின் பண்பைப் பகுத்துக்கூற நான் முற்படமாட்டேன். கடவுள் படைத்த உள்ளங்களில் இதைப் பெற்றுக்கொள்ளத் தாராள மனமிருந்தால் இது தானாகவே நுழைகிறது. உள்ளங்களை இது நிரப்புகிறது. இது அவைகளை ஊக்குவிக்கிறது. இதை உணர்ந்திராத கீழான உள்ளங்களுக்கு இது காணக்கிடைக்காத ஒன்று' என்று டி டோக்கோவில் (De Tocqueville) எழுதுகிறார்.

'சுதந்தரதேவி வாழும் நாடு அது. விடுதலைபெற்ற வீர மக்கள் வாழும் நாடு அது. பகைவரும், நண்பரும் சூழ நின்றாலும் எண்ணிய எண்ணத்தை அச்சமின்றிச் சொல்லும் உரிமை மனிதனுக்கு அங்குண்டு.'

ஒன்று நீங்கள் டென்னிஸன் (Tennyson), டோக்கோவில் (Tocqueville) ஆகியவர்களின் இலட்சியத்தை விரும்புகிறீர்களா? அல்லது நீங்கள் விரும்பவில்லையா? அப்படியானால் அதைப்பற்றி வாதமிடவேண்டிய தேவையில்லை.

# 8. சுதந்திர ஜனநாயகத்தின் அரசு

வளமான பாரதத்தின் ஒரே ஆதாரம் சுதந்தரம் என்று பார்த்தோம். இவ்வகைச் சுதந்தரச் சமுதாயம் ஒழுங்குற அமைக்கப் பெற்று அரசாகும்போது அதைப்பொதுவாக ஜனநாயக அரசு என்று அழைக்கிறார்கள். சுதந்தரக் கொள்கைகளின் ஆதாரத்தின்மீது எழும் சமுதாயத்தின் அரசியல், சமூகக் கட்டுக்கோப்பே ஜனநாயகம் என்று விளக்கப்படலாம். 'இனிச் சுதந்தரம் பெறப்போகும் உயிரைத் தன்னுள்ளடக்கும் மெய்தான் ஜனநாயகம்' என்றும் கூறலாம்.

## (i) ஜனநாயக தத்துவத்தின் ஆதாரங்கள்

### 'ஜனநாயகம்' என்று நாம் எதைக் குறிக்கிறோம்?

வெவ்வேறு பொருள்களிலும், அடிக்கடி 'ஜனநாயகம்' 'ஜன நாயகம்' என்ற சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன. எழுத்துக்கள் அழிந்துபோன வழக்கை நாணயத்தைப்போல இருக்கிறது இந்தச் சொல். ஒருவர் தமது விருப்பங்களின்படித் தாக்குவதற்கோ அல்லது ஆதரிப்பதற்கோ இந்தச் சொல்லைப் பயன்படுத்த முடியும். அரசரைக் காட்டிலும் குடியரசுத் தலைவர் மிகுந்த அதிகாரம் பெற்றிருந்தாலும் பரம்பரை மன்னராட்சியை விடக் குடியரசு அதிக ஜனநாயக முடையது. வாக்குரிமை எவ்வளவு பரந்து இருக்கிறதோ, அவ் வளவுக்கு அந்த அரசு ஜனநாயகம் பெற்றதாகிறது. உலகத்தின் தலை சிறந்த ஜனநாயக அரசாக ஏற்றுக்கொள்ளப்படும் சுவிட்சர் லாந்து, பெண்களுக்கு இன்னும் வாக்குரிமை அளிக்கவில்லை. இன்னொரு ஜனநாயகமாகிய ஃபிரான்சு சமீபத்தில்தான் பெண்களுக்கு இந்த வாக்குரிமையை அளித்தது. கடைசியாகச் சொன்ன இரு நாடுகளிலும், அமெரிக்காவிலும் உள்ள கல்விமுறை ஜனநாயகக் கல்வி முறையாகும். ஏனெனில் அங்குள்ள பெரும்பாலான குழந்தைகள் 'சமுதாய ஆதரவின் கீழுள்ள ஒரே சீரான பள்ளிகளில்

படிக்கிறார்கள். இரயில் வண்டியில் முதல் வகுப்பில் பிரயாணம் செய்வதைவிட மூன்றும் வகுப்பில் பிரயாணம் செய்வது ஜனநாயகத்துக்குரிய செயலாகும். இருப்பினும் முனிசிபல் இரயில்வே, பொது இரயில்வே, பஸ் முதலியவைகளில் இரண்டு வகுப்புக்களை இன்னும் வைத்துக்கொண்டிருக்கும் நாடுகளில் ஜனநாயக ஃபிரான்சும் ஒன்று. உணவுப் பங்கீட்டுக் கடைகளின் முன்பு கியூவில் நிற்பது, 'ஜனநாயகச் செயலாகும். கருப்புச் சந்தையில் வாங்குவது ஜனநாயகத்துக்கு எதிரான காரியமாகும். பிறப்பு ஏழ்மையைக் குறித்தும் ஏழை உறவினர்களைக் குறித்தும் அவமானமாக நினைப்பது ஜனநாயகத்துக்கு எதிரானது. இருக்கும் நாட்டையெல்லாம் விட்டு விட்டு ஜார் மன்னன் ஆண்ட (Tsar) ருஷ்யாவை ஜனநாயக நாடு என்று சிலர் அழைத்தார்கள். ஏனெனில் அங்குள்ள யாவரும், மிக உயர்ந்தவர்களையுங்கூட அவர்களது முதற்பெயரோடு அவர்கள் தங்கள் தகப்பனார்களின் பெயரையும் சேர்த்துக்கொண்டு அழைப்பது வழக்கம். சில சமயங்களில் சமத்துவ அடைமொழியாகச் 'சிறிய தந்தை' (little Father) என்ற அடைமொழியை எல்லோருக்கும் உபயோகித்தார்கள். இன்னும் சிலர் வருவாயின் கூறான ஏற்றத் தாழ்வுகள் இருப்பதை ஜனநாயகத்துக்கு எதிரானதாகக் கருதுகிறார்கள். இப்படிப்பட்ட ஏற்றத்தாழ்வுகளைக் குறைப்பதற்காக விதிக்கப்படும் வரிவிதிப்பை ஜனநாயகம் என்றழைக்கிறார்கள். ஸ்காண்டிநேவிய (Scandinavia) நாட்டு அரசர்கள் ஜனநாயக அரசர்கள் என்று அழைக்கப்படுகின்றனர். ஏனெனில் அவர்கள் ஆடம்பரத்தையும், ஆசாரங்களையும் அனுமதிப்பதில்லை. ஃபிரஞ்சு ஜனாதிபதி ஃபாவ்ர் (Faure) தமக்கும் மெய்க் காவலர்களாகப் படை வீரர்களை உபயோகித்தது ஜனநாயகத்துக்கு எதிரானது என்று கருதினார்கள். புதிதாகத் தோன்றிய குடியரசு ஒன்றின் செய்தித்தாள், 'ஜனநாயகம் எளிமையானது' என்ற தலையங்கம் எழுதியது. இதில் அந் நாட்டு ஜனாதிபதி ஒரு விருந்திற்குச் சென்று விட்டுத் திரும்பும்போது சாலையில் இடையூறுகள் இல்லாமலிருப்பதற்காக இரண்டு மணி நேரத்துக்குப் போக்குவரத்தையே நிறுத்தி வைத்ததை அது கண்டனம் செய்து இத் தலையங்கத்தைத் தீட்டியது.

'வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் ஜனநாயகத்துக்கு உரிய காலம் இருக்கிறது' என்று யாரோ சொன்னது உண்மையாக இருக்கலாம். இருப்பினும் இச் சொல்லைக் கண்டபடிஎல்லாம் உபயோகிப்பது குழப்பத்தை உண்டாக்குகிறது என்பதில் ஐயமில்லை. இந்தவிதமான சொற்குழப்பத்திலிருந்து மூன்று வகையான சொற்பிரயோகங்களைக் காணமுடியும். சமூகச் சமத்துவத்தோடு ஜனநாயகத்தை இணைப்பது பொதுவாகச் செய்யப்படுகிறது. அதாவது வெளித்தோற்றத்தில் மயங்குவதும் இல்லை; தீவிரமான வர்க்க

பேதங்களும் அங்கிருப்பதில்லை. இதைச் சமுதாய அமைப்பின் ஜனநாயகம் அல்லது சமூக ஜனநாயகம் என்று விவரிக்கலாம். செல்வ நிலை ஏற்றத்தாழ்வுகளைச் சமன்படுத்த முயலும் பொருளாதாரக் கொள்கைகளில் சிலர் இந்தச் சொல்லின் சாரத்தைக் காண்கிறார்கள். ஏனையோருக்கு ஒருவகையான அரசியல் அமைப்பை விவரிப்பதாகவே இச் சொல் தோன்றுகிறது. இவ்வித அரசியல் அமைப்பிற்கு எத்துணையோ விளக்கங்கள் அளிக்கப்படுகின்றன. ஆனாலும், ஆளப்படுவோரால் ஆட்சி செய்பவர்களுக்கு அதிகாரம் வழங்கப்படுவதுதான் ஜனநாயக அரசியல் அமைப்பு என்று பொதுவாகக் கூறலாம். இதில் நேரடியாகவோ, மறைமுகமாகவோ மக்களிடமிருந்து அதிகாரம் தோன்றுகிறது. இவ் வதிகாரம் ஒவ்வொரு கட்டத்திலும் பொதுமக்களின் கட்டுப்பாட்டுக்கு அடங்கி நடக்கிறது.

## அரசாங்கத்தில் ஜனநாயகம்

பொதுமக்கள் இறைமைக் கோட்பாட்டின்மீது அரசாங்கமுறை ஓரளவுக்குச் சார்ந்திருக்குமானால் அதை ஜனநாயக அரசாங்கம் எனலாம். இந்தக் கோட்பாட்டிற்கும், அதன் பிரயோகங்களுக்கும் எத்துணையோ விளக்கங்கள் தரப்பட்டிருக்கின்றன. 'மக்களுடைய, மக்களால், மக்களுக்காக அரசாங்கம்' என்று லிங்கன் (Lincoln) கூறினார்.[1]

'அறிவுள்ளவன் முட்டாளுக்காகப் பேசுவான் என்று நம்புவதற்கில்லை. இதே போன்று ஏழைக்காகப் பணக்காரனும், படிக்காதவனுக்காகப் படித்தவனும் பேசுவார்கள் என்றும் நம்புவதற்கில்லை. இந்த அனுமானத்தின்பேரில்தான் நமது ஜனநாயகமுறை அமைந்திருக்கிறது' என்று 40 ஆண்டுகளுக்கு முன் ஆங்கிலப் பத்திரிகையொன்று எழுதியது.[2] எல்லோருக்கும் தெரிந்த பழமொழியாகிய 'செருப்பு எங்கே கடிக்கிறது என்பது அதை அணிந்திருப்பவனுக்குத்தான் தெரியும்' என்பதற்கேற்ப நம் ஜனநாயகமுறை அமைந்தது என்றும் கூறலாம்.

கடந்த இரு நூற்றாண்டுகளாக இவ்வகை ஜனநாயக அரசு மேற்கு நாடுகளாகிய பிரிட்டன், ஃபிரான்சு, சுவிட்சர்லாந்து,

[1] இங்குச் சொல்லப்பட்டிருக்கும் சிறப்பான இந்த வாசகம் லிங்கனே எழுதியது என்பது சரியன்று. ஏனெனில் விக்கிளிப் (Wycliffe) வேதபுத்தகத்தின் முன்னுரையில் 'வேதபுத்தகம் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. இது மக்களுடைய, மக்களால், மக்களுக்காக அரசாங்கத்தை அமைக்க உதவும்' என்று எழுதப்பட்டிருப்பதாக 1946 ஜூன் 22-ல் வெளியான 'Listener' என்ற பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்ட கடிதம் ஒன்று கூறுகிறது.

[2] The Old Westminster Gazette - about 1908.

அமெரிக்கா ஆகிய நாடுகளில் பிரதானமாக இருந்து வந்திருக்கிறது. 'எல்லோருக்கும் வாக்குரிமை, நேர்மையாக நடத்தப்படும் வழக்கமான தேர்தல்கள், பல அரசியல் கட்சிகள், பேச்சுரிமை, எழுத்துரிமை, சிறுபான்மையோரைச் சகித்துக்கொள்ளுதல், திறமையுள்ளதும் சுதந்தரமானதுமான நீதித்துறை ஆகியவை எந்த அரசியல் முறையில் இருக்கின்றனவோ, அதை ஜனநாயகமான அரசாகச் சாதாரண ஆங்கிலக் குடிமகன் கருதுகிறுன். சர்வாதிகாரத்துக்கு நேர் எதிர்மாருனது ஜனநாயகம் என்று நாங்கள் நம்புகிறேம்[1]

பொது உடைமை ருஷ்யாவில் ஒரு வகை அரசு சமீபகாலத்தில் தோன்றியுள்ளது. இதுவும் தன்னுடைய பொருள் விளக்கத்தின்படி ஜனநாயகம் என்று அழைத்துக்கொள்கிறது. பொருளாதார, சமூக ஏற்றத் தாழ்வுகள் கொண்ட மேற்கத்திய முறை, ருஷ்யர்களுக்கு ஜனநாயகமாக அல்லாமல், செல்வர்களாட்சிமுறையாகவே தோன்றுகிறது. நம்முடைய ஜனநாயகத்தின் உயிர்நாடியாக நாம் கருதும் சகிப்புத்தன்மையை, ருஷ்யர்கள் கபட நாடகம் என்று கருதுகிருர்கள். ஏனெனில் பொருளாதாரத் துறையில் உள்ள தனியுரிமைகள் நீக்கப்படவில்லை. 'அரசாங்க ஜனநாயகத்தின் நல்ல அளவுக்கருவி அதன் கொள்கையேயாகும்' என்று மாஸ்கோவில் அலெக்சி சோகோலியேவ் (Alexee Sokoliev) நோவயா விரேம்யா (Novaya Vremya) என்ற பத்திரிகையில் எழுதினுர்.[2] 'யாருக்கு அது பணிபுரிகிறது? அது யாருடைய நன்மைக்காக இருக்கிறது? மக்களின் நன்மைக்காகவா அல்லது அவர்களின் கடும் வைரிகளான, துரோகிகள், மக்களின் நலனைக் காட்டிக்கொடுத்தவர்கள் ஆகியவர்களின் நன்மைக்காகவா?' கிழக்கு ஐரோப்பாவைச் சேர்ந்த ருமேனியா, பல்கேரியா, ஹங்கேரி, யூகோஸ்லேவியா ஆகிய விடுவிக்கப்பட்ட நாடுகளின் 'ஜனநாயக' ஆட்சியை இவர் ஆதரிக்கவும் செய்கிருர். 'ருஷ்யர்களுக்குப் போலீஸ் விதிகள், மாஸ்கோ விசாரணைகள், பாட்டாளிச் சர்வாதிகாரம் ஆகியவை எல்லாம் ஜனநாயகமாகும். ஏழைகளுக்காக ஏற்பட்ட அரசாங்கத்திடம் அதிகாரம் கொடுக்கப்பட்டிருப்பது ஜனநாயகமாகும். எனவே, அவர்கள் ஜனநாயகமானது எழுதப்பட்ட அரசியல் அமைப்பு அல்லது சட்டம் அல்லது தனியாள் உரிமைகள் ஆகியவைகளால் வரையறை செய்யப்படாதது என்று லிண்ட்சே பிரபு (Lord Lindsay) எழுதினுர். இந்த வகையான வரையறைகள் இருக்கும்வரை நமது ஜனநாயகத்தை வரையறைக்குட்பட்டதாக அவர்கள் கருதுகிருர்கள்.

[1] 'The Friend', January 18, 1946.

[2] Summarised in Soviet News.

மக்களின் விருப்பாற்றலை எதிர்ப்பது ஜனநாயகமற்ற செயலாகும். ஜனநாயகத்தின் பெயரால் இது அடக்கப்பட வேண்டும். தனியாள் செல்வத்தைச் சகித்துக்கொள்வதும் இப்படியே.

ஒரே சொல்லை ஆழ்ந்த அடிப்படைகளில் வேற்றுமையுள்ள இவ் விருவகை அரசுகளுக்குப் பயன்படுத்துவது குழப்பமுண்டாக்குவதாகும்.[1] ஆனால், இரு வகையினரும் இதைப் பயன்படுத்த விழைவதால் ‘ அரசியல் ’ ‘பொருளாதார ’ என்ற இரு அடைமொழிகளைச் சேர்த்துக்கொள்வதுதான் நம்மால் செய்யக்கூடியதாகும்.

## ஜனநாயகமும், உரிமைகளும்

தனியாள் உரிமைகள் கோட்பாட்டைப் பிரயோகிப்பதுதான் நம்முடைய அரசியல் ஜனநாயகமாகும். ஹாக்கிங் (Hocking) கூறுவது போல, தன்மை மனிதராக மதிக்கிறார்கள். ஆகையால் தான் பெற்றிருக்கும் இடம் சரியானதுதானா என்று மனிதன் உணரவேண்டும். காரியங்களெல்லாம் எந்த வழியில் மாற்றப்படத் தேவையோ, அந்த வழியில் மாற்றப்படுகின்றன, மாறிய பிறகு, ஒவ்வொருவரும் தங்களது வழிக்கேற்ப இந்தப் பிரபஞ்சத்தைத் தமது நன்மைக்காக மாற்றிக்கொள்ளும் வகையில் மாற்றிய மாற்றம் நிலைத்து இருக்கிறது என்றும் மனிதன் உணரவேண்டும்.

மக்கள் ஜனநாயகத்தை ஏன் நம்புகிறார்கள்? சுதந்தரத்தை நம்பும் அதே காரணங்களுக்காகத்தான் இதையும் நம்புகிறார்கள். சாதாரண மனிதனின் உரிமைகளிலுள்ள நம்பிக்கையைப் போன்றது தான் இது. எவருமே திறமை காரணமாக ஜனநாயகத்தை ஆதரித்ததில்லை. சுதந்தரக் கோட்பாட்டைப் போன்றே இங்கும், இது மறுக்கப்படுமானால் திறமையைக் காட்டிலும் முக்கியமான சில சொந்த மதிப்புகள் மறுக்கப்பட்டுப்போவதால் ஜனநாயகம் வேண்டப்படுகிறது. ‘சுதந்தரமான, சமமான, செயல் திறன்பெற்ற, விவேகமுள்ள குடிமக்களால் ஆன சமுதாயமே ஜனநாயக சமுதாயம் ஆகும். இங்கு ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய வாழ்க்கைவழியைத் தானே தெரிந்துகொள்வதோடு, பிறரும் அவ்வாறே தங்களது வாழ்க்கை வழியினைத் தேர்ந்துகொள்ளவேண்டும் என விரும்புகிறான் ’ என்று உல்ப் (Wolff) கூறுகிறார்.

[1] ‘1941-க்குப் பிறகு மேற்கு நாடுகளும் ருஷ்யாவும் சேர்ந்து பொதுப் பிரகடனங்கள் வெளியிட்டதுதான் இவ் விருவகை நாடுகளுக்கிடையே யுள்ள உறவு.’ இதன்பேரில்தான் பொதுவான சொல்லாகிய ஜனநாயகத்தைப் பயன்படுத்தியதாக விண்ட்சே பிரபு அந்தச் சமயத்தில் கூறினர். ஆனல் இந்தச் சொல்லின் பொருளில் ஒருமைப்பாடு இருக்கிறதா என்று பார்க்க முயற்சி ஒன்றும் செய்யப்படவில்லை.

## ஜனநாயகத்தின் நான்கு உட்கருத்துக்கள்

இப்படிப்பட்ட அனுமானத்தில் உள்ள உட்கருத்துக்கள் எவை? முதலாவது, நம்பிக்கையிலும், செயலிலும் ஒரே சீராக இருக்க வேண்டுவது அவசியமுமில்லை; விரும்பத்தக்கதுமன்று. மிக முக்கியப் பிரச்சினைகளின்மீதுகூட வேறுபாடுகொள்வதற்கு ஒப்புதல் இருப்பது அவசியம். ஒரு கருத்தை இன்னொரு கருத்தோடு மோதவிடுவதால் உண்மையொளி பிறக்கும் என்று இது நம்புகிறது. ஒவ்வொரு மனிதனும் ஏதாவது மதிப்புப்பெற்ற ஒன்றை அளிக்கமுடியும். எனவே, அவன் அளிப்பதற்குத் தடையொன்றுங்கூடாது என்று நம்புகிறது.[1] 'ஒவ்வொரு வயது வந்த குடிமகனும் தன்னுடைய எண்ணங்களையும், விருப்பங்களையும், எந்த விஷயத்தின்மீதும், அவன் விரும்பும் எந்த முறையிலும் சொல்வதற்குச் சமமான சுதந்தரம் இருக்கும் முறையே ஜனநாயக அரசாங்க முறையாகும். தன்னோடு வாழும் மக்களில் பெரும்பான்மையோரைத் தன் கருத்துக்கிணங்கச் செய்யவும், அப்படியேற்பட்ட எண்ணங்களின் அடிப்படையில் முடிவுகள் செய்யவும், இந்த எண்ணங்களை மாற்றுவதற்குரிய முயற்சிகள் செய்யவும் உரிமைகளுள்ளதே ஜனநாயக அரசாங்க முறையாகும்' என்று சர். ஸ்டாபோர்டு கிரிப்ஸ் (Sir Stafford Cripps) எழுதுகிறார்.

இரண்டாவது உட்கருத்து அரசியல் கொள்கையிலிருந்தும், செயல்முறையிலிருந்தும் 'வரம்பிலாத' எதையும் ஒதுக்கிவிடுவதாகும். அரசியலில் கால இடத் தொடர்புறக் கோட்பாடாகும் இது. பிரகடனப் படுத்தவோ, நிலைநிறுத்தவோ அரசுக்கு இறுதியான உண்மையொன்றுங் கிடையாது. வழுவாமை ஒருவேளை மதக் கருத்தாக இருக்கலாம். ஆனால், அரசியலில் அதற்கு இடங் கிடையாது.[2] அங்கத்தினர்களைத் தவிர்த்து 'அரசுக்காகவே' என்ற நம்பிக்கை இதில் கிடையாது. அரசை மறைபொருளான ஏதோ ஒன்று என்று நம்புவதுங் கிடையாது. தனிக் குடிமகன் இருப்பது ஒன்றே உண்மையானதாகும்.

மூன்றாவது உட்கருத்து, கல்வி நிலை, செல்வ நிலை, பிறப்பு ஆகியவற்றைக் கருதாமல் அரசியல் உரிமைகள் எல்லோருக்கும் ஒரே மாதிரியாக இருக்கவேண்டும் என்பதாகும். 'தனியுரிமை பெற்ற

[1] 'Democracy and Dissent by Friedrich—'Political Quarterly' October, 1939. 'வலிமையின் மீதல்லாமல் ஒப்புதலின்மீது அரசியல் முடிவுகள் செய்யப்படவேண்டும் என்ற அம்சத்தில் பொது ஒப்புதல் அவசியம்' என்று அவர் வலியுறுத்துவதை ஒப்புக்கொள்ளலாம். அவர் சொல்லும் எல்லாவற்றையும் ஏற்றுக்கொள்ள முடியாவிட்டாலும் இது ஒப்புக்கொள்ளக் கூடியதே.

[2] Lacroix 'Y a t'il deux democraties?' Espirit, March 13, 1946.

ஒரு வகுப்பாரின் நன்மைக்காக அல்லாமல், பாகுபாடின்றி ஒவ்வொரு வரின் நன்மைக்காகவும் ஒவ்வொருவரும் விட்டுக் கொடுக்கும்படி அமைக்கப்பட்ட சமுதாயமே ஜனநாயகமாகும்' என்று ஷா (Shaw) கூறுகிருர். 'அரசு அளிக்கும் நன்மைகளிலிருந்து சிலரை ஒதுக்கும் கொள்கைகள் செயலாற்றப்படுவதிலிருந்து தடுப்பதுதான் இதன் நோக்கமாகும். இஃதில்லாமல் சிலர் மற்றவர்களின் கைப்பாவையாக ஆகி விடுகிருர்கள்.[1] ஆகவே, ஜனநாயகமானது சமத்துவத்தில் வேரூன்றியிருக்கிறது. இதை ஏற்கெனவே நாம் அடைந்துவிட்டோமென்றில்லை. நமக்கு முன்பாக வைத்துக்கொள்ள வேண்டிய நோக்கமாக இதைக் கொள்ளவேண்டும்.

நான்காவதாக, அமைதியான முறையில் அடுத்தவரை நம் வயப்படுத்த முடியும் என்ற நம்பிக்கையிலிருந்து ஜனநாயகத்தைப் பிரிக்க முடியாது. மனிதன் இறுதியில் நியாயமாக நடந்துகொள்வான். பகுத்தறிவுக்கொத்த வாதங்களை அவன் கட்டாயம் ஏற்றுக்கொள்வான் என்ற நம்பிக்கையிலிருந்து ஜனநாயகத்தைப் பிரிக்கமுடியாது.

## (ii) வரலாற்றில் ஜனநாயகம்

### பழையகால உலகம்

ஜனநாயகக் கொள்கையின் தோற்றுவாயைக் காண்பதற்கு எவ்வளவு காலம் பின்னேக்கிப் போகவேண்டும்? உலக சமயங்களிலெல்லாம், வெளிப்படையாகவோ அல்லது உள்ளீடாகவோ எல்லா மனிதர்களின் இயற்கையான சமத்துவம் வலியுறுத்தப் பட்டிருப்பதில் ஜனநாயகத்தின் தோற்றுவாயைக் காணலாம். அதே போன்று ஆதிகாலந்தொட்டு நம்மிடமிருக்கும் தத்துவ முறைகளிலும் இதைக் காணமுடியும். இவைகளில் காணப்பட்டவையெல்லாம் அரசியல் அமைப்பின் ஆதாரங்களாவதற்கு முயற்சிகள் பல நூற்ருண்டுகளுக்குப் பின்னர்த்தான் செய்யப்பட்டன. கிரேக்க நகர அரசுகளில், அதிகாரிகளைத் தேர்ந்தெடுப்பதோடல்லாமல், அன்ருட ஆட்சிமுறையிலும், நீதி வழங்குவதிலும் எல்லாக் குடிமக்களும் பங்கு பெற்றிருந்ததால் அவை ஜனநாயக அரசுகளாக இருந்தன. ஒரு மனிதன் மற்றவனைப் போலவே எல்லா வழிகளிலும் சிறந்தவன்தான் என்ற அனுமானத்தின்பேரில் சீட்டுப்போட்டுப் பல பதவிகளுக்கு ஆட்களை இவர்கள் நியமித்தார்கள். இது சமத்துவக் கோட்பாட்டைத் தீவிரமாகப் பிரயோகித்ததாகும். 'வெளிநாட்டாரையும்' (அதாவது மற்றச் சமுதாயத்தவராகிய கிரேக்கர்களையும்)

[1] Article 'Democracy' in the Encyclopaedia of Social Sciences.

அடிமைகளையும் ஒதுக்கிவிட்டு, ஒரு சிறிய எண்ணிக்கையுள்ள குடிமக்களுக்கு மட்டுமே இந்தக் கொள்கைகளைப் பயன்படுத்தினார்கள். எந்தக் கிரேக்க ஞானியும் ஜனநாயகத்தை விரும்பத்தக்க முறையாக ஒப்புக்கொள்ளவில்லை. கொடுங்கோன்மையைக் காட்டிலும் ஜனநாயகத்துக்குக் குறைவான ஆட்சேபம் தெரிவிக்கப்பட்டது என்றுதான் சொல்லமுடியும். 'குடியரசு'க் காலத்திலுங்கூட ரோமில் உண்மையான ஜனநாயகம் இருந்ததாகச் சொல்லமுடியாது. செல்வத்தாலும், கல்வியாலும் சிறப்புப்பெற்ற உயர்குடிப் பிறந்தோரின் கைகளிலே வலிமையான அதிகாரம் இருந்தது. அடிமை முறை பின்பற்றப்பட்டது. அதிகாரிகளையும், தனியாட்களையும் சட்டம் சமமாகப் பாவிக்கும் என்பதில்தான் ரோம் ஜனநாயக வளர்ச்சிக்கு முக்கியமான கொள்கையை வகுத்தளித்தது.

## இடைக்கால உலகம்

கிறிஸ்தவ மதம் தோன்றியதும் உடனடியான வேறுபாடுகள் தோன்றிவிடவில்லை. அதன் சமத்துவம் சட்டப்படியானதாகவுமல்லாமல் பொருளாதார ரீதியிலும் அல்லாமல், ஆன்மாவுக்குரிய சமத்துவமாகத்தான் இருந்தது. ஒப்பந்தமேற்படுத்தல் என்ற எண்ணம் இடைக் காலத்தில் வளர்ச்சியுற்றது. ஒப்பந்தப்படி அரசர்கள் நடந்துகொள்ளத் தவறினால் மக்கள் கீழ்ப்படியும் கடமையிலிருந்து விடுவிக்கப்படுகிறார்கள் என்ற நம்பிக்கை இக் காலத்தில் வளர்ந்தது. ஆளப்படுபவருக்காக ஏற்பட்டதே ஆட்சி என்ற கொள்கையை இந்த எண்ணம் வலியுறுத்தியது. பெரிய சமுதாயங்களின் ஜனநாயக அரசாங்கத்துக்கு ஏற்பட்ட சிக்கலைத் தீர்க்கும் வகையில் பிரதிநிதித்துவ முறையைக் கண்டுபிடித்தார்கள். அதிகாரம் ஓர் அடைக்கலப் பொருள் என்று இவர்கள் கருதினார்கள். எந்தவகை அரசியல் சுதந்தரத்துக்கும் மிக அவசியமான சமயக் கருத்துக்களில் வேறுபாடு இருக்கலாம் என்பது இடைக்கால அறிவுக்கு ஒவ்வாததாக இருந்தது.

## சமயச் சீர்திருத்தம் : (Reformation)

அரசின் கருத்தினின்றும் மனிதன் வேறுபட்ட கருத்துக்கொள்ள உரிமையுண்டு. இதுதான் ஜனநாயகம் என்ற நிலை சமயச் சீர்திருத்தத்தினால் ஏற்பட்டது. தங்களோடு வேறுபட்டவர்களைப் பொறுத்தவரையில் இதே கொள்கையைச் சமயச் சீர்திருத்தத் தலைவர்கள் கடைப்பிடிக்கவில்லையெனினும், ஜனநாயகம் இதிலிருந்து தோன்றியதுதான். அரசு புதிய வழிபாட்டிற்குத் தடை விதித்திருந்தது. இத் தடையை வன்முறையாலோ அல்லது அமைதி

யாகவோ எதிர்க்கவேண்டி இருந்தது. இப்படி ஏற்பட்ட எதிர்ப்பை நியாயமானதாக்க ஏதாவதொரு கொள்கை வேண்டியிருந்தது. புராட்டஸ்டென்ட் (Protestant) நாடுகளில் கத்தோலிக்கர்களும் இவ்வாறே கீழ்ப்படியாமைக்கு ஆதரவு தரவேண்டி நேரிட்டது. இரண்டு பக்கங்களிலும் மீண்டும் ஒப்பந்தக் கருத்து வெளியிடப் பட்டது. அரசர்களின் உரிமைகள் மிகவும் வரையறைக்குட்பட்டன. கொடுங்கோலரைக் கொன்றுவிடுவதையும் ஆதரிப்பவர்கள் பலர் இருந்தார்கள்.

அரசினர் சமயத்தினின்றும் மாறுபட்ட சமயத்தைச் சார்ந் திருக்கத் தனியாளின் மனச்சாட்சிக்கு உரிமையுண்டு என்று புராட்டஸ்டென்டுகள் வாதித்தனர். ஒரே சீராக எல்லோரும் இருக்கவேண்டும் என்ற கொள்கை சாத்தியமானதன்று என்பதோடு விரும்பத்தக்கதுமன்று ; தேவையானதுமன்று என்ற கருத்தைச் சில சமயங்களில் இவர்கள் வெளியிட்டனர்.

'கடவுளின் வார்த்தையிலிருந்து ஒளியும், உண்மையும் மற்றெ வற்றையும்விட அதிகமாக இருக்கின்றன. இக் காரணத்தால் சமயச் சடங்குகளில் ஒரே மாதிரியாக இருக்கவேண்டும் என்று சொல்வது தீய தன்மையுடையது. பலமுறைகளை ஊக்குவிப்பதால் முன் னேற்றம் ஏற்படும். 'கடவுளின் முழுத் தத்துவத்தையும் எந்த ஒரு மனிதனோ, மக்கள் தொகுதியோ சரியாக வெளியிட முடியாது.' ஆகவே சமய சமரசம் நிலவுவதே சரியானது என்று ரோஜர் வில்லியம்ஸ் (Roger Williams) உணர்ந்தார். இதை ரோட் தீவில் (Rhode Island) பின்பற்றச் செய்தார். புராட்டஸ்டென்ட் சமயம் விவாதத்தின்போது வேரூன்றி இருந்தது. விவாதம் என்றால் சம்பந்தப்பட்ட எல்லாக் கட்சிகளுக்கும் சுதந்தரமுண்டு என்று பொருள் ஆகும்.

அரசிலிருந்து திருச்சபை சுதந்தரமடைந்தது இவ் வகையான கொள்கைகளின் முதல் விளைவாகும். இது சில சமயங்களில் சட்டப்படியாகப் பிரிக்கப்பட்டதால் நேர்ந்தது. வேறு சில சமயங் களில் இன்னொரு ஆட்சி அமைப்புக்குள் தன்னாட்சியுரிமை நடை முறையில் ஏற்பட்டதால் விளைந்தது. தனித் திருச்சபைக் கூட்டம் இதன்மூலம் தன்னாட்சி பெற்றது. ஏனெனில், பல நாடுகளில் புதிதாகத் தோன்றிய திருச்சபை சமயத் துன்புறுத்தலைத் தானே மேற்கொள்ள வேண்டியிருந்தது. எனவே, மத்திய மயமாக்கப்பட்ட கட்டுப்பாடு சாத்தியப்படவில்லை. '17 ஆம் நூற்றாண்டில் தன்னாட்சி பெற்றிருந்த சமயக் கூட்டங்களின் கொள்கையே நமது ஜன நாயகத்தை ஊக்குவித்தது' என்று லிண்ட்சே பிரபு (Lord Lindsay)

கூறுகிறார். தானாக விருப்பமுற்றுச் சேரும் சங்கங்களில் ஆங்கிலோ-சாக்சேனியர் கொண்டிருந்த நம்பிக்கையில் தோன்றியதே ஜன நாயகம் ஆகும். இதைத்தான் அமெரிக்க ஜனநாயகத்தின் தனித் தன்மையாக டோக்கோவில் (Tocqueville) கருதினார்.

## தற்கால ஜனநாயகத்தில் புராட்டஸ்டென்ட் ஆதாரம்

பதினேழாம் நூற்றாண்டில் இங்கிலாந்திலிருந்த புராட்டஸ்டென்டுகள்தான் ஜனநாயகக் கொள்கையை முதன் முறையாகத் தெளிவாக வெளியிட்டனர். 'தற்சிந்தனையும், மனச்சாட்சியும் சுதந்தரமாகச் செயல்பட முடியாத இடத்தில் எவன் வசிக்க முடியும்?' என்று வால்வின் (Walwyn) எழுதினார். 'சிவில் விவகாரங்களில் தனக்கு எது மிக நன்மையானது என்பதை ஒவ்வொரு மனிதனும் சாதாரணமாகத் தெரிந்துகொண்டிருக்கிறான் என்பதை நாம் அனுபவத்தில் அறிகிறோம்' என்று ஹென்றி ராபின்சன் (Henry Rabinson) எழுதுகிறார். 'இங்கிலாந்தில் பிறந்த எவனையும், கடவுளின் கட்டளையோ அல்லது இயற்கையின் விதியோ, அவன் வாழ்வையும், சாவையும் நிர்ணயிக்கும் சட்டங்களை இயற்றுபவர்களைத் தேர்ந்தெடுப்பதிலிருந்து விலக்கமுடியாது; விலக்கக் கூடாது' என்று ஜனநாயகத்தின் ஆதாரத்தைச் சாக்ஸ்பி (Saxby) விளக்குகிறார். 'தங்களது பாரத்தை நன்றாக உணர்ந்து அதிலிருந்து விடுதலைபெற வீறு கொண்டிருக்கும் மக்களுணர்ச்சியே அதிகாரத்திலுள்ளவர்களை வன்முறையில் குறுக்கீடு செய்து மாற்ற முடியும். உலகத்திலுள்ள பெரிய தலைவர்கள் எவரும் தாங்களாகவே தங்களது அதிகாரத்தை விட்டுக் கொடுப்பார்கள் என்பதோ அல்லது தங்களது ஆடம்பரத்தைக் குறைத்துக்கொள்வார்கள் என்பதோ கற்பனை செய்ய முடியாதது' என்ற கருத்தை ஜான்வார் (John Warr) 1649-ல் வெளியிட்டார்.

'நம்பிக்கையுடையவர்கள் அனைவரும் மத குருக்களே' என்ற புராட்டஸ்டென்ட் சமயத்தின் வலியுறுத்தலும், திருச்சபையின் அங்கத்தினர் அனைவரும் சம உரிமை பெற்றவர்கள் என்ற வலியுறுத்தலும் சாதாரண மனிதனை மீட்சியுறச் செய்தது. எல்லாவகைச் சாதாரண மக்களுக்கும் மதத் தலைமை அளித்துவிட்டதாகவும், சொற்பொழிவுகள் ஆற்ற அநுமதித்துவிட்டதாகவும் புராட்டஸ்டென்ட் சமயத்தைப்பற்றிக் குறை கூறினர். 'சாதாரணப் பிரசங்கிகள், செருப்பு செய்வோர், தகர வேலை செய்வோர், பண்டங்கள் விற்போர், நெசவுத் தொழிலாளர், விதை விதைப்போர், புகை போக்கியைச் சுத்தம் செய்பவர், ரொட்டி செய்பவர், கருமான்கள், பெட்டி செய்பவர், சோப்புச் செய்பவர், கையுறை செய்பவர்,

கசாப்புக் கடைக்காரர், கோழி விற்பவர், பொத்தான் செய்பவர், தையற்காரர், சேணம் செய்பவர், வாயில் காப்போர், பூட்ஸ் செய்பவர், மெக்கானிக்குகள் ஆகிய பலவகையான மக்களைப் பேசுவதற்கும், மதத் தலைமைக்கும், அநுமதித்துவிட்டதாகக் குறை கூறினர். உயர்குடிப் பிறந்தோரின் அரசியல் கட்சி இதைக்கண்டு அருவருப் படைந்தது. 1644-ல் எசெக்ஸ் பிரபு (Lord Essex) 'சாதாரண மக்களின் துணிச்சலை அடக்குவதற்குத் தமது வாழ்நாளையே அர்ப்பணிக்கப் போவதாக'க் கூறினர்.[1]

## இங்கிலாந்தில் ஜனநாயகம்

இங்கிலாந்தின் உள் நாட்டுப் போர்களான அரசியல் போராட்டம் வெறும் சமய விடுதலைப் பிரச்சினையோடு நின்றுவிட வில்லை. பாராளுமன்றத்தின் அனுமதியின்றி வரிகளை விதித்துத் தனியாரின் சொத்துக்களில் தலையிடும் அரச உரிமையிலும் இப் பிரச்சினை சம்பந்தப்பட்டிருந்தது. மதச் சுதந்தரமானது, உடைமை களில் எதேச்சாதிகாரமாகத் தலையிடாமலிருக்கும் சுதந்தரத்தோடு அதிக நெருக்கமாகப் பிணைந்து இருப்பதை நாம் காண்கிறோம். 'எல்லாச் சுதந்தர மக்களும் நிலத்தை மரபுரிமையாகப் பெறும் சுதந்தரத்தோடு பிறந்திருக்கிறார்கள். சுதந்தரமாக அவர்கள் தொழிலைச் செய்யவும் பிறப்புரிமை பெற்றிருக்கிறார்கள். மிகப்பெரிய நெருக்கடியாகக் கொடுங்கோன்மையை மதிப்பீடு செய்யலாம். ஏனெனில், அது விடுதலையில் காணக் கிடைக்கும் தலைசிறந்த மகிழ்ச்சிக்கு முரணாக இருக்கிறது. மேலும் கடவுளும், நமது அயரா உழைப்பும் நமதாக்கிய உடைமைகளைச் சுதந்தரமாக ஈடுபடுத்தும் உரிமையையும் கொடுங்கோன்மை பறிக்கிறது' என்று 1642-ல் வெளியிடப்பெற்ற துண்டு வெளியீடு ஒன்று கூறியது. 'மிகவும் கீழான நிலையிலுள்ள குடிமகனும் சொத்து விஷயத்திலும் மற்ற காரியங்களிலும் சுதந்தர உரிமைபெற்றிருக்கவேண்டும். நாங்கள் இந்த நம்பிக்கையினுல்தான் அபாயங்களையும், ஆபத்துக்களையும் மேற்கொண்டோம்' என்று 1647-ல் வெளியான 'Common Soldier's Apology' உறுதிபடக் கூறிற்று. பொருளாதாரத் துறையில் 'தலையிடாக் கொள்கை'யோடு இங்கிலாந்தின் லிபரலிசம் ஒருமைப் பட்டுப்போவதை நாம் இதன்மூலம் அறிய முடிகிறது.[2]

[1] இவைகளும் இதற்கு முன்னர் எடுத்தாளப்பட்ட மேற்கோள்களும் (Petrogorsky's) பீட்டரோகோர்ஸ்கியின் Democratic Ideas in Seventeenth Century England என்ற நூலிலிருந்து கையாளப் பட்டிருக்கின்றன.

[2] 1647 ஆம் ஆண்டு வெளியான துண்டுப் பிரசுரத்தின் மேற்கோளை இதற்கு முந்திய அத்தியாயத்தில் காண்க. அது வாணிக உரிமையைப் பற்றியது.

சமயத்துறை, பொருளாதாரத்துறை, அல்லது அரசியல்துறை ஆகிய எத் துறையாயினும், அரசனுக்கும் நாட்டுச் சட்டத்துக்கும் இடையே உள்ள உறவு, மக்களின் உரிமைகளுக்கும் அரசனது உரிமைகளுக்கும் இடையே உள்ள உறவு ஆகிய உறவுகளைப்பற்றிய பிரச்சினையே முக்கியமானதாக இருந்தது. 1689-ல் உரிமைகள் சாசனம் இதற்கொரு தீர்வு கண்டது.[1] ஒப்பந்தக் கோட்பாட்டை வெளியிட்டதோடு, சட்டத்திற்கு அரசனைக் கீழ்ப்படுத்தி, மக்கள் விரும்பாத அரசனை மாற்றுவதற்கு அவர்களுக்கு உரிமையை அளித்தது. 1691-ல் ஜான்லாக் (John Locke) எழுதிய 'Treatise on Civil Government' என்ற நூல் இந்த முடிவுகளுக்குத் தத்துவ ரீதியான நியாயத்தை எடுத்துரைத்தது. 'தன்னுடைய உழைப்பைக் கலந்துவிட்ட' எந்தப் பொருளின்மீதும் மனிதனுக்குள்ள - வேறொருவனுக்கு மாற்ற முடியாத உரிமையை அவர் வலியுறுத்தினர்.

'நமக்குக் கீழான பிராணிகள் நமது உபயோகத்திற்கென்று இருப்பதுபோல, நம்மில் ஒவ்வொருவரும் இன்னொருவரின் நலனுக்காக நம்மை அழித்துவிடத்தக்க அதிகாரம் இங்கு இருப்பதாகக் கருதுவதற்கு இடமில்லை' என்று தமது கருத்தையும் வெளியிட்டார்.

## சுவிட்சர்லாந்தின் ஜனநாயகம்

சமயச் சுதந்தரம், தனியாள் தத்துவம் ஆகிய கோட்பாடுகளின் அரசியல் பிரயோகமே ஜனநாயகத் தத்துவமாகிறது. இத் தத்துவங்கள் ஜினிவாவைச் சேர்ந்த ஜான் கால்வின் (John Calvin of Geneva) அவர்களின் கருத்துரைகளிலிருந்து பெறப்பட்டனவாகும். ஜினிவா நகர அரசு ஆணைபெற்ற மத குருக்களாலான சட்டசபையின் மேற்பார்வையின்கீழ் இருந்தது. இந் நகரின் விவகாரங்களில் அதன் எல்லா அங்கத்தினர்களும் பங்குபெற்றிருந்தார்கள். இந்த அளவில் அது ஒரு ஜனநாயக அரசாகத் திகழ்ந்தது. இந்தக் கண்ணோட்டத்தில் பார்த்தால் ஜனநாயகக் கொள்கையானது ஃபிரான்சு, சுவிட்சர்லாந்து ஆகிய நாடுகளில்தான் தோன்றியதாகக் கூறலாம். சுவிட்சர்லாந்தின் மிகப் பழைமையான 'கான்டன்களில்' அல்லது பிரதேசத்தில் வாழ்ந்த உழவர்கள் அமைத்த சமுதாயங்களே உலகத்தின் மிகப் பழைமையான அரசியல் ஜனநாயகங்களெனத் திட்டமாகக் கூறலாம். இவையே பின்னர் சுவிட்சர்லாந்தின் கூட்டரசிற்குக் கருவூலமாக அமைந்தன. சுவிஸ் (Schwyz), யூரி (Uri), அப்பென்சல் (Appenzell)

[1] சட்டத்திற்குக் கீழ்ப்பட்ட அரசாங்கம் என்ற ஆதாரத்தின்மீது எழுதப்பெற்ற முதல் அரசியல் அமைப்பு உரிமைச் சாசனம் அன்று. ஆனால் 1639-ல் ஏற்பட்ட கனெக்டிக்கட் (Connecticut) அரசியல் அமைப்பே முதலில் தோன்றிய எழுதப்பட்ட அரசியல் அமைப்பாகும்.

உன்டர் வால்டன் (Unterwalden) ஆகியவை 'நேர்முக ஜனநாயகங்களாக' இருக்கின்றன. இருக்கின்றவைகளில் இவை மாத்திரமே இன்றும் நேர்முக ஜனநாயகங்களாகத் திகழ்கின்றன. ஆதி கிரேக்கர்கள் செய்ததைப் போலவே இங்கும் தங்கள் விவகாரங்களைப் பொதுச் சட்டசபைகளில் மக்கள் தீர்த்துக்கொள்கிறார்கள்.

இது சில ஆயிரம் பேரையே பாதிக்கக்கூடிய சிறிய அளவில் இருந்தது. தனியாளுக்கும், நாடு முழுவதற்குமாக உரிமைகள் உண்டென ஒரு நாடே உறுதியாக வலியுறுத்துவதற்குப் பல நூற்றாண்டுகளாயின. அமெரிக்கா சுதந்தரப் பிரகடனம் செய்வதற்குப் பதினான்கு ஆண்டுகளுக்கு முன்னரே சமயச்சார்பற்ற அடிப்படையில் மக்கள் இறைமைக் கோட்பாடு மீண்டும் வெளியிடப்பட்டது. இம் முறையும் ஒரு ஜினிவா வாசியான ரூசோவால் (Russeau) வெளியிடப்பட்டது.

## (iii) மக்களின் விருப்பாற்றல்

### ஃபிரஞ்சுப் புரட்சி

ரூசோவின் கோட்பாடு, 'Discourse on the Causes of Inequality among Men' ('மனிதருக்கிடையேயுள்ள ஏற்றத் தாழ்வுகளின் காரணங்களைப்பற்றிய ஆய்வுரை'), 'Social Contract' (சமுதாய ஒப்பந்தம்) ஆகிய இரு ஆய்வுரைகளில் கூறப்பட்டிருக்கிறது. இதில் பின்னதாகக் கூறப்பட்ட நூல் முன்னதைக் காட்டிலும் தனிநபர் உரிமைகளைப்பற்றி முழுவதாக ஆய்வு செய்கிறது. என்றாலும், பின்னதாக எழுதப்பெற்ற நூல் முன்னதை இருளடையச் செய்துவிட்டது. Social Contract என்ற நூல்தான் வரலாற்று முக்கியத்துவம் பெற்றதாகும். 'ஜனநாயகத்தின் அறத் தன்மையைப் பற்றிச் சொல்லக் கூடியவைகளெல்லாம் இந்த நூலில் சொல்லப்பட்டிருப்பதைக் கவனமாக இந் நூலைப் படிப்பவர்கள் காணக் கூடும்' என்று பெல்லாக் (Belloc) தமது 'French Revolution' (ஃபிரஞ்சுப் புரட்சி) என்ற நூலில் எழுதுகிறார்.

ரூசோ (Rousseau) என்று அழைக்கப்பட்ட மனிதன் ஒருவன் (Contrat Social) 'கான்டிராட் சோஷியல்' என்றழைக்கப்பட்ட ஒரு நூலை எழுதினார்' என்ற கார்லைலின் (Carlyle) கடுகடுப்பான சொற்களையும், நினைவுகூர்தல் நல்லது. அந் நாளில் உயர்குடிப் பிறந்தோர் இந் நூலை எள்ளி நகையாடினர். ஆனால், இந் நூலின் இரண்டாம் பதிப்பு வெளியானபோது 'அதன் அட்டை இவர்கள் தோலால் செய்யப்பட்டிருந்தது.'

## ஜனநாயகமும் அரசியலமைப்புக்குட்பட்ட தன்மையும்

பிற்கால ஜனநாயக வாதமானது வெறும் கொள்கை வெளியீடுகளில் கவனம் செலுத்தாமல், இக் கொள்கைகளை நடைமுறைப் படுத்தும் நிறுவனங்கள்மீது கவனம் செலுத்த ஆரம்பித்தது. 18 ஆம் நூற்றுண்டின் மரபுரிமையான மூன்று கருத்துக்களை இவ்வாறு நடைமுறைப்படுத்தும் நிறுவனங்களில் நிலைநிறுத்தும் முயற்சிகள் செய்யப்பட்டன. முதலாவது கருத்து, பாராளுமன்ற அரசாங்கத்தில்தான் சுதந்தரம் மிக நன்ருகக் காணப்படுகிறது என்ற ஆங்கிலக் கருத்தாகும். இரண்டாவது கருத்து அமெரிக்கர்களால் வற்புறுத்தப்பட்ட ஒன்று. தங்களை ஆட்சிபுரிபவர்களை மாற்றும் உரிமை மக்களுக்கு உண்டு என்ற கருத்தாகும். மூன்ருவது ஃபிரஞ்சுப் புரட்சிக்காரர்களால் தாக்கப்பட்ட தனியுரிமையாகும். எதேச்சாதிகாரத்தின் வழித்தோன்றலே தனியுரிமை என்ற கருத்தாகுமிது. இம் மூன்று பிரதான ஐரோப்பிய வல்லரசுகளும் தங்கள் தங்களது கருத்துப்படித் தங்கள் சிந்தனையிலும், செயல்முறையிலும் ஆழ்ந்து கவனம் செலுத்தின. இங்கிலாந்தில் பயன் கருதும் தத்துவவாதிகளான பெந்தாம், (Bentham), மில் (Mill) போன்றவர்கள் மேலாண்மை அதிகாரத்தை வெறுத்தார்கள். அத்துடன் சட்டமே குடிமகனின் பாதுகாப்பாக இருக்கிறது என்றும் நம்பினுர்கள். இவர்கள் பாராளுமன்றச் சீர்திருத்தம், தனியாளுக்குப் பேச்சுரிமை, அரசின் அங்கத்தினராயிருப்பதால் பெறும் நன்மைகளைத் தனியாள் பெறும் உரிமை ஆகியவற்றை ஆதரித்தார்கள். இதேவிதமாக அரசியலிலும், சமயத்திலும் தனியாள் சுதந்தரத்திலுள்ள நம்பிக்கையை அமெரிக்கர்கள் மரபுரிமையாகப்பெற்றிருந்தார்கள். சமத்துவத்திலும், சுதந்தர உரிமையிலும் உள்ள நம்பிக்கையைப் பெரிதும் வளர்த்தார்கள். எனினும், அவர்கள் இத்துடன் நில்லாமல் அடிக்கடி நடத்தப்படும் தேர்தல்கள் அரசாங்கத்தைப் பொதுமக்கள் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வருவதால் பொதுமக்கள் இறைமைக் கொள்கை அன்ருட உண்மையாக முடியும் என்று நம்பினுர்கள். ஆகவே, அப்படிப்பட்ட அரசாங்க முறைக்காக அவர்கள் பெரிதும் முயன்ருர்கள்.

அமெரிக்கர்களும், ஆங்கிலேயர்களும் ஜனநாயகத்தைப்பற்றிப் பொதுவான கருத்தொன்றை உலகினுக்கு வழங்கினர் என்று சொல்லலாம். பியரி மைலாடு (Pierre Maillaud) என்பவர், 'The English Way' என்ற தமது நூலில் இவ் வகைப் பொதுக் கருத்தைச் சிறப்பாகச் சுருக்கித் தந்திருக்கிருர்.

'தனியாள் அரசின் குடிமகன் என்பது மட்டுமல்லாமல் அவன் ஒரு நோக்குநிலையும் ஆவான்.'

'தான் பிரதிபலிக்கும் சமுதாயத்தைக் காட்டிலும் வலுவுடையதாக அரசு இருத்தல் கூடாது. ஒழுங்குறுத்தப்பட்ட பொறியாக அதை மாற்றிவிடக்கூடாது. சட்டத்தின் மூலமாகவோ அல்லது பொதுமக்கள் அபிப்பிராயத்தினாலோ சிறுபான்மையோருக்கு நம்பிக்கையையும், உரிமைகளையும் அளிப்பதனால் பெரும்பான்மையோரின் ஆட்சி இதமாக்கப்பட்டிருக்கவேண்டும்.'

'நிருவாகத்தினர் கொள்கை எதுவாயிருப்பினும் தனக்கென்று சொந்தக் கருத்துக் கொண்டிருக்கவும், வெளியிடவும் ஒவ்வொரு மனிதனுக்கும் உரிமையுண்டு.' 'சமுதாயத்திற்குச் சேவை செய்வதே அரசின் நோக்கமல்லாமல் கட்டாயப்படுத்தி ஆட்சி புரிவதன்று. எனவே, குடிமக்களுக்குள் பாகுபாடு காட்டுவது கூடாது. ஆகவே 'அங்கே உரிமைகளில் சமத்துவம் இருக்கிறது.'[1]

## புரட்சி ஜனநாயகம்

ஃபிரான்சிலும், ஐரோப்பாவின் இதர பகுதிகளிலும் ஜனநாயகம் வேறு வழிகளில் வளர்ச்சியடைந்தது. முதன் முதலில் இந் நாடுகள் அரசாங்க முறையைப்பற்றி மாத்திரமே அக்கறையுடையனவாக இருந்தன. குறிப்பாக மன்னராட்சிக்கு எதிராகக் குடியரசு அமைப்பதில் அதிக அக்கறை காட்டின. மூன்று புரட்சிகளுக்குப் (1830, 1848, 1871-75) பிறகுதான் ஃபிரான்சின் நிறுவனங்கள் திட்டமான அமைப்பை மூன்றாவது குடியரசில் (Third Republic) காண முடிந்தது. வயது வந்தோருக்கு வாக்குரிமை, சுதந்தரமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டசபைகள் ஆகியவற்றிற்காக நடத்திய போராட்டத்தில், இன்னொரு ஜனநாயக அம்சமும், ஆங்கிலோ சாக்சேனியர்களுக்கு மிக முக்கியமானதுமான, அரசுக்கு எதிராகத் தனியாளின் உரிமைகள் என்ற அம்சத்தை முழுவதாக ஃபிரான்சு மறந்துவிட்டது.[2]

[1] மன்னராட்சி, பிரபுக்கள் சபை போன்ற பிறப்பினால் பெற்ற தனியுரிமைகளும் உரிமைகளும் இல்லாதிருத்தலையும் அமெரிக்கர்கள் இத்துடன் சேர்த்துக் கொள்வர். அவர்கள் தங்கள் வாழ்க்கையைப் பாதிப்பதுபற்றி மிகைபடக் கூறப்பட்டிருப்பதாக ஆங்கிலேயர் இதற்குப் பதில் தரக்கூடும். மேலும், அமெரிக்காவில் பணம் பெற்றிருக்கும் செல்வாக்குக்குச் சமமாக இவை பெற்றிருக்கவில்லை எனவும் கூறக்கூடும்.

[2] 'French Political Thought in the Nineteenth Century' (Benn, London; Yale University Press, 1931) என்ற எமது நூலைப் பார்க்கவும். அதில் இந்தக் கருத்தை மிக விரிவாக எழுதியுள்ளோம். பல நூல்களையும் மேற்கோள் காட்டியிருக்கிறோம். இந்தக் குடியரசு ஜனநாயகக் கொள்கையின் சரியான பிரதிநிதி மிச்லெட் (Michelet) ஆக இருக்கலாம்.

ஐரோப்பியக் கூட்டணிகளோடு போராடவேண்டி நேரிட்டதால் ஃபிரான்சிலுங்கூட அந் நாட்டு ஜனநாயகக் குடியரசுவாதிகள் வெளி நாட்டின் குறுக்கீடுகளிலிருந்தும், கட்டுப்பாட்டிலிருந்தும் தங்கள் நாடு விடுதலை பெறுவதையும் ஜனநாயகக் கொள்கையையும் ஒன்றாகக் கருதினார்கள். இதே போன்று கொடுங்கோன்மை மிக்க வெளிநாட்டாரின் ஆட்சியினின்றும் விடுதலைபெறப் போராடிய வேறு பல நாட்டவரும் ஜனநாயகத்தையும், தேசீயத்தையும் ஒன்றெனக் கருதினர். தனியாள் உரிமைகளின் கோட்பாட்டை ஒரு தேசீய இனத்துக்குப் பிரயோகிப்பதுதான் உண்மையில் தேசீயமாகிறது.

ஐரோப்பிய ஜனநாயகக் கொள்கையின் இந்த அம்சத்தைக் கிரேக்கச் சுதந்தரப் போர்கள், (முக்கியமாக 1848 ஆம் ஆண்டில் நேர்ந்தவை) முதலிய நிகழ்ச்சிகளைப் படிப்பதன்மூலம் அறிந்து கொள்ளலாம். போலந்திலும், ஹங்கேரியிலும் குடியரசு - தேசீயப் போராட்டங்கள் நடைபெற்றன. பிரஷியாவிலும் ஆஸ்திரியாவிலும் (Prussia and Austria) நாட்டின் உணர்ச்சியை அரசியலமைப்புச் சீர்திருத்தத்தோடு இணைத்தனர். பிரிட்டனில் பாராளுமன்றமும் அரசரும் சேர்ந்த ஒரு கட்டமைப்பிற்குள் முழு ஜனநாயகத்தை அடைவதற்கு அமைதியான முறையில் உருவமலர்ச்சி ஏற்பட்டு வந்தமை. ஐரோப்பிய வழியினின்றும் வேறுபட்டிருந்தது. 'இங்கிலாந்தில் ஜனநாயகமானது ஓர் ஒழுங்குக் கோட்பாடாக இருந்தது. ஐரோப்பாக் கண்டத்தில் அது புரட்சிக் கோட்பாடாக இருந்தது' என்று சர் எர்னெஸ்ட் பார்க்கர் (Sir Ernest Barker) சொன்னதன் கருத்தை இந் நிகழ்ச்சிகள் விளக்குவனவாக இருக்கின்றன.[1]

## ஜனநாயகமும், தொழிற் புரட்சியும்

தொழிற் புரட்சியின் பிரச்சினைகளால் தோற்றுவிக்கப்பட்ட ஒரு புதுவகை ஜனநாயகக் கொள்கை இக் காலத்தில் வளர்ந்து வந்தது. வாக்குரிமை விஸ்தரிப்பும், ஏனைய அரசியல் உரிமைகளும் வளர்ந்துவரும் பொருளாதார ஏற்றத்தாழ்வுகளின் மத்தியில் தாம் பயனற்றவர் என்பதைத் தொழிலாளர்களுக்குச் சீக்கிரமே உணரச்செய்தது. இவ்வகைப் பிரச்சினைகளுக்கு ஜனநாயகக் கொள்கைகளைப் பிரயோகிப்பது தவிர்க்க முடியாததாயிற்று. இதை முதன் முதலில் கண்டவர் ஃபிரஞ்சுக்காரர்களாகிய செயின்ட் சிமோனும் (St. Simon), ஃபோரியரும் (Fourrier) ஆவர். இவர்களோடு சோஷியலிசம் தோன்றியது. தொழிலுலகத்தினுடைய

[1] போர்ச்சுகல், ஸ்பெயின், ஜார் ஆண்ட ருஷ்யா ஆகிய நாடுகளின் பிந்திய ஜனநாயகப் போராட்டங்களையும் பார்க்கவும்.

பொருளாதார ஏற்றத் தாழ்வுகளை நீக்குவதற்கு அரசியற்பொறி உப யோகப்படுத்தவேண்டும் என்று இது கோரியது. தொழிலாளர்களின் நிலையை உயர்த்தவும், அவர்களுக்குப் பாதுகாப்பு உத்தரவாத மளிக்கவும் சட்டமியற்ற வேண்டும் என்று இது கோரியது. சமூக நலப்பணிகள் புரிவதற்காகச் செல்வத்தின்மீது அதிக வரிகள் விதிக்க வேண்டும் என்று கோரியது. தொழிலாளர் தனியாகவும், கூட் டாகவும் தங்கள் உரிமைகளைக் காப்பாற்றிக்கொள்ள அவர்களை ஒன்றுபடுத்தும் தொழிற் சங்கங்களில் சேர்ந்துகொள்வதற்கு உரிமை யளிக்க வேண்டும் எனவும் கோரியது.

மார்க்சீய (Marxist) தத்துவமான பாட்டாளிமக்களின் சர்வாதி காரமாகப் பொருளாதார ஜனநாயகக்கொள்கை வளர்ச்சி பெற்றதைப் பின்வரும் அத்தியாயம் ஒன்றில் ஆராய்வோம். இந்தச் சிக்கலை விளக்கமாக எடுத்துரைக்கும் வகையில் அமைந்துள்ள ஒரு மேற் கோளை எடுத்தாள்வதோடு இப்போதைக்கு நிறுத்திக்கொள்வோம். 'பொருளாதாரக் கட்டமைப்பை மாற்றியமைக்காதமட்டில் உண்மை யான சுதந்தரம் இருக்கமுடியாது. முற்போக்குள்ள ஓர் அரசில் ஒவ்வொரு மனிதனும் இரட்டை வாழ்க்கை வாழ்கிறன்; ஒன்று குடிமகனுகவும், இன்னென்று உற்பத்தியாளனுகவும் அவன் வாழ் கிறன். குடிமகனுன அவனுக்குச் சில உரிமைகள் உண்டு. ஆனல் அவற்றை உண்மையாய் அனுபவிக்க முடிவதில்லை. ஏனெனில் அவை அரசிற்குள்ளும், அரசின் மூலமாகவுந்தான் உபயோகப் படுத்த முடியும். ஆனல் அவனுக்கு அரசின்மீது எந்தவிதக் கட்டுப் படுத்தும் அதிகாரமும் கிடையாது. சமூக மனிதனுனதால் அவன் அடிமையாக இருக்கிறன். மனித . உரிமைகள் பிரகடனத்திற்கு (Declaration of Rights of Man) முன்னும், பின்னும், நடை முறையில் அவன் சொத்துக்களின் சொந்தக்காரனுகவோ, அல்லது கூலி வாங்குபவனுகவோதானிருக்கிறன். சொத்துடையவனுக அவன் பாதுகாப்பும் பெற்றிருக்கிறன். கூலி வேலைக்காரனுக அவனுக்குப் பாதுகாப்பில்லை.[1]

ஜனநாயகத் தத்துவத்தின் ஆதாரங்கள் பலவாயினும் விளக்கமாக இருக்கின்றன. மனிதர் அனைவரும் கடவுளின் பிள்ளைகள். எனவே அவர்களின் தேவைகளிலும், உரிமைகளிலும் சமத்துவமுடையவர்கள். இந்த அறக்கோட்டை அஸ்திவாரமாகக்கொண்டது ஜனநாயகம். ஒவ்வொருவனும் ஒருவனுகவே மதிக்கப்படவேண்டுமே யல்லாது அதிக மதிப்பீடு அளிக்கப்பெற்றுவிடக் கூடாது. ஒவ்வொருவனும் ஏதாவது சமுதாயத்துக்கு அளிக்கக்கூடும். எனவே அதை

[1] Lacroix, Espirit, March 1946.

அளிப்பதற்கு அவனுக்கு வாய்ப்புக்கள் அளிக்கப்படவேண்டும். இதிலிருந்து நபர்களுக்காக ஏற்பட்டதே அரசாங்கமேயல்லாமல், நபர்கள் அரசாங்கங்களுக்காக அல்லர் என்பது பெறப்படுகிறது. தனியாட்கள் உயர்வாழ்வு வாழ்வதற்கு முழு வாய்ப்பினையும் வாய்க்கப்பெறுவதற்காகவே அரசு இருக்கிறது. இந்த 'உயர் வாழ்வு' எது என்பதைத் தனியாளே தீர்மானித்துக்கொள்ள வேண்டுமேயொழிய அரசன்று. இறுதியாக, அதிகாரம் மேலிருந்தோ அல்லது வெளியிலிருந்தோ வரமுடியாது. மக்களிடமிருந்தே இந்த அதிகாரம் வரமுடியும். பொதுமக்கள் அதிகாரத்திலிருந்து பெற்றமையால் அது உபயோகிக்கப்படுவது நியாயமானதாவதற் குரிய ஒரே காரணமாகும்.

## ஜனநாயகத்தின் 'சித்தாந்தங்கள்'

1948-ல் பெய்ருட் (Beirut) டில் வெளியான ஒரு பத்திரிகையில்[1] ஃபிரஞ்சுப் புரட்சியின் முக்கிய ஜனநாயகத் தத்துவங்களைப்பற்றிப் ஃபிரஞ்சுச் சிந்தனையாளர் ஜூலியன் பெண்டா (Julien Benda) மிகவும் குறிப்பிடத்தக்க கவர்ச்சியான மொழியில் சுருக்கித் தருகிறார். தனியாளும் அவன் தெய்வீக உரிமைகளுந்தான் ஜனநாயகத் தினுடைய முதல் முக்கிய சித்தாந்தமாகும். அவனுக்காகத்தான் சமுதாயம் ஆக்கப்பட்டது. மிக உயர்ந்ததும், தற்காலீக நெருக்கடி காரணமாகவும் மாத்திரமே இவனது உரிமையை அரசால் மீறி நடக்கமுடியும். அல்லது மக்களின் தகுதியற்ற தன்மையால் இவ் வுரிமைகளை அரசு மீறி நடக்கலாம். சமுதாயம் சமுதாயத்திற்காகவே ஏற்பட்டது; அதை ஆக்கும் நபர்களுக்காக அல்ல என்ற சித்தாந்தத் திற்கு நேர் எதிரானது ஜனநாயகச் சித்தாந்தம்.

இரண்டாவது சித்தாந்தம் நாட்டின் இறைமையைப்பற்றியது. நாட்டை ஆளுபவர்கள் அதனால் நியமிக்கப்பட்ட பிரதிநிதிகளே ஆவர். அவர்களுக்கு அளிக்கப்பட்ட அதிகாரத்தை எச் சமயத் திலும் திருப்பி எடுத்துக்கொள்ளலாம். இதிலிருந்து எல்லா அதிகாரமும் கட்டுப்பாடு, மேற்பார்வை ஆகியவற்றிற்குள்ளாகத் தான் பயன்படுத்த முடியும் என்பது பெறப்படுகிறது.

மூன்றாவது சித்தாந்தம் உரிமைகளின் சமத்துவம் என்ற அதே அடிப்படையில் அரசுகளுக்கிடையேயான உறவு ஏற்படுத்தப்பட வேண்டும். நாடு பிடித்தல், நாடு சேர்த்தல், ஆக்கிரமிப்புப் போர் முதலானவை நீக்கப்படவேண்டும். முடிவாகப் போதுமான அளவு

[1] L'Orient, January 27, 1948.

மனநிறைவை மனிதன் பூமியிலேயே பெறமுடியும் என்ற சித்தாந்தம் ஆகும். இது 1850-ல் ஃபிரஞ்சுப் பாராளுமன்றம் வெளியிட்ட 'மனிதன் வேதனைப்படவே பூமியில் வாழ்கிறான்' என்ற கருத்துக்கு நேர் எதிரான கருத்தாகும்.

இந்தக் கோட்பாடுகள் எல்லாம் மனிதனின் பகுத்தறிவுக் கூர்மையை ஆதாரமாகக் கொண்டவை. இனம்போன்ற இதர மெய் சார்ந்த கூறுகளை ஆதாரமாகக் கொண்டவையல்ல. இரத்தக் கலப்பால் அல்லாமல் பொதுவான இலட்சியங்களால் மனிதர்கள் இணைக்கப்பட்டிருக்கின்றனர். அவர்கள் விரும்புவதால்தான் நாடுகள் தோன்றுகின்றன. கூடி வாழ்ந்து, உழைத்து ஒன்றாக இருக்கவேண்டும் என்று விரும்பும், மக்கள் கூட்டமே நாடாகும். இதற்குரிய ஒரே சோதனை இதுதான்.[1]

## ஜனநாயகம், மனிதனின் நன்னம்பிக்கைக் கோட்பாடு

சாதாரண மனிதனின் அரசியல் பொதுஅறிவை நம்பும்மட்டில் ஜனநாயகம் ஒரு நன்னம்பிக்கைக் கோட்பாடாகும். அரசியல் பொது அறிவு என்றால் சாதாரண மனிதன் கொள்கைகளை ஆக்குவதோ அல்லது அவற்றை மாற்றுவதோ அவனால் முடியாது. ஆனால் மாற்றுக்கொள்கைகளைக் கொடுத்தால் அதில் ஒன்றைத் தேர்ந்தெடுக்கமுடியும். அதன் ஆதாரக் கொள்கைகளைப் புரிந்துகொள்ளக் கூடும். ஆட்சி புரிய அவனால் முடியாது. ஆனால், அவன் ஆட்சி புரிபவர்களைத் தேர்ந்தெடுக்கமுடியும். எந்தவிதமான அரசு வேண்டுமென்பதை அவன் அறிந்திருக்கிறான். தன்னுடன் வாழும் மற்றவர்களை இவ்விதமான அரசைத் தோற்றுவிப்பதில் துணைபுரியுமாறு தூண்ட அவனுக்கு உரிமையுண்டு. எவ்வாறு அதன் இலட்சியங்கள் பூரணமாகவும், முழுமையாகவும் நிறைவேற்றப்பட முடியாதோ, அவ்வாறே இந்த நம்பிக்கைகளும் நிரூபிக்கப்பட முடியாதவை. 'ஜனநாயகத்தைத் தோற்றுவிப்பது' எப்படி? அதன் சில நிறுவனங்களைத் திறமையானது என்று நீ ஆதரிக்கலாம்; அல்லது பிறவற்றைக் காட்டிலும் திறமையின்மை குறைவு என்று கூறி ஆதரிக்கலாம். நீ ஒருநாளும் இந்த நிறுவனங்கள் இலட்சியமானவைகள் என்று ஆதரிக்கமுடியாது. இதே போன்றுதான் பெரும்பான்மையின் முடிவுகள் எல்லாம் வழுவற்றவையாக இருக்க முடியாது.

[1] எம். பெண்டா (M. Benda) அவர்கள் ஃபிரான்சின் வரலாற்றை 'A History of the French People and their determination to be a nation' என்ற தலைப்பில் எழுதி இருக்கிறார். (Histoire des Francais lans leur volonte d'etre une nation).

'ஜனநாயகத்தின் ஆதாரமான கொள்கைகளை நசுக்கிவிட்டதாக நீங்கள் நினைத்துக்கொண்டிருக்கும்போது அவைகள் உங்களைவிட்டு நழுவிவிட்டதைக் காண்பீர்கள். ஜனநாயகத் தத்துவங்கள் பல நடைமுறையில் உண்மையாக்கப்படவேண்டி இருக்கின்றன. இன்னும் வசதியும் வளனுமாக வாழவேண்டுமென்று பொதுமக்கள் விரும்புகிறார்கள். மனித உறவுகளிலே இன்னும் அதிகமான நீதி காணப்படவேண்டும் என்றும் விரும்புகிறார்கள். அமைதியையும், முன்னேற்றத்தையும் அவர்களது விருப்பாற்றல் விரும்புகிறது. எல்லோருக்கும் வாக்குரிமை அளித்ததால் ஏற்படும் அரசாங்கமானது இவ்வகை விருப்பங்களைப் பண்படாத ஒரு வகையில் வெளியிடும்.

## (iv) ஓர் அரசை ஜனநாயகமாக்குவது எது?

அரசியல் ஜனநாயகத்தைப்பற்றி மாத்திரமே இங்கு நமது கவனத்தைச் செலுத்துவோம். ஜனநாயகமல்லாத நாடுகளிலிருந்து ஜனநாயக நாடுகளை வேறுபடுத்தும் தனித் தன்மைகள் எவை?

### 'சாதாரண மனிதனுக்கு' வாய்ப்புக்கள்

சாதாரணக் குடிமகனுக்கு வாய்க்கக்கூடிய ஒருவகை வாழ்க்கையே நமது கருத்தில் ஜனநாயகத்தின் சாரமாகும். அப்படிப்பட்ட ஒரு மனிதனின் பிள்ளைப் பருவத்திலிருந்து பார்த்தால் இது விளங்கும். நன்றாகப் படித்த குடிமக்கள் சமுதாயத்திற்கு வேண்டியிருக்கிறார்கள். எனவே, சமுதாயத்துக்கும், தனியாளுக்கும் தேவையான கல்வி வசதிகளைத் தனியாளுக்கு முழுவதாக அரசு வாய்க்கச் செய்கிறது. ஆரம்பக் கல்வியை மாத்திரம் நாம் இங்குக் குறிப்பிடாமல் வாழ்க்கைப்பணிக்கு வேண்டிய பயிற்சி, அவரது தகுதிக்கும், விருப்பத்திற்கும் ஏற்றாற்போல வாய்ப்பளிக்கிறது. இந்தக் கல்விமுறை ஒரே சீராக இருக்கவேண்டுமா? அல்லது பல்வகைக் கல்விமுறைகள் விரும்பத்தக்கனவா? அரசினரால் கட்டுப்படுத்தப்பட்டவைகளாக இவை இருக்கவேண்டுமா? அல்லது தனியார் நிர்வாகத்தில் விடப்படலாமா? என்பனபோன்ற பிரச்சினைகளில் அபிப்பிராயபேதத்திற்கு இடமுண்டு. சமூக அந்தஸ்து அல்லது செல்வம் ஆகியவற்றைக் கவனிக்காமல் எல்லோருக்கும் சம வாய்ப்பளிப்பதே முக்கியமான காரியமாகும்.

வசதிகளில்லை என்ற காரணத்திற்காகப் பயிற்சிபெற்ற இளைஞன் தனக்கு விருப்பமான பணியில் சேர்வதிலிருந்து தடுக்கப்படக்கூடாது. சிவில் அல்லது படை ஆகிய எந்த சர்வீஸில் இருந்தாலும் தனக்குக் கிடைக்கும் ஊதியத்திற்குள்ளாக அவன்

வாழவேண்டும். வழக்கறிஞர்போன்ற சில பணிகள் விரைவில் ஊதியம் சேகரிக்கமுடியாத தொழில்களாகும். அப்படிப்பட்டவர்களுக்குப் பகுதிநேர வேலை வாய்ப்பு இருக்கவேண்டும். இளம் வழக்கறிஞர் தம்முடைய வழக்குகளிலிருந்து பெறும் கட்டணம் போதியதாக ஆகுமட்டும் இது நீடிக்கவேண்டும்.

சுதந்தர மனிதனை இல்லாமல் இன்னொருவரின் கைப்பாவையாக ஆக்கக்கூடிய எல்லாக் காரியங்களிலிருந்தும் தன்னைச் சமுதாயம் காத்துக்கொள்ளும் என்று பணிபுரிபவர் எதிர்பார்க்கக் கூடும். எல்லாவகையான பொருளாதாரச் சுரண்டல்களிலிருந்தும் காப்பாற்றப்பட அவர் விரும்புவார். சொந்த நன்மையைக் கருதிச் செயல்புரியாமல் பொதுநலத்திற்காகவே நடவடிக்கைகள் அமைய வேண்டும் என்று அவர் விரும்பக்கூடும். இதனால் பொதுநல நோக்கும், சொந்த நலனும் வேறுபட்டவை என்று பொருளல்ல. ஜனநாயகம் ஒருமைப்பாடு என்ற உட்பொருள் கொண்டது என்ற நம்பிக்கையில் வாழ்க்கைப் பேராபத்துக்களினின்றும் தன்னைக் காத்துக்கொள்ள எல்லோரும் சேர்ந்து 'காப்பு' (Insurance) செய்து கொள்ளவேண்டும் என்று அவர் விரும்பக்கூடும். வியாதி, வேலையின்மைபோன்ற பேராபத்துக்களுக்கு அவர் பொறுப்பாளியாக முடியாது.

## உரிமைகளில் சமத்துவம்

அவரது சொந்த வாழ்க்கையைப்பற்றிப் பேசாமல் குடிமகனை அவர் நடத்தும் வாழ்க்கைக்கு வருவோம். ஒரு ஜனநாயக சமுதாயத்தின் அங்கத்தினருக்கு அவருடன் வாழும் ஏனையோருக்குள்ள உரிமைகளுக்குச் சமமான உரிமை உண்டு. அவர்களுக்குச் சமமாக இவரும் வாக்களிக்கிறார். பதவிகளை வகிக்கும் தகுதி பெற்றிருக்கிறார். பழஞ் சொல்லான, 'ஒரு மனிதன், ஒரு வாக்கு' என்பது ஜனநாயகத்தின் ஆதாரமாகும். வாக்குப்பதிவு செய்வதோடு அல்லாமல், பொதுமக்கள் அபிப்பிராயத்தை உருவாக்குவதற்கும் அவருக்கு உரிமையுண்டு. இதைப் பேச்சினாலோ அல்லது எழுத்தினாலோ, பொதுக்கூட்டங்கள் மூலமாகவோ, பத்திரிகைவாயிலாகவோ, கட்சி, சங்கம், தொகுதி முதலியன அமைப்பதனாலோ அவர் செய்யக்கூடும். இவ்வாறு செய்வதற்கு அவருக்கு யாதொரு தடையோ, கட்டுப்பாடோ கிடையாது. நிறுவனங்களைப்பற்றிப் புகழ்ந்து பேசவோ அல்லது இகழ்ந்துரைக்கவோ அவருக்குச் சுதந்தரம் உண்டு. தலைவர்களைப்பற்றியும் இவ்வாறே பேச உரிமையுண்டு. கொள்கையைக் குறைகூறி மாற்றுக் கருத்துக்களை அவர் தெரிவிக்கலாம். குறிப்பிட்ட ஒரு சட்டத்தை மீறுதமட்டில்

போலீசைக்கண்டு அவர் அஞ்சவேண்டுவதில்லை. இவைகளில் எல்லாம் அவர் சுதந்தரராயிருக்கிறார். ஏனெனில், பூரணமான விவாதம் சுதந்தரத்தின்மீது அவரது சமுதாயத்தின் அரசியல் வாழ்க்கை அமைந்திருக்கிறது. இவ் விவாதத்திலிருந்துதான் பொதுமக்கள் அபிப்பிராயம் வெளிப்படுகிறது. அதிகாரத்தின் ஆதிக் கருவூலமும் அதுவேயாகும்.[1]

ஜனநாயகத்தில் வாழும் குடிமகன் ஒருவன் எல்லா அறிவும் பெற்றவனென்றோ அல்லது பொதுவாழ்வுச் சிக்கல்களின் எல்லா நுட்பங்களையும் புரிந்துகொள்ளக் கூடியவனென்றோ கொள்ள முடியாது. அவனால் முடிந்தவெல்லாம் இரண்டு காரியங்களே. முதலாவது, பொதுவாகப் பிரச்சினைகளைப் புரிந்து கொள்ளும் திறன், கொள்கைகளுக்கும் திட்டங்களுக்கும் ஆதாரமான கருத்துக்களைப் புரிந்துகொள்ளும் திறன் இவற்றில் ஒன்றைத் தேர்ந்துகொள்ளும் திறன் ஆகிய திறன்களையுடையவனாக இருப்பது. இரண்டாவது அவனது ஆராய்ச்சி அனுபவம் ஆகியவற்றின் துணைகொண்டு ஒரு சுதந்தரமான முடிவு செய்யப்பட்டபோது அதைத் தனது அபிப் பிராயமாக வெளியிடும் உரிமையாகும். வார்டு (Ward) கூறுவது போல, 'தங்கள் விருப்பங்களைப்பற்றியே யல்லாமல் உண்மை விவரங்களைப்பற்றி மக்களிடம் ஆலோசனை கேட்கக்கூடாது. அதுவும் எல்லாச் சாத்தியங்களையும் துல்லியமாக வெளியிட்ட பிறகே கேட்கலாம்.'

## ஜனநாயகத்தின் அனுமானங்களும், நிபந்தனைகளும்

முற்போக்கான ஜனநாயக வாதி பேச்சுவரம் பெற்ற படைப் பாவான். இவ்வித சுதந்தரமான விவாதத்தை ஆதாரமாகக் கொண்டு கட்டப்பெறும் சமுதாயம் மூன்று அனுமானங்களைக் கொண்டிருக்கிறது. வேற்றுமைகள் உள்ளன. இவை மிகவும் ஆழமானவையல்ல. வன்முறையான வழிகளில் இவ் வேற்றுமைகள் தீர்க்கப்படுவதில்லை என்பனவே இவ் வனுமானங்களாகும்.

[1] 'இக் காலத்தில் விவாதிப்பதற்குரிய சாதனங்களுக்குப் பஞ்சமேயில்லை. எந்த ஒரு விஷயமும் எத்துணை வகைச் சாதனங்கள் மூலமாக விவாதிக்கப் படுகின்றன என்பதைக் கணிப்பாளர் தவிர வேறு எவரால் கணிக்க முடியும்? பொதுமக்களின் குரல், இன்று அரசியல் கட்சி, கூட்டங்கள் ஆகியவை மூலமாக மாத்திரமல்லாமல், வட்டார விவாத மன்றம், தல அரசியலமைப்பு ஆய்வுச் சங்கம், சீர்திருத்தச் சங்கம், படைகளிலும், பணி யாளரிடையேயுமுள்ள விவாதக் குழுக்கள், காப்பி ஹோட்டல்கள், பெண்கள் சங்கம், கழகங்கள், இதரசங்கங்கள் (தொழிற் சங்கம், கூட்டுறவுச் சங்கம், பள்ளிகளிலும், கல்லூரிகளிலுமுள்ள விவாத அரங்குகள், நகர்ப்புற ரெயில் பெட்டிகள்) ஆகிய சாதனங்கள் மூலமாக விஷயங்கள் விவாதிக்கப் படுகின்றன. ('Allen, Democracy and the Individual', p. 61.)

ஜனநாயகம், வேற்றுமைகளிருப்பதை உணர்ந்து கொள்வதோடு அவற்றை வரவேற்கவும் செய்கிறது. ஒரே சீரான தன்மையில் அதற்கு நம்பிக்கையில்லை. அதற்கு மாருகச் சுதந்தரமாகக் கருத்துக்களை வெளியிடுவதற்குரிய பல வசதிகளை ஏற்படுத்தித் தருவது அதன் இயல்பாகும். வேறுபட்ட கொள்கைகள் இருப்பதை அனுமதிக்கும் பல முறைகளின்மீது அரசியல் அமைப்பு எழுப்பப்பட்டிருக்கிறது. அதிகாரத்திலிருப்பவர்களை எப்பொழுது மாற்றலாம் என்று ஆர்வத்தோடு காத்துக்கொண்டிருக்கும் அரசியல்வாதிகளாலானது அரசியலமைப்பு. எவ்வளவு மனிதருண்டோ அவ்வளவு கருத்துக்களும் உண்டு. (quot homines, tot sententiae) என்று அதற்குத் தெரியும். இவைகளை அடக்குவதிலோ கட்டுப்படுத்துவதிலோ அதற்கு நம்பிக்கை கிடையாது. கருத்தைச் சுதந்தரமாக வெளியிடுவது காப்புக் கதவு போன்றது. அடக்குமுறை செய்வது வெடிக்கும் தன்மையது.

வேறுபடுகிறவர்களுக்குள் ஒரு பொதுவாழ்க்கை ஏற்பட முடியாதபடி இந்த வேறுபாடுகள் அதிக ஆழமாக இருந்துவிடக் கூடாது. சமரசப்படுத்த முடியாத சிறுபான்மைகள், கட்சிகள், வர்க்கங்கள் முதலியன இருப்பது எப்பொழுதும் ஆபத்தான காரியந்தான். பொதுக்கொள்கைகளிலும், முறைகளிலும் பரந்த ஒப்புதல் எந்த ஜனநாயக அமைப்பிற்கும் தேவையாகிறது. ஜனநாயகத்தில் உனக்கு எவ்வளவு அவநம்பிக்கை கொள்ளமுடியுமோ, அவ்வளவு அவநம்பிக்கை கொள்ளலாம். ஆனுல், ஒன்று ; நீங்கள் அரசியலை விட்டு வெளியே இருக்கவேண்டும். அல்லது அதன் பொது வாழ்க்கை நெறியை ஒப்புக்கொள்ளவேண்டும். அதைக் கவிழ்ப்பதற்குச் சூழ்ச்சி செய்யக்கூடாது.

இந்த வாழ்க்கை நெறியின்படி அதனுல் பெறப்படும் நன்மைகள் அனைவராலும் அனுபவிக்கப்படவேண்டும். மாற்றங்கள் எவையேனும் ஏற்படுத்த நினைத்தால் அவற்றைச் செய்வதற்குரிய திருப்தியான ஒரே வழி, பேச்சுமூலமாக மற்றவர்களைத் தம் வயப்படுத்துவதுதான் என்று அது நம்புகிறது. விவாதம் ஜனநாயகத்தின் உயிர் நாடியாஞல் அதன் விவாதத்திற்குரிய விதிகளைப்பற்றி ஓரளவுக்காவது ஒப்புதல் இருக்கவேண்டும். 'ஆட்சிக் குலைவை ஏற்படுத்தும் மனவெழுச்சிகளைக் காட்டிலும் அவர்களது சமூகக் கூட்டுறவிலுள்ள விருப்பாற்றல் வலுவுள்ளதாகவும், தானுகவே தோன்றக்கூடியதாகவும் இருக்குமானுல் அரசாங்கமுறை எதுவாயிருப்பினும் அது ஒரு ஜனநாயக ஆட்சியேயாகும்' என்று 'Le Probleme francais' என்ற நூலில் குயரின் (Guerin) எழுதுகிருர்.

## விவாதமும், மாற்றமும்

விவாதம் மாற்றத்தை ஏற்படுத்துகிறது. எனவே ஜனநாயகச் சமுதாயம் மாறும் ஒன்ருகவே இருக்கமுடியும். உண்மையில் எல்லாச் சமுதாயங்களும் மாற்றமடைகின்றன. ஆனால், ஜனநாயகச் சமுதாயங்கள் இந்த உண்மையை உணர்வதோடு, வரவேற்கவும் செய்கின்றன. அவை மாருத்தன்மை பெற்றிருக்கமுடியா. புதுக் கருத்துக்கள் தோன்றத் தோன்ற அவை உருமலர்ச்சியடைய வேண்டும். மனித வாழ்க்கையில் புதிய பாதைகள், புதிய நுட்பங்கள் தோன்றுவதோடு சேர்ந்து அவை உருமலர்ச்சி அடைகின்றன. ஆனால், இந்த மாற்றம் உணர்ந்து தெரிந்த ஒன்ருக இருக்கும். ஏனெனில், கூடியமட்டில் உணரும் தன்மைமிக்க விருப்பாற்றல் இம் மாற்றத்தை வழிநடத்துகிறது. பகுத்தறிவுக்கேலாத சக்திகள் இதில் பங்கு பெறுவதில்லை. ஒவ்வொரு குடிமகனும் முடிவுகள் செய்வதற்குத் தன்னாலியன்ற அளவு துணைபுரிகிருன். இவ்வாறு ஏற்படும் முடிவுகளின் விளைவே அந்த மாற்றமாகும். 'வாழ்வது என்பது ஒரு தொடர்ச்சியான செயலாகும். அதில் செயலாற்ற வேண்டிய பல முடிவுகளை எப்பொழுதும் செய்துகொண்டே இருக்க வேண்டும். இந்த முடிவுகளைப் பாதிக்கும் சலுகைகளின் வகையைச் சார்ந்ததாகச் சமுதாயத்தின் உருமலர்ச்சி இருக்கும்' என்று ஒயிட் ஹெட் (Whitehead) கூறுகிருர்.

## பெரும்பான்மை ஆட்சி

முடிவாகப் பார்க்கும்போது இம் முடிவுகள் பெரும்பான்மை யினவாக இருக்கவேண்டும். ஏனெனில், அன்ருட நடைமுறையில் ஜனநாயகம் என்பது பெரும்பான்மையோரின் ஆட்சியைச் சிறு பான்மையோர் ஏற்றுக்கொள்வதுதான். 'பெரும்பான்மையோரால் ஒப்புக்கொள்ளப்பட்டது நீதி என்று ஜனநாயகவாதிகளும், செல்வர் கள் ஏற்றுக்கொள்வது எதுவோ, அது நீதி என்று சிறுகுழுவாட்சி யினரும் கருதுகிருர்கள்' என்று 2,300 ஆண்டுகளுக்கு முன்பு அரிஸ்டாடில் (Aristotle) எழுதினர். ஜனநாயகமுறை எதுவாயிருப் பினும் அதன் இறுதி அதிகாரம் பெரும்பான்மையின் கருத்தைச் சார்ந்தது ஆகும். ஏனெனில், இதற்கு மாருகச் சொல்லப்போனல் ஏதாவது ஒரு சிறுபான்மை பிரதான அதிகாரம் பெற்றிருக்கும். அப்படி ஏற்படும் அமைப்பு ஜனநாயகமாகவோ அல்லது பயனுள்ள தாகவோ இராது. சிறுபான்மையினரின் உரிமைகளைப்பற்றி நாம் விவாதித்தபோது, சிறுபான்மையினரின் உண்மையான கூட்டுறவு இல்லாவிடினும் எதிர்ப்பில்லாத ஒத்துப்போதலாவது இருக்க

வேண்டும் எனப் பார்த்தோம். ஒழுங்கான சுதந்தர அரசாங்கம் அமைக்கும் ஒரே வழி இதுதான்.[1]

பெரும்பான்மையினர் ஆட்சியின் அவசியத்தைக் குறிப்பிடுவதாவது, பெரும்பான்மையினர் ஆதிக்கம் செலுத்துவதற்கு நெறிமுறைப்படி உரிமைகள் பெற்றவரென்று கூறுவதாக எடுத்துக் கொள்ளக்கூடாது. அல்லது அவர்கள் வழுவாதவர்கள் என்றும் கூறுவதாகக் கொள்ளக்கூடாது. அது தனக்கு விருப்பமாயிருந்தாலும், சமுதாயத்தின் கட்டுக்கோப்பை மாற்றுவதற்குப் பெரும்பான்மையினருக்கு உரிமையொன்றுங்கிடையாது என்பது பர்க் (Burke)கின் கருத்தாகும். பெரும்பான்மைக்கு இவ் வுரிமை இல்லையென்றால் வேறு எவருக்கிருக்கிறது? இப்சன் (Ibsen) தமது 'மக்களின் வைரி' (Enemy of the People) என்ற நூலில் எழுதுகிறார்: 'பெரும்பான்மை எப்பொழுதும் நியாயமாக இருப்பதில்லை. அதற்கு வலிமை இருக்கிறது; ஆனால் துரதிருஷ்டவசமாக அதில் நியாயமிருப்பதில்லை. சிறுபான்மை எப்பொழுதும் நியாயமானது.' ஆனால், சிறுபான்மையினருக்குப் பெரும்பான்மையோரைக் காட்டிலும் எவ்விதத் தெய்வீக உரிமையுங்கிடையாது. பெரும்பான்மையினரின் ஆட்சி, சமயத்துக்கேற்ற சாதனமேயொழிய அதற்கு மேற்பட்டதொன்றன்று. அதை ஒப்புக்கொள்வதானது பல நடைமுறைச் சிக்கல்களை அறுக்கிறது; பல தகராறுகளைத் தவிர்க்கவும் செய்கிறது. இதைப்பற்றிப் பின்னர் அதிகம் வரைவோம்.[2]

## ஜனநாயகத்தின் விலை

ஜனநாயக அரசு அதன் அங்கத்தினர்களிடமிருந்து பல காரியங்களை எதிர்பார்க்கிறது என்ற உண்மையை நாம் அனுமானம் செய்து வந்திருக்கும் குடிமகன் உணரவேண்டும். தன்னடக்கம், ஒழுங்கு, பொது நோக்கத்தின்மீது நாட்டம், சொந்த இச்சைகளையும்,

1. 'சிலரின் ஊழல்களால் ஆளப்படுவதைவிடப் பலரின் பிழைகளால் ஆளப்படுவதை நான் விரும்புகிறேன்'—ஸ்டீபன் மெக்கென்னு—Stephen Meckenna in Sonia.

2. 'அரசியலமைப்புக்குட்பட்ட தடைகளாலும், வரையறைகளாலும் அடக்கி வைக்கப்பட்டிருக்கும் பெரும்பான்மை சுதந்தர மக்களின் உண்மையான இறைமை ஆகும். பொதுமக்கள் அபிப்பிராயங்களும், உணர்ச்சிகளும் மாறும்போது பெரும்பான்மையும் தன் கருத்துக்களை இலகுவில் மாற்றிக்கொள்ளுமானால் அதுவே சுதந்தர மக்களின் இறைமை ஆகும். இதை எவர் மறுத்தாலும் அவர் ஆட்சிக்குலைவு அல்லது ஏதேச்சாதிகாரம் ஆகிய இரண்டிலொன்றை ஆதரிக்கிறார் என்றுதான் பொருளாகும். ஏகமனதாகத் தீர்மானிப்பது நடவாத காரியம். நிரந்தரமாகச் சிறுபான்மை ஆட்சி புரிவதென்பது ஒப்புக்கொள்ள முடியாதது. ஆகவே பெரும்பான்மை ஆட்சி புரிவது என்ற கொள்கையை மறுப்பது ஆட்சிக்குலைவையோ அல்லது ஏதேச்சாதிகாரத்தையோ ஏதாவது ஒரு முறையில் கொண்டு வருவதில்தான் முடியும்.' ஆபிரகாம் லிங்கன்—(Abraham Lincoln.)

அக்கறைகளையும் பொது நோக்கிற்காகக் கீழ்ப்படுத்துவது ஆகிய பண்புகளை அது வேண்டுகிறது.[1] கொடுத்து வாங்கக்கூடிய பண்பை அது நம்பியிருக்கிறது.[2] அது 'நாகரிகமானது', ஏனெனில், ஒருவரோடொருவர் மிகவும் கண்ணியமாக நடந்துகொள்கிறார்கள். மற்றவர்களைப்பற்றி அக்கறை கொண்டிருக்கிறார்கள். பிரச்சினைகளைப் பற்றி ஆராயவும், பொது நடவடிக்கைகளில் பங்கு பெறவும் அதன் அங்கத்தினர்கள் அதற்கு நேரம் ஒதுக்கிவைக்கவேண்டும். 'இயற்கைக்கு மிகவும் அப்பாற்பட்ட ஒரு சமுதாய முறை' என்று இதை வருணிப்பதில் ஆச்சரியமில்லை. வார்டு (Ward) கூறுவது போல, 'கொள்ளை நோய்களும், புயலும் இயற்கையானவை. ஆனால் அவற்றிலிருந்து தப்புவதற்குச் செய்யப்படும் பாதுகாப்பு செயற்கை யானது.'

ஜனநாயகத்தின் முக்கியமான இலட்சியமும், நோக்கமுந்தான் என்ன? 'பரந்ததும், இறுகிப் பின்னப் பெற்றதுமான சமுதாயங் களில் மனித இனம் வாழ்வதற்குரிய சாத்தியங்களை ஜனநாயகம் உண்டாக்குகிறது. கூடியமட்டிலும் தனது மனச்சாட்சிப்படித் தனி நபர் தன் நடவடிக்கைகளில் ஈடுபடும் உரிமையை ஜனநாயகம் பாதுகாக்கிறது. சமூக நிறுவனங்கள் தனிநபர்களின் மகிழ்ச்சி விருப்பைச் சமத்துவத்தோடு அனுபவிக்க வகைசெய்கின்றன. ஒருவனுடைய பணி, பகுத்தறிவு, ஆளுந்தத்துவம் ஆகிய எல்லாப் பண்புகளின் மூலமாகவும் பொதுவாழ்க்கைக்கு அவனால் அளிக்கக் கூடியதை அளிப்பதற்குரிய வாய்ப்புக்களை ஜனநாயகம் ஏற்படுத்து கிறது.' ஜனநாயகம் என்றால் பங்கு பெறுதல் என்றாகும். மற்றவர் களோடு சேர்ந்து பொதுவாகச் செயலாற்றுதல் என்று பொருள். அதில் ஏற்படும் பொறுப்புக்களில் நமக்குள்ள பங்கை ஏற்றுக் கொள்வது என்று பொருளாகும். 'சாதாரண மனிதன் அதிகார அமைப்பைக் கட்டுப்பாடு செய்வதே ஜனநாயகத்தின் பிரச்சினை யாகும்' என்று கூறி முடிக்கிறார் லிண்ட்சே (Lindsay).

[1] தடைகள், தராதரங்கள், பணிவு, மறைமுக முறைகள், நீதி, அறிவு ஆகியவை சேர்ந்ததே நாகரிகம். இது பொதுவாழ்க்கையைச் சாத்திய மாக்குகிறது. மற்றவைகளையும் எடுத்துக்கொண்டு பார்த்தால்—பொது வாக வாழ்வதற்குரிய விருப்பாற்றல் என்று ஒரு சொல்லில் கூறலாம். (Ortega Y Gasset 'The revolt of the Masses' p. 82.)

[2] சி. ஐ. ஓ. (தொழிற் சங்க இணைப்பு)வைப்பற்றி என்ன சொல்கிறீர்கள்?' என்று ஒயிட் (White) கேட்டார். 'உற்பத்தியாளரான நான், சி. ஐ. ஓ. வையும், வேலை நிறுத்தங்களையும் விரும்பாமல் இருக்கக்கூடாதென விரும்பலாம். அது மிகவும் இலகுவானது. ஆனால் அவை நம்மிடையே சக்திவாய்ந்த உண்மைகளாகி இருக்கின்றன. அவைகளைச் சமாளித்துத் தான் ஆகவேண்டும். நமது பிரச்சினைகளையும் அவர்களின் பிரச்சினைகளையும் வெளியே கொணர்ந்து மோதவிடவேண்டும். ஒரே நாட்டின் சுதந்தர மக்கள் என்ற முறையில் எப்படியும் ஒன்றாக வாழ்வதற்காகச் சமரச முயற்சிகள் செய்து கொள்ளவேண்டும்.' (Adamic—'My America' p. 493.)

## ஜனநாயக உணர்ச்சி

மேலே கூறப்பட்டவைகளெல்லாம் ஜனநாயகச் சமுதாயத்தின் அடையாளங்கள் என்றால் இதுவரை உண்மையான ஜனநாயக சமுதாயம் இருக்கவுமில்லை; இருந்ததுமில்லை. ஜனநாயகம் என்பது ஓர் இலக்கு. அது ஒருவரின் விருப்பங்களுக்கேற்ப விரும்பத்தக்கன தாகவோ அல்லது விரும்பத்தகாததாகவோ இருக்கலாம். சமுதாயங்கள் அந்த இலக்கை அடைய முயற்சிகள் செய்கின்றன. பல வழிகளிலும், பல அளவுகளிலும் அவை வெற்றியடைந்து வருகின்றன. ஒரு வாயிலின் வழியே விரட்டப்படும் மனித இயல்பிலுள்ள குறைபாடுகளான ஏற்றத்தாழ்வு, தனியுரிமை, அநீதி, அடக்குமுறை ஆகியவை இன்னொரு வாயிலின் வழியாக உள்ளே வரக்கூடும். தற்காலச் சமுதாயத்தின் குறைபாடுகளிலும், சிக்கல்களிலும் காணப்படும் தீமைகளை எந்த அரசியல் முறையும் முழுவதாக நீக்கிவிட முடியாது. நாம் செய்யக்கூடியனவெல்லாம் செயலில் இறங்கி முயன்று பார்க்கக் கூடியவைதான். ஃபிரஞ்சுக் கழகத்தில் தம்மை அங்கத்தினராக ஏற்றுக்கொண்டபோது தத்துவப் பேரறிஞர் பெர்க்சன் (Bergson) பேசிய பேச்சிலிருந்து மேற்கோள் காட்டி இந்தப் பகுதியை முடிக்கலாம். அவர் கேட்கிறார்: 'ஜனநாயக இயக்கம் என்றால் என்ன?' இதற்குப் பதிலும் தருகிறார்: 'அறிவின் தரத்துக்கு மனிதனின் அரசாங்கத்தை உயர்த்தும் மாபெரும் முயற்சிக்கு அடுத்து இயற்கையாக வரும் விடாமுயற்சியுடன்கூடிய ஏகமனதாலான ஓர்ஆர்வம் இது. உரிமைகள் சமத்துவத்தையும், தனியாள் சுதந்தரத்தையும் பிரகடனப் படுத்துவதன்மூலம் ஃபிரஞ்சுப் புரட்சியானது ஜனநாயக ஆட்சியை இலட்சியமாக நிலைநாட்டிவிட்டது. ஆனால் அதை முழுவதாக நாம் இன்னும் பெறவில்லை. மனித சமுதாயங்களை இணைத்து நிறுத்தி வந்திருக்கும் மரபு, மன உணர்ச்சி ஆகியவைகளுக்குப் பதிலாக அறிவுசார்ந்த கொள்கையின் அடிப்படையில் ஒற்றுமையை நிலை நிறுத்துவதற்கு ஒரு நாளன்று; ஒரு நூற்றாண்டுக் காலம் போதாது; இது இல்லாமல் உண்மை ஜனநாயகமாகாது. உயர்ந்த அறிவும் அறமும் சேர்ந்த ஒன்றிற்குக் கீழ்ப்படிவதற்குச் சுதந்தரமாக ஒப்புதல் தந்த மனிதர்கள் கூடி வாழ்வதே ஜனநாயக இயக்கம் ஆகும். இவ்வாறு புத்தாக்கம் செய்யப்பட்டிருக்கும் அறிவுசால் மனிதர்களைத் தேர்ந்தெடுத்து, ஆளும் வர்க்கமாகவும், அரசாங்க ஆலோசகர்களாகவும் ஆக்குவது எவ்வாறு? சொந்தப் பண்பும், திறனும், திறமையும் எப்பொழுதும் புதுப்பித்துக்கொண்டே இருப்பது எப்படி? இங்குத்தான் ஜனநாயகத்தின் பிரச்சினைகளெல்லாமிருக்கின்றன. அதற்கு நாம் இன்னும் தீர்வு காணவில்லை.'

துரதிருஷ்டவசமாக அது உண்மைதான். ஆனல் ஜனநாயக உணர்ச்சி அடிக்கடித் தன்னை வெளிப்படுத்திக்கொள்கிறது. 'டன்கர்க் (Dunkirk) துறைமுகத்தில் ஜனநாயகத்தின் ஆத்மாவை மூடி மறைத்திருந்த கந்தைத் துணியும், குற்றங்களும் நழுவி விழுந்தன. வெறும் வீரமான செயல் அல்லது கட்டுப்பாடான செயல் அல்லது கவனமாகத் திட்டமிடப்பட்ட செயல்மட்டும் அல்ல......சுதந்தர நாடுகளில் ஆலைகளிலும், அலுவலகங்களிலும், சுரங்கங்களிலும், கப்பல்களிலும், தோட்டங்களிலும் பணிபுரிந்து வந்த சாதாரண மனிதர்கள் வீறுகொண்டு எழுந்த மாட்சி......நிகழ்ச்சியைத் தங்கள் கைக்குள் அடக்குவதற்காக ஜனநாயகம் எடுத்துக்கொண்ட சுதந்தர ஆக்க உணர்ச்சி ஆகியவைதான் இது' என்று நியூயார்க் டைம்ஸ் (New York Times) எழுதியது. ஜனநாயகம் எப்பொழுதுமே இவ்வளவு உயரமான தரத்தோடு இருந்துவிடுவதில்லை. பேராசிரியர் (Laski)[1] கூறுவது போல, 'செயல் புரிவதற்குக் காலம் பிடிக்கும்; பெரும்பாலும் குழப்பமான நிலையே இருக்கும்; சுத்தமற்றுக் காணப்படும்; தனக்குள்ளேயே சண்டையிட்டுக்கொள்ளும். ஆனல் ஏராளமான ஆக்கச் சக்தி மறைந்து இருக்கிறது. தேவையானபோது இந்தச் சக்தியைப் பயன்படுத்திக்கொள்ளலாம். பல முறைகளில் அது வளைந்தாலும் ஒடிவதில்லை. அதன் சக்திகளை ஒன்று சேர்க்கக் காலம் பிடிக்குமென்ருலும், சக்திகளைத் திரட்டிய பிறகு இறுதிவரை மகத்தான உறுதியுடன் நடந்துகொள்ளும்.' ஃபிரெஞ்சு-அமெரிக்கன் எழுத்தாளரான டி சால் (De Sales) இந்தப் பிரச்சினையை மிகவும் நல்ல நம்பிக்கையான சொற்களோடு முடிக்கிருர். 'நாட்டு அடிப்படையிலும், பன்னுட்டளவிலும் உலகச் சிக்கல்களுக்குப் புதிய ஜனநாயகத் தீர்வுகள் சாத்தியமாகலாம் என்ற நம்பிக்கைக்கு ஆதாரமாக இருக்கிறது கிரேட் பிரிட்டன் (Great Britain).

[1] Manchester Guardian Brogan's 'Free State' என்ற நூலின் விமரிசனத்தில் இவ்வாறு எழுதுகிருர்.

# 9. நடைமுறையில் ஜனநாயகம்

## பாகம் : 1 மக்களின் விருப்பாற்றல் எவ்வாறு வெளியிடப்படுகிறது ?

### தேர்தலும் பிரதிநிதித்துவமும்

எந்த ஒரு சுதந்தரச் சமுதாயத்துக்கும் ஆதாரமான ஜனநாயகக் கொள்கைகளை நாம் நிறுவிவிட்டோம். இப்பொழுது அக் கொள்கைகள் நடைமுறையில் நிறைவெய்துவதற்குரிய சாதனங்களைப்பற்றிப் பார்ப்போம். எந்த அரசிற்கும் ஓர் அரசாங்கமுண்டு என்று பார்த்தோம். அதாவது அதன் ஆதாரமான கொள்கைகளை வெளியிடும் நிறுவனங்களைப்பற்றிப் பார்த்தோம். ஜனநாயகச் சுதந்தரச் சமுதாயத்தின் நிறுவனங்கள் எவை? 'நாம் ஒரு ஜனநாயக யுகத்தில் வாழ்ந்தாலும், ஜனநாயகம் தனக்குரிய நிறுவனங்களை இன்னும் தெரிந்துகொள்ளவில்லை. அல்லது அதன் அரசாங்க முறையையும் கண்டுபிடித்துவிடவில்லை. முற்பட்ட ஆட்சிகளிலிருந்த முறைகளையே இன்னும் தொடர்ந்து கைக்கொண்டு வருகிறது' என்று சிம்மர்ன் (Zimmern) அவர்கள் கூறுவதை முதற்கண் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். முக்கியமாக, பரந்த முறையில் தேர்ந்தெடுக்கப்பட்ட சிறுகுழு அல்லது ஆளும் வர்க்கத்தோடு கூடிய வரையறுக்கப்பட்ட மன்னராட்சி முறையிலிருந்த நிறுவனங்களை ஜனநாயகம் இன்னும் பின்பற்றிவருகிறது. இதைப்பற்றி இந்த அத்தியாய முடிவில் ஆராய்வோம். ஆனாலும், முழுநேரமும் இதை மனத்தில் கொள்ளவேண்டும்.

### (i) பிரதிநிதித்துவ சபைகள்

### நேரடி ஜனநாயகம்

ஒரு ஜனநாயகத்தில் எல்லா அதிகாரத்தின் கருவூலமும், கேந்திரமும் மக்களேயாவர். ஒவ்வொரு காரியமும் அவர்களின்

பெயரால் செய்யப்படுகிறது என்பது மட்டுமல்லாமல் ஒவ்வொரு சட்டமும் அவர்களோடு தொடர்பு கொண்டதாகவும் இருக்கிறது. ஒவ்வோர் அதிகாரியும் தன் அதிகாரப் பிரயோகமானது அவர்களால் அங்கீகாரம் பெற்றோ, அல்லது ஒப்புதல் பெற்றோ, இருப்பதைக் காட்டியாக வேண்டும். மக்களே தங்கள் விவகாரங்களைக் கவனித்துக்கொள்ள வேண்டும்; எல்லா முக்கிய விவகாரங்களையும் அவர்களே முடிவு செய்ய வேண்டும்; அரசாங்கத்தின் அன்றாட அலுவல்களை மக்களின் பெயரால் நடத்துபவர்களை அவர்களே நேரடியாகத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்பதெல்லாம் இலட்சியமான ஒன்றாகும். முற்கால ஏதென்ஸில் (Athens) இதுமாதிரிதான் நடைபெற்றது. அதிக முக்கியமல்லாத பதவிகளுக்குச் சீட்டுக் குலுக்கி அதிகாரிகளைத் தேர்ந்தெடுத்தார்கள். மக்கள் சமத்துவ உரிமைகளின் ஒரு தீவிர மான வகையே இது. கிட்டத்தட்ட ஒவ்வொரு நாளும் கூடும் சபையில், எவர் வேண்டுமானாலும் பேசலாம் என்ற நிலையில், அரசின் விவகாரங்களில் சாதாரணக் குடிமகன் தனது பங்கை உண்மையாகப் பெற்றிருந்தான். ஏதென்ஸ் ஒரு முழுமையான ஜனநாயகமன்று. ஏனெனில், குடிமக்கள் வகுப்பு மிகவும் குறைவான எண்ணிக்கை உடையதாயிருந்தது. இருப்பினும், குடிமக்களே தங்களது நகரத்தை ஆட்சி புரிந்தனர்.

இடைக்கால நகர அரசு போன்ற சிறு சமுதாயங்களில் ஜனநாயகம் ஏற்படும்போது இதே மாதிரியான நிலையும், செயல்முறைகளுந்தான் நிலவின. எல்லா இடைக்கால நகர அரசுகளும் ஜனநாயகங்களாக இருக்கவில்லை. பல நகர அரசுகள் சிறு எண்ணிக்கையுள்ள செல்வர்களுக்கு (வழக்கமாக வணிகர்களுக்கு) மட்டுமே உரிமைகள் அளித்திருந்தன. ஆயினும், ஜனநாயக அடிப்படையில் ஆட்சி புரியும்வண்ணம் குடிமக்கள் அதிகமாக இருந்த சில நகர அரசுகளுமுண்டு. அவர்களின் எண்ணிக்கை பெரிதாக இருந்தாலும், நேரடியாகக் கட்டுப்பாடு செய்வதற்குச் சாத்தியமான அளவுதான் இருந்தனர். பெரிய அரசுகளுக்குள் தன்னாட்சி பெற்றிருந்த விவசாயத் தொகுதிகளும் இவ்வாறே அமைந்திருந்தன. இவை காலக்கிரமத்தில் முழுச் சுதந்தரம் பெற்றன. பல நூற்றாண்டுகளாக இங்கிலாந்தின் தல அரசாங்கம் (தேவாலய) வட்டாரச் சபைகளால் நிருவகிக்கப்பட்டு வந்தன. இங்கு எண்ணிக்கை குறைவாயிருந்ததால் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கவேண்டிய அவசியம் ஏற்படவில்லை. அமெரிக்காவில் நகரசபைக் கூட்டம் (town meeting) பொதுவாழ்வின் மையமாகப் பல்லாண்டுகளாக இருந்து வந்தது. நேரடி அரசாங்க முறையைச் சுவிட்சர்லாந்தின் சிறு 'காண்டன்கள்' (மாநிலம்) இன்றுவரை பின்பற்றிவருகின்றன. உதாரணமாக, அப்பென்செல்லின் (Appenzell) பொதுமக்கள் சபைகள் (Landsgemeinde)

திறந்த வெளியரங்கில் குறிப்பிட்ட காலத்தில் நடைபெற்று விடுவது பழங்காலப் பழக்கத்தின் அடிச்சுவடேயாகும்.

## பிரதிநிதித்துவ ஜனநாயகம்

பெரிய சமுதாயங்களில் நேரடி ஜனநாயகம் சாத்தியமற்றதென்பது வெளிப்படை. எனவே, எல்லா இடங்களிலும் பிரதிநிதித்துவமுறை பின்பற்றப்படுகிறது. இடைக்காலத்தில் சில துறவிகளின் சங்கங்கள் உபயோகித்த முறையிலிருந்து பிரதிநிதித்துவம் தோன்றியது என்று ஏற்கெனவே நாம் பார்த்தோம். வரி விதித்தல் போன்ற பரந்த காரியங்களைப்பற்றி ஆலோசனை தரும் பொருட்டு அரசர்களால் அழைக்கப்பட்ட சபைகள் இந்த அடிப்படையிலேதான் அழைக்கப்பட்டன. இவைகள் பல பெயர்களோடு விளங்கின. இங்கிலாந்தில் பாராளுமன்றம் (Parliament) என்றும், ஃபிரான்சில் எஸ்டேட்ஸ் ஜெனரல் (Estates General) என்றும், ஸ்பெயினில் கார்டிஸ் (Cortes) என்றும், ஜெர்மனியில் டையட் (Deit) என்றும் அழைக்கப்பட்டன. 13 ஆம் நூற்றுண்டின் இறுதியிலும், 14 ஆம் நூற்றுண்டின் துவக்கத்திலும் இவை தோன்றி வெகு விரைவிலேயே தேசீய விவகாரங்களில் மிக முக்கிய பாகம் வகிக்க ஆரம்பித்தன. 1356-ல் நடந்த பாய்ட்டியர்ஸ் (Poiters) போரில் ஃபிரஞ்சு அரசரான ஜான் (John) கைதியாக்கப்பட்டார். இவர் தமது விடுதலைக்கு ஈடாக இங்கிலாந்தோடு ஓர் உடன்படிக்கை செய்து கொண்டார். 1360-ல் கூடிய ஃபிரஞ்சு எஸ்டேட்ஸ் (பாராளுமன்றம்) இந்த உடன்படிக்கையை மிகவும் அவமானமானதாகக் கருதியதால் அதை நிராகரித்தது. இதனுல் போர் தொடர்ந்து நடைபெற்றது. அரசரும் சிறையிலேயே மரணமடைய நேரிட்டது. இதற்குள்ளாக, வரி விதித்தல், ஆலோசனைகூறல் ஆகிய உரிமைகளை இங்கிலாந்தின் பாராளுமன்றம் பெற்றுவிட்டது. இவைகள் அரசாங்க நடவடிக்கையின் தவிர்க்கமுடியாத பகுதிகளாக மாறின.

இந்தச் சபைகளெல்லாம் எந்த ஒரு பொருளிலும் ஜனநாயகமானவை அல்ல. இச் சபையோர் மக்கள் தொகையின் சில கூறுகளின் பிரதிநிதிகளேயாவர். உயர்குடிப் பிறந்தோர், நிலக்கிழார், பணம் படைத்த வணிகர்கள், உயர்தர மதகுருக்கள் ஆகியோரே பிரதிநிதிகளை அனுப்பிவைத்தனர். ஆனுல், சமுதாயத்தின் அரசியல் உணர்ச்சியை நன்ருக வெளியிடக்கூடிய கூறுகளே இவைகள் என்று ஓரளவுக்குக் கருதமுடியும். முக்கியமான பிரச்சினைகளின்மீது இதைக்காட்டிலும் பெரிய வாக்காளர் தொகுதி வேறுவிதமாக நடந்து கொண்டிருக்கும் என்று சொல்வதற்கில்லை.

## பாராளுமன்றம்

இடைக்கால முடிவிற்குப் பின்னர் அரசர்கள் அதிக வலிமை பெற்றவர்களாக ஆனார்கள். சபைகளும், சாதாரணமான பணிகள் புரியும் சபைகளாக மாற்றப்பட்டன. அல்லது இவர்கள் சில சமயங்களில் அவை இருப்பதையே மறந்து இருந்தனர். 1614 க்கும் 1789க்கும் இடையே ஃபிரஞ்சுப்பாராளுமன்றம் கூட்டப்படவே இல்லை. டையட்டுகளும், கார்ட்டிஸ்களும் இதே நிலையில்தான் இருந்தன. ஆனால் இங்கிலாந்தின் பாராளுமன்றம் தொடர்ந்து இருந்ததோடு மட்டுமல்லாமல் அதிகாரங்களிலும் வளர்ச்சிபெற்று வந்தன. 17 ஆம் நூற்றாண்டின் இறுதிக்குள்ளாக, பிரதான அரசியல் கட்டுப்பாட்டு அதிகாரம் பெற்ற பிரதிநிதித்துவ சபை வேறெந்த முக்கிய நாட்டிலுமில்லாமல் இங்கிலாந்தில் மாத்திரமே இருந்தது. இருப்பினும், 1832 வரை பிரதிநிதித்துவ முறை இடைக்காலத்தில் இருந்த மாதிரியே இருந்து வந்தது. 1832-ல்தான் முதல் மாற்றம் செய்யப்பட்டது.

19 ஆம் நூற்றாண்டில் பல புதிய படிமுறைகள் செயல்பட்டு வந்தன. பிரிட்டனில், மக்கள் தொகையின் பெரும்பாலோருக்கு வாக்குரிமை அளிக்கப்பட்டது. (1832, 1867, 1884, 1918, 1928 ஆம் ஆண்டுகளில் இயற்றப்பட்ட சட்டங்கள்). இதன் பயனாகப் பாராளுமன்றம் அதிகமான பிரதிநிதித்துவம் அடைந்ததுமல்லாமல் அதிக வலிமையும் பெற்று வளர்ந்தது. முக்கியமாகப் பாராளுமன்றத்தின் பொதுமக்கள் சபையான மக்கள் சபை (House of Commons) பெரிதும் வலிமை பெற்றது. மற்ற நாடுகளிலும் ஜனநாயக ஆதரிப்பாளர்கள் பாராளுமன்றம் உண்டாக்குவதையும், வாக்குரிமையை விஸ்தரிப்பதன்மூலம் ஜனநாயக முறையை ஏற்படுத்துவதையும் தங்கள் நோக்கமாகக் கொண்டார்கள். பொதுவாக, பாராளுமன்ற முறைவேண்டும் என்ற பொதுக் கோரிக்கைக்கு இணங்கிய நாடுகளில் மாத்திரமே மன்னராட்சி தொடர்ந்து நிலைத்தது.

## தற்காலப் பொதுமக்கள் சபைகள்

மத்திய அரசாங்கத்தில் பாராளுமன்றங்களாகவும், தல ஆட்சி முறையில் தேர்ந்தெடுக்கப்பட்ட சபைகள், குழுக்கள், சிறு குழுக்கள் முதலியன பிரதிநிதித்துவ நிறுவனங்களாகும். இவை ஜனநாயக அரசின் குறிப்பிட்ட தனித்தன்மையாக மாறியதுமல்லாமல் அரசாங்கத்தின் இன்றியமையாத சாதனமாகவும் மாறிற்று. பரந்த கருவூலமாகிய அரசியல் சுதந்தரத்தையும், பயனுள்ள அதிகாரத்தையும் சமரசப்படுத்தும் பிரச்சினைக்கு இவை தீர்வுகண்டன. ஒரு

புறத்தில் எதேச்சாதிகாரத்துக்கும், இன்னொரு புறத்தில் கும்பல் ஆட்சிக்கும் அது பொருந்தாததாகும். எது பொதுவாக விரும்பப் படுகிறது என்பதை அதிகாரத்திலுள்ளவர்கள் அறியும்படி அது செய்தது. குறிப்பாக, மக்கள் எதை விரும்பவில்லை என்பதை அதிகாரத்திலுள்ளவர்கள் அறியும்படிச் செய்தது. ஆளப்படுவோர், ஆட்சி செய்வோர் ஆகியோரின் நோக்கங்களின் ஒருமைப்பாட்டை அது உத்தரவாதமாக்கியது.[1]

தற்காலப் பாராளுமன்றம்[2] வெவ்வேறு அடிப்படைகளில்[3] தேர்ந்தெடுக்கப்பட்ட இரு சபைகளைக் கொண்டதாக இருக்கிறது. ஜனநாயகத்தில் வயதுவந்த வாக்காளர்களால் ஒருவர் தேர்ந்தெடுக்கப்படுகிறார். இதனுடைய விவரங்களைப்பற்றியும், முறைகளைப்பற்றியும் இன்னும் சிறிது நேரத்தில் விவாதிக்கலாம். பாராளுமன்றங்கள் குறிப்பிட்ட பதவிக்காலங்களுக்குத் தேர்ந்தெடுக்கப்படுகின்றன. இந்தப் பதவிக்காலம் பொதுவாக இரண்டிலிருந்து (அமெரிக்கா) ஐந்து ஆண்டுகளுக்குள்ளாக (பிரிட்டன்) இருப்பதுண்டு. ஃபிரான்சு, சுவிட்சர்லாந்து, வெய்மார் ஜெர்மன் குடியரசு (Weimer German Republic) முதலிய நாடுகளில் நான்காண்டுக் காலத்திற்குப் பாராளுமன்றங்கள் தேர்ந்தெடுக்கப்படுகின்றன. நான்காண்டுக்காலம் சாதாரண வழக்கமாகப் பல நாடுகளிலும் பின்பற்றப்படுகிறது. பாராளுமன்றம் தனது தலைவரைத் தானே

[1] 'இங்கிலாந்தின் அரசியல் அமைப்பில் சிறப்பு ஏதாவது இருக்குமாயின் அது ஒவ்வொரு தலத்தில் வாழும் குடிமக்களே தங்கள் விவகாரங்களை மேற்பார்த்துக் கொள்ளும்படி விட்டுவிடுவதாகத்தான் இருக்கமுடியும். ஒரே தலைமையின் கீழுள்ள பல குடியரசுகளே இவைகள். அந்த ஒரே தலைமையும் மாநிலங்களிலுள்ள பல நிருவாகிகளைப் பாதிக்கவோ அல்லது கட்டுப்படுத்துவதற்கோ அமைக்கப்படவில்லை. பல சுதந்தரமான அரசுகள் இயங்குவதால் ஏற்படும் முரண்பாடுகளைத் தவிர்த்து ஒரு சமநிலையை ஏற்படுத்தவும், ஒழுங்குற அமைக்கவுமே அது இருக்கிறது. இது சமுதாயப் பொறியின் உட்சக்கரம் போன்றது. பொறியின் நுட்பவேலைகளில் தலையிடாமல் முழு இயக்கத்தையும் ஒழுங்குபடுத்துவதே இதன் நோக்கமாகும்'. (நூறு வருடங்களுக்கு முன்னர் இருந்த டோரிக் கட்சியைச் சேர்ந்த ரிச்சர்ட் ஒஸ்ட்லர்- Richard Oastler).

[2] பொதுவாக எல்லாப் பிரதிநிதித்துவ சபைகளுக்கும் இச் சொல்லையே பயன்படுத்துவோம்.

[3] இடைக்காலப் பாராளுமன்றங்கள் பெரும்பாலும் இரண்டிற்கும் மேற்பட்ட சபைகளைக் கொண்டிருந்தன. ஃபிரான்சில் மூன்று எஸ்டேட்டுகள் இருந்தன. இங்கிலாந்தில் ஆதியில் நான்கு சபைகள் இருந்தன. பிரபுக்கள் சபையில் பிஷப்புக்களை மாத்திரம் இருக்கவிட்டுவிட்டு மற்ற மதகுருக்கள் தனி மதச் சபையை அமைத்துக்கொண்டனர். இந்தப் பிஷப்புக்கள் முதலில் நிலக்கிழார்கள் என்ற அந்தஸ்திலும், பிறகு மதத் தலைவர்கள் என்ற நிலையிலும் அங்கம் பெற்றனர். நகரங்களிலிருந்து வந்த பிரமுகர்கள் பொது மக்கள் சபையில் சேர்ந்துகொண்டனர். அதாவது கிராமப்புற, நகர்ப்புறச் சமுதாயங்களின் பிரதிநிதிகளாக இவர்கள் அச் சபையில் இடம் பெற்றனர். இரு சபைகளை அமைப்பதில் தெய்வீகமான தன்மையோ அல்லது தவிர்க்க முடியாத தன்மையோ எதுவும் இல்லை.

தேர்ந்தெடுத்துக்கொள்கிறது. அதனுடைய நடைமுறையையும் அதுவே வகுத்துக்கொள்கிறது. பல நாடுகளில் பாராளுமன்றங்கள் அங்கத்தினர்களின் தேர்தல் செல்லுமா, செல்லாதா என்பதையும் அவைகளே தீர்மானித்துக்கொள்கின்றன. பிரிட்டன் போன்ற சில நாடுகளில் இது நீதி மன்றங்களுக்கு விடப்படுகின்றன.

இந்த மன்றத்தின் மூலமாகத்தான் பாராளுமன்றம் மக்களின் பிரதிநிதியாக இருப்பதாகக் கூறப்படுகிறது. ஆனால், குடிமக்களுக்குள் ஒரு வகுப்பார் சமுதாயத்தின் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும் உரிமை பெற்றவர்களாக இருக்கிறார்கள் என்ற உட்கருத்தை இது புலப்படுத்துகிறது. இதைக் கூறியவுடனே பல வினாக்கள் எழுகின்றன. அந்தக் குடிமக்கள் வர்க்கம் மொத்த ஜனத்தொகையில் என்ன வீதாச்சாரத்தில் அமைந்திருக்கிறது? இப்பொழுது இருக்கும் அரசாங்க அமைப்பிலும், கொள்கையிலும், அக் குடிமக்கள் வர்க்கத்தின் விருப்பங்கள் எந்த அளவில் பிரதிபலிக்கின்றன? அரசாங்கத்தின் நடவடிக்கைகளை எவ்வளவு நெருக்கமாக அது மேற்பார்வையிடமுடிகிறது? சிறுபான்மையினரின் உரிமைகள் எந்த அளவிற்கு மதிக்கப்படுகின்றன? என்பன போன்றவை அவை.

## (ii) வாக்காளர் தொகுதியும் 'பொதுமக்கள்' சபையும்

### வாக்காளர் தொகுதி

குடிமக்கள் தொகுதியின் அளவை முதலில் எடுத்துக் கொள்வோம். 19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வயதுவந்தோர்க்கெல்லாம் பரந்த அளவில் வாக்குரிமையை ஏற்படுத்தும் வரையில் உண்மையான ஜனநாயகப் பிரதிநிதித்துவம் இருக்கவில்லையென்பதை இங்கு நாம் நினைவுகூர்தல் வேண்டும். ஆதி ஏதென்ஸில் குடிமக்கள் தொகுதி எவ்வளவு சிறியதாக இருந்தது என்பதை ஏற்கெனவே பார்த்தோம். இது போன்ற இடைக்கால நகர அரசுகளிலும், இடைக்கால ஆலோசனைச் சபைகளிலும் சிறிய அளவு குடிமக்களே பிரதிநிதித்துவ உரிமை பெற்றிருந்தனர் என்றும் பார்த்தோம். வாக்குரிமை விஸ்தரிப்பு இயக்கம் எவ்வளவு தாமதமாக இயங்கியது என்றும் பார்த்தோம். அதற்கு மாறாக, இன்றுள்ள நாடுகளில் எல்லோருக்கும் வாக்குரிமை அளிக்காத நாடே இல்லையெனலாம். சில நாடுகள் பெண்களுக்கு இன்னும் வாக்குரிமை அளிக்கவில்லை. ஆனால், இப்படிப்பட்ட நாடுகளில் சுவிட்சர்லாந்து ஒன்றுதான் பிற வழிகளில் ஜனநாயகமாகக் கருதப்படக்கூடிய தன்மை பெற்றதாகும். நல்லதற்கோ கெட்டதற்கோ வயது வந்தோர்க்கு, வாக்குரிமை நிலைத்து நின்றுவிட்டது. இதுமாத்திர

மல்லாமல் எல்லோரும் சம வாக்குரிமை பெற்றிருப்பதும் உலக மெங்கும் பரவிவிட்டது. எப்பொழுதும் இது இப்படியே இருக்க வில்லை. பிரஷியாவில் (Prussia) வாக்காளர் செல்வநிலையின்படி நான்கு வகைகளாகப் பிரிக்கப்பட்டனர். ஒவ்வொரு செல்வ நிலைக்கும் தக்கவாறு பாராளுமன்றத்திற்குச் சம எண்ணிக்கையுள்ள பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இவ்வாறாகச் செல்வத் திற்கு அதிகமான - மிகையான - பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டது. இங்கிலாந்தில் இருப்பிடத்தினாலோ அல்லது சொத்து இருப்பதாலோ வாக்குரிமைத் தகுதி பெற்றவர்கள், பல தடவைகள் வாக்களிக்கலாம் என்றிருந்தது. இதேபோன்று பல்கலைக்கழகப் பட்டதாரிகளுக்கும் அதிகப்படியானதொரு வாக்கு அளிக்கப்பட்டுவந்தது. இந்த வகை முரண்பாடுகளெல்லாம் இப்பொழுது மறைந்துவிட்டன. ஒரு வாக்குக்கு, ஒரு நபர் என்பது இப்பொழுது உலகெங்கும் நடை முறையில் பின்பற்றப்பட்டுவருகிறது.

## வயதுவந்தோர்க்கு வாக்குரிமை

இந்த விதமான வாக்குரிமைச் சமத்துவமானது மிகவும் குறை கூறப்பட்டதொன்றாகும். ஆனாலும் மெதுவாக நிகழ்ந்த உருமலர்ச்சி அல்லது நடைமுறை அனுபவம் ஆகியவற்றின் விளைவே இது. இருபத்தொரு வயது அல்லது அதற்குமேலுள்ள எவருக்கும் பொதுக்கொள்கையை நடத்திச்செல்வதில் சம உரிமையுண்டு என்று எடுத்த எடுப்பில் வலியுறுத்துவது முதற்பார்வையில் பொருத்த மற்ற செயலாகத் தோன்றலாம். பொதுக் கல்வி, தனித் தேர்ச்சி பெற்ற அறிவு, அதிகப்படியான விவேகம், பரந்த அனுபவம் முதலியன உண்மையிலேயே சிலரை மற்றவர்களைவிட அதிகத் தகுதிபடைத்தவர்களாக ஆக்குவது வெளிப்படை. பொருளாதார அக்கறைகளின் காரணமாகச் சிலர் பொது விவகாரங்களைச் செயலாற்றுவதில் மற்றவர்களைவிட அதிகக் கவனமுடையவர்களாக இருக்கக்கூடும். அவ்வாறிருந்தும் எல்லோருக்கும் சம வாக்குரிமை அளிப்பது நிலைத்துவிட்டது எவ்வாறு?

பெரும்பாலும் இது அனுபவத்தின் விளைவேயாகும். ' நாட்டில் ஒரு பங்குடையவர்களுக்கு மாத்திரம் வாக்குரிமை அளிப்பது அரசாங்கத்தை அவர்கள் நன்மைக்காக நடத்துவது ஆகும். இது விசேஷமாக வரிச்சுமை, பிரதிநிதித்துவம் பெறாத வகுப்புக்கள்மீது சுமத்தப்படுவதில் முடியும். எந்த வகுப்பாரும் வரிகளை விரும்புவதில்லை. எப்பொழுதும் தங்கள்மீதுள்ள வரிப்பளுவை மற்றவர்கள்மீது சுமத்திவிட முயற்சிகள் செய்யப்படுகின்றன. ஜனநாயக வாக்குரிமையானது இந்த வரிச்சுமையைச்

செல்வர்களின்மீது சுமத்த முயற்சி செய்கிறது. சில சமயங்களில் மிகையாகவும்கூட இது நடந்துவருகிறது. எவ்வாறெனினும் ஏழைகளைவிடப் பணக்காரரை வரி செலுத்தச் சொல்வது சிறிது குறைவான தீமையையே விளைவிக்கக் கூடியதாகும். ஆகவே இரண்டிலொன்றைப் பின்பற்ற வேண்டியிருக்கிறது. வாக்குரிமை பெறுவதற்குரிய ஏனைய தகுதிகளைப்பற்றிப் பார்க்கும்போது நடுநிலையான வகையில் தகுதியைத் தீர்மானிக்கும் முறை இன்னும் கண்டுபிடிக்கப்படவில்லையென்று தெரிகிறது. அரசியல் அறிவை யாரால் அளக்கமுடியும்? எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் என்று அழைக்கப்படுபவர்களில் பலர் நூலைத் திறந்தே பார்க்காதவர்களாக வும் செய்தித்தாள்களில் விளையாட்டுக்களைப் பற்றிய பக்கங்களைத்தவிர வேறெதையும் படிக்காதவர்களாகவும் இருக்கிறார்கள். அதே சமயத்தில் படிக்கத்தெரியாதவர்களில் பலர் நல்ல பகுத்தறிவு பெற்றவர்களாக இருக்கிறார்கள்.

சம்பந்தப்பட்ட எல்லோருக்கும் தீர்மானத்தில் பங்கு இருக்க வேண்டுமென்பது நியாயமான காரியமாகத் தோன்றுகிறது. வெளிநாட்டு விவகாரங்களைக் காட்டிலும் சிக்கல் நிறைந்த பிரச்சினை வேறெதுவும் இருக்கமுடியாது. ஆனால் எல்லா ஆண்களும் பெண்களும் யுத்தத்தில் உயிரை இழக்கத் தயாராக இருக்கவேண்டும் என்று கோரப்படும்போது யுத்தத்திற்கு நாட்டை இழுத்துச் செல்லும் கொள்கைகளைத் தீர்மானிக்கும் உரிமை அவர்களுக்கு இருக்கிறது. மிகவும் குறைவான எண்ணிக்கையுடைய வாக்காளர் தொகுதி பொது மக்களின் நலத்தில் அக்கறை காட்டுவார்களா என்பது ஐயத்திற் கிடமான காரியம். முக்கியமாகப் பொதுநலம் பணச் செலவை ஏற்படுத்தும் என்ற நிலையிருந்தால் அவர்கள் அக்கறை காட்டுவது கடினமே. அரசியல் உரிமைகள் அளிக்கும் பல பொது நன்மைகளை இன்று பொதுமக்கள் அனுபவிக்க முடிவதன் காரணம் அவர்களுக்கு அரசியல் உரிமைகள் அளிக்கப்பட்டிருப்பதுதான். தங்கள் தேவைகளுக்கு உகந்தவாகப் பொது விவகாரங்களை நடத்திச் செல்வதே முக்கியமான பொதுநன்மையாகும். லாஸ்கி (Laski) சொல்வதுபோல, ‘அதிகாரத்திலிருந்து ஒருவரை ஒதுக்கி வைப்பது, அதிகாரத்திலிருந்து பெறக்கூடிய நன்மைகளிலிருந்து அவரை ஒதுக்கி வைப்பதாகும்.’ ஒருவருக்கும் மறுக்கப்பட முடியாத அடிப்படை உரிமை வாக்குரிமையாகும். சமுதாயத்தின் வாழ்க்கைக்கு ஒவ்வொருவரும் தங்களாலியன்றதைச் செய்வதும் தற்கால அரசியலின் அடிப்படை உரிமையாகும். இதுவே பதவித் தகுதிக்கும் பொருந்தும். அநேகமாக வாக்குரிமை பெற்றவர் பதவிக்கும் தகுதி பெற்றவராகிறார். சுதந்தரமான வாக்காளர் தொகுதியை வரையறை செய்வதற்குரிய நேர்மையான வழியொன்றும்

இல்லை என்று தோன்றுகிறது. ஆகவே பிழைகள் ஏற்பட்டால் அதன் பொறுப்புக்களையும் விளைவுகளையும் ஏற்றுக்கொள்ள வேண்டியதுதான்.

## 'தேர்தல் தொகுதி' வகைகள் (Types of constituencies)

'யாரெல்லாம் வாக்களிக்கலாம்' என்பதற்கு ஒரே சீரான விதி இருந்துவிட்டாலும், 'மக்கள் எவ்வாறு வாக்குப்பதிவு செய்வது' என்பதில் ஒரே சீரான விதி இராது. வரலாற்றுக் காரணங்களால் தற்காலப் பிரதிநிதித்துவ முறை புவி அமைப்பைச் சார்ந்திருக்கிறது. பாராளுமன்ற அங்கத்தினர்கள் ஒரு மாவட்டத்தின் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். அந்த மாவட்டத்தின் வாக்காளர்களால் அவர்கள் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். வாக்காளர் ஒரு குறிப்பிட்ட நகரத்தின் அல்லது கிராமத்தின், குறிப்பிட்ட ஒரு வீதியில் குறிப்பிட்ட வீட்டில் வசிப்பவர் என்பதே மிக முக்கியமானதாகக் கருதப்படுகிறது. அமெரிக்கா போன்ற சில நாடுகளில் இந்தப் புவியியல் அடிப்படையானது, பிரதிநிதி தான் பிரதிநிதியாக விரும்பும் மாவட்டத்தில் குடியிருக்கவேண்டும் என்ற வேறொரு விதியையும் சேர்த்துக் கொள்வதால், மிகவும் வலுவுடையதாக்கப்படுகிறது.

முதன் முதலில் தலத் தொகுதிகளே அங்கத்தினர்களைப் பாராளு மன்றத்திற்கு அனுப்பிவைத்தன என்ற உண்மை இதை விளக்குகிறது. குறிப்பிட்ட நகரத்துக்கோ அல்லது மாவட்டத் துக்கோதான் ஒருவர் பிரதிநிதியாக அனுப்பப்பட்டாரேயொழிய அதில் வாழும் குடிமக்களின் பிரதிநிதியாக அல்லர். நகரம் செல்வம் மிக்கதாகவும், அக்கறைகள் பலவுடையதாகவும் இருந்து, அரசனின் செலவுகளுக்கு நகரத்தின் தன்மைக்கேற்பப் பணம் கேட்கப்படப் போகிறது என்று அது அறிந்திருந்தது. மேலும் அதனுடைய குடிமக்களுக்குள் இந்தப் பளுவை எந்த வீதாச்சாரத்திலும் பிரித்துக் கொள்ளும் உரிமை நகரத்துக்குக் கொடுக்கப்பட்டிருந்தது. மாவட்டங்களின் நிலப் பரப்பளவுக்குத் தக்கவாறு வரிகள் அரச நீதிமுறைப்படியும்,ஆட்சி முறைப்படியும் விதிக்கப்பட்டன. எனவே தான் நகரத்துக்கோ அல்லது மாவட்டத்துக்கோ ஒருவர் பிரதிநிதி யாக அனுப்பப்பெற்றார்.

எவ்வாறெனினும் குடியிருப்பு மாத்திரம் வாக்குரிமை பெறுவதற் குரிய ஒரே தகுதியாக இருக்கமுடியாது என்பது வெளிப்படை. உதாரணமாகச் சமயத்தொகுதிகள், தொழில் தொகுதிகள் ஆகியவற்றின் சார்பாகவும் பிரதிநிதிகள் தேர்தலுக்கு நிற்கலாம். ஆனால் முன்னதாகச் சொல்லப்பட்ட முறையைப் பின்பற்றுவது

மிகவும் எளிதானது. ஏனெனில் வாக்காளர்களின் எண்ணிக்கைக்கு எந்த வீதாச்சாரத்தில் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் என்று கணிப்பது சுலபமானது. இதன்பயனாக, தேர்தல் நடத்துவதற்குரிய வேலைகள் சுலபமாக்கப்படுகின்றன. அதனோடு வாக்காளர் தமது சொந்தப் பொறுப்பில்தான் வாக்களிக்கிறார் என்ற உண்மையையும் அது வலியுறுத்துகிறது. இந்த வாதங்கள் எதுவும் முடிவானவையன்று. ஏனெனில் தற்காலத்தில் ஏற்பட்டிருக்கும் நுட்பத்திறன்களால் விருப்பமானால் எந்தவிதமான தேர்தல் அடிப்படையையும் அமைத்துக்கொண்டு செயலாற்றுவது சாத்தியமாகிறது. உதாரணமாகப் புவியியல் அடிப்படைக்குப் பதிலாகத் தொழில் அடிப்படையில் அமைக்க விரும்பினால் நிச்சயமாக அதை நிறுவமுடியும். ஆனால் தொழில் அடிப்படை சிறப்புடையதுதானா? தொழில் பிரதி நிதித்துவம் சமூக, வர்க்க பேதங்களை வலியுறுத்துவதோடு, குடிமகனை ஓர் உற்பத்தியாளர் என்ற தனித்தன்மையில் நிறுத்திப்பார்க்கவும் முற்படும் தன்மையதாக இருக்கிறது. ஆனால் அவர் ஒரு நுகர்வாளர். குடும்பத்தின் அங்கத்தினர், ஒரு கோயிலைச் சார்ந்தவர். இன்னும் பல காரியங்களையும் சொல்லலாம். ஆகவே தொழிற்சங்கத்தின் மூலமாக வெளியிடப்படுவதைவிட அவரது வீட்டின் மூலமாக வெளியிடுவது சிறப்புடையதாக இருக்கிறது. இருப்பினும் இரண்டாவது சபைக்குத் தொழிலை அடிப்படையாகக் கொள்ளவேண்டும் என்று கூறுவது கவனிக்கப்படத் தக்கதாகும்.

## தேர்தல் முறைகள்

நேரடித் தேர்தல் இப்பொழுது எங்கும் பின்பற்றப்படும் விதியாகும். ஆனால் மறைமுக அல்லது இரண்டாந்தரத் தேர்தல் உபயோகப்படுத்தப்பட்டுவந்திருக்கிறது. புதிதாக ஏற்பட்டுள்ள ஜனநாயகங்களில் இம் முறை பல நன்மைகளுடையதாகக் காணப்படுகிறது. இம் முறையின்படி நேரடியாக வாக்காளர்கள் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்காமல், இறுதியான தேர்தல் செய்யும் ஒரு தொகுதியைத் தேர்ந்தெடுக்கிறார்கள். பழைய ஃபிரஞ்சு எஸ்டேட்டுகள் (estates) இந்த விதமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவைதான். ஆதி முறைப்படி அமெரிக்காவின் ஜனாதிபதித் தேர்தலும் இம்மாதிரியே இருந்தது. அமெரிக்க வாக்காளர்கள் ஜனாதிபதியைத் தேர்ந்தெடுப்பதில்லை. ஆனால் அவர்கள் ஆதரிக்கும் ஒரு நபரைத் தேர்ந்தெடுக்கக்கூடிய தேர்வாளர்களுக்குத்தான் (Electors) வாக்களிக்கிறார்கள்.

இவ்வித மறைமுக முறை ஒரு சிறிய வாக்காளர் தொகுதியில், அவர் நம்பிக்கைக்குப் பாத்திரமான தெரிந்த நபர்களுக்கு வாக்காளர்

வாக்களிக்க உதவுகிறது. இந்த இடைநிலைத் தேர்வாளர்கள் தங்கள் வாக்காளரோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கிறார்கள். மேலும் அவர்கள் நல்ல கல்வி பெற்றவர்கள்; ஆகையால் இறுதித் தேர்வை மிக விவேகமாகச் செய்யக்கூடும். வாக்காளர் தொகுதி எழுதப்படிக்கத் தெரியாதவர்களாலும், பரந்த பிரச்சினைகளைப்பற்றி அறியாதவர்களாகவும், தங்களுக்குத் தெரிந்த இரண்டு அல்லது மூன்று பேருக்குள் ஒருவரைத் தேர்ந்தெடுக்கக் கூடியதாயும் மட்டும் இருந்துவிட்டால் இந்த வாதத்திற்குப் பதிலே கூறமுடியாது. ஒரு குறிப்பிட்ட நபருக்குப் பதிலாக, ஒரு கட்சியின் வேலைத் திட்டத்தைத் தேர்ந்தெடுக்க முற்படும்போது இந்த முறை தோல்வியடைந்து போவது அனுபவத்தில் கண்ட உண்மையாகும். வாக்காளர், சிவப்பு, நீலம், வெள்ளை என்பன போன்றவற்றிற்கு வாக்களிக்கிறார் என்றால், அவர் மறைமுகமாக வாக்களித்தாலும், நேர்முகமாக வாக்களித்தாலும் எல்லாம் ஒன்றுதான். எந்த முறையிலும் கட்சித் தேர்வு வெற்றிபெறும் தன்மையது. அமெரிக்காவில் கட்சிகள் தோன்றியது தேர்வாளர் தொகுதி முறையை முழுவதாகப் பயனற்றதாக ஆக்கிவிட்டது. உண்மையில் அந்த முறையை அங்கு இனி முழுமையாகக் கைவிட்டுவிடலாம்.

வாக்காளர் தொகுதி அமைப்பைப் பார்த்துவிட்டோம். இனி எவ்வாறு வாக்குப்பதிவு செய்வது என்று பார்ப்போம். எண்ணற்ற பல முறைகளுண்டு. அவையனைத்தையும் பட்டியலில் கூறுவதும், விவாதிப்பதும் முடியாத காரியம். ஒரு பிரதிநிதியைத் தேர்ந்தெடுக்கும் சிறிய வாக்காளர் தொகுதிகள்; பல பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும் பெரிய வாக்காளர் தொகுதி; அதிகமான வாக்குகள் பெற்றிருக்கும் ஒருவரையோ அல்லது பலரையோ தேர்ந்தெடுக்கப் பட்டதாக அறிவிப்பது அல்லது ஒப்பீட்டடிப்படையில் பெரும்பான்மை பெற்றவரை வெற்றி பெற்றவராகச் சொல்வது; சரிபாதி வாக்குகளோடு ஒன்றைச் சேர்த்து வரக்கூடிய அளவு வாக்குப் பெற்றால்தான் வெற்றி அதாவது முழுமையான பெரும்பான்மை என்று அழைக்கப்படும் முறையைப் பின்பற்றுவது;[1] அல்லது வீதாச்சார முறைப்படி ஒவ்வொரு கட்சிக்கும் அல்லது தொகுதிக்கும் அவர்கள் பெற்ற வாக்குகளின் கணக்குப்படிச் சரியாகப் பிரித்துக்கொள்வது ஆகிய முறைகளில் கடைசியாகச் சொன்ன முறையில் வேறு பல முறைகளும் அடங்கி இருக்கின்றன. இது ஐரோப்பாவில் மிகவும் இயல்பாகப் பின்பற்றப்படுகிறது. அதே வீதாச்சாரத்தில் அரசாங்கத்திலும் கட்சிவாரியாக இடங்கள்

[1] முன்னதாகச் சொல்லப்பட்ட முறை இங்கிலாந்தில் வழக்கமாகப் பின்பற்றப் படுகிறது. வேறுபல நாடுகளில் பின்னதாகச் சொல்லப்பட்ட முறை பின்பற்றப்படுகிறது.

அளிக்கப்படும் தன்மையுள்ளதாக இது இருக்கிறது. அரசாங்கத்தை அமைக்கும் அளவுக்கு எண்ணிக்கை பெற்றிராத சிறு கட்சிகளை இது ஊக்குவிக்கிறது என்பது இதன் முதலாவது விளைவாகும். இச் சிறு கட்சிகள் சில இடங்களையே கைப்பற்றக் கூடுமாகையால் தனியாக நின்று அரசாங்கத்தை அமைக்கமுடியாது. இந்த முறையின் ஏதோ ஒரு மந்திரி பதவியையாவது அவர்கள் கட்சிக்குப் பெறமுடியும். இரண்டாவதாக, கட்சிப் பிரிவுகளை ஒரே மாதிரியாக ஆக்குகிறது. இறுதியானதும் முக்கியமானதும், அரசியல் தன்மையையும், அரசியல் பிரதிநிதித்துவத்தையும் இந்த முறை பேதமுறச் செய்வதாகும்.

அரசியல் கணக்கியலாகாது. மக்களின் விருப்பாற்றல்கள் எண்ணால் கண்டுபிடிக்க முடியாதவையாகும். பொதுமக்கள் கருத்தைப் பரந்த ஒரு பிரச்சினையின்மீது நாட்டங்கொள்ளச் செய்யாமல், வீதாச்சாரப் பிரதிநிதித்துவ முறையானது தல அக்கறைகளையும், வகுப்பு அக்கறைகளையும் தூண்டிவிட்டுப் போதுமான செயலாற்றலற்ற சிறு அலகுகளாகப் பிரித்து ஒருமைப்பாடான சக்தியைக் குலைத்துவிட உதவுகிறது. பயனுள்ள அரசாங்கத்திற்கு ஆதாரமாக இருப்பது அறுதியான பெரும்பான்மைதான். இந்த முறை இதை இயலாததாக்கி ஒவ்வோர் அரசாங்கத்தையும் நிலையில்லாத இணைப்பைச் சேர்ந்த பிரதிநிதிகளால் ஆக்கி, அரசாங்கமே நிலையில்லாது போய்விடுகிறது. ஏனெனில் கூட்டில் சேர்ந்திருக்கும் பிரதிநிதிகளை அவர்களின் ஆதரவாளர்கள் எச் சமயத்திலும் இணைப்பைவிட்டு வெளியே வரும்படி அழைத்துவிடக் கூடும். அமைச்சரவையின் நிலையாத் தன்மைக்கு இது ஒரு முக்கிய காரணமாக இருந்திருக்கிறது. ஜனநாயக அரசியலின் சாபக் கேடாகவும் இருந்திருக்கிறது.[1]

## வாக்குப் பெற்றிருப்பது பயனுள்ளதுதானா?

ஒரு நூற்றாண்டுக்கு முன்னர் இப்படிப்பட்ட வினா மிகவும் விரசமாகப் பட்டிருக்கும். சில சமயங்களில் தெய்வ நிந்தனையாகக் கூடப் பட்டிருக்கும். இந்த வாக்கைப் பெறுவதற்காக மனிதர்கள் புரட்சிகள் செய்து உயிர்களையும் தியாகம் செய்திருக்கிறார்கள். தங்களைக் கட்டியிருக்கும் சங்கிலிகளை அறுப்புண்டுபோகச் செய்து வாக்குரிமை விடுதலையளிக்கும் என்று வாக்குப் பெறுதவர்கள் நம்பினார்கள். 'வயது வந்தோர் வாக்குரிமையானது தள்ளப்பட்டு நொந்துபோயிருக்கும் மனிதனைத் தேடிப்போய் அவனை

[1] Finer, 'The case against Proportional Representation' (Fabian Society, 1924) பார்க்கவும்.

நம்பிக்கைகொள் என்று கூறியது. வெறிகொண்டவர்களைச் சிந்திக்குமாறு கூறிற்று. ஒடுக்கப்பட்ட ஏழையைக் குடிமகனாக முடிசூட்டியது. தனியாளின் அந்தஸ்து எவ்வளவாகவோ உயர்த்தப்பட்டது! அதனால் நெறிமுறைக்கே கண்ணியம் ஏற்பட்டது! எத்துணைத் திருப்தி ஆகவே எத்துணை அமைதி! வாக்குப்பதிவு அறையில் அவன் நுழைவதைப் பாருங்கள். ஒடுக்கப்பட்ட பாட்டாளியின் முகபாவத்தோடு உள்ளே நுழைகிறான். அவன் வெளியே வரும்போது மன்னனின் சாயலோடு திரும்புகிறான்' என்று ஃபிரஞ்சுப் பாராளுமன்றத்தில் கவிஞரும், அரசியல்வாதியுமான விக்டர் ஹியூகோ (Victor Hugo) பேசினார். இன்னும் நெருங்கிய ஓர் உதாரணத்தைப் பார்ப்போம். இந்த நூற்றாண்டின் ஆரம்பத்தில் பெண்ணுரிமைக்காக நடந்த கடும் போராட்டத்தை நம்மில் பலர் நினைவுகூரமுடியும். ஃபிரஞ்சு முற்போக்குச் சிந்தனையாளர் சார்லஸ் பெகை (Charles Peguy) தம்முடைய பழைமை விரும்பும் நண்பரொருவருக்குக் கடிதம் எழுதினார்.[1] அதில் இன்று நடக்கும் தேர்தல்கள் உங்களுக்குக் கேலிக்கூத்தாகவும், பொய்யாகவும், ஏமாற்றுவித்தையாகவும் படலாம். நீங்கள் அந்த அபிப்பிராயம் கொள்வதற்கு உங்களுக்கு உரிமையுண்டு. இந்த விசித்திரமான விவகாரம் எவ்வளவுதான் பொய்யானவையாகவும், ஏமாற்றுவனவாகவும் இருந்தாலும், ஒரு வடிகட்டின முட்டாள்கூட இதில் தலையிடும் உரிமையைப் பெறுவதற்காக, எண்ணற்ற பலர், வீரர்களாகவும், பரிசுத்தர்களாகவும் வாழ்ந்திருக்கிறார்கள்; பாடுபட்டிருக்கிறார்கள்; உயிரைக் கொடுத்திருக்கிறார்கள். தேர்தல்கள் பயனற்றவை என்று நீங்கள் நினைக்கலாம். ஆனால், அருமை நண்பரே, மரணப் படுக்கையில் இருந்தவர்களும், நோயாளிகளும் தங்கள் வாக்குச் சீட்டைப் பெட்டியில் போடுவதற்காகத் தங்களைத் தூக்கிச்செல்லச் செய்த வீரமான ஒரு காலம் இருந்தது. 'வாக்குச் சீட்டைப் பெட்டியில் போடுவது' என்பது உங்களுக்குக் கேலிக்கூத்தாகப் படலாம். ஆனால் ஒரு நூற்றாண்டின் வீரக் கனலால்தான் அதைப் பெறமுடிந்தது'. 'இத் தேர்தல்கள் பயனற்றவை' என்று கூறுகிறீர்கள். ஆனால் வீரத்தினாலும் தூய தன்மையினாலும் பெறுகின்ற விளைவுகளெல்லாம் உலகப் பிரகாரமாக மிகவும் பயனற்றவையாகத் தோன்றினாலும் அவைதான் மிகச் சிறந்தனவும், தூய தன்மையுள்ளனவும் ஆகும்.

ஆனால் இன்று ஒவ்வொரு நாட்டிலும் வாக்காளரின் சிரத்தையின்மை அரசியலில் மிகச் சாதாரணமாகத் தெரிந்த விஷயங்களில் ஒன்றாகும். வாக்களிப்பது கட்டாயமாக்கவேண்டும் என்று பல

[1] In Notre Jeunesse.

ஆலோசனைகள் கூறப்படுகின்றன. காரணமில்லாமல் வாக்களிக்காது இருப்பவருக்கு அபராதம் விதிப்பது அல்லது அடுத்த தேர்தலுக்கு அவருக்குள்ள வாக்குரிமையை ரத்து செய்வது போன்ற தண்டனைகள் அளிக்கவேண்டும் என்று கூறப்படுகிறது. வாக்களிப்பது ஒரு தனியுரிமை. அதை வெறுத்தொதுக்கக்கூடாது என்று அவர்கள் கூறுகிறார்கள். விருப்பமில்லாத வாக்காளர் ஒருவரை வாக்குச் சாவடிக்கு இழுத்துச்செல்வது நம்மைப் பொறுத்த மட்டில் அரசியல் வாழ்க்கையை இழிவுபடுத்துவதாகும். மேலும் அது அறியாமை மிக்க அல்லது முட்டாள்தனமான முடிவுகள் செய்வதற்குத்தான் பயன்படும். ஓர் உரிமையை உபயோகிக்காமலிருக்கும் உரிமை மனிதனுக்குண்டு. அரசியல் பிரச்சினைகளில் அக்கறை கொண்டிருக்கவேண்டும் என்ற கட்டாயம் ஏதுமில்லை. அவன் வருங்காலத்தைப்பற்றி உணரமுடியாதவனாயும், முட்டாளாயுமிருக்கலாம். அவன் விருப்பங்களின்படி செயல்கள் நடைபெறாவிட்டால் அவனால் குறைகூற முடியாது. ஆனால் வாக்களிப்பதோ, அளிக்காமலிருப்பதோ அவனது சொந்தக்காரியம். அதுதான் ஜனநாயக சுதந்தரத்தின் சாரம் ஆகும்.

## வாக்குரிமையும், பொதுமக்கள் அபிப்பிராயமும்

பாராளுமன்றத்திற்காக வாக்களிக்கும் வேலை ஜனநாயக முறையின் ஒரு பகுதியேயாகும். மக்கள் எதை விரும்புகிறார்கள் என்பதை அறிந்து கொள்வதற்காகத்தான் தேர்தல்கள் நடைபெறுகின்றன. அத்துடன் அரசாங்கம் பின்பற்றும் கொள்கைகள் அவர்கள் விருப்பத்திற்கு உகந்தனவாக இருக்கின்றனவா என்பதை அறிந்துகொள்ளவும் தேர்தல்கள் நடக்கின்றன. லவல் (Lowell) குறிப்பிடுகிறபடி 'பிரச்சினைகளுக்கு 'ஆம்' 'இல்லை' என்று கூறுபவைதான் தேர்தல்கள். ஆனாலும் ஒருவர் அபிப்பிராயத்தை வெளியிடுவதற்கு வேறுபல வழிகளுமிருக்கின்றன.' ஒரு குறிப்பிட்ட அரசாங்க நடவடிக்கைக்கு எதிராக நடக்கும் கூட்டத்தில் கலந்து கொள்வதானது, குறிப்பிட்ட அபேட்சகரை எதிர்த்து வாக்களிப்பதைப்போலவே மிகவும் ஆற்றலுள்ளதாகும். இதைப்போன்றே ஒரு கொள்கையை ஆதரித்தோ அல்லது எதிர்த்தோ செய்யப்படும் தொழிற்சங்கத் தீர்மானம் அல்லது பத்திரிகை ஆசிரியருக்கு எழுதப்படும் கடிதம் முதலியன ஆற்றலுள்ளனவாகும். முக்கியமாகத் தேவையான காரியம் அரசாங்கம் மக்கள் என்ன நினைக்கிறார்கள் என்பதைத் தெரிந்துகொள்ளவேண்டும் என்பதுதான். பேராசிரியர் காட்லின் (Catlin) குறிப்பிடுகிறபடி, 'வாக்களிப்பது என்பது ஓர் அபூர்வமானதும் பெருமிதமானதுமான ஒரு பணியாகும். ஆனால் அது ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு மணி நேரத்திலும் நடைபெற்று

வருகிறது.' நாம் பேசுவது, செய்வது ஒவ்வொன்றும் பிரச்சினைகளின்மீதும், மனிதர்மீதும் எப்போதும் நம்முடைய முடிவுகளைத் தெரிவிப்பனவாகவே அமைந்திருக்கின்றன. இதன்மூலம் இறுதியாக முடிவு செய்யும் பொதுமக்களின் தீர்ப்பு வளர்ச்சியுறத் துணைபுரிகிறோம்.

வாக்காளர் தமது கருத்தை வெளியிடும் ஒரே சாதனம் வாக்குத்தான் என்பது இல்லையெனினும் அது மிக முக்கியமான சாதனமாகும். ஏனெனில் அதன் மூலமாகத்தான் வாக்காளர் பிரதிநிதியைத் தேர்ந்தெடுத்துத் தமது கருத்தை வெளியிட முடிகிறது. ஒரு தேர்தலுக்குப்பிறகு அடுத்த தேர்தல் வரையில் நடைபெற்ற செயல்களைப்பற்றி அவர் என்ன நினைக்கிறார் என்பதையும் வாக்களித்தல் வெளிப்படுத்துகிறது. செயல்கள் முன்னர் நடைபெற்ற முறையிலேயே நடைபெறட்டும் என்றோ அல்லது மாற்றம் தேவையென்றோ தமது விருப்பத்தை வாக்களிப்பின் மூலமாக வாக்காளர் தெரிவிக்கிறார். தேர்தல் அனுபவங்களிலிருந்து தேர்வாளர்கள் பொதுவாக ' ஆம் ' என்று சொல்வதைக்காட்டிலும் ' இல்லை ' யென்று சொல்வதே வழக்கமாக இருக்கிறது என்று நாம் அறிகிறோம். புகழ்வதைவிடக் குறை சொல்வது தேர்வாளருக்கு இலகுவானது என்று அறிகிறோம். எனவே புது மனிதர்களையும், புதிய திட்டங்களையும் சோதித்துப் பார்க்கவே அவருடைய மனம் நாடக்கூடும்.[1] ஆகவே தேர்தலினால் ஏற்படும் அரசாங்க மாற்றங்கள் மக்கள் எதை விரும்புகிறார்கள் என்பதைக் காட்டிலும் எதை விரும்பவில்லை என்பதைத் தெளிவாகச் சுட்டிக்காட்டுகிறது. அல்லது வேண்டாத தேவைகளைத் தெரியப்படுத்துவதும் உணரச் செய்வதுமே வாக்காளர் தொகுதி, பிரதிநிதித்துவத்திற்கு அளிக்கும் அளிப்பாகும். எது உண்மையில் சாத்தியமானது என்பதை அது அறியாது.

எந்தத் தேர்தல் முறைக்கும் வயதுவந்தோர் வாக்குரிமை அடிப்படையானது. ஆனாலும் அதன் குறைபாடுகள் தெளிவாகத் தெரிபவை. எனவே அவற்றை ஒதுக்கி மறைக்கமுடியாது. போதாத அறிவு, சோம்பேறித்தனமான மனவெழுச்சி, குறுகிய காலத்தைப் பற்றி மாத்திரம் அறியும் அறிவு முதலியன வெறுப்பை விரைவில் தூண்டுகின்றன. பொதுமக்கள் அபிப்பிராயத்தை உள்ளடக்கிய

[1] பிரிட்டனில் வயதுவந்தோர் வாக்குரிமை உண்மையாக ஏற்பட்ட 1868ஆம் ஆண்டிற்குப்பிறகு 1885, 1900, 1910, 1918, 1935, 1950 ஆகிய ஆண்டுகளில் மாத்திரமே பதவியிலிருந்த அரசாங்கங்கள் நீடிக்கப்பட்டன. 1874, 1880, 1886, 1892, 1895, 1905, 1923, 1924, 1925, 1929, 1945 முதலிய ஆண்டுகளில் நடந்த தேர்தல்களில் எல்லாம் முன்பிருந்த ஆட்சியின் மீது கண்டனமாகவே அமைந்தன.

வாக்காளர் தொகுதியை அதன் முயற்சிகளுக்கே விட்டுவிடுவோமானால் அது மிகவும் ஆபத்தான சக்தியுடையதாகவும், அதே சமயத்தில் எத்தகைய ஆக்கவேலைக்கும் அல்லது கருத்தப்பட்ட கொள்கைக்கும் பயனற்றதாகவும் ஆகிவிடுதல் கூடும்.

## (iii) இரண்டாம் சபைகள்

### மேல்சபைகள்

நாம் இதுகாறும் கூறிவந்த பொதுமக்கள் சபையானது முழுப் பிரதிநிதித்துவ முறையையும் உள்ளடக்கியதாகாது. பாராளுமன்றங்கள் பலவற்றில் ' இரண்டாவது ' அல்லது ' மேல் ' சபை ஒன்று இருக்கிறது. இம் மேல்சபைகள் பலவித உருவமைப்புக்களில் தோன்றுகின்றன. பிரிட்டன் இன்னும் பரம்பரை மரபைச் சார்ந்த ' பிரபுக்கள் சபையை ' வைத்திருக்கிறது. ஃபிரான்சின் மூன்றும், நான்காம் குடியரசுகளில், வயதுவந்தோர் வாக்குரிமையால் தேர்ந்தெடுக்கப்பட்ட தல ஸ்தாபனங்கள் மேல்சபைக்குப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்தன. சில நாடுகளில் மக்கள் சபைகளால் இம் மேல் சபைகள் தேர்ந்தெடுக்கப்படுகின்றன. இன்றும் சில நாடுகளில் அடுத்த சபையைத் தேர்ந்தெடுக்கும் அதே வாக்காளர் தொகுதி, இச் சபைகளையும் தேர்ந்தெடுக்கின்றது. எனினும் வெவ்வேறு வகைகளில் வாக்காளர் தொகுதி அமைக்கப்படலாம். மன்னராட்சி நிலவிய இத்தாலியில் இச்சபை அரசரால் நியமிக்கப்பட்டு வந்தது. கனடாவிலும், ஜோர்டானிலும், இன்றும் அரசர்களால் நியமிக்கப் படும் முறை இருந்துவருகிறது.

கூட்டாட்சி அரசியல் அமைப்புக்களில் இரண்டாம் சபையானது பொதுவாகத் தனிநாடுகளின் பிரதிநிதியாகத் திகழ்கிறது. இது வழக்கமாகச் சமத்துவ அடிப்படையில் அமைக்கப்பட்டதாக இருக்கிறது. அடுத்த சபையானது மக்கள் எண்ணிக்கை அடிப் படையில் அமைக்கப்பட்டதாகவும் இருக்கிறது. எந்தக் கொள்கை அடிப்படையில் இரண்டாம் சபை தேர்ந்தெடுக்கப் படுகிறது என்பதைப் பொறுத்தே அதன் வெற்றியும் இருக்கும்.

இரு சபைகளின் அதிகாரங்களும் அதிக வேறுபாடுடையன. சில இரண்டாம் சபைகள், முதற்சபையின் அதிகாரங்களில் நிதி அதிகாரங்கள் சிலவற்றைத் தவிர, ஏனைய அதிகாரங்களை அப்படியே பெற்றிருந்தன. 1911 ஆம் ஆண்டுவரை இங்கிலாந்தின் பிரபுக்கள் சபையும், ஃபிரான்சின் செனட் சபையும் இதே மாதிரி எல்லா அதிகாரங்களையும் பெற்றிருந்தன. ஜனநாயக உணர்ச்சி வளர

வளர வரம்பிலாத் தடுப்பாணை அதிகாரங்களை அவை இழந்து விட்டன. இச் சபைகள் செய்யக்கூடியனவெல்லாம் ஒரு குறிப்பிட்ட காலத்துக்குக் கீழ்ச்சபையின் மசோதாவை நிறுத்திவைக்கலாம்; அல்லது திரும்பவும் பரிசீலனை செய்யவேண்டும் எனக் கூறலாம்.[1] சில நாடுகளில் இந்த மசோதாவை மக்கள் ஒப்பத்திற்கு (Referundum) விடவும் செய்வதுண்டு. அமைச்சரவையை மாற்றுகின்ற அதிகாரங்களையும் இச் சபைகள் இழந்துவிட்டன.

இரண்டாம் சபைகளின் அதிகாரங்கள் எல்லா நாடுகளிலும் வரையறைக்குள்ளாக்கப்பட்டிருப்பதால் இரு சபைகளுக்குமிடையே ஏற்படக்கூடிய முரண்பாடுகள் சுலபமாகத் தீர்க்கப்படுகின்றன. அவ்வாறு இரு சபைகளுக்குமிடையே முரண்பாடு ஏற்படுமாயின் அவற்றைத் தீர்ப்பதற்குப் பல உபாயங்கள் கையாளப்படுகின்றன. சில சமயங்களில் இரு சபைகளும் சேர்ந்து கூட்டாகக் கூட்டப் படுகின்றன. சில சமயங்களில் ஒரு புதிய கீழ்ச்சபை தேர்ந் தெடுக்கப்படுகிறது. இன்னும் சில சமயங்களில் மேல் சபைகளின் அங்கத்தினர் எண்ணிக்கை அதிகமாக்கப்படலாம். இரண்டாம் சபைகளில் பல தங்களுக்கென்றே சில பணிகளையுடையன. அமெரிக்க செனட்சபை உடன்படிக்கைகளுக்கு மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மையால் தனது ஒப்புதலைத் தருகிறது. சில நியமனங்களுக்குச் சாதாரணப் பெரும்பான்மையால் ஒப்புதல் தருகிறது. கிட்டத்தட்ட ஒவ்வொரு நாட்டிலும் நாட்டுத் துரோக வழக்குகளையும், உயர் அதிகாரிகள் அமைச்சர்கள் ஆகியோர் கடமை பிறழ்ந்ததாகக் கூறப்படும் வழக்குகளையும் மேல்சபை விசாரிக்கும் வழக்கம் இருந்து வருகிறது. கீழ்ச்சபை இக் குற்றச்சாட்டைச் செய்கிறது. மேல்சபை இதை விசாரணை செய்து நீதி வழங்குகிறது. இதைப் 'பெருங்குற்றச் சாட்டு' என்று அழைக்கின்றனர். பிரிட்டனி லுள்ள பிரபுக்கள் சபை பிரிட்டிஷ் காமன்வெல்த் நாடுகளின் நீதி மன்றங்களனைத்திலுமிருந்து வரும் மேல் முறையீடுகளை விசாரிக்கும் உயர்நீதிமன்றமாக விளங்குகிறது. சில டொமினியின் நீதி மன்றங்கள் தங்கள் வழக்குகளை இங்கு மேல்முறையீட்டுக்கு அனுப்புவ தில்லை.

பொதுமக்கள் பிரதிநிதித்துவம் மிகவும் அவசரக் கோலமுடையதாக இருந்து போகலாம். எனவே, அதைக்காட்டிலும் குறைந்த மனவெழுச்சியுள்ளதும் அதிக அனுபவமுள்ளதுமான சபை அதைத் தடுத்தாகவேண்டும் என்ற காரணத்திற்காக இரண்டாம் சபைகள்

[1] பிரிட்டனில் ஓராண்டுக் காலமும், ஃபிரான்சில் மூன்று மாத காலமும் மசோதாவை நிறுத்திவைக்கலாம். கனடா, அமெரிக்கா ஆகிய நாடுகளின் செனட் சபையின் அங்கீகாரம் எந்தவகை மசோதாவுக்கும் அவசியமாக இன்னும் இருக்கிறது.

இருத்தல் வேண்டும் என்று விவாதிக்கின்றனர்.[1] 'இரண்டாம் சபைகள் முதலாவது சபையோடு ஒத்துப்போகுமானால் அவை தேவையில்லாதவையாகும். அவைகள் ஒத்துப்போகவில்லையானால் பொதுமக்கள் விருப்பாற்றலுக்குக் குறுக்கே நிற்பதால் அவை அடக்கப் படவேண்டும்' என்று சீயஸ் பாதிரியார் (Abbe Sieyes) கூறிய கருத்தை இன்று ஒருவரும் ஒப்புக்கொள்வதற்கில்லை. கவனத்தோடு வரையறுக்கப்பட்ட அதிகாரங்களுடன் நன்றாக அமைக்கப்பட்ட இரண்டாம் சபையின் திருத்தங்கள், குற்றங்காட்டல் ஆகியவற்றால் நல்ல பயன் விளையக்கூடும் என்று எல்லோரும் ஒப்புக்கொள்வர். ஏனெனில், அவர்களது பரந்த அனுபவமும், அவர்களது பதவியின் நிலையான தன்மையும் இதற்கு உதவக்கூடும்.

தற்காலிகமாகத் தடை செய்துவைக்கும் மேல் சபையின் அதிகாரத்தை ஒப்புக்கொண்டாலும், அதன் அமைப்புப்பற்றி அதிக விவாதங்கள் எழுகின்றன. எல்லோருக்கும் திருப்தியளிக்கக்கூடிய வகையில் மேல்சபையை அமைப்பது மிகவும் கடினமே. நடுநிலை யான, அனுபவமிக்க மனிதர்களால் ஆன சபை தேவதைகளால் ஆன சபையாகத்தான் இருக்கமுடியும். நம்மைப் பொறுத்தவரை இரண்டு அம்சங்களைக்கொண்ட ஒரு சபையை ஏற்படுத்தலாம் என்று கருது கிறோம். எழுபது அல்லது எழுபத்தைந்து வயதுவரை பதவியிலிருக் கும்படி நிரந்தரமாகச் சிலரைத் தேர்ந்தெடுக்கலாம். பொதுவாக அரசில் மிக உயர்ந்த பதவிகள் வகித்தவர்களை இதற்கு நியமிக்கலாம். (கவர்னர்கள், தூதர்கள், சிவில் பிரிவின் தலைவர்கள், போர்ப் படை களின் தலைவர்கள், முன்னாள் பிரதம அமைச்சர்கள், அடுத்த சபையில் அங்கம் வகிக்காமல் இருந்தால் மேல்சபைக்கு நியமிக்கலாம்.) இவர்களில் ஐம்பது பேரை நியமிக்கலாம். இத்துடன் 200 அங்கத் தினர்களைத் தல ஸ்தாபனங்கள் ஆறு ஆண்டுக் காலத்திற்குத் தேர்ந்தெடுக்கலாம். இவர்களில் மூன்றில் ஒரு பாகம் இரண்டு ஆண்டுக்கு ஒருமுறை பதவி விலகும்படி வகைசெய்யலாம். அதிகாரங்களை யெல்லாம் இழந்து நின்ற ஃபிரஞ்சு செனட் சபை, நாம் பார்க்கக்கூடிய இரண்டாம் சபைகளைப் போலவே திறனுடைய தாக இருந்தது. இவ் வனுபவத்தின் அடிப்படையிலேதான் நாம் மேற்கூறிய கருத்தை வெளியிடுகிறோம்.

[1] ஒரே சபை அரசாங்கத்திற்குச் சாதகமான வாதங்களை லாஸ்கியின் 'Grammar of Politics' என்ற நூலில் காண்க.

## (iv) பாராளுமன்றத்தின் பணிகள்

### பட்ஜெட் - வரவு செலவுத் திட்ட மதிப்பீடு

பாராளுமன்றத்தின் பணிகளைப்பற்றி நாம் இப்பொழுது பார்க்கலாம். அதன் முதற்பணி ஓராண்டின் பட்ஜெட்டை (budget) அங்கீகரிப்பதாகும். இதன் துணையில்லாமல் அரசு யாதொரு வரியையும் விதிக்கமுடியாது. செலவிற்குப் பணமும் இராது. நிதி ஆண்டின் துவக்கத்தில் இது நடைபெறுகிறது. இது முடிந்தவுடன், கொள்கையளவில் பாராளுமன்றம் அடுத்த பன்னிரண்டு மாதங்களுக்குக் கூடாமல் இருக்கலாம். பாராளுமன்றங்கள் வழக்கமாக இரு கூட்டத் தொடர்களாக (sessions) கூடுகின்றன. அவைகள் ஆறுமாத காலத்திற்கும் குறைவாகவோ அல்லது சில சமயங்களில் அரையாண்டிற்கும் மேலாகவோ கூடுகின்றன. இவ்வாறு அவைகள் கூட்டப்பட வேண்டுமென வலியுறுத்துகின்றன. இவ்வாறான வழக்கமான கூட்டங்களை எந்த அரசாங்கத்தினராவது கூட்டாமலிருந்தால் எழுதப்பட்ட அரசியல் அமைப்புச் சட்டத்தை மீறியவர்களாவார்கள். அப்படி ஆகவில்லையெனில், நிதி அளிப்பு அங்கீகாரத்திற்காக அழைக்கப்படும்போது அரசாங்கத்திற்களிக்கும் ஆதரவை முழுவதாக நிறுத்திவிடுவார்கள்.

### பொதுக் கட்டுப்பாடு

பட்ஜெட்டை அங்கீகரிப்பதைத் தவிர அரசாங்கம் வேறு என்ன செய்கிறது? முதலாவது, அது எவ்வாறு ஆட்சி நடத்துகிறது என்பதைக் கவனித்துக்கொள்கிறது. ஆட்சித் துறையில் வழக்கமாக நடைபெறும் காரியங்களைப்பற்றிக் கேள்விகள் கேட்பதன்மூலம் இதைச் செய்கிறது. மேலும், அதிகாரிகள் தங்கள் அதிகாரத்தை மிகையான முறையில் பிரயோகிப்பதாகக் கருதும்போது அதை ஆட்சேபம் செய்வதன்மூலம் இதைச் செய்கிறது. அமைச்சர்கள் தங்கள் துறைகளின் பணிகளை விளக்கவேண்டும் என்று அது எதிர்பார்க்கிறது. வெளிநாட்டாரோடு செய்துகொண்ட உடன்படிக்கைகளை அங்கீகரித்தலும் இதன் பணியாகும். சில நாடுகளில் அதிகாரிகளின் நியமனங்கள்கூடப் பாராளுமன்றத்தின் ஒப்புதல் பெறவேண்டும் என்று இருப்பதை ஏற்கெனவே நாம் பார்த்தோம். நாட்டின் மக்கள் என்ன நினைக்கிறார்கள், என்ன விரும்புகிறார்கள், சிறப்பாக எதைப் பொறுத்துக்கொள்ளமாட்டார்கள் என்பன போன்ற காரியங்களை அரசாங்கத்திற்கு அந்த அதிகாரிகள் எடுத்துச் சொல்கின்றனர்.

## அமைச்சரவை முறை

பல நாடுகளில் அரசாங்கத்தை நடத்தும் மேலாண்மையை ஆக்குவதும், ஆதரிப்பதும் பாராளுமன்றத்தின் பணியாக இருந்து வருகிறது. இது வழக்கமாக அமைச்சரவையாகவோ அல்லது முதல் மந்திரிகள் சேர்ந்த குழுவாகவோ அமைந்திருக்கும். வாக்காளர் தொகுதியின் விருப்பாற்றலைப் பாராளுமன்றம் பிரதிபலிப்பதால், அரசாங்கம் பாராளுமன்றத்தின் விருப்பாற்றலைப் பிரதிபலிக்க வேண்டும். அல்லது பாராளுமன்றத்தின் பெரும்பான்மையின் பிரதிநிதியாக இருக்கவேண்டும். அரசாங்கம் 'பாராளுமன்றத்தின் நம்பிக்கையைப்' பெற்றதாக இருக்கவேண்டும். பொதுவாக அமைச்சரவை முறை என்று அழைக்கப்படும் இம் முறையில், 'பாராளுமன்றத்தின் துணையோடு அரசாங்கம் நாட்டின் பொதுத் துறை ஆட்சியை நடத்துகிறது. அரசாங்கத்தின் நடவடிக்கைகளைப் பாராளுமன்றத்தின் பொதுவான கட்டுப்பாட்டிற்குள் நடைபெறுவதன்மூலம் இவ்விதமாகத் துணைபுரிய முடிகிறது. அரசாங்கக் கொள்கைக்கு ஆதாரமாக இருக்கும் கருத்துக்கள் பாராளுமன்றத்தின் பிரதானமாக நிலவும் கருத்துக்கு ஒத்தனவாக இருக்கின்றன என்று இதன்மூலம் உத்தரவாதம் அளிக்க முடிகிறது. அரசாங்கத்தின் அரசியல் பொறுப்பு பாராளுமன்றத்திடம் இருப்பது, பாராளுமன்றத்தின் கட்டுப்பாட்டை ஆற்றலுள்ளதாக்குகிறது. நாட்டிலும், பாராளுமன்றத்திலும் அதற்குப் பெரும்பான்மை ஆதரவு இருக்க வேண்டும் என்பது முக்கிய நிபந்தனையாகும்.'[1]

## 'ஜனாதிபதி' முறை(Presidential System)

ஜனநாயக அரசாங்கத்தில் பொது 'ஜனாதிபதி முறை' என்று அழைக்கப்படும் அரசாங்கத்துக்கும், பாராளுமன்றத்தின் பெரும்பான்மைக்கும் அமைச்சரவை முறையில் உள்ளது போன்ற முழுமையான தொடர்பு இருப்பதில்லை. இதன் பிரதான எடுத்துக்காட்டு அமெரிக்காவாகும். சுவிட்சர்லாந்திலும், சில தென் அமெரிக்க அரசுகளிலும் இம் முறை வழக்கிலிருக்கிறது. நிர்வாகத்தின் தலைவராக ஜனாதிபதியை நான்காண்டுகளுக்கொருமுறை தேர்ந்தெடுக்கிறார்கள். பிரதிநிதிகள் சபை (House of Representatives)யை இரண்டாண்டுக் காலத்திற்குத் தேர்ந்தெடுக்கிறார்கள். இவ்வாறாக ஜனாதிபதித் தேர்தலின்போது பிரதிநிதிகள் சபையும் தேர்ந்தெடுக்கப்படுகிறது. ஆகவே, அவருடைய பதவிக்காலத்தின் முதலிரண்டு

[1] L. Duguit. 'Revue politique et Parlementaire' 1900.

ஆண்டுகளில் அவரைத் தேர்ந்தெடுத்த கட்சியே சபையிலும் பெரும் பான்மையாக இருக்கக்கூடும். ஆகவே, அவருக்குச் சபையின் ஆதரவு முதலிரண்டு ஆண்டுகளுக்குக் கிடைக்கும். ஆனால், பின் இரண்டு ஆண்டுகளின்போது வேறு சபை தேர்ந்தெடுக்கப் படுகிறது. அது ஒரு வேளை அவரை ஆதரிக்காமல் இருந்துவிடக் கூடும். எனவே சபையின் பெரும்பான்மை ஆதரவு அவருக்குக் கிடைக்காமற் போகலாம். அவருடைய ஒவ்வொரு முயற்சிக்கும் அது இடையூருக இருக்கலாம். அதே சமயத்தில் செனட் சபையின் மூன்றிலொரு பங்கு இரண்டாண்டுகளுக்கு ஒரு முறை தேர்ந் தெடுக்கப்படுகிறது. எனவே, செனட் சபையானது ஜனுதிபதியோடு சுமுகமாக இல்லாது போகலாம். அல்லது பிரதிநிதிகள் சபையின் பெரும்பான்மையோடு அல்லது இரு சாராரிடமும், சுமுகமான உறவுகள் இல்லாமற் போகலாம். அமைச்சரவை முறை மூலமாகப் பெறப்படும் அரசாங்க-பாராளுமன்றக் கூட்டுறவு இம் முறையில் இருப்பதில்லை.

அமைச்சரவை முறை, ஜனுதிபதி முறை ஆகிய இரு முறை களிலும் பாராளுமன்றம் பிரதான இடம் பெறுகின்றது. அரசின் நடவடிக்கை ஒவ்வொன்றிலும் அதற்குப் பங்குபெற உரிமையுண்டு. பாராளுமன்றத்தின், இந்த முதன்மை முன்பெல்லாம் அரசியலில், அதிகாரப் பிரிவினைக் கோட்பாட்டை மிக முக்கியக் கருத்தாகக் கொண்டதின் பிழையை இது தெளிவாகக் காட்டுகிறது.

## அரசாங்க அதிகாரங்களை வளப்படுத்தல்

அதிகாரங்களைப் பிரயோகிக்கும் நிறுவனங்களை அவைகளின் பணி களுக்குத் தக்கவாறு மூன்று வகையாகப் பிரிக்கலாம். சட்ட மியற்றும் துறை, நிர்வாகத் துறை, நீதித் துறை என்று மூன்று துறைகளைக் காண்கிருேம். முதலாவது, அரசு எவ்வாறு நடத்தப்பட வேண்டும் என்று விதிகளை வகுக்கவும், சட்டங்கள் இயற்றவும் தேர்ந்தெடுக்கப்பட்ட சபைகள் இருக்கின்றன. இரண்டாவதன் கீழ் அரசின் தலைவரிலிருந்து முடிவுகள் நிறைவேற்றப் பெறுகின்றனவா என்று பார்க்கும் கீழ்த்தர அதிகாரிவரை வருகிருர்கள். மூன்ருவதின் கீழ் நீதி வழங்கும் பணியிலீடுபடுபவர்கள் வருகிருர்கள். இவர்களது பணியானது விதிகள் பின்பற்றப்பட்டிருக்கின்றனவா, என்று பார்ப்பதிலும் இவற்றைப் பின்பற்ருதவர்களைத் தண்டிப்பதிலும் அடங்கும்.

இந்த வகைப்படுத்தலானது ஒரு கொள்கை (சித்தாந்தம் என்றே அழைக்கலாம்) யோடு சேர்ந்தே வெளியிடப்படுகிறது.

இந்த மூன்று அதிகாரத் துறைகளும் திட்டமாகப் பிரிவினை செய்யப்பட்டிருக்கவேண்டும் என்று கூறுகிறது இச் சித்தாந்தம். அதாவது, ஒரே நபராலோ அல்லது அதே சபையாலோ இவ் வதிகாரங்கள் பயன்படுத்தக்கூடாது என்று கூறுகிறது. ஒவ்வொரு துறைக்கும் வரையறுக்கப்பட்ட எல்லைவட்டம் உண்டு. அதற்குள்ளாகவே அவை செயலாற்றவேண்டும். அதற்குள்ளாகவே அவை முழுச் சுதந்தரமாக இயங்கவேண்டும். மற்ற துறைகளில் அவை தலையிடக் கூடாது. அதுபோன்றே வேறு துறைகளும் இதற்குள் நுழையக் கூடாது. அப்படி இருப்பது ஜனநாயக சுதந்தரத்திற்கு அவசியமான ஆதாரமாகும் என்று இச் சித்தாந்தம் கூறுகிறது.[1]

இறைமைக் கோட்பாடு எவ்வளவு குழப்பத்தையும் உண்மையற்ற நிலையையும் உண்டாக்கியதோ, அவ்வளவு இக் கோட்பாட்டாலும் விளைந்தன. 'Esprit des lois' (1748)[2] என்ற நூலை எழுதிய மான்டெஸ்கியூவால் (Montesquieu) இந்தக் கோட்பாடு வெளியிடப்பட்டதாகக் கூறப்படுகிறது. அச் சமயத்தில் இங்கிலாந்தின் அரசியலமைப்பு இயங்கும் தன்மையைச் சரிவரப் புரிந்துகொள்ளாத காரணத்தால் இவ்வாறு எழுதினர் என்றும் கூறப்படுகிறது. உண்மையில் மான்டெஸ்கியூ அதிகாரப் பிரிவினையைப்பற்றிக் கூருமல் அதிகாரப் பகிர்வுபற்றித்தான் எழுதியிருக்கிருர். ஒரு நபரோ அல்லது தொகுதியோ எல்லா அதிகாரங்களையும் ஏகபோகமாக்கிக்கொள்ளும் அபாயத்தைக் குறித்தே அவர் அதிகக் கவனம் செலுத்தினர். 'அதிகாரங்கள் பகிர்வு செய்யப்படவேண்டும். கொடுங்கோலாட்சி வராமல் தடுக்கவும், சுதந்தரம் காப்பாற்றப்படவும் சிறந்த வழி, இந்த மூன்று அதிகாரங்களில் ஒவ்வொன்றும் மற்ற இரண்டு அதிகாரங்களும் தங்கள் பணிகளைச் சரிவரச் செய்கின்றனவா என்று பார்த்துக்கொள்வதோடு, மற்ற இரண்டையும் அடக்கியும் வைத்துக்கொள்ளவேண்டும். இது ஓரளவுக்கு ஒன்றின் எல்லையைவிட்டு மற்றொன்றின் எல்லைக்குள் வருவதால் முடியுமே

[1] அமெரிக்காவின் பிரதம நீதிமன்றம் இதற்குக் கீழ்க்கண்டவாறு விளக்கம் கூறியுள்ளது: 'நிர்வாகம், சட்டமியற்றல், நீதி வழங்கல் என்ற முப்பெரும் துறைகளாக அரசாங்கத்திற்கு அளிக்கப்பெற்றிருக்கும் அதிகாரங்கள் பிரிக்கப் பெற்றிருப்பது அமெரிக்க அரசியல் அமைப்புச் சட்டத்தின் பிரதான சிறப்புகளில் ஒன்ருகக் கருதப்படுகிறது. இந்தத் துறைகளுக்கடுத்த மணிகளும் தனித்தனியான பணியாளரிடம் ஒப்படைக்கப் படவேண்டும், இந்தத் துறைகளைப் பிரிக்கும் கொள்கைகள் மிகத் தெளிவாகவும், ஆழ்ந்தும் விளக்கப்படவேண்டும்.

[2] 'சட்டத்தின் உட்பொருள், என்று மொழிபெயர்ப்பது (The Spirit of the Laws) என்பதைக் காட்டிலும் சிறப்பாக இருக்கும். 'உணர்ச்சி,' என்ற சொல் முழுப் பொருளையும் வெளியிடுவதாக இல்லை.

யொழிய நெகிழாத பிரிவினையினுல் அன்று. ஏனெனில், தங்களது பணிக்கே பிரதான பொறுப்புடையதா யிருந்தாலும், ஒவ்வொன்றும் மற்ற இரண்டின் பணிகளிலும் அக்கறை கொண்டிருக்கும்.

## மேலாண்மையின் ஒருமைப்பாடு

மான்டெஸ்கியூ என்ன கருத்துக்கொண்டிருந்தார் அல்லது என்ன கொண்டிருக்கவில்லை என்றெல்லாம் பேசுவதைத் தவிர்த்து முக்கிய விவாதத்திற்கு வருவோம். இந்தவிதமான பாகுபாடு வசதியானதுதான் என்ருலும், அதிகாரம் ஒன்று என்பதை நாம் மறத்தல் கூடாது. ஆகவே, எவ்விதமான வகைப்படுத்தலும் செயற்கையானதாகவும், நிலையற்றதாகவுமே இருக்கும். ஓர் அரசு உண்மையிலேயே ஒற்றுமையுடையதாயிருக்குமாயின் அதன் அதிகாரம் ஒரே ஆதாரத்திலிருந்தே வரமுடியும். அதை எவ்வாறு வேண்டுமாயினும் பகிர்வு செய்துகொள்ளலாம். ஏனெனில், எங்காவது நெருக்கடி நேருமாயின் அதிகாரத்தின் ஆதாரத்துக்குத் திரும்புவது எப்பொழுதும் சாத்தியமாகும். பிரதிநிதித்துவ சபைகள் சதா காலமும் நிர்வாகத்தைக் கட்டுப்படுத்தியும், அடக்கிக்கொண்டுமிருப்பது பழைய கொள்கையாகிய அதிகாரப் பிரிவினைக்கொள்கையிலிருந்து மிகவும் வேறுபட்ட ஒன்ருகும். இது உண்மையில் சட்டமியற்றும் துறை நிர்வாகப் பொறுப்பில் பங்குபெறுவது என்றுதான் ஆகிறது.

சட்டமியற்றும் மேலாண்மை ஒன்றுதான் சட்டமியற்ற முடியும் என்பதுமில்லை. முதலாவதாக, பெரும்பாலான சட்டங்கள் நிர்வாகத்தினரிடமிருந்து தோன்றுகின்றன என்பது நாம் அறிந்த உண்மையாகும். அதாவது கேட்கப்பெற்ரு லொழிய, பாராளு மன்றங்கள் சட்டமியற்றுவ தில்லை. பிரேரேபிக்கப்பட்ட மசோதாக்கள் முழு விவாதத்திற்குள்ளாவதோடு, அவர்களால் திருத்தங்களும் செய்யப்படலாம்.[1] பல சட்டங்கள் நிர்வாகத்தினரிடமிருந்து தோன்றுவது மாத்திரமல்லாமல் அவைகள் நிர்வாகத்தினரின் பொறுப்பாகவும் இருக்கின்றன. அமைச்சர் ஆணைகள் அல்லது அரசாங்க உத்தரவுகள் (அமைச்சரவையின் ஆணைகள்) சட்டமியற்றும் அதிகாரத்தோடு எந்தவிதத் தொடர்புமில்லாதவை யெனினும், அவையும் சட்டங்களைப் போன்றனவேயாகும்.

[1] இவ்வாருன் சட்டமியற்றுவதற்கு நிர்வாகத்தின் ஏகபோகமான பாராளுமன்றத்தின் வேலைப் பளுவினுல் நேர்வதே. அரசாங்கத்தின் தீர்மானங்களே அதிகமாக இருப்பதனுல் பாராளுமன்றத்தால் தனியாரின் தீர்மானங்களுக்காக நேரம் ஒதுக்க முடிவதில்லை. கொள்கையை வெளியிடுவதாகச் சட்டம் இருத்தல் வேண்டுமெனின் அது நிர்வாகத்தின் பொறுப்பில் இருக்க வேண்டும் என்ற உண்மையினுலும் இது நேருகிறது.

எனவே, பாராளுமன்ற அரசாங்கத்தில் நிர்வாகம், சட்டமியற்றல் ஆகிய இரு அதிகாரங்களையும், அதன் பிரதான உறுப்புக்களாகிய பிரதிநிதித்துவ சபைகளும், அமைச்சரவையும் பங்கிட்டுக்கொள்கின்றன. மீண்டும் டூகியுட் (Duguit) அவர்களிடமிருந்து மேற்கோள் காட்டலாம். 'பாராளுமன்ற முறையில் அதிகாரம் இரு உறுப்புக்களைச் சேர்ந்திருக்கிறது. அவை இரண்டும் தொடர்ந்து கூட்டுறவான முறையில் பணியாற்றிக்கொண்டும் ஒன்றையொன்று தங்கள் நடவடிக்கைகளால் கட்டுப்படுத்திக்கொண்டும் இருக்கின்றன. இதில் ஒன்று தேர்ந்தெடுக்கப்பட்ட, கூட்டுறுப்பான பாராளுமன்றம் ஆகும். மற்றது தனியுறுப்பான அரசாங்கமாகும். இது அரசின் தலைவரில் அடங்கும்.'

அரசாங்கத்தின் துணைகொண்டு பாராளுமன்றம் சட்டமியற்றுகிறது. அரசாங்கம் மசோதாக்களை முன் மொழிவதிலும், அவர்களுக்காக நடைபெறும் விவாதங்களில் கலந்துகொள்வதிலும், இறுதியாக அவற்றைச் சட்டமாகப் பிரகடனம் செய்வதிலும் அரசாங்கத்தின் துணை காணப்படுகின்றது. அரசாங்கத்திற்கு ஓரளவு தடுப்பாணை அதிகாரமும் இருக்கிறது.

## பாராளுமன்றமும், சட்டமியற்றலும்

ஜனநாயகத்தில் சட்டமியற்றும் சபைகளின் முக்கியப்பணி சட்டமியற்றுவதாகவே இன்னும் இருக்கிறது. ஏனெனில், சட்டமியற்றுவதன் மூலமாகத்தான் அரசியல் அமைப்பில் மாற்றங்களைச் செய்ய முடிகிறது என்பது முக்கியமாகக் கவனிக்கத்தக்கது. ஏனெனில், சூழ்நிலைக்குத் தக்கவாறு மாற்றிக்கொள்வது ஜனநாயகத்தின் சாரமாகும். நூறு ஆண்டுகளுக்கு முன் பிரிட்டிஷ் பாராளுமன்றம் இயற்றிய சட்டங்களோடு சமீப காலத்தில் ஓராண்டில் இயற்றப்பட்ட எண்ணற்ற சட்டங்களை ஒப்பிட்டுப்பார்த்தால் இது தெரியவரும். எக் கட்சியைச் சேர்ந்ததெனினும், ஒவ்வோர் அமைச்சரவையும் சாதாரண காலத்தில் கூடும் ஒவ்வொரு பாராளுமன்றக் கூட்டத்தொடரிலும் ஒரு முக்கியமான மசோதாவையாவது சட்டமாக இயற்றுவதை எதிர்பார்க்கிறது. எனவேதான், அரசாங்க அலுவல் திட்டத்திற்கு வெளியில் தனியாரின் மசோதாக்களுக்கு நேரமே இருப்பதில்லை. இதுதான் தனி அரசாங்கத்தின் நியாயமான குறையாகும். ஏனெனில், அவர் எவ்வளவுதான் பயனுள்ள மசோதாவைக் கொண்டுவர நினைத்தாலும் அது சாத்தியப்படுவதில்லை. சாதாரண அங்கத்தினர் உண்மையில் சட்டமியற்றுபவராகமுடியாது. ஏனெனில் அவரது சட்டமியற்றும் பணி, அவரது கட்சி பதவியிலிருக்குமானால், கட்சியின் தீர்மானங்களை ஒப்புக்கொள்வதிலும், எதிர்க் கட்சியினால்

அரசாங்கம் கொண்டுவரும் தீர்மானங்களை எதிர்ப்பதிலுந்தான் அடங்கி இருக்கிறது.[1] அவரது உண்மையான பணி பொது மக்களின் சார்பாகக் காவற்காரராகச் செயல் புரிவதேயாகும். 'குறை பாடுகளை வெளியிடக்கூடிய இடமாக இருப்பதுதான் பாராளுமன்றம் தரும் ஒரு நன்மை' என்று பெர்னுட்ஷா (Bernard Shaw) சில ஆண்டு களுக்கு முன் கூறினர்.[2] இது மிகையான கூற்ருகும். விவாத, ஆலோசனை மன்றமாக அது விளங்குவதே அதன் பெரிய பயனுகும். தற்காலப் பாராளுமன்றங்களின் அடிப்படையான பிரதிநிதித்துவத் தன்மையை இந்தக் குறிப்பு நமக்கு நினைவூட்டுகிறது. அவைகள் சுதந்தரமாக இயங்கும்போது சர்வாதிகாரத்துக்கும், எதேச்சாதி காரத்துக்கும் எதிரான பாதுகாப்பாக அமைகிறது.

## மக்கள் ஒப்பமும், துவக்கப் பொறுப்பும் : (Referendum and Initiative)

அமைச்சரவை முறை, ஜனதிபதி முறை ஆகிய முறைகளின் ஆதாரமாகிய பாராளுமன்றத்தின் முதன்மை சுவிட்சர்லாந்திலும், ஃபிரான்சின் நான்காவது குடியரசிலும் உபயோகித்த மக்கள் ஒப்பம், துவக்கப்பொறுப்பு என்ற உபாயங்களால் பலவீனப்படுத்தப் படுகிறது. சில நடவடிக்கைகளின்மீது நேரடியாக மக்கள் ஒப்புக் கொண்டோ, அல்லது எதிர்ப்புத் தெரிவித்தோ பொதுமக்கள் வாக்களிப்பது என்பது இதன் பொருளாகும். அரசியல் அமைப்புத் திருத்தங்கள் அனைத்தும் இவ்வாறே செய்யப்பட வேண்டும். 50,000 குடிமக்களுக்கான பாராளுமன்றத்தின்முன் இருக்கும் மசோதா மக்களுடைய ஒப்பத்திற்கு விடப்படவேண்டும் என்று கோரமுடியும். நிரந்தர இயல்புகொண்ட எந்தப் பன்னுட்டு உடன்படிக்கைகளும் கட்டாயமாக மக்கள் ஒப்புதலுக்கு அனுப்பியாகவேண்டும். (உதாரணமாகச் சுவிட்சர்லாந்துச் சர்வதேச சங்கத்தில் சேர்ந்தது

[1] சமீப காலங்களில் தனி அங்கத்தினர்கள் கொண்டுவந்த தீர்மானங்களில் சட்டமானவைகளில் முக்கியமானது 'பகல் நேரத்தை மிச்சப்படுத்தும் மசோதா' (Daylight Saving Bill) விவாகரத்துச் சீர்திருத்த மசோதாவும் ஆகும் இதில் முன்னதாகக் கூறப்பட்டது திரு. வில்லியம் வில்லெட் (Mr. William Willett) சில ஆண்டுகளுக்கு முன்னர்க் கொணர்ந்த தீர்மானங் களின் அடிப்படையிலும், பின்னதாகச் சொல்லப்பட்டது சர் சுலன் ஹெர்பர்ட் அவர்களின் தீர்மானத்திலும் ஏற்பட்டன.

[2] இன்றும் சமீபத்தில் அவரது நூலாகிய 'Everyman's Political What's What'ல் கூறுகிருர். 'துன்பகரமான, வருந்துகிற சாதாரண மக்களின் சபையாகப் பாராளுமன்றம் இருக்கவேண்டும். அவர்களுக்குக் குறை கூறவும், குற்றம் காணவும், கண்டிக்கவும், கோரவும், ஆலோசனை கூறவும், முதல்தரத் தகவல்களை அளிக்கவும், விவாதிக்கவும், தீர்மானங்களை முன்மொழியவும், அவற்றின்மீது வாக்கெடுக்கவும் பூரண உரிமை இருக்கவேண்டும். சுருங்கச் சொல்லின், பொதுமக்கள் உணர்ச்சியோடு அரசாங்கத்தை ஒன்றச் செய்வது என்பது பொருள்

மக்கள் ஒப்புதலுக்கு விடப்பட்டது.) இரண்டாவது உபாயமாகிய துவக்கப் பொறுப்பின்படி, 50,000 குடிமக்கள் பாராளுமன்றத்திடம் தாங்கள் விரும்பும் ஒரு சட்டத்தை ஏற்படுத்தக் கோரலாம் என்பது. அப்படி இயற்றப்படும் சட்டம் பின்னர் மக்கள் ஒப்புதலுக்கு அனுப்பப்பட வேண்டும். (இவ் விரண்டு வகை உபாயங்களும் சுவிட்சர்லாந்துக் கூட்டரசின் மத்திய அரசாங்கத்திலும், காண்டன் களின் அரசாங்கத்திலும் உள்ள அரசியல் அமைப்புக்களில் பயன் படுத்தப்படுகின்றன. இது சாதாரணமாக 'ஆம்' அல்லது 'இல்லை' என்று சொல்லக்கூடிய காரியங்களின்மீது மாத்திரமே செய்யக்கூடும். பாதி ஒப்புக்கொண்டும் இன்னொரு பாதியை ஒப்புக் கொள்ளச் சில நிபந்தனைகளும் விதித்தால் இந்த முறை பின் பற்றப்பட முடியாது. சுவிட்சர்லாந்தில் பொதுவாக இதன் விளைவு மிகவும் பழைமையை விரும்புவதாகத்தான் இருக்கிறது. ஏனெனில் பெரும்பான்மையான தீர்மானங்கள் மக்களால் ஒப்புக்கொள்ளப் படவில்லை. ஃபிரான்சில் இதுவரை இரண்டே முறைகள்தான் தங்களது புதிய அரசியல் அமைப்பை ஏற்றுக்கொள்வதற்காகப் பயன்படுத்தப்பட்டன. முதல் தடவையில் அளிக்கப்பட்ட அரசியல் அமைப்பை மக்கள் நிராகரித்தனர். அதை மாற்றி வேறு அமைப்பாக இரண்டாவது முறை கொண்டுவரப்பட்டபோது மக்கள் ஒப்பந் தந்தனர். இதுவே ஃபிரஞ்சு அரசியல் அமைப்பாகியது. பிரதி நிதித்துவ முறையைக் காட்டிலும் இந்த முறை அதிக ஜனநாயக மானதாகத் தோன்றலாம். ஆனல் அடிக்கடிப் பாராளுமன்ற முடிவு களுக்குப் பதிலாக இம் முறை உபயோகிக்கப்பட்டால் தேசீயப் பிரதி நிதித்துவச் சபைகளின் அதிகாரத்தையும், அந்தஸ்தையும் குறைப் பனவாக இவை இருக்கும்.

## பாராளுமன்ற அங்கத்தினர்களின் பொறுப்புக்கள்

கேள்விகள் கேட்பதும், பட்ஜெட்மீதும் பொதுத் தீர்மானங்கள் மீதும் விவாதிப்பதும் மாத்திரம் ஒரு பாராளுமன்ற அங்கத்தினரின் வேலையன்று. நாம் முன்னர்க் குறிப்பிட்டபடிக் கமிட்டிக் கூட்டங்களில் அவர் கலந்துகொள்ளவேண்டும். இக் கமிட்டிகள் (committees) பலவகையானவை. குறிப்பிட்ட மசோதாவை முன்னர் ஆய்வதற்காக இருக்கலாம். சில கமிட்டிகள் நிரந்தரமானவை. இவை பொதுவாக அரசின் முக்கியத் துறைகள் ஒவ்வொன்றுக்கும் ஒன்ருக இருப்பதுண்டு. அவர்கள் துறை சம்பந்தப்பட்ட காரியங் களையும் மசோதாக்களையும் ஆராய்வது அவர்களின் வேலை. பல பாராளுமன்றங்களில் பெரும்பாலான வேலைகள் இந்தக் கமிட்டி களிலேதான் நடைபெறுகின்றன. நிர்வாகச் சட்டமியற்றும் பணிகளைப் பிரிக்கமுடியாது என்பதற்கு இதுவும் ஓர் எடுத்துக்

காட்டாகும். ஏனெனில் அரசின் நடவடிக்கைகள் ஒவ்வொன்றிலும் நுழைந்து, விசாரணை செய்ய இவர்களுக்கு உரிமையுண்டு. இவர்கள் அரசாங்கத்தின் உண்மையான பதிலாட்கள் (agents) ஆவார்கள்.

ஆனால் ஒரு பிரதிநிதியின் பொறுப்பு பாராளுமன்றத்தோடு முடிவுறுவதில்லை. தம்முடைய வாக்காளர் தொகுதியில் அரசாங்கத்தின் கொள்கையை விளக்கவும் அவர் கடமைப் பட்டிருக்கிறார். இதன் மூலமாக நாட்டில் நடைபெறுவதை அவர்களுக்கு எடுத்துச் சொல்வதோடு அவர்களது தொடர்ச்சியான ஆதரவையும் (அல்லது எதிர்ப்பையும்) பெறுகிறார். தம்முடைய தொகுதியில் என்னென்ன நடைபெறுகின்றன என்பதை அரசாங்கத் துக்கும் அவர் தகவல் அளிக்கவேண்டும். கொள்கைகள், நிகழ்ச்சிகள் ஆகியவைகளுக்கு எதிராக மக்களின் அபிப்பிராயம் எப்படி இருக்கிறது என்பதையும் அரசாங்கத்துக்கு அவர் அறிவிக்கவேண்டும். அவர் அதிகாரத்தின் கருவூலமாகிய மக்களையும், அவர்களின் பதிலாளாகிய அரசாங்கத்தையும் இணைக்கும் ஒரு பதிலாளாக விளங்குகிறார். (agent de liaison), ஆகவே ஒவ்வொரு கட்டத்திலும் பாராளுமன்ற மானது மக்களின் விருப்பாற்றலை நடைமுறைக்குக் கொண்டுவருவ தாகவும், தவிர்க்கமுடியாத பிரதிநிதித்துவமாகவும் விளங்குகிறது.

பாராளுமன்றத்தின் முதன்மை காலத்திற்குக் கட்டுப்பட்டது என்பதை மறந்துவிடக் கூடாது. சில ஆண்டுகளுக்குப் பிறகு சபையோ அல்லது மன்றமோ கலைக்கப்படலாம். இதைக்காட்டிலும் விளக்கமாக விவரிக்கக்கூடிய சொல் தேவையில்லை. சூரியனுக்கு முன்பாகப் பனிப்படலம் கலந்து மறைவதுபோல அல்லது மேகத்தைப்போல, சபையும் கலைக்கப்படுகிறது. இதை அதன் அங்கத்தினர்கள் நன்றாக நினைவில் கொள்ளவேண்டும். சில மடங்களில் துறவிகள் தாங்களும் ஒருநாள் இறந்தாகவேண்டும் என்பதை நினைவு கூரும்படிப் பக்கத்திலேயே சவப்பெட்டியை வைத்திருப்பது போலப் பாராளுமன்ற அங்கத்தினர்கள் சில வருடங் களுக்குப்பின் தங்கள் சபை கலைக்கப்படும் என்பதை நினைவிலேயே வைத்திருக்கவேண்டும். அதன் பதவிக் காலத்தின் கடைசி மாதங் களில் தேர்தல் மேகங்கள் பாராளுமன்றத்தின் நடவடிக்கைகளுக்கு இடையூறாக வந்துவிடுகின்றன. வாக்காளர் தொகுதியின்மீது கவனமாக இருந்து அவர்களது விருப்பு வெறுப்புக்களின்மீதும், மாறும் தன்மையுள்ள அவர்களது ஆதரவின்மீதும் ஒரே கண்ணுங் கருத்துமாய் அங்கத்தினர்கள் தங்கள் நடவடிக்கைகளை அமைத்துக் கொள்ளவேண்டும். இந்தவிதமான முடிவு இன்னும் சீக்கிரமே அமைச்சரவை முறை பின்பற்றப்படும் நாடுகளில் நிகழ்ந்துவிடலாம்.

அமைச்சரவை பாராளுமன்றத்தை அதன் பதவிக் காலத்துக்கு முன்னரே கலைக்கும்படிச் செய்யலாம். அதைப்பற்றி இப்பொழுது விவாதிப்போம்.

## பாராளுமன்றம் எவ்வாறு வேலை செய்கிறது?

ஒரு பாராளுமன்றத்தின் ஒரு நாளைய வேலைகள் நாட்டுக்கு நாடு வேறுபடுமெனினும், சில கூறுகள் எல்லோருக்கும் பொதுவானவையாக இருக்கும். காலை நேரங்களைக் கமிட்டிக் கூட்டங்களுக்காகவும், சொந்தக் காரியங்களுக்காகவும் வைத்துக்கொண்டு மாலை நேரங்களைப் பாராளுமன்றக் கூட்டங்களுக்கு ஒதுக்குகிறார்கள். ஒவ்வொரு கூட்டத் தொடரும் 'கேள்வி நேரத்தோடு' துவங்குகிறது. இதன்படி, அமைச்சர்களை அவர்களது துறைபற்றித் தகவல்கள் கோரலாம். இந்த அம்சம் பாராளுமன்றப் பணிகளுள் எத்துணை முக்கியமானது என்று ஏற்கெனவே பார்த்தோம். கேள்வி நேரம் முடிந்தபிறகு, புது மசோதாக்களின்மீது விவாதம் தொடங்குகிறது; அல்லது பழைய விவாதம் தொடர்ந்து நடக்கிறது. எவையேனும் திருத்தங்கள் இருந்தால் அவற்றின்மீதும், தீர்மானத்தின்மீதும் பின்னர் வாக்கெடுக்கப்படும். அமைச்சரவையின் பெரும்பான்மை உறுதியாகத் தெரிந்திருந்தால் இந்த வாக்கெடுப்பு வெறும் கண்துடைப்பாகத்தான் இருக்கும். ஆனால் இந்தப் பெரும்பான்மை நிலையற்றதாகவும் சிறியதாகவும் இருக்குமானால் இது மிகவும் முக்கியமானது. ஏனெனில் அமைச்சரவையின் தோல்வி பாராளுமன்றம் கலைக்கப்படுவதில் முடியும்.

அமைச்சரவைக்கு உறுதியான பெரும்பான்மை இருப்பின் விவாதங்களெல்லாம் செயற்கையாகவும் கிட்டத்தட்ட தேவையில்லாதவை போலவும் தோன்றலாம். ஆனால், அப்படி முடிவு செய்வது தவறாகும். கொண்டுவரப்படும் தீர்மானங்களின் விவரங்கள் வெள்ளோட்டமானவைகளே. அவர்களின் பொதுத் தலைப்புக்கள் உறுதியானவையாக இருந்தாலும், விவரங்களில் பலவீனமான அம்சங்கள் காணப்படக்கூடும். இவற்றை விவாதங்கள் வெளிக்கொணர்ந்து, சாத்தியமான மாற்றங்களைச் செய்வதும், அல்லது அதன் நடைமுறைக்கு ஒவ்வாத அம்சங்களை நீக்குவதும் விவாதங்கள் செய்யும் பணியாகும். அரசாங்க ஆதரவாளர்கள், எதிர்க்கட்சியினர் ஆகிய இரு தரப்பாரின் அனுபவங்கள் பல பயனுள்ள குறை கூறுதலாகவோ அல்லது அதற்கு மறுப்புரைகளாகவோ தரப்படுகின்றன. விவாதத்திலிருந்து முக்கிய மாற்றமின்றி எந்தத் தீர்மானமும் வெளிவருவதில்லை. எவ்வளவுதான் விவாதத்தின் முடிவு தெரிந்ததாக இருந்தாலும் விவாதம் புரிவது உண்மையான நிகழ்ச்சியாகும்.

அமைச்சரவை முறை, ஜனாதிபதி முறை ஆகிய இரு முறைகளிலும் பாராளுமன்றம் இறுதியான முதன்மை பெற்றது என்று நாம் கூறினோம். பாராளுமன்றத்தின் திறமையைப் பொறுத்தே அதன் வெற்றியும் இருக்கும். இது ஓரளவுக்கு அது எவ்வாறு தேர்ந்தெடுக்கப்படுகிறது என்பதைப் பொறுத்திருக்கும். தேர்வாளர்களின் சுதந்தரத் தன்மை, அவர்களது கல்வியறிவு, பொது அறிவு ஆகியவைகளின் நிலை, பிரச்சினைகளைத் திருப்தியான முறையில் சமர்ப்பிப்பதும், விளக்குவதும் ஆகிய பல காரியங்களைச் சார்ந்திருக்கும். இவ்வாறு இருப்பின் ஒழுங்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட, உண்மையான பிரதிநிதிகள் கொண்ட சபையாக அது அமையும். தேர்ந்தெடுக்கப்பட்ட பிறகு இவர்கள் தங்கள் பணிகளில் சில நிபந்தனைகளை நிறைவேற்றவேண்டும். பிரச்சினைகளைப்பற்றி உண்மையோடும், கருத்தோடும், ஒழுங்கோடும் விவாதித்தல் வேண்டும். விவாதம் செய்வதற்குரிய அங்கத்தினர்களின் உரிமையை அச்சம், குறுக்கீடு ஆகியவைகளினின்றும் காத்தாக வேண்டும். பாராளுமன்ற நடவடிக்கைகளை நன்ருகத் திட்டமிட்டு, முன்னரே அவர்களுக்கு அறிவிக்கவேண்டும். நடைமுறை விதிகள் விளக்கமாக இருப்பதோடு பின்பற்றப்படவும் வேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாகப் பகுத்தறிவுக்கொத்ததாக எல்லாக் காரியங்களும் நடைபெற வேண்டும். அதாவது பெரும்பான்மைதான் இறுதியான வார்த்தையைச் சொல்லமுடியும் என்ருலும் - இல்லாவிட்டால் ஒரு காரியமும் செயல்பட முடியாது - பெரும்பான்மையினர் தங்கள் அதிகாரத்தை மிதமாகப் பயன்படுத்துவார்கள் என்ற நம்பிக்கையும், தங்கள் நலன்களும் உரிமைகளும் காக்கப்படும் என்ற நம்பிக்கையையும் சிறுபான்மையினர் உணர்வது பாராளுமன்ற வெற்றிக்கு வித்தாகும். டாக்டர் ஃபைனர் (Dr. Finer) கூறுவது போல, 'பாராளுமன்ற விவாதங்கள் அதனல் செய்யப்படும் முடிவுகள் ஆகியவற்ருல் நிலவும் அரசாங்கம் சரியானதுதானென்றும், மறுக்க முடியாதது என்றும் ஒப்புக்கொள்ளப்படவேண்டும்.' இதைப் பெறுவதற்குரிய சிறந்த வழி பெரும்பான்மையும், சிறுபான்மையும், அரசாங்கக் கட்சியும், எதிர்க் கட்சியும் முறையே தங்கள் பதவிகள் மாற்றிக்கொள்ளப்படஏதுவிருக்கிறது என்பதை நினைவிற் கொள்வதுதான். நீங்கள் எதை மற்றவர்கள் உங்களுக்குச் செய்யவேண்டும் என்று விரும்புகிறீர்களோ அதையே மற்றவர்களுக்கு நீங்கள் செய்யுங்கள் என்ற கட்டளையைக் கைப்பற்றுவதே சிறந்த வழியாகும். டாக்டர் ஃபைனர் (Dr. Finer) கூறுவது போல, 'பாராளுமன்ற முறையானது எளிதில் முறியக்கூடிய நாகரிகம்' என்ற அஸ்திவாரத்தின்மீது வழக்காறுகளைக்கொண்டு கட்டப்பட்ட மாளிகையாகும்.'

# 10. நடைமுறையில் ஜனநாயகம்

## பாகம் 2. மக்களின் விருப்பாற்றல் எவ்வாறு இணைக்கப்படுகிறது?

### கட்சிகள்

'வாக்காளர் தொகுதிக்குள்ளடங்கிய பொதுமக்கள் அபிப்பிராயம் தங்களுடைய சொந்த ஏற்பாடுகளுக்கும், முயற்சிகளுக்கும் விடப் பட்டால், அது பயங்கரமான சக்தி படைத்ததாயும், அதே சமயத்தில் ஆக்கவேலைக்கோ அல்லது கொள்கை முடிவுகளில் கவனம் செலுத்து வதற்கோ சக்தியற்றதாகவும் இருக்கும்' என்று இதற்கு முந்திய அதிகாரத்தில் சொன்னோம். இதனை மேலும் விவரிப்பதற்கு முன் ஒரு கேள்வி கேட்டுக்கொள்வோம். அடிக்கடிக் கேள்விப்படும் பொதுமக்கள் அபிப்பிராயம் என்பது யாது?

### (I) பொதுமக்கள் அபிப்பிராயம் (Public Opinion)

### பொதுமக்கள் அபிப்பிராயம் என்றால் என்ன?

மக்கள் என்ன நினைக்கிறார்களோ, தங்கள் பொதுவாழ்விற்கு எதை விரும்புகிறார்களோ அதைத்தான் பொதுவாக இந்தச் சொல் குறிக்கிறது. மனிதனின் கூட்டான நடவடிக்கைகளின் ஒவ்வொரு துறையிலும் இது காணப்படுகிறது. இங்கே அரசியல் துறையில் அது எவ்வாறு விளங்குகிறது என்பதைப்பற்றி மாத்திரமே அறிய முற்படுவோம். பொதுமக்கள் நினைப்பனவெல்லாம் பொதுமக்கள் அபிப்பிராயம் ஆகிவிடா. அது போலவே அவர்கள் நினைப்பன வற்றில் சில வெளியே பேசப்படுகின்றன. அவையும் பொதுமக்கள் அபிப்பிராயம் அல்ல. நடைமுறையில், எது நிகழ்ந்தாக வேண்டும் என்று விரும்புகிறார்களோ, அதுதான் பொதுமக்கள் அபிப்பிராயம்.

மக்கள் பல விஷயங்களை விரும்பவும் வெறுக்கவும் செய்கிறார்கள். ஆனால், அவர்கள் விரும்பும் ஒன்றை நடைமுறையில் வேண்டும் என்று கேட்பதும், தாங்கள் வெறுக்கும் ஒன்றை நடைமுறையிலிருந்து எடுத்துவிடவேண்டும் என்று கோருவதும் அரசியல் சார்புடையது. கொள்கைகளாகவும், நடவடிக்கைகளாகவும் நடைமுறையில் கொண்டுவரக்கூடியதாகவும், அரசாங்கம் பொதுமக்கள் ஆதரவின் அடிப்படையில் அதை ஏற்றுக்கொள்ளவோ அல்லது விட்டுவிடவோ கூடியதாகவும் பொதுமக்கள் அபிப்பிராயம் துல்லியமாக இருக்கவேண்டும்.

இப்படிக் குறிப்பிடப்பட்ட வரையறை செய்தபின் எது பொதுமக்கள் அபிப்பிராயம்? ஒரு காரியத்தில் ஈடுபாடுடைய நபரோ அல்லது மக்கள் கூட்டமோ, தங்களுடைய நோக்கத்தையோ, கொள்கையையோ இலட்சியத்தையோ, வெறுப்பையோ பொதுமக்களிடத்தில் விளம்பரப்படுத்துகிறார்கள். புத்தக வாயிலாகவும், பத்திரிகை மூலமாகவும், வானொலி, பொதுக்கூட்டம், விளம்பரம் ஆகியவை மூலமாகவும், வாய்மொழியாகவும் இவ் வகைக் கருத்துக்கள் பிரச்சாரம் செய்யப்படும்போது மக்கள் தொகையின் பெரும்பான்மையினர் அதை ஏற்றுக்கொண்டால் அது பொதுமக்கள் அபிப்பிராயமாகிறது. கவனமாகச் சிந்திக்கப்பட்ட கருத்தோ அல்லது கொள்கையோ சிறுபான்மையினரிடத்துத்தான் காணப்படுகிறது. மிகவும் சிறிய காரியங்களைத் தவிர வேறு கவனமான முடிவுக்குப் பெரும்பான்மையினர் வருவது வெகு அபூர்வம். பொது விவகாரங்களைப்பற்றி மக்கள் சிந்திப்பதேயில்லை. சிறுபான்மையினரின் பலவிதக் கருத்தோட்டங்களில் ஒன்றை எதிர்மறையாகவேனும் பெரும்பாலான மக்கள் ஏற்றுக்கொள்ளும்போது, அது பெரும்பான்மையினரின் அபிப்பிராயமாக மாறுகிறது. ஏகமனதாக ஒப்புக்கொள்வது இந்த உலகில் நடவாத காரியமாயிற்றே!

நாட்டில் நிலவும் கல்வி நிலையைப் பொறுத்தும், பொது அறிவைப் பொறுத்தும் இந்த அபிப்பிராயம் உயர்வுடையதாக இருக்கும். அது அபிப்பிராயம் உண்டாக்கும் மக்கள் கூட்டம் அல்லது அதன் தலைவர் ஆகிய அவர்களுடைய நேர்மையையும், கடமை உணர்ச்சியையும் பொறுத்தது. மக்களின் வெறுப்பை வளர்ப்பது, அறிவைத் தூண்டுவதைவிட மிக எளிதானது. இங்கிலாந்தில் ரோமன் கத்தோலிக்கர்களுக்கு அரசியல் உரிமை தடைப்படுத்தப்பட்டதன் காரணம் வெறியுணர்ச்சியே. அமெரிக்காவின் தெற்குப் பகுதியில் நீக்ரோக்களுக்குச் சமஉரிமை அளிக்கப்படாது தடுக்கப்பட்டு வருவதற்கும் காரணம் உணர்ச்சிதான். பெண்களுக்கு வாக்குரிமை அளிப்பதைப் பல நாடுகளில் இது தடை செய்தது.

சில முக்கியமான சமயங்களில் மக்கள் இலட்சிய நோக்கத்தை ஏற்றுக் கொண்டு கடினமான, மனத்திற்கிசையாத கட்டுப்பாடுகளை மேற் கொண்டு, 'இரத்தம், வியர்வை, கண்ணீர்' சிந்தி, பெருந் தலைவர் களைத் தேர்ந்துகொண்டு அவர்கள் பின்செல்லவும் கூடும்.

எப்படிப் பார்க்கினும் பொதுமக்கள் அபிப்பிராயம் என்பதை விளக்குவது கடினம். 'துல்லியமான இலக்கணம் கூறும் சாத்திய மற்ற பல சொற்றொடர்களில் இதுவும் ஒன்று. இது அன்றாட வழக்கில் இது பொதுமக்களின் கூட்டான மனப்போக்கைக் குறிக்கிறது. ஆனால் இந்த வகைக் கருத்தோட்டங்களைச் செல்வாக்கு மிக்க தலைவர்களின் அபிப்பிராயங்களில்தான் காணமுடிகிறது,' என்று கேரல் கூறுகிறார். (E. M. Caroll)

பொதுமக்களின் கூட்டான மனப்போக்கு அவர்கள் வேண்டும் நிலையாகத் துல்லியமாக எவ்வாறு தெரிவிக்கப்பட முடியும்? அரசாங் கங்கள் செயலாற்றும் வகையில் மக்களின் விருப்பங்களும் கருத்துச் சேர்க்கைகளும் எவ்வாறு விளக்கமாக உருவாகின்றன? 'கட்சி'யின் மூலமாகத்தான் என்பது இந்தக் கேள்விக்குப் பதிலாகும்.

## (ii) எவ்விதப் பிரதிநிதித்துவ அமைப்புக்கும் கட்சிகள் அவசியம்

நாம் குடியாட்சியைப்பற்றிப் படிக்கும்போதெல்லாம் கட்சிகளைக் காண்கிறோம். ஒரு பொருளில் பார்க்கப்போனால், இலத்தீன் பழ மொழி ஒன்று சொல்வதுபோல, 'அங்கு எவ்வளவு மனிதர் களுண்டோ, அவ்வளவு தனிக் கருத்துக்களும் உண்டு. இப்படி நிலவும் பலவகைக் கருத்துக்களும், ஒத்த கருத்துக்களாக ஒன்று சேர்ந்து விளக்கமான கருத்துக்களாகப் பகுக்கப்படுகின்றன. இக் கூட்டங்களின் கருத்தோட்டமானது, திட்டமிட்டுப் பிரசாரம் செய்யும் கூட்டங்களின் அதாவது நாம் கட்சி என்று அழைக்கப்படுவனவற்றின் நிகழ்முறைக்கு ஒத்ததாக அமைகிறது. 'கட்சிப் பிரிவுகள் இயங்குவ தானது நல்லதற்கோ, கெட்டதற்கோ, சுதந்தர அரசாங்கத்திலிருந்து பிரிக்க முடியாதது' என்று பர்க் (Burke) கூறினார். 'தங்களது கூட்டு முயற்சியால் ஏதாவதொரு அடிப்படையில் தேசீய நலனை வளரச் செய்யும் நபர்களின் கூட்டம் ஒரு கட்சியாகும்' என்று பர்க் கட்சிக்கு இலக்கணம் கூறுகிறார். 'ஏறத்தாழ ஒரு சில அமைப்புக்கள் அடங்கி ஓர் அரசியல் அங்கமாகப் பணிசெய்து, தங்கள் வாக்குரிமைச் சக்தியால் அரசாங்கத்தைக் கட்டுப்படுத்தித் தங்களுடைய பொதுக் கொள்கைகளை நிறைவேற்ற முற்படும் குடிமக்களின் கூட்டம் கட்சி யாகும்' என்று கட்சிக்கு இலக்கணம் கூறலாம்.

## பல்வகைக் கட்சிகள்

கட்சிகளைப்பற்றி இரகசியம் ஒன்றுமில்லை. ஒரு குடியாட்சி நாட்டின் பெரிய நகரத்தின் தெருக்களில் நடந்து சென்றால் இடையிடையே பல பெயர்ப் பலகைகளைக் காணலாம். பிரிட்டனிலே லிபரல் (Liberal), கன்சர்வேடிவ் (Conservative) தொழிலாளர் (Labour) கட்சி அலுவலகங்களைக் காணலாம். அமெரிக்காவில் (U.S.A.) குடியரசுக் கட்சி, குடியாட்சிக் கட்சி (Republican, Democratic) ஆகியவற்றின் தலைமை அலுவலகங்களைக் காணலாம். ஃபிரான்சு நாட்டில், பொதுமக்கள் குடியரசு இயக்கம் (Popular Republican Movement), ஐக்கிய சோஷலிஸ்ட்டுக் கட்சி (United Socialist Party), பொதுவுடைமைக் கட்சி Communist Party), குடியரசுக் குடியாட்சி ஐக்கியம் (Republican Democratic Union) இவை போன்ற கட்சிப் பெயர்ப் பலகைகளைக் காணலாம். தொழிலாளர்களின் மாபெரும் பொதுக்கூட்டம் பற்றியோ, மிதவாதிகளின் (Liberal) இயக்கம் பற்றியோ, கன்சர்வேடிவ் கட்சியின் தோட்ட விருந்துக் கொண்டாட்டத்தைப் பற்றியோ பெரிய பெரிய விளம்பரங்கள் சுவர்களில் காணப்படும். மற்ற நாடுகளிலும் இவைபோன்ற பலவகைக் கட்சிகளையும், கட்சிச் சுலோகங்களையும் காணமுடியும். மேலும், செய்தித்தாளை எடுத்துப்பார்த்தால் அது அநேகமாக ஒரு கட்சிப் பத்திரிகையாக இருப்பதையுங் காணலாம்.

கட்சிகளைப் பாழ்செய்யும் உட்குழுவாகக் கருதிய காலம் மாறிவிட்டது. அரசியல் அறிஞர்கள் பலர் கட்சிகளே வேண்டாம் என்று மறுத்துப்பேசிய காலத்திலிருந்தும் தரமான செய்தித்தாள்கள் கட்சிச் சார்பற்ற அரசாங்கம் அமையவேண்டும் என்று பேசிய காலத்திலிருந்தும் இது வேறுபட்ட காலம் ஆகும். அதைவிட முக்கியமானது, கட்சிகள் இரகசிய அமைப்புக்களாகவிருந்து, சிறைத் தண்டனையோ அல்லது மரண தண்டனைகூட அந்தக் கட்சிகளில் அங்கம் வகிப்பவர்களுக்கு வழங்கப்பட்டுவந்த காலத்தினின்றும் மாறுபட்ட காலம் இது.[1] எல்லா நாடுகளிலும் இவைகள் ஒப்புக்கொள்ளப்பட்ட காரணத்தால் சில நாட்டு அரசியல் அமைப்புச் சட்டங்களிலேயே அதிகாரபூர்வமாகக் கட்சிகள் அங்கீகாரம் பெற்றிருக்கின்றன. இங்கிலாந்தில் எதிர்க் கட்சித் தலைவருக்குச் சம்பளம் கொடுக்கிறார்கள். ஜெர்மானியக் குடியரசில் அந்நாட்டுப் பாராளுமன்றத்தில் (Reichstag) கட்சிகளின் பலத்திற்கொப்ப அரசாங்கத்திற்கு ஆதரவளிக்கும் கட்சிகளுக்குள் அமைச்சரவைப்

[1] சில நாடுகளில் பழைய காலத்துமுறை மீண்டும் பின்பற்றப்படுகிறது. ஆனால் தண்டனைகள் எல்லாக் கட்சி அங்கத்தினர்களையும் பாதிக்காமல் சில கட்சி அங்கத்தினர்களைமட்டுமே பாதிக்கிறது.

பதவிகளைப் பகிர்ந்துகொள்ளவேண்டும் என்று அந் நாட்டுச் சட்டம் கூறுகிறது.

## கட்சிகளின் அவசியம்

எந்தக் கொள்கை பின்பற்றப்பட வேண்டும் என்று பொதுமக்கள் கருத்தோடு கலந்தாலோசித்த நேரந்தொட்டு அரசியல் கட்சிகள் அவசியமானவையாகவும், இன்றியமையாதனவாகவும் ஆகிவிட்டன. தங்களிடத்தே விடப்பட்ட வாக்காளர் தொகுதி குழப்பமான மக்கள் கூட்டமாகத்தான் இருக்கும். எனவே மாற்றுக் கருத்துக்களைத் தெரிவித்து அவற்றிலிருந்து ஏதாவதொன்றை அவர்கள் தேர்ந்தெடுக்கும்படிச் செய்வது மிகவும் அவசியமாகிறது. அரசியல் கட்சிகள்தான் இந்த மாற்றுக் கருத்துக்கள். இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட வேலைத்திட்டங்களை வாக்காளர் தொகுதியிடத்துக் கட்சிகள் சமர்ப்பிக்கின்றன. இதனுடன் இந்த வேலைத் திட்டங்களை நடைமுறையில் செயலாக்குவதாகக் குறிப்பான சில அரசியல் கட்சித் தலைவர்கள் உறுதிமொழியும் கூறுகின்றனர். அந் நேரத்தில் நாட்டில் நிலவும் பலவிதமான பிரச்சினைகளில் சாத்தியமான சில வற்றைக் கட்சிகள் குறிப்பாகத் தேர்ந்தெடுத்து அதன் அடிப்படையில் இந்த வேலைத்திட்டங்கள் எழுதப்படுகின்றன. தீர்க்கப்படவேண்டிய சிக்கல்கள் பல. ஆனால் அவற்றில் சில சிக்கல்கள் மாத்திரமே அந் நேரத்தில் சமாளிக்கப்படக் கூடியவை. வாக்காளர் தொகுதி கொடுக்கப்பட்ட தீர்வை ஒப்புக்கொண்டுவிட்டால் அத் தீர்வு நடைமுறையில் வெற்றிகரமாகச் செயலாற்றப்படுவதற்கு வாய்ப்பு இருப்பதாகக் கட்சியின் கருத்தில் பட்டால் அப்படிப்பட்ட கருத்துக்களைக் கட்சி ஒன்றுபடுத்தி வேலைத் திட்டமாக்குகிறது. ஒவ்வொரு கட்சியின் வேலைத் திட்டமும் எத்துணையோ கொள்கைகளை ஆய்ந்து ஒதுக்கியபிறகு உருவானதுதான். 'கட்சிகளற்ற வாக்காளர் தொகுதி ஒன்று மிகவும் சக்தியற்றதாக இருக்கும் அல்லது அரசியல் பொறியையே பாழ்செய்து விடக்கூடிய சாத்தியமேயற்ற கொள்கைகளைப் பின்பற்றுவதன்மூலம் அழிவுச்சக்தி பெற்றதாக இருந்துவிடக் கூடும்' என்று ஃபைனர் (Finer) மிகப் பொருத்தமாகச் சொல்கிறார்.[1]

ஆகவே, வாக்காளர் தொகுதிக்குச் சிக்கல் என்ன என்று இலக்கணம்கூறி, விளக்கம் கூறுவது கட்சிகளின் முதல் வேலையாகும். இது தனியாரின் முரணான கருத்துக்கள் என்னும் காட்டினூடே

[1] கட்சிகளைப் பற்றி டாக்டர் ஃபைனர் (Dr. Finer) அவர்களின் Theroy And Practice of Modern Governments என்ற நூலைச்சிபாரிசு செய்வது நல்லது.

வெட்டப்படும் ஒரு பாதையைப் போன்றது. ஒவ்வொரு பாதையும் வெவ்வேறு இலக்குகளுக்கு அழைத்துச் செல்லக்கூடும் அல்லது ஒப்புக்கொள்ளப்பட்ட இலக்கிற்குப் பல வழிகள் காட்டப்படக்கூடும். இப் பாதைகள் இல்லாதுபோனல் வாக்காளர் தொகுதி ஒரு நோக்கமும் இல்லாமல் வீணே அலைய நேரிடும். உருவகத்தை விட்டுவிட்டு உண்மையைச் சொன்னல், கட்சியின் வேலைத்திட்டங்களின் மூலம் உறுதிப்படுத்தப்படாவிட்டால் வாக்காளரின் விருப்பு என்பது பொருளற்றது.

## கட்சிகளா ? தலைவர்களா ?

'வேலைத் திட்டங்களில் ஒன்றை வாக்காளர் தொகுதி தேர்ந்தெடுக்கச் சொல்வதைவிட ஏன் தலைவர்களில் ஒருவரைத் தேர்ந்தெடுக்கச் சொல்லக்கூடாது?' என்று சிலர் கேட்கக்கூடும். இதற்கு இரண்டு பதில்கள் உண்டு. முதலாவது இது அடிக்கடி நிகழும் நிகழ்ச்சிதான். சிறப்பாகப் பல கட்சிகள் இருந்து அவைகளின் கோட்பாடுகளில் அதிக வேறுபாடு இல்லாதிருக்கும் நாடுகளில் இது நிகழ்கிறது. இப்படிப்பட்ட சமயங்களில் வேலைத் திட்டங்களைவிடத் தலைவர்கள் அதிக முக்கியத்துவம் பெற்றுவிட முடியும். புகழ்பெற்ற தலைவர்களின் சொந்த மனிதர்களால் ஆன கட்சிகளும் உண்டு. ஃபிரான்சில் அதிகார பூர்வமான சோஷியலிஸ்ட் கட்சியிலிருந்து எம். பிரையாண்ட் (M. Briand) வெளியேறியபோது அவரைப் பின்பற்றி வெளியேறியவர்களால் ஆனதுதான் குடியரசு சமதர்மக் கட்சி (Republican Socialist Group) என்று அழைக்கப்படுவதாகும்.[1] பிரிட்டனில் பல ஆண்டுகளுக்குக் கட்சிப் போராட்டம் என்பது கிளாட்ஸ்டனுக்கும் (Gladstone) டிஸ்ரேலிக்கும் (Disraeli) இடையே நடந்த போராட்டந்தான்.

அரசியல் வாழ்வில் இப்படிப்பட்ட ஆதிமனிதர்கள் முதன்மையாக இல்லாதிருக்கும்போதும், கட்சிகள் தலைவர்கள் இல்லாமல் இயங்க முடியாது. இத் தலைவர்கள், கட்சி அதிகாரத்தில் இருக்கும்போது அரசாங்கத்தில் கேந்திரமான பதவிகளை வகிப்பார்கள். அரசில் நிகழ்வதைப்போலக் கட்சியிலும் இறுதி முடிவுகள் செய்வது சிலரின் பணியாகும். இவர்கள் சில சமயங்களில் பொதுமக்களின் முன்னிலையில் புகழ்பெற்றுத் துலங்குபவர்களாக இருப்பார்கள். சில சமயங்களில் திரை, மறைவுக்குள் ஆர்ப்பாட்டமில்லாமல் சுறுசுறுப்பாக இயங்குபவர்களாக இருப்பார்கள். மனித நடவடிக்கைகளின்

[1] இரயில்வே தொழிலாளர்களை ஒருமுகப்படுத்தி 1911–ல் ரெயில்வே வேலை நிறுத்தத்தை வெற்றிகரமாகப் பிரையாண்ட் உடைத்தபோது இது நிகழ்ந்தது.

எல்லாத் துறைகளிலும் சிறப்பான மனிதர்களுக்கு அதிக மதிப்புண்டு. பெரிய தலைவர்களேயெனினும் அவர்களும் ஏதாவது செய்தாக வேண்டும். சில கொள்கைகளின் அடிப்படையில், விளக்கமான செயல்முறைத் திட்டங்களை அவர்கள் ஆக்கித்தரவேண்டும். ஒரு கட்சியில் ஈடுபட்டுள்ள மனிதர்களின் செல்வாக்கானது வாக்காளரின் தீர்மானத்தைப் பாதிக்கிறதென்றாலும், மாற்று நடைமுறைத் திட்டங்களில் ஒன்றைத்தான் வாக்காளர்கள் தேர்ந்தெடுக்கிறார்கள். மிகவும் செல்வாக்குப்பெற்ற தலைவர்கள் ஓரிருவர் இருந்தாலொழிய, தலைவர்களையாவது, வேலைத்திட்டத்தையாவது, கொள்கையையாவது ஒதுக்கிவைக்க முடியாது. தலைசிறந்த தலைவர்கள் இருப்பது அபூர்வமாகையால் கொள்கைகளும், வேலைத்திட்டங்களும் முக்கிய இடம்பெறும். இது இவ்வாறு இருக்க வேண்டியதுதான். தலைவர்களுக்கிடையில் ஏற்படும் பிணக்குகள் அரசியலுக்குள் கசப்பையும், மூர்க்கத்தனத்தையும் கொண்டுவரக்கூடும். ஆள்சார் பற்ற கொள்கைகள் இவைகளைத் தவிர்க்கின்றன. உண்மையில் தலைவர்களைச் சார்ந்திருக்கும் கட்சிமுறை எதேச்சாதிகாரத்திற்கு வழிகோலுவதாகும். அரசியல் கருத்து மாறுபாடுகளைத் துல்லியமாக ஆள்சார்பற்றதாக்கி, கொள்கைக் கூட்டு நலன்கள் இவைகளுக் குள்ளாகவே போராட்டத்தை வைத்துக்கொள்வதானது கட்டுப் பாடான கட்சி அமைப்பின் சிறப்பாகும்.

## கட்சிகளும் வேலைத்திட்டங்களும்

ஆனால் தலைவர்களைவிடக் கருத்துக்களுக்கு முக்கியத்துவம் கொடுப்பதில் சுரத்தில்லாத வேலைத் திட்டங்களுக்கு முக்கியத்துவம் அளிக்கும் அபாயம் இருக்கிறது. கட்சி என்பது அதன் அதிகார பூர்வமான கோட்பாடுகளுக்குச் சிறிது மேம்பட்டதும், சிறிது கீழ்ப் பட்டதுமாகும். ஒரு காரியத்தைச் செயலாற்றவேண்டும் என்று விரும்பும் மக்கள் கூட்டமே கட்சி என்பது நிச்சயம். ஆனாலும், ஒரே வழியில் ஒரு காரியத்தை உணர்பவர்களாக இருந்து, அரசியலை ஒரு கோணத்திலிருந்து பார்ப்பவர்களின் மக்கள் கூட்டமாகவும் இருக்கிறார்கள். மாற்றமுறுகின்ற அரசியல் சந்தர்ப்பங்களினூடே தனது தனி நிலையைக் காத்துக்கொண்டு, அரசியல் சமுதாய உணர்ச்சிகளுக்கு அறிகுறியாக இருப்பதே கட்சி. அதன் வேலைத்திட்டமானது ஒரு தற்செயல் நிகழ்ச்சியாக இருக்கலாம். 'வரலாற்றால் நிர்ணயிக்கப்பட்டும், தனித் தன்மையைப் பெற்றும் இருக்கும் அரசியல் விருப்பே, கட்சி என்னும் உண்மையை மறைக்கும் போலியான தத்துவங்களே கட்சிக் கொள்கைகள் ஆகும்' எனக் குரோசே (Croce) என்ற இத்தாலியத் தத்துவஞானி

கூறுகிருர். ‘வெளிப்பார்வைக்கு வாதப் பொருத்தமாகவும் உள்ளுக்குள்ளே விசித்திரமானதொரு முறையில், கட்சியின் நடைமுறைப் போக்குகளையும், மன உணர்ச்சிகளையும் விவரிப்பவையே இத் தத்துவங்கள்’ என்று மேலும் அவர் கூறுகிருர். வேலைத் திட்டங்களும் பெரிதும் கொள்கை ரீதியில் எழுந்தவையே. அவைகளில் உண்மையோ, பருப்பொருள் தன்மையோ காணப்படுவது இல்லை. கட்சிகள் என்று அழைக்கப்படுகின்ற உயிருள்ள, அங்கங்களாலான நிலையற்ற சங்கங்களில் அங்கம் வகிக்கும் மனிதர்களின் விருப்பில் அவை காணப்படுகின்றன.

கட்சிகளுக்கிடையே யுள்ள இவ் வகை இயல்பு வேறுபாடுகள் ஒரு மனிதனின் அரசியலைப் பெரும்பாலும் நிர்ணயிக்கின்றன. ‘உயிரோடு பிறக்கும் ஒவ்வொரு பையனும் ஒவ்வொரு பெண்ணும், ஒரு குட்டி லிபரலாகவோ அல்லது குட்டிக் கன்சர்வேடிவாகவோ இருக்கிருர்கள்’ என்று சர் வில்லியம் கில்பர்ட் (Sir Willam Gilbert) அவர்கள் கூறியது மிகையாகாது. ‘குட்டி சோஷியலிஸ்டாகவோ’ என்பதையும் சேர்த்துக்கொள்ளவேண்டும். உலகத்தின் பெரிய மதங்களில் நடப்பதைப்போலவே, சூழ்நிலையின்படியும், குடும்ப மரபுப்படியும் கட்சிச் சார்புகள் ஏற்படுகின்றன. திருச்சபையில் அங்கம் வகிப்பதைப் போலப் பெரும்பான்மையான மக்கள் கட்சியில் சேர்ந்திருக்கிருர்கள். அது செய்கின்ற, சொல்கின்ற எல்லாவற்றையும் ஆதரிக்காதபடி, அது உலகத்தில் பொதுவாகக் கூறும் கருத்துக்களை ஒப்புக்கொள்கிருர்கள். மனிதன் நிச்சயமாக ஏதாவதொரு கட்சியில் இருந்தாக வேண்டும். ஒன்றில் இருந்தால் அதில் இருப்பவர்கள் மற்றதில் இருப்பதில்லை. ‘ஓரினத்தைச் சேர்ந்த ஒரேவித அபிப்பிராயத்தையுடையது அன்று கட்சி. தெளிவாக வரையறை செய்யப்படாத எல்லைக்குள் காணப்படும் பலவகை அபிப்பிராயங்களையுடையதே கட்சி’ என்று மோசெர் (Mocher) கூறுகிருர். அதற்கு இடசாரி வலசாரி உண்டு. இடசாரிகள் எல்லோருக்கும் சில விஷயங்கள் பொதுவானவை. அப்படியே வலசாரிகளுக்கும். ஏனெனில் இவை அறிவின் திறத்தாலே எழாமல் மனவியல்புகளின் அடிப்படையில் எழுந்தவை. சில சமயங்களில் கோட்டின் அதே பக்கத்திலிருந்தும் வெகு தூரத்தே இருக்கும் கூட்டத்தைவிட, கோட்டின் இருபுறமும் எதிரெதிரே நிற்பவர்கள் மிக அருகில் நெருக்கமாக இருக்கக்கூடும்.

## (iii) கட்சிகளின் பணி

எவ்வகைக் குடியாட்சி முறையிலும் கட்சிகள் அவசியமேயென்ருலும், அமைச்சரவை அல்லது பாராளுமன்ற முறையிலான அரசாங்க அமைப்பு முறைக்குக் கட்சிகள் மிகவும் இன்றியமையாதன,

கட்சிவாரியாகத் தேர்தல் போராட்டம் நடந்திருப்பதால், வாக்காளர் தொகுதியில் கட்சிகளின் பலாபலத்தை யொட்டியே பாராளுமன்றத்தின் அமைப்பும் நடைமுறையில் இருக்கும். முறையே பாராளுமன்றத்தில் உள்ள கட்சிகளின் பலாபலத்தையே அரசாங்கம் குறிக்கும். தேர்தலிலும், அமைச்சரவையின் பதவிப் பகிர்விலும் வீதாச்சாரப் பிரதிநிதித்துவ முறைகள் கண்டிப்பாகப் பின்பற்றப்பட்டாலொழிய, கட்சிகளின் பலாபலம் கணக்குப்படிச் சரியாக இராது. பாராளுமன்றம் செய்வதையும், ஒதுக்குவதையும் வாக்காளர் தொகுதியின் சம்மதத்தைப் பெறுமளவுக்கு இது சரியாக இருந்து, பாராளுமன்றத்திற்கும் அரசாங்கத்திற்குமிடையே நோக்கங்களிலும், கொள்கைகளிலும் ஒருமைப்பாட்டை உத்தரவாதமாக்கும். அவர் அதிகாரத்தை நிலைத்து இருக்கச்செய்வது அமைச்சரவையோ அல்லது அமைச்சரோ பாராளுமன்றத்தின் பெரும்பான்மையைத் தொடர்ந்து காப்பாற்றிக்கொள்வதைச் சார்ந்து இருக்கிறது. இப் பெரும்பான்மை மறைந்துபோகும் நாளில் அவர்கள் இராஜிநாமாச் செய்துவிடவேண்டும். ஒருவேளை கட்சிகளே இல்லாதிருந்து பாராளுமன்ற உறுப்பினர்கள் முழுமையாகச் சிதறிப்போய் இன்று ஒரு வழியாக வாக்குப்பதிவு செய்தும் நாளை இன்னொரு வகையாக வாக்குப் பதிவு செய்யும் மக்கள் கூட்டமாக இருப்பார்களேயானால், அரசாங்கம் எவ்வளவு காலத்திற்கு அதிகாரத்திலிருக்கும் என்று சொல்லமுடியாது. அப்படிப்பட்ட அரசாங்கம் நிலையற்றதாகவும், தொடர்ச்சியான கொள்கைகளைத் திட்டமிடும் அதிகாரமற்றதாகவும் இருக்கும். பாராளுமன்றப் பெரும்பான்மையைச் சார்ந்திருக்கும் அரசாங்கங்களில் கட்சிகள் இருக்கவேண்டும். இவை சிலவாயினும் பலவாயினும், அமைச்சர்களை ஆதரிப்பவர்களாகவும், எதிர்க் கட்சியாகவும் அவசியமாக இரு முகாம்களாக அல்லது பிரிவுகளாகப் பிரிந்து அமைந்துவிடும். எதிர்க் கட்சிக்குப் பெரும்பான்மை ஆதரவு எப்பொழுது கிடைக்கிறதோ, அப்பொழுது அரசாங்கக் கட்சியை அது தோற்கடித்துப் பதவிக்கு வரும். முன்னாள் அமைச்சர்களின் கட்சி எதிர்க் கட்சியாக மாறும்.

இப்படிக் கட்சியின் முதற் பணி, வாக்காளர் தொகுதிக்குப் பிரச்சினைகளைப் பகுத்து வைப்பது. அதன் இரண்டாவது பணி, அரசாங்கங்கள் அதிகாரத்தில் இருக்கும் வகையில் பெரும்பான்மை ஆதரவை அளிப்பது. அதன் மூன்றாவது பணி, அரசாங்கத்தை நடத்துவதற்கு மாற்றுக் குழுக்களை அளிப்பது. பதவியிலிருப்பது தமது உரிமை என்று நினைத்துவிடாதபடி அதே நபர்கள் அதிக காலம் அதிகாரத்தில்லில்லாதவாறு கட்சி தடை செய்கிறது. வாக்காளர் தொகுதி மாற்றம் விரும்பினால், அம் மாற்றத்தைத் தகராறில்லாமல் நிறைவேற்ற முடியும் என்பதற்கு இது ஓர் உத்தரவாதம். மேலும் வேலைத்

திட்டங்களில் புரட்சிகரமான மாறுதல்களின்றி அரசாங்க மாற்றங்கள் ஏற்படுவது மிகவும் விரும்பத்தக்கது ஆகும். அதிகாரமானது மனிதர்களைத் தாங்கள் மிகவும் முக்கியமானவர்கள் என்று எண்ணச்செய்து தூய்மையற்றவர்களாக்கிக் கெடுதலுக்கு இழுத்துச் செல்லக்கூடியது ஆகும். நன்னடத்தையினாலே மாத்திரம் நமது பதவியை வகிக்கிறோம் என்றும், நாளைக்கே வேறொருவர் நம்மை விலக்கிவிட முடியுமென்றும் நாம் அறிந்திருப்பது எவ்வளவு அருமையானது![1]

## இரு கட்சிகள் என்பது பொதுவிதி

இரு கட்சிகள் இயங்கும்போதுதான் இந்த முறை நன்றாகச் செயலாற்றும் என்பது வெளிப்படை. அரசாங்கம் ஒரு விளக்கமான கொள்கையுடையதாய் ஒரே சீரானதாக இருக்கும். அதைப்போலவே எதிர்க் கட்சியும். உண்மையில் இரு கட்சி முறைகள் இருப்பது அபூர்வம். ஆங்கிலோ - சாக்சேனியக் குடியரசுகள் இரண்டில் மாத்திரமே இம் முறை காணப்படுகிறது. கடந்த ஐம்பது ஆண்டுகளில் பிரிட்டனில் மூன்றாவது கட்சி ஒன்று வளர்ச்சி பெற்றிருக்கிறது. ஆனால், அது தனது எதிர்க்கட்சிகளில் ஒன்றான மிதவாதக் கட்சியைத் (Liberal) துரத்திவிட்டு, மீண்டும் இரு கட்சி அமைப்பை நடைமுறைக்குக் கொண்டுவந்து விட்டதாகத் தோன்றுகிறது.

ஆனால், இது ஒரு வழக்கமீறிய நிகழ்ச்சி. பிரிட்டனுக்கும், அமெரிக்காவுக்கும் வெளியே பாராளுமன்ற அமைப்புக்கள் வளர்ச்சியுற ஆரம்பித்தநாள் முதலாகப் பல கட்சி அமைப்பு முறைதான் வழக்கமான நிகழ்ச்சியாக இருந்துவந்திருக்கிறது. இதன் காரணம், இரண்டே வகை நோக்குகளே சாத்தியமான பிரச்சினைகள் ஒருவேளை காணக்கூடும் என்றாலும், பலவகைப்பட்ட கட்சித் திட்டங்களின் அடிப்படையிலேதான் கட்சிகள் இயங்குகின்றன. பல நாடுகளில் இன்னும் பொதுமக்கள் அபிப்பிராயத்தைப் பிரிக்கக்கூடிய பல சிக்கல்கள், இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும் பல்லாண்டுகளுக்கு முன்பே தீர்வு காணப்பட்டுவிட்டன என்பதும் உண்மையே. முடியாட்சிக்கு விரோதமாக இதுவரை எதிர்ப்பே பிரிட்டனில் தோன்றியது கிடையாது. இதே போன்று அமெரிக்காவில் குடியரசு முறைக்கு எதிர்ப்பு இருந்ததில்லை. இரு நாடுகளிலும், மதச்

[1] 'Servile State' என்ற தமது நூலில் பெல்லாக் (Belloc) குறைகூறுவதைப் போலக் கட்சிப் பிரிவு செயற்கையானதும், பதவி வேட்டைக்குப் பயன்படுவதும் ஆகும் என்று மற்றவர்களும் குறை கூறினால் அதற்குப் பதில் இதுவேயாகும் என்று நம்புகிறோம். இரு வகையாகக் கொள்கை பிரிக்கப்படாமலிருப்பதாகக் கொண்டாலும், அதிகாரம், 'ஒழுங்கு செய்யப்பட்ட' ஒரு முறையின் கீழ் மாறிமாறி வருவதாகக் கொண்டாலும், மாறிமாறி வரும் அத் தன்மையே மிகவும் பயனுள்ளதாக இருக்கும்.

சுதந்தரம், சங்க அமைப்பு உரிமை, பேச்சுரிமை, எழுத்துரிமை முதலியனவெல்லாம் அரசியல் சிக்கல்களேயல்ல. சமுதாய அமைப்பில் புரட்சிகரமான மாற்றங்கள் வேண்டுமென்று வாதிடு பவர்களோ அல்லது தேசீயச் சிறுபான்மையோ அங்கே இல்லை. இரு நாடுகளும் வயது வந்தோருக்கு வாக்குரிமை வழங்கும் நிலையை முழுவதாக எய்திவிட்டன. அங்கே மத்திய அரசாங்கத்திற்கும் தல அதிகாரத்திற்கும் உள்ள உறவு ஒருநாளும் சிக்கலற்றதாகவே இருந்து விட்டது. எஞ்சிய பிரச்சினைகள் ஒன்று துல்லியமாக இரு பிரிவு களாகப் பிரிகின்றன. அல்லது முன்னேற்றத்தின் கதியைக் குறித்து வேறுபாடுகள் ஏற்படுகின்றன. அவ்வாறின்றி உண்மை யான அதன் போக்கில் வேறுபாடுகள் தோன்றுவதில்லை.

ஆகவே, 'மக்களிடத்து அச்சமும் நம்பிக்கையும் இல்லாதவர்கள் என்றும், மக்களோடு தங்களையே ஐக்கியப்படுத்திக் கொள்பவர்கள்' என்றும் வாக்காளர்களை இருவகையாகப் பிரித்தார் அமெரிக்கராகிய தாமஸ் ஜெபர்ஸன் (Thomas Jefferson) என்பவர். 'அமைதி யையும் நிலைத்தன்மையையும் வேண்டும் கட்சி, முன்னேற்றத் தையோ அல்லது சீர்திருத்தமோ வேண்டும் கட்சி, ஆகிய இரண்டும் வளமான அரசியல் வாழ்க்கைக்கு இன்றியமையாதவை' என்று ஜான் ஸ்டூவர்ட் மில் (John Stuart Mill) என்ற ஆங்கிலேயர் கூறுகிறார். ஆனால் மற்றெந்த நாட்டுக் குடிமக்களும், தங்கள் தலைகளை உலுக்கிப் பார்த்தாலும் அரசியல் இப்படி இலகுவான ஒரு காரியமன்று என்று சொல்லக்கூடும்.

## கட்சியின் பரம்பரை

தங்களது கட்சிகளுக்குள் ஆழ்ந்த அபிப்பிராய பேதங்களை அனுமதிப்பதன் மூலந்தான் பிரிட்டிஷ் அமெரிக்கக் கட்சிகள் இரண் டாகக் குறைவது சாத்தியமாயிற்று என்பதை இங்குக் கவனிக்க வேண்டும். ஒவ்வொரு கட்சிக்குள்ளும், தங்கள் கட்சியின் தீவிரவாதி களிடத்து இருப்பதைவிட மற்ற கட்சியின் அங்கத்தினர்களிடத்து இணக்கமாக இருக்கக்கூடும் என்பதை ஏற்கெனவே நாம் குறிப் பிட்டோம். கன்சர்வேடிவ் கட்சியைச் சேர்ந்த பலர் தங்கள் கட்சியின் முரட்டுப்பிடிவாதக் கொள்கையாளரிடத்து இருப்பதைவி மிதமான தொழிற் கட்சியினருக்கு அருகில் இருக்கிறார்கள். அதேபோன்று மிதமான தொழிற்கட்சியினர் பலர் தங்களது கட்சிக் குள்ளே பொதுவுடைமை வாதத்தின் எல்லையில் நிற்கும் பலரைவிடக் கன்சர்வேடிவ் கட்சி அங்கத்தினர்களுக்கு அருகில் இருக்கிறார்கள். ஆனாலும், நீண்ட வரலாற்றுப் பரம்பரை காரணமாகவும், ஒட்டுறவு காரணமாகவும் சில அடிப்படைக் கொள்கைகளில் ஒற்றுமை

காரணமாகவும், பிரிந்து செல்வதானது புது அரசியல் கட்சிகளை உண்டாக்கிப் பல கட்சி அரசியலின் குழப்பத்தையும் நிச்சயமற்ற நிலையையும் உண்டுபண்ணி ஒற்றுமையைக் குலைக்கும் என்ற அச்சத்தினால் ஏற்பட்ட கட்டுப்பாடு காரணமாகவும், கட்சிகள் உலகத்தின் முன் ஒற்றுமையாகக் காணப்படுகின்றன.

ஐரோப்பாக் கண்டத்திலும், ஐரோப்பா அல்லாத சில நாடுகளிலும் உள்ள அரசியல் கட்சிகள் வேறுவிதமாக இயங்குகின்றன. அங்கே, அரசாங்க அமைப்பு முறை, அரசுக்கும் சமயத்திற்குமுள்ள தொடர்புகள் போன்ற அடிப்படைச் சிக்கல்கள் முடிவாகத் தீர்மானிக்கப்படாமல் இருந்து, கட்சிப் போராட்டங்களின் வரம்பை அதிகப்படுத்துகின்றன. கட்சிகளும் சமீபத்தில் தோன்றியவையே. நிலை நாட்டவும் போற்றவும் அவைகளுக்குப் பரம்பரை ஒன்றும் இல்லை. சில சமயங்களில் இக் கட்சிகள் தேசீய ஒற்றுமைக்கு விரோதமானவையாகவும், இயற்கைக்கு மாறானவையாகவும் கருதப்படுகின்றன. (கட்சியின் முக்கியப்பணி இன்னதென்று உணர்ந்து கொள்ளப்படவில்லை என்பதற்கு இது அத்தாட்சி). வெற்றி கிடைக்கும்போது மிதமான நடத்தையும், தாக்குவதில் நியாயத்தன்மையும், முக்கியமான பிரச்சினைகளில் ஒற்றுமையும், அவசரக் குறைவான பல காரியங்களில் வேறுபடுவதற்கு ஒப்புக்கொண்டும் இயங்கும் கட்டுப்பாடே கட்சி அரசியலின் விதியாகும். இதனை இவர்கள் அறியவில்லை என்பது தெளிவு.

## கட்சிகளும் சமயப் பிரிவுகளும்

இதுபற்றி இத்தாலிய எழுத்தாளரான ரக்கீரோ (Ruggiero) தமது 'ஐரோப்பிய மிதவாத வரலாறு' (The History of European Liberalism) என்ற நூலில் மிகவும் நயமான விளக்கம் ஒன்று தருகிறார். 'அரசியல் கட்சிகளின் நிச்சயமான பயனைத் தெரிந்து கொள்வதற்கு, சமயப் பிரிவுகளின் அனுபவம் தேவைப்படுகிறது. சமயங்கள் மேலும்மேலும் பெருகுவதானது, அவற்றை ஒருமைப் படுத்திச் சமநிலைக்குக் கொண்டுவருகின்றது. புதிதாக ஏற்படும் சமயப் பிரிவு தன்னுடைய கோட்பாட்டின் குற்றமற்ற தன்மையைத் தன்னுடைய பரிசுத்தமான வாழ்க்கை முறையாலும், பிரச்சாரத் திறத்தாலுமே காட்டக்கூடும். கட்சிகளும் சமயப் பிரிவுகளேயொழிய வேறல்ல. தங்களது ஆதித் தன்மையைப் பொதுநலக் கோட்பாடு சமப்படுத்திச் சீர்படுத்துகிறது. ஒரே கடவுளை வணங்கும் தனிமுறையாகச் சமயப் பிரிவு விளங்குவதுபோல, கட்சியானது முழு அரசாங்கத்தைத் தனியாரின் நோக்கிலிருந்து வேறுபடுத்திக் கட்சி நோக்கோடு அதைக் காண்பிப்பதாகும்' என்று கூறுகிறார்.

மேலும் இது புராட்டஸ்டென்ட் (Protestant) நாடுகளில் மாத்திரமே நிகழக்கூடியது என்று கூறுகிறார். கத்தோலிக்க நாடுகளில் மக்கள் தொகை இதை முழுவதாகப் புரிந்துகொள்ளமுடியாது. அவர்களுக்கு உண்மையென்பது ஒன்றேயொன்று. ஒற்றுமையில் வேற்றுமை அங்கில்லை. ஒன்று நீங்கள் கத்தோலிக்கர் அல்லது நாத்திகர் ஆவீர்கள்.

## பல கட்சிகளும், அமைச்சரவையின் நிலையற்ற தன்மையும்

பல கட்சிகள் நிலவுவதற்கு என்ன காரணமாக இருந்தாலும், அவை நிலவும் நாடுகளில், கூட்டு அல்லது இணைப்பு அடிப்படையில் பெரும்பாலும் சமநிலையற்ற முறைகளில், அமைச்சரவை அமைக்கப் படும் பழக்கம் நிலவுகிறது. ஃபிரான்சின் மூன்ருவது குடியரசில் (Third Republic) ஆண்டிற்குச் சராசரி மூன்று அமைச்சரவைகள் இருந்திருக்கின்றன. ஓர் ஆண்டிற்கும் குறைவாகப் பிரிட்டிஷ் அமைச்சரவை பதவியிலிருப்பது மிகவும் அபூர்வம். ஃபிரஞ்சு அமைச்சரவை ஓராண்டிற்குப் பதவி வகிப்பது அபூர்வம்.[1] இப்படிப் பட்ட கூட்டு அமைச்சரவையின் இன்னொரு விளைவு, எல்லோரும் ஒப்புக்கொள்ளும்படிச் செய்யப்பட்ட கொள்கைச் சமரசங்கள், திட்ட வட்டமான வேலைத்திட்டத்தின் அடிப்படையில் இல்லாமற் போவதாகும். உத்தரவாதமான காலத்திற்குக் கட்சிப் பதவி நிச்சயம் பெற்று, அவர்கள் பதவிக் காலத்தில் தங்கள் வேலைத்திட்டத்தை நிறைவேற்ற முற்படுவதற்குப் பதிலாக, இங்கே, விளக்கமற்ற திட்டங்களும், திட்டுத்திட்டானதும், முழுமை பெருததுமான சட்டங்களும், சில சமயங்களில் ஒரு நாளிலிருந்து இன்னொரு நாளைக்கு இன்னும் எவ்வளவு நாள் பதவி நீடிக்கும் என்று சொல்ல முடியாமலும் இருக்கக்கூடிய நிலையற்ற தன்மை இவ்வகைக் கூட்டு அமைச்சரவை முறையில் நிலவுகிறது.

[1] 1871-க்கும் 1928-க்கும் இடையே பிரிட்டனையும் ஃபிரான்சையும் ஒப்பிட்டுக் கீழே கொடுக்கப்பட்டிருக்கும் விவரம் மிகவும் விளக்கம் தருகிறது. இக் காலத்திற்குள் ஃபிரான்சு 38 பிரதமர்களைத் தேர்ந்தெடுத்தது. அவர்களில் 23 பிரதமர்கள் ஓராண்டோ அல்லது அதற்குக் குறைவாகவோ பதவியிலிருந்தார்கள். 1868 க்கும் 1929-க்கும் இடையே பிரிட்டனில் 11 பிரதமர்கள் பதவியிலிருந்தார்கள். (கிளாட்ஸ்டன், டிஸ்ரேலி, சாலிஸ்பரி, ரோஸ்பெரி, பால்போர், காம்பெல் பானர்மென், ஆஸ்க்குவித், லாயிட் ஜார்ஜ், போனர்லா, பால்ட்வின், மக்டொனல்ட்) இவர்களில் இருவரே ஓராண்டிற்கும் குறைவான காலம் பதவியிலிருந்தனர். அந்த 57 ஆண்டுகளில் ஃபிரான்சு 28 யுத்த மந்திரிகளையும், 32 கடற்படை அமைச்சர்களையும், 34 நீதித்துறை அமைச்சர்களையும், 35 வணிகத்துறை அமைச்சர்களையும் கண்டது. வெளி நாட்டு அமைச்சர்களில் மாத்திரமே 14 பேரிலிருந்து பிரிட்டனின் 11 வெளி நாட்டு அமைச்சர்களோடு ஒப்பிடக்கூடியதாக இருந்தது. (கிளாரண்டன், டெர்பி, சாலிஸ்பரி, கிரான்வில், ரோஸ்பெரி, லான்ஸ்டௌன், கிரே, பால்போர், கர்சான், மக்டொனல்ட், ஆஸ்டின் சாம்பெர்லின்).

## (iv) கட்சிகளின் அமைப்பு

### கட்சியின் நிரந்தரத் தன்மை

திருப்திகரமான கட்சி அரசியலமைப்புக்கு நிரந்தரத் தன்மையும், அமைப்பும் அவசியமானவை என்று இதிலிருந்து தெரிகிறது. கட்சிக்கு அமைப்பு இல்லையென்றால் அரசாங்கத்தைக் கட்டுப்படுத்தி, உண்மையாக வேலைசெய்யக்கூடிய அலகுகளாக இல்லாமல், ஒரே கொள்கையுடைய வெறும் போக்குகளாகவும், விளக்கமில்லாமலும், உருவமற்றவையாகவுந்தான் விளங்கும். நிரந்தரத் தன்மையின் அவசியம் என்னவெனில், குறுகிய காலமே வாழ்ந்த கட்சிகள் தீர்மானமான செல்வாக்கைப் பெற்றிருக்கமுடியாது என்ற காரணத்தால்தான். இங்கும் பல கட்சி அமைப்புமுறை குறை பாடுடையது. பிரிட்டனிலும் அமெரிக்காவிலுமுள்ள பழைய கட்சிகள் பல ஆண்டுகளாக மாறும் சூழ்நிலைகளுக்கேற்பத் தங்களை மாற்றியமைத்துக் கொண்டு தொடர்ச்சியாக இருக்கின்றன. அதற்கு மாருகக் கூட்டுக்கள், கடந்து செல்லும் பிரச்சினையின் அடிப்படையிலோ அல்லது தற்காலிகச் சிக்கல் ஒன்றின்மீதோ ஒருநாள் ஒருமை கண்டு, மறுநாள் உடைந்து போகும் தன்மையவாக இருக்கின்றன. நீண்ட பரம்பரையையோ விசுவாசத்தையோ வளர்க்க அவைகளுக்குக் காலம் இருப்பது அபூர்வம். அவைகளது குறுகிய காலவாழ்வு அவைகளது நிலையற்ற அதிகாரத்தில் வெளிப் படையாகத் தெரிகிறது. அரசாங்கத்தைக் கட்டுப்படுத்தி நடத்திச் செல்வதற்குப் பதிலாக அவை அறிவாளியான அரசியல்வாதியின் கைப்பாவையாக மாறுகின்றன. உண்மையான கட்சி அமைப்பும் நிரந்தரத் தன்மையும் கொண்ட அரசியல் சங்கங்களாகிய தீவிரவாதக் கட்சியும் (Radicals) சமதர்மக் கட்சியும் (Socialists) மாத்திரமே நிலையான நிச்சயமான செல்வாக்கைப் பிரயோகிக்க முடிந்தன என்பதை ஃபிரான்சின் மூன்ருவது குடியரசு காட்டு கிறது.[1] கடந்த ஐம்பது ஆண்டுகளில் நிறைவேறிய சட்டங்கள் எல்லாம் இவ்விரு கட்சிகளின் கூட்டு முயற்சியின் விளைவேயாம்.

### கட்சியென்பது அரசுக்குள் ஓர் அரசு ஆகும்

பெரிய நாட்டிற்குள்ளேயுள்ள சிறு அரசைப்போன்றதுதான் நல்ல அமைப்புப்பெற்ற கட்சி. அதற்குச் சுறுசுறுப்பான அங்கங் களும், அமைதியாகப் பின்பற்றும் அங்கத்தினர்களு முண்டு.

[1] நான்காவது குடியரசில் பொதுவுடைமையாளருக்கும் (Communists) இது பொருந்தும்.

அதற்குத் தலப்பிரிவுகள் அல்லது தொகுதிகளுண்டு. இங்கெல்லாம் பிரச்சாரம் செய்வதற்கும், நிதி திரட்டுவதற்கும், ஆள் சேர்ப்பதற்கும், கட்சிப் பேரவைகளுக்குத் தேர்தல் நடத்தவும், கட்சித் தலைவர்களையும், அதிகாரிகளையும் தெரிந்து எடுக்கும் பொறுப்புக்காகவும், கட்சிக் கொள்கையை நிர்ணயிக்கவும் செயலாண்மைக் குழுக்க (agencies) ளுண்டு. 'சாதாரணக் குடிமகனுக்குப் புலனுகாதபடி, படிப் படியாக நாடெங்கிலும் பரவி நிற்கும் இந்த இணைப்புக்கள் தோன்றி மிகப்பெரிதான சிக்கலான ஓர் உபகரணமாகத் தம்மை அமைத்துக் கொள்கின்றது. செய்தித் தாள்களும், கட்டடங்களும், அச்சகங்களும், விளம்பர விற்பன்னர்களும், பாடல்களும், சுலோகங் களும், வீரர்களும், தியாகிகளும், பணமும், சொற்பொழிவாளர்களும், அதிகாரிகளும், வருமுன்னுரைப்போர்களும், விழாநாட்களும், விரத நாட்களும் இவைகளுக் குண்டு. எல்லா மதங்களையும் போல இவை குடும்பங்களைப் பிரித்து, எதிர்வாதம் செய்பவர்களை உண்டாக்கு கின்றன. பழகுங்காலம், நோன்புக்காலம் ஆகியவை கட்சியின் கட்டுப் பாடு அடக்கியாளும் செயலாண்மை வழிகளில் சிலவாகும்' என்று ஃபைனர் (Finer) கூறுகிறுர்.

இந்த வகையான மத்திய அமைப்புக்குப் பக்கத்தில் தலக் கட்சிக் கிளைகள் குடியாட்சி வாழ்க்கையில் மிக முக்கிய பாகம் பெற்றிருக் கின்றன. சாதாரணக் குடிமகன் ஒருவன் தன் எண்ணங்களைச் சுதந்தரமாகவும் சுலபமாகவும் வெளியிடுவதற்குரிய வாய்ப்பு அளிக் கிறது கட்சியின் கிளை. இது பொது விவகாரங்களைப்பற்றிய அறிவைப் பெறவும், சொற்பொழிவாற்றவும், வாதங்கள் செய்யவும் பயிற்சி அளிக் கிறது. இவ்வாறுகக் கட்சியின் பேரவையில் ஒப்புக்கொள்ளப்பட விருக்கும் கொள்கைகளை உருவாக்குவதில் அவருக்குச் செல்வாக்கு அளிக்கிறது. மங்கிக்கிடந்த நிலையிலிருந்து இங்குத்தான் அவர் வெளிவந்து, ஊருக்கெல்லாம் தெரிந்தவராகிப் பின்னர் இதைவிடப் பெரிய பரப்பில் தெரிந்தவர் ஆவார். நன்றுக நடத்தப்படும் கட்சிக் கிளையானது குடியாட்சி, பொதுவாழ்க்கை ஆகியவற்றைப் பயிலும் ஒரு பள்ளிக்கூடம் ஆகும். என்ன சிந்திக்கப்படுகிறது, பேசப் படுகிறது என்பன போன்ற செய்திகளைத் தலைமைச் செயலகத்திற்கு அனுப்புகிறது. கட்சிக் கிளையானது பொதுமக்களின் அபிப்பிரா யத்தை அறியும்வண்ணம் அமைக்கப்பட்ட ஒரு பலகணி ஆகும். இந்த உருவகத்தை மாற்றி வேறு மாதிரியாகச் சொன்னுல், கட்சிக் கிளையானது இராணுவத்தின் ஒரு தல அலகாக இருந்து, புதிதாகச் சேருபவர்களைச் சேர்த்துக்கொடுத்து, கட்சிக்குள் என்ன நடக்கிறது, நாட்டில் என்ன நடக்கிறது என்ற தகவல் அளிப்பு அரங்கமாகப் பணியாற்றுகிறது.

## உள்நாட்டுப் போரைத் தவிர்க்கும் ஓர் இராணுவம்

கட்சிக்கிளையை இராணுவமாக உருவகப்படுத்திச் சொன்னது பொருத்தமற்றதன்று. கட்சி உண்மையில் போராடும் ஓர் அமைப்புத் தான். எனவே அதற்குரிய சாதனங்களோடும் அமைப்போடும் இருக்கவேண்டும். அதிகாரத்தைக் கைப்பற்றப் போருக்குப்போகும் ஓர் இராணுவம் அது. ஃபைனர் (Finer) கூறுவதுபோல 'வெற்றி தான் அரசியலின் முதற்சட்டம்' ஆகும். அது உபயோகிக்கும் சொற்றொடர்கள் யுத்தச்சார்புடையவை. போர்கள், தோல்விகள், வெற்றிகள், யுக்திகள், தந்திரங்கள், தளபதிகள், ஏன்? - துரோகங்கள் இவைபோன்ற சொற்களே உபயோகப்படுகின்றன. ஒரே உள்ளத் தோடு செயல்புரியவேண்டும்; எதிரிக்கு முன்னால் ஒற்றுமையாக இருத்தல் வேண்டும்; தங்களது சக்தியை வீணடிப்பதன் அபாயங்கள் ஆகியவைபற்றி அடிக்கடிப் பேசப்படுகிறது. ஒவ்வொரு கட்சியும் மற்ற கட்சியை மிகவும் கடுமையான சொற்களால் தாக்குகிறது. கட்சிச் செய்தித்தாளைப் படிப்பவனோ, அல்லது கட்சிக் கூட்டங் களின் நடவடிக்கையில் கலந்துகொள்பவனோ கட்சி அரசியலுக்குப் புதியவனாக இருந்தால், உள்நாட்டுப்போர் தொடங்கும் சமயமாக இருக்கிறது என்று சாதாரணமாக நினைத்துவிடக்கூடும்.

இருப்பினும் கட்சி அமைப்பு உள்நாட்டுப் போரைத் நுல்லிய மாகத் தவிர்க்கிறது. மற்றபடிப் பலாத்காரத்துக்கு அழைத்துச் செல்லும் பிணக்குகளை அமைதியாகத் தீர்த்து வைப்பதுதான் கட்சிகளின் முக்கியப் பணி. புரட்சிக்கும் திடீர் நடவடிக்கைக்கும், இராணுவப் புரட்சிக்கும் இது ஒரு மாற்றாக இருக்கிறது. கட்சி அமைப்பு எவ்வளவுக்குப் பலம் பொருந்தியதாக இருக்கிறதோ, அவ்வளவுக்கு உள்நாட்டுச் சிக்கல்களை வெற்றிகரமாகத் தீர்க்க முடியும். பலவீனமான கட்சிகளுள்ள நாடுகளில்தான், 1922-ல் இத்தாலியிலும், 1933-ல் ஜெர்மனியிலும் நடந்ததைப்போல அரசியல் சட்ட அமைப்பு அரசாங்கங்கள் வெகு சுலபமாக வீழ்ச்சியுற முடிகின்றன. பிரிட்டிஷ், அமெரிக்கக் கட்சி அமைப்புக்களின் பலந் தான் வலசாரி அல்லது இடசாரி எதேச்சாதிகாரங்கள் அந் நாடுகளில் ஏற்படாதவண்ணம் தடைசெய்யும் காப்பாக விளங்குகின்றது.

## (v) வரலாற்றில் கட்சிகள்

பொதுமக்கள் அபிப்பிராயத்தைப் பிரிக்கக்கூடிய பெரிய பிரச்சினைகளின் அடிப்படையில்தான் கட்சிகள் எழுகின்றன. இந்த அபிப்பிராயம் கூடியமட்டில் சுதந்தரமுள்ளதாகவும் விவகாரங் களின்மீது நேரடியாகச் செல்வாக்கைச் செலுத்தக்கூடியதாகவும்

இருக்குமானுல்தான் இது நிகழும். இதனுல்தான் வரம்பிலா முடியரசுகளின் (absolute monarchies) கட்சிகள் எழுவது வெகு கடினம். அல்லது அப்படியே எழுந்தாலும் தங்கள் முடிவுகளைப் புரட்சியின் மூலமேதான் சாதித்துக் கொள்ளமுடியும். இடைக் காலத்தில் நகர அரசுகளைப் பிரித்த தன்னலக் கும்பல்கள் தனி மனிதரிடத்துள்ள விசுவாசம் அல்லது எதிர்ப்பை அடிப்படையாகக் கொண்டு எழுந்தவையேயொழிய பொதுக்கொள்கைகளின் அடிப் படையில் தோன்றியவை யல்ல.

ஆனுல் பிரதிநிதிச் சபைகள் மன்னர்களிடமிருந்து இறைமை யைப் பறித்துக்கொண்டபோது, தேர்தல்களிலும் பாராளுமன்றங் களிலும் தங்கள் சண்டைகளை வைத்துக்கொள்வதற்கு இசைவாகக் கட்சிகள் அமைதியான போர்க்களங்களாக விளங்கின. அரசியல் போராட்டத்தில் துப்பாக்கி, குண்டுகளுக்குப் பதிலாக வாக்குச் சீட்டு வந்தது. தலைகள் வெட்டப்படுவதற்குப்பதில் எண்ணப்பட்டன. அரசியலில் பொது அறிவின் வெற்றிகளில் இதுவும் ஒன்ருகும்.

## 17 ஆம் நூற்ருண்டில் ஆங்கிலேயக் கட்சிகள்

இன்றைக்குள்ள அமைப்பில் கட்சிகள் முதன்முதலில் இங்கிலாந்தில்தான் தோன்றின. ஏனெனில் அங்குத்தான் பிரதி நிதிச் சபைகள் உண்மையிலேயே சக்தி வாய்ந்தவையாகவும் முக்கிய மானவையாகவும் இருந்தன. துவக்கத்திலிருந்தே பிரச்சினைகளின் குழப்பங்களையும், பிறவற்றையும் பிரதிபலிப்பனவாகக் கட்சிகள் அமைந்தன. சமயமும் அரசியலும் கலந்த கலப்பே கட்சிகளின் அடிப்படையாக முதலில் எழுந்தது. புராட்டஸ்டென்ட்டுகளுக்குச் சமய சமரசங் காட்டப்படவும், ரோமன் கத்தோலிக்க மதம் வளராது தடுக்கவுந்தான், அரசாங்கத்தைக் கைப்பற்ற முயற்சி செய்தார்கள். ஆனுல் கத்தோலிக்கர்களின் சுதந்தரத்தோடு, அரசின் அதிகாரம் பிணைக்கப்பட்டிருந்ததால், மதப் போராட்டங்களில் மன்னரின் அதிகாரத்தை எதிர்ப்பது தவிர்க்க முடியாததாகிவிட்டது.

ஆங்கிலக் கட்சிகளின் விளக்கமான முதற் சார்புகளை நவம்பர் 1641-ல் [illegible] மிக்குயர் மறுப்புரை’ (Grand Remonstrance) யைச் சுற்றிக் [illegible] மக்கள் பிரிவுகளில் காணலாம். ‘மிக்குயர் மறுப்புரை’ முதலாம் சார்லஸ் மன்னரின் அரசியல் சமயக் கொள்கைகளை விவரமாகக் கண்டித்தது. எவ்வளவு சமமாக இரு தரப்பாரும் பிரிந்திருந்தனர் என்பதை, இம் மறுப்புரை பதினேரு வாக்குகளே பெரும்பான்மையாகப் பெற்று வெற்றி பெற்றதிலிருந்து அறிந்து கொள்ளலாம். [illegible]ராம்வெல் (Cromwell), ‘இந்த வாக்குப்

பதிவில் முடிவு எதிர்க் கட்சிக்குச் சாதகமாக அமைந்திருப்பின் என் உடைமைகளை விற்றுவிட்டு அமெரிக்காவுக்குக் குடியேறி இருப்பேன் என்று சொன்னதிலிருந்து இந்த வாக்குப்பதிவு எவ்வளவு முக்கியமானது என்று தெரிகிறது.

எனினும், தோல்வியுற்ற அரச ஆதரிப்பாளர்கள் இம் முடிவை ஏற்றுக்கொள்ளவில்லை. எனவே உள்நாட்டுப்போர் மூண்டது. இப் போரின் முடிவோடும், இரண்டாம் சார்லஸ் வருவதோடு ஏற்பட்ட மன்னராட்சி மீண்டதோடும், கட்சிப் பிரிவுகள் ஏற்படுவது நிறுத்தி வைக்கப்பட்டதைப்போன்று தோன்றின. ஆனால் இருபது ஆண்டுகளுக்குப்பிறகு, இரண்டாம் சார்லஸ் மன்னரின் கத்தோலிக்க மதத்தைச் சேர்ந்த சகோதரன் பட்டத்திற்கு வந்துவிடுவாரே என்ற நிலையில் சமயப் பிரச்சினை தலைதூக்கியபோது, கட்சிப் பிரிவினை மீண்டும் தோன்றியது. அவரைப் புராட்டஸ்டென்ட் மதச்சார்பில் எதிர்த்தவர்கள், நாட்டு மக்களுக்குப் பாராளுமன்றத்தின் மூலமாக மரபுத் தொடர்பை மாற்றியமைக்கும் உரிமை உண்டு என்று வாதிட்டவர்கள் எல்லாம் விக் (Whig) என்ற பெயரில் ஏறத்தாழ ஒன்று சேர்ந்தார்கள். எந்தச் சமயக் கொள்கையையும் பின்பற்ற மன்னருக்குள்ள தெய்வீக உரிமை (Divine Right of Kings) யைச் சொல்லி, பாராளுமன்றத்தின் முதன்மையை ஒப்புக்கொள்ள மறுத்தவர்கள் டோரிகள் (Tories) ஆனார்கள்.

1688-ல் விக் (Whigs) கட்சி வெற்றிபெற்ற பிறகு, அரசியல் கொள்கை என்ற ரீதியில் தெய்வீக உரிமை செத்துப்போயிற்று. சமயப் பிரச்சினைகளும் அரசியலிலிருந்து விடுபட்டுப்போயின. ஆனால் மன்னருக்கும் பாராளுமன்றத்திற்கு முள்ள தொடர்புகளைப் பற்றி எழுந்த சிக்கல்களை முதலாவது அடிப்படையாகக் கொண்டும், பின்னர்ப் பொதுமக்கள் இறைமைப் பிரச்சினையை அடிப்படையாகக் கொண்டும், கட்சிப் பிரிவுகள் தொடர்ந்து நிலைத்தன.

## கட்சிகளும் பொருளாதாரப் பிரிவுகளும்

இவ்வகையான அரசியல்-சமயப் பிரிவுகள் அவற்றைக் காட்டிலும் மாறுகின்ற பொருளாதார நிலைமைகளால் ஏற்படும் மற்றோர் ஆழமான பிரிவினையை மறைத்திருந்தன. திருச்சபையோடு (Church) கூடி நிலமும், விவசாயமும் அச் சூழலில் பிரதானமாக இருந்தவரை மாற்றமில்லாத நிலையான கொள்கையாக மிகத் தீவிரமான அபிப்பிராய பேதங்களுக்கு இடமிருக்கவில்லை. ஃபைனர் (Finer) சொல்வதுபோல 'அரசாங்கம் அப்படிப்பட்ட நிலைமைகளில் மாறும் அபிப்பிராயங்களால் உண்டாக்கப்பட்டோ, பிரிக்கப்பட்டோ

இராது. அரசின் கொள்கைகளுக்கும் கீழ்ப்பட்ட மக்களின் அபிப்பிராயங்களுக்கும் யாதொருவிதமான தொடர்பும் கிடையாது. ஆளும் வர்க்கம் பரம்பரையாக ஆண்டுவந்த காரணம் அவை அபிப்பிராயத்தின் அடிப்படையில் அல்லாமல் பரம்பரையின் அடிப் படையில் ஏற்பட்டதால்தான். மாற்ற முடியாத உரிமையுடைய அவர்கள் ஆட்சி மாருத நிலைபெற்ற தன்மையைக் குறித்தது.'

வாணிகமும் வியாபாரமும் பெருகியதை ஒட்டியும், நகரங்கள் வளர்ந்ததை ஒட்டியும் பொருளாதார, சமுதாய மாற்றங்கள் பின்னர்த் தோன்றின. புதிய சக்திகள் பழைய சக்திகளுக்கு எதிராகத் தங்களை ஒழுங்குபடுத்திக்கொள்ள ஆரம்பித்தன. பழைய சக்திகளும் சுய பாதுகாப்பிற்காகத் தங்களையும் ஓர் ஒழுங்கான அமைப்பிற்குள் கொண்டுவர ஆரம்பித்தன. பொருளாதாரத்திலும் சமுதாயத்திலும் பழைமை விரும்பிகளாக இருந்தவர்கள் அரசியலிலும் இயற்கையாகவே பழைமை விரும்பிகளாயினர். டோரிக் (Tory) கட்சி மன்னராட்சி, மதப் பரம்பரை முதலியவற்றையும், விவசாயிகள், நிலம் ஆகிய வற்றின் உரிமைகளையும் ஆதரித்தது. அதே சமயத்தில் விக் கட்சி (Whigs) தொழிற்சாலைகள், வியாபார வர்க்கம் ஆகியவற்றின் உரிமைகளை ஆதரித்தது. பத்தொன்பதாம் நூற்ருண்டில் 'சமுதாயச் சீரமைப்பு' (Social Reform) என்று நாம் அழைக்கும் காரியங் களிலும் வாக்குரிமை விஸ்தரிப்பிலும், அரசியல் பிரச்சினைகள் ஒரு முகப்பட ஆரம்பித்த காலத்திற்குள் விக்குகள் (Whigs) முற்போக்குக் கட்சியாளர்களாகவும் (Liberal) டோரிகள் (Toris) பழைமைவாதிகளாகவும் (Conservatives) மாறிவிட்டனர். ஆனால், பொருளாதாரப் பிரிவுகள் புதிய சூழ்நிலைக்கேற்பத் தங்களை மாற்றியமைத்துக் கொண்டாலும், அடிப்படையில் எந்தவித மாற்றமும் அடையவில்லை. முற்போக்குக் கட்சியினர் (Liberal) உற்பத்தியாளர்களுக்கும், வணிக நலன்களுக்கும் பிரதி நிதியாக இருந்து, மூலப் பொருள்களையும், உணவுப் பண்டங்களையும் வரையிலா இறக்குமதி (free import) செய்யக் கோரினர்கள். அதற்கு மாருக, பழைமை விரும்பும் கட்சியினர் (Conservative) உழவனுக் காகவும், ஏற்றுமதியில் அதிகக் கவனம் செலுத்தாத சிறு கடைக் காரர்களுக்காகவும் போராடினர்கள்.

இரு கட்சிகளில் எதுவும் அன்று நிலவிய சமுதாயத்திலோ அல்லது உடைமைகளிலோ புரட்சிகரமான மாறுதல் ஏற்படுத்துவதில் கவனம் செலுத்தவில்லை. இக் கட்சிகள் இரண்டிலும் உயர் மத்தியதர வர்க்கம் (Upper middle class) பிரதானமாக இருந்ததால் இவைகளைப் 'பூர்ஷ்வா' அல்லது நடுத்தர வகுப்புக் கட்சிகள் (Bourgeois) என்று அழைக்கலாம், இதுவே இரண்டு அமெரிக்கக் கட்சிகளுக்கும்

பொருந்தும். ஐரோப்பாக் கண்டத்து நாடுகளில் ஒழுங்குற அமைக்கப் பெருத, ஆனால், வேறுபாடு புரிந்துகொள்ளக்கூடிய கட்சிகளுக்கும் இது பொருந்தும்.

## ஏனைய நாடுகளில் கட்சிகள்

அமெரிக்காவில் கூட்டு அமைப்பில் சேர்ந்த நாடுகளுக்கு அளிக்கப்பெறும் சுய நிருவாகம் (autonomy) எந்த அளவிற்கு இருக்க வேண்டும் என்ற பிரச்சினையில் ஆதியில் கட்சிகள் பிரிவினையுற்றன. இது தொழில், விவசாயச் சச்சரவுகளால் மிகவும் சிக்கலாக்கப்பட்டது. இந்தச் சச்சரவு முதலில் காப்புவரிப் போராட்டமாகவும், பின்னர் அடிமை முறையைப்பற்றிய போராட்டமாகவும், பின்னர்க் கூட்டு அமைப்பிலிருந்து பிரிந்து செல்லும் உரிமைப் போராட்டமாகவும் அமைந்தன. உள்நாட்டுப் போருக்குப் பின், அடிமை முறையும், கூட்டு அமைப்பிலிருந்து பிரியும் உரிமையும் முக்கியமான நடை முறைப் பிரச்சினைகளாக இல்லாது போயின. பொருளாதாரப் பிரச்சினைகளே மிகவும் தீவிரமாக்கிச் சில சமயங்களில் அடிப்படை வேறுபாடுகள் என்னவென்றே தெரியாது போய்விடும் நிலைக்குச் செய்துவிட்டது. பல வருடங்களாகக் கட்சிப் போராட்டமென்பது பதவிகளை ஒருவருக்கொருவர் மாற்றிக்கொண்டே இருப்பதும், பதவியில் இருப்பதாலுண்டான பல நன்மைகளை அனுபவிப்பதுமாக இருந்தது. பின்னர்க் கட்சிப் போராட்டம் தனிநபர் பிரச்சினைகளாக மாறியது. வில்சன் (Wilson), ரூஸ்வெல்ட் (Roosevelt) போன்ற தலைவர்களின் போராட்டமாக அது மாறியது.

சீர்திருத்தம் விரும்பும் அரசனை ஆதரிப்போர் என்றும், சீர்திருத்த வாதம் அல்லது மிதவாதக் குடியரசுவாதிகள் என்றும், தீவிர பயங்கரவாதக் குடியரசுவாதிகள் என்றும் மூன்றுவிதமான போக்குகளுள்ள கட்சிகள் ஃபிரான்சில் புரட்சிக் காலத்தில் தோன்றின. பிரச்சினைகளையும், கட்சிகளையும் நெப்போலியன் அழித்தார். ஆனால் 1814-ல் மன்னராட்சி மீண்டபோது அவை மறுபடியும் தோன்றின. அரசனை ஆதரிக்கும் பழைமை விரும்பிகள், அரசனை ஆதரிக்கும் முற்போக்கு அல்லது சீர்திருத்தவாதிகள், குடியரசுவாதிகள் என்று மூன்று வகைச் சார்புகள் பல ஆண்டு களுக்குப் பின்னும் நிலவியதைக் காணலாம். மூன்றும் நெப்போலி யனின் அடக்குமுறை நடவடிக்கைகளால் இம் மூன்று கட்சிகளில் முதலாவது கட்சி சிதைந்து போனதோடு, கட்சிப் போராட்டமும் வெளியே தெரியாதபடிப் பதுங்கிக்கொண்டது. 1870-ல் மூன்ருவது குடியரசு ஏற்பட்ட பின்னர் மன்னரை ஆதரிப்போர் கட்சி முழுவதாக மறைந்தது. குடியரசுக் கட்சியினர் திருச்சபைக்கும் அரசிற்குமுள்ள

தொடர்பு, சமுதாயச் சீரமைப்பு ஆகிய பிரச்சினைகளின் அடிப் படையில் பல வேலைத் திட்டங்களை அமைத்துப் பல கட்சிகளாகப் பிரிந்தனர். இன்னும் சில நாடுகளில் தலக் கட்சிகள் என்றும், தேசீயக் கட்சிகள் என்றும் பகுக்கப்படுகின்றன. தலக் கட்சிகள் தலப் பிரச்சினைகளைப்பற்றியும், தேசீயக் கட்சி நாட்டின் பொதுவான பிரச்சினைகளைப்பற்றியும் கவனம் செலுத்துபவை. பல நாடுகளில் கத்தோலிக்கர் நலன்களைப் பாதுகாப்பது என்று உறுதிமொழி எடுத்துக்கொண்ட கட்சிகள் இருக்கின்றன. முக்கியமாகக் கல்வித் துறையிலும், சமுதாயச் சட்டங்கள் போடுவதிலும், பொதுவாகத் திருச்சபைகளைக் குலைத்துவிட வேண்டும்; பள்ளிக்கூடங்களை அரசாங்கமே எடுத்து நடத்தவேண்டும்; சுலபமான விவாகரத்து வேண்டும் என்று கூறும் சில கட்சிகளுக்கு எதிராக இக் கட்சிகள் இருக்கின்றன.

## சோஷியலிஸ்ட் கட்சி

பத்தொன்பதாம் நூற்றூண்டின் இறுதியில் சோஷியலிஸம்[1] தோன்றியதால் முக்கியமான பல பிரச்சினைகள் எழுந்தன. இந்த இயக்கத்திற்கு எத்துணையோ இலக்கணங்கள் இருக்கின்றன வெனினும், இதுவரை நடுத்தர வர்க்கத்தார் (bourgeoisie) அதிகாரம், கொள்கை நிர்ணயித்தல் ஆகியவற்றில் ஏகபோக உரிமை கொண்டிருந்ததை எதிர்த்து உழைப்பாளர் ஒரு வர்க்கமாக அரசியலில் ஈடுபட்டதை மட்டுமே இங்கு சோஷியலிச இயக்கம் என்று நாம் கொள்ளலாம். பழைய கட்சிகள் தங்கள் கட்சித் திட்டங்களைப் புரட்சிகரமான முறையில் ஆராயும்படித் தூண்டியது இவ் வியக்கம். பழைய கட்சிகளின் சில அங்கத்தினர்களைத் தனதாக்கிக்கொண்டது. ஏனையோரிடமிருந்து ஓரளவுக்குத் தங்கள் தீர்மானங்களுக்கு ஆதரவு பெற்றுக்கொண்டது. முடிவாக, இவர்களைத் தவிர மற்றவர்களைப் புதுச் சக்திக்கு நேரடியான எதிர்க் கட்சியாகவோ அல்லது மறைமுகமான எதிர்க் கட்சியாகவோ வெளியேவர வைத்தது. இவ் வியக்கம் தோன்றியதால் இரு கட்சிச் சார்பு என்னும் உண்மை மீண்டும் நிலைபெற்றது. ‘மனித நடவடிக்கை ஒவ்வொன்றிலும் காணப்படும் இரண்டில் ஒன்று என்ற நிலையின் அரசியல் கூற்று’ இவ்விரு கட்சிச் சார்பு என்று டாக்டர் ஃபைனர் (Dr. Finer) கூறுகிறூர்.

சொத்துக்களைச் சமுதாய உடைமையாக்கும் பிரச்சினை எல்லா அரசியல் விவாதங்களையும் ஆக்கிரமித்துக்கொண்டது. இங்கிலாந்தில்

[1] 13-ஆம், 14-ஆம் அதிகாரங்களைப் பார்க்க.

லிபரல் கட்சி இரண்டு பிரதானக் கட்சிகளில் ஒன்ருக இல்லாமல் ஒரு நிலையற்ற தன்மையில் இருந்துவருகிறது. ஃபிரான்சில் தீவிர வாதிகள் (Radicals) கதியும் இதுவேதான். அமெரிக்காவில் இது வரை சோஷியலிச இயக்கம் கட்சி அரசியலில் பிரமாதமானதோர் இடம் பெறவில்லை. கம்யூனிச இயக்கத்தின் புதுச் சவால் எந்தவித விளைவை உண்டாக்கும் என்று இவ்வளவு சீக்கிரமாகச் சொல்லிவிட முடியாது.

சோஷியலிசம் அதுவரையிலிருந்த அரசியல் கட்சிகளை வர்க்கக் கட்சிகளாக மாற்றிவிடவில்லை. ஆனுல், அவைகளில் மறைந்து கிடந்த வர்க்கக் குணதிசயங்களை வெளிப்படுத்தியது. அத்துடன் புதிதாக வளர்ச்சியடைந்திருந்த வரலாற்றுக்குப் பொருளாதார விளக் கத்தையும் அது தந்தது. லாஸ்கி (Laski) கூறுவதுபோல, இப் பொழுதும் கடந்த காலத்திலும் கொடுக்கப்பட்ட ஒரு சமயத்தில் நாடு எவ்வகைப் பொருளாதார அமைப்பில் ஆழ்ந்த கவனம் செலுத்து கிறதோ, அவ் வகைப் பொருளாதாரக் கொள்கைகளின்மீது கட்சி களின் கருத்தோட்டம்' எவ்வளவாக இருந்தது என்பதை வெளிப் படுத்தியவை கட்சிகளாகும். மேலும், நாட்டின் பொருளாதார அமைப்பை நிர்ணயிக்க முற்படுகின்ற அமைப்புக்களே கட்சிகள். இந்த ஒரு கருத்தில்தான் அவை விளக்கமாகத் தெரியக்கூடும்' என்பதை வெளிப்படுத்திக் காட்டியது சோஷியலிசம். பொருளா தாரப் பிரச்சினைகள் 'முக்கியமான' அல்லது 'பிரதானமான'வையாக இருந்தன என்ருல் பொருளாதாரப் பிரச்சினைகள் மாத்திரமே இருந்தன என்று கொள்ளக்கூடாது. அரசியல், சமயக் கருத்துக் களாலான சிக்கலான அமைப்புக்கள்தான் கட்சிகள். எல்லா வகை யான மூலக்கூறுகளும் பல்வகையான வழிகளில் கலக்கப்பட்டு, வரலாற்ருலும், உளவியல் சூழ்நிலைகளாலும் நிர்ணயிக்கப்படுவ தாகத்தான் கட்சிகள் இருக்கின்றன.[1]

[1] Revue Socialiste என்ற தாளில் வெளியான 'அரசியல் வானின் முப் பட்டைகள்' (The Three Dimensions of Political Heavens) என்ற நயமிக்க கட்டுரை, சமயம், அரசியல், பொருளாதாரம் ஆகிய மூன்று துறைகளிலும், பிடிவாதக் கொள்கை பரந்த நோக்கம் ஆகிய இரு பிரதான நோக்குகளை விளக்கிக் காட்டுகிறது. இவ்விதமாக இதன் ஆசிரியர் எட்டு வித இணைப்புகளைப் பெறுகிருர். 1. முதலாளித்துவ, பிடிவாதக் கொள்கை யுடைய, தனிவல்லாட்சி; 2. முதலாளித்துவ, தனிவல்லாட்சி, பரந்த நோக்கு; 3. குடியாட்சி, முதலாளித்துவம், பிடிவாதக் கொள்கை. 4. குடியாட்சி, முதலாளித்துவம், பரந்தநோக்கு; 5. தனிவல்லாட்சி, சோஷி யலிசம், பிடிவாதக் கொள்கை; 6. தனிவல்லாட்சி, சோஷியலிசம், பரந்த நோக்கு; 7. குடியாட்சி, சோஷியலிசம், பிடிவாதக் கொள்கை; 8. குடியாட்சி, சோஷியலிசம், பரந்தநோக்கு: இவைகளில், முதலாவதும், இரண்டாவதும் வழக்கமாகப் பழைமை விரும்பும் கத்தோலிக்கக் கட்சியையும், மூன்றும், ஏழும், கத்தோலிக்கக் கட்சிகளின் இடைநிலைக் கட்சிகளையும், முற்போக்கு வாதிகளையும், நான்காவது ஆங்கில லிபரல்களையும், ஐந்தாவது ருஷ்யப் பொதுவுடைமையையும், எட்டாவது, சரியான சோஷியலிஸ்ட் கட்சியையும் குறிக்கின்றன.

## கட்சியும் வர்க்கமும்

கட்சிச் சார்புகளில் எவ்வளவுதான் பொருளாதாரக் கூறுகள் காணப்பட்டாலும் கட்சியையும், வர்க்கத்தையும் ஒன்றாக நினைத்துக் குழப்பக்கூடாது. 'வர்க்கம்' என்பது துல்லியமாக விளக்குவதற்கு மிகவும் கடினமானதொரு சொல். சமுதாய அடிப்படையில் சாதாரணமாக ஒன்றாகவே வாழ்ந்து, திருமணங்களில் கலந்தும் வாழ்க்கையின் ஒரேவிதப் பழக்க வழக்கமுடையவர்களைக் குறிக்க இச் சொல்லை உபயோகிக்கலாம். பொருளாதார அடிப்படையில், ஒரேவித வேலையிலிருந்து[1] ஒரே விதமான ஊதியம் பெற்று அதனால் ஒரே விதமான நலன்களைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டியிருப்பவர்களைக் குறிக்க இச் சொல்லை உபயோகிக்கலாம். வர்க்கம் என்பதற்கு விளக்கமான வரையறை கிடையாது. அதற்கென்று திட்டவட்டமான நடைமுறைத் திட்டங்களும் இல்லை. அதற்கு மாறாகக் கட்சிக்கு இவையெல்லாம் உண்டு என்பதோடு, வர்க்கம் எவ்வளவு திட்டவட்டமாகவும் விளக்கமாகவும் இல்லையோ, அவ்வளவுக்குத் துல்லியமாகவும் திட்டமாகவும் கட்சி இருக்கிறது.

தற்காலத்தில் உள்ள நாடுகளில் எல்லாக் கட்சிகளும் விவசாயத் துறை, தொழிற்றுறை ஆகியவற்றின் உழைப்பாளர்களின் ஆதரவைத் தேடுவதிலிருந்து கட்சிக்கும், வர்க்கத்துக்கும் உள்ள வேறுபாடு எடுத்துக்காட்டப்படுகிறது. உண்மையாகவே உழைப்பாளர்களின் கட்சி இருந்தால் அது அதிகாரத்தை ஏகபோக உரிமையாகக் கொண்டிருக்கும். ஏனெனில், வாக்காளர்களின் மிகப் பெரும்பான்மையானவர்கள் உழைக்கும் வகுப்பைச் சார்ந்தவர்களே. டிஸ்ரேலியும் (Disraeli) அவரைப் பின்பற்றிய கன்சர்வேடிவ் கட்சித் தலைமையும், தங்களுடைய டோரி (Tory)க் குடியாட்சித் திட்டத்தின் மூலமாக வெற்றிகரமாகத் தொழிலாளர்களின் வாக்குகளைப் பெற்றதுதான் கன்சர்வேடிவ் கட்சியின் இன்றைக்குள்ள செல்வாக்கின் காரணமாகும். லாயிட் ஜார்ஜ் (Lloyd George) அவர்களின் தீவிர வாதத்தாலும், இணங்காதாரின் (Non Conformists) ஆதரவைப் பெற்றதாலும் கிடைத்த தொழிலாளர் வாக்குகளாலேயே லிபரல் கட்சி பல ஆண்டுகளாகப் பதவியிலிருந்தது. இந்த ஆதரவெல்லாம் தொழிலாளர் கட்சியிடமிருந்து நீங்கிவிட்டதுதான் இன்றைக்கு இதன் பலவீனத்தை விளக்குகிறது. ஃபிரெஞ்சுக் கன்சர்வேடிவ் கட்சிகள் 5 மிலியன் சிறு நிலக்கிழார்களின் ஆதரவில்தான்

[1] ஆண்டிற்கு 300 பவுன் ஊதியம் பெறும் திருச்சபை ஊழியர், மாதத்திற்கு 25 பவுன் ஊதியம்பெறும் சோதனைச்சாலை உதவியாளர், வாரத்திற்கு 6 பவுன் ஊதியம்பெறும் நுண்பொறி நிபுணர், இவர்கள் எல்லோரும் ஒரேவித ஊதியம் பெற்றாலும், வெவ்வேறு சமுதாயப் பொருளாதார வகுப்புக்களைச் சேர்ந்தவர்கள் ஆவார்கள்.

பெரிதும் சார்ந்திருந்தன. உழைப்பாளரின் ஆதரவு இல்லாமல் எந்த நாட்டிலாவது கட்சிகள் வாழ முடியும் என்பது சாத்தியமேயன்று. அதற்கு மாருகத் தீவிரவாதப் புரட்சிக் கட்சிகள்கூடச் சொத்துக்களையுடைய வகுப்பாரின் ஆதரவைப் பெற்றிருக்கின்றன; ஏன்? முக்கியமான தலைவர்கள் பலரை இந்த வகுப்பு அளித்திருக்கிறது. மார்க்ஸ் (Marx), லெனின் (Lenin), ஜுவாரஸ் (Jaures), புளூம் (Blum), அட்லி (Attlee), போஸ்ட்கேட் (Postgate), லிட்விணுவ் (Litvinov) ஆகிய இவர்களில் எவரும் உழைப்பாளர் இனத்தைச் சேர்ந்தவர்களில்லை.

உண்மையில் வர்க்கப் போராட்டம், கட்சிப் போராட்டத்தை ஒழித்துவிடும். போட்டியான பல வேலைத் திட்டங்களைக் கொடுத்து மக்களின் ஆதரவைப் பெற்று இன்றைக்கு வெற்றி பெற்றவர் நாளைக்குத் தோற்கடிக்கப்படக்கூடும் என்று நிலவும் நிலைமைக்குப் பதிலாக, நிச்சயமாகத் தெரிந்த தங்கள் நலன்களுக்காக, தங்களது பெரும்பான்மையான எண்ணிக்கை காரணமாக வெற்றிபெறுவது திண்ணம் என்ற உறுதியோடு மக்கட் கூட்டம் போராடும் நிலைமை அப்பொழுது ஏற்படும். வெற்றிபெற்ற உழைப்பாளருக்கும் பேச்சுரிமை அளிக்கப்பட்டால் கட்சிகள் அவர்களிடையே நிச்சயம் தோன்றும். இது ருஷ்யாவுக்கும் பொருந்தும். கட்சிப் போராட்டங்கள் செயற்கையானவை. வர்க்கப் போராட்டம் உண்மையானது. இயற்கையானது என்று வாதிட ஒருவருக்கு உரிமையுண்டு, ஆனல் அது வேறு விஷயம். உள்நாட்டுப் போர் நடக்கும் சாத்தியக் கூறுகளை மிகக் குறைந்த அளவில் நிறுத்த நினைக்கும் எவரும் கட்சிமுறை நல்ல தற்காப்பானது என்று கூறத்தான் செய்வார்கள். 'கன்சர்வேடிவ் தொழிலாளர் கழகங்கள்' சோஷியலிஸ்ட் கட்சிகளில் இருப்பதையும், செல்வர்களும், உயர்குடிப் பிறந்தோரும் சோஷியலிஸ்ட் கட்சிகளில் அங்கம் பெற்றிருப்பதையும் இவர்கள் மிகவும் வரவேற்பார்கள். பொருளாதார வர்க்கமே பிரதான கருத்தாகக் கொண்ட அரசியல் அமைப்பு ஒன்றை ஆதரிக்கவோ, எதிர்க்கவோ நாம் கட்டாயப்படுத்தப்படுவோம் என்பது இன்றைய உலக அரசியலின் போக்காக இருக்கிறது.

## (vi) கட்சி முறையின் பலமும் பலவீனங்களும்

மனிதனுடைய முயற்சி எதுவும் பரிபூரணமாக நடவாதது போலக் கட்சி முறையிலும் சில குறைபாடுகள் இருக்கின்றன. பயிற்சி பெருத பொதுமக்கள் அபிப்பிராயத்தின் ஆதரவைப் பெறுவதற்காக, மிகவும் சிக்கலான பிரச்சினைகளைக்கூட மிகவும் இலகுவாக்கிக் காட்டும் போக்கு இருக்கிறது. சுதந்தரமாகச் சிந்திப்பதையும்,

செயலாற்றுவதையும் அது ஊக்குவிக்காததோடு, கட்சிச் சார்பற்ற நபர், அரசியலில் ஈடுபடுவதற்கு வாய்ப்பே அளிப்பதுமில்லை. கட்சிக்குள்ளும் குருட்டாட்டமாகக் கட்சியின் போக்கையும், வேலைத் திட்டத்தையும் ஆதரித்தும், சொல்லிக் கொடுக்கப்பட்டபடி பேசியும் வாக்களித்தும் வருபவருக்குத்தான் ஆதரவு இருக்கும். அதற்கு மாருகச் சுதந்தரமாகச் சிந்திக்கும் அங்கத்தினர்களைத் தலைவர்கள் வெறுக்கிருர்கள்.

நெருக்கடி ஒன்றிலிருந்து தனக்குச் சாதகம் பெறவும், கடினமான சந்தர்ப்பம் ஒன்றைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளவும் கட்சிக்குச் சோதனைகள் ஏற்படும் பல சந்தர்ப்பங்கள் நேரலாம் என்பதும் உண்மைதான். எதிர்க் கட்சிக்காரர்களைத் தப்பாகக் கற்பிக்காமலிருப்பது கடினமான ஒரு காரியம். எதிர்க் கட்சியினரின் தவறுகளிலிருந்து தங்கள் கட்சிக்கு நன்மை தேடாமல் இருப்பது, எதிர்க் கட்சிக்காரர்களைப் பதவியிலிருந்து விரட்டும் சந்தர்ப்பத்திற்காகவோ அல்லது பதவிக்கு வரவிடாமல் தடுப்பதற்காகவோ காத்திருப்பது ஆகியவைகளைச் செய்யாமலிருப்பது மிகவும் கடினம். இவையெல்லாம் உண்மையே எனினும், வாக்காளர்களைச் சிக்கலான பிரச்சினைகளை அறுக்கும்படி யாரும் சொல்லாமல், இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட குழாங்களில் ஒன்றைத் தேர்ந்தெடுக்கச் சொல்கின்றது கட்சி முறை. இந்தக் குழாங்கள் பிரச்சினைகள் தோன்றத் தோன்ற, அவற்றை ஆய்ந்து நியாயமான முறையில், அறிவுள்ள எவரும் தெரிந்துகொள்ளும் கொள்கைகளின்படித் தீர்வு காண வகை செய்கின்றன. அரசியல் பிரச்சினைகளுக்கு உரிய சாத்தியமான நோக்குகள் மிகக் குறைவானவைதான். மில் (Mill)லும் ஜெபர்ஸனும் (Jefferson) கூறிய மேற்கோள் இரண்டும் மிகவும் சுலபமாக்கப்பட்டவை என்று கருதப்பட்டாலும், பிரதானமான கட்சிகளில் ஒன்றின் பொதுக் கொள்கையை ஒப்புக்கொள்ளாத மனிதர் மிகக் குறைவே.

## கட்சிகளும், தல அரசியலும்

தல அரசியலில் அதிகமாகக் குறுக்கிடுகிறது என்று அடிக்கடி சொல்லப்படுகின்ற குறைபாட்டுக்கும் இது பதிலிறுக்கிறது. நகராட்சி அல்லது மாவட்டத்தின் விவகாரங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கமுடியாத தேசீயச் சிக்கல்களின் அடிப்படையில்தான் கட்சிகள் கட்டப்படுகின்றன. சிக்கல்கள் நுணுக்கமானவையாக இருந்தால் நுணுக்க அறிவின் அடிப்படையில் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். அல்லது பிரச்சினைகள் தலப் பிரச்சினைகளானல், தல அறிவு மிக்கவர்களைப் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

கிராமச் சபையின் பிரச்சினைகள், அரசின் பிரச்சினைகளோடு சம்பந்தமற்றவையாக இருக்கும் என்பது ஒருவேளை உண்மையாக இருக்கலாம். ஆனால், பல நூறாயிரக்கணக்கான குடிமக்கள் வாழும் ஒரு பெரிய நகரமோ அல்லது மாவட்டமோ ஒரு சிறு நாட்டைப் போன்றதே. மேலும், ஒருவர் எங்குப் போனாலும் ஒரேவிதமான கொள்கைகள் அல்லது போக்குகளின்படியேதான் பொதுவாகப் பிரச்சினைகள் தீர்க்கப்பட வேண்டியிருக்கின்றன. மின்சாரம், போக்கு வரத்துபோன்ற பொது நிறுவனங்களை நகராட்சியின் மேற் பார்வைக்குள் கொண்டுவர வேண்டும் என்ற வாதங்களும், தேசீய மயமாக்குவதற்குச் சொல்லப்படும் வாதங்களும் ஒன்றுதான். பள்ளிக் கூடங்கள், ஏழைகளுக்கு உதவி செய்தல், வைத்தியசாலைகள் முதலிய வற்றில் தங்கள் நகரம் மிகவும் தாராள மனப்பான்மையோடு நடந்து கொள்ளவேண்டும் என்று விரும்புபவர்கள் பரந்த தேசீய சமூக சேவைகள் ஏற்படவேண்டும் என்று சொல்பவர்களைப் போலத்தான் இருக்கிறார்கள். தலச் சபைகளுக்குத் தேர்ந்தெடுக்கப்படும் சுயேச்சை அங்கத்தினர்கள் சிறப்பான பணியாற்றுகிறார்கள். ஆனால் அவர்கள் பொதுவாக ஏதாவதொரு கட்சியைச் சார்ந்தே இருக்கிறார்கள் என்பதை அனுபவம் எடுத்துக்காட்டுகிறது. தேர்தலின்போது பெரும்பாலும் கட்சியைச் சேர்ந்தவர்கள் போட்டியிடாத காரணத்தால்தான் அவர்கள் வெற்றிபெற முடிகிறது. பெரும்பாலும் அவர்கள் ஒரு கட்சியின் அமைப்புக்குள் முடிவாகச் சேர்ந்தும் விடுகிறார்கள்.[1]

எதிரியின் தவற்றிலிருந்து தனக்குச் சாதகம் தேடிக்கொள்வது, அவர்தம் நடவடிக்கைகளை மிகவும் குறைவான முறையில் கணிப்பது, அவரைத் தப்பாக மற்றவர்களுக்கு எடுத்துச் சொல்வது ஆகிய குறை பாடுகள் கட்சிகளில் மாத்திரம் காணப்படும் சிறப்பான தன்மையன்று. எந்த முறையிலும் மனிதர்கள் ஒருவருக்கொருவர் போட்டியிடும் போது இது நிகழ்கிறது. கட்சி முறைக்கு வெளியேயும்கூட மிகை யான சுதந்தர எண்ணங்கள் அதிகமாக வரவேற்கப்படுவதில்லை பொதுமக்களின் கீழான மன உணர்ச்சிகளைத் தூண்டுகின்றன என்ற குறைபாட்டுக்குப் பொதுமக்கள் ஆதரவை விரும்பும் எவ்வித அரசியல் அமைப்பிலும் இது இருந்தாகும் என்ற பதிலைக் கூறலாம். கட்சி முறையைக் கெடுத்து அதைத் தவறான வழியில் உபயோகிக்கக் கூடிய மக்களே வேறெந்தச் சுய நிருவாக முறையிலும் வெற்றி

[1] 25 ஆண்டுகளுக்கு முன்பு இங்கிலாந்தின் வடக்குப் பகுதியில் உள்ள தொழிற் சாலை நகரமொன்றின் நகரசபைக்கு நடந்த தேர்தலில் ஒரு சுயேச்சை அங்கத்தினரை மிகவும் ஆர்வமாக நாங்கள் ஆதரித்தது நினைவிருக்கிறது. ஒரு வருடத்திற்குள்ளாகவே தம்முடைய ஆதரவாளர்களின் கருத்துக்கு மிகவும் எதிரான ஒரு கட்சியில் அவர் சேர்ந்துவிட்டார்.

காண்பார்கள் என்று சொல்வதற்கில்லை. அவர்கள் சுய நிர்வாகத்திற்குத் தகுதியற்றவர்கள் என்றுதான் பொருள்.

## கட்சிகளும் நிர்வாகத் திறமையும்

இதற்கு மாருகக் கட்சி முறையில் சில நிச்சயமான நன்மைகள் உள்ளன. வாக்காளர் தொகுதிக்குப் பிரச்சினைகளை எப்படி விளக்குவதாக இருக்கிறதோ, அப்படியே அதிகாரிகளை நிர்வாக வரம்பிற்குள் வைத்துக்கொள்ளவும், ஊழல்களையும், சோம்பேறித் தனத்தையும் தடுக்கவும் ஓர் உபகரணமாகவும் கட்சி பயன்படுகிறது. பொது விவகாரங்களை மேற்பார்ப்பதில் உள்ள குறைபாடுகளை எதிர்க் கட்சிகள் கூர்ந்து நோக்கிக் கொண்டிருக்கின்ற காரணத்தால் எப்பொழுதும் கட்சி தயாராகவே இருக்கவேண்டியிருக்கிறது. ஊழல்கள் கண்டுபிடிக்கப்படுவது நிச்சயமானால் அவை நிகழவே நிகழா நிருவாகப் பதவிகளுக்குக் கட்சியின் ஆதரவு தரப்படுவதானது, கொள்கை நிர்ணயித்தலுக்கு அப்பாலும் கட்சிகளின் வேறுபாடுகளை, இருக்கவேண்டாத இடத்தில் நுழைப்பதாக இருக்கிறது என்று நாம் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.[1] கட்சி அரசியலுக்கும், தேசீய விவகாரங்களுக்கு மிடையேயுள்ள வேறுபாட்டை அல்லது வேற்றுமையை எடுத்துக்காட்டி நாட்டைவிட[2]க் கட்சிக்கு அதிக முக்கியத்துவம் கொடுப்பதாகவும், அன்றைய பிரச்சினைகளைப்பற்றிக் கட்சிக் கண்கொண்டு பார்ப்பதாகவும், குறை சொல்வது மிகவும் பரவியுள்ள ஓர் அடிப்படைக் குற்றச்சாட்டு ஆகும். 'நாம் எதை விரும்புகிருேம் என்றால், நல்லெண்ணமுடைய செயலாற்றும் திறம் பெற்ற எல்லா மக்களாலும் பொது நலனுக்காகக் கட்சி வேறுபாடுகளை மறந்து விட்டுக்கொடுத்து நடத்தப்படவேண்டிய அரசாங்கமேயொழிய ஒரு சிறு கூட்டத்தாரால் நடத்தப்படுவதையன்று' என்று இவ்விதக் குற்றம் சாட்டுபவர்கள் கூறுகிருர்கள். அவர்கள் 'வணிக முறையில் நடத்தப்படும் அரசாங்கங்களைப் (Business Govern-

[1] பிரிட்டனிலும், ஃபிரான்சிலும் சிவில் துறை நியமனங்களில் கட்சி ஈடுபடாமல், பொதுவான போட்டித் தேர்வுகளின்மூலம் நியமனங்கள் நடைபெறுவதானது அமெரிக்காவில் நிருவாகத்துறை, ஏன்? நீதித்துறை நியமனங்கள் கூடக் கட்சியின் மாறுகின்ற நிலைமைகளுக்கேற்ப நியமனங்கள் கைமாறும் 'கொள்ளைப் பங்கீட்டு முறை'யின் குறைபாட்டைத் தெளிவாக எடுத்துக்காட்டுகிறது.

[2] நான் ஒரு கன்சர்வேடிவ் ஆனாலும், கன்சர்வேடிவ் கட்சியின் ஆதரவை விரும்பினாலும், தல ஆட்சி விஷயங்களில் கட்சி அரசியலோடு புகுத்தப்படுவதை நான் ஒப்புக்கொள்ளவில்லை. அத்துடன் நான் தேர்ந்தெடுக்கப்பட்டால் எல்லா வகையான சமதர்மத்தையும் வலிமையாக எதிர்ப்பேன்.' - நியூ ஸ்டேட்ஸ்மனில் (New Statesman) மேற்கோள் காட்டப்பட்ட தேர்தல் பிரகடனம்.

ments) பற்றியும், 'தேசீய அமைச்சரவைகளை'ப் (National Cabinets) பற்றியும் பேசுகிறார்கள்.'

## கட்சி நலனும், நாட்டு நலனும்

இந்த விதமாகப் பேசுபவர்கள் மிகவும் நேர்மையானவர்கள் என்றாலும் கட்சியின் கருத்தும் நோக்கமும் என்ன என்று அறிய முடியாமல் இருக்கிறார்கள். யுத்த காலத்தில் நாடு பிழைத்து வாழ வேண்டுமே என்ற ஒரே பிரதான நோக்கமாயிருந்து அதற்கு முன்னால் மற்றப் பிரச்சினைகள் முக்கியமற்றனவாகக் காணப்படுவதால்தான் 'கூட்டு அரசாங்கங்கள் யுத்த காலத்தில் வெற்றிபெறுகின்றன. கட்சிகளுக்கிடையே கூட்டுறவு அப்பொழுது சுலபமாகக் கிடைக்கிறது. ஏனெனில் நடைமுறையில் அங்குக் கட்சிகளே இல்லை என்று ஆகிறது.

நாம் துவங்கிய இடத்திற்குப் போவோம். தேசீயப் பிரச்சினைகளின் தன்மையைக் குறித்தும் அவற்றின் தீர்வுகளைக் குறித்தும் ஏற்படும் பல்வகையான அபிப்பிராயங்களிலிருந்து எழுவன கட்சிகள். ஏகமனம் என்பதற்கு மாறானவை கட்சிகள் ஆகும். மனிதர்கள் ஒருவருக்கொருவர் ஒப்புக்கொள்ளாத காரணத்தால்தான் கட்சிகள் இருக்கின்றன. எனவே, முக்கியமான காரியங்களைப்பற்றி, யுத்த காலங்களிற்போல, மாறுபாடு இல்லாமற்போனால், கட்சியும் மறைந்து போகிறது. அப்படி இருந்தபோதிலும்கூட, எப்படி யுத்தத்தை நடத்துவது, அதை எப்படி முடிப்பது என்பன போன்ற விஷயங்கள் பிரிவினைகளை உண்டாக்குகின்றன. இவை கட்சிப் பிரிவினைகளோடு ஒப்பிட்டுப் பார்க்கக்கூடியவையென்றாலும் சில சமயங்களில் கட்சிகளை ஊடுருவியும் இந்தப் பிரிவினைகள் ஏற்படுவதுண்டு.

இதே வகைத் தேசீய ஒருமைப்பாடு இன்னொருவித நாட்டு நெருக்கடியின்போது அதாவது பூகம்பம் அல்லது வெள்ளம் ஏற்படும்போது தோன்றக்கூடும். ஆனால் நெருக்கடி தீர்ந்து, சாதாரணப் பிரச்சினைகள் தோன்றியவுடன் கட்சிப் பிரிவுகளும் மீண்டும் தோன்றிவிடும். இவ்விதப் பிரச்சினைகளுக்கு வெவ்வேறு தீர்வுகளை இப் பிரிவுகள் குறிப்பதால் இது இப்படி ஏற்பட வேண்டியதுதான். எல்லோரும் தேச நலனில் நாட்டங் கொண்டவர்கள் தான். ஆனால் எல்லோரும் அதை அடையும் வழியை ஒரே மாதிரியாகப் பார்ப்பது இல்லை. வியாதி வந்த மனிதனைச் சுற்றியுள்ள வைத்தியர்கள் அவனுக்குற்ற நோயைப்பற்றிக் கருத்து வேறுபாடு கொண்டு அதனால் அவனுக்கு அளிக்கும் சிகிச்சையிலும் கருத்து வேறுபாடுகள் கண்டால் நோயாளி தனக்கு எந்த

வைத்தியரிடம் நம்பிக்கை விழுகிறதோ, அவரைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு சிகிச்சையைத் தொடர்ந்து செய்வதுதான் அவனுக்குள்ள ஒரே வழியாகும். வைத்தியர்கள் ஒருவேளை, 'ஒத்துழைப்' பார்களே யானால், பிரயோகித்த பல சிகிச்சை முறைகள் ஒன்றையொன்று முனைப்பழிக்கும் அல்லது ஒருவேளை நோயாளியைக் கொன்றுவிடக் கூடும்.

## கட்சியும் நாடும்

நாட்டிற்கு எதிரானது அன்று கட்சி என்பதை மீண்டும் திருப்பிச் சொல்லி நினைவுபடுத்திக் கொள்ளவேண்டும். நாட்டின் தேவைகளை எடுத்துச் சொல்லும் ஒரு முறையாகவும், அது எந்தவித நடைமுறைத் திட்டத்தினால் பூர்த்தியாகிறது என்பதையும் கட்சி குறிக்கிறது. சாதாரண காலங்களில் கட்சிகளுக்கிடையே கூட்டுறவு தேவை என்று கூறுவது, இருக்கின்ற ஒரு நிலைமைக்கு ஒரு வழி உபயோகப்படாது என்று தெரிந்தும் அதை உபயோகிக்கச் சொல்வதுபோலத்தான். நம் நம்பிக்கைகளின்பேரில் செயலில் இறங்காது அவற்றைப் புதைத்துவிடச் சொல்வது கபட நாடகம் ஆடச் சொல்வதைப் போன்றதுதான். அட்லியும் (Attlee) அவர்தம் சகாக்களும் தொழிற் சாலைகளைத் தேசீய மயமாக்கவேண்டும் என்று கேட்பதும், சர்ச்சிலும் அவர்தம் தோழர்களும் வரம்பிலாத் தொழிற்றுணிவு (free enterprise) வேண்டும் என்று கேட்பதும், இரு சாராரும் ஒருவரைவிட மற்றவர் எந்தவிதத்திலும் கபடமில்லாத் தன்மையிலோ, நாட்டுப்பற்றிலோ மிகையானவர்கள் அல்லர். இரு சாராரும் நாட்டின் நலனிலே நாட்டங் கொண்டவர்களே. அவர்கள் சிபாரிசு செய்யும் கொள்கை யால் நாடு நலமுறுவதைக்காண அவர்கள் விரும்புகிறார்கள். ஆனால் அவர்களைப்போய், 'கட்சிக்குமேல் நாட்டை வை'த்து 'அவர்தம் கட்சிப் பிரிவினைகளை மறந்து நாட்டின் பொருளாதாரச் சீரமைப்பின் பொது வேலைத்திட்டத்தில் ஒத்துழைக்க வேண்டும்' என்று சொல்வது தங்களுக்கே உண்மை அற்றவர்களாயும் தங்கள் உண்மையான நம்பிக்கைகளைக் குழிதோண்டிப் புதைத்தும், பதிலுக் காகத் தாங்கள் அபாயகரமானதும், பயனற்றதும் என்று கருதும் கொள்கைகளைக் கடைப்பிடிக்கவும் சொல்வதற்கு ஈடாகும்.

கட்சி அரசியலிலிருந்து வரும் தாக்குதல், அறியாமையினாலோ அல்லது புரியாததனாலோ வராமல் கீழ்த்தரமான அரசியல் நேர்மை யற்ற தன்மையால் வருகின்றது. தாங்கள் வெறுப்பதைக் 'கட்சிச் சார்புள்ளது', அல்லது 'கட்சிப் பிரிவுள்ளது' என்று குறைகூறுவது பொதுவான காரியம். அவர்கள் விரும்புவதைத் 'தேசீய' அல்லது 'கட்சிச் சார்பற்ற' என்ற அடைமொழிகளால் சொல்லிக்கொள்வதும்

பொதுவாக நிகழும் நிகழ்ச்சி.[1] கட்சிச் சார்பற்ற அரசியலில் நிகழ்த்தும் பரிசோதனைகள் நெறியற்ற ஒரு கட்சிக்கோ அல்லது ஏதோ ஒரு காரணத்தால் கேந்திரமான பதவிகளை வகிக்கும் கட்சிக்கோ சாதகமாகிவிடுகின்றன. முதலாவது, உலக யுத்தத்திற்குப் பின்னர் ஃபிரான்சில், பெரும்பான்மைக் கட்சி மிகவும் அபாயம் விளைவிக்கக்கூடியதாகக் கருதப்பட்ட அரசியல் குழாங்களை ஒன்று சேர்த்து அவைகளை நடுநிலைமைப்படுத்தி அவற்றின்மீது ஏற்பட்டதுதான் தேசீய ஐக்கியம் (National Union) ஆகும். 'தேசீயத் தொகுதி' என்ற மறைமுகமான பெயரால் வழங்கப்பட்ட கட்சிச் சீட்டு, 'கட்சி சார்பற்ற சீட்டு' என்று அழைக்கப்பட்டது. செக்கோஸ்லோவேக்கியாவில் (Czechoslovakia) தேசீய அரசாங்கம் என்பது என்ன என்று நாம் அறிவோம். வரப்போகும் தேர்தலில் தோற்றுவிடும் என்று எதிர்பார்க்கப்படும் கட்சிதான் தேசீய சர்க்கார் வேண்டுமென்று பெரும்பாலும் கூச்சலிடும். ஆகையால் அதை அவ்வளவாகப் பொருட்படுத்த வேண்டுவதில்லை.

## கட்சியும் அரசியல் வாழ்வும்

குடியாட்சி முறையில் இவ்வாறாகக் கட்சி முக்கியமானதொரு பாகத்தைப் பெற்றிருந்தது. 'சிம்மாசனத்தில் காணப்படும் அதிகாரம், அரசியல் ஈர்ப்பு மையம்' என்று இதை ஃபைனர் (Finer) அழைக்கிறார். இவ்வாறாகத் தோன்றும் குழாங்களும் நேச உறவுகளும் தனியார் செயலில் உள்ளதைவிடப் பரந்த வாழ்வையும், செயல் திறனையும் அளிக்கவல்லனவாக இருக்கின்றன. திருச்சபை அல்லது தொழிற் சங்கம்போல இதுவும் கூட்டு வாழ்க்கையோடு இணைந்து அவ் வாழ்க்கை முறையிலிருந்து பிரிக்கப்படாததாயும், அதை எதிர்க்கக்கூடாததாயும் இருக்கிறது. மதத்தில் தனி மதப் பிரிவுகள் என்ன பணி புரிகின்றனவோ அவற்றைக் கட்சியானது அரசியல் வாழ்வில் செய்கின்றது என ரக்கீரோ (Ruggiero) சொல்லியுள்ள மேற்கோளை நாம் ஏற்கெனவே பார்த்தோம். அவை முழுமையின் அங்கங்களாக இருந்து தனித்தனியே அவற்றை விளக்க முற்படுகின்றன.

'கட்சி அரசாங்கம் என்னும் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி மிகவும் சிறப்பானது' என்று முடிவு கட்டுகிறார் ஃபைனர் (Finer). 'அரசாங்கத்தின் சாதாரணப் பாகமாகிய எதிர்க்கட்சி பல வாரங்

[1] 'அடுத்தமுறை வாக்காளர் தொகுதி தேர்ந்தெடுக்க வேண்டியது தேசீய அரசாங்கம் அல்லது சோஷியலிஸ்ட் கட்சிக் குழு (Socialist Caucus) ஆகிய இரண்டில் ஒன்றேயாகும்.' (M. P. Isle of Wight Country Press, quoted in the New Statesman)

களாகவும் வருடங்களாகவும் தங்கள் பேச்சுத் திறமையைக் காட்டி, யுத்த தந்திரங்களைக் கையாண்டு, மக்களைத் தூண்டிவிட்டு, அதிகாரத்தைக் கைப்பற்றி, அன்றைய அரசாங்கத்தைக் கவிழ்த்து, முடிவை மாற்றுவதற்கு அரசாங்கம் அனுமதி அளிக்கவேண்டுமானால் அதற்கு மிகவும் மனிதவிருப்புக்களை அடக்கியாளும் அசாதாரண மான சக்தி வேண்டியிராதா ? பழைய நாட்களைப் போலிருந்தால் இவையெல்லாம் தேசத் துரோகமாகவும், நாட்டின் அடிப்படையைக் குலைக்கும் சதிகளாகவும், புரட்சிகளாகவும் மதிக்கப்பட்டிருக்கும். தண்டனைகளாலும், நாடு கடத்தல் உத்தரவுகளாலும், பொது அபிப்பிராயச் சுதந்தரத்தை அடக்குமுறை செய்யும் ஆணைகளாகவும், வெளியரங்கமான பலாத்காரத்தாலும் இவை தடை செய்யப் பட்டிருக்கலாம். தேர்தல் தன்னடக்கத்தின் விதிகளை எல்லா நாடுகளும் கைப்பற்ற இயலவில்லை.'

அரசியலில் கட்சி முறையானது, பந்தயங்களில் தனி நபரைவிடக் குழுவிற்கே அதிக முக்கியத்துவம் அளிக்கப்படுவதைப்போல இருக்கிறது. விளையாட்டுப் பந்தயங்களில் தனி நபரின் வெற்றி யானது அவரது கட்சியின் வெற்றியோடு பிணைக்கப்பட்டிருக்கிறது. கூட்டுறவின் அவசியத்தை உணர்த்தும் ஒரு பாடம் இது. தனிமையாகச் செயலாற்றுமல் மற்றவர்களோடு இணைந்து பணியாற்றுவதுதான் சிறப்பான செயலாற்றும் வழி என்பதை மனிதர்கள் படித்துக்கொள்கிறார்கள். கூட்டமாக இணைந்து செய்யும் வேலையை ஒதுக்கி வைப்பவர்கள் அதிகமாகச் சாதித்துவிட முடியாது என்பதையும் அறிந்துகொண்டிருக்கிறார்கள். முடிவாக, குடியாட்சியின் ஒரு முக்கிய அலகான கட்சி மனிதர்களின் ஆறறிவின் நம்பிக்கையில் அடிப்படையாக வேரூன்றியிருக்கிறது. மனவெழுச் சியையோ பலாத்காரத்தையோ தூண்டாமல் அவர்களது வாத அறிவையும், கலந்தாலோசித்தலையும் தூண்டுவனவாகக் கட்சிகள் இயங்குகின்றன. இற்றை நாளின் மிகப் பெரிய பாராளுமன்ற அனுபவசாலியான ஆஸ்குவித் (Asquith) தாம் கட்சிகளை நம்புவதன் காரணம், 'அரசியலை மிக நல்ல முறையில் நடத்தும் வழி' கட்சி முறைதான் என்று சொன்னதில் ஆச்சரியமொன்றுமில்லை.

# 11. நடைமுறையில் ஜனநாயகம்

## பாகம் 3. மக்களின் விருப்பாற்றல் எவ்வாறு நிறைவேற்றப்படுகிறது? முடிவு செய்தல், நீதி வழங்குதல், நிருவாகம் ஆகியவற்றின் காரணிகள்

### (i) கொள்கைத் தீர்மானம்: அமைச்சரவை

குடியாட்சி நாடுகளில் கொள்கை வகுப்பது ஒரு சிறு குழுவினரின் பொறுப்பாக இருக்கிறது. ஆண்களும் பெண்களும் கொண்ட இக் குழு நாட்டின் அரசாங்கத்தை நடத்துகிறது. சில சமயங்களில் இக் குழுவை ' அமைச்சரவை ' என்றும் சில சமயங்களில் ' அமைச்சர் மன்றம் ' என்றும் அழைக்கிறார்கள். இதன் அங்கத்தினர்கள் ' ராஜீய அமைச்சர்கள் ' (அரசின் அமைச்சர்கள்) என்று குறிப்பிடப் படுகிறார்கள். சாதாரணமாக ஆறுபேரிலிருந்து இருபதுபேர் கொண்ட ஒரு குழுவாக இது இருக்கிறது. அமைச்சர் ஒவ்வொரு வரும் நாட்டின் நிர்வாகத்துறை ஒவ்வொன்றின் தலைவராகவோ அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட இலாக்காக்களின் தலைவராகவோ இருக்கிறார். இவ்வகைத் துறைகளுக்குப் பின்னர் வருவோம். பொதுவாக இந்த அமைச்சர் மன்றம் பிரதம மந்திரியின் தலைமையில் நடைபெறுகிறது. அது அவரால் அமைக்கப்பட்டு, நடத்தப்பட்டு வருகிறது. இவரைச் சில சமயங்களில் ' அமைச்சரவையின் தலைவர் ' என்றும் அழைக்கிறார்கள்.

#### அமைச்சர்கள் யார்?

அமைச்சர்கள் யார்? சட்டப்படி நாட்டின் தலைவரால் நியமிக்கப் பட்டவர்கள் அமைச்சர்கள் ஆவர். அரசியல் சட்டத்தின்படி இவர்கள் பாராளு மன்றத்தில் உறுப்பினராக இருக்க வேண்டுமென்பதில்லை. ஆனால் பிரிட்டனில் அமைச்சராக நியமிக்கப்படுபவர் பாராளு

மன்றத்தின் இரு சபைகளில் ஒன்றில் அங்கம் வகித்தாக வேண்டி இருக்கிறது. ஏனெனில் பாராளுமன்றத்தில் தம்முடைய இலாக்காவின் வேலையை விளக்குவதும், கூறப்படும் குறைகளுக்குப் பதில் கூறுவதும் அமைச்சருடைய முக்கிய அலுவலாக இருக்கிறது. எனவே அவர் பாராளுமன்றத்தின் அங்கத்தினராக இல்லாவிட்டால், நீண்டகாலம் பதவி வகிப்பது கடினமே. ஃபிரான்சு நாட்டில் அமைச்சர்கள் பாராளுமன்ற அங்கத்தினர்களாக இல்லாதிருந்தாலும் இரு சபைகளிலும் பேச உரிமை உண்டு. இருப்பினும், பாராளுமன்ற அனுபவத்தின் வாயிலாகத்தான் அமைச்சரவைக்குத் தெரிந்தெடுக்கப் படுகிறார்கள்.

பாராளுமன்றத்திற்கு அங்கத்தினர்களாகத் தேர்ந்தெடுக்கப் பட்டவர்கள், தேர்தல் போராட்டத்திற்கு ஈடுகொடுத்து வெற்றி கண்டவர்கள், பொதுவாழ்வில் சாதாரண அங்கத்தினராக இருந்து அனுபவம் பெற்றவர்கள் ஆகியவர்கள்தான் அமைச்சரவையில் இடம் பெறுகின்றனர். ஆகவே அவர்கள் தங்கள் நாட்டிலும் அரசியல் பொதுவாக எவ்வாறு இயங்குகிறது, வாக்காளர் தொகுதி எதை விரும்புகிறது; அரசாங்கம் என்னென்ன முயற்சிகளைச் செய்கிறது; என்ன வேலை செய்கிறது; அரசாங்கத்தாரின் நடவடிக்கைகளுக்குப் பொதுமக்களின் மனப்பான்மை எவ்வாறு அமையும் என்பன போன்ற விஷயங்களையெல்லாம் பொதுவாக அவர்கள் அறிந்திருக் கிறார்கள் என்று ஏற்றுக்கொள்ளலாம். அவர்கள் நிர்வகிக்கும் இலாக்காவைப் பற்றிய நுணுக்க அறிவை அந்தத் துறையிலுள்ள நிரந்தர ஊழியர்கள் பெற்றிருக்கிறார்கள். இலாக்கா செய்யும் பொதுவான வேலைகளை அமைச்சரவை எடுத்த கொள்கை முடிவோடு இணைப்பதுதான் இவர்களின் முக்கிய வேலையாகும். அத்துடன் தங்களது இலாக்கா திறம்பட வேலை செய்யச் செய்வதும் சுமுகமான முறையில் இலாக்கா இயங்கவும், அதிலுள்ள ஊழியர்களின் முழுத் திறமையையும் அதில் ஈடுபடுத்தவும் செய்வது அவர்களின் பணி யாகும். தேசீய வாழ்வில் திடீரென்று சில அலுவல்கள் முக்கியம் பெறுகின்றன. இப் பொறுப்பை மேற்கொள்ள அவர்கள் பலரோடு சேர்ந்து கூட்டாக இயங்குவதும் அவர்களிடமிருந்து எதிர்பார்க்கப் படுகிறது.

இப்படி அமைக்கப்பட்ட அமைச்சரவை அந்த நாட்டின் அரசியல் அமைப்புப்படி ஒரே அரசியல் நோக்குக் கொண்ட அங்கத்தினர் களாகவோ (தனிக்கட்சி அரசாங்கமாகவோ) அல்லது பல அரசியல் நோக்குகள் இருந்தும் சில பொதுவேலைத் திட்டங்களில் ஒத்துப் போகக்கூடிய மாற்றுக் கருத்துக்கள் கொண்டவர்களாகவோ (பல கட்சி அரசாங்கமாகவோ) அமையலாம். இவ் விரண்டு வகைகளிலும்

பாராளுமன்றத்தின் பெரும்பான்மைக் கருத்துக்கொப்ப எவரால் அமைச்சரவை அமைக்க முடியும் என்று நாட்டின் தலைவர் கருதுகிறாரோ, அவருக்கு அமைச்சரவை அமைக்கும் பொறுப்பு அளிக்கப்படுகிறது.

இரு கட்சி அரசாங்க அமைப்பில், பெரும்பான்மைக் கட்சியின் தலைவரைப் பிரதம அமைச்சராக நியமித்திருப்பதைத் தவிர வேறு மாற்றுவழி இல்லை.[1] ஆனால் பல கட்சி அரசாங்க அமைப்பில் நாட்டின் தலைவருக்கு ஓரளவுக்கு அதிகார வாய்ப்புக் கிடைக்கிறது. அமெரிக்கக் குடியரசில் அமெரிக்க ஜனாதிபதியே பிரதமராகப் பணி புரிகிறார். இவருக்குத் துணைபுரியும் அமைச்சரவையின் அங்கத்தினர்கள் பாராளுமன்ற உறுப்பினர்கள் அல்லாதவர்கள். அவர்களது நியமனம் செனட் சபையால் அங்கீகரிக்கப்படவேண்டும் என்ற ஒரே வரையறைக்குள் அவர் விருப்பப்படி எவரை வேண்டுமானாலும் அமைச்சரவைக்கு நியமிக்கலாம்.

## பிரதமர்

இன்றைய உலகில் உண்மையான அதிகாரம் பெற்றிருக்கும் பதவிகளில் சுமுகமாக இயங்கும் பாராளுமன்றக் குடியாட்சி முறையின் பிரதமர் பதவி ஒன்றாகும். பிரதமர் அமைச்சர்களில் ஒருவராகவும் ஏனைய அமைச்சர்களைப் போலவே ஊதியம் பெறுபவராகவும் இருந்தாலும், அமைச்சரவையின் ஒப்புக்கொள்ளப்பட்ட தலைவர் என்பதோடு, அந்தச் சபையின் பொதுக் கொள்கைகளைத் தொடங்கி வைப்பவராகவும், அமைச்சரவையின் கடையாணியாகவும் இருக்கிறார். அவர் இராஜிநாமாச் செய்தால் முழு அமைச்சரவையும் இராஜிநாமாச் செய்யும். அமைச்சரவையைக் கலந்து கொள்ளாமலேயே இம்மாதிரியாக அவர் இராஜிநாமாச் செய்கிறார் என்பதும் நாம் அறிந்ததே. 'உலகிலேயே அரசியலமைப்புக்குக் கட்டுப்பட்ட அரசியல் தலைவர்களிலெல்லாம் அதிகமாக அதிகாரம் பெற்ற நாட்டின் தலைவராகப் பிரதமர்' வருணிக்கப்பட்டிருக்கிறார்.

உண்மையில் நான்கு வேறுபட்ட பணிகள் புரியும் ஒருவராகத் தான் பிரதமர் இருக்கிறார். அவர் அமைச்சரவையின் தலைவர். அந்த நாட்டு அரசாங்கத்தின் தலைவர்; அதன் காரணமாக அந்த நாட்டின் குடிமக்களில் அவர் மிக்க அதிகாரம் பெற்றவர். மேலும் அவர் பாராளுமன்றத்தின் தலைவரும் ஆவார். பாராளுமன்ற

[1] ஃபிரான்சு போன்ற சில நாடுகளில் இராச்சியத் தலைவர் சிற்சில சமயங்களில் அமைச்சரவையின் கூட்டங்களுக்குத் தலைமை தாங்குவார். அமெரிக்க ஐக்கிய நாடுகளின் ஜனாதிபதியே அவர்தம் அமைச்சரவைக்குத் தலைவராக இருக்கிறார்.

விவாதங்களில் அவர் குறுக்கிட்டுப் பேசுவது பெரிதும் செல்வாக்குடையதாக இருக்கிறது. அரசாங்கக் கொள்கைகளை எடுத்துச் சொல்லி விளக்கம் கூறி அவைகளுக்குப் பாராளுமன்ற அங்கீகாரத்தைப் பெறும் பொறுப்பு அவருடையதாக இருக்கிறது. மூன்றாவதாக நாட்டுத் தலைவருக்கும் அமைச்சரவைக்கும், அவருக்கும் பாராளுமன்றத்துக்கும், அவருக்கும் மக்களுக்கும், இடையேயுள்ள தொடர்பு பிரதமர் மூலமாகத்தான் ஏற்படுகிறது. அரசரோடு அல்லது ஜனாதிபதியோடு பிரதமர் அன்றாடம் தொடர்பு வைத்திருக்கிறார். அவருக்கு அன்றாட நிகழ்ச்சிகளைப் பற்றித் தெரிவிப்பதோடு சில சமயங்களில் அவருடைய பெயரில் பேசவும் செய்கிறார். நான்காவதாக அவர்தம் கட்சியின் தலைவர் அவரே. அத்துடன் அவர்களைப் பதவிக்கு அனுப்பிய பெரும்பான்மையோருக்கும் அவரது கட்சிக்கும் இடையே நல்லுறவை நிலைக்கச் செய்வதும் அவரது பணியே. (சில நாடுகளில் ஐந்தாவது பணியொன்றையும் அவர் புரிகிறார். அரசாங்க ஆதரவை அளிக்கும் அதிகாரம் அவரிடம் இருக்கிறது. பிரிட்டன், ஃபிரான்சு போன்ற நாடுகளில் இந்த வகையான ஆதரவு அளித்தல் அதிகமில்லை.

## கட்சியின் தலைவராகப் பிரதமர்

இந்த நான்கு பதவிகளில் நான்காவதாகிய கட்சித் தலைமைதான் மற்றவர்களோடு அவருக்கு நெருங்கிய தொடர்பை ஏற்படுத்துகிறது. தேர்தல் முடிந்த பின்னர் அவரது கட்சி, அதிகாரத்திற்கு வரும்போது அந்தக் கட்சியின் தலைவர் என்ற முறையில் அவர் பிரதமர் ஆகிறார். கட்சி அதிகாரத்திற்கு வருவதே சாத்தியமில்லாதபோதும், அக் கட்சியின் தலைவரைத் தேர்ந்தெடுப்பதானது ஒரு பிரதமரைத் தேர்ந்தெடுப்பதாகத்தான் இருக்கிறது. இரு கட்சி அரசியல் அமைப்பில் இது நிச்சயமாக நிகழ்ந்து வருகிறது. கட்சித் தலைவராக இல்லாத ஒருவருக்குப் பிரதமர் பதவி கிடைப்பது இன்றைய நாளில் நடைபெறாத ஒரு நிகழ்ச்சி ஆகும். பல கட்சி அரசியல் அமைப்பில், கட்சித் தலைமைக்கு நியமிக்கப்படுவதன் மூலம் பிரதமர் பதவி கிடைக்கும் என்று சொல்வதற்கில்லை. ஏனெனில், மற்ற கட்சிகளிலிருந்து போட்டிகள் இருக்கலாம். ஆனால் பிரதமர் பதவி, கட்சிகள் அல்லது கூட்டங்களின் (groups) தலைவர்களுள் ஒருவருக்குத்தான் கிடைக்கமுடியும் என்பது பொருள். ஆகவே, கட்சியில் முதன்மை பெறுவதன் மூலமாகத்தான் எந்த வகை அமைப்பிலும், நாட்டில் முதன்மை இடம் பெறமுடியும் என்று அறிகிறோம்.

## அமைச்சரவையின் முதற் பொறுப்பு

அமைச்சரவை அமைக்கப்பட்டபின், நாட்டின் ஆட்சிப் பொறுப்பு அதன் எல்லா அம்சங்களிலும் அமைச்சரவையைச் சார்கிறது. அதன் அதிகாரங்கள் வழக்கமாகக் கூறப்படும் தலைப்புக்களில் வகைப் படுத்திக் கூறப்பட முடியாத அளவுக்கு அதிகம். உள்நாட்டு விவகாரமும் சரி, வெளிநாட்டு விவகாரமும் சரி, பொது விவகாரங் களின் அடிப்படைக் கொள்கைகளைத் தீர்மானிப்பது, பொதுப் பணம் செலவழிக்கப்படும் வழியைத் தீர்மானிப்பது, உயர் சிவில்துறை அதிகாரிகளையும், பட்டாளத்து அதிகாரிகளையும், ஏன்? சில நாடுகளில் மத குருக்களையும்கூடத் தேர்ந்தெடுத்து நியமனம் செய்வது, எந்தத் துறைகளில் சட்டம் தேவை என்று தோன்றுகின்றவற்றிற்குச் சட்டங்களைத் தயாரிப்பது, பாராளுமன்றத்தால் அவை பரிசீலிக்கப் படச் செய்வது போன்ற பல பணிகள் அமைச்சரவையின் வேலை களாகும்.

அரசியல் அமைப்பு விதிகளின்படிப் பிரகடனம் (decree) செய் வதன் மூலமாகவோ, அல்லது அமைச்சரவையின் அரசாங்க உத்தர வின் மூலமாகவோ சட்டமியற்றும் வேலையும் அவர்களது பணியே ஆகும். நீதி வழங்குவதிலும், நீதிபதிகளை நியமிக்கும் அதிகாரத்தின் மூலமும் அமைச்சரவை அதிகாரம் பெற்றிருக்கிறது. இவ் வகைப் பணிகள் அனைத்திலும் பாராளுமன்றத்தின் ஒப்புதலை அடிப்படை யாகக் கொண்டுள்ளதென்றாலும் பல நாடுகளில் நாட்டின் தலைவர் மூலமாகப் பாராளுமன்றத்தைக் கலைக்கச் சொல்லும் உரிமையின் மூலமாக அமைச்சரவை அதிக அதிகாரம் பெற்றதாக விளங்குகிறது.

## பாராளுமன்றத்தைக் கலைத்தல்

பாராளுமன்ற அமைப்புமுறை சுமுகமாகச் செயலாற்றுவதற்கு அவசியமானது, அந்த மன்றத்தைக் கலைக்கும் உரிமை என்பது அனுபவ பூர்வ உண்மை. இவ் வுரிமை சரியானபடி பயன்படுத்தப் பட்டால் எவ்வகை அரசியல் நெருக்கடியையும் தீர்க்கலாம். அமைச் சரவையும் பாராளுமன்றமும் ஒப்புக்கொள்ளாது போனால் வாக்காளர் தொகுதி அந்த இரண்டில் எது சரி என்று முடிவு செய்யும். அரசியல் அதிகாரத்தின் நிரந்தரக் கருவூலமாகிய மக்களிடத்தில் முறையிட்டு முடிவு தேடுதல், அரசின் பலவகைப் பிரதிநிதிகளுக்கிடையே ஏற்படும் சிக்கலான விவகாரங்களைத் தீர்த்து வைக்கும் நியாயமான வழியாகும். பாராளுமன்றக் குடியாட்சி முறையில் இறைமையானது புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் சபை அல்லது பிரதிநிதிகள்

சபை ஆகிய சபைகளில் ஒன்றில் காணப்படுகிறது என்று சாதாரண மாகக் கூறப்படுகிறது.

ஆனல் பாராளுமன்றத்தைக் கலைக்கும் உரிமையானது திறம்பட விளங்க, அதை அமல் நடத்த வேண்டுமென்பதில்லை. அந்த உரிமை உபயோகப்படுத்தப்படும் என்று அச்சுறுத்துவதே அதன் சிறப்புக்களில் பிரதானமானது. ஏனெனில், இந்த உரிமை இல்லாதபோது, என்ன நடக்கிறது என்பதை நாம் அறியும்போது இதை உணர்கிறோம். தொல்லைதரும் பாராளுமன்றத்திற்கு மீண்டும் தேர்தல் தொகுதிகளுக்கு அனுப்பிவிடுவேன் என்று அச்சுறுத்தக் கூடிய பிரதமர் அதிகமான அதிகாரமுடையவராக இருக்கிறார். புதிதாக நடைபெறும் தேர்தலில் ஏற்படும் செலவுகளும், இடையூறு களும்பற்றி அறிந்திருக்கும் எந்தப் பிரதிநிதியும் விளையாட்டுத் தனமாக அரசாங்கத்தை எதிர்த்து எந்தச் செயலிலும் இறங்க மாட்டார். ஆனல் இந்த அதிகாரமுடைய பிரதமர் பாராளு மன்றத்தோடு சச்சரவு செய்துகொள்ள நேர்ந்தால் அவர் தோல்வி அடைவது நிச்சயம். இராஜிநாமாச் செய்வதுதவிர வேறு மாற்று வழி அவருக்கு இல்லை.

ஃபிரான்சின் மூன்ருவது குடியரசு இவ் வகைக் குறைபாட்டுக்குச் சரியான எடுத்துக்காட்டாகும். அதன் அரசியல் அமைப்புச் சட்டப் படி, செனட் சபையின் ஒப்புதல் பெற்று, ஜனதிபதியால் பிரதிநிதி மன்றம் கலைக்கப்படலாம். ஒரே ஒரு தடவைதான் 1887-ல் இந்த உரிமை உபயோகப்படுத்தப்பட்டது. அதுவும்கூட, மன்னராட்சியை மீண்டும் கொண்டுவர வேண்டுமென்ற கொள்கையுடைய ஜனதிபதி மக்மகானுக்கு (MacMahan) புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் மன்றம் புரட்சிகரமான ஒரு சபையாகத் தோன்றியது என்ற காரணத்திற்காகத்தான். மக்களின் தீர்ப்பிலிருந்து தப்பித்துக் கொள்ளும் ஒரு வழியாகத்தான் இந்தச் சிக்கலில் பிரதிநிதிகள் மன்றம் கலைக்கப்பட்டது. எனினும் மக்கள் மீண்டும் குடியரசு வாதிகளைத் தேர்ந்தெடுத்து, அதிகாரத்தில் நிலை நிறுத்தினர். இதற்குச் சிறிது காலத்திற்குப் பிறகு, மக்மகான் தன் பதவியிலிருந்து விலகியதோடு, நடைமுறை ஆட்சியிலிருந்து மன்னராட்சியை மீண்டும் கொண்டுவருவது என்ற பேச்சே ஒழிந்தது. துரதிருஷ்ட வசமாக இங்குப் பாராளுமன்றத்தைக் கலைப்பது அரசியல் அமைப்புச் சட்டத்திற்குப் புறம்பானதாகப் பொதுமக்கள் அபிப்பிராயம் ஏற்பட்டு விட்டது. எவ்வளவுதான் சிக்கலாக இருந்தபோதிலும் பின்னர்ப் பதவிக்கு வந்த ஜனதிபதிகள் இந்த உரிமையை உபயோகிக்கவில்லை. ஏனெனில், பாராளுமன்றக் கலைப்பு ஏதோ ஜனதிபதியின் சொந்த அதிகாரங்களை அதிகப்படுத்தும் முயற்சியாகக் கருதப்பட்டது.

பாராளுமன்ற எதேச்சாதிகாரத்திலிருந்து தப்புவிக்கும் வழியாக அமைந்த பாராளுமன்றக் கலைப்பு, இவ்வாறாக நீக்கப்பட்டது. பிரதிநிதிகள் மன்றம் கலைக்கப்படப் போவதில்லை என்று ஆனவுடனே அவர்களுக்கு நான்காண்டுகள் தொடர்ந்து பதவிக்காலம் நீடிக்கும். அவர்கள் எந்தவிதமான பயமுமின்றி அமைச்சரவைகளைத் தோற்கடிக்கலாம். ஏனெனில், வாக்காளர் தொகுதிக்கு முறையிடுவது சாத்தியமில்லாமற் போயிற்று. பல கட்சி அமைப்பு முறையால் ஏற்கெனவே நிலையற்றிருந்த அமைச்சரவை இதனால் இன்னும் அதிகமாக நிலையற்றுப்போக ஆரம்பித்தது. உண்மையில் சொல்லப்போனால் பாராளுமன்றக் கலைப்பு அதிகாரத்தை இரு கட்சி அரசாங்க அமைப்பிலிருந்து ஒருவேளை விட்டுவிடலாம். ஏனெனில், பாராளுமன்றம் பெரும்பாலும் பொதுவாக நிலையாக உள்ளதொன்றாகும். ஆனால் பல கட்சி அமைப்பில், கட்சிகள் அதிகாரத்தை நீண்டநாள் பெற்றிருக்கும் நோக்கத்தோடு மந்திரி சபைகளை மாற்றி மாற்றி அமைத்து விளையாடும் பைத்தியக்காரத்தனத்தைத் தடுக்கவல்லது பாராளுமன்றக் கலைப்பு அதிகாரம் ஒன்றே ஆகும். ஆகவே இவ் வதிகாரம் பல கட்சி அமைப்பில் இருந்தேயாக வேண்டும்.

1875ஆம் ஆண்டின் அரசியல் அமைப்புச் சட்டத்தை ஆக்கியவர்கள், அரசியல் அமைப்பு சுமுகமாக இயங்குவதற்குச் சபைக் கலைப்பு மிகவும் அவசியம் என்று கருதி, அந்த ஏற்பாட்டைச் செய்தார்கள். அந்த ஏற்பாட்டைத் தவறான வழியில் பல்லாண்டுகளுக்கு முன் உபயோகித்தார்கள். எனவே, அதை இழக்க நேரிட்டது. இவ் வதிகாரத்தை இழந்த காரணத்தால், ஜனாதிபதிகள் செனட் சபையின் ஒப்புதல் பெறவேண்டும் என்ற கட்டுப்பாடு இருந்த காரணத்தாலும், பல மந்திரி சபை நெருக்கடிகள் சமாளிக்கக்கூடியனவாக இருந்தும் சமாளிக்க முடியாமற் போனார்கள். ஆனால் துரதிருஷ்டவசமாக இவ் வதிகாரம் இல்லாமற் போயிற்று. இத் தவறு நான்காவது குடியரசின் அரசியல் அமைப்புச் சட்டத்தில் திருத்தப்பட்டு இருக்கிறது. இதன்படிக் கலைப்பு அதிகாரத்தைச் சில கட்டுப்பாட்டுக்குள் உபயோகிக்க முடியும். அதாவது தேர்தல் முடிந்து, குறைந்தது 12 மாதமாவது ஆகியிருந்தால் மன்றம் கலைக்கப்படலாம். எப்படி இருப்பினும், இப்போதுதான் ஏற்பட்டிருக்கும் இந்த ஏற்பாடு எவ்வாறு நடைமுறையில் இயங்கும் என்று சொல்வது சாத்தியமில்லை.

## அமைச்சுப் பொறுப்பு (Ministerial responsibility)

சுயமாகத் தங்கள் இலாக்காவின் வேலைப் பொறுப்பும், கூட்டாகப் பொதுக்கொள்கை வகுக்கும் பொறுப்பும் ஆகிய இருவகைப் பொறுப்புக்கள் அமைச்சர்களுக்குண்டு. கொள்கை வகுக்கும்

'பொறுப்பு' என்றால் பொருள் என்ன? அமைச்சரவை முழுமைக்கும் பொதுவான கொள்கை என்று பொருள். அவர்களுக்குள் ஏதாவது மாற்றுக் கருத்துக்கள் இருக்குமாயின், அது வெளியே சொல்லப் படுவதில்லை. சிறுபான்மையோர், பெரும்பான்மையோரின் முடிவை ஒப்புக்கொள்வதோடு, தங்கள் பேச்சிலும் வாக்குப் பதிவிலும், நோக்கிலும், அந்த முடிவைத் தங்களது முடிவாக ஆக்கிக் கொள்கிறார்கள். மனச்சாட்சிக்கு விரோதமான இதை ஒப்புக் கொள்ள முடியாது போனால் பதவியிலிருந்து விலகிவிடுகிறார்கள். எனவே இந்தக் கொள்கையைப் பாராளுமன்றம் ஒப்புக்கொள்ள மறுத்தால், இந்தக் கொள்கை ஒரே ஒரு இலாக்காவைச் சார்ந்த முடிவாயினும், அமைச்சரவை முழுமையும் அந்தப் பொறுப்பை யேற்று இராஜிநாமாச் செய்கிறது. இப்படி இந்தப் பிரச்சினை ஓர் இலாக்காவைச் சேர்ந்தது என்றில்லாமல் முழு அமைச்சரவையின் பொறுப்பாக மாறுகிறது. அந்த முடிவின்படி முழு அமைச்சரவையும் நீடிக்கும் அல்லது அதற்காகப் பதவியைவிட்டு விலகும். ஓர் அமைச்சரின் தவறு உண்மையிலேயே சொந்தத் தவறாக இருக்கு மானால் முழு அமைச்சரவையும் இதற்கு உட்பட வேண்டுவதில்லை. ஆனால் சில சமயங்களில் தானே தவறிழைத்த காரணத்தாலோ அல்லது விதிமுறையில் தவறிழைத்த காரணத்தாலோ தனி அமைச்சர் ஒருவர் பதவி இழப்பு ஏற்படுவதைத் தாங்க முடியாது வீழ்ந்த பலவீனமான அமைச்சரவைகளும் இருந்ததுண்டு.

இந்த வகையான கூட்டுப் பொறுப்போடுகூடத் தனி அமைச் சருக்குத் தன் இலாக்காவின் நிர்வாகப் பொறுப்பும் இருக்கிறது. பாராளுமன்றத்தின் ஓர் இலாக்காவின் நிர்வாகத்தைப் பற்றிக் கேள்வி எழுப்பப்பட்டு, அந்த அடிப்படையில், பிரதிகூலமான சூழ்நிலை உருவாகும் என்று பிரதமருக்குத் தெரியும்போது, அவர் இரண்டி லொன்று செய்யலாம். ஒன்று இது அமைச்சர்பாடு என்று விட்டு விடுவது; மற்றொன்று அமைச்சரவையின் ஆதரவை அவருக்கு அளித்து அதன்பால் ஏற்படும் தோல்வியைத் துணிந்து ஏற்றுக் கூட்டமாக இராஜிநாமாச் செய்வது.

இதிலே பேசப்படும் 'பொறுப்பு' அரசியல் பொறுப்புப் பற்றியதேயொழிய, சட்ட ரீதியான பொறுப்பைப் பற்றியதன்று. தேசீயப் பாதுகாப்பிற்கும் நல்வாழ்வுக்கும் குந்தகம் விளைவிக்கக்கூடிய வகையில் ஓர் அமைச்சரின் நடத்தை இருக்குமானால் அவருக்கு எதிராகப் பெருங்குற்றச்சாட்டு (Impeachment) கொண்டுவரலாம் என்பது கொள்கையளவில் இருக்கிறது. ஆனால் அப்படிப்பட்ட முறைகள் இப்பொழுது வழக்கொழிந்து விட்டன.

'பொறுப்பு' என்னும்போது அமைச்சர்கள் தனியாகவும், கூட்டாகவும் பாராளுமன்றத்தின் ஆதரவு பெற்றிருக்கவேண்டும். அந்த ஆதரவு கிடைக்காது போகும்போது தங்கள் பதவியிலிருந்து விலகிவிடவேண்டும். பதவியிலிருந்து விலகுவதுதான் இதற்குரிய தண்டனை. எனினும் அரசியல் வாழ்வே மனிதனின் பதவி ஆசையை அடிப்படையாகக்கொண்டு எழுப்பப்பட்டு இருப்பதால் பதவி நீக்கம் அவருடைய அரசியல் வாழ்வுக்கு அந்தமட்டில் ஒரு முற்றுப் புள்ளிவைப்பதாக ஆகும்.

பாராளுமன்றத்தின் ஆதரவு இருக்கும்வரை அமைச்சர்கள் சுதந்தரமாகச் செயலாற்றலாம். மாற்றுவதற்குக் கடினமாக எழுதப் பட்ட அரசியல் அமைப்புச் சட்டத்தையுடைய சில நாடுகளில் மாத்திரம், அமைச்சர்கள் எடுத்துக்கொள்ளும் நடவடிக்கைகளில் சட்ட ரீதியாக இடையூறுகள் ஏற்படலாம். அப்படி இருந்தாலும் அமைச்சர்கள் அரசியல் அமைப்புச் சட்டத்தைத் திருத்த முற்படலாம்.

## அமைச்சரவையின் அதிகாரம்

தங்களுக்குள்ளே முழு ஒருமைப்பாட்டோடும், தலைசிறந்த தலைவர் ஒருவரால் நடத்தப்படும் சுதந்தரமும் திறமையும் மிக்க சிவில் ஊழியர்களால் உதவி செய்யப்பட்டும், கிடைக்கக்கூடிய தலைசிறந்த அறிஞர்களின் அறிவுரையைப் பெற்றுக்கொள்ளவும் கூடியதான ஓர் அமைச்சரவைக்குப் பாராளுமன்றத்தில் உறுதியாகப் பெரும்பான்மையோரின் ஆதரவும் இருந்து விடுமாயின் அது மிகுந்த சக்தி வாய்ந்ததாக இருக்கும். இப்படிப்பட்ட அமைச்சரவையின் முடிவுகளுக்கு, மேல் முறையீடு (appeal) கிடையாது. பாராளு மன்றம் அதற்குப் பிரதிகூலமாக வாக்களிக்கும் என்று அஞ்ச வேண்டியதில்லை. வாக்காளரில் பெரும்பான்மையோரின் பிரதி நிதியாக இது இருப்பதால், பொதுமக்கள் அபிப்பிராயம் தங்கள் தீர்மானங்களுக்கு எதிராகப் புரட்சியாகக் கிளம்பும் என்று அஞ்சவும் வேண்டியதில்லை. ஆகவே அது உண்மையாகவே ஆட்சி செய்யும் அதிகாரம் பெற்ற ஒரு குழு என்று கூறலாம். 'உறுதிமிக்க பெரும்பான்மை', என்பது மிக அவசியமான ஒரு நிபந்தனை ஆகும். ஏனெனில் அமைச்சரவை செய்யும் எல்லாக் காரியங்களையும் பாராளுமன்றம் • நேரடியாக ஒப்புக்கொள்ள வேண்டும் அல்லது கீழ்ப்படிதலான முறையிலாவது ஏற்றுக்கொள்ள வேண்டும், இப்படிப்பட்ட 'உறுதிமிக்க பெரும்பான்மை'யின் ஆதரவு இல்லாத அமைச்சரவை, சக்தி பெற்றதாக இருப்பினும் நிலையற்ற தன்மை யுடையதாய்ச் சிரமத்திற்குள்ளாகும். இப்படிப்பட்ட அமைச்சரவை,

நம்பிக்கைக்குப் பாத்திரமான தங்கள் ஆதரவாளரை முழுமையாக நம்பி நிற்கும் என்றாலும், நம்பிக்கையற்ற, உறுதி குறைந்த பெரும்பான்மையின் ஆதரவைத் தொடர்ந்து பெறுவதற்கான முயற்சிகளைச் செய்துகொண்டே இருக்கவேண்டும். ஆகவே இது நீண்ட காலத் திட்டங்களை மேற்கொள்ளாது, ஏனையோரைப் பாதிக்காமல் இருக்கவேண்டும் என்ற நோக்கத்தோடு, முரண்பட்ட செயல்களில் ஆர்வம் காட்டாது, தயங்கித் தயங்கியே பணிபுரிகிறது. அன்றாட அலுவலக வேலைகளோடு அதன் பணி முடிந்துவிடுகிறது. எவரையும் பாதிக்காதபடி அதன் முடிவுகளும் நியமனங்களும் இருக்கும். உண்மையாக ஆட்சிசெய்ய வேண்டுமென்றில்லாதபடி எப்படியாவது பதவியில் நீடிக்கவேண்டும் என்பதே இவர்களின் முக்கிய நோக்கமாக இருக்கும். இந்த மாதிரியான நிலையற்ற தன்மை, நாம் இதற்கு முந்தைய அத்தியாயத்தில் பார்த்தபடி, பல கட்சி அமைப்பில் நிச்சயமாக ஏற்படும் நிகழ்ச்சியாகும்.

இப்படி அரசாங்கத்தின் சிக்கல்களை எந்தக் கோணத்திலிருந்து பார்த்தாலும், அரசியல் கட்சிகள் இருப்பதன் அவசியத்தை மீண்டும் மீண்டும் உணர்கிறோம். ஒரு கட்சி அமைச்சரவையின் அதிகாரத்திற்கு உறைவிடமாக இருக்கிறது. அதே சமயத்தில் அதுவே அமைச்சரவையின் பலவீனத்திற்கும் காரணமாக அமைகிறது. பொதுமக்கள் அபிப்பிராயம் மாறாதா என்று எதிர் நோக்கி, மாற்று மந்திரி சபைகளைத் தயாராக வைத்துக்கொண்டு எதிர்க்கட்சி அல்லது பல எதிர்க் கட்சிகள் வாசலில் காத்துக் கொண்டிருக்கின்றன என்பதைப் பலவீனமான தென்றாலுஞ் சரி, சக்தியுள்ளதென்றாலுஞ் சரி, எந்த வகையான அமைச்சரவையும் இதனை அறிந்திருக்கிறது.

நல்லதற்கோ கெட்டதற்கோ, எவ்வாறாயினும் அமைச்சரவை கொண்ட அரசாங்க அமைப்பு, பொதுமக்கள் அபிப்பிராயத்தோடு மிகவும் நேரடியான தொடர்புடையதாயும், அதற்குக் கட்டுப் பட்டதாயும் விளங்குகிறது. நேரடி மக்களாட்சிக்கு (Direct Democracy) அடுத்தபடியாக அமைச்சரவை முறை, பாராளு மன்றத்தின்மீது சார்ந்திருப்பதாலும், பாராளுமன்றம் வாக்காளர் தொகுதியோடு நெருங்கிய தொடர்புடையதாக இருப்பதாலும், மக்கள் இறைமையை உண்மையாகப் பிரதிபலிக்கும் முறையாகத் திகழ்கிறது. ஆகவேதான் இற்றைக்குள்ள குடியாட்சி அமைப்புக்களில் இந்த முறை தலைசிறந்த இடம்பெற்று விளங்குகிறது.

## (ii) கொள்கைத் தீர்மானம்

### அரசின் தலைவர்

ஒவ்வொரு நாடும் அதன் அரசின் பிரதிநிதியாகவும், அரசாங்கத்தின் முதல்வராகவுமுள்ள ஒருவரைத் தலைவராகக் கொண்டிருப்பது வழக்கமாகும். அவர் ஒரு பரம்பரையாக இருந்துவரும் மன்னராகவோ அல்லது தேர்ந்தெடுக்கப்பட்ட ஜனாதிபதியாகவோ இருக்கலாம். மன்னராக இருப்பவர் ஆணாகவோ பெண்ணாகவோ இருக்கலாம். ஆனால் இதுவரை ஜனாதிபதியாகப் பெண் எவரும் தேர்ந்தெடுக்கப்படவில்லை. எனினும் எண்ணற்ற பல அரசியல் அமைப்புக்களில் இருபாலாருக்கும் சம உரிமை அளிக்கப்பட்டிருப்பதால் பெண் ஜனாதிபதி வருவதைச் சட்டப்படித் தடைசெய்யக் கூடியது ஒன்றுமில்லை. நான்காண்டுகள் (அமெரிக்கக் குடியரசு-U.S.A.) முதல் ஏழாண்டுகள் (ஃபிரான்சு-France) வரை பதவிக்காலம் கொண்ட ஜனாதிபதிகள் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். மக்களால் அமெரிக்க ஜனாதிபதி தேர்ந்தெடுக்கப்படுகிறார். பாராளுமன்றத்தால் ஃபிரான்சிலும், ருஷ்யாவிலும் இவர்கள் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். சுவிட்சர்லாந்து நாட்டில் ஜனாதிபதி அமைச்சரவையில் ஒருவரே. இங்கு முறைப்படி ஒவ்வொருவரும் ஓராண்டுச் சுவிஸ் கூட்டு இணைப்பின் (Confederation) தலைவராகப் பணியாற்றுகிறார். ஜனாதிபதிகள், அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் (U.S.A.) ஃபிரான்சிலும் மீண்டும் ஒருமுறை தேர்ந்தெடுக்கப்படலாம். ஆனால் லெபனானிலும் (Lebanon) சிரியா (Syria)விலும் ஒரு பதவிக்கால ஓய்வுக்குப் பின்னரே இவர்கள் மீண்டும் தேர்தெடுக்கப்படலாம்.

### மன்னரா அல்லது ஜனாதிபதியா?

மன்னராட்சி சிறப்புடையதா, குடியாட்சி சிறப்புடையதா? என்ற வறட்டுத் தத்துவம் பேசுதல் உபயோகமற்ற செயலாகும். ஒரு நாட்டுக்குப் பொருந்தும் அரசியல் அமைப்பு இன்னொரு நாட்டிற்குப் பொருந்தாது. சக்திமிக்க மன்னர்கள் காலம் கடந்து போய்விட்டது என்றுதான் தோன்றுகிறது. இன்றைய உலகில், இபுன் சவூத் மன்னர் (King Ibn saud) ஒருவர்தான் சக்தி வாய்ந்த மன்னராக இருக்கிறார். மற்றெல்லா மன்னராட்சி நிலவிய நாடுகளிலெல்லாம் மன்னர்களை, முரண்களுக்கும், கட்சி அரசியலுக்கும் அப்பாற்பட்டவர்களாக்கி, தேசத்தின் சின்னமாக்கிவிடுவது இன்று நடைபெற்று வரும் ஒரு வழக்கமாகும். அவர்களின் அதிகாரங்களை, அமைச்சர்கள் அவரது பெயராலேயே உபயோகிக்கின்றார்கள். ஒருவேளை மரபுரிமையும், அரச மரியாதையும், குடியாட்சி முறையில்

நீடித்து இருக்கவைக்கக்கூடிய ஒரே வழி இது ஒன்றுதான் போலும்! குடியரசு நாடுகளில் ஜனாதிபதிகளின் நிலையும் கிட்டத்தட்ட இதுவேதான். வழக்கமான சில சமயங்களில் மாத்திரமே செயலாற்றி வரும் சுவிட்சர்லாந்து நாட்டின் ஜனாதிபதியைப்பற்றி முன்னமே பார்த்தோம். அவருக்குள்ள உண்மையான அதிகாரம், அவர் அமைச்சரவையில் அங்கத்தினர் என்ற முறையில் இருக்கிறது. ஃபிரான்சு நாட்டின் வரலாற்று வளர்ச்சி அந்த நாட்டின் ஜனாதிபதியை ஓர் அரசியல் சட்டத்திற்குக் கட்டுப்பட்ட அரசைப்போல் ஆக்கி, அவர்தம் அமைச்சர்களின் ஆலோசனையின் பேரில்தான் செயலாற்றவேண்டும் என்று ஆகியிருக்கிறது. அவரது எல்லா நடவடிக்கைகளுக்கும் பொறுப்புள்ள அமைச்சர் ஒருவரின் கையொப்பம் தேவை. எப்போதாவது பிரதமர் ஒருவரைத் தெரிந்தெடுக்கும் ஒரே சமயந்தான், அவரது செல்வாக்கு காணப்படுகிறது.

ஜனாதிபதியின் சட்ட ரீதியான பலவீனங்களுக்கு எதிர்மறையாக, உலகின் மிகப் பழைய குடியரசாகிய அமெரிக்காவில் காணப்படுகிறது. அமெரிக்காவின் அரசியல் அமைப்பும், சட்டமும், அந்த நாட்டின் உண்மையான தலைவராகவும், அரசாங்கத்தின் தலைவராகவும், ஜனாதிபதியை ஆக்குகின்றன. அவர் தேர்ந்தெடுக்கும் அமைச்சர்கள் அவரிடமே பொறுப்பாளிகள் ஆவார்கள். பாராளுமன்றத்தினரை அவர் தம் வசப்படுத்திக் கொண்டிருக்கும்வரை தேசீயக் கொள்கை என்பது அவரது கொள்கையே ஆகும். சட்ட மன்றங்களிலுள்ள எதிர்க் கட்சிகள் அவரை இராஜிநாமாச் செய்யும்படி வற்புறுத்தவில்லை. அவருக்கு எதிராக வேறொரு மாற்று முறையையும் காங்கிரஸ் சபை கொடுப்பதில்லை. காங்கிரஸ் ஒரு ஜனாதிபதியை எதிர்க்கிறதென்றால் அப்படிப்பட்ட சட்ட மன்றம் இயங்கும் வரையில் வெறும் அன்றாட நிர்வாக வேலைகள் மாத்திரமே செய்யப்படுகின்றன என்று பொருள் ஆகும்.

## சொந்தச் செல்வாக்கு

அரசர்களுடையனவும், ஜனாதிபதிகளுடையனவுமான அதிகாரங்களைப் பற்றிப் பேசும்போது சட்ட ரீதியாகவும் வெளிப்படையாகவுமுள்ள அவர்கள் அதிகாரங்களைப் பற்றித்தான் பேசுகிறோம். ஒரு ஜனாதிபதி அல்லது அரசர் என்று பேசுவது வேறு விஷயம். பெர்னார்ட் ஷாவின் (Bernard Shaw)[a] நகைச்சுவை மிக்கதும் கருத்தாழம் கொண்டதுமான, ஆப்பிள் கார்ட் (Apple Cart) என்ற நாடகத்தில் சொல்லப்படுவதுபோல, எந்த ஒரு மனிதரும் வெறும் 'ரப்பர் முத்திரையாக' இருக்கமுடியாது. அவர்களின்

சொந்தத் தன்மைகளை முழுமையாக விலக்கிவிட முடியாது. அரசியல் சட்டத்திற்கு மிகவும் உட்பட்ட அரசுகள், தேசீயக் கொள்கை முடிவுகளை இரு வழிகளில் பாதிக்கமுடியும். முதலாவதாக, ஆலோசனை கூறவும், அறிவுரை பகரவும், எச்சரிக்கை விடுக்கவும் முழு உரிமை பெற்றிருக்கிருர். அவர்தம் அமைச்சர்களில் எவரும் பெற்றிராத அனுபவம் அவருக்கு உண்டு. புத்தியுள்ள அமைச்சர்கள் இதைக் கவனத்தில் கொள்வார்கள். அமைச்சர்கள் தான் கடைசியில் முடிவு செய்பவர்கள் எனினும், அரசர் தாம் சொல்ல வேண்டுவதை முன்னரே சொல்லியிருப்பார். குடியரசுகளின் ஜனுதிபதிகளும் பல ஆண்டுகள் அமைச்சர் பதவி வகித்து அனுபவம் பெற்ற அரசியல் வல்லுநர்கள் ஆவார்கள் (statesmen). இங்கும் அமைச்சர்கள்தான் முடிவு செய்கிருர்கள் என்ருலும் ஜனுதிபதிகள் தாங்கள் சொல்லவேண்டியவற்றைச் சொல்வதற்கு உரிமையுண்டு. எவரோ சொன்னபடி 'எப்பொழுதுமே முடியாது என்று சொல்வதற் கில்லை.' மூன்று முறைகள் அரசன் சொல்வதற்கு 'முடியாது' என்று சொல்லிவிட்டால் நான்காவது தடவை 'ஆகட்டும்' என்று சொன்னுல்தான், ஐந்தாவது தடவை மீண்டும் 'முடியாது' என்று சொல்வதற்கு முடியும்.

இரண்டாவதாக, அரசரின் கொள்கை, பண்புகள் அவரின் விருப்பு வெறுப்புக்கள், மனிதர்களையும், விஷயங்களையும் பற்றிய அவரது நோக்கு, இவையெல்லாம் அவரது காலத்தின் அரசியல் சூழ்நிலையை மிகவும் பாதிக்கக்கூடியனவாகும். வரலாறு பல மன்னராட்சிக் காலங்களாகப் பகுக்கப்பட்டு இருப்பது வெறும் விளையாட்டிற்கன்று. லூபே (Loubet), பாயின்கேர் (PoinCare), டுமெர்க் (Doumergue), லெப்ரன் (Lebrun) போன்ருரின் 'ஏழாண்டு ஆட்சிக் காலங்கள்' (Septennate) என்று குடியரசுகளில் குறிப்பிடப் பெறுவது சிறப்பான பொருள் பொதிந்தவையாகும். அரசாங் கத்தின் பிரதிநிதிகளைப் பற்றி ஆராயும்போது, அரசியல் அமைப்புச் சட்டத்திற்கு மிகவும் கட்டுப்பட்ட அவரது அழகிற்காக மட்டுமேயுள்ள அரசின் தலைவர்களைப்பற்றியுங் கூடத் தெரிந்தாக வேண்டும். அவர் உண்மையான அதிகாரத்தை, நிச்சயம் பெற்றிருப்பதில்லை. வாக்காளர் தொகுதி, கட்சி, பாராளுமன்றம், அமைச்சரவை முதலியன மிக முக்கியத்துவம் வாய்ந்தவை. இருப்பினும் பொது மக்களுக்குத் தெரிந்திருக்க முடியாத அல்லது நினைக்கக்கூட முடியாதபடி, அரசனுக்கு ஒரு முக்கியத்துவம் இருக்கத்தான் செய்கிறது. பேஜ்ஹாட் (Bagehot) ஞானமுள்ள அரசர் ஒருவர் எவ்வாறு தமது செல்வாக்கைப் பிரயோகிப்பார், எவ்வாறு தம் அனுபவத்தைப் பிறரோடு பகிர்ந்து கொள்கிருர் என்பதைப் பற்றி விவரித்துத் தெளிவாகக் கூறுகிருர். 'இப்படிப்பட்ட அரசர் மகிழ்ச்சி

நிறைந்த வாழ்க்கையை நடத்தியிருப்பர். அவரது வாழ்வு முழுவதிலும், அவர் சொல்லும் வாதங்கள் கேட்கப்பட்டிருக்கும். அவரது வாழ்வுக் காலத்தில், செயலாற்றும் பொறுப்புடையவர்களை, அவர்கள் செயலில் ஈடுபடுவதற்கு முன்னர், அவர்தம் வாதங்களைச் சிந்திக்க வைத்திருப்பார். அவரது வாழ்வில் அவர் தொடங்கி வைத்த திட்டங்கள் மிகவும் சரியானவை என்பதை அறிந்திருப்பார். ஒரு புத்திசாலியான மனிதனின் கருத்துக்கள் அறிவுள்ள பலரால் ஏற்றுக் கொள்ளப்பட்டு நடைமுறையில் கடைப்பிடிக்கப்பட்ட நிகழ்ச்சிகளாகும்.

## (iii) கொள்கையைச் செயல்படுத்தல்

### இராணுவமும், சிவில் ஊழியரும்

கூட்டுக் கொள்கையை முடிவு செய்யும், ஐந்து அங்கங்கள் அல்லது காரணிகளைப் பற்றி நாம் ஏற்கெனவே விவரித்தோம். இவை முறையே வாக்காளர் தொகுதி, கட்சிகள், பாராளுமன்றங்கள், அமைச்சரவை, அரசர் ஆகிய ஒவ்வொன்றும் கொள்கை உருவாவதற்கு என்ன துணைபுரிகிறது என்று பார்த்தோம். இப்போது முடிவு செய்யப்பட்ட இந்தக் கொள்கை என்னென்ன வழிகளில் அமலாக்கப் படுகிறது என்பதைப் பார்ப்போம். இது நான்கு காரணிகளால் செயலாக்கப்படுகிறது அல்லது அமலாக்கப்படுகிறது.

### அமைச்சரவையும் அரசின் தலைவரும்

கொள்கையைத் தீர்மானிப்பதிலும், செயலாற்றுவதிலும், அமைச்சரவையும், அரசின் தலைமையும் முதலிடம் பெறுகின்றன. அரசாங்கம் முழுவதையும் இயங்கச் செய்ய, ஆணைகள் பிறப்பிப்பதன் மூலம் அமைச்சரவை செயல்படுகிறது. அதன் பல பிரிவுகளாலான போர்ப்படை, சிவில் துறைகள், நீதித் துறைகள் முதலியனவற்றைக் கட்டுப்பாடு செய்வதன் மூலமும், அமைச்சரவை செயலாற்றுகிறது. கொள்கை முடிவு செய்வதில் எவ்வாறு அரசுத் தலைவரின் முடிவான ஒப்புதல் தேவையோ, அதுபோல அதை அமலாக்குவதிலும் அவரது இறுதியான ஒப்புதல் தேவையாகிறது. சொல்லப்போனால் கொள்கையைத் தீர்மானிப்பதைவிட, நியமனங்கள் விஷயத்தில் மிகவும் சக்தி வாய்ந்தவராக அவர் இருக்கிறார். ஏனென்னில் அவர் நீண்ட காலம் அதிகாரம் வகித்திருந்த காரணத்தால், உயர்ந்த பதவிகளுக்கு நியமிக்கப்படுபவரின் தரத்தை நன்றாக உணர்ந்திருப்பார் என்பது ஒரு காரணம். இன்னொரு காரணம், நாட்டின்

முக்கியமான கொள்கையைத் தீர்மானிக்கும் விஷயத்தில் அவருக்கு விட்டுக்கொடுப்பதைக் காட்டிலும் இப்படிப்பட்ட நியாயமான விஷயங்களில் விட்டுக் கொடுப்பது இலகுவான காரியம் ஆகும்.

## இராணுவம்

கொள்கையைச் செயலாக்கும் நேரடியான காரணிகளில் போர்ப் படையைப்பற்றி அதிகம் சொல்லத் தேவையில்லை. பெரும்பான்மையான நாடுகள் கட்டாய இராணுவ சேவை முறையைப் பின்பற்றுகின்றன. தரை, கடல், ஆகாயம் போன்றவற்றில் முறையே பயன்படுத்தப்படும் ஆயுதங்கள், தேசீயக் கொள்கைகளின் நுட்பமான காரியமாகையால் அவற்றைப்பற்றி அதிகம் சொல்லாமல் மேலே போகலாம். இந்த வகையான இராணுவ அதிகாரத்தை உபயோகிப்பது இரு சிக்கல்களை உண்டாக்குகிறது. ஒன்று அந் நாட்டின் வெளிநாட்டுக் கொள்கை பற்றியது. அதாவது பன்னாட்டு உடன்படிக்கைகளின்படி, நாட்டைப் பாதுகாக்கவும், கூட்டுப் பாதுகாப்புக்காகவும் மாத்திரமே இராணுவம் உபயோகப் படுத்தப்படுமா அல்லது நாடு பிடிக்கவும் ஆக்கிரமிப்பு நடத்தவும் உபயோகிக்கப்படுமா? அவ்வாறானால் குடிமகனின் கடமையென்ன என்பது.

இரண்டாவதாக இராணுவம் உள்நாட்டில் உபயோகப் படுத்துவதைப்பற்றியது. வெளிநாட்டுப் பகைவர்களுக்கு எதிராக நாட்டைப் பாதுகாப்பது மட்டும் இராணுவத்தின் பணியா? அல்லது உள்நாட்டில் அமைதியை நிலவச் செய்யவும் உபயோகிக்கலாமா? சிரமமான நெருக்கடிக் காலத்தில் இராணுவம் உபயோகப்படுத்தப் படுவதை எல்லோரும் ஒப்புக் கொண்டாலும், எது சிரமமான நெருக்கடி என்ற கேள்வி எழுகிறது. சில நாடுகளில் வேலை நிறுத்தங்களை அடக்குவதற்கு இராணுவத்தைப் பயன்படுத்தியிருக்கிறார்கள். இவ்வாறு இல்லாமல் வெறும் போலீசாரே இதைக் கண்காணித்து இருந்தால் அமைதி கெடாது இருந்திருக்கும். வேலை நிறுத்தம் நடக்கும் சில துறைகளைத் தொடர்ந்து நடத்த இராணுவத்தினரைச் சில சமயங்களில் அழைத்திருக்கிறார்கள். சில நாடுகளில், தொழிலாளரின் மிகவும் கசப்பான எதிர்ப்புக்கு இது உள்ளாகாது நடந்ததில்லை. அப்படி இல்லாவிட்டால், நாட்டையே பிளவுபடுத்தி, இராணுவத்தினரின் விசுவாசத்தையும் பாதிக்கச் செய்திருக்கின்றனர். இராணுவத்தாரின் விசுவாசம் குறையும்போது புரட்சி நிச்சயமாகத் தோன்றுகிறது. உள்நாட்டு விவகாரங்களிலிருந்து எவ்வளவுக்கு இராணுவத்தை ஒதுக்கி வைக்கிறோமோ அவ்வளவுக்கு அது எல்லோருக்கும் நல்லது.

## சிவில் பணித்துறை (Civil Service)

அரசாங்கத்தை நடத்தத் தேவைப்படும் பல அதிகாரிகளை இந்தச் சொல் குறிக்கிறது. ஒரு பெரிய நாட்டிலுள்ள நூறாயிரக்கணக்கான பெருங்கூட்டம், இலாக்காக்களாகவும், நிலைபணித் துறைகளாகவும், பகுக்கப்பட்டு இயங்குகிறது. இவைகளின் எண்ணிக்கை, தன்மை போன்றவற்றைப் பின்னால்வரும் ஓர் அத்தியாயத்தில் பார்ப்போம். இலாக்காவின் உச்சியில் அமைச்சரும், அவருக்குக் கீழாக இலாக்காவின் கொள்கைகளை நேரடியாகத் திட்டமிட்டு அமல் நடத்தும் பணியாளர்களும் இருக்கிறார்கள். நிலைபணித் துறையின் ஆணைகளை நிறைவேற்றும், இடைநிலைக் குமாஸ்தாக்கள் இந்த இலாக்காக்களின் அடி நிலைகளில் பணிபுரிகிறார்கள். கிளீனர்கள், டிரைவர்கள், தபால் எடுத்துச்செல்பவர் (messengers) முதலியோரை இதில் சேர்ப்பதில்லை. தட்டெழுத்துக்காரர்கள் சில சமயம் இந்தப் பக்கமும், சில சமயம் அந்தப் பக்கமும் காணப்படுகிறார்கள்.

இற்றைய உலகில் சிவில் பணியின் சிக்கல்கள் இருவகைப்பட்டவை. ஒன்று ஆள் சேர்த்தல் (recruitment), அமைத்தல், அந்தஸ்து ஆகியவற்றைப் பற்றியது. மற்றொன்று அதன் வேலையைப்பற்றியது. முதற் சிக்கல் சுலபத்தில் விடுவிக்கக் கூடியது. சிவில் பணியாளர் கூடியமட்டில் அரசியல் சார்பற்றவர்களாக இருக்கவேண்டும் என்று எல்லோராலும் பொதுவாக ஒப்புக்கொள்ளப் படுகிறது. முடிவான கொள்கைத் தீர்மானத்தின் பொறுப்பு அவர்களுடையதாக இல்லாமல், அவ்வாறு தீர்மானிப்பவர்களுக்குத் தங்கள் அனுபவத்தையும், நுட்ப அறிவையும் அளிப்பவர்களாக மாத்திரம் அவர்கள் இருக்க வேண்டுமென்று எல்லோரும் ஒப்புக் கொள்கிறார்கள். சிவில் துறையில் அரசியல் உள்ளீட்டை வெகுவாகக் குறைக்கவேண்டும் என்பதோடு, நியமனங்களில் அரசியல் ஆதரவையும் ஊழல்களையும் குறைக்க ஒரே வழி ஏதாவது பொதுவான போட்டி ஒன்றின்மூலம் நியமனம் செய்வதுதான் என்பதையும் எல்லோரும் ஒப்புக்கொள்கிறார்கள். அரசியல் மாற்றங்களுக்கு உள்ளாகாதபடிச் செய்யப்படும் இந்த நியமனங்கள் சுதந்தரமானவை. இந்த நியமனங்கள் கட்சியினுடையவோ அல்லது அமைச்சரவையினுடையவோ அல்ல. ஆனால் பொதுமக்களுடையவும் அரசினுடையவும் ஆகும். எனவே, இந்த நியமனங்கள் புதுப்பிக்கக் கூடிய நீண்டகால ஒப்பந்தங்களாக ஏற்படுகின்றன. அல்லது நல்ல குணமுடையவராக இருக்கும்வரை பதவி நீடிக்கும். குணக் கேடு ஏற்பட்டாலோ அல்லது திறமைக் குறைவு ஏற்பட்டாலோ அதற்காக வேலையிலிருந்து நீக்குவது அமைச்சரால் அல்லது வேறு எந்த அரசியலில் ஈடுபட்டவர்களாலுமல்லாது அதற்கென நியமிக்கப்

பட்டிருக்கும் பணித்துறையின் ஒழுங்குமுறைக் குழுவால் (Disciplinary Committee of Services) முடிவு செய்யப்படும். வேலை உயர்வு அரசியல் கட்சி ஒன்றின் ஆதரவையோ, சிபாரிசையோ சார்ந்திராமல், பணி புரிபவர்களின் வேலை, அனுபவம், திறமை ஆகியவற்றின் அடிப்படையில் எல்லோருக்கும் தெரிந்த விதிகளின்படித் தரப்படுகிறது. செயலாற்றும் முறையில் சில சமயங்களில் இவற்றைக் கடைப்பிடிக்காவிட்டாலுங்கூட இவைகளையெல்லாம் கொள்கையளவில் அனைவரும் ஒப்புக்கொள்கிறார்கள். நல்ல உயர்ந்த ரக அறிவு பெற்றவர்களைச் சிவில் பணிக்குக் கவரும்படியாகச் சில வசதிகள் இருக்கவேண்டும். தாங்கள் செய்கின்ற பணிகளில் இரகசியங்களைக் காப்பாற்றும் தன்மை, துல்லியமாக ஆவணங்களை (Record) வைத்திருத்தல்; பணிகளைப் பாகுபடுத்திச் செயலாற்றுதல் போன்ற சில தன்மைகள் சிவில் பணியாளருக்கு இருக்கவேண்டும் என்பதையும் எல்லோரும் ஒப்புக்கொள்கிறார்கள். ஒரு துறையின் குறைபாடு இன்னொரு துறையையும் பாதிக்கக்கூடியது. ஏனெனில், யார் ஒரு செயலைச் செய்யவேண்டும் என்று தீர்மானிக்க முடியாது போனால் அது எல்லாத் துறைகளின் வேலைத் திறமையையே பாதிக்கக் கூடியதாகும். விரைவாகச் செயலாற்றுவதும் மிகவும் தேவையான ஒரு தன்மை, இதற்கு மிகவும் மையமாக்கப்படாத (decentralized) நிர்வாகமாகவும், எல்லா நிலைகளிலும் பணியாளர் துவக்கப் பொறுப்பு உடையவர்களாகவும் இருக்கவேண்டும்.

நடு நிலையும், தனி ஆட்களுக்காகச் செய்யப்படாததும் ஆகிய இரு பண்புகள் இன்றைய சிவில்பணிக்கு உண்டு. (உயர்ந்த மனிதர், தாழ்ந்த மனிதர் என்று) மனிதர்களுக்குள் பாகுபாடு செய்யாதபடிச் சிவில் நிர்வாகம் இயங்கவேண்டும். அது சந்தேகத்திற்கு இடங் கொடுக்கக்கூடாது. அதன் வேலையை முழுமூச்சுடன் செய்ய வேண்டும். இன்றைக்குள்ள அரசின் நிர்வாகமானது மிகவும் சிக்கல் நிறைந்ததும் கடினமானதுமாக இருக்கிறது. நிர்வாகம் செய்வது சுலபமான ஒரு காரியம் என்று ஜனாதிபதி ஹார்டிங் (Harding) சொன்னார்.[1] இதைக் காட்டிலும் தவறான கருத்தை, வேறு ஒருவரும் சொல்லி இருக்கமுடியாது. அதற்கு மாறாக இப்போதெல்லாம் சிவில் நிர்வாகத்திற்குத் தனிப் பயிற்சியும் திறமையும் தேவை என்று எல்லோரும் உணர்கிறார்கள். பொதுத்துறை ஆட்சி இயல் மிகவும் முக்கியமான பாடமாகிக்கொண்டு வருகிறது.

[1] Government and Public என்ற நூலில் ஃபிராங்க்ஃபர்ட்டர் (Frankfurter) மேற்கோள் காட்டியிருப்பது, அவர் ஜனாதிபதி ஜாக்ஸன் (President Jackson) ஒரு நூற்றாண்டுக்கு முன் சொன்னதையும் மேற்கோள் காட்டியிருக்கிறார். 'பொது அலுவலகங்களில் செய்யப்படும் அல்லது செய்வதாகச் சொல்லப்படும் வேலைகள் மிகவும் எளிதானவையும், சிக்கலற்றவையுமாகையால் அறிவுள்ள எவரும் இந்த வேலைகளைச் செய்யத் தங்களைத் தயார் செய்துகொள்ள முடியும்.'

## நிர்வாக வரம்பு

முதல் பிரச்சினைக்கு அவ்வளவு போதும். இரண்டாவதாகச் சொல்லப்பட்ட பணி அல்லது நிர்வாகத்தின் வேலை என்ன? இது மற்றதைவிடக் கடினமான கேள்வி. கொள்கையைத் தீர்மானம் செய்யும் வேலையை நீக்கி, வெறும் செயலாற்றும் துறையை மாத்திரம் நிர்வாகம் குறிக்கிறதா? வகுத்த திட்டம் எவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்ததோ அவ்வளவுக்கு அதைச் செயல்படுத்தும் முறையும் முக்கியத்துவம் வாய்ந்ததுதானே! சுலபமாக இதைச் சொன்னால் முடிவுகளைப்போல வழிகளும் முக்கியமானவை இல்லையா? நாட்டின் உண்மையை அதிகாரம் செலுத்தும் காரணிகளைப் (agents) பேசும் போது, அதிகார வர்க்கம் (Bureaucracy) நிர்வாகத்தில் உள்ளவர்களுக்குத் தனியிடம் கொடுக்கவேண்டுமா? 'Ideology and Utopia' என்ற தமது நூலில் பேராசிரியர் மான்ஹீம் (Professor Mannheim) அவர்கள் சமுதாய அரசியல் வாழ்வின் இரு கூறுகளை, 'அரசின் காரியங்கள்' (affairs of the state) என்றும், 'அரசியல்' (Politics) என்றும் பெயரிடுகிறார். இதில் முதலில் சொன்னது திரும்பத் திரும்ப நிகழ்ந்துகொண்டும், ஒரு மாற்றமுமில்லாத அமைப்புமுறை கொண்டதுமான, தொடர்பான சமுதாய நிகழ்ச்சிகள்தான் என்று அவர் கூறுகிறார். அதன் அடிப்படை வழக்கமாக நடந்து வருவது ஆகும். புது முடிவுகளின் அடிப்படையில் இன்னும் முழுமை எய்தாது நிகழும் தொடர்பான நிகழ்ச்சிகள்தான், இரண்டாவதாகச் சொல்லப்பட்டவை. இதன் அடிப்படைத் தன்மை போராட்டமும், ஆக்கமுந்தான். முதலில் சொன்னது அறிவுக்குட்பட்டது; இரண்டாவது அதற்கு அப்பாற்பட்டது. இதன் கருத்து என்ன என்று பேராசிரியர் மான்ஹீம் கீழ்க்கண்டவாறு விளக்குகிறார். நிர்வாகத் துறையில் நிகழும் பணிகள் விதிகளின் அடிப்படையிலும், முன் நிகழ்ச்சிகளின் மாதிரியிலும் அமைக்கப்படுகின்றன. இதற்குத் தேவையெல்லாம் கவனமான காரண காரிய அறிவு இருந்தால் போதும். ஆனால் மற்றது ஒரு புதிய படைப்பு, புதிய செயல், நல்ல வளமான கற்பனை, தொடங்கும் ஆர்வம், புதுக் கோணத்திலிருந்து எந்தக் காரியங்களையும் காணும் திறமை ஆகியவை தேவைப் படுகின்றன.

இந்த வேறுபாடு ஓரளவுக்கு இதைப்பற்றி அறிந்துகொள்ள உதவி செய்கிறது. ஆனால் நிச்சயமாக இரண்டையும் பிரித்துக் காட்டாது விட்டுவிடுகிறது. இன்றைக்குள்ள அரசியலில் உள்ள வர்கள் அல்லது கொள்கை முடிவு செய்பவர்கள் பொதுவான சில விதிகளையோ அல்லது கொள்கைகளையோ ஆக்கி அந்த அடிப் படையில் அரசின் நிர்வாகம் நடைபெற விட்டுவிட வேண்டியிருக்

கிறது. ஏனெனில் இன்றைய நிர்வாகமுறை சிக்கல் நிறைந்த ஒன்ருக ஆகிவிட்டது. மேலும், தங்களது கொள்கைத் தீர்மானத்தின் பெரும்பகுதியை நிர்வாக அதிகாரிகளின் உரை விளக்கத்திற்கும், தொடக்க ஆர்வத்திற்குமாக விட்டுவிட வேண்டியிருப்பதால் நிர்வாக அதிகாரியே கொள்கையை முடிவு செய்யும் காரணியாக ஓரளவுக்கு மாறிவிடுகிருர். 'நிர்வாகி' (Executive) என்று அழைக்கப்படுபவர் 'சட்டமியற்றும்' (Legislative) பணிகளையும் செய்கிருர். இன்று ஒரு சட்டத்தின்படி எழக்கூடிய விவகாரங்களைத் தீர்த்து வைக்கும் அதிகாரத்தை அந்தச் சட்டமே ஒரு தனி அதிகாரியிடமோ அல்லது அதிகாரிகளால் ஆன குழுவினிடமோ விட்டு வைப்பதால் நிர்வாகி சட்டமியற்றுபவராக மாத்திரமல்லாமல் நீதிபதியாகவும் மாறிவிடுகிருர். 'அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு' (Doctrine of Separation of Powers) எவ்வாறு நொறுங்கிவிடுகிறது என்பதற்கு இது ஓர் எடுத்துக்காட்டு.

## அதிகார வர்க்கமும் அதன் சிக்கல்களும்

அதிகார வர்க்கத்தின் அளவுக்கு மீறிய அதிகாரம், இன்றைய அரசின் முக்கிய சிக்கலாக ஆகிவிட்டது.[1] நாடு பெரிய அளவினதாக இருப்பதாலும், அரசாங்கத்தின் அதிகார வரம்பு விரிவடைந்துவிட்ட காரணத்தாலும், இவர்களுக்கு இவ்வளவு அதிகாரம் வந்தடைந்தது. இக் காரணங்களால், பலப்பல அதிகாரிகள் தேவைப்படுகின்றனர் என்பதோடு, அரசாங்கமோ, மக்களோ கட்டுப்பாடு செய்ய முடியாத அளவுக்கு, அதிகாரமும் அவர்கள் கைகளில் சேர்ந்துவிட்டது. எல்லாக் காரியங்களையும் மேலதிகாரியிடம் கேட்டுச் செய்யவேண்டும் என்றும், தொடக்க ஆர்வம் கூடாது என்றும் கட்டுப்பாடு செய்தால், நிர்வாக இயந்திரம் இயங்காதுபோய் எந்த வேலையுமே நடைபெருது. (ஃபிரான்சு போன்ற மிகவும் மையமாக்கப்பட்ட நிர்வாகங்களில் இதுதான் இடையருத குறைபாடு. அதிகாரிகள் செயலாற்றுவதற்குச் சுதந்தரம் வேண்டும்; இதனுல் இந்த அதிகாரம் தவருன வழியில் பயன்படுத்தப்படும் ஆபத்தையும் துணிந்து ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும்.) நிர்வாக அதிகாரிகளின் எதேச்சாதிகாரப் போக்குக்குப் பொதுமக்களும் உள்ளாக வேண்டி இருக்கிறது. மக்களும் அதிகாரிகளின் கையை எதிர்பார்ப்பவர்களாக மாறி, உண்மையான அதிகாரப் பொறுப்பு எங்கிருந்து வருகிறது என்று அறியாமையால், இந்த எதேச்சாதிகாரத்திலிருந்து தங்களைக் காத்துக்கொள்ளும் திறனற்றவர்களாக ஆகிவிடுகிருர்கள்.

[1] இச் சிக்கல்பற்றி ஹீவர்ட் (Hewart) அவர்கள் எழுதிய The New Despotism, லாஸ்கி (Laski) எழுதிய Grammar of Politics ஆகிய நூல்களைப் பார்க்கவும்.

ஃபிரெஞ்சுக்காரர்கள் அழைப்பதுபோல அவர்கள் 'Les administers' அல்லது 'நிர்வாக அதிகாரத்துக்குட்பட்ட குடிமக்கள்' ஆகிறார்கள்.

இதற்கு மாற்று என்ன? பேராசிரியர் லாஸ்கி (Laski) பதினைந்து ஆண்டுகட்கு முன்பு 'Politics' என்ற பத்திரிகையில் தாம் எழுதிய கட்டுரையில் 'ஓர் அரசியல் அமைப்புக்குட்பட்ட சட்ட மன்றத்திற்கு வேறு சில அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருக்க வேண்டும்' என்ற கருத்தைத் தெரிவித்துவிட்டு, மூன்று அடிப்படை விதிகளை அளித்திருக்கிறார். 'இவைகளைப் பின்பற்றுவது, உசித அதிகாரம் (Discretionary Power) வழங்கப்பட்டிருக்கும் எந்த அரசியல் சட்ட அமைப்பிலும்,' நன்மை பயக்கும் என்று கூறுகிறார். மூன்று வகையான உறுதிப்பாடுகள் தாம் இவை. முதலாவதாக நிர்வாகத் துறையினர் உபயோகிக்கும் அதிகாரம், ஆதியில் ஒப்படைக்கப்பட்ட அதிகாரத்திற்கு அதிகமாக இருக்கக்கூடாது; இரண்டாவதாக உசித அதிகாரத்தை உபயோகப்படுத்துவதன் மூலம் பாதிக்கப்படுபவர்களை, அந்த அதிகாரத்தை உபயோகிக்கு முன்னரே கலந்துகொள்ள வேண்டும்; மூன்றாவதாக ஒப்படைக்கப் பட்ட (delegated) உசித அதிகாரங்கள் என்னென்ன வழிகளில் உபயோகப்படுத்தப்பட்டிருக்கின்றன என்பதை முழுவதாகச் சட்ட மன்றத்திடம் தெரியப்படுத்த வேண்டும். 'அதிகார வர்க்கத்தின் (Bureaucracy) அபாயத்திலிருந்து நம்மைக் காப்பாற்றிக்கொள்ளும் சிறந்த முறை இது. பொதுப்பணியாளர், அமைச்சர் எவ்வாறு யினுஞ் சரி அவர்களின் செயல்கள் பொது மக்களின் சீரிய ஆய்வுக் குப் புறம்பாக இருக்கவிடவே கூடாது' என்று (Laski) லாஸ்கி கூறுகிறார்.

## அதிகாரங்களைப் பன்முகப்படுத்தலும் குடியாட்சியும்

மேலே சொன்னவற்றோடு இன்னும் இரண்டு சாத்தியமான பாதுகாப்புக்களையும் சேர்த்துக் கொள்ளலாம். முதலாவது, நிர்வாக முடிவுகளுக்கு எதிராக முறையிடுவதற்கென்று ஃபிரான்சில் இருப்பது போல ஏதாவதொரு வகை முறையீடு நீதிமன்றம் (appeal court) இருக்க வேண்டும். ஃபிரான்சு நாட்டில் Conseil d' Etat என்ற முறையீடு மன்றம், அதிகாரிகள் தங்கள் அதிகாரத்தைப் பிரயோகம் செய்தார்கள் என்று கொண்டுவரும் குற்றச் சாட்டுக்களை விசாரிக்கும் பணியைச் செய்கிறது. இது குறைந்த செலவில் மிக விரைவாக நீதி வழங்கும் முறையாக இருக்கிறது.[1] இதைக் காட்டிலும் மிக முக்கிய

[1] வாதி வழக்கில் வெற்றிபெற்றால் அவரது வழக்குச் செலவுகளை உடனே திருப்பிக் கொடுத்து விடுகிறார்கள்.

மானது, அதிகாரங்களைப் பெரிதும் பன்முகப்படுத்தலாகும். தலத் துறைகளிடத்தும் (Local Bodies) தல அதிகாரிகளிடத்தும் அதிகமாக அதிகாரத்தை அளிக்கவேண்டும். ஏனெனில் இவ்வதிகாரிகள் வெகுதொலைவில் இருக்கும் ஒயிட் ஹால் (Whitehall) அல்லது பாரிஸ் (Paris) போன்ற மத்திய அரசாங்க அமைப்புக்களை விட மிகவும் அருகில் இருக்கிறார்கள்.

தல சுயாட்சி இல்லாது உண்மையான குடியாட்சி இருப்பதாகக் கூறவே முடியாது. மத்திய அரசாங்கத்தின் மிகையான அதிகாரத்தைச் சமம் செய்வதற்குத் தல சுயாட்சி பெரிதும் பயன்படும். இங்கிலாந்தின் குடியாட்சி வரலாறு அந்நாட்டின் தலத்துறை வாழ்க்கையிலிருந்து பிரிக்கப்பட முடியாதது ஆகும். ஆனால் ஃபிரான்சு நாட்டில், மத்தியில் குடியாட்சி ஏற்பட்டது; ஆனால் தலத்தில் குடியாட்சி நிறுவப்படவில்லை. எனவேதான் மூன்றாவது குடியரசின் (Third Republic) நிர்வாகம், தேர்ந்தெடுக்கப்பட்ட சபைகளிடம் இருந்தபோதிலும், ஃபிரெஞ்சுப் புரட்சிக்கு முந்திய மன்னராட்சிக் காலத்தில் இருந்த அதிகாரிகளின் பொறுப்பற்ற தன்மை,[1] இந்தக் காலத்து அதிகாரிகளிடத்தும் காணப்பட்டது. கிராமங்களிலும் நகரங்களிலும் வாழும் மக்களே அவைகளின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளச் செய்வது; அவர்களே தங்களுக்கு வேண்டிய அதிகாரிகளைத் தேர்ந்தெடுத்துக்கொள்ள விடுவது அல்லது தலப் பொறுப்புள்ள துறையில் இவர்களை நியமிக்கச் செய்வது, இவைதானே பன்முகப்படுத்தல்—இதன் மூலமாக எதேச்சாதிகார அரசாங்கத்தின் அதிகார வரம்பைக் குறைக்க முடியும். அதிகார வர்க்கத்தினால் ஏற்படும் அபாயங்களைத் தவிர்க்க முடியும். பொறுப்புக்களை ஏற்றுக்கொள்வதைப் போதிக்க முடியும்; அகண்ட குடிமைக்கு (wider citizenship) மக்களைத் தயார் செய்ய முடியும்; ஒருவேளை இது நிர்வாக ஒருமைப்பாட்டைக் குறைப்பதாக இருந்தாலும், திறமை குறைவுற்றாலும் தவறில்லை. ஏனெனில் இதன் மூலம் மக்களுக்காக, மக்களால், மக்களுடைய ஆட்சி நிலவச் செய்யும் இலட்சியம் அரசியலுக்குக் கொண்டு சேர்க்கும்.

## (iv) சட்டத்தின் ஆதிக்கம்: நீதித் துறை

### நீதித்துறையின் பணிகள்

முடிவாக, நீதிபதிகளும், நீதி மன்றங்களும் அரசின் வாழ்வில் என்ன பங்கு பெறுகின்றன என்று பார்ப்போம். அடிக்கடி

[1] இந்தப் பொறுப்பற்ற தன்மைபற்றி ஃபெரோட் (Ferrat) எழுதிய (La Republique a refaire) என்ற நூலைப் பார்க்க.

எடுத்தாளப்படும் அதிகாரப் பிரிவினைக் கோட்பாடு (Doctrine of Separation of powers) இங்கும் முழுவதாகப் பயன்படுத்தப்பட முடியாதுபோவதை உணர்கிறோம். சட்டத்தைப் பிரயோகிப்பதையும், நீதி வழங்குவதையும் தவிர வேறு பல பணிகளை இத்துறை புரிகிறது. காப்பு நிதிகள் (Trust Funds) நிர்வகிப்பது, தனியாருடைய சொத்துக்களையும், பொதுச் சொத்துக்களையும் பராமரிப்பது, தனி நபருக்கு எதிராகவோ அல்லது அதிகாரிகளுக்கு எதிராகவோ தடைக் கட்டளை (Injunction) பிறப்பிப்பது, இந்தப் பணிகளில் ஈடுபட்டிருப்போரை நியமனம் செய்வது போன்ற பல நிர்வாகப் பணிகளைப் புரிகிறது. பிரிட்டன் போன்ற சில நாடுகளில் தகராறுக்குள்ளான தேர்தல் வழக்குகளைப் பாராளுமன்றமோ அல்லது அதையொட்டிய வேறு துறைகளோ விசாரிக்காமல், நீதித் துறையிடமே விட்டு விடுகின்றனர். வழக்கில் உள்ள ஒரு சட்டத்திற்கு உரை விளக்கம் தரும்போது நீதித்துறை சட்டமியற்றும் பணியையும் புரிகிறது. ஏனெனில் அதன் முடிவுகள் முன்னேடியாக அமைவதால், எதிர்காலத்திற்கொப்பச் சட்டத்தை நீதித்துறை அமைக்கிறது. எல்லாவற்றையும் முன்னரே தெரிந்து, அதற்குரிய சட்டங்களை அமைப்பது சாத்தியமில்லையாகையால் நீதிபதிகள் செய்யும் சட்டம் (Judge-made-law) பொதுவான சட்டத்திலுள்ள இடைவெளிகளையும், குறைகளையும் நிறைவு செய்கிறது. அமெரிக்கா (U.S.A.) போன்ற நாடுகளில், சட்ட மன்றங்கள் இயற்றிய சட்டங்கள், அரசியல் அமைப்புச் சட்டத்திற்குட்பட்டவையா என்று 'நீதிப் புனராய்வு' (Judicial Review) செய்யும் அதிகாரம் பெற்றிருக்கின்றன நீதிமன்றங்கள்.

நீதி மன்றங்கள் நீதி வழங்கும் ஏக உரிமை பெற்றவை என்று சொல்வதற்கில்லை. சில மேல் சபைகள் மேல் முறையீட்டு மன்றங்களாக (Final Courts of appeal) விளங்குவதை ஏற்கெனவே பார்த்தோம். பெருங் குற்றச்சாட்டு (Impeachment) அதிகாரம் அரசியல் அமைப்புச் சட்டத்தின்படி, பெரும்பாலும் சபைகளுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. மேலும் அரசின் தலைவருக்கு மன்னிப்பு வழங்கும் உரிமை அளிக்கப்பட்டிருக்கிறது. நீதித் துறையைச் சார்ந்ததும், சட்டமியற்றும் துறையைச் சார்ந்ததுமான அதிகாரங்களை நிர்வாக அதிகாரிகளுக்கு இன்றைய சட்டங்கள் அளிக்கின்றன.

## அரசாங்க நீதித்துறை வளர்ச்சி

எவ்வாறிருப்பினும் நீதி வழங்குதலானது இன்றும் நீதித் துறையின் தலையாய பணியாக இருந்துவருகிறது. இத் துறையில் இரு கூறுகள் உண்டு. சட்டத்தை மதிக்காது குற்றமிழைத்தவரையும்

தனியார்களுக்கிடையே எழும் சச்சரவுகளையும், தீர்த்து வைப்ப தற்குமாகச் சிவில், கிரிமினல் சட்டங்களும், சிவில் கிரிமினல் நீதி மன்றங்களும் இருக்கின்றன. அரசே நீதி வழங்கவேண்டும். அரசின் சட்டமே சட்டம் என்பன போன்ற கருத்துக்கள் சில நூற்றாண்டுகளுக்கு முன்புதான் நிலை நிறுத்தப்பட்டன. தனியார் தாங்களாகவே நீதி வழங்கிக்கொள்வது இடைக் காலத்தில், வழக்கத் தில் இருந்தது. இப்படி நீதி வழங்கும் உரிமையைத் தங்களது விசுவாசமுள்ள ஊழியர்களுக்கு அரசர்கள் வழங்கினார்கள். ஆனால், காலம் செல்லச் செல்ல அரசனின் நீதி வழங்குதல் மற்றெல்லா முறைகளையும் விழுங்கிவிட்டது. அமைதியும் ஒருமைப்பாடும் நிலவச் செய்வது இதன் ஒரு நோக்கம். இன்னொன்று பண வருவாய் பெறும் நோக்கம். தனியாருக்கு இந்த இலாபகரமான உரிமை போவதை அரசர்கள் விரும்பவில்லை. இன்றைக்கு நீதி வழங்கும் அதிகாரம் அரசின் ஏகபோக உரிமையாக உலகெங்கும் இருக்கிறது. மத சம்பந்தமான நீதி மன்றங்கள், திருமணம், விவாகரத்து, வாரிசுரிமை, மத குருக்கள் இழைக்கும் குற்றங்கள் போன்றவற்றை மதச் சட்டங்களின் அடிப்படையில் இன்னும் விசாரித்து வருவது சில நாடுகளில் காணப்படுகிறது.

அரசாங்க நீதி மன்றங்கள் வளர்ச்சி அடைய ஆரம்பித்த பிறகு, மெதுவாக வழக்குகளின் தன்மைக்கும் குற்றத்திற்கும் ஒப்ப அவர் களது பணியும் பகுக்கப்பட்டு, நிர்வாகத் துறையிலிருந்து வேறுபட்ட பணியாக நீதி வழங்கும் பணி துலங்க ஆரம்பித்தது. அரசாங்கத் தின் பல பிரிவுகளைப் பாகுபடுத்தாத ஒரு காலத்தைத்தான், பெருங் குற்றச்சாட்டு, மேல் முறையீடு போன்ற நீதித் துறைப் பணிகளைச் சட்டமன்றங்கள் ஆற்றுவது நினைவூட்டுகிறது.

## இன்றைய நீதித் துறைக் கொள்கைகள்

எங்கும் பிரயோகிக்கக்கூடிய சில அடிப்படைக் கொள்கைகளைச் சார்ந்துதான் இன்றைய நீதித்துறை இயங்குகிறது. அரசாங்கத்தால் ஆக்கப்பட்ட, ஒரே சட்டமும் ஒரே நீதி முறையுந்தான் இருக்கிறது. இந்தச் சட்டங்களைப் பிரயோகிக்க நீதிபதிகளையும், அதிகாரிகளையும் நியமித்திருக்கிறார்கள். சமுதாயத்தின் ஒவ்வோர் அங்கத்தினரும் அந்தச் சட்டத்திற்குக் கட்டுப்பட்டவர்; அதன் பாதுகாப்புக்கு உரிமையுடையவர். கண்டிப்பாகச் சட்டப்படி மாத்திரமே, நீதி வழங்கப்படவேண்டும். சட்டப்படித் தண்டிக்கப்பட முடியாதவைகளைத் தவிர வேறு குற்றங்களில்லை. குறிப்பிட்ட குற்றத்திற்குரிய தண்டனை என்னவென்று சட்டம் சொல்லுகிறதோ, அதுதான் தண்டனை. அதே போன்ற குற்றங்களுக்கு அதே தண்டனைதான்.

குற்றவாளியின்மீது பழி தீர்த்துக்கொள்ளும் நோக்கம் சமுதாயத்திற்கில்லை. ஆனால், குற்றவாளியிடமிருந்தும் அவனை முன்மாதிரியாகப் பின்பற்றுகின்றவர்களிடத்திருந்தும் தன்னைக் காத்துக்கொள்வதுதான் சமுதாயத்தின் நோக்கம். சில ஆண்டுகளுக்கு முன் எழுதி இருந்தால், நீதித் துறைச் சித்திரவதை (Judicial torture) எல்லா நாகரிகமடைந்த நாடுகளிலிருந்தும் மறைந்துவிட்டது என்று சொல்லியிருக்க முடியும். ஆனால், கடந்த சில ஆண்டுகள் அது மறையவில்லை என்பதைக் காட்டிவிட்டன. ஒருவேளை இந்த நாடுகளை 'நாகரிக நாடுகள்' என்ற வகுப்பில் சேர்க்காமல் விட்டால்தான் அவ்வாறு சொல்ல முடியும்.

நீதிபதிகள் எல்லாவகைக் குறுக்கீடுகளிலிருந்தும் சுதந்தரமாக இருக்கவேண்டும் என்று ஏறத்தாழ எல்லோரும் ஒப்புக்கொள்கின்றனர். அவர்களுக்கு இலஞ்சம் கொடுக்க முயல்வது, அவர்கள் இலஞ்சம் வாங்குவது, அவர்களை அச்சுறுத்துவது, அல்லது அவர்கள் மீது செல்வாக்குச் சக்தியைப் பிரயோகிப்பது முதலியன குற்றங்களாகும். விடுதலை வாங்கவோ அல்லது தண்டிக்கச் செய்யவோ, சர்க்காரும் அவர்கள் வேலையில் குறுக்கிடக்கூடாது. விசாரித்தறிந்த உண்மைகளின்படியும், அந்தவித வழக்குகளுக்குப் பொருந்தும் சட்டத்தின்படியுமே தீர்ப்பு இருக்கவேண்டுமேயொழிய, அரசியல்வாதிகள் அல்லது செல்வாக்கு மிக்க மனிதர்களின் விருப்பத்திற்கொப்பத் தீர்ப்பு அளிக்கப்படக்கூடாது.

## நீதிபதிகள்

நீதி அரசியலுக்கு அப்பாற்பட்டதாக இருக்கவேண்டும். நீதி வழங்குதலும் சர்க்காரிடமிருந்து சுதந்தரமாக இருக்கவேண்டும். இவையே நாகரிக அமைப்பின் அடிப்படைகளாகும். இவைகளைப் பெறுவது எப்படி? இவைகளை முழுமையாகப் பெறுவது சாத்தியமல்ல. ஏனெனில், கடைசியாகப் பார்க்கப்போனால், நீதியானது நீதிபதிகளின் மனச்சாட்சியைப் பொறுத்த ஒரு காரியம். இதை முழுவதாகப் பெற்றுவிட முடியாது. மனித எத்தனங்கள் செய்யக்கூடியனவெல்லாம், நேர்மையான வழியில் இந்தப் பணியைச் செய்வதற்குரிய சூழ்நிலையை அமைத்துக்கொடுக்க முயற்சி செய்வதுதான்.

முதலில் வருவது நீதிபதிகளைத் தேர்ந்தெடுப்பது. போதுமான சட்ட அனுபவம் பெற்றிருக்கவேண்டுவது முதல் நிபந்தனை. அன்றைக்குள்ள வெறும் சட்டத்தைப்பற்றியும், நீதி மன்றங்கள் இயங்கும் நுட்பங்களைப்பற்றியும் மாத்திரம் அறிந்தால் போதாது. சட்டம் எந்த அடிப்படைக் கருத்தோடு இயற்றப்பட்டிருக்கிறது?

மக்களின் உளவியல் எவ்வாறு இயங்குகிறது என்பனவற்றையும் அறிந்தவராக இருக்கவேண்டும். மனிதனை உணர்ந்து அறிந்து கொள்வது, சட்டத்தை அறிந்துகொள்வதைப் போன்றே முக்கியமானது.

பல நாடுகளில், இளம் வழக்கறிஞர்கள் போட்டி மூலமாகவாவது அல்லது நேரடி நியமனம் பெறுவதன் மூலமாகவாவது நீதித் துறையில் இடம்பெற்று அதைத் தங்கள் வாழ்க்கையின் பணியாகக் கொள்கின்றனர். நிலையானதும், சுதந்தரமானதுமான சிவில் துறையின் ஒரு பிரிவாகவே இது கருதப்பட்டு அதன் கொள்கைகள் இதிலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கின்றன. இதன் ஒரே பலவீனம் அதன் பதவி உயர்வு அளிக்கும் முறைதான். இதே துறையைச் சேர்ந்த அங்கத்தினர்களாலான குழு ஒன்று, அரசியல் அல்லது வேறு தலையீடுகள் இல்லாமல், நுட்ப அறிவையும், வயதையும் சீர்தூக்கிப் பதவி உயர்வு அளிக்கிறது என்றாலும் இது எல்லா இடங்களிலும் பொருந்துமா என்று சொல்வதற்கில்லை. இந்த முறையில் குறைபாடுகள் இருந்தாலும் அமெரிக்க முறையைவிட இது சிறப்புடையது. அமெரிக்க முறையின்படி இராச்சிய நீதிபதிகள் பலர் கட்சி அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். இதைக் காட்டிலும் மோசமான முறையைச் சிந்தித்துப் பார்க்கவும் முடியாது. எனினும் இதில் ஆச்சரியமான காரியம் என்னவென்றால் நாம் நினைக்கிறபடி அதன் விளைவுகள் மோசமாக இல்லாததுதான்.

## நீதித்துறையின் சுதந்தரம்

பிரிட்டன் மாத்திரமே ஜே. பி. (J. P.) என்று அழைக்கப்படும் சம்பளம் பெறாத 'அமெச்சூர்களை'ப் பெரும்பான்மையான நீதித் துறைப் பணிகளைச் செய்யும்படியாக வைத்திருக்கிறது. இவர்கள், தலத்தில் அந்தஸ்து பெற்றவர்களாகவும் அனுபவசாலிகளாகவும் இருந்தால், சான்சலர் பிரபு (Lord Chancellor) வால் நீதிபதிகளாக நியமிக்கப்படுவார்கள். இவர்களுக்குத் துணைபுரியப் பயிற்சிபெற்ற வழக்கறிஞர் ஒருவரை எழுத்தராக நியமிக்கிறார்கள். கோர்ட்டுகளுக்கு வரும் வழக்குகளில், பத்தில் ஒன்பது பங்கு வழக்குகள் இவர்களால் விசாரித்துத் தீர்ப்பளிக்கப்படுகின்றன. இவை சாதாரண வழக்குகள் ஆகும். பல நூற்றாண்டுகளாக ஆங்கில நீதித்துறையின் வெற்றிகரமானதும் விநோதமானதும் ஆன ஒரு முறை 'மாஜிஸ்டிரேட் பெஞ்சு' (Magistrate's Bench) என்று அழைக்கப்படும் ஒரு முறையாகும். மற்ற நாடுகளில் காணப்படுவதைப் போலக் கீழ்க் கோர்ட்டுகளில், 'குட்டி' நீதிபதிகள் பலரை இங்குக் காணமுடியாது. இவர்களால் விசாரிக்கப்பட முடியாத வழக்குகளை விசாரிக்க இங்கிலாந்தில்

கவுண்டி கோர்ட் நீதிபதிகள் (County Court Judges) நீதித்துறைத் தலைவரான சான்சலர் பிரபுவால் நியமிக்கப்படுகிறார்கள். பல ஆண்டு கள் வெற்றிகரமாக வழக்கறிஞராகப் பணியாற்றிய பாரிஸ்டர்கள் (Barristers) இதில் நியமனம் பெறுகிறார்கள். ஆகவே, இங்கிலாந்தில் நீதித்துறைப் பணியை வாழ்வின் பணியாக எவரும் மேற்கொள்ள முடியாது. தனியாகப் பல ஆண்டுகள் வழக்கறிஞராகப் பணியாற்றிய பின்னர்த்தான் நீதிபதியாக நியமிக்கப்பட முடியும். உண்மையில் நீதிபதிப் பதவி கொடுப்பது ஒரு வெகுமதியைப் போன்றது. அரசியல் போன்ற பல செல்வாக்குகள், நீதிபதி தேர்ந்தெடுத்தலில் குறுக்கிட முடியும் என்பது இந்த முறையின் குறைபாடு. ஆனால், ஒருமுறை தேர்ந்தெடுக்கப்பட்டுவிட்டால் நீதிபதியின் சுதந்தரத்தைப் பறிக்கமுடியாது. அவரைப் பதவியிலிருந்து விலக்க வேண்டுமானால் பாராளுமன்றம் பெரும்பான்மை வாக்குகளோடு ஒரு கோரிக்கையை யும் அனுப்பித்தான் நீக்கமுடியும். 1701 செட்டில்மெண்ட் சட்டம் (Act of Settlement) இந்த உரிமையை அளித்த நாள் முதலாக இன்றுவரை இது ஒருமுறைகூட உபயோகிக்கப்படவில்லை.

## நீதியின் மீது நேட்டம்

குடியாட்சி நிலவும் நாட்டில் அமைந்துள்ள நீதித்துறையின் சில அம்சங்கள் இவைகள். பின்னால்வரும் ஓர் அத்தியாயத்தில் எதேச் சாதிகாரம் (Totalitarianism) நிலவும் நாடுகளில் இது எவ்வாறு அமைந்திருக்கிறது என்பதைப் படிப்போம். மனிதனது விருப்பு வெறுப்புக்கும் குறைபாடுகளுக்கும் அப்பால் நீதியை நிலைநாட்டும் மனித முயற்சியைத்தான் இது காட்டுகிறது. இம் முயற்சியில் மனிதன் பெரிதும் வெற்றி பெற்றிருக்கிறான். குற்றம் சாட்டப்பட்ட ஒருவன், அந்த நாட்டின் சட்டங்களின்படி, தான் நியாயமாக விசாரிக்கப்படப் போவதை உணர்ந்திருக்கிறான். பல வழக்குகளில் உண்மையை உறுதிசெய்ய ஜூரிகளை நியமிக்கிறார்கள். இவர்கள் அந்த நாட்டைச் சேர்ந்த குடிமக்கள் ஆவர். ஜூரிகளின் தீர்ப்பை ஏற்றுச் சட்டத்தின்படி நீதிபதி தீர்ப்பு வழங்குவார். ஜூரிகள் யாராக இருக்க முடியும் என்று யாரும் முன்னரே தெரிந்திருக்க முடியாது. விசாரணைக் காலத்தில் அவர்களோடு யாதொரு தொடர்பும் இருப்பதில்லை. எந்த விதமான செல்வாக்கும் அவர்களது வேலையைப் பாதிக்காமல் அவர் கள் சுதந்தரமாக இயங்குகிறார்கள் என்று கொள்ளலாம்.[1] தீர்ப்பு ஒருமுறை சொல்லப்பட்டுவிட்டால் அது மிகவும் கவனமாக நிறை வேற்றி வைக்கப்படுகிறது. புதிய தடயங்கள் அகப்பட்டாலும் அதே

[1] பல அறிஞர்கள், ஒரே நீதிபதி அல்லது மூன்று நீதிபதிகள் அளிக்கும் தீர்ப்பைவிட நல்ல நீதியை ஜூரிகள் எவ்வாறு அளிப்பார்கள் என்று ஐயுறுகிறார்கள்.

குற்றத்திற்காக மீண்டும் விசாரித்து விடுதலை செய்யப்பட்ட ஒருவரை விசாரிப்பதில்லை. தீர்ப்பில் கூறப்பட்ட காலத்துக்கு மேலாக ஒரு நாள்கூட, தண்டிக்கப்பட்டவர் சிறையில் வைத்திருக்கப்படமாட்டார். உண்மையில் நல்ல நடத்தை இருக்குமாயின் சீக்கிரம் விடுதலை அடையக்கூடும். மரண தண்டனை எவ்வளவு கருணையோடு நிறைவேற்றப்படவேண்டுமோ, அவ்வளவு கருணையாக நிறைவேற்றப் படும். கொடுக்கப்படும் தண்டனை ஒருவருடைய சொத்துக்களையும் குடும்பத்தையும் பாதிக்காது. சில சமயங்களில், சில நாடுகளில் மனைவிக்கோ, புருஷனுக்கோ விவாகரத்துக் கோரும் உரிமையை அது அளிக்கலாம்.

அரசு தனது தீர்ப்பை ஒப்புக்கொள்ளும் என்று நீதிபதி அறிவார். சட்ட நுணுக்கக் குறைகளின் அடிப்படையில், நீதித் துறைக்குள்ளாகவே மேல் நீதி மன்றத்திற்கு மேல் முறையீடு செய்யலாம். அவர்தம் தீர்ப்புக்கள் பொதுவிவாதத்துக் குரியவையல்ல. மிகுந்த பாரபட்சம் காட்டுதலோ அல்லது திறமைக்குறைவோ காரணமாகாவிட்டால் அவரது அந்தஸ்தும் சம்பளமும் பாதிக்கப்பட மாட்டா. அவரை ஒன்றுதான் செய்யச் சொல்கிறார்கள். சட்டத்தை நிர்வகிக்கச் சொல்கிறார்கள். அச்சமோ அல்லது நன்மை பெறவேண்டுமென்ற விருப்பமோ இன்றி நீதியை எல்லா மனிதருக்கும் சமமாக வழங்கச் சொல்லப்படுகிறார். அமெரிக்காவின் தலைசிறந்த நீதிபதியாகிய ஹோம்ஸ் (Holmes) தமது வாழ்வின் கடைசிக் காலத்தில் எழுதினார்: ‘மனிதன் ஏனைய துறைகளைப் போலவே சட்டத்திலும் மிக உயர்ந்த வாழ்க்கை வாழ முடியும். மற்ற வாழ்க்கை முறைகளிற் போலவே இங்கும் எண்ணற்ற நோக்குகளில் ஒற்றுமையை அவன் சிந்தனை காணக்கூடும்.’

# 12. ஜனநாயக அரசின் சில பிரச்சினைகள்

## (i) ஜனநாயகத்தின் குறைபாடுகள்

மிகுந்த திறமையும் திருப்திகரமான அம்சமும் நிறைந்த எல்லா ஜனநாயகங்களிலும் ஒவ்வொன்றும் சுமுகமாக நடைபெறுகிறது என்பதுபோல இதுவரை நமக்குத் தோன்றியது. ஆனால், விஷயங்கள் அவ்வகையில் முழுமையாக அமைவதில்லை. பல சிக்கல்களையும் கஷ்டங்களையும் ஜனநாயகம் சமாளிக்கவேண்டியுள்ளது. அவற்றைச் சமாளிக்க அதனுடைய (ஜனநாயகத்தினுடைய) லோகாயத, ஆத்மீக மூலாதாரங்கள் போதுமானவையாக இருக்கின்றனவா என்பதுதான் பிரச்சினை.

### மந்தநிலையும் தாமதமும்

மனிதர்கள் பரபரப்பையும் விரைவையும் விரும்புகின்றனர். ஜனநாயகமோ மந்தமானதாகவும், தாமதமான போக்குடையதாகவும் இருக்கிறது. அதுதான் அப் பிரச்சினைகளில் முதலாவதாகும். அது மெதுவாக இயங்குகிறது; எல்லா முக்கிய யோசனைகளையும் பரவலாகவும் தீர்க்கமாகவும் விவாதிக்க வேண்டிய கட்டாயம் ஜனநாயக நடைமுறையில் இருக்கிறது. இதற்குக் காலம் பிடிக்கிறது. பெருமளவில் எதையும் அவசரப்பட்டுச் செய்துவிட முடியாது. ஒரு பெரும் அரசில் மிகச் சிறிய திட்டமும், பெரிய அளவிலமைந்ததொரு முயற்சியாக மாறிவிடுகிறது. ஜனநாயகம் என்றால் பொறுமை அவசியம்; மக்களோ இயல்பாகவே பொறுமை இல்லாதிருக்கின்றனர். ஜனநாயகமென்பதற்கு அமைதியான, பரபரப்பற்ற (நிதானமான) நீண்டகால வாழ்க்கை என்பது பொருள். அதற்கு அமைதி அவசியம். அமைதி, யுத்தத்தைவிடக் குறைவான உற்சாக

மளிப்பதாகவே இருக்கும்.[1] புகழ் ஆரவார மண்டலத்துக்கு வெளியிலிருந்துகொண்டு வழக்கமான பணிகளை முறையாகச் செய்துகொண்டு போகக்கூடிய ஆட்கள் அதற்குத் தேவை; அதில் விரைவான, பிரமிப்பூட்டும் விளைவுகள் இருக்க முடியாது. அத்தகைய மிகச் சாதாரண, துடிப்பற்ற திட்டங்களையும் எளிய வாழ்க்கையையும் எவ்வாறு வாக்காளர்களை ஏற்கச் செய்வதென்பது ஜனநாயக அரசியல்வாதியின் பெரிய சங்கடங்களில் ஒன்றாகும். எதிர்ப்பு, விமர்சனம் ஆகியவற்றைத் துச்சமெனக் கருதிச் செல்லும் அதிகார அமைப்பை ஆதரிக்கும் ஒருவர்முன் அவர் (ஜனநாயக அரசியல்வாதி) சௌகரியக் குறைவான நிலையில் நிற்கிறார்; ஏனெனில், அத்தகைய அதிகார அமைப்பு எல்லாச் செல்வாதாரங்களையும் எளிதில் திரட்டமுடியும்; ஒரு முற்போக்கான சமுதாயத்தின் உறுப்பினன் என்ற முறையில் குடிமகனின் பெருமிதத்தைப் புகழ்ந்துரைத்து, அவனுக்குப் பெருவாழ்வு தருவதாக உறுதி கூறிப் பிரம்மாண்டமான திட்டங்களை விரைவாக நிறைவேற்றுவதாக உத்தரவாதமளிக்க முடியும். அல்லது, ‘கீழ்த்தட்டு’ மக்களைப் பற்றிக் கவலைப்படாமல் உயர்ந்த வாழ்க்கைத் தரங்களை ஏற்படுத்துவதாகவும் கடவுளர்களின் நாட்டையே உருவாக்கிவிடுவதாகவும் உறுதி கூறமுடியும். மக்களுக்கு வெறியூட்டச் சர்வாதிகாரி (dictator) யால் முடியும். வெறியூட்டலுக்கு இரையாவது மக்கள் இயல்பு. அத்துடன் சட்டபூர்வமாக வந்த மொத்த அதிகாரமும் அந்தச் சர்வாதிகாரியிடம் இருக்கிறது. இவற்றுக் கெதிரே மக்கள் தாக்குப்பிடிப்பது அருமை. சர்வாதிகாரம் தலைவிரித்தாடித் தேசீயச் சிறப்புகள் நிர்மூலமாக்கப்படும்போதுகூடச் சீரழிவுக்கு வெளிக் காரணங்கள் கூறி அமைவது வழக்கம்; முன்னைய சர்வாதிகார ஆட்சியைவிட வலிமையும் சக்தியும் வாய்ந்த புதிய சர்வாதிகார ஆட்சிகளே ஏற்படும் என்று உறுதி கூறுவது வழக்கம். ஒரு நெப்போலியன் (Napolean) போதும் என்று ஃபிரான்ஸ் திருப்தி யடைந்துவிடவில்லை; தமது ‘நாளை’ எதிர்பார்த்து அடுத்த ஹிட்லர்களும், முசோலினிகளும் காத்துக்கொண்டிருக்கவில்லை என்று நம்புவது அதீத நம்பிக்கையாகும். கொள்ளத்தக்க ஒன்றுதான் என்ற முறையில் ஜனநாயகம் செயல்பட வேண்டும். லாஸ்கி (Laski) கூறுவதுபோல, ‘அதன் நடைமுறைகளின் உண்மையான முக்கியத்துவத்தைப் புரிந்துகொள்வீர்களாயின் அவை மந்தகதி உடையனவாக இருக்கத் தேவையில்லை;

[1] 1848 ஆம் ஆண்டில் லூயிஸ்-பிலிப்(Louis - Phiiippe)வீழ்ச்சி யடைந்ததற்கு முக்கியமானதொரு அம்சம், தனது அமைதியான, பரபரப்பான செயல்பாடற்ற அரசாங்கத்தின்மீது ஃபிரெஞ்சு மக்கள் சலிப்படைந்து விட்டமை என்ற புகார் ஆகும். இன்று நடைமுறையில் மறந்துபோன சில்லறைக் காரணங்களுக்காகப் பிரிட்டனுடன் அவன் யுத்தத்துக்குப் போகுமாறு பலர் விரும்பினர். கிரிமிய யுத்தம்கூட (Crimean War) தயங்கிய பிரிட்டிஷ் அரசு மீது பிரிட்டிஷ் பொதுஜன அபிப்பிராயம் நடைமுறையில் திணித்த ஒன்றுதான்.

பயன்களின் நிரந்தரத் தன்மை விரைவு அம்சத்தில் இருக்கமுடியாது என்பதை உணர்வீர்களாயின் அவை மெதுவானவையாக இருக்கத் தேவையில்லை.'

## பெரிய அளவினால் வரும் சிக்கல்

அடுத்து வருவது அளவுப் பிரச்சினை. சிறியதொரு நவீன அரசுகூடப் பல மிலியன் மக்களைக் கொண்டிருக்கிறது; நூறு மிலியனுக்கு அதிகமுடைய அரசுகள் நான்கு இருக்கின்றன. சிறிய அமைப்புப் பிரச்சினை அதிக சிக்கல் நிறைந்ததாகவும் நுட்பமான தாகவும் மாறிவிடுகிறது. சாதாரண ஒரு பிரச்சினைமீது எடுக்கப் படும் முடிவு கணக்குக் கடங்காத விளைவுகளுடன்கூடப் பெரும் எண்ணிக்கையுடைய உயிர்களை உட்படுத்திவிடுகிறது. நவீன அரசியலின் வெறும் காம்பீர்யத்தின்முன் சாதாரண மனிதன் செயலிழந்து நிற்கிறான்; ஒரு ஜனநாயகத்தில் தனது எனக் கருதப் படும் பங்கை அவன் எவ்வாறு ஏற்கிறான்? பொறுப்புக்களை எவ்வாறு நிறைவேற்றுகிறான்? நவீன மக்கள் வெள்ளத்தில் தனிநபர் யார்?

சிலர் 'பிரதிநிதித்துவம்' என்கின்றனர்; ஆனால் பிரதிநிதித் துவம் ஒரு பகுதித் தீர்வுதான். 'அது மிகக் குறைவாகவே அனுமதிக் கிறது. ஏனெனில், மக்களுக்கும் அவர்களுடைய பிரதிநிதிகளுக்கு மிடையே இடைவெளி, வளர்ந்துவரும் பெரிய நாடுகளில் நாள் தோறும் அதிகரித்து வருகிறது. வேட்பாளர்கள் தேர்தலில் பின் பற்றப்படும் முறை காரணமாக ஏற்படும் தீமைகளும் அதிகரித்த வண்ணமுள்ளன' என்று ஷீன் (Sheean) கூறுகிறார். பல விஷயங் களில் நடப்பதெல்லாம் இதுதான்: உருப்படாது எனத் தோன்று வதைத் தனி மனிதன் விட்டுவிடுகிறான். சுய ஆட்சிப் பொறுப்புக் களிலிருந்து தன்னை விடுவிக்கும் ஒரு சக்திவாய்ந்த அரசாங்கத்தின் முன் விட்டுக்கொடுத்து விடுகிறான். அவ் வகையில் ஜனநாயகம் எவ்வளவுக்குப் பூரணமானதாக இருக்கின்றதோ, அவ்வளவுக்குக் குடிமக்களிடம் அதன் கோரிக்கைகளும் அதிகரிக்கின்றன. எனவே, பணியை ஒரு சர்வாதிகாரியிடம் விட்டுவிடலாம் என்ற உணர்ச்சி அதிகமாகிறது. மொத்த மக்களில்—மிலியனில் பத்திலொன்று அல்லது இருபதிலொன்று எனத்தக்கவரே பொருட்படுத்தத் தக்கவர் என்பதை நம்புவது கஷ்டமாகவே இருக்கிறது. நவீன அரசியலின் எண்ணற்ற பிரச்சினைகள்பற்றி ஒரு சொந்த அபிப்பிராயம் வைத்துக் கொள்வதென்பது அசாத்தியமாகவே தோன்றுகிறது. நமது பிரதி நிதித்துவ முறைகள் பூரணமானவை என்று ஒருவரும் வாதிக்கவில்லை; கிட்டத்தட்ட நிலையைவிட அதிகம் என்றுகூட ஒருவரும் கூற முடியாது. தலைவர்கள் உண்மையாகவே மக்களால் தேர்ந்தெடுக்கப்

படுகின்றனர் என்றோ, பின்பற்றப்படும் கொள்கைகளைத் தேர்ந் தெடுப்பதில் மக்களுக்கு அதிகப் பங்கு இருக்கிறதென்றோ கூறிவிட முடியாது. அவையெல்லாம் இரண்டாவது, மூன்ருவது, நான்காவது இடங்களில் செய்யப்படுகின்றன. ஒவ்வொன்றும் ஓரளவு காலத்துக் கொவ்வாதவையே. ஒரு பாராளுமன்றம் முடிந்தவரை சில காலத் துக்கு முந்திய—இரண்டு, மூன்று, நான்கு ஆண்டுகளுக்கு முந்திய அபிப்பிராயங்களையே பிரதிநிதித்துவப்படுத்துகிறது. மக்களின் விருப்பம் ஓயாது மாறிக்கொண்டிருப்பதாகும்; அதற்கொப்ப, பாராளு மன்றம் இயங்கமுடியாது. அவ்வாறு மாறிக்கொண்டிருக்கும் விருப்பத்தின் ஒரு பகுதியாகவே பாராளுமன்ற உறுப்பினர்கள் இருக்கின்றனர் என்பது உண்மைதான். ஆனால் அதே வழியில், அதே வேகத்தில் அவர்கள் மாறுகின்றனர் என்பதற்கு என்ன உத்தரவாதமிருக்கிறது? பாராளுமன்றம் என்பது கட்சிப் பிரதிநிதி களின் மாநாடுதான்; தேர்தல் காலத்தில் இருந்ததைப் போன்றே இப்பொழுது பாராளுமன்றத்தில் பிரதிநிதித்துவப் பங்கீடு இருக் கிறது என்பதற்கு என்ன உத்தரவாதங்கள் இருக்கின்றன? ஒன்று மில்லை என்பது தெளிவு.

## போதிய நிறுவனங்கள் இல்லாமை

இது மூன்ருவது பிரச்சினைக்கு அழைத்துச் செல்கிறது; அதாவது, ஜனநாயகத்தின் இன்றைய நிறுவனங்கள் போது மானவை அல்ல என்பது மூன்ருவது பிரச்சினை. பல நாடுகளில் பாராளுமன்ற உறுப்பினர்களும் சிவில் பணியாளர்களும் அதிகமாக வேலை வாங்கப்படுகின்றனர். அரசாங்கத்தின் வியாபகத் தன்மை வரம்புக்குள்ளடங்கியிருந்த காலத்தில் சம்பந்தப்பட்ட எண்ணிக்கை கள் குறைவாக இருந்த காலத்தில் பாராளுமன்றங்கள் வழக்கத் திற்கு வந்தன. மத்திய காலங்களில் தோற்றுவிக்கப்பட்டது பிரிட்டிஷ் பாராளுமன்றம்; மூன்று அல்லது நான்கு மில்லியன் விவசாய மக்களுக்கென ஆதியில் அது கருதப்பட்டது. அப்போது முக்கியத்துவத்துக்குரிய போர்ப் படைகள் ஏதும் இருக்கவில்லை. காலனிகள் இருக்கவில்லை; (ஃபிரான்ஸ் நாட்டிலிருந்த சார்புப் பிரதேசங்கள் ஒரு ஃபிரெஞ்சுப் பிரபு (Duke) என்ற முறையில்— இங்கிலாந்தின் மன்னர் என்ற முறையில் அல்ல—மன்னரின் சொந்த உடைமைகளாகவே இருந்தன) வெளிநாட்டு வர்த்தகம் இருக்கவில்லை. இன்று அதே நிறுவனம், அளவிலும் சட்ட அதிகாரங்களிலும் அநேகமாக ஒத்திருக்கும் அதே அமைப்பு, உலகு தழுவிய உடைமைகளுடன், வெளிநாட்டு வர்த்தகத்தை நம்பிக்கொண்டிருப்பதாயும் சுமார் ஐம்பது மிலியன் மக்களைக் கொண்டதும், மிக வளர்ச்சியடைந்த தொழில்நிலையைக்

கொண்டதுமான நாட்டை அது நிர்வகிக்கிறது. ஆயினும் ஒரு நாட்பொழுது இன்னும் இருபத்துநான்கு மணி நேரமாகவும் மனிதனின் வாழ்க்கை எழுபதாண்டுகளாகவுமே இருக்கிறது!

இந்த நிறுவனங்கள் அனைத்திலும் உள்ள தொல்லை என்னவென்றால் அவை இயல்பாகவே இளகாத்தன்மை கொண்டிருப்பதே; ஏற்பதோ அன்றி மாற்றிக்கொள்வதோ அவற்றுக்குக் கஷ்டமாக இருக்கிறது. அவற்றுக்குப் பல சங்கடங்கள் வந்திருக்கின்றன. ஆயினும் அவற்றை மாற்றுதல் அல்லது அவற்றின் இடத்துக்கு வேறொன்றைக் கொண்டுவருதல் அவ்வளவு எளிதன்று. மாற்றம், அதில் ஏதாவது அபிவிருத்தியைக் கொண்டுவரும் என்பதற்கு என்ன பாதுகாப்பு இருக்கிறது? பழையதைக் காட்டிலும் புதியது நல்லதாயிருக்கும் என்பதற்கு என்ன உத்தரவாதம் இருக்கிறது? மாற்றம் என்பது எப்போதும் இருட்டில் பாய்வதுதான்; எனவே, அபாயகரமானது. நிறுவனங்கள் முடிந்த முடிவுகள் அல்ல. சில நோக்கங்களை நிறைவேற்றிக்கொள்ள உதவும் கருவிகள் தாம் என்பதை மக்கள் மறந்துவிடுகின்றனர்; அந்த நோக்கம் நிறைவேற்றப்படாத நிலையில் விலக்கத் தக்கவைதாம் அவை என்பதை மறந்துவிடுகின்றனர். நிறுவன மாற்றத்துக்கான எந்த யோசனையும் எப்போதும் எதிர்ப்பைத் திரட்டி விடுகிறது. சில ஆதார பூர்வமானவை; புத்தி பூர்வமானவை. ஆனால் அவற்றில் பெரும்பான்மையானவை குருட்டுத்தனமானவை; ஆதாரமற்ற வெறுப்புடையவை; அரசில் அன்றிருக்கும் அதிகாரச் சமநிலையை அழித்துவிடக்கூடிய புதுமைகள் என்ற அச்சத்தில் பிறப்பவை.

ஜனநாயகம் இன்னும் தனக்குரிய சொந்த நிறுவனங்களை அபிவிருத்தி செய்துகொள்ளவில்லை. சென்ற காலத்திலிருந்து பெற்ற அமைப்புக்களின்மீது செயல்பட்டுக் கொண்டிருக்கிறது; வேறுபட்ட சமூக, அரசியல், பொருளாதாரச் சூழ்நிலைக்கென உருவாக்கப்பட்ட பழைய அமைப்புக்களின்மீது செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. அது நீடித்திருக்க வேண்டுமாயின் அவற்றை அதுவே படைத்துக்கொள்ள வேண்டும் என்பது தெளிவு.

## மக்கள் கூட்டத்தின் தகுதியின்மை

இது மற்றொரு பிரச்சினை. அதாவது, பொறுப்பான சுயாட்சி, அதன் விளைவுகள் ஆகியவற்றிற்கான ஆயத்த நிலையில் மக்கள் இல்லாத பிரச்சினை. 'யுத்தம், புரட்சி போன்ற மகத்தான சந்தர்ப்பங்களின்போதன்றி, பெரும் பகுதி மக்கள் தமது தனிவாழ்க்கையில் மூடுண்டு கிடக்கின்றனர்; சிந்தனை, கொள்கை ஆகியவற்றில்

முன்னின்று நடத்தல் வேறெங்கோ இருக்கட்டும் என்பதில் பெரும் பாலும் திருப்திப்பட்டு விடுகின்றனர். ஓரளவு சமதளத்தில் வாழ்க்கை சுமுகமாக ஓடிக்கொண்டிருப்பதுவரை பொது விவகாரங்களை ஒரு நாடகமாகவே அவர்கள் காண்கின்றனர்; அதில் தமக்கு ஒரு தீவிரப்பங்கு உண்டு எனக் கருதுவதில்லை' என்று லாஸ்கி (Laski) கூறுகிறார். 'மக்களின் இயங்காத் தன்மை பொதுத்தவறுக்கு அடிப் படையாகும்; அவர்களுக்கு உயிர்ப்பூட்டத் தேவைப்படும் முயற்சி பொதுஜன அபிப்பிராயத்தைத் திருத்திக் கூறுவதன் அடிமட்டத்தில் இருக்கிறது.'[1] என்று அவர் மேலும் கூறுகிறார். ஜனநாயகம், பங்கெடுப்பதாயிருக்க வேண்டும். இல்லாவிடில் உயிரற்றதாயும் எதிர்மறைத் தன்மை உடையதாயும் ஆகிவிடும். கோல் (Cole) குறிப்பிடுவதுபோல 'பிரச்சினை, பெரிய சமுதாயங்களில் சிறிய மனிதர்களுக்கு வாழ்க்கை வழிகளைக் கண்டுபிடிப்பதுதான்.'[2] அவ்வாறு செய்ய இதுவரை நாம் தவறியிருக்கிறோம். ஆகவே இன்றைய நெருக்கடியான பிரச்சினை இதுதான்.

## (ii) ஜனநாயகமும் தொகுதிகளும் (Democracy and Groups)

### தல அமைப்பு ரீதியான தொகுதிகளும் தொழில் ரீதியான சங்கங்களும்

மக்கள் கூட்டத்தைச் சிறிய பகுதியினராகப் பிரிப்பது ஒரு தீர்வு முறையாகும்; அதன்மூலம் ஆர்வமும் பொறுப்பும் 'சிறிய மனித'னால் பெறப்படும். இதற்கு முதல்படி, மத்திய அமைப்பின் உறுதியைக் குறைக்க, நிருவாகத்தைப் பரவலாக்குவதாகும். அந்தப் பணியும் கீழ்ப்பட்ட அல்லது தல அமைப்பால் மேற்கொள்ளப்பட வேண்டும் என்பது பொதுவான கொள்கையாகும்.[3] ஏனெனில் தல அமைப்பு, தான் சம்பந்தப்பட்ட பிரச்சினைகளுடன் நெருங்கிய தொடர்பு உடையது; தலத்திலுள்ள சாதாரண மக்களுக்குச் சேவை புரிவதற் கான சிறந்த வாய்ப்பு உடையது. தல நிறுவனங்கள், நாம்

1. 'நீங்கள் வெறுக்கும் சக்திகளை எதிர்த்துத் தனித்து நிற்கக் கூடிய அளவுக்கு ஆக்கபூர்வமான உள்ளீடு, ஜனநாயகம் என்ற சொல்லில் இல்லை; அவற்றால் அது எளிதில் மாற்றப்பட முடியும்.' 1939 நவம்பர் 4-ஆம் நாளிட்ட Times Literary Supplement இதழில் T. S. Eliot.

2. 1943 ஜூலை 16 நாளிட்ட Christian News Letter இதழில் 'Democracy Face to Face with Hugeness' என்னும் கட்டுரை.

3. 'சிறிய, கீழ்ப்பட்ட அமைப்புக்கள் திறமையாக நிறைவேற்றக்கூடிய பணிகளைப் பெரிய, உயர்தர அமைப்புக்கள் பறித்து நிறைவேற்றுவது அநீதி. கவலை தரும் அம்சம், ஒழுங்கைச் சீர்குலைக்கும் முயற்சி.' (பதினொன்றாம் பயஸ் போப்பாண்டவரின் திருமுகம்—Quadragesimo Anno).

முன்னரே குறிப்பிட்டதுபோல, தேசீய அரசியலுக்கான இயற்கை யான பயிற்சிக்களமாகும்.

நிருவாகப் பரவலாக்கல் நடப்பதுவரை எவ்வளவு சிறந்ததாக இருந்தாலும் அது நெடுந்தொலைவு செல்ல முடியாது. அது உத்தியோக முறையில் உருவாக்கப்பட்டுக் கண்காணிக்கப்படும் வகையைச் சேர்ந்ததாகவே இருக்கிறது. தேவைப்படும் 'கொஞ்சம்' தொழில் ரீதியான சங்கங்களில் காணப்படும். அவை நில ரீதியான தொகுதிகளிலிருந்து தெளிவாக வேறுபட்டவை. சில பொதுவான நோக்கத்தை ஏற்றுச் செல்ல, ஒன்றுபடக் குடிமக்கள் மேற்கொள்ளும் தங்கு தடையற்ற முயற்சிகளை அவை பிரதிநிதித்துவப்படுத்து கின்றன. குடும்பம், மனிதனின் படைப்பன்று. அது இயற்கையின் படைப்பு. இருப்பினும் சில நாடுகளில், அது, அதன் உறுப்பினர் களையும் சொத்துடைமைகளையும் பாதுகாக்க ஒழுங்குபடுத்தப்பட்ட ஒரு மூலக்கூருகவே மாறிவிடுகிறது. திருச்சபைகள் (churches) தொழிற் சங்கங்கள் போன்றவை சில குறிப்பிட்ட தொழில் நலன்களைப் பாதுகாப்பதற்கென ஏற்பட்டவை.[1] இறுதியாக வருவன, சில நடவடிக்கைகளை அல்லது பிரச்சாரத்தை—மனிதாபிமான, கலாச்சார, தொழில்நுட்ப நடவடிக்கை, பிரச்சாரத்தை—மேற்கொள்ளும் சங்கங் கள் ஆகும். பென்ட்லி (Bentley) குறிப்பிடுவது போல, 'ஆரோக் கியம், செல்வம், சமூகத்தன்மை, அறிவு, அழகு, நேர்மை ஆகிய வேட்கைகளுடன் சம்பந்தப்பட்ட சங்கங்கள் ஆகும்'.

## சங்கங்களின் பங்கு

அத்தகைய தொகுதிகளின் அத்தியாவசிய அம்சம், அவற்றுடன் குடிமகன் நிச்சயமானதொரு வகையில் ஒருங்கிணைந்திருக்கிருன் என்பதை அவை பிரதிநிதித்துவப் படுத்துகின்றன என்பதே. டியூயி (Dewey) குறிப்பிடுவது போல, அவை 'சமுதாயச் சக்திகள் ஆகும்; அவற்றின் பரஸ்பரச் செயல்பாடுகள் மகத்தான சக்திகளின் வீச்சைக் கட்டுப்படுத்தாவிடினும் ஒதுங்கச் செய்யலாம்; அந்த மகத்தான சக்திகளின் வல்லமையும் விளைவுகளும் தனிநபரின் வல்லமைக்கு மீறியனவாகும். சமுதாயம் முழுமையையும் பிரதி நிதித்துவப் படுத்துவதாகக் கூறிக்கொள்ளும் எந்த ஒரு நிறுவனமும் தன்னைத் தானே உணரும் தனிநபர் உரிமையைப் போதுமான

[1] 1931 ஆம் ஆண்டு போக்குவரத்துக் கமிஷன் யோசனைகள், ஐந்து போக்கு வரத்துச் சங்கங்கள், நான்கு மோட்டார் சங்கங்கள், நான்கு தொழிற் சங்கங்கள், வர்த்தக சபைகளின் சங்கம், பிரிட்டிஷ் தொழில்கள் சம்மேளனம், இரும்பு-எஃகு உற்பத்தியாளர்களின் தேசீய சம்மேளனம் ஆகிய நிறுவனங் களுக்குச் சமர்ப்பிக்கப்பட்டன.

முறையில் காப்பாற்ற முடியாது என்ற கொள்கையை அவை ஆதரிக்கின்றன. அவ் வகையில் அவை போட்டி அமைப்புகள் அல்ல. அரசின் செல்வாக்குகளுக்கு அவை குறைந்தபட்சம் துணை செய்யக் கூடியனவாகும். 'தமக்கும் பொது நலனுக்கும் இடைப்பட்ட எந்த ஓர் அம்சத்தையாவது குறிப்பிட்டு, குறுகிய நோக்குடன் பொது ஓட்டத்திலிருந்து அவை பிரிக்க முயல்வது, பிரிப்பது ஆகியவை சட்ட விரோதமானவை ஆகும்'[1] என்ற பழைய ஃபிரெஞ்சுச் சிந்தாந்தத்துக்கு இது நேர் எதிரானதாகும்.

நீண்ட சொற்றொடராக இருந்தாலும் டேன் (Taine) அவர்களுடைய பின்வரும் கருத்தை மேற்கோளாகக் காட்டுதல் பொருந்தும்: 'அவர்கள் (அதிகாரக் குவியலை வற்புறுத்தும் பழைய அரசியல்வாதிகள்) சமுதாயக் கூட்டு முயற்சி எதையும் சந்தேகக் கண்கொண்டே பார்க்கின்றனர். சம அத்தியாவசியம், சம இயல்பு உடைய வேறுபட்ட சிறப்பான அமைப்புக்களால் ஆனதே சமுதாய அமைப்பு என்பதை அவர்கள் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். அந்த அமைப்புக்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு குறிப்பிட்ட, வரம்புக்குட்பட்ட, உபயோகத்துக்கென அமைந்தவை. ஒவ்வொன்றும் இயல்பாக, தங்கு தடையின்றி உருவானவை; உருவாக்கப்பட்டவை; பாதுகாக்கப்படுபவை; புதுப்பிக்கப்படுபவை; முன் முயற்சிகளினால் ஊக்குவிக்கப்படுபவை; பரஸ்பர ஒற்றுமைகள், அவற்றின் உள்ளீடான தனிநபர்களின் சுயேச்சையான நடவடிக்கைகளினால் ஊக்குவிக்கப்படுபவை.'

'அவர்கள் கருத்துப்படி மிகச் சிறந்த தன்மையோடு கூடிய ஒரே அமைப்பு—அரசுதான்; அதனிடத்தில்தான் சகல அறிவு நுட்பமும் புத்தியும் காரண காரியத் தெளிவும் விளைவுகளை மதிப்பிடும் ஆற்றலும் இருக்கின்றன என அவர்கள் கருதுகின்றனர். எனவே, அவர்களுக்கு (மக்களுக்கு அல்லது சமுதாயத்துக்கு) எது நல்லது என்பதைப் பிற நிறுவனங்களைவிட அரசாலேயே நன்கறிய முடியும். ஆகையால், அவற்றின் (அந்த நிறுவனங்களின்) நடவடிக்கைகளைக் கண்காணித்து, பாதுகாப்பதுடன் அரசின் கடமையும் உரிமையும் முடிந்துவிடுவதில்லை; ஊக்குவித்தலும் அல்லது அடக்குமுறையைப் பிரயோகம் செய்வதன்மூலம் தான் விரும்பும் உருவத்தை அந்த நிறுவனங்களுக்கு அளிப்பதாக அவற்றைக் கட்டுப்படுத்தி வழி நடத்துவதும் அரசின் கடமையாகவும் உரிமையாகவும் ஆகிறது.'

[1] Le Chapelier Law on Associations, 1791.

## வரலாற்றில் சுயேச்சைத் தொகுதி

இத் தொகுதிகளைப்பற்றிய அடிப்படை உண்மை, அவை நிலை பெற்றிருக்கின்றன, எப்பொழுதும் இருந்து வந்திருக்கின்றன என்பதே யாகும். வரலாற்றின் எத்தகைய விளக்கத்தின் அடிவேர் களிலும் அவை அமைந்திருக்கின்றன. மதத் தொகுதிகள், கூட்டமைப்புக்கள்—ஆதிகால மருத்துவர்கள் முதல் முறையாக அமைந்த திருச்சபைகள் (churches) வரை—அவற்றின் பணியைப் பாராட்டாது சென்ற காலத்தை எவ்வாறு ஒருவர் அறிந்துகொள்ள முடியும்? திருச்சபைகள் என இங்கு நாம் குறிப்பிடுவது பரந்த பொருளடிப்படையில் ஆகும்; கிறித்துவப் பொருளில் மட்டுமன்று. இத்தகைய சங்கங்களின் முக்கியத்துவத்தை அறியாது பொருளாதார அமைப்பைப் பற்றித்தான் புரிந்துகொள்ள முடியுமா? சமுதாயத் தோற்றங்களில் ஓர் அம்சம் என்ற முறையில் குடும்பத்தின் முக்கி யத்துவத்தைத்தான் ஒருவர் அலட்சியப்படுத்த முடியுமா? ஆங்கிலோ—சாக்ஸனியச் சமுதாயங்கள் எண்ணற்ற சுயேச்சை அமைப்புக்களைக் கொண்டிருந்தன. அவற்றின் கணக்கிலடங்காத செல்வாக்கை உணராமல் அந்தச் சமுதாயங்களின் வளர்ச்சியை ஒருவர் புரிந்துகொள்ள முடியாது.

## சிறந்த தொகுதி நடவடிக்கைக்கான நிபந்தனைகள்

இதுவரை சரி. நாம் பரிசீலித்துவரும், தொகுதிகள், சமுதாயப் பரிணாம வளர்ச்சியில் பல பணிகளை நிறைவேற்றியிருக்கின்றன என்பது தெளிவு. அமைப்புச் சுதந்தரம் அல்லது சங்கம் சேரும் உரிமை குடிமக்களுக்கு உண்டு; தம் நோக்கங்களை நிறை வேற்ற, அவற்றைச் செயல்படுத்தச் சங்கம் சேரும் உரிமை அவர் களுக்கு உண்டு. இதை மறுப்பது நியாயமானதாக இருக்க முடியாது. ஆனால், இத்தகைய தொகுதிகள் அல்லது சங்கங்கள் சிறப்பாகச் செயல்பட ஒரு முக்கிய—அத்தியாவசிய—நிபந்தனை உண்டு. அவற்றின் நோக்கங்களும் முறைகளும் பகிரங்கப்படுத்தப்பட்டால் அதைச் சமாளிக்கும் திறன் அவர்களுக்கு இருக்கவேண்டும். அவற்றின் உறுப்பினர் எண்ணிக்கை பட்டவர்த்தனமாக இருக்க வேண்டும். அவற்றின் கொள்கைகளும் வழிமுறைகளும் பொதுஜன அபிப்பிராயத்தின்முன் வைக்கப்படத் தக்கனவாக இருக்கவேண்டும். துரதிருஷ்டவசமாக எல்லாத் தொகுதிகளும் அல்லது சங்கங்களும் இந்த நிபந்தனையை நிறைவேற்றுவதில்லை. வரலாறு நெடுகிலும், இன்றைய காலம் உட்பட, பல சங்கச் சக்திகள் இரகசியமாகச் செயல்பட்டு வருகின்றன. அல்லது குறைந்தபட்சம், அந்தரங்க மாகவாவது செயல்பட்டு வருகின்றன; பொதுமக்கள் விவாதத்தைத்

தாங்கிக்கொள்ளாத கொள்கைகளின் வெற்றிக்காகத் தமது செல்வாக்கைப் பயன்படுத்துகின்றன. சாதாரணமாக, இச் சக்திகள் பொருளாதார ரீதியானவை; தமது சொந்த நலனுக்காக உழைக்கும் தனிப்பட்ட குடிமக்களின் நடவடிக்கைகளை ஆதரித்து நிற்பனவாகும். தத்தம் நலன்களை நிறைவேற்றிக் கொள்வதற்காகச் சரியான வழிமுறைகள் மூலமோ, அல்லது தவருன வழிமுறைகள் மூலமோ பல்வேறு கால கட்டங்களில் திரை மறைவில், சூத்திரக் கயிறுகளுக்குப் பின்னே பண்ணைத் தொழில், படைக்கலன்கள் உற்பத்தி, மது வகைகள், குறிப்பாகப் பாங்குத் தொழில், நிதி ஏற்பாடுகள்[1] முதலியன செய்யப்படுவதாகக் குற்றம் சாட்டப்படுகின்றன. 'நிதி அல்லது வர்த்தகத் துறைகளில் பொருளாதார அதிகாரத்தை வைத்திருப்பவர்கள், தமது தாக்கு பலத்தை மறைத்துக்கொள்ளுதல் இயல்பு; கலைத்து விரித்து விநியோகிக்கும் முறையால் அதை வெளிக்குத் தெரியாத அளவு செய்து விடுதல் வழக்கம்' என்று பியர் மெலாட் (Pierre Maillaud) கூறுகிருர். 'நவீன பொருளாதாரப் பிரபுத்துவத்தின் பிடிகொடாத்தனத்தைப்பற்றி' அவர் பேசுகிருர்:

[1] 'கொள்கையளவில் மக்களே இறைமை பெற்றவர்கள். திட்டவட்டமானதும் ஏக மனதானதுமான எண்ணத்தை வெளியிட முடியாது மக்கள் இன்னல் அனுபவித்தும், குறைபட்டுக்கொண்டும் இடைஞ்சல்களில் துயரனுபவித்துக் கொண்டும் வாழ்கின்றனர். அரசியல், பொருளாதாரத் திறன் இல்லாத காரணத்தால் இவர்களால் அவ்வாருன ஏகசிந்தை கொள்ள முடியவில்லை. உண்மையில் இறைமை பெற்ற மக்கள் தங்கள் இறைமையை விட்டுவிட்டார்கள். அதனுடையதென்று சொல்லப்பட்ட விருப்பாற்றலைக் கட்சிகள் விளக்குகின்றன. கட்சிகள் சில பொது அபிப்பிராயங்கள்மீது எழுந்த தொகுதிகளே ஆகும். எனினும், அவை வெவ்வேறு வர்க்கங்களின் நலன்களை ஆதரிப்பவைகளாக இருக்கின்றன. இந் நலன்கள் துல்லியமாக விளக்கப் பெருவிட்டாலும் ஒன்றுக்கொன்று மோதிக் கொள்வனவாக இருக்கின்றன. மேலும் கட்சிகள் மக்களிடத்திலிருந்தே தமது ஆதார அம்சத்தைப் பெறுகின்றன. தம் முக்கிய நலன்களைப் பாதிக்காதமட்டில் மக்களின் உளறல்களையெல்லாம் கட்சிகள் பொறுத்துக்கொள்கின்றன. மிகவும் ஒழுங்கான அமைப்புப் பெற்றதும் வல்லமை வாய்ந்ததுமாகிய சிறந்த சக்தி நிதியே ஆகும்.

'ஃபிரெஞ்சு ஜனநாயகத்தின் உண்மையான உயர் அதிகாரம் பெற்றது நிதி'யே யாகும். இது முரணிலிருந்து தோன்றியது. சிறு சேமிப்புக்களின் குவிப்பு அந்த உயர் அதிகாரத்தை மேலும் உயர்த்தியது. உலக நாடுகளில் மிகச் சிக்கனமான ஒரு நாட்டின் சேமிப்புக்களிலிருந்து அது தோன்றியது. நிதியே ஜனநாயகம் எனக் கூறுமளவுக்கு இது முக்கியத்துவம் பெற்றது. பொது விவகாரங்கள்மீது நிதி மிகுந்த கட்டுப்பாட்டு அதிகாரம் பெற்றிருந்தது. தனது கொள்கைக்கு இடையூருக எதுவும் தோன்றிவிடாதபடி அரசியலின் உள், வெளி விவகாரங்களைச் சூழ்ச்சித் திறத்துடன் இது கட்டிக் காத்தது. பொது அதிகார அமைப்புக்களும் பத்திரிகைகளும் இவ்விதத் தடைகளை உருவாக்க முடியும். இவற்றை இது கண்காணித்து, கட்டுப்படுத்திக்கொள்கிறது. நிதி அதிகாரத்துக்கு வெளியிலுள்ளவை ஆதரவற்ற நிலையில் உள்ளன. அரசியல் பொறியை இயக்குகின்ற ஒரு பொருளாதாரப் பிரபுத்துவமாக அல்லது சிறுகுழு ஆட்சியாக இது தோன்றுகிறது. இதனுல் ஃபிரெஞ்சுக் குடியரசுக்கும் பூர்ஷுவா மத்தியதர வர்க்கத்துக்கும் வேறுபாடு காணமுடியாத நிலையில் பாட்டாளி வர்க்கம் இருக்கிறது. அவர்களது அபிப்பிராயத்தில் ஜனநாயகம் 'பணநாயக'மாகிவிட்டதாகத் தோன்றும்.' (Guy—Grand'la Democratie' p.p. 12 - 13)

'பொருளாதாரத் துறையில் வேறுபாடு காட்டாத அதிகாரம் வளர்ச்சி அடைவது வேறுபாடு காட்டாத அரசியல் அதிகாரம் பரவுதலுக்கு ஓர் உதவுபடியாக அமைகிறது' என்று அவர் மேலும் கூறுகிறார்.

## மறைமுகச் செல்வாக்குத் தொகுதிகள்

இந்த இனங்காட்டாத் தன்மை, செயல்படுதலிலுள்ள இந்த இரகசியத் தன்மை[1]க்குக் காரணம்—'மறைமுகச் செல்வாக்குத் தொகுதிகள்' எனப்படும் இந்த அமைப்புக்களில் பல ஜனநாயக நடைமுறையை ஒதுக்கிவிட்டுச் செல்லவே முயற்சி செய்கின்றன; அதாவது, பொதுஜன ஒப்புதல் எப்படியிருப்பினும் அதை அலட்சியப் படுத்திவிட்டுத் தமது போக்கிலேயே செல்லத் துடிக்கின்றன.

ஜனநாயகத்தில் உள்ள இடையருக் கஷ்டங்களில் ஒன்றை இங்குக் காண்கிறோம். அதற்குப் பிரமாத வெளிப்பகை என ஒன்று அதிகமாக வரப்போவதில்லை; அதைப்பற்றிப் பின்னர்க் கூறுவோம். இங்குக் குறிப்பிடத்தக்கது, ஒரு சுயேச்சையான சமுதாயத்தால் அளிக்கப்பட்ட செயல் சுதந்தரத்தை அதிகப்படியாகப் பயன்படுத்திக் கொள்ளுதலைப் பற்றியதாகும். பகிரங்க விவாதம், பெரும்பான்மையினர் முடிவு அடிப்படையில் அமைந்த அதன் சட்ட திட்டங்களுக்குக் கட்டுப்பட விரும்புவதில்லை. அதாவது, சமுதாயத்தின் பிற பகுதியினர் என்ன நினைத்தாலும் அல்லது செய்தாலும் அதைப்பற்றிக் கவலைப்படாமல் தான் விரும்பியதைப் பெற மனிதன் நினைக்கிறான்.

## தொகுதிகளின் இறுதியான பயன்-மதிப்பு

ஒரு வகையில் ஜனநாயகத்தின் பிரச்சினைக்குத் தீர்வுகாண உதவும் முறை என்ற வகையில் சுயேச்சையாகச் செயல்படும் தொகுதி பாராட்டப்பட்டது. அதாவது, மிகப் பெரிய உலகத்தில் மிகச் சிறிய மனிதனின் பிரச்சினைக்கு—இதுதான் ஜனநாயகத்தின் சங்கடங்கள் பலவற்றுக்கு ஆதாரமாக அமைவது—தீர்வுகாண இந்தச் சுயேச்சையாகச் செயல்படும் தொகுதி ஒரு வழி எனச் சமாதானம் கூறப்பட்டது. இடைவிடாத, முறையான விசாரணை, பரந்த

[1] 'நவீன அரசில் உண்மையான அதிகாரம் பெருந் தொழில்கள் சம்பந்தப்பட்ட சங்கங்களிடம், இரும்பு - நிலக்கரி ஒப்பந்த அமைப்புக்களிடம் இருக்கிறது. அவை உள்நாட்டு, வெளிநாட்டுத் தேசீயக் கொள்கைகளைத் தம் சொந்த நோக்கங்கள் இலாபங்களுக்காகப் பயன்படுத்துகின்றன. பழைய சர்வாதிகாரிகளைப் போன்றே அவர்கள் அஞ்சப்பட்டனர்; பயபக்தியுடன் கூடிய மரியாதை காட்டப்பட்டனர்; ஆயினும் மறைவிலேயே இருந்தனர்—இந்த அமைப்புக்களும் பகிரங்கமாகச் செயல்படுவதை விரும்புவதில்லை.' (பால் லூயி—Paul Louis எழுதிய 'Le declin de la societe bourgeoise' என்னும் நூலில்)

அளவில் விளம்பரப்படுத்துதல் என்ற ஏற்பாட்டின் மூலம் தலைமறைவு நாச வேலை அபாயத்துக்கெதிராக அது பாதுகாப்புத் தரும்; பாதுகாக்க முயற்சி செய்யும் என்பது தெளிவு. ஆனால், அபாயத்துக்கெதிராகப் பூரணப் பாதுகாப்பு அல்லது காவல் என்பது இருக்க முடியாது என்பதும் தெளிவு. சுயேச்சைத் தொகுதியின் பணிகளினால் விளையும் சௌகரியங்கள் முன் சொன்ன அபாயங்களை வெற்றியில் கொண்டுவிடும் என்றே தோன்றக்கூடும். 'இத்தகைய மறைமுக - செல்வாக்குத் தொகுதிகள் ஜனநாயகத்துக்கு ஓர் அச்சுறுத்தலாவதற்குப் பதிலாக அவை உண்மையில் ஜனநாயகத்தின் மாபெரும் நம்பிக்கையாக விளங்குகின்றன. ஒழுங்குபடுத்தப்பட்ட பல்வேறு ஏராளமான சக்திகள் ஒருங்கிணைந்து செயலுக்கான கோவை அமைப்பாக அமைகின்றன. இது கொடுங்கோன்மை, சுரண்டல், நெகிழாத் தன்மை கொண்ட எதிரிடையான இரு வர்க்கங்களாகச் சமுதாயம் பிளவுண்டு போவது ஆகியவற்றுக்கெதிரான சிறந்த பாதுகாப்பு ஆகும். ஒரு தனிப்பட்ட அனுபவம், ஒரு வாழ்க்கை முறை, தன்னுடைய திறமைகளையும் சக்திகளையும் வளர்த்துக் கொள்ள ஒரு வாய்ப்பு, தன்னுடைய வேலையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு, தன்னை உணர முடிதல்---இவையே உண்மையான சுதந்தரத்துக்கான நிபந்தனைகள். இவற்றைப் பெரும்பகுதி மக்களுக்குக் கிடைக்கச் செய்வது தொகுதி அமைப்பாலேயே முடியக்கூடிய காரியம்' என்று ஹார்வி ஃபெர்கூஸன் (Harvey Fergusson) வற்புறுத்திக் கூறும்போது[1] அது நமக்கு உடன்பாடானதாகவே இருக்கிறது.

## தொகுதிகளும் சுதந்தரமும்

மான்ஹீம் (Mannheim) தமது 'Man and Society'யில் உண்மையான சுதந்தரம், சிறந்த சமுதாய வாழ்க்கைக்கான நிபந்தனைகள் சம்பந்தமாக எழுப்பிய வினாவுக்கு விடையளிக்கிறது: 'மக்கள் எவ்வாறு, எங்கே, ஏன் சந்திக்கின்றனர்? அதிகாரம், செல்வாக்கு, எதிர்பாரா ஆபத்து, பொறுப்பு முதலியவை எவ்வாறு விநியோகித்துக் கொள்ளப்படுகின்றன? மனிதர்கள் தன்னிச்சையாகச் செயல்படுகின்றனரா அல்லது ஆணைகளுக்கு அடங்கிச் செயல்படுகின்றனரா?' கட்டாயப்படுத்தல், இராணுவாதிகாரப் போக்கு, அச்சம் விளைத்தல், தலைமையைப் பறித்தல் ஆகியவற்றுக்கெதிரான சமாதானம் அங்குத்தான் இருக்கிறது---ஏதோ ஒன்றைச் செய்து கொள்ள மனிதர்கள் ஒன்று சேர்கின்றனர்; அதைச் செய்யுமாறு

[1] Harvey Fergusson எழுதிய 'People and Power' என்ற நூலுக்கு New York Times இதழில் வந்த விமர்சனம்.

அல்லது தமக்குச் செய்துகொள்ளுமாறு அரசாங்கம் தமக்குக் கூறட்டும் எனக் காத்திராமல் தாமே செய்துகொள்ள அவர்கள் ஒன்றுபடுகின்றனர். ஜனநாயகச் சுதந்தரத்துக்கு அதுதான் திறவுகோல்.[1] ஆங்கிலோ-ஸாக்ஸானிய நாடுகளில் கல்வியின் கதை முழுவதுமே தன்னிச்சையாகப் பிரவகித்த செயலின் எடுத்துக் காட்டாகும். திருச் சபைகளாகட்டும்; அல்லது தனிநபர்களின் சங்கங்களாகட்டும் அவை இன்றுவரை தம் சொந்த விவகாரங்களைத் தாமே நிருவகித்துக்கொள்ளுகின்றன; அதிகார பூர்வமான கட்டுப் பாட்டின் கீழ்த் தோன்றிய பள்ளிகளின் பிற்கால வளர்ச்சியினால் அவை பாதிக்கப்படவில்லை. இன்று அரசு வழங்கும் மானியங்களைத் தம் விருப்பம்போலப் பயன்படுத்தும் சுயேச்சை அவற்றுக்குத் தரப்பட்டுள்ளது.

## (iii) ஆளும் வர்க்கங்களும் தலைமையும்

### ஆளும் வர்க்கங்களின் பிரச்சினை

தொகுதிகள் அவசியந்தான். எனினும், ஆள்வது என்பது சிலருடைய வேலைதான் என்னும் அரசியலின் இன்றியமையா உண்மையை நாம் மறப்பதற்கில்லை. 'மக்களில் பெரும்பாலோர் எப்போதும் ஆர்ப்பரிப்பற்றவர்களாய், சலனமற்றவர்களாய் இருக் கின்றனர்; கல்வி, உணர்ச்சிப் போக்கு, தொழில், திசைவழி உணர்வு முதலியன வேறுபட்டிருக்கும் இலட்சக்கணக்கான மக்களை ஒரு அதி தீவிரக் கருத்துக்கு மாற்றுவதென்பது அசாத்தியமான காரியமாகும். நலன்கள், உணர்வுகள், உத்வேகங்கள் ஆகியவற்றைக் கொண்ட சமுதாயத்தைப் பொறுத்துத் தீவிரக் கருத்துக்கள் எப் போதும் சிறிய, பொறுக்கியெடுத்த, ஒரே தன்மையுள்ள சிறுபான்மை யினரின் சொத்தாகவே இருந்திருக்கின்றன' என்று ஃபெரரோ (Ferrero) கூறுகிறார்.

ஒரு வகையில் எல்லாச் சமுதாயங்களும் சிறு குழுவாட்சி (Oligarchies) களாகவே இருக்கின்றன; அவை அனைத்தும் தமது 'ஆளும் வர்க்கத்'[2]தைப் பெற்றிருக்கின்றன. அது என்ன வகைப்

[1] லிண்ட்சே பிரபு (Lord Lindsay) கூறுவதுபோல, 'எல்லாச் சங்கங்களிலும் ஓரளவு அபத்தம் உண்டு...மனிதக் கூட்டுகள் பற்றிப் புரிந்துகொள்வதற்கு அவை ஆதர்சமாக விளங்கும் எந்த இலட்சியங்களில் குறைவுபடுகின்றன என்பதைக் கணக்கிலெடுத்துக்கொள்வது எவ்வளவு அவசியமோ அவ்வளவு அவை இந்த நோக்கங்களால் ஆதர்சிக்கப்படுகின்றன என்பதை நினைவில் கொள்ளுதலும் அவசியம்.'

[2] Mosca-வின் 'Ruling Class' என்னும் நூலைப் பார்க்க.

பட்டது என்பதே கேள்வி. இராணுவ ரீதியானதா ? மதத் தலைமை யின்பாற்பட்டதா ? பரம்பரைத் தன்மை கொண்டதா ? நிலவுடைமை வர்க்கமா ? பணவுடைமை வர்க்கமா ? இவை எதையும் ஜனநாயகம் பதிலாகக் கூறுவதில்லை. ஆனால், அறிவுநுட்ப, ஆளும் தகுதியை அடிப்படையாகக்கொண்டே ஓர் ஆளும் வர்க்கம் தேர்ந்தெடுக்கப் படுகிறது.

அதன் ஆளும் வர்க்கத்தின் தன்மை, ஒவ்வொரு சமுதாயத்தை யும் வேறுபடுத்திக் காட்டும் அம்சமாகும். ஏனெனில், ஒவ்வொரு சமுதாயமும் தனது ஆளும் வர்க்கத்தைப் பெற்றிருக்கிறது ; ஒன்றில் ஏற்படும் மாற்றம் மற்றொன்றின் மாற்றத்தின்மூலம் உணர்த்தப் படுகிறது. ஒரு நூற்றாண்டுக்கு முன்னர் ஆங்கில ஆளும் வர்க்கம் விசேஷப் பள்ளிகளிலும் (Public Schools) பல்கலைக் கழகங்களிலும் பயிற்றுவிக்கப்பட்டது. தனியாக வருமானமின்றி ஓரளவு செல்வாக்கு, தொடர்புகள் இன்றி அரசியல் வாழ்க்கையில் புக முடியாது என்றிருந்தது. நமது இன்றைய ஆளும் வர்க்கத்தில், பழைய ஆட்சியின் சில பிரதிநிதிகளுக்கு இன்னும் இடமிருக்கிறது. கன்ஸர்வேடிவ் (Conservative) கட்சியினர் மட்டுமின்றித் தொழிற் கட்சியிலும் (Labour Party), ஈட்டன் (Eton), கிங் (King's), வின் செஸ்டர், (Winchester), நியூ காலேஜ் (New College) போன்ற கல்வி நிலையங்களிலிருந்து வந்தவர்கள் இருக்கின்றனர். ஆனால் தொழிற் சங்கம், நகரசபை, கிராமப் பள்ளி, தொழில் நுட்பக் கல்லூரி, 'மாநிலப் பல்கலைக் கழகங்கள்' ஆகியவைகளிலும் போட்டிமுறை பொதுவாக்கப்பட்டதைத் தொடர்ந்து ஆள் சேர்க்கும் களங்களாகத் திகழ்கின்றன.

## ஜனநாயகமும் ஆளும் வர்க்கமும்

ஜனநாயகத்திலும் ஆளும் வர்க்கம் இருக்கிறது ; ஒரே வித்தி யாசம் அந்த ஆளும் கூட்டத்துக்குள் நுழையச் சாதாரண மனித னுக்கு அதிக வாய்ப்புக்களை ஜனநாயகம் அளிக்கிறது ; அவனுடைய செல்வாக்கு அதில் உணரப்பட உதவுகிறது. பொதுஜன அபிப் பிராயம், வேட்கைகள் ஆகியவற்றுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு, அதாவது, ஆள்வோருக்கும் ஆளப்படுவோருக்கு மிடையே முன்னிலும் நெருக்கமான உறவை ஜனநாயகம் நிறுவு கிறது. ஆனால், இரண்டுக்குமிடையே உள்ள வித்தியாசத்தை அது போக்கிவிடுவதில்லை.

எந்தவொரு ஆளும் வர்க்கத்துக்கும் இயல்பாக உள்ள ஆசை, சபலங்கள் அதாவது, தன் சொந்த நலன்களை வளர்த்துக் கொள்ளுதல், இதர மக்களின் நலன்களுக்கு வேறுபட்ட, எதிரிடை

யான நலன்களை வளர்த்துக்கொள்ளுதல் முதலியன ஜனநாயக அரசில் உள்ள ஆளும் வர்க்கத்துக்கும் உண்டு. ஒரு ராணுவ அதிகாரி அல்லது மதகுரு அல்லது பரம்பரைப் பெருந்தனக்காரரின் ஆதிக்கத்தின்கீழ் ஆசை, சபலங்கள் எவ்வாறிருக்கும் என்பது தெளிவு. ஒரு வியாபாரி அல்லது நிலப்பிரபுவின்கீழ் அந்த அம்சம் அவ்வளவு தெளிவாகக் கண்ணுக்குப்படாது. ஏனெனில், அவர்களுடைய சுபிட்சம் நாட்டின் மொத்தச் சுபிட்சத்துடன் ஓரளவு பிணையுண்டிருக்கும்.[1] நாட்டின் பல கூறுகளிலிருந்தும் ஆளும் வர்க்கம் திரட்டப்படும்போது அது பரம்பரைத் தன்மை உடையதாகவோ, அன்றிக் குறிப்பிட்ட நலனுடன் பிணையுண்டதாகவோ இருப்பதில்லை. அதன் ஆசை, சபலங்கள் முன்சொன்னதைவிட அதிக இலேசானவையாகவும் நுட்பமானவையாகவும் ஆகின்றன ; அதன் நிருவாக அதிகாரம் அதனுள்ளேயே முடிந்ததொன்றாக ஆகிறது. சட்டங்களுக்காகச் சட்டம் செய்வதும் ' தனது செல்வாக்கைப் பரந்த அளவில் ' உணரச் செய்வதன் மூலம் தான் நீடிப்பதை நியாயப்படுத்துவதாகவும் ஆகிறது. அங்கு எப்போதும் ' உத்தியோக பூர்வமற்ற ' ஆளும் வர்க்கப் பொருளாதாரச் சக்தியைத் தமது பிடியில் வைத்திருப்போர், மதபீட அதிகாரிகள், கல்வி, இராணுவத் துறை அதிகாரிகள் அடங்கிய ' உத்தியோக பூர்வமற்ற ' ஆளும் வர்க்கம் இருக்கிறது. திரை மறைவில் உள்ள அதன் செல்வாக்குக் காரணமாக இடைவிடாத கண்காணிப்பும் பரிசோதனையும் அவசியமாகின்றன.

சட்டபூர்வமானதும் அதிகப்படி - சட்டபூர்வமானதுமான ஆளும் வர்க்கத்தின் அதிகார சக்தி, மொத்தத்தில் சமுதாயத்தின் அரசியல் பக்குவ அளவுடன் நேரடி உறவுகொண்டிருக்கும். பரந்த விழிப்புள்ள ஒரு ஜனநாயக சமுதாயம்—சுவிட்ஸர்லாந்து நாட்டிலுள்ளது போன்று செயல்படுமுறையிலும் பூகோள ரீதியிலும் பரவலான முறையில் விநியோகிக்கப்பட்ட அதிகார அமைப்புடைய ஒரு ஜனநாயக சமுதாயம்—ஃபிரான்ஸ் போன்ற ஒரு நாட்டைவிட அதிக அளவில் பூரண சுயேச்சையும் உண்மையான சுயாட்சித்தன்மையும் கொண்டதாக இருக்கும். ஃபிரான்ஸ் ஒரு குவிக்கப்பட்ட அதிகார அமைப்புக்கொண்ட நாடு ; அதன் மக்கள் மிகுந்த புத்திசாலிகளாக இருக்கலாம் அல்லது தென்அமெரிக்க, ஆசியப் பிரதேசங்களிலுள்ள அரசியல் ரீதியான அனுபவமற்ற சமுதாயங்களைவிட அதிக அனுபவம் பெற்றிருக்கலாம். மேலும், பரிணாம வளர்ச்சிக்குட்பட்டு வரும் அரசுகள், பழைய, நிலைத்த சமுதாயங்களைவிடத் தமது ஆளும்

[1] உதாரணமாக, பிரிட்டனில் சென்ற நூற்றுண்டு மத்தியில் யந்திரத் தொழிலுக்காக வேளாண்மைத்தொழில் தியாகம் செய்யப்பட்டமை நமது நினைவுக்கு வருகிறது.

வர்க்கத்தை அதிகமாகச் சார்ந்தே இருக்கும் என்பது தெளிவு. 'உங்களுடைய ஆளும் வர்க்கம் எப்படிப்பட்டது என்பதைக் கூறுங்கள்; அரசியல், சமுதாய வளர்ச்சிக் கோட்டில் நீங்கள் எங்கு நிற்கிறீர்கள் என்பதைக் கூறிவிடுகிறேன்' என்பது இந்தத் தலைப்புக்கு ஒரு நல்ல சுருக்கமாக அமையும்.

## தலைமையும் சாதாரண மனிதனும்

கூட்டுச் சமுதாய வாழ்க்கையில் நேரடிப்பங்கு பெறுவதில் பிரச்சினைகள் எழுகின்றன. சுயேச்சையான அமைப்புக்கள் இப் பிரச்சினைகளை ஓரளவு சமாளிக்கின்றன; சமுதாயத்தைப் பல சிறு மூலக்கூறுகளாகச் சிதைப்பதன்மூலம் தனிநபர் தன்னை உணரவும் தனது கருத்தை வெளிப்படுத்தவும் இந்தச் சுயேச்சை அமைப்புக்கள் உதவுகின்றன. ஆனால், மற்றொரு தீர்வு எதிர்திசையில் இருக்கிறது—அதே தனிநபர் தன் சகாக்களுடன் அவர்களுடைய கூட்டுச் சமுதாய வாழ்க்கையில் இணைந்து பிணைவதன்மூலம் தன்னை உணர்கின்றான்.

தனிமைப்படுத்தப்பட்ட எண்ணற்ற தனித்தனி நபர்களுக்கு ஒன்றுபட்ட இலட்சியத்தை அளித்து ஜீவனுள்ள ஒரு முழுமை உருவாக அவர்களை இணைத்து உருவாக்குவது தலைமையின் பணியாகும்.

அரசியல் சமுதாயங்கள் அமைவதில் தலைமைக்குள்ள பங்கு பற்றியும் அதன் அத்தியாவசியத் தன்மைகள் சிலவற்றைப்பற்றியும் முன் அத்தியாயமொன்றில் பரிசீலித்தோம். தைரியம், கற்பனை, தெளிந்த பார்வை, இடைவிடா முயற்சி, மனவலிமை, சக மனிதர்களைப் புரிந்துகொள்ளுதல், தன்னைச் சார்ந்த ஊழியர்கள் தன்னை ஏற்றுப் பின்பற்றத்தக்க விதத்தில் ஓரளவு பிடிகொடாப்போக்கு முதலிய முக்கிய குணங்களைக் கொண்டிருத்தல் என்று தலைமைக்குரிய சில பண்புகளாக அப்போது வரையறுத்திருந்தோம்.

கட்டுப்பாடு, எதிர்கேள்வியில்லாப் பணிவு ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்த ஆதிபத்தியம் வேறு; தலைமை வேறு. இரண்டையும் குழப்பிவிடக்கூடாது. 'Leadership or Domination' என்ற தமது நூலில் இதுபற்றிப் பிகோ (Pigou) குறிப்பிடுகிறார். இவை இரண்டும் நேர் எதிரிடையானவை. தலைமைச் சுதந்தரமாக ஏற்கப்படலாம்; அதே சுயேச்சையுடன் மறுக்கவும்படலாம். தன்னைப் பின்பற்றுமாறு மற்றவர்களை வற்புறுத்துவது மனிதனின் தார்மீக உரிமை; பின்பற்றவேண்டிய வழிமுறை என்ன என்பதை மனிதன் அறிந்திருக்கிறான். இந்த இரு அம்சங்களையும்

அங்கீகரிப்பதாகும் அது. 'இந்தவகையான தலைமை ஜனநாயகத்தை ஒரு புதிய மரியாதையுடன் நடத்துவதை உள்ளடக்குவதாகும்; தூரதிருஷ்டியுள்ள, நீடித்த அமைப்புக்கான, விஞ்ஞான ரீதியான திட்டங்களை அது முன்வைக்கிறது; யுத்திபூர்வ வழிமுறைமூலம் அது கட்டளை இடுகிறது; தகுதிகள் அடிப்படையிலேயே தீர்மானிக்கப்படவேண்டும் என்று அறைகூவல் விடுக்கிறது.'[1]

## ஜனநாயகத் தலைமையின் வகைகள்

ஜனநாயகத் தலைமையில் இரு வேறுபட்ட வகைகள் உண்டு. 'ஒரு தலைவன், இன்றைய உடனடிப் பணிகளுக்கு மக்களை அழைத்துச் செல்பவன்; மற்றவன், நீண்டதொலைவு முன்னே சென்று, நாளைய பணிகளைக் காண்பவன். ஒருவன் ராஜீயவாதி (statesman); மற்றவன் தீர்க்கதரிசி. காத்திருக்கமுடியாத அவசரப் பணிகள்பற்றிக் கவனம் செலுத்துபவன் முன்னவன்; 'சமுதாயம் இயங்கவேண்டிய இறுதியான மதிப்புக்களை நோக்கி, அந்த மதிப்புக்களை வரையறுத்தல்பற்றி'ப் பின்னவன் கவலைப்படுகிறான்; ஓர் அரசு அல்லது தலைமுறையின் அத்தியாவசிய அம்சங்களைத் தக்க காலத்திலும் அல்லாத பொழுதிலும் அவற்றின் அர்த்தத்தைத் தாம் பார்க்குமாறு தம் காலத்தவருக்குப் பிரகடனப்படுத்திக் கொண்டு இருப்பதை அறிவதில் அவன் கவலைப்படுகிறான்.'[2]

இருவருக்கு மிடையேயுள்ள முக்கிய வேறுபாடு, ராஜீயவாதி முதலில் செயலில் கவனம் செலுத்தவேண்டும் என்பதாகும்; எனவே, அரசியல் அதிகார பீடத்துக்கு அவர் முன்வரவேண்டும் என்பதாகும். அவர் ஒரு சாத்தம் (Chatham), ஒரு லாயிட் ஜார்ஜ் (Lloyd George), ஒரு டிஸ்ரேலி (Disraeli), ஒரு லிங்கன் (Lincoln), ஒரு கமால் பாஷா (Kemal Pasha), ஒரு ஸ்டாலின் (Stalin). ஆனால், தீர்க்கதரிசியோவெனில் 'அதிகாரத்திலிருந்து விலகியிருத்தலைத் தீவிரமாகப் பாதுகாக்கவேண்டும்.' உண்மையைப் பிரகடனப் படுத்துவதே—அது மகிழ்ச்சிதருவதாயினும் சரி, துக்கத்தைத் தருவதாயினும் சரி—அவருடைய வேலை. எனவே, அவர் சுய மறுப்பையும் சுதந்தரத்தையும் அரசியல் தலைமைக்குரிய இதர குணங்களையும் நடைமுறையில் பின்பற்றவேண்டும்.

[1] 'Democracy and Leadership' பற்றிய பிரகடனம்: Manchester Guardian இதழ்—பிப்ரவரி 14, 1934.

[2] 'The Elite in a Democratic Society' என்ற கட்டுரையில், (Harpers Magazine, 1933) லாஸ்கி (Laski).

## மாபெரும் தலைவன்

இருவகையினரும் ஜனநாயகத்துக்கு இன்றியமையாதவர்கள். அது இல்லாவிடில் அரசியல் வெறும் அற்ப விவகாரங்கள் சம்பந்தப் பட்ட, தனிப்பட்ட போட்டிப் பூசல்கள் சம்பந்தப்பட்ட விஷயமாகி விடும்; அவற்றில் உயிரிருக்காது; உத்வேகமூட்டும் அம்ச மிருக்காது. சித்தாந்தங்கள் அங்கு இல்லை; பார்வை வீச்சு இல்லை; தீர்க்கதரிசனம் இல்லாத நிலையில் மக்கள் அழிந்துவிடுவர்.

மாபெருந் தலைவனே அரசியலின் வெற்று எலும்புகளுக்கு உயிரூட்டுகிறான். ஒரு பொது இலட்சியத்துக்கு ஒவ்வொருவனும் தத்தமது பங்கைச் செலுத்தவேண்டும் என ஒவ்வொரு தனி நபரையும் அவன் சவாலுக்கழைக்கிறான்; சாதாரண ஒரு குடிமகன் வாழ்வதற்கு ஓர் அர்த்தத்தை அவன் அளிக்கிறான். அவனுக்கும் (மாபெரும் தலைவன்) ஒரு தேர்ந்த அரசியல்வாதிக்கும் உள்ள முக்கிய வித்தியாசம் இருவகைப்பட்டது. அவன் (மாபெரும் தலைவன்) மேலுக்குப் புகழ்வார்த்தை பேசுவதில்லை; மாறாக, முகஞ் சுளிக்கச்செய்யும் பச்சை உண்மைகளைப் பேசுகிறான்; அவற்றை ஒப்புக்கொள்ளவைக்கிறான்; தியாகத்துக்குச் சக்தி உள்ளவர்களாகத் தன்னைப் பின்பற்றுபவர்களை ஆதர்சப்படுத்துகிறான். இந்த அம்சம் தலைமைக்குள்ள ஒரு முத்திரைக்குறி ஆகும்.

இப்படிக் கூறுவதனால் ஒவ்வொரு குடிமகனும் அவன் கருத்தை ஏற்கிறான் என்பதன்று. மனித இயல்பில் முழுமைபெறாத அம்சங்கள் உண்டு; ஒவ்வொரு சமுதாயத்திலும் 'ஏனோ தானோ' சக்திகள், நபர்கள் ஆகியன இருப்பதையே அது விளக்குகிறது; தம் சொந்த நலன்களே முக்கியம், பொதுநன்மை எப்படிப்போனால் நமக்கென்ன என்ற போக்கில் இருப்போர் இருப்பதையே அது குறிக்கிறது. அத்தகையவர்களை, ஒத்துழைக்கும் குடிமக்களாக மாற்றுவதென்பது கடினம்; பல குழுக்களாக அவர்களைச் சேர்த்துப் பிணைத்தாலும் அக் குழுக்களில் அவர்கள் பெரும்பாலும் சேருவ தில்லை. இது தவிர்க்க முடியாதது. இதுபற்றிச் செய்வதற்கு ஒன்று மில்லை. இரு உண்மைகளையும் ஒப்புக்கொள்வது தவிர வேறு வழியில்லை.

சுயேச்சைத் தொகுதிகளும் ஆதர்சத் தலைமையும் செய்யக்கூடிய தெல்லாம் ஒவ்வொரு மனிதனுக்கும் அவனுடைய வாய்ப்பை அளிப்பதே ஆகும். சுயேச்சையான சங்கத்தில் அவன் தலையாய இடம்பெறமுடியும்; சமுதாயக் கூட்டு நடவடிக்கையிலும் தலையாய இடம்பெறமுடியும். அது சிறியதாகவோ ஆரவாரம் அற்றதாகவோ

இருக்கலாம். ஆயினும், இந்த இரு அம்சங்களும் சமுதாயத்தில் அவன் ஓர் உறுப்பினன் என்பதற்கு அர்த்தத்தை அளிக்கும். அதைவிட அதிகம் செய்வதென்பது முடியாத காரியம்.[1]

## (iv) சித்தாந்தத்திற்கும் நடைமுறைக்குமிடையே உள்ள மோதல்

### ஜனநாயகம் மாசுபடுதல்

முதல் அத்தியாயத்திலேயே எழுப்பப்பட்டதொரு பிரச்சினைக்கு நாம் மீண்டும் வருகிறோம். அதாவது சித்தாந்தத்திற்கும் அரசாங்க நடைமுறைக்கும் இடையே சமரசம் காணும் பிரச்சினை. இதோ ஒரு நாடு. காகிதத்தில் அதன் நிறுவனங்கள், ஜனநாயகத் தத்துவத்தின் சிறந்த வெளியீடுகளாகக் காட்சி தருகின்றன. சர்வ ஜன வாக்குரிமை, பூரண அதிகாரங்களுடைய பாராளுமன்றம், பொறுப்புடைய அமைச்சரவை, சுயேச்சையாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆட்சித் தலைவர், சுயேச்சையான நீதி அமைப்பு, தனிப்பட்டோர் அடிப்படை உரிமைகளுக்கு உத்தரவாதமளிக்கும் சட்டங்கள் முதலியவற்றையெல்லாம் அதன் அரசியலமைப்புச் சட்டம் அளிக்கிறது. இதைவிட ஒருவனுக்கு வேறென்ன வேண்டும்? ஆனால் இந்த அரசியலமைப்புச் சட்டம் எவ்வாறு வேலை செய்கிறது என்பதைக் கவனியுங்கள். என்ன காண்கின்றீர்கள்? வாக்காளர்களில் பெரும்பாலோர் கல்வியறிவற்றவர்கள்; சிலர் எழுத்தறிவே இல்லாதவர்கள். சர்வ ஜன வாக்குரிமை என்பது ஒரு கேலிக்கூத்து. யாருக்கு ஏன் வாக்களிக்கிறோம் என்பதே பலருக்குத் தெரியாது; தம் திருச்சபைகளைச் சேர்ந்த பாதிரிகளும் நிலப் பிரபுக்களும் குறிப்பிடுவோருக்கே மற்றவர்கள் வாக்களிக்கின்றனர். சுயேச்சையாக முடிவு எடுத்து வாக்குரிமையைப் பயன்படுத்த முயற்சி செய்பவர்கள் நல்லமுறையில் நடத்தப்படுவதில்லை; சட்ட விரோதமாக அவர்களுக்கு வாக்குரிமை மறுக்கப்படுகிறது. சில சமயங்களில்

[1] 'தொடக்க உரிமையும் பொறுப்புணர்ச்சியும் தனது பயன்தரும் தன்மை பற்றிய உணர்வும் தான் இன்றியமையாதவன் என்ற உணர்வும் ஒரு மனித உள்ளத்துக்கு அவசியம். தன் நலன்கள் சம்பந்தப்பட்டவற்றுக்கு மட்டுமின்றித் தனக்குத் தொடர்புடையதாக அவன் நினைக்கும் நலன்களுக்குமான சிக்கல்களில் அவை சிறியனவாக இருப்பினும் அல்லது பெரியனவாக இருப்பினும் தீர்வு காணவேண்டியிருக்கிறது...உறுதியான நெஞ்சம் படைத்த எந்த மனிதனுக்கும் ஆணையிடும் அதிகாரம் எவ்வளவு அவசியமோ, அவ்வளவுக்குத் தொடக்க உரிமையும் அவசியமானதாகும். கல்வி, சமூக இயக்கங்கள் கொண்ட ஓர் ஆழ்ந்த வட்டார வாழ்க்கையானது முற்றிலும் தகுதியற்றவனல்லாத எந்த மனிதனையும் தனது வாழ்க்கையின் சில காலங்களில் ஆணையிடும் வாய்ப்பைப் பெறும்படிச் செய்கிறது' (Simone Weill,—'l' Enracinement' p. 20)

உதையும் கிடைக்கிறது. அல்லது, வாக்குச் சாவடிக்குச் செல்ல வொட்டாது பலாத்காரமாகத் தடுக்கப்படுகின்றனர். இறந்துபோன வாக்காளர்களும் தேர்தல் நாளன்று 'உயிர்பெற்று மறு பிறப் படைந்து' விடுகின்றனர். வாக்குப் பெட்டிகள் இறுதி நேரத்தில் ஆளும் கட்சி அபேட்சகர்களுக்காக நிரப்பப்படுகின்றன. அத்தகைய ஒரு நாட்டில் — இன்றைய உலகில் அதுபோன்ற பல நாடுகள் இருக்கின்றன — தேர்தல்கள் என்றும் 'சுயேச்சையாக' நடை பெறுவதில்லை.

அரசியல் பதவிகளைப் பொறுத்தவரையில் அவை பணக்கார, செல்வாக்குப் படைத்த போட்டிக் கும்பல்களிடம் சிக்குகின்றன; தத்தம் சொந்த நோக்கங்களுக்கு அவர்கள் தமது அதிகார வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்கின்றனர். அவர்கள் நியமிக்கும் நபர்களே 'சிவில் சர்வீஸ்'களில் நிறைந்து காணப்படுகின்றனர்; குளறுபடி ஆட்சியிலிருந்து கோலோச்சுகிறது. போட்டித் தேர்வுகள் நடத்தச் சட்டம் வகைசெய்திருக்குமானால் 'சரியான' அபேட் சகர்கள் வெற்றிபெற இவர்கள் 'உதவு'கின்றனர். நீதியை நிலைநாட்ட நீதிபதிகள் தம்மாலானவரை பாடுபடலாம்; ஆனால் அரசாங்கத்துடன் 'நெருக்கமாக' இருப்பவர்கள் யாரிடமும் அதை அமல் செய்யத் துணியக்கூடாது என்பதை அவர்கள் அறிந்தே இருக்கின்றனர். உயரிடத்திலும் சரி, கீழ் மட்டத்திலும் சரி, லஞ்சம் (கையூட்டு) காணப்படுகிறது. சின்னஞ்சிறு 'மீன்'களிடம் படுதீவிரமாக அமல் நடத்தப்படும் கட்டுப்பாடுகளைப் பெரிய மனிதர்கள் அலட்சியப்படுத்த முடிகிறது. வரி விதிப்பிலும் இதே நிலைமைதான். பத்திரிகைச் சுதந்தரத்தைப் பொறுத்த அளவில் அது (சுதந்தரம்) இருப்பதாகவே தெரிவதில்லை. பத்திரிகைகள் 'சஸ் பென்ட்' செய்யப்படுகின்றன; அவற்றின் ஆசிரியர்கள் 'ஒழுங்கைச் சீர்குலைக்க' முயன்றனர் என்று இலேசாகக் குற்றம்சாட்டப் பட்டுச் சிறைக்கு அனுப்பப்படுகின்றனர். குறிப்பிட்ட ஆட்கள் நடமாடுவது தமக்கு 'அசௌகரிய'மாகப்படுகையில் தன்னிச்சையாக அத்தகையவர்கள் கைது செய்யப்படுவதும் விசாரணையின்றிச் சிறையில் அடைத்து வைக்கப்படுவதும் நாள்தோறும் நடப்பன வாகும். சுயேச்சையான ஜனநாயகம், உயர்தரப் பொருள் ஆகியவற்றின் அபத்தங்களுக்கிடையே எண்ணற்ற இடைநிலைகள் உள்ளன. தமது நடைமுறையும் சித்தாந்தமும் பூரணமாக ஒத்து வருவதில்லை என்பதை மிகச்சில நாடுகளே மறுக்கவியலும். லஞ்ச ஊழல்களை முழுமையாக ஒழித்தல், திறமைக் குறைவை ஒழித்தல் பிறப்பு அல்லது செல்வம் காரணமாக ஏற்படும் செல்வாக்கை ஒழித்தல் முதலியன அசாத்தியம் எனக் கூறுவதற்கில்லை எனினும் அது மிகக் கஷ்டமான காரியம் எனலாம். ஜனநாயகம் கறைபடிதல்

அல்லது மாசுறுதல் என்பது எல்லா நாடுகளின் அரசியல் பரிணும வளர்ச்சியில் ஒரு கட்டம் என்பதும், ஜனநாயகத் துறையில் குறிப்பிடத்தக்க அளவு சாதனை ஏற்படுத்திவிட்டதாக இன்று கூறும் நாடுகளுக்கும் இது பொருந்தும் என்பதும் இங்குக் கருதத்தக்கது. எல்லோருக்கும் ஒரு 'விலை' உண்டு என்று வால்போல் (Walpole) கூறினர்; இங்கிலாந்தின் பதினெட்டாம் நூற்ருண்டு அரசியலை நேரடியாக அறிந்தே அவர் அவ்வாறு கூறினர்; நூறு ஆண்டுகளுக்கு முன்பு நமது 'சிவில் சர்வீஸ்' திருத்தியமைக்கப்பட்டது. அதற்கு முன்னர் எங்கும் கடமைப் புறக்கணிப்பு, வேண்டுவோர்க்குச் சலுகை, பின்தங்கிய நிலை ஆகிய நம்பமுடியாக் காட்சியே காணப்பட்டன. மூன்ருவது நெப்போலியன் கால ஃபிரான்ஸ் நாடும், கிராண்ட் (Grant) கால அமெரிக்க ஐக்கிய நாடுகளும் இதைவிட மேம்பட்ட நிலையில் இருக்கவில்லை.

மக்களிடையே பொது உத்வேக உணர்வு பெருமளவில் இருக்க வேண்டும்; இது ஒன்றுமட்டுமே ஜனநாயத்தைச் சாத்தியமாக்கும். அதற்குப் பெருமளவில் படிப்பினைகளும் இடைவிடாத புனர் படிப்பினைகளும் அவசியமாகின்றன. எதிர்கால ஜனநாயக சமுதாயத்தை எதிர்நோக்கும் மாபெரும் பணி, பொதுவாழ்க்கையின் சரியான வழிகளில் கிடைக்கும் இந்தக் கல்விதான். ஏனெனில் சட்டத்துக்கு மதிப்புத் தேடித்தர எந்தச் சட்டத்தாலும் ஆகாது; அது குடிமக்களிடமிருந்துதான் வரவேண்டும். ஆனுல் ஓரளவு வளர்ந்த நாடுகளை உதாரணம் காட்டுவதெல்லாம் படிப்பினை கற்றுக்கொள்ள ஓரளவு உதவும் என்பதே. மக்கள் தமது தகுதிக்குத் தக்க அரசாங்கத்தைப் பெறுகின்றனர் என்பது அந்த வகையில் உண்மைதான்.

## வேறு சில பிரச்சினைகள்

ஜனநாயகத்தை எதிர்ப்படும் பிரச்சினைகளைப்பற்றிய இந்தப் பரிசீலனை காலவரம்பின்றித் தொடரக்கூடும். தனிப்பட்ட கொடுங்கோன்மையாகத் தலைமை மாறும் அபாயத்தையும் பொருள் ரீதியான சுபிட்சத்தைத் தேடுவதில் சமுதாய லட்சியங்கள் பிளவுண்டு போவதையும் மன, மெய்ச் செயலின்மை நிலைக்கு ஆசை, சபலங்கள் செல்வதையும் பரிசீலிக்க நேரும். இந்தப் பட்டியலை மேலும் விரிவானதாக்க எந்தவோர் அரசியல் மாணவனுலும் முடியும். உண்மை என்னவெனில் சில சிக்கல்கள் தீர்க்கப்பட்டால் பிற

சிக்கல்கள் தோன்றுகின்றன என்பதே இதன் கருத்தாகும். இது இரு காரணங்களால் நேர்கிறது. ஒன்று, மனிதர்கள் பூரணத்துவம் பெற்றவர்கள் அல்லர்; நவீன சமுதாயத்தில் - மனிதனிலேயே உள்ள தடைகள், குறைபாடுகள் ஆகியவற்றில் உள்ளீடாக உள்ள தீமைகளைக் களைந்தெறிவது எந்தவோர் அரசியல் முறையாலும் ஆகாது. இரண்டாவது, மனிதன் முழுமைபெற, பூரணத்துவம் பெறப் பாடுபடுகிறான்; எனவே அவன் திருப்தியுறுதல் என்பது இல்லை. புதிய வினாக்களை எழுப்புதல், புதிய முன்னேற்றங்களைக் காணுதல்—இவை வாழ்க்கையில் அடங்கியுள்ளன. அதன்மூலம் புதிய பிரச்சினைகள் எழுகின்றன. எந்த ஜனநாயகச் சமுதாயமும் தன் முயற்சிகளை ஓய்வுபெற அனுமதிக்க இயலாது. ஏனெனில் அதன் பணி என்றும் முடிவுறுவதில்லை.

# 13. ஜனநாயக அரசின் கடமைகள்

அரசாங்க அமைப்புப்பற்றிப் பரிசீலித்தோம். இப்பொழுது 'இந்த அமைப்பு எதற்காக இருக்கிறது; அது எவற்றையெல்லாம் செய்யவிருக்கிறது' என்ற வினா எழுகிறது. அதாவது, அரசின் முறையான கடமைகள் யாவை? அதன் நடவடிக்கைகள் எந்த அளவில் பரவி நிற்கும்?

## (i) அரசின் நடவடிக்கைபற்றிய பொதுவான சில கோட்பாடுகள்

அரசின் நடவடிக்கைகளைப் பரிசீலனை செய்யப் பொதுவான கோட்பாடுகள் எவற்றையாவது நாம் நிர்ணயிக்க முடியுமா? அரசாங்கம் பொது நன்மைக்காக அல்லது பொது நலன்களுக்காகச் செயல்பட வேண்டும் எனக் கூறுவது பதில் ஆகிவிடாதுதான். மிகக் கொடுமையான, கொடுங்கோலாட்சிக்குக்கூட அந்த வகையில் சமாதானம் கூறப்பட முடியும். பொது நன்மையைக் கருதாத எந்தத் தலையீடும் சகித்துக்கொள்ளப்பட்டிராது என்பது தெளிவு.

### அரசாங்கச் செயல்பாடும் சுதந்தரமும்

அரசாங்கத்தின் முக்கிய இலட்சியம், அந்தந்த மக்களின் அதிக பட்ச சுயேச்சையான வளர்ச்சி, ஆக்கபூர்வமான கருத்துச் சுதந்தரம் என்பதும் அரசாங்கத் தலையீடு அனைத்தும் அந்த மக்களின் சுதந்தரத்தில் தலையிடுவதே என்பதும் முன்னைய அத்தியாயமொன்றில் கூறப்பட்டுள்ளன. அவற்றை இங்கு நினைவுகூர்தல் நல்லது. எனவே, தலையீடுகளை அந்தப் பிரதான இலட்சியத்துக்கொப்ப நியாயப்படுத்துவது அவசியம். அதாவது, குடிமக்களின்

சுதந்தரத்திற்கு வரம்புகட்டுவது, அவர்களுக்கு அதிகச் சுதந்தரத்தைப் பெற்றுத்தரவே இறுதியில் துணை செய்கிறது என்று நிரூபிக்கப்பட வேண்டும். அச் சுதந்தரம், வரம்பற்ற நிலையில் கிடைக்கும் சுதந்தரத்தைவிட அதிகம் என்பது நிரூபிக்கப்பட வேண்டும். இது முதல் அம்சம்.

இதை மனத்தில் கொண்டு, சமூகத்தின் அந்தந்த வட்டங்கள், அவற்றின் உறுப்பினர்களுக்குப் பொதுவேலையில் குறிப்பிட்ட பங்கு என்ன என்பது வலியுறுத்தப்பட வேண்டும் எனக் கூறலாம். அப்பொழுது அந்தக் குறிப்பிட்ட வட்டங்கள் மேலோட்டமாக வரையறுக்கப்படுகின்றன. நிரந்தரத்தின் ஏகபோகம் எனத்தக்க அம்சமொன்று சமூகத்துக்கு உண்டு. தனிப்பட்ட நபர் வரலாம்; போகலாம். ஆனால், சமூகம் நிரந்தரமாக வாழ்கிறது. காலம், இடம் ஆகியவற்றில் தனிநபரின் பங்கு திட்டமாக வரம்பிடப்பட்டு விடுகிறது. சமூகம் ஒரு முழுமையான திட்டமாக ஒன்றைக் கண்டால் அதன் மிகச் சிறிய பாகத்தையே அவர் பார்க்கிறார். அத்துடன் ஒரு தனிப்பட்ட மனிதனால் முடியாத அளவு பெருந் திரளான அறிவும் அனுபவமும் சமூகம் பெற்றிருக்கிறது. ஆயினும், தனிநபரும் ஓர் அனுபவத்தை உதவுகிறார். அது சிறிய அளவினதாக இருக்கலாம். ஆனால், அது இன்றியமையாதது. பொது நடவடிக்கை தனிப்பட்ட முறையில் தன்னை எவ்வாறு திட்டவட்டமாகப் பாதிக்கிறது என அவர் கூறமுடியும்; மதிப்பிட, விமர்சிக்க அவரால் முடியும். பொது நடவடிக்கை என்பது பரஸ்பர உறவொன்றை அடிப்படையாகக் கொண்டிருக்கவேண்டும்; அதை ஒரு சீரான சமபலம் எனலாம். அத்தகைய பொது நடவடிக்கையை ஆக்குபவராக அவர் விளங்குகிறார். அதிகப்படியான தனிநபர் வாதம் எதிர்பாராத விளைவாக, இணைப்பில்லாத, ஒன்றுக்கொன்று தொடர்பற்ற சிறிய அளவு முயற்சியாக முடியும். அவ்வாறுதான் தொடக்க கால நாட்களில் இருந்தது; ஒவ்வொருவனும் தனக்காக, அல்லது தனது கூட்டத்தினருக்காக அல்லது கிராமத்திற்காக என வாழ்ந்தான். அதிகப்படியான சமூகக் கட்டுப்பாடு என்றாலோ, தனி மனிதன் தனது முன் முயற்சித் திறத்தை இழக்கிறான்; சுய பலத்தில் நம்பிக்கை இழக்கிறான். அவனுக்கு எதிலும் ஆர்வமிருப்பதில்லை. கூட்டுச் செயல்பாடு ஒரு சர்வாதிகார ஆட்சியின் கட்டுக்கோப்பாக, தனி மனித அம்சம் நீங்கிய, மனிதாபிமானமற்ற, அனைத்தையும் தழுவி நிற்கும் இயந்திர அமைப்பாக மாறிவிடுகிறது.

இந்த நிலையில் நம்முன் எப்போதும் வைக்கப்படும் பிரச்சினை, இவ் வகையான சம பலத்தைக் காப்பாற்றுவதே; அதாவது

தனதாகச் சிறந்த ஒன்றை அளிக்கும் பூரண வாய்ப்பு ஒவ்வொருவருக்கும் கிடைக்கவேண்டும் என்ற நிலையைப் பாதுகாப்பதே ஆகும்.

## அரசும் அபிப்பிராயமும்

அரசாங்கம் தானாகவே தடைப்படுத்தும் ஒரு வாழ்க்கைப் பிரிவு இருக்குமானால் அது, அபிப்பிராயம் உருவாதல், வெளியிடுதல் என்பவையாகத்தா னிருக்கவேண்டும் எனக் கருதலாம். இந்த அபிப்பிராயம் முக்கியமாக மத சம்பந்தப்பட்டதாகும். வேறொரு தொடர்பாக இந்த அம்சம் முன்பே விளக்கிக் கூறப்பட்டுள்ளது. சுதந்தரமாகச் சிந்திக்கும் மக்கள் இல்லாவிடில் சமுதாயம் என ஒன்றிருக்க முடியாது. எனவே, இந்த (அபிப்பிராய)ச் சுதந்தரத்தைக் கட்டுப்படுத்த மேற்கொள்ளப்படும் எந்த முயற்சியும் சமுதாயத்தையும் சரி, தனி மனிதனையும் சரி பாதிக்கவேசெய்யும். இதற்கான காரணத்தைத் தாமஸ் ஹில் கிரீன் (Thomas Hill Green) சுமார் எழுபதாண்டுகளுக்கு முன்பே குறிப்பிட்டுள்ளார். 'எந்த நடவடிக்கையிலும் அரசு தலையிட முடியாது. என்ன நோக்கத்துக்காக அது மேற்கொள்ளப்படுகிறதோ, அல்லது மேற்கொள்ளப்படவில்லையோ அதைப் பொறுத்தே செய்வதும் செய்யாதிருத்தலும் மதிப்பைப் பெறுகிறது' என்று அவர் கூறியுள்ளார். செயலுக்கு வித்திடும் காரணங்களிலிருந்து ஆத்மாவும் மனமும் தமது இயக்கத்துக்குரிய மதிப்பைப் பெறுகின்றன. அவ்வகையில் 'கட்டாய மதம்' என்பது முரண்பட்ட சொல்லடைவு ஆகும். நம்பிக்கைகளைத் திணிக்கவோ அன்றித் தடை செய்யவோ முடியாது. சமுதாயத்தின் தார்மீக நோக்கந்தான் சுயேச்சையான, ஆக்க பூர்வமான மக்களை உருவாக்குகிறது. 'அந்த நோக்கம் நிறைவேறுவது அரசு மேற்கொள்ளும் அல்லது மேற்கொள்ளாத நடவடிக்கையைப் பொறுத்துள்ளது. நோக்கம் எதுவாக இருந்தாலும் சமுதாயத்தின் தார்மீக இலட்சியத்துக்கு அது அவசியமானது' என்பது கிரீன் அவர்கள் வகுக்கும் விதி ஆகும். பேராசிரியர் ஹாக்கிங் (Hocking) அவர்களின் கருத்தும் இங்குக் குறிப்பிடத்தக்கது. பொதுமக்களின் கருத்துக்கு முன் சமாதானம் கூறத்தக்க விதத்தில் அரசாங்க நடவடிக்கை இருக்க வேண்டுமென்று அவர் கூறுகிறார். சாதாரணக் குடிமகன் ஒருவனுடைய மதிநுட்பம் அல்லது தார்மீகக் கருத்துக்களைவிட அரசாங்க நடவடிக்கை உயர் மட்டத்தில் இருக்க முடியும் என்று எண்ணுவது தவறாகும் என்பது இதிலிருந்து பெறப்படுகிறது. 'எங்கு உடனடியான அதி நுட்ப அறிவு, முயற்சித்திறன் தேவைப்படுகின்றதோ, எங்கு மன நுட்ப உணர்ச்சி மட்டம் உயர்ந்த அளவினதாக இருக்கவேண்டும் என்ற நிலை இருக்கிறதோ, அங்கு அது (அரசாங்க நடவடிக்கை) நல்ல முறையில்

செயல்பட முடியாது' என்று ஹாக்கிங் (Hocking) மேலும் கூறுகிறார்.

'அரசாங்கம் தன் உறுப்பினர்களின் சகஜமான நடவடிக்கைகளை மாற்றி அமைக்கக் கூடாது' என்றும் ஹாக்கிங் அறுதியிட்டுக் கூறுகிறார். கிரீனுடைய கருத்தும் இவ்வகையில் உடன்பாடானதாயிருக்கிறது. வேறு சொற்களில் கூற வேண்டுமாயின், தனிப்பட்டோர் முன் முயற்சிக்கு எதையெல்லாம் விடமுடியுமோ, அதையெல்லாம் விட்டுவிட வேண்டும். மத, சமுதாயக் குழுக்களின் தடையற்ற முன் முயற்சிகளின்மீதும், விருப்ப பூர்வமாக இணைந்த குழுக்களின் முன் முயற்சிகளின்மீதும் கட்டப்பட்டதே மக்களாட்சி. இவற்றை ஊக்கமிழக்கச் செய்யும் எதையும் செய்யக்கூடாது. சம்பந்தப்பட்ட ஒரு பிரச்சினை, தனிப்பட்ட கூட்டு முயற்சிக்கு அப்பாற்பட்டதாக இருந்தால் மட்டுமே அரசாங்கம் தலையிட வேண்டும். அல்லது, அது அரசாங்கத்தின் ஏகபோக உரிமையாக இருக்கவேண்டும்.

## அரசின் அத்தியாவசியக் கடமைகள்

இவற்றில் முதலில் வருவது, பொது ஒழுங்கை நிலைநாட்டுவதாகும். குடிமக்களின் உரிமைகளை வரையறுத்தல், அந்த உரிமைகளை மீறுவது, அவற்றுக்குப் புறம்பான காரியங்களில் ஈடுபடுவது ஆகியவற்றைத் தண்டித்தல், அதாவது குற்றத்தை ஒடுக்குதல் முதலியன இதில் அடங்கும். நீதி படிப்படியாகத் தனிப்பட்டோரிடமிருந்து கூட்டுக் கரங்களுக்குச் சென்றதை முன்னோர் அத்தியாயத்தில் கண்டோம். அதனால் சட்டமியற்றுதலும் அதை நிர்வகித்தலும் அரசின் அடிப்படைத் தொழில்களாகிவிடுகின்றன. இருப்பினும், ஒழுங்கீனங்கள் எவற்றில் இருக்கின்றன; சட்டமியற்றுதலுக்கான விஷயங்கள் யாவை என்பனவற்றையெல்லாம் தீர்மானிக்க இது துணை செய்யாது. இந்த விஷயங்களைத் தனிப்பட்டோர் பொறுப்பில் விடமுடியாது என்பதில்மட்டும் உடன்பாடு இருக்கிறது.

இரண்டாவது, சமாதானபூர்வமாக அல்லது யுத்தத்தின்மூலமாக அரசு பிற அரசுகளுடன் தொடர்புகொள்ளலாம் என்பது ஒப்புக்கொள்ளப்படுகிறது; கூட்டுப் பாதுகாப்பு, கொள்கை ஆகியவற்றில் அதற்கு ஏகபோகம் உண்டு. இதைப்பற்றி நாம் விவாதிக்கத் தேவையில்லை என்ற அளவுக்கு இது தெளிவான ஒன்று.

மூன்றாவது, பொதுவான மூலாதாரச் செல்வங்களின்மீது அரசாங்கத்துக்குப் பூரண அதிகாரம் இருக்கவேண்டும் என்பது

தெளிவு; மக்கள் எவ்வளவு செலவு செய்வர், எதை வைத்துச் செலவு செய்வர், எவ்வளவு பணம் திரட்டப்பட வேண்டும் என்பனவற்றையெல்லாம் அரசு மட்டுமே தீர்மானிக்க முடியும். இந்த அம்சங்களில் ஆழமான கருத்து வேறுபாடுகள் இருக்கின்றன. அவைபற்றி இப்பொழுது கவனிப்போம். கூட்டுச் செல்வத்தில் எந்த அளவை அரசாங்கம் எடுத்துக்கொள்ளலாம், கூட்டுச் செலவினங்களுக்குரிய துறைகள் யாவை, எந்த முறைகள்மூலம் பணம் திரட்டப்படும், சுமை எந்த அடிப்படையில் குடிமக்களால் பகிர்ந்துகொள்ளப்படும்-இவையெல்லாம் அரசின் நடவடிக்கையில் அதாவது, உடைமைகளுக்கு அரசுடன் உள்ள உறவு என்ற அம்சத்தில், அடங்கிய பெரிய பிரச்சினைகளில் பகுதியாகும்.

நீதி – ஒழுங்கு, வெளிநாட்டுறவுகள், பாதுகாப்பு என்ற முப்பெரும்பணிகள் எந்தக் காலத்திலும், எந்த அரசுக்கும் அடிப்படையான குறைந்தபட்சப் பணி என்பது உலக முழுவதும் ஒப்புக்கொள்ளப்பட்டதாகும். 'பொதுநன்மைக்காகத் தேசீயச் செல்வாதாரங்களின் நிதி ஒதுக்கீடு' என இதை மெரியம் (Merriam) குறிப்பிடுகிறார். இவை யில்லாத எந்த அரசும், அரசு எனக் கருதப்படமுடியாது. இத்துடன் எந்தவொரு நவீன அரசும் அமைந்துவிடும், திருப்திப்பட்டுவிடாது என்பதும் உண்மை. அவற்றிலெல்லாம் குறைந்த தலையீடு உள்ளவை இப்போது பரந்த நடவடிக்கைகளை மேற்கொண்டுவருகின்றன. அந்த நடவடிக்கைகள் ஒரு நூற்றாண்டுக்கு முன்னர் சமூகக் கூட்டு நோக்குவாதிகளுக்கு ஒரு கனவாகவும் 'இருப்பதை இருக்கவிடு'[1] (laissez-faire) என்ற கருத்துக்கொண்டவர்களுக்கு ஒரு பயங்கரக் கனவாகவும் இருக்கும்.

[1] ஐரோப்பிய அரசியலில் பிரதான பிரச்சினை, அதிகப்படியான சமூகப் பாதுகாப்பு, பொருளாதாரச் சமத்துவத்துவம் ஆகிய நோக்கங்களுக்காகப் பாடுபடவேண்டுமென்பதன்று; முக்கிய தொழில்களை விரிவான முறையில் தேசவுடைமையாக்குவதன் மூலமும் சமூக. பொருளாதாரத் திட்டங்கள் மூலமும் அந்த இலட்சியங்களை அடைய வேண்டும் என்பதுமன்று. அந்த இலட்சியங்களைப் பின்பற்ற வேண்டுமா, அந்த இலட்சியங்கள் தொடருமா என்பதுதான் பிரச்சினை; இந்தத் திட்டமிட்ட புனர் நிர்மாணம், சீரிய சுதந்தரங்களையும் தனிநபர் சுதந்தரத்தையும் பாதுகாக்கும் ஜனநாயகப் பாராளுமன்ற முறைகள் மூலம் அவை பின்பற்றப்பட வேண்டுமா அல்லது சர்வாதிகார சமூகக் கூட்டு நோக்குவாதம், ஒரு-கட்சி அரசு ஆட்சி முறைகள் மூலம் நடைபெற வேண்டுமா என்பதுதான் பிரச்சினை. சுருக்கமாகக் கூறவேண்டுமானால், அது சுதந்தரப் பிரச்சினை; சமத்துவப் பிரச்சினை அன்று. கருத்துச் சுதந்தரம், வழிபாட்டுச் சுதந்தரம், தேவைகளிலிருந்து சுதந்தரம், அச்சத்திலிருந்து சுதந்தரம் ஆகியவை வேண்டுமா, அல்லது முன்சொன்ன சுதந்தரங்களை இழந்து பின் சொன்னவற்றைப் பெறவேண்டுமா? (The Times Literary Supplement, அக்டோபர் 12, 1948, பக்கம்.68)

## கல்வி

இவ் வகைப் புதிய நடவடிக்கைகளில் சில உண்மையில் நடைமுறையில், உலகு தழுவியவை. கல்வி அவற்றில் ஒன்று. லிண்ட்ஸே பிரபு (Lord Lindsay) குறிப்பிட்டது போன்று 'அறிவைத் திரட்டிப் பரப்பும்' பொறுப்புணர்ச்சி இல்லாத அரசுகள் மிகச் சிலவே.[1] தேசீய, அரசாங்கக் கட்டுப்பாட்டுக்குட்பட்ட கல்வி முறைகள், பாலர் வகுப்பு முதல் பல்கலைக் கழக வகுப்புவரை அநேகமாக எல்லா நாடுகளிலும் இருக்கின்றன. இது சென்ற நூறு முதல் நூற்றைம்பது ஆண்டுகள் வரையுள்ள கால கட்டத்தில் வந்திருக்கிறது என்பது குறிப்பிடத் தக்கதாகும். இதற்கு முற்றிலும் வேறுபட்ட இரு காரணங்கள் உண்டு. குடிமக்களைத் தனிப்பட்டோர் பொறுப்பில் விடக் கூடாது என்ற காரணம் கூறி அரசாங்கக் கட்டுப்பாட்டில் கல்வி முறையைக் கொண்டுவருவதில் ஃபிரான்சும், பிரஷியாவும் முன்னின்றன; தக்க முறையில் இளைஞர்களை உருவாக்க வேண்டும்; சரியான கண்ணோட்டத்தை அவர்களுக்கு அளிக்க வேண்டும்; அபாயகரமான கருத்துக்களையும், நிச்சயமற்ற சோதனைகளையும் விலக்கவேண்டும் என இந் நாடுகள் கருதின. பிற நாடுகளில், குறிப்பாக ஆங்கிலோ—ஸாக்ஸானிய நாட்டில், தனிப்பட்டோர் வர்த்தக முயற்சிகள் போதுமானவையாக இல்லாததாலும் பெருமளவில் செலவு செய்யும் தேவை ஏற்பட்டதாலும், அதாவது, சமுதாய அவசியம் காரணமாக அரசாங்கக் கட்டுப்பாட்டின் கீழ்க் கல்வி வந்தது; அரசியல் ஒருமைப்பாட்டு நிர்ப்பந்தம் காரணமாக அன்று. 'மன வளர்ச்சிக்கான வாய்ப்புக்கள் அளிக்கப்படாதவரை' எந்த ஒரு குடிமகனும் சுதந்தரமாக இருக்க முடியாது எனக் கருதப் பட்டது. வேறுவிதமாகச் சொல்வதெனில், ஓர் அணுகல்முறை, கல்விச் சுதந்தரம் என்ற அபாயத்திலிருந்து நீங்கியது; மற்றொன்று, சுதந்தரத்தின் பெயரால் கல்வி வாய்ப்புகளுக்கான அவசியத்திலிருந்து எழுந்தது. அணுகல் முறையில் இருந்த இந்த வேறுபாடுகள் கல்விக் கொள்கையில் ஆழ்ந்த கருத்து வேறுபாடுகளுக்குக்

[1] ஆனால் 1928-ஆம் ஆண்டு வாக்கில் ஒரு தொழிலதிபர் பின்வருமாறு எழுதினார்: 'பிரிட்டிஷ் வேளாண்மைக்குப் பிரதான தடையாக இருப்பவை, குழந்தைகள் பள்ளிகளுக்குச் செல்ல வேண்டுமெனக் கட்டாயப்படுத்தும் சட்டங்கள் ஆகும். அங்கு அவர்களுக்குச் சம்பளம் கிடைப்பதில்லை; பதினான்கு வயது முடியும்வரை அவர்கள் வேலைக்குச் செல்வதைச் சட்டம் தடைசெய்கிறது. அவர்கள் வேலை செய்ய அனுமதிக்கப்பட்டால் ஏராளமான சம்பளம் கிடைக்கும்; திடகாத்திரமான, புத்திசாலித்தனமான மக்களாக அவர்கள் வளர்வர்; மாரிக் கால மாலை நேரங்களிலும் ஞாயிற்றுக் கிழமைகளிலும் அவர்கள் கல்வி கற்றுக்கொள்ளலாம். (1928 மே, 25ஆம் நாள் 'New Leader' இதழிலிருந்து)

காரணமாயிருந்தன. ஒன்றின் லட்சியம், ஒருமைப்பாடாகவும் மற்றொன்றின் லட்சியம் பல்வகை, சோதனை முயற்சி ஆகியன வாகவும் வேறுபட்டன.

## பொதுநலம்

நாட்டு மக்களின் உடல்நலம் சம்பந்தப்பட்டவரையில் அரசாங் கத்துக்குத் திட்டவட்டமான பொறுப்பு உண்டு என்பது மிகப் பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்ட ஒன்றாகும். நோயை எதிர்த்துப் போராட வேண்டும்; சுகாதாரம் அபிவிருத்தி செய்யப்படவேண்டும்; மருத்துவத் தொழில் நிபுணர்களின் அலட்சியம் காரணமாகப் பாதகம் நேர்ந்துவிடாதபடி மருத்துவத் தொழிலின் தரம் உறுதி செய்யப்பட வேண்டும். தொழில்களில், வேலை செய்யும் நேரம் வரம்பிடப்பட வேண்டும். கடைகளிலும் தொழிற்சாலைகளிலும் வேலை நிபந்தனைகள் நிர்ணயிக்கப்பட்டு, கண்காணிக்கப்படவேண்டும்; விபத்துக்களுக்கு நஷ்டஈடு வழங்குவது அமல் செய்யப்படவேண்டும்; பொது நன்மையைக் கருதி, மோட்டார் கார்கள் பரிசோதனை செய்யப்பட வேண்டும்; அவற்றின் வேகத்திற்கு வரம்பிடவேண்டும்; அவற்றின் டிரைவர்கள் 'லைசென்சு' பெறச் செய்யவேண்டும். ரொட்டிக் கிடங்குகள், கசாப்பு நிலையங்கள், பால் பண்ணைகள் முதலியன அனைத்தும் ஏதாவது ஒரு வகைக் கட்டுப்பாட்டின்கீழ் வருகின்றன. சில நிபந்தனைகளின் கீழ்த்தான் கட்டடங்களை எழுப்ப முடியும். சமூகக் கூட்டு வாழ்க்கைத் துறைகளின் முழுமையான பட்டியலைத் தயார் செய்வது இயலாத காரியம்; இதைச் செய்யலாம், இதைச் செய்யக்கூடாது என்று இத் துறைகளில் அரசாங்கம் ஏதாவது கூறாமலிருக்க முடியாது; சிலவற்றில், குடிமக்களின் ஆரோக்கியம், உடல்பாதுகாப்பு ஆகியவற்றைப் பாதுகாக்க என்ன செய்யப்பட வேண்டும் எனக் கூறாதிருக்க முடியாது.[1]

## தினசரி வர்த்தக விதிகள்

அரசாங்க நடவடிக்கை கூடாது என மிகத் தீவிரமாக எதிர்ப் போர்கூடச் சமுதாயத்தின் அன்றாட வர்த்தக வாழ்க்கை எவ்வாறு நடத்தப்படவேண்டும் என்பதற்கு அரசு ஏராளமான விதிகள் செய்ய வேண்டுமென்பதை ஒப்புக்கொள்வர். நிறுவை, அளவை ஆகிய வற்றில் ஒரு சீரான முறையை அரசு நிறுவவேண்டும். சில தொழில்களை மேற்கொள்வோர் அவற்றை ஒழுங்காக நிறைவேற்ற

[1] 'ஆரோக்கியம் விலை கொடுத்து வாங்கப்படும் பொருள்' என்று டானே (Tawney) கூறுகிறார்.

அவற்றுக்குத் தகுதி படைத்தவர்கள்தான் என உறுதி செய்யும் முறையில் அனுமதிகள் வழங்கவேண்டும். சமுதாயத்தின் பணிகளில் பெரும்பான்மையினர் எந்த நிபந்தனைகளின்கீழ் (தொழிற் சாலைச் சட்டங்கள், எல்லா வகைத் தொழில் நிலையங்களையும் பரிசோதிப்பது முதலியன) இருக்கவேண்டும் எனத் தீர்மானிக்க வேண்டும். வர்த்தக முயற்சிகள் எந்த வகையில் (பங்கு பெறுபவர் பற்றிய விதிகள், கம்பெனிச் சட்ட விதிகள்) மேற்கொள்ளப்பட வேண்டும் என நிர்ணயிக்க வேண்டும்; மேற்படி வர்த்தக நிறுவனங் கள் மூடப்படவேண்டி யிருப்பின் (பெரு நஷ்டம் ஏற்பட்ட நிலையில் கடனடைவு சம்பந்தப்பட்ட விதிகள்) பின்பற்றப்பட வேண்டிய விதிகள் நிர்ணயிக்கப்பட வேண்டும்.

இதுவரை கூறப்பட்ட நடவடிக்கைகள் அனைத்தும் தற்காப்பு நடவடிக்கைகள் எனலாம். அதாவது, சமூகக் கூட்டமைப்பு, தன் மக்கள் புத்திபூர்வமாகவும், வெளிப்படையாகவும் பிளவுண்டு போகாது காக்க மேற்கொள்ளும் நடவடிக்கைகள் ஆகும். தமது அறியாமை, மூடத்தனம் அல்லது கவனமின்மை ஆகியவற்றின் விளைவுகளுக்கெதிராகத் தம்மைத் தாமே காத்துக்கொள்ள, உதாரண மாக, அதிகப்படியான நேரம் வேலை செய்து அதிக ஊதியம் பெற வேண்டி ஆரோக்கியத்தை இழத்தல் போன்றவற்றுக்கு எதிராக மேற்கொள்ளப்படும் நடவடிக்கைகள் ஆகும். (தமக்கு, தம் மனைவிமார்களுக்கு, தம் குழந்தைகளுக்குக்கூட, ஊதிய நஷ்டம் ஏற்படுகிறது எனக் கூறித் தொழிலாளர் நலச்சட்டங்கள் பலவற்றைத் தொழிலாளர்களே எதிர்த்தனர் என்பதை முன்பே குறிப்பிட்டிருக் கிறோம்.) இந்த நடவடிக்கைகளுக்கு எதிர்ப்புகள் நடைமுறையில் மறைந்திருக்கின்றன என்பதும் கவனத்தில் கொள்ளப்பட வேண்டிய உண்மை. இவ் வகைத் தற்காப்புச் சட்ட விதிகளை, சில சமயங்களில் 'பாட்டிமார் சட்ட விதிகள்' என அழைத்தார்கள். இவற்றுக்கு, முற்போக்கான எந்த நாட்டிலும் எதிர்ப்பு இயக்கம் இன்றில்லை.

## (ii) பொருளாதார வாழ்க்கையில் நேரடியான காரணியாக அரசாங்கம்

இந்த நடவடிக்கைகளில் நேரடியான பங்காளியாகத் தனக்குரிய இடத்தைப்* பெற அரசாங்கம் முன்வருகையில் மிகக் கஷ்டமான தொரு நிலைமை எழுகிறது. அப்போது அரசு ஒரு கண்காணிப் பாளராக இன்றித் தானே செயல் மேற்கொள்பவராக ஆகிறது. நவீன அரசு—அது ஒரு 'சோஷியலிஸ்ட்' அரசாகத்தான் இருக்க வேண்டும் என்பதில்லை—பஸ்கள், டிராம்வேக்கள், ஆகாய விமா

னங்கள், ரயில்வேக்கள், கடல் மார்க்கங்கள், கால்வாய்கள், துறை முகங்கள், கப்பல் கட்டுமிடங்கள், மின்சாரம், நீர்வழங்கு திட்டங்கள் முதலியவற்றைச் சொந்தமாக வைத்திருக்கிறது; அவற்றை நடத்துகிறது. தந்தி, தொலைபேசி உள்ளிட்ட தபால் சர்வீசுகளை அது ஏகபோகமாகக் கொண்டிருக்கிறது. எல்லாச் சாலைகளும், தெருக்கள் அனைத்தும் அதன் உடைமைகள்.[1] சிலவற்றில் தனியார் தொழில் முயற்சிகளுடன் போட்டியிடும் அமைப்பாக அரசு காட்சி தருகிறது; மற்றவற்றில், தனியார் உடைமைகளை நீக்கி அரசே ஏகபோகத்தை ஏற்படுத்திக் கொள்கிறது.

அரசாங்க நிர்வாகம், உடைமை ஆகியவற்றுக்கான வாதங்கள் சாதாரணமாகப் பின்வரும் அடிப்படையில்தான் அமைகின்றன. தனியார் பொறுப்பில் விட்டுவைக்கக்கூடாத அளவுக்குச் சம்பந்தப் பட்ட நடவடிக்கைகள் முக்கியமானவையாக இருக்கின்றன; அத்தியா வசியப் பொதுச் சர்வீசுகளிலிருந்து கிடைக்கும் லாபங்கள் ஒவ்வொரு வருக்கும் உரிமை உடையவை. அந்த லாபங்கள் பொதுமக்களுக்குச் செல்லவேண்டும். தனியார் தொழில் முயற்சியின் ஒரே நோக்கம் லாபம் திரட்டுவது மட்டுமே. எனவே அரசாங்கக் கண்காணிப்பில் இருக்கும் ஒரு தொழிலில் சில சமயங்களில் நஷ்டம் ஏற்பட்டாலும் அதை வரி செலுத்துவோரோ அல்லது அரசாங்கத்தின் இலாபகரமான மற்றொரு தொழில் முயற்சியோ ஈடுகட்டி, குறைபாட்டை நீக்கிக் கொள்ளலாம். தனியார் முயற்சிகளில் இது சாத்தியமில்லை. இந்த வாதங்கள் பொதுவாக ஒப்புக்கொள்ளப்படுபவைதான். ஏக தேசமாக முணுமுணுப்புக்கள், ஆட்சேபணைகள் எழுந்தாலும் முடிவில் ஏற்கப் பட்டு விடுகின்றன. அரசு ஒரு நிருவாகியாக இயங்குவது இப்போது நிலைபெற்றுவிட்டது.

## தேசவுடைமையாக்கல்

சில அரசுகள் தொழில்களைத் 'தேச உடைமை' யாக்குவதில் முனைந்திருக்கின்றன. இது சர்ச்சைக்குரிய பிரச்சினையாக விளங்கு கிறது. தந்தி, ரயில்வேக்கள் போன்றவை முக்கிய சர்வீசுகளில் சிலவாகும். இவை இயல்பாக ஏகபோகத் தன்மை உடையவை. இவற்றை அரசாங்கம் மேற்கொள்ளுவதுபற்றி இங்குப் பிரச்சினை இல்லை. ஆனால் பல போட்டி நிறுவனங்கள் இதுவரை ஈடுபட்டு வந்த ஒரு செயல்தளத்தை, அதாவது உற்பத்தித்துறை ஒன்றை அரசு மேற்கொள்வதுபற்றியே சர்ச்சை எழுகிறது. [3]இதில் திட்ட

[1] அரசாங்க உடைமைக்கும் முனிசிபல் உடைமைக்கும் வேறுபடுத்திக் காட்ட வேண்டியதில்லை; இதைப் பொறுத்த வரையில் இரண்டும் சமூகக் கூட்டுக் கண்காணிப்பு நிர்வாக வகையினதான்.

வட்டமான நோக்கம், போட்டியை ஒழிப்பதுதான். இந்தப் போட்டி அடிப்படையில்தான் தொழில் கட்டப்பட்டுள்ளது. இதற்கு மிகத் தீவிர உதாரணமாகச் சோவியத் யூனியனைக் கூறலாம். இதுபற்றிப் பின்னர் ஆராய்வோம். ஆனால் தொழில் உற்பத்தி, விநியோக முறைகளை முழுதும் அரசாங்க உடைமையாக்குவதில் ருஷ்யாவைப் பின்பற்றாத நாடுகளைப்பற்றிய உதாரணங்களும் உண்டு. அந்த உதாரணங்களில் படைக் கருவிகள் உற்பத்தியில் அரசாங்க ஏகபோகம், ஃபிரான்சில் தீப்பெட்டி, புகையிலை, பிரிட்டனில் பருத்தி, கம்பளி வாங்குதல், நிலக்கரிச் சுரங்கங்கள், போக்குவரத்து ஆகியவை குறிப்பிடத்தக்கவை. இங்கெல்லாம் தேச உடைமையாக்குதல் என்னும் கொள்கை ஓரளவில்தான் உள்ளது; அடுத்தடுத்துச் சில உற்பத்தித் துறைகளில் தனியார் தொழில் முயற்சிகள் இருக்கின்றன; அவற்றில் விநியோகத்துக்குத் தடையில்லை. சில சமயங்களில் அளவு வரம்பு, விலை நிர்ணய எல்லைகளுக்குள் விநியோகம் நடைபெறுகின்றது. இந்த முறையின் முக்கிய அம்சம், சில குறிப்பிட்ட பொருள்கள் உற்பத்தியை அரசு தனது கட்டுப்பாட்டில் வைத்திருக்கிறது; எவ்வளவு உற்பத்தி செய்யப்பட வேண்டும், என்ன தரத்தில் உற்பத்தி செய்யப்படவேண்டும் என்பதை அரசு தீர்மானிக்கிறது. இவ்வாறு விநியோகம், தேவை ஆகியவற்றில் தன் முடிவுகளை அமல் செய்கிறது.

இத் துறையில் சர்ச்சை நீடிக்கிறது. அரசாங்க நடவடிக்கை ஒவ்வொருமுறை விரிவு படுத்தப்படும்போதும் ஆட்சேபிக்கப் படுகிறது. பல சமயங்களில் எதிர்க்கட்சிகள் எங்கெங்கு முடியுமோ அங்கெல்லாம் தேசவுடைமைக் கொள்கையை மாற்றுவதற்காக உறுதி கூறுகின்றன; தேசவுடைமையாக்கப்பட்ட ஒரு தொழிலை மீண்டும் தனியார் வசம் தருவது ஒரு 'ஆம்லெட்'டை மீண்டும் முட்டைகளாகச் செய்ய முயல்வது போன்றது—முற்றிலும் சாத்தியமற்றது. எனவேதான் தேசவுடைமையாக்கும் கொள்கைகளை மேற்கொள்ளுமுன் மிகத் தீவிரமான எச்சரிக்கை உணர்ச்சியுடனும் தீர்க்கமான பரிசீலனையுடனும் இறங்கவேண்டும். இவை எல்லாவற்றிலும் தேச உடைமையாக்க வேண்டுமெனக் கூறுபவர், போட்டியால், வீண் விரயங்கள் ஏற்படுவதைப் பதிலாகக் கூறுகிறார்; தான் விலைவாசிகளைக் குறைப்பதாகவும் தேச உடைமை யாக்கப்பட்ட தொழில் துறைகளில் பணியாற்றும் தொழிலாளர்கள் சமுதாயத்துக்குப் பாடுபடுவதாகக் கருதுகின்றனர்; யாரோ ஒரு தனி நபரின் இலாபத்துக்காக எனக் கருதுவதில்லை என்றும் அவர் கூறுகிறார். அரசாங்க நடவடிக்கையில் மந்தகதியும் திறமைக் குறைவும் காணப்படுவதாகக் குறைகூறுவோருக்கு, தனியார் தொழில் முயற்சிகளிலுள்ளதைப் போன்ற அதே 'ஏஜெண்டு'களை அரசும் பயன்படுத்தப்பட வேண்டும் என்றும்

எந்த ஒரு குறிப்பிட்ட நாட்டிலும் தனியார், பொது விவகாரங்கள் இரண்டிலும் காணப்படும் நிலைமைகள் ஒரே தன்மையவைதான் என்றும் நிருவாகம் மந்தகதியிலும் விரயங்களிலும் ஊழல்களிலும் இயங்கும் எந்த நாட்டிலும் தனியார் முயற்சிகள் குறிப்பிடத்தக்க அளவுக்கு அபாரத் திறமை, விரைவு, நாணயம் முதலியன பெற்றிருக்க முடியாது என்றும் (தேச உடைமைக் கொள்கையாளர்) பதிலளிக்கிறார்.

## பொருளாதாரம்

ஆனால் இப்பொழுது நம்முன் ஒரு கேள்வி எழுகிறது. இதுவரை விவரித்துவந்த நடவடிக்கைகளில் பெரும்பகுதி அரசியல் சம்பந்தமானவையல்ல என்பது நிச்சயம்; அவை பொருளாதாரம் சம்பந்தப்பட்டவை. இராச்சியம் என்பது அடிப்படையாக ஓர் அரசியல் நிறுவனம்; அதை விடுத்து அரசு செயல்படுகின்றதோ என்றும் ஒருவர் வியக்கலாம். இது உண்மையிலேயே ஓர் அடிப் படையான கேள்விதான்; இதற்கு அளிக்கும் விடையைப் பொறுத்தே ஒழுங்கு செய்யப்பட்ட நமது நவீன வாழ்க்கையில் பெரும்பகுதி அமையவிருக்கிறது.

மற்றொரு கேள்வியையும் எழுப்பி விடை காணலாம். இது பழைய கேள்விதான்; நமது பிரச்சினைக்கு அடிப்படையானது. அரசு அல்லது இராச்சியம் என்பது என்ன? அதன் பிரதானத் தொழில் அல்லது அவசியந்தான் என்ன? சமூகக் கூட்டமைப்பு தன் பிரதி நிதிகள் மூலம், சம்பந்தப்பட்ட பிரச்சினைகள் அனைத்தையும் தனது கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவர முடிவு செய்கிறது; அதன்படி அரசு செயல்பட வேண்டும். சமுதாயத்தின் பணியாள்தான் அரசு, அதன் தொழில், முன்பே குறிப்பிடப்பட்டதைப் போன்று, சமுதாயத்தை உண்மையான சமுதாயமாகச் செய்தல் ஆகும். சிறந்த பொது நன்மைக்குப் பாடுபடும் சக்திகளுக்கு உதவ அவற்றை வழிநடத்த, அவற்றுக்கு விரோதமாகச் செயல்படுவனவற்றைத் தடுத்து நிறுத்த, அவற்றிலிருந்து புறம்பாகச் செல்வனவற்றைக் கட்டுப்படுத்த அரசு முன்வரவேண்டும்.

இதிலிருந்து, ஒரு குறிப்பிட்ட நடவடிக்கை அரசியல் சம்பந்தப் பட்டதா, பொருளாதார நடவடிக்கையா அல்லது சமூக நடவடிக்கையா எனக் கேட்டு நம்மைச் சிரமப்படுத்திக் கொள்ளத் தேவையில்லை என்றாகிறது. அது சமுதாயம் முக்கியமாக அக்கறை கொள்ளவேண்டிய ஒரு நடவடிக்கையா? அதைத் தனியார்வசம் விட்டுவிடுதல் சமுதாயத்தினுடைய நன்மைக்கா, அல்லவா? அது

ஊக்குவிக்கப்படவேண்டிய ஒன்ரு? அல்லவா? அதன் துல்லியமான தன்மை எப்படியோ இருந்துவிட்டுப் போகட்டும்; பொதுமக்களின் சகஜமான வாழ்க்கைக்கும் அதற்கும் உள்ள தொடர்புதான் இங்குக் கருதத்தக்கது.

வரலாற்றில் எந்தக் காலத்திலும் அரசியலுக்கும் பொருளா தாரத்நுக்குமிடையே திட்டமான பாகுபாடு காண்பது சாத்தியமாக வில்லே என்பதும் இங்கே கருதத்தக்கது. பகுத்துப் பார்ப்பதற்கு அந்த வேறுபாடு பயன்படலாம்; ஆனுல் அதற்கு அவசியமான அர்த்தம் இல்லே. வாழ்க்கையே ஒரு லோகாயத அமைப்பில்தான் இருக்கிறது; செல்வ உற்பத்தி விநியோகம் ஆகியவற்றில்தான் இருக்கிறது. மனிதனின் நடவடிக்கைகளில் லோகாயத வட்டத் துக்குள் அடங்காத மத, கலாச்சார, கலே நடவடிக்கைகள்கூடத் தனி நபர்களாகிய குழுக்களின் நிதியுதவியையே நம்பியிருக்கின்றன. சமுதாயம் தன் செல்வாதாரங்களின் அவசியமான பகுதியை இவற்றுக்கென ஒதுக்கிவைக்க, அல்லது ஒதுக்குவதை அனுமதிக்க வேண்டுமென்பதுதான் இதன் பொருள். அது விரும்பினுல் இத்தகைய செலவைத் தடை செய்யலாம். அத்துடன் உடனடியான உருப்படியான பயன் கிடையாதெனத் தெரியும் நிலேயில் எதற்கும் சிறு தொகைகூட ஒதுக்கமுடியாத அளவு சில சமூகங்கள் மிக ஏழ்மைவாய்ப்பட்டிருக்கக் கூடும்.

## அரசியலின் பொருளாதார அம்சம்

அரசின் சாதாரண நடவடிக்கைகளில் பல பொருளாதார அம்ச மொன்றைக் கொண்டிருக்கின்றன ; அல்லது அவை பொருளாதார விளேவுகளே ஏற்படுத்தக்கூடும். அல்லது பொருளாதாரக் கொள்கை யுடன் சம்பந்தப்படுத்தப்படக்கூடும். உதாரணமாக, குற்றப் பிரச்சினேயை எடுத்துக்கொள்ளலாம். பல நாடுகளில், உடைமை அல்லது சொத்துக்களே அபகரிக்க முயன்ற குற்றங்களுக்கு அதிக தண்டனேயும், மனித உயிர்களுக்குத் தீங்கிழைக்க முயன்ற குற்றங் களுக்குக் குறைவான தண்டனேயும் விதிக்கப்படக் காண்பது சுவை யான ஒன்ருகும். மனேவியை அடித்தலும் குழந்தையைத் துன் புறுத்தலும் சில மாதத் தண்டனேக்கான சாதாரண குற்றங்கள் ஆகும். ஆனுல் திருட்டு, கொள்ளே முதலியன நீண்டகாலக் கடுங் காவல் தண்டனேக்குரிய குற்றங்கள் ஆகும். நாகரிக அம்சம் குறைவாக இருந்த காலங்களின் மிச்ச சொச்சங்களே இதில் காண் கிரேம்; அக் காலங்களில் வாழ்க்கை மிக மலிவானதாகவும், சொத்து மிகப் புனிதமானதாகவும் இருந்தது. ஐந்து ஷில்லிங்குகளுக்கு அதிக மான மதிப்புடைய எந்தப் பொருளேத் திருடினுலும் தூக்குத்

தண்டனை விதிக்கப்பட்டது. சிறைச் சீர்திருத்தப் பிரச்சினை பொருளாதாரக் காரணங்களால் சிக்கலாகி விட்டிருக்கிறது. கைதிகளுக்குப் பொருத்தமான தொழில்களைத் தேடுவது சிரமமான காரியங்களுள் ஒன்று. பொருளாதார ரீதியில் பயன்படக்கூடிய பண்டங்களை அவர்கள் உற்பத்தி செய்கையில் ஏற்கெனவே நிலைபெற்ற உற்பத்தியாளர்களுடன் போட்டியில் ஈடுபட வேண்டியுள்ளது. படைக் கலைப்பு, ஆயுதத் தொழிற்சாலைகளில் பணிபுரியும் ஆயிரக்கணக்கானோர் வேலையிழக்கும் பிரச்சினையைக் கொண்டுவருகிறது. கப்பல்களுக்குச் செலவாகும் பணத்தைச் சேமிக்க அரசாங்கம் விரும்புகிறது; அதே சமயத்தில் அரசாங்கக் கப்பல்கட்டும் தளத்துக்கு வேலை கொடுக்கவும் விரும்புகிறது. இவற்றில் எதைத் தேர்ந்தெடுப்பது என்பது கஷ்டமாகி விடுகிறது. நவீன அரசாங்கத்தின் பல்வேறு நடவடிக்கைகளின் விளைவுகள், அவசியத் தன்மை ஆகியவை பற்றி ஆராய்வோமாயின் அவை பொருளாதார அம்சங்களுடன் எவ்வாறு பின்னிப் பிணைந்திருக்கின்றன என்பது புலனாகும்.

ஒரு மனிதன் உயிர்வாழ வேண்டுமாயின் அவனுக்கு ஒரு பிழைப்பு அவசியம். அதே போன்று எந்தவொரு சமுதாயத்தின் அடிப்படை அம்சமும் டானே (Tawney) குறிப்பிடுவது போன்று 'தனது வாழ்க்கைக்குத் தேவையானவற்றைச் சமுதாயம் எவ்வாறு பெறுகிறது' என்பதைப் பொறுத்ததே. அரசியல் நடவடிக்கைகள் பொருளாதார நடவடிக்கைகள் என்ற அடிப்படையில் அமைகின்றன. அவைதாம் ஒரு குறிப்பிட்ட அரசின் தன்மையைத் தீர்மானிப்பதில் பெருமளவு உதவும்; அதாவது, எவ்வகை வர்க்கத்தைச் சேர்ந்தவர்களால் அது ஆளப்படப் போகிறது, யாருடைய நலன்களுக்காக அரசியல் நடத்தப்படவிருக்கிறது என்பனவற்றையெல்லாம் தீர்மானிக்கும். 'அரசியல் நடவடிக்கைகள், சட்டங்கள் ஆகியவற்றால் ஏற்படும் விளைவுகளைத் தீர்மானிப்பது கலாச்சாரம். அக் கலாச்சாரத்தின் அத்தியாவசியமான பாகம் பொருளாதார நிலைமைகள் ஆகும்' என்று டானே (Tawney) குறிப்பிடுகிறார். தொழில் மயமாக்கப்பட்ட நாடுகளில் மிக உயர்ந்த நிலையில் இருக்கும் பிரிட்டன் போன்றவற்றில் விவசாய நலன் ஒரு பொருட்டன்று; ஆனால் பல்கேரிய மக்களில் 80 சதவீதத்தினர் விவசாயிகள். இவை இரண்டுக்குமிடையே வேறுபடுத்திப் பார்ப்பது அவசியம். வெளிவிவகாரக் கொள்கையில் பிரதான கவனத்துக்குரியவை பொருளாதாரக் காரணங்களே. தன்னிறைவு உள்ள ஒருநாடு சர்வதேச வர்த்தகத்தைப் புறக்கணிக்கவும் செய்யலாம். தன் உணவுப் பண்டங்

களுக்காக அந்நிய வர்த்தகத்தை நம்பியிருக்கும் ஒரு நாடு மேற்கொள்ளத் துணியாத சிலவற்றைத் தன்னிறைவுள்ள ஒருநாடு மேற்கொள்ள முடியும்.[1]

## (iii) அரசும் பொருளாதாரச் சக்திகளும்

### வரலாற்றில் அரசும் பொருளாதாரமும்

பொருளாதார வாழ்க்கையை ஓர் அரசு எந்தக் காலத்திலும் தனியாக விட்டு வைத்ததில்லை. உழைப்பதற்கு ஆட்கள் தேவை; சட்டபூர்வமான அடிமை முறையை அரசு பாதுகாத்து வந்தது. யுத்தக் கைதிகள் அடிமைகளாக மாற்றப்பட்டனர். அதற்காகவே பல யுத்தங்கள் மேற்கொள்ளப்பட்டன. அவ்வாறே அரசு தன் எல்லை விஸ்தரிப்புகளை மேற்கொண்டது. அதற்கும் பொருளாதாரக் காரணங்கள் உண்டு—தட்டுப்பாடு ஏற்பட்ட காலங்களில் குறிப்பிட்ட வகை உணவு கிடைக்கும் 'ஊற்று'ப் பகுதியைக் கைப்பற்றல், சில வர்த்தக மார்க்கங்களைத் தன் அதிகாரத்துக்குக் கொண்டு வருதல், இலாபகரமான சில வர்த்தகங்களைத் தன் ஏகபோகங்களுக்குக் கொண்டுவருதல் ஆகியனபற்றி அதிகம் கூறத் தேவையில்லை. மத்திய காலங்களில் ஒரு குறிப்பிட்ட நகரத்தில் இன்னவகைத் துணிதான் நெய்யப்பட வேண்டும் என்று நிர்ணயிக்கும் அளவுக்குப் பொருளாதார வாழ்க்கையில் அரசின் தலையீடு இருந்தது. புதிதாக வளரத் தொடங்கிய பருத்தித் தொழிலுக்கு எதிராகக் கம்பளித் தொழிலை ஊக்குவிக்க, ஈமச் சடங்குகளுக்குக் கம்பளித் துணிகளையே பயன்படுத்த வேண்டும் என வற்புறுத்தப்பட்டது. ஏற்றுமதி, இறக்குமதிக் கட்டுப்பாடுகள் சில சமயங்களில் மிக அதிகமாக இருந்தன. சில பொருள்களின் ஏற்றுமதியோ, இறக்குமதியோ பூரணமாகத் தடை செய்யப்பட்டது; பணத்துக்குப் பதிலாக இராணுவத்தில் சேவைசெய்ய ஆட்கள் தரவேண்டுமென வற்புறுத்தப்பட்டது. கப்பல் கட்டுப்பாடுகள் விரிவாக இருந்தன; ஏராளமான விதிமுறைகள், மேற்பார்வைகள், பரிசோதனைகள் இன்று உள்ளவற்றைவிட அதிகமாக இருந்தன. மத்திய காலச் சமுதாயம் உண்மையில் ஒரு நெகிழாச் சமூக-பொருளாதார, அரசியல் கூட்டாக விளங்கியது. அதில் மனிதனுடைய அரசியல் உரிமைகளும் கடமைகளும் அவனுடைய சமூக, பொருளாதார அந்தஸ்துக்கு ஒப்ப நிர்ணயிக்கப்பட்டன.

நாளடைவில் நிலத்துக்குரிய மதிப்பு மாறுதலடைந்தது. செல்வம், அதிகாரம் ஆகியவற்றுக்குப் பிரதான ஆதாரங்களாக வர்த்தகமும்

[1] உதாரணத்துக்கு, ஃபிரான்ஸ், பிரிட்டன் ஆகியவற்றின் வெளிவிவகாரக் கொள்கையை ஒப்பு நோக்குக.

தொழிலும் விளங்கத் தொடங்கின. இதனுல் இந்த மத்தியகால நெகிழாத் தன்மை உடைத்தெறியப்பட்டது. மத்திய காலக் கட்டுப்பாட்டின் தளைகள் புதிய பொருளாதார நடவடிக்கையால் நொறுக்குண்டன. நிலப் பிரபுக்கள் ஆளும் வர்க்கத்தினராக இருந்தனர்; அவர்களுக்கு ஒரே அக்கறைதான் இருந்தது. புதிய தொழிலதிபர்களிடம் அந்த அக்கறை இல்லை. அவர்கள் சுதந்நரத்தை விரும்பினர். தமது சொந்த வழியில் புதிய சோதனைகளைச் செய்யவும் தம் தொழில் முயற்சிகளை விரிவுபடுத்தவும் அவர்கள் விரும்பினர். மற்ருென்று, தொழிலும் வர்த்தகமும் வளர வளரத் தொழிலாளர்கள் ஓரிடத்திலிருந்து மற்ருேர் இடத்துக்குக் கொண்டு செல்லப்பட வேண்டியிருந்தனர்; எனவே ஒரு குறிப்பிட்ட பண்ணைக்கு ஒரு மனிதனைக் கட்டுப்படுத்திவைக்கும் சட்ட முறைக்கு எதிர்ப்பு வளர்ந்தது. பிற நாடுகளிலிருந்து வரும் போட்டியைச் சமாளிக்கவும் தம் நலன்களைப் பாதுகாக்கவும் அவர்கள் அரசாங்கத் தலையீட்டை விரும்பினர்; உள்நாட்டில் பூரண சுயேச்சை வேண்டுமென வற்புறுத்தினர். எனவே 'இருப்பதை இருக்கவிடு' என்ற கொள்கை அல்லது தலையிடாக் கொள்கை எழுந்தது. அதையொட்டி நவீன காலம் உதயமாயிற்று. குறிப்பாகப் பதினெட்டு, பத்தொன்பதாம் நூற்ருண்டுகளில் இது நிகழ்ந்தது.

இது நீடிக்க முடியவில்லை; நீடிக்கவுமில்லை. புதிய பொருளாதாரச் சக்திகள் சமுதாயத்தின் மொத்தமான செல்வத்தைப் பெருமளவில் அதிகரித்தன; அதே சமயத்தில் இரு வழிகளில் அவை தோல்வியடைந்தன. முதலாவது, முற்றிலும் இலாபத்துக்கென்றே பயன்படும் ஒரு பண்டமாக உழைப்பைக் கருதின; இரண்டாவது, விநியோகப் பிரச்சினையைச் சமாளிக்க அவை தவறின; உழைக்கும் மக்களில் பெரும்பான்மையினரை நிராதரவான நிலையில் விட்டு வைத்தன. மெதுவாகத் தன் மக்களில் பெரும்பான்மையினரின் பாதுகாப்புக்குப் பாடுபடவேண்டும்; அதன்மூலம் தன்னைக் காத்துக் கொள்ளவேண்டும் எனச் சமுதாயம் உணரத் தொடங்கியது. அப்படித்தான் முன்பே நாம் விளக்கிய தற்காப்புச் சமூகச் சட்டங்கள் வளரத் தொடங்கின.

## நவீன தொழில் சக்திகள்

நவீன தொழில்களும் வர்த்தகமும் பெருமளவில் விரிவடைந்தன; புதிய தொழில் நுட்பங்கள் வந்தன; இவற்ருல், பொருளாதாரச் சக்திகள் மனித வாழ்க்கையில் முற்றிலும் புதியதோர் அங்கம் பெறலாயின. தொழிற்பெருக்கு மாபெரும் சக்திகளைக் கட்டவிழ்த்து விட்டது; 'பொருள் மூலாதாரங்கள், மார்க்கட்டுகள்மீது நேரடி

ஆதிக்கம், வேலை வாய்ப்புக்கள், கடன் வசதிகள், விலை, போட்டி, கிராக்கியைத் தூண்டல் ஆகிய சக்திகளைக் கட்டவிழ்த்துவிட்டன. இச் சக்திகள் அரசியல் சக்திகளைவிட விரைவும் துடிப்பும் உள்ளவை; அதிக அளவு வேறுபடக் கூடியவை; விரியவும் சுருங்கவும் கூடியவை; உயிர்ச் சத்துள்ளவை; பல மையத் தன்மை உடையவை' (மாக்ஐவர் MacIver) இச் சக்திகள் ஏதாவது ஒருவகைக் கட்டுப்பாட்டின் கீழ் வைக்கப்படாவிடில் கட்டுக்கடங்காது போய்விடும் என்பதும் தெளிவாயிற்று. பொருளாதார, தொழில் நுட்ப வளர்ச்சிகள் உண்மையில் புதியதொரு நாகரிகத்தைப் படைத்துக் கொண்டிருந்தன. அதில் சென்றகால அரசியல் வகைகளுக்குப் பெரும்பாலும் இடமிருக்கவில்லை. 'சென்ற ஐம்பதாண்டுக் காலத்தில் ஏற்பட்ட அசாதாரணத் தொழில்துறை வளர்ச்சியின் விளைவாக எழுந்த புதிய நிலைமைகள் மிகுதியாக ஜன ஸ்தாபனங்களிடையே உள்ள உறவுகள் திருத்தியமைக்கப்பட வேண்டும் என இடைவிடாது, தீவிரமான முறையில் வற்புறுத்திவருகின்றன. இன்றுள்ள சட்டங்களும் வரம்புகளும் கொண்டு வரப்பட்ட காலத்தில் நினைவு வட்டத்துக்குள் வராத புதிய சட்ட பூர்வ உரிமைகளும் சலுகைகளும் நிறுவப்பட வேண்டுமென்று அவை வற்புறுத்திவருகின்றன' என்று செனட்டர் ரூட் (Senator Root) கூறுகிறார்.

எனவே பொருளாதார விவகாரங்களில் அரசாங்க நடவடிக்கைப் பிரச்சினை என்பது பழையதும் புதியதுமாகும். சமுதாயத்தின் பிற நடவடிக்கைகளிலிருந்து இவற்றைத் தனிமைப்படுத்த முடியாதிருந்த அளவுக்கு அது பழையது. 'நன்கு வரையறுக்கப்பட்ட, பிரத்தியேக, தன்னைத்தானே ஒழுங்குபடுத்திக்கொள்ளும் பொருளாதார அமைப்பு ஒன்று இருக்கிறதென்றும் இதில் அரசு தலையிடக் கூடாதென்றும் இத்தகைய அமைப்பு, சமுதாயத்துக்குத் தேவையான உபயோகமான பண்டங்களைப் பெருமளவில் தானாகவே உற்பத்திசெய்து குவிக்கும் என்ற கருத்தும் நிலவியது. இது அடிக்கடி வலியுறுத்தப்பட்டது. ஆனால் இக் கருத்து பிழைபட்டதாகும். சென்ற நூற்றாண்டில் இது உடைத்தெறியப்பட்டுவிட்டது' என்று மெரியம் (Merriam) கூறுகிறார். வரலாற்றில், இந்த நம்பிக்கை ஒரு குறுகிய காலமே நிலவியது என்பதையும் இங்குக் குறிப்பிடவேண்டும். 'இருப்பதை இருக்கவிடு' என்னும் 'தலையிடாக் கொள்கை'யும் (Laissez faire) குறுகிய காலமே நீடித்த ஒன்றாகும். மத்தியகால ஒழுங்குக்கும் நவீன காலத் தொடக்கத்தில் இருந்த காப்புநிலைக்கும் இடைப்பட்ட கட்டத்தில் 'தலையிடாக் கொள்கை' நிலவியதெனலாம். உலகம் அந்தக் கட்டத்துக்கு மீண்டும் திரும்பியதாகவே தோன்றவில்லை. 'அரசியல் சாத்திரமும் அரசாங்கப் பொருளாதாரமும் ஊடும் பாவுமாக அமைந்திருப்பவை.

முதலாளித்துவப் பொருளாதாரத்தின் செல்வாக்கு மிக்க காலத்தில், அதாவது எல்லா வகை அரசாங்கக் கட்டுப்பாடுகளிலிருந்தும் வர்த்தக நடவடிக்கை சுதந்தரமாக இருந்த காலத்தில் மட்டுமே—மனித வாழ்க்கையில் கட்டுப்பாடு மிக்க ஒரு காலத்தில் மட்டுமே—இவை தனித்தனியே சுயேச்சையாக விளங்கின. அப்பொழுதும் தனிநபர் உடைமைகளுக்குச் சட்டவரம்புக்குள் அரசு உத்தரவாதம் அளித்தது' என்று நாஷ் (Nash) கூறுகிறுர்.

## புதிய பிரச்சினைகள்

இப்பொழுது ஒரு புதிய நிலையைக் காண்கின்றேம்; பல வழிகளில் இது புதியதாகும். முதலாவது, இன்றைய பொருளாதாரச் சக்திகளின் பிரம்மாண்டத் தன்மை. அவை இயங்கும் அளவு காரணமாகப் பிரம்மாண்டம் எனக் காணப்படுகின்றது. நபர்கள், சாதனங்களில் ஈடுபடுத்தப்பட்டுள்ள உற்பத்தி யந்திரத்தின் உண்மையான அளவு காரணமாக; உற்பத்திப் பண்டத்தின் மொத்த அளவு காரணமாக; அது அமைந்துள்ள நிதி நிறுவனத்தின் அதிக சிக்கலானதும் நுட்பமானதுமான தன்மை காரணமாக இதில் வியப்புக்குரிய அம்சமாகிய பொருளாதார விபத்துக்கள் நேர்கின்றன என்பதன்று; ஆனுல், அவை அடிக்கடி நேர்வதில்லை என்பதுதான் வியப்புக்குரியது. அப்படி அவை நேரும்பொழுது கூட அவற்றுக்குக் காரணம் அமைப்பிலுள்ள குறைபாடுகள் அல்ல; வெளியிலிருந்து வரும் தொந்தரவுகள், குறிப்பாக யுத்தங்கள்.[1]

இந்தப் பிரச்சினை மற்றெரு விதத்திலும் புதியது. ஏனெனில், இந்தச் சக்திகள் பெரும்பாலும் 'குருட்டு'த் தன்மை[2] உடையவை. இவ்வாறு கூறுவதற்குக் காரணம், அவை பெரும்பாலும் முறைப்படுத்தப்படாதவை, ஒன்றுக்கொன்று தொடர்பில்லாதவை, ஒரு வகையில் எந்த நோக்கமுமில்லாதவை. ஒவ்வொரு தொழிலும் தனது சொந்தப் பொறுப்பில், சொந்தக் கண்ணேட்டத்துடனேயே நடைபெறுகிறது. அவ்வாறே அந்தத் தொழிலுக்குள் ஒவ்வொரு

[1] யுத்தங்களுக்குப் பொருளாதாரக் காரணங்கள் உண்டுதான்; ஆனுல், நவீன யுத்தங்கள், அடிப்படையில் தேசிய யுத்தங்களாகும். தேசியம், ஓர் அடிப்படையான பொருளாதார அம்சமன்று.

[2] அரசியல் சமுதாயத்தின் பிரதான நோக்கங்களுள் ஒன்று, பொருளாதாரச் சக்திகள் 'குருட்டு'த் தன்மை உடையன, அதே சமயத்தில் சக்தி வாய்ந்தவை என்ற உண்மையைப் புரிந்துகொள்வது ஆகும். அந்தச் சக்திகளின் உறுதிப்பாட்டை வழி நடத்துவது அல்லது வரம்புக்குள் கொண்டு வருவது அரசின் பணியாகும்; அவை பொருளாதாரத் தன்மை கொண்டனவா, அல்லவா என்பதுபற்றி அரசு கவலைப்பட வேண்டியதில்லை. (வில்ஸன்—Wilson, 'The state in Theory and Practice'.)

தொழிற் கூடமும் இயங்குகிறது. ஒரு தொழிலை முழுமையாக எடுத்துக்கொண்டு அதை விரிவாகப் பார்க்க யாரும் கருதுவதில்லை; அந்தத் தொழிலுக்கும் பிற தொழில்களுக்கும் தொடர்புபடுத்தியும் யாரும் கவனிப்பதில்லை. அத் தொழிலின் வெற்றி அல்லது தோல்விக்கான சோதனை, கணக்குப் புத்தகங்களில் காணப்படும் இலாபம் அல்லது நஷ்ட விவரங்கள்தாம். ஒவ்வொருவரும் பொருளாதாரத் துறையில் தமக்கே உரிய சிறு பங்கைக் காணக் கூடும்; ஆனால் அவருக்குத் 'தெளிவு' இருப்பதில்லை. ஏனெனில், அவர் உண்மையில் இருட்டில் வேலை செய்கின்றார்.

பொருளாதாரச் சக்திகள் 'ஊர், பேர்' தெரியாதியங்குவது மூன்றாவது புதிய அம்சமாகும். வரையறுக்கப்பட்ட பொறுப்புக் களுடன் இயங்கும் கம்பெனிகள் ஃபிரெஞ்சு மொழியில் 'இனந் தெரியாத நிறுவனங்கள்' ('societes anonymes') என்றே வழங்கப் படுகின்றன. இதற்கு அர்த்தமிருக்கிறது. ஏனெனில், அந்த நிறுவனங்கள் உண்மையில் எப்படிப்பட்டவை என்பது யாருக்கும் தெரியாது. 'தொழில், நிதி, வர்த்தக ரீதியில் பூரண அதிகாரத் துடன் பொருளாதாரச் சக்தியை வைத்துக்கொண்டிருப்பவர்கள் தமது தாக்குதல் பலத்தை, மாற்றுதல்—கலைத்தல் முறையில் வெளிக்குத் தெரியாமல் வைத்திருப்பது பொது வழக்கமாக இருக் கிறது' என்று பியர் மெலாட் (Pierre Maillaud) 'The English Way' யில் கூறுகிறார். 'நழுவல்' தன்மைபற்றியும் அவர் குறிப்பிடுகிறார். பிடிக்கு அடங்காது நழுவும் இத் தன்மையை அவர், 'பொருளாதார நிலப்பிரபுத்துவம்' என்று வருணிக்கிறார். ஆனால் இத்தகைய இனங் காட்டாத் தன்மை அபாயகரமானது; அபாயம் விளைக்கத் தக்கது. ஏனெனில், பகிரங்கமாக இயங்க அஞ்சும் எதுவும் சந்தேகத்துக்கு இடமளிப்பதாகிறது. பிற துறைகளிலும் இந்தப் போக்கு பரவத் துணைசெய்கிறது; அதனாலும் இது அபாயகரமானது. 'பொருளாதாரத்துறையில் இந்த 'ஊர், பேர்' தெரியாத சக்தி வளர்வது, அதே தன்மையுள்ள சக்தி அரசியல் துறையிலும் பரவ உதவுவதாகிறது. அவ்வாறு ஊடகமான அரசியல் அதிகார அமைப்பு உருவாவது, ஜனநாயக ஸ்தாபனங்களை இயங்காமல் செய்யக்கூடும்.' இத்தகைய பெயரில்லாத சக்திகள் சுயேச்சையாக இயங்குவதை அரசு அனுமதித்துக் கொண்டிருக்க முடியாது; 'புலன் விசாரணை, கண்காணிப்பு என்ற அதிகார வர்க்க அமைப்பை உருவாக்குவதன் மூலம் அரசு, அந்தச் சக்திகளைப் பின்னடையச் செய்யவேண்டும்'. இவ்வாறு செய்வது தன் சொந்த ஸ்தாபனங் களின் பாதுகாப்புக்கும் அவசியமானதாகும். ஏனெனில் அந்த ஸ்தாபனங்கள் வெளிப்படையான விவாதங்கள், கூட்டுநடவடிக்கை ஆகியவற்றை நம்பியிருப்பவை ஆகும். ஜனநாயக அரசியல்

பெரிதும் விளம்பரப்படுத்தப்படுகிறது; ஆனால், நிகழ்காலப் பொருளாதார நடவடிக்கைகளில் பெரும்பகுதி அந்தரங்கமாக வைக்கப்படுகிறது. இது உண்மையில் தெள்ளத் தெளிவான முரண்பாடுதான்.[1]

## சமூகக் கண்காணிப்பு ஏன் வேண்டும்?

இதேபோன்று, அந்தச் சக்திகளின் பிரம்மாண்டத் தன்மையும் 'குருட்டு'த் தன்மையும் அவற்றுக்குள் ஒருவகையான 'கண்டும் காணாத் தன்மை'யும் இருக்கவேண்டும்; தேசீய நடவடிக்கையின் பிற அம்சங்கள் சம்பந்தப்பட்டவரையில் அவற்றுக்குள் ஒருவகையான விட்டுக்கொடுத்தல் இருக்கவேண்டும் என்று பொருள்படுகின்றன. இதிலிருந்து தெரிவதென்ன? பொருளாதாரச் சக்திகள் அவற்றுக் குரிய இடத்தில் வைக்கப்படத் தக்கவாறு அரசு போதிய கட்டுப் பாட்டைப் பயன்படுத்தவேண்டும் அல்லது அந்தச் சக்திகளே உண்மையான அதிகாரம் உடையனவாக இயங்க அனுமதித்துவிட வேண்டும். இதுதான் எந்தவொரு சுதந்தர அரசின் நோக்க மாகவும் இருக்கிறது. ஏனெனில், இந்தச் சக்திகள் அதிகாரத்தின் கீழும் இருக்கமாட்டா; பொறுப்பற்ற முறையில் இயங்கவே செய்யும். நவீன அரசு ஒரு பொருளாதார அரசாகத்தான் இருக்க முடியும் என்பது சரியானல் பொருளாதாரச் சக்திகளைச் சமுதாயக் கண்காணிப்பு, கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவருவது நவீன அரசின் அத்தியாவசியமான கடமை ஆகும் என்பது தெளிவாகிறது.

'சமுதாயம் முறையாக, ஒழுங்குடன் இயங்குவதைப் பெரிதும் பாதிக்காத முறையில் தொழில்கள் வளர்ச்சியுறும்' என்பது பழைய காலக் கருத்து. இது பிழையான கருத்தாகும். இதை ஒயிட்ஹெட் (Whitehead) எடுத்துக் கூறியுள்ளார். இன்று இந்த அம்சம் நன்கு உணரப்பட்டுவிட்டது. தொழில்கள் சமுதாயத்தைப் பல வழிகளில் பாதித்துள்ளன. ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத, இணைப்பு இல்லாத குழுக்களுக்குள் நலன்—மோதல்களை அவை ஏற்படுத்தி யுள்ளன; தொழிலாளர்களின் தனிப்பட்ட ஆக்க முயற்சியை வெறும் இயந்திரங்களை இயக்கும் நிலைக்குத் தாழ்த்தி யிருக்கின்றன; லாபகர மற்ற செலவினங்களில் சமுதாயத்தின் பெரும்பகுதி செல்வாதாரங் களைப் பாழாக்கி யிருக்கின்றன; சமூக மதிப்பு எதையும் உருவாக்க

[1] 'கண்காணிப்புக்குத் தப்பும் பொருளாதார இயக்கங்கள் இருக்கின்றனவா என்பதன்று பிரச்சினை. உண்மையில் அவை இருக்கின்றன. அத்தகைய வற்றைக் கண்காணிக்கவும் கட்டுப்படுத்தவும் போதிய உத்தரவாதங்கள் பொதுமக்களிடம் இருக்கின்றனவா என்பதுதான் பிரச்சினை; சிறுபான்மை யினர் நன்மைக்காக இன்றிப் பொது நன்மைக்காக அவை கட்டுப்படுத்தப் படுகின்றனவா என்பதுதான் பிரச்சினை' – டானே (Tawney).

வில்லை. எனவே, புதிய இணைப்புக்கள், ஒருமை முயற்சிகள் அவசிய மாகின்றன. தகுதி வாய்ந்த தொழில்களைத்தான் தாம் செய்கிறோம். தக்க முயற்சிகளில்தான் தாம் ஈடுபடுத்தப்பட்டுள்ளோம் என்ற உணர்ச்சியை மக்களிடையே ஏற்படுத்த அந்த இணைப்புக்கள் அவசிய மாகின்றன. வாழ்க்கையின் தெளிவான, ஒப்புக்கொள்ளப்பட்ட போக்குகளுடன் தம் வாழ்க்கைகளை இணைத்துப் பார்க்க அவர்களால் முடியவேண்டும். அதற்குத் தக்கவாறு அந்தப் புதிய இணைப்புக்கள் அவசியமாகின்றன.[1]

## (iv) அரசும் உடைமைகளும்

புதிய பொருளாதார வளர்ச்சி புதிய பிரச்சினைகள் ஏராளமான வற்றைக் கொண்டுவந்தது; அவற்றில் சமுதாயம் தலையிட நேரிட்டது. சில பிரச்சினைகள், அத்தியாவசியச் சர்வீசுகள் 'சப்ளை' சம்பந்தமானவை; தனியார் தொழில் முயற்சிகளுக்கு அவை பெரும் சிக்கலை விளைவிப்பனவாகவோ அல்லது 'சப்ளையர்'களின் கட்டுப் படுத்தப்படாத கொள்கைகளிடம் விட்டுவைக்க முடியாத அளவு அதிக முக்கியத்துவம் வாய்ந்தனவாகவோ இருந்தன. பொருளா தாரக் குழுக்களிடையே இருந்த போட்டிகள் காரணமாக எழுந்தவை சில. அந்தப் போட்டிகள் அல்லது மோதல்கள் பொதுமக்களின் பாதுகாப்பு, ஸ்திரத் தன்மைக்கு அபாயம் விளைவிப்பனவாக இருந்தன. தொழிலதிபர்களும், தொழிலாளர்களும் உரிமைகள்—எதிர் உரிமைகள் - கொண்டாடியபோது அவற்றில் அவசியமான அளவுக்கு விட்டுக் கொடுத்துச் சமரசம் காண்பதில் சில பிரச்சினைகள் இருந்தன. இந்தச் சமரச முறைகளில் சர்ச்சைக்குரிய அம்சங்கள் நிறைய இருந்தன. கட்சித் திட்டங்கள் பொருளாதார—சமூக மறு சமரசத் திட்டங்களாகப் பெரும்பாலும் மாறுவதற்கு இவை துணை செய்தன. எந்தக் கோணத்திலிருந்து பிரச்சினையை நாம் அணுகினா லும், உற்பத்தி, விநியோகத் துறைகளில் அரசாங்கத் தலையீடு ஏதாவதொரு வகையில் தனியார் சொத்துடைமைகளில், அவற்றைப் பெற்றுப் பயன்படுத்துவதில் தலையிடுவதாகவே ஆகிறது என்பது தெளிவு.

### சொத்துரிமைகளுக்குக் கூறப்படும் சமாதானம்

நவீன காலங்களில் தனியார் சொத்துரிமையைப் போன்ற ஒரு சில உரிமைகளே அதன் பல்வேறு உருவங்களில் கேள்விக்கிடமின்றி

[1] 'Power' என்ற தமது நூலில் (பக்கம் 23) ரஸ்ஸல் (Russell) காட்டும் மேற்கோள்—Berle and Mears எழுதிய 'The Modern Corporation and Private Property' என்ற நூலிலிருந்து.

ஏற்கப்பட்டிருக்கின்றன. ('நவீன காலங்களில்' எனக் குறிப்பிடுவதற்குக் காரணம், தங்கு தடையற்ற தனிநபர் சொத்துரிமைகள் பற்றிய எண்ணம் சமீப காலத்தில் வளர்ந்த ஒன்ருகும்.) தான் விரும்பியவண்ணம் பணம் சம்பாதிக்க, தான் விரும்பியபடி அதைப் பயன்படுத்த, தனது மறைவுக்குப் பின் அதைத் தான் விரும்பியபடி கொடுக்க தனி நபருக்குள்ள உரிமை, நவீன தொழில் அமைப்பின் அடிப்படைகளில் ஒன்ருகும். அந்த உரிமை மீது விதிக்கப்படும் எந்தவிதக் கட்டுப்பாடும் மிகக் கஷ்டத்துடன்தான் நிறைவேற்றப்படுகிறது. அதுவும்கூட, அத்தகைய கட்டுப்பாடு சமுதாயத்தின் உருப்படியான மொத்த நலன்களுக்காக என்று இறுதியாக நிரூபிக்கப்படவேண்டும்; இந்த வழக்கைப் பொறுத்த வரையில் தனி நபருடைய உரிமையை வற்புறுத்துவது மற்றவர்களுடைய சொத்துரிமைகளைப் பாதிக்கிறது என்பது நிரூபிக்கப்படவேண்டும். இப்போதுகூட, பொருளாதாரப் புனரமைப்புக்கான எந்தத் திட்டம் கொண்டுவரப்பட்டாலும் அதற்கெதிராக 'உடைமைக்கு ஆபத்து' என்ற கூக்குரல் திறமையாகப் பயன்படுத்தப்படுகிறது.

சொத்துரிமைகளுக்கு இக் காலத்தில் ஒரு சமாதானம் கூறப்படுகிறது. செல்வம் தனிநபர் முயற்சிகளால் உண்டாக்கப்படுகிறது. அதனுல் அதை அந்தத் தனிநபர் அனுபவிப்பதில் தலையீடு இருக்கக்கூடாது என்பது அந்தச் சமாதானம். ஆனுல் இது பிரச்சினைக்குரிய விஷயத்தையே சுற்றிச்சுற்றி வருவதாகும். அவ்வாறு 'அனுபவிப்பதற்கு' வரம்புகளே கிடையாதா? சமூக ரீதியில் பயன் தரும் வழிகளில் அனுபவிக்கவேண்டும் என்று வற்புறுத்தச் சமுதாயத்துக்கு எவ்வித உரிமையும் கிடையாதா? மேலும், தாமே உண்மையில் 'உண்டாக்கிய' செல்வத்தை எத்தனைபேர் அனுபவித்துக்கொண்டிருக்கின்றனர்? கிடைக்கப்பெற்ற செல்வம் என நிச்சயமாக இல்லை; மதிப்பு அதிகரித்ததால், அதாவது, நிலத்தின் மதிப்பு அதிகரித்தல் அல்லது சில வாய்தா பேரங்களில் திடீர் உயர்வு ஏற்படுதல் காரணமாக உண்டாவதன்று செல்வம். மற்றவர்களின் உழைப்பினுல்தான் பெரும்பகுதியான செல்வம் உண்டாக்கப்படுகிறது; அதனை உண்மையாகப் படைத்தவர்கள் அதைச் சொந்தமாக்கிக் கொள்ளவில்லை. கடைசியாக இன்னென்று. இது மிகவும் அடிப்படையானது. எந்தச் செல்வமாவது தனி ஒரு நபரின் முயற்சியால் உண்மையாகவே 'படைக்கப்'படுகிறதா? வெற்றிகரமானதொரு தொழில்மூலம் கிடைத்த செல்வத்தை எடுத்துக் கொள்ளுங்கள்: அதைச் 'சிருஷ்டி'த்தவர் யார்? அத் தொழிலை நிறுவியவர்—அதற்கான அறிவும் திறனும் அமையப் பெற்றவர்—அவருக்கு அதில் ஒரு முக்கியப் பங்கு இருக்கிறது என்பது. சரியே; ஆனுல் அந்தச்

செல்வத்தின் பூரணப் படைப்பாளர் அவரல்லர். தனியாக, அவர் துணையின்றித் தவித்திருக்கலாம்; சமுதாயம் அவருக்கு ஒவ்வொரு கட்டத்திலும் துணை செய்திருக்கிறது. மூலதனத்தை நேரடிக் கடனாகத் தந்தது மட்டுமன்று; (அது பொருத்தமான முறையில் திருப்பித்தரப்படுகிறது-பெரும்பாலும் அதிகமாகவே தரப்படுகிறது.) தொழிலாளர்களின் உழைப்பால் மட்டுமன்று; (அதுவும் திருப்பித் தரப்படுகிறது-ஏறத்தாழப் போதுமான முறையில்) கடன், பரிமாற்றம் என்னும் சிக்கலானதோர் அமைப்பின் மூலமாகவும், பொருளாதார வாழ்க்கையை நடத்திச் செல்லத் தான் நிறுவியுள்ள எண்ணற்ற சார்பமைப்புக்கள் மூலமாகவும் சமுதாயம் துணைசெய்திருக்கிறது.

## செல்வம் ஒரு சமுதாயப் படைப்பு

'சொத்து ஓரிடத்தில் சேர்கிறது அல்லது குவிகிறது என்றால் அது, சமுதாயத்தின் கூட்டுப் பலத்தின்மூலம் கிடைத்த பாதுகாப்பின் விளைவாகவே இருக்கவேண்டும். தனிநபரின் உடைமைகள் சமுதாயத்தின் படைப்பே. அந்தச் சமுதாயத்தின் விருப்பங்களுக்கு அது உடன்பட்டே ஆகவேண்டும். சமுதாயம் விரும்பும்போது - அவசியம் நேரும்போது - அதன் கடைசி நாணய மதிப்புவரை சமுதாயத்தின் தேவைகளுக்கே பயன்பட வேண்டும். எனவே சமுதாயத்தின் அவசரத் தேவைகளுக்கு அளிக்கப்படும் அதன் (தனிநபர் சொத்து) உதவிகளைப் பொதுமக்களுக்கு வழங்கப்பட்ட நன்மை எனக் கருதுவதற்கில்லை; உதவி செய்தவர்களுக்குக் கௌரவமும் அதிகாரமும் பெற உரிமை உண்டு எனக் கூறுவதற்கில்லை. ஆனால், முன்னர்ப் பெற்ற உதவிக்குக் கைம்மாறு செய்வதாக அல்லது நியாயமானதொரு கடனைத் திருப்பி அளிப்பதாக வேண்டுமானால் அதைக் கருதலாம்' என்று பெஞ்சமின் ஃபிராங்க்ளின் (Benjamin Franklin) எழுதுகிறார்.

'அரசியல் சமுதாயத்தின் முக்கிய நோக்கங்கள், வாழ்க்கைச் சுதந்தரத்துக்கான சொந்தப் பாதுகாப்புக்கள்—இவை சமுதாயத்தின் ஒவ்வோர் உறுப்பினருக்கும் பொதுவானவையே. பெருஞ் செல்வருடன் மிக வறியவர் ஒருவரும் அவற்றிற்குச் சம உரிமை உடையவரே. அவர்களுடைய சூழ்நிலைகளில் காலம், வாய்ப்பு அல்லது தொழில் எவ்வித மாறுதல்களைச் செய்திருந்தாலும் இச் சமஉரிமை நீடிக்கவே செய்யும்.'

வேறு சொற்களில் கூறுவதானால், செல்வம், ஓரளவு தனிநபர் சம்பந்தப்பட்டது. ஆனால், பிரதானமாக அது ஒரு சமுதாயப் படைப்பு. 'தனது சொந்த உற்பத்தி முயற்சிக்குப் பலன்பெறத் தனி

நபருக்கு உரிமை உண்டு. அந்த முயற்சிக்கான கூட்டத்தின் நன்மைகளைப் பெறச் சமுதாயத்துக்கு உரிமை உண்டு' என்று சமுதாயம் பிரகடனப்படுத்த முடியும்.[1]

## சொத்துரிமைகளுக்கு வரம்புகள்

தனி நபரின் வரம்பற்ற சொத்துரிமையை எந்த நவீன சமுதாயமும் அங்கீகரிக்கவில்லை என்பது சரியே. தனி நபரின் சொத்து, பலவகை வரிகளால் நேரடியாகப் பறிக்கப்படுகிறது; லேவாதேவிச் சட்டங்கள், தொழிற்சாலைச் சட்டங்கள், கலப்படச் சட்டங்கள், காப்பு வரிகள் போன்ற பலமுறைகளால், செல்வம் திரட்டல், திரட்டிய செல்வத்தைப் பயன்படுத்தல் முதலியவை மறைமுகமாகக் கட்டுப்படுத்தப்படுகின்றன. ஆனால் நவீன சமுதாயங்கள், அவை எவ்வளவு தூரம் தனிநபர் சொத்துடைமையில் தலையிட்டாலும் அத்தகைய தலையீட்டுக்கு, அசாதாரண அதிக முக்கியத் தேவை ஏற்படுங்காலை, சமாதானம் கூறிக்கொள்ள முடியும் என்றே கருதுகின்றன. அந்த அவசியம் நிரூபிக்கப்பட்டாலொழியத் தனி நபரின் சுதந்தரம் எவ்விதத்திலும் பாதிக்கப்படாமலேயே யிருக்கிறது. நடைமுறையில் இருக்கக்கூடிய சட்டங்களை மீறாமலேயே எந்த வழியில் எல்லாம் எவ்வளவு சொத்துத் திரட்ட முடியுமோ, அங்கெல்லாம் எவ்விதக் கட்டுப்பாடுமின்றி அந்த நபர் செல்வம் திரட்டுகிறார். சொத்துடைமைக்குத் தார்மீக, அல்லது பொருளாதார நியாயமாவது இருக்கவேண்டுமென்ற கருத்து இன்றைய சித்தாந்தங்களுக்குப் புறம்பானது. 'எனக்குச் சொந்தமானதைக்கொண்டு நான் விரும்பிய எதையும் செய்ய எனக்கு உரிமை உண்டு'; 'எனக்குச் சொந்தமான' என்ற தொடர், சட்டபூர்வமாக என்னால் திரட்டமுடிந்த செல்வத்தைக் குறிக்கும். தார்மீக ரீதியில் அல்லது சமூக ரீதியில் அதற்கு நியாயமில்லாதிருக்கலாம். அதைப்பற்றி இன்று அக்கறை கொள்வதற்கு இல்லை.

இத்தகைய போக்கின் விளைவு, செல்வத்தில் திடுக்குறச் செய்யும் ஏற்றத் தாழ்வுகளை ஏற்படுத்தியிருக்கிறது; பல்வேறு அளவுகளில் தனிநபர் சொத்துடைமைகளின் செல்லுபடித் தன்மையை மறுக்கும் சித்தாந்தங்களைத் தோற்றுவித்தன. 'எனக்குச் சொந்தமானதைக் கொண்டு நான் விரும்பிய எதையும் செய்ய எனக்கு உரிமை உண்டு' என்ற பிரகடனம் 'சொத்துடைமைத் திருட்டு ஆகும்' என்று புருதானை (Proudhon) வெடிக்க வைத்தது; கம்யூனிஸச்

[1] நான்கு கன்ஸர்வேடிவ் எம். பி.க்கள் எழுதித் தயாரித்த 'Industry and the state' என்ற அறிக்கையிலிருந்து. (1924)

சித்தாந்தங்கள் பரவலான செல்வாக்குப் பெறச் செய்தன. சொத்துப் பற்றிய ஒன்றுக்கொன்று தொடர்பானதொரு கொள்கையை உருவாக்கிக்கொள்ள வகை செய்தன.

## சொத்துடைமையின் சமுதாயப் பங்கு

தனிநபர் சொத்துடைமை இரு அத்தியாவசியமான, சட்ட பூர்வமான தேவைகளை—தன் கருத்துக்களைச் சுயமாக வெளியிடுதல், பாதுகாப்பு ஆகிய இரு தேவைகளை—எதிர்கொள்ள நேர்ந்தது எனலாம். சொத்தில்லாத மனிதன் ஓரளவுக்குத் தன் கருத்துக்களை வெளியிடமுடியாது தடைசெய்யப்பட்டான் எனலாம். நமது அன்றாட அந்தரங்க வாழ்க்கையின் பின்னணியை உருவாக்குவனவற்றைக் கட்டுப்படுத்தாதவரை வாழ்க்கையின் முழுமை இருக்க முடியாது. நமது சொந்த செல்வம், அது எவ்வளவு சிறிய அளவினதாக இருந்தாலும், அதை எவ்வகையில் செலவு செய்வது என்பதை நாமே தீர்மானிக்க அனுமதிக்காத எந்தவொரு சமூக அமைப்பும் பெரும்பான்மை மக்களால் நெடுநாட்களுக்குச் சகிக்கக் கூடாததாகவே இருக்கும். ஆனால் இப்போதெல்லாம் பெரும்பகுதி மக்கள் தம் உடனடியான, அத்தியாவசியத் தேவைகளுக்கு—உணவு, உடை, இருக்கை முதலியவற்றுக்கு—செலவு செய்தது போக மிகச் சிறு அளவுதான் மீதப்படுத்த முடிகிறது. அதில்தான் அவர்களுடைய ஆளுந்திறம் உண்மையாக வெளிப்படுத்தப்பட வேண்டியிருக்கிறது.

மேலும், பெரும்பான்மை மக்களுக்குச் சொத்து என்பது பாதுகாப்பு என்ற அளவில் இருக்கிறது; எனவே அதை அம்முறையில் தேடுகின்றனர். செல்வத்தை மனிதன் பற்றிக் கொள்கிறான், அது உடனடியாகக் கொண்டு தருபவைகளுக்காக. அத்துடன், அது பிற்காலத்தில் தமக்கோ அல்லது தம் சந்ததியினருக்கோ கொண்டுவருபவைகளுக்காகவும் அதைத் தேடுகிறான். உடல்நலம் சீர்கெடும் நிலையிலும் வேலையிழக்கும் காலத்திலும் வறுமைவாய்ப் படும்போதும், முதுமை வந்துறும்போதும் தமக்கொரு பாதுகாப்பாக அவர்கள் அதைக் கருதுகின்றனர். இது இயற்கைதான். ஆனால் தமக்குச் சொந்தமான சொத்துடைமைகள் மூலம் வெகுசிலரே இந்தப் பாதுகாப்பை அனுபவிக்கின்றனர்.

தனிநபர் சொத்துடைமை சரியென்றோ தவறென்றோ ஒரு சொல்லில் கூறுவதற்கில்லை. உண்மையான சமுதாய மதிப்புக்களை உருவாக்க அவசியமாயிருக்கும்வரை அது ஊக்குவிக்கப்பட வேண்டியதே. நடைமுறை, பயன் ஆகிய இரு சோதனைகளுக்கும்

அது இடைவிடாது உட்பட வேண்டியிருக்கிறது. எனவே, முழுமையான வாய்ப்புக்களை அளிக்கும் உருப்படியான நிலைமைகளை ஒவ்வொரு குடிமகனுக்கும் பெற்றுத் தரவேண்டியது அரசின் கடமையாகும்; ஒவ்வொரு சாத்தியமான தலையீடு, தலையீடின்மைக்கும் அச் சோதனையைப் பொருந்திவரச் செய்வதும் அரசின் கடமையாகும். ஒரு தனிநபரின் பொருளாதாரச் சுதந்தரம் அவருடைய அண்டைவீட்டுக்காரரின் சுதந்தரத்தில் தலையிடாத அளவுக்கு—அதற்குமேல் அல்ல—அச் சுதந்தரத்தை அரசு அனுமதிக்கும். வெறும் கருவிகளாக, இலாபவேட்டைக்குப் பலியிடப்படுபவர்களாக நடத்தப்படும் எந்தவொரு பொருளாதார அமைப்பையும் அரசு சகித்துக்கொண்டிராது; அத்தகைய ஒரு முறையால் சமூகத்துக்குக் கிடைக்கக்கூடிய நன்மைகளை மறுக்கும் எந்த அமைப்பையும் அரசு சகித்துக்கொண்டிராது.

## விநியோகப் பிரச்சினைகள்

சொத்துடைமையுடன் தொடர்புள்ள பிரச்சினைகள் எண்ணற்றவை. அவற்றுள் ஒரு சிலவற்றையே இங்கு விவாதிக்க இயலும். முதலில் அதன் விநியோகத்திலுள்ள ஏற்றத் தாழ்வுகளைக் குறிப்பிடலாம். அவற்றை அடியோடு நீக்குவதில் எந்தவொரு சமுதாயமும் வெற்றிபெற்றதில்லை. ஆனால் அதீதச் செல்வ நிலைக்கும் படுமோசமான ஏழ்மை நிலைக்குமிடையேயுள்ள கண்ணை உறுத்தும் முரண்பாடுகள் நவீன, தொழில்மயமாக்கப்பட்ட நிலையின் விளைவே. இந்த முரண்பாட்டின் பிரதான விளைவுகளுள் ஒன்று, அது விளைக்கும் சமுதாய, அரசியல் ஸ்திரமின்மை ஆகும். இருபத்து மூன்று நூற்றாண்டுகளுக்கு முன்னர்க் கிரேக்கத் தத்துவ ஞானி அரிஸ்டாட்டில் (Aristotle) 'அரசின் ஏதாவது ஒரு பக்கத்தில் வரைமுறையற்ற அதிகரிப்பு ஏற்படுமானால் அதுவே புரட்சிக்குக் காரணமாகும் என்று கூறினார். 'பணக்காரர்கள் பலராக வரும் போது அல்லது சொத்துடைமைகள் அதிகரிக்கும்போது அரசாங்க அமைப்பு சிறுகுழுவாட்சியாக அல்லது குடும்பங்களின் அரசாங்கமாக மாறுகிறது' என்று அவர் கூறினார். இரண்டாயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு, மாடிஸன் (Madison) 'அளவில் வேறுபாடு, பல்வகை உடைமைகளிலிருந்து வேறுபட்ட நலன்களும் கட்சிகளுமாகச் சமுதாயப் பிரிவு எழுகின்றது' என்று எழுதினார். அதற்குச் சிறிது பின்னர், அவருடைய சக அமெரிக்கரான டானியல் வெப்ஸ்டர் (Daniel Webster) 'சொத்துடைமையின் தன்மை, விநியோகம் ஆகியவற்றால் ஓர் அரசின் அமைப்பு தீர்மானிக்கப்படுகின்றது. சொத்துடைமையின் அமைப்பு, விநியோகம் ஆகியவற்றிலுள்ள வேறுபாட்டின் விளைவாகக் குழு மோதல்கள் எழுகின்றன. அவற்றி

லிருந்துதான் பிரதானமாகக் குழப்பங்கள் எழுகின்றன என்று கூறினர். அவர், மேலும் கூறுகையில் 'செல்வத்தில் பெரும் சமத்துவமின்மை இருக்கும்போது சர்வஜன வாக்குரிமை நிலைக்க இயலாது; ஒரு சுதந்தர அரசின் சட்டங்கள், ஒரு சிலரிடத்தில் சொத்து விரைவாகக் குவியவும் மிகப் பெருமபான்மையான மக்களை நிராதரவாக - செப்புக்காசுமற்றவர்களாகச் செய்யவும் - காரணமாக இருக்குமானல், அந்த அரசு நெடுநாள் ஏற்பதற்கன்று' என்கிருர். இந்த அமெரிக்க அறிஞர், பதினேழாம் நூற்ருண்டில் வாழ்ந்த தமது தீவிரத் தூய்மைவாத (Puritan) முன்னேர்களின் கருத்துக்களையே எதிரொலிக்கிருர். வின்ஸ்டான்லி (Winstanley), ஹாரிங்டன் (Harrington) ஆகியோர் இந்தத் தீவிரத் தூய்மைவாதிகளில் குறிப்பிடத்தக்கவர்கள். 'யுத்தங்களும், யுத்த வதந்தி (செய்தி) களும் ஏன்? கௌரவ, குடியேற்றவாத, பெரும்பணக்கார வர்க்கங்களின் அரசியல் உடைமைகளைப் பாதுகாப்பதற்கே. சொத்துடைமை நலனும் தனிநபர் நலனும் ஒரு நாட்டு மக்களைப் பிளவுபடுத்து கின்றன; உலக முழுவதையுமே கட்சிகளாகப் பிரிக்கின்றன. எல்லா யுத்தங்களுக்கும் அவையே காரணம்; இரத்தப் பெருக்குக்கும் வாதப் பிரதிவாதங்களுக்கும் போட்டிகளுக்கும் அவையே காரணம்' என்று வின்ஸ்டான்லி கூறினர். 'சொத்துடைமைகளில் உள்ள சமத்துவம் அதிகாரச் சமத்துவமாகவும், அதிகாரச் மசத்துவம் மக்கள் அனைவரின் சுதந்தரமாகமட்டுமின்றி, ஒவ்வொருவரின் சுதந்தர மாகவும் இருக்கிறது; பணக்கார, செயற்கைத் திருடர்கள் ஏழைகளிடம் திருடவே செய்கின்றனர். போலித்தனமாக நீதிவாதம் பேசி, புனிதத் துவம்போல் தோன்றுமாறு செய்து, கடவுளுக்கு விரோதமான காரியங்களைச் செய்கையில் கடவுளின் அருள் தம்மைப் பணக்காரர் களாகவும் தமது திருட்டுக்கு உள்ளாகுபவர்களை ஏழைகளாகவும் செய்துவிட்டது என்றும் கூறுகின்றனர். ஏனெனில் கடவுளின் சித்தந்தான் ஏழையையும் பணக்காரனையும் ஆக்குகிறது என்று அவர்கள் கூறுகின்றனர்' என்று ஹாரிங்டன் குறிப்பிடுகின்ருர்.[1] அரசுகளுக்கிடையேயுள்ள வேறுபாட்டைத் தீர்மானிப்பது பொருளா தாரச் சமுதாய அமைப்பே என்று பேராசிரியர் டானே (Professor Tawney) முடிவுக்கு வருவது மிகச் சரியே.

## பொருளாதாரச் சமத்துவமின்மையால் எழும் அபாயங்கள்

பொருளாதாரச் சமத்துவமின்மை நேரடிப் புரட்சியைத் தவிர வேறுபல அபாயங்களையும் கொண்டிருக்கிறது. கலாச்சார வேறு

[1] Democratic Ideals in the Seventeenth Century என்ற நூலில் Petrogorsky மேற்கோள்களாகக் காட்டியவை.

பாடுகள், சுகாதார வேறுபாடுகள் ஆகியவற்றையும் சமுதாயத்தின் வர்க்கங்களுக்கிடையே இதுதான் ஏற்படுத்துகின்றது. கலாச்சாரமும் சுகாதாரமுந்தான் பிரதானமாக வாழ்க்கைக்கு ஒரு பொருளைக் கொடுக்கின்றன. அதனுல்தான் ஒரு நூற்ருண்டுக்கு முன்னர் டிஸ்ரேலி (Disraeli) இங்கிலாந்தில் 'இரு நாடுகள்' இருப்பதைப்பற்றிக் குறிப்பிட்டார். இங்குச் சில விளக்கப் புள்ளி விவரங்கள் இருக்கின்றன. கிளாஸ்கோ (Glasgow) நகரத்தில் இறப்பு விகிதம் குடியிருப்புப் பகுதியில் உள்ளதுபோல இருமடங்கும், தொழில் பகுதியிலும், குழந்தைச் சாவு விகிதம் மும்மடங்கும், நுரையீரல் நோய் போன்ற மூச்சுத் தொடர்பான நோய்களால் சாவுவிகிதம் ஐந்துமடங்கும் தொத்து நோய்கள் பதினைந்து மடங்கும் இருப்பதாகக் கணக்கெடுக்கப்பட்டுள்ளது. மான்செஸ்டர் நகரிலும் இதேபோன்ற நிலைமை இருக்கிறது.[1] அதே கால அளவில் பிரிட்டிஷ் தேசீய வருமானத்தில் பாதியளவு ஜனத்தொகையில் இருபதில் ஒரு பங்காக உள்ளவர்களுக்குச் செல்கிறதென்றும் மீதியுள்ள இருபதில் பத்தொன்பது பங்கினர் மற்ற பாதியுடன் திருப்தியுற வேண்டியிருக்கிறதென்றும் பேராசிரியர் கிளே (Professor Clay) கணக்கிட்டார்.[2] வருமானத்துக்குப் பதிலாக மூலதனத்தைப் பரிசீலனைக்கு எடுத்துக்கொண்டால் சமத்துவமின்மை நிலை இன்னும் தெள்ளத் தெளிவாக வெளிப்படுவதைக் காணலாம். இதை டானே பின்வரும் கடுமையான சொற்களால் குறிப்பிடுகிருர்: 'ஜனத்தொகையில் ஒரு சதவீதத்தினராயுள்ளவர்களால் செல்வத்தின் மூன்றில் இருமடங்கு சொந்தமாக்கப்பட்டுள்ள நிலையில் சொத்துடைமை ஒரு சமுதாயத்தின் குணமாக அன்றி ஒரு வர்க்கத்தின் சின்னமாகவே கருதப்படவேண்டும்'. அவர் மேலும் கூறுகையில், 'ஆனுல், உடைமை குவிக்கப்பட்டும் பரவலாக்கப்பட்டும் உள்ள நிலைமைகளில் சொத்துடைமை அமைப்பு ஓர் ஐக்கியக் கொள்கையாக இருக்கிறது. பணக்காரர்களைப் போன்றே ஏழைகளுக்கும் அது ஓரளவு பாதுகாப்பையும் சுதந்தரத்தையும் வழங்குகிறது. சமூக அந்தஸ்தின் ஒரு பொதுவான அம்சத்தின்மூலம் பொருளாதார முரண்பாடுகளின் கடினத் தன்மையை அது மிருதுவாக்குகிறது. ஆனுல் ஒரு தொழில் சமுதாயத்துக்கே உரிய தன்மைகள் உடைய நிலைமைகளில் அதன் விளைவு எதிரிடையாக இருக்கிறது. அது ஐக்கியக் கொள்கையன்று;

[1] இந்தப் புள்ளிகள் 1927ஆம் ஆண்டுக்கானவை. அதிலிருந்து இப்போது நிச்சயமாக முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. ஆனுல் முரண்பாடு மறைந்திருக்க முடியாது.

[2] ஜனத்தொகையில் ஒரு சதவீதத்தினராயுள்ள பணக்காரர்கள் அறுபது சதவீதம் ஏழைமக்கள் பெறும் தேசீய வருமானத்துக்குச் சமமான அளவைப் பெறுகின்றனர் என அமெரிக்காவில் புருக்கிங்ஸ் இன்ஸ்டிடியூட் (Brookings Institute) முடிவுக்கு வந்தது.

பிளவுக் கொள்கை. பலம், பலமின்மை ஆகியவற்றுக்கிடையே யுள்ள அவமானகரமான முரண்பாடுகளுடன் கூடிய பொருளாதார ஏற்றத்தாழ்வுகளின் முனையை அது கூர்மைப்படுத்துகிறது. வருமானத்திலுள்ள வேறுபாடுகள் மட்டுமின்றி அறிவுரை, நாகரிகம் வாழ்க்கைமுறை ஆகியவற்றிலுள்ள வேறுபாடுகளும் அதிகரிக்கின்றன ' என்கிருர்.

## அரசும் செல்வப் புனர் விநியோகமும்

சொத்துடைமையில் அரசாங்கத் தலையீடு என்னும் பிரச்சினை பல பக்கங்களையுடையது. தன் கடமைகளை நிறைவேற்றத் தேவையான பணத்தைப்பெற அரசு வரி விதிப்பை மேற்கொள்ளவேண்டும். இதை அனைவரும் ஒப்புக்கொள்கின்றனர். ஆனால், ஜனத்தொகையில் சில பிரிவினரிடமிருந்து மற்றப் பிரிவினருக்குச் செல்வத்தைப் பகிரங்கமாக மாற்றுவதன்மூலம் செல்வ ஏற்றத்தாழ்வுகளைக் குறைக்க முயல்வது அரசின் கடமையல்லவா ? குறைவான வருமானங்களுக்கு விலக்கு அளிப்பது, உயர்ந்த வருமானங்களுக்கு அமிதவரி விதிப்பது, பணக்காரர்களுக்கு 90 சதவீதம் வரை வரியை அதிகரிப்பது ஆகிய முறைகளின்மூலம் செல்வ வரிகளை அரசு விதிக்கும்போது இதுதான் நடைபெறுகிறது. இவ்வாறு பெற்ற நிதிகளைக்கொண்டு இலவசக் கல்வி, காப்பு நிதிகள் (இன்ஷ்யூரன்ஸ்) போன்றவற்றை அரசு அளிப்பதன்மூலம் மேலும் செல்வம் இடம் பெயர்கிறது. இச் சலுகைகள் அனைவருக்கும் கிடைக்கும் என்ருலும் சாதாரண மக்களே அவற்றைப் பயன்படுத்திக்கொள்கின்றனர். ஊதியங்களை இவை ஓரளவு அதிகரிக்கின்றன என்பதே இதற்குப் பொருள் ஆகும்.

1937-ஆம் ஆண்டில் பிரிட்டனில் இருந்த நிலைமைகள்பற்றிய சில புள்ளிவிவரங்கள் இங்குத் தரப்படுகின்றன. வருமான வரியில் 68 சதவீதம் 10,000 பவுனுக்கு அதிகமான வருமானங்களிலிருந்து கிடைத்தவை ; 30 சதவீதம் 10,000 பவுன் முதல் 125 பவுன்வரை உள்ள வருமானங்களிலிருந்து கிடைத்தவை ; 2 சதவீதம் 125 பவுனுக்குக் குறைந்த வருமானங்களிலிருந்து கிடைத்தவை.[1] இந்த வரிகளிலிருந்து செய்து கொடுக்கப்பட்ட சௌகரியங்களில் சுமார் பாதியளவு 125 பவுனுக்குக் குறைவான வருமானம் உடையவர்களுக்குச் சென்றது ; ஒரு சதவீதத்துக்கும் குறைவான அளவு

[1] ஆனால் இந்த உயர்ந்த வருமானத்தினர், மறைமுக வரிகளில் 3 சதவீதமே செலுத்தினர் ; மிகக் குறைந்த வருமானத்தினர் 14 சதவீதம் செலுத்தினர் ; நடுத்தர வருமானத்தினர் 83 சதவீதம் செலுத்தினர். இவை நுகர்வு அம்சத்தில் (consumption) வருவதால் இந்த நிலைமை என்க.

10,000 பவுனுக்கு அதிகமான வருமானமுடையவர்களுக்குச் சென்றது. டாக்டர் பர்ன[1] (Dr. Barna) வின் நூலிலிருந்து இந்த மேற்கோள் தரப்படுகிறது. அரசாங்க நடவடிக்கை மூலம் 250 மிலியன் பவுன் புனர் விநியோகம் செய்யப்படுகிறது என்று அவர் கணக்கிட்டுள்ளார். இந்த நூலை The Times Literary Supplement-ல் விமர்சனம் செய்தவரோ, 'ஆனல், இந் தொகை தேசீய வருமானத்தில் 5 அல்லது 6 சதவீதத்துக்கு அதிகமாகும். ஏழ்மை நிலைக் கோட்டுக்குக் கீழ் உள்ள குழுவினர், இதைவிடத் தீவிரமான (தேசீயச் செல்வாதாரங்களின்) புனர் விநியோகத்தால் முழுமையாக நீக்கப்பட்டிருப்பர்' என்று சேர்த்துச் சொல்கிருர்.

## நவீன வரிவிதிப்பு

இது பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்னிருந்த நிலைமை. யுத்த வரிவிதிப்பு தேசீய வருமானத்தின் பெருமளவை நிச்சயமாக இடம்பெயரச் செய்தது. யுத்த காலத்திலும் யுத்தத்தின் பிற்காலத்திலும் பெருமளவு வேலை வாய்ப்புக்கள் இருந்தன; புதிய காப்பு நிதித் திட்டங்கள் அமலுக்கு வந்தன. இவையெல்லாம் நிராதரவு எல்லையில் வாழ்ந்தவர்களின் எண்ணிக்கையைக் குறைப்பதில் பெருமளவு உதவின.[2] ஆனல், அந்த வழியில் செல்ல விரும்பினல் அவ் வகையில் செய்யவேண்டியது நிறைய இருக்கிறது. சொத்துடைமையில் தலையீடு அதிக தூரம் சென்றுவிட்டது என்று கருதும் சிலர் இருப்பது இயல்பு. ஆனல், பிரதானமாக, அந்தப் புனர் விநியோகக் கொள்கைகளை அமல் செய்ய அரசுக்கு 'உரிமை' கிடையாது எனக் கூறப்பட்ட பழைய புகார் இப்போதெல்லாம் அதிகமாகக் கேட்பதில்லை; உயர்ந்த வரி விதிப்பை 'வழிப்பறி, பறிமுதல்' என்று கூறுவதையும் இப்போது அதிகமாகக் கேட்க முடிவதில்லை. 'சமூக லட்சியங்களுக்காக அரசு மட்டுமே (செல்வத்தைக்) குவிக்க

[1] தமது 'Redistribution of Incomes Through Public Finance' என்ற நூல்.

[2] 1936-ல் உணவுத் துறையில் பெரு நிபுணரான பாய்டு பிரபு (Lord Boyd-Orr) பிரிட்டனின் ஜனத்தொகையில் 30 சதவீதத்தினர் குறையுணவு கொள்கின்றனர் எனக் கணக்கிட்டார். சரியான முறையில் அவர்கள் உணவு கொள்ளவேண்டுமெனில், 30 சதவீதம் அதிக இறைச்சியும் 40 சதவீதம் அதிக வெண்ணெயும் 55 சதவீதம் அதிக முட்டைகளும் 80 சதவீதம் அதிகப் பாலும் 87 சதவீதம் அதிகக் காய்கறி வகைகளும் 124 சதவீதம் அதிகப் பழங்களும் அவர்களுக்கு வேண்டும். கட்டட நிலைபற்றி அதே கால அளவில் திரட்டப்பட்ட கணக்கில், சந்தடி-நெருக்கத்தைக் குறைக்க வேண்டுமாயின் 15 மிலியன் புதிய குடியிருப்புகள் கட்டப்படவேண்டும் என்றும் ஆனல் கிடைக்கக்கூடிய எஃகு, அலுவலகங்களுக்கான பெரிய மாடிக் கட்டடங்களுக்குப் போய்விடுகின்றன. ஏனெனில் தொழிலாளி-வர்க்க வீடுகளைக் கட்டுவதில் கிடைக்கும் லாபத்தைவிட இதில் அதிக லாபம் கிடைக்கிறது.'

முடியும். ஏனெனில், செல்வத்தில் பெரும்பகுதி, வாழும் தனிப்பட்ட நபர்களுடைய சக்தியைச் சார்ந்திருக்கவில்லை' என்று ஹாப்ஹவுஸ் (Hobhouse) கூறுகிருர். இக் கருத்து பரவலாக ஏற்கப்பட்டு வருகிறது.

சொத்துடைமையில் அரசாங்க நடவடிக்கைக் கொள்கைக் கெதிரான விமர்சனம் இன்று அதிகமாகக் கிளம்புவதில்லை. அது தீவிரமாகவும் திறமையாகவும் அமல் செய்யப்படுகிறதா என்பதைப் பற்றிய விமர்சனந்தான் அதிகமாக வருகிறது. இது முன் முயற்சியை ஊக்குவிப்பதில்லை யல்லவா? எனவே மொத்தக் கூட்டு உற்பத்தித் திறனைக் குறைக்கிறதல்லவா? பொன் முட்டையிடும் வாத்தைக் கொல்லும் வேலையில் அரசு ஈடுபட்டிருக்கவில்லையா? ஆனால், எவ்வளவு தூரம் போகலாம், எங்கு நிறுத்திக்கொள்ளவேண்டும் என்பது நவீன நிதியியலுக்குத் துல்லியமாகத் தெரியும். அது உண்மையில் தேசியச் செல்வாதாரங்களை வெகு புத்திசாலித் தனமாகச் செலவு செய்யும் உபாயம் ஆகும். ஒரு சொல்லில் கூற வேண்டுமானுல், அதற்கு விவேகமான 'திட்டமிடுதல்' என்பது பொருளாகும்.

## (v) அரசும் திட்டமிடுதலும்

### திட்டமிடுதல் என்ருல் என்ன?

திட்டமிடுதல்பற்றி இப்போதெல்லாம் ஒவ்வொருவரும் பேசுகின்றனர். திட்டமிடுதல் என்பதுதான் என்ன? 1946 நவம்பர் மாதத்தில் இங்கிலாந்துப் பாராளுமன்றத்தில் (House of Commons) ஸர் ஸ்டாஃபோர்ட் கிரிப்ஸ் (Sir Stafford Cripps) பின்வருமாறு அதை வரையறுத்தார்: 'தேசீய விருப்ப லட்சியங்களுக்கேற்பத் தேசீய நலன்களை முன்வைத்துத்தேசீயச் செல்வாதாரங்களைத் திட்டமிடுதலும், ஒரு ஜனநாயக சமுதாயத்தில் அரசுக்கு வழங்க முன்வரும் அனைத்தையும் பயன்படுத்திக்கொண்டு அவசியமான முறைகளை நிறுவுதலும் ஆகும். அதற்கு ஆறு முக்கிய அம்சங்கள் உண்டு. உற்பத்தி செய்யவேண்டியதைத் தேர்ந்தெடுத்தல், அவசியமான தொழிலாளரைச் 'சப்ளை' செய்தல், தேவையான பண்ட வகைகளின் 'சப்ளை', திறன் 'சப்ளை', சிறந்த களத்தை அளித்தல், நிதித் தேவைகளை அளித்தல் ஆகியன அந்த ஆறு அம்சங்கள்.'

கிரிப்ஸ் தந்த வரையறுப்பு அதற்குச் சில நாட்கள் முன்பு ஹெர்பர்ட் மாரிஸன் (Herbert Morrison) கூறியவற்ருல் முழுமை பெறும். திட்டமிடுதலில் ஐந்து கட்டங்கள்பற்றி மாரிஸன் குறிப்

பிட்டார். 'திட்டமிட ஒருவன் மனத்தைச் சரி செய்தல், அவசிய மான விவரங்களைப் பெறுதல், மாற்றுத் திட்டங்களைக் கண்டுபிடித்தல், இவற்றிடையே ஒன்றைத் தேர்ந்தெடுத்து எதைத் திட்டமிடுவது, எதைத் திட்டமிடாது விடுவது எனத் தீர்மானித்தல், இறுதியாகத் திட்டங்களை நிறைவேற்றுதல், சரியான வழியில் சரியான இடங்களில் சரியான நேரத்தில் அவை நிறைவேறத் தக்க விதத்தில் இங்கு மங்கும் அவசியமான மாறுதல் செய்தல்' ஆகியவை இந்த ஐந்து கட்டங்களாகும்.

## திட்டமிடுதலுக்கான தேவை

நாமெல்லாம் திட்டக்காரர்களாக இப்போது மாறியதேன்? ஏனெனில், நவீன உலகின் தேவைகளை நிறைவேற்றும் ஆற்றல் திட்டமிடாத பொருளாதாரத்துக்கு இயலாதிருத்தலே. செல்வ ஏற்றத் தாழ்வுகளைப்பற்றி ஏற்கெனவே கவனித்தோம். ஜனநாயக சமுதாயம் எனக் கூறிக்கொள்ளும் ஒரு சமுதாய அமைப்பில் இன்றைய உருவில் அந்த ஏற்றத்தாழ்வுகள் சகிக்கவொண்ணுதவை. போட்டியின் இடத்தை அடிக்கடி ஏகபோகம் பிடித்துக்கொள்கிறது. அதன் பெரும்பாலான குறைபாடுகளை நீக்காது போட்டி முறையின் சௌகரியங்கள் சமுதாயத்துக்கு மறுக்கப்பட்டன. எல்லாவற்றை யும்விட நமது காலத்தின் நோயாக வேலையில்லாத் திண்டாட்டம் எழுந்தது. இதைக் குணப்படுத்த அந்த முறையால் இயலவில்லை. எனவே, பிற மருத்துவர்களின், அதாவது பிற பொருளாதார முறை களின்—கவனத்தைத் தேடிப்பெற வேண்டியதாயிற்று. உண்மை யில், ஜனநாயக ரீதியில் திட்டமிடுதல் ஒன்றே, நூறு சதவீதத் திட்டமிடுதலான பொதுவுடைமைக்கு (Communism) ஒரே மாற்ருக ஆகிவிட்டிருக்கிறது.

## வேலையில்லாத் திண்டாட்டம்

வேலையில்லாத் திண்டாட்டப் பிரச்சினைபற்றி இத்தகையதொரு நூலில் விரிவாக ஆராய முடியாது. சுமார் பதினைந்தாண்டுகளில் அல்லது யுத்தத்துக்குச் சற்று முன்பிருந்து எந்தவொரு தொழில்மய நாட்டிலும் அதன் தொழிலாளர்களின் பத்திலொரு பங்கினர் அல்லது அதைவிடச் சற்று அதிக அளவினர் வேலையின்றி அவதிப் படாமலில்லை. பௌதீக, தார்மீகச் சங்கடங்களில் வேலையில்லாத் திண்டாட்டம் என்ருல் என்ன என்பதுபற்றி நாம் இங்கு விளக்க முடியாது. தனது உழைப்பு தேவைப்படவில்லை; தனது சமுதாயத் தின் துடிப்புமிக்க வாழ்க்கையில் தனக்கு ஓர் இடமில்லை என்ற

நினைவே ஒரு நபரின் கூர்மைமிக்க துயர உருவமாக இருக்கும் என்று கூறினால் இங்குப் போதுமானது. சுய - வியாபகம், சுய - வளர்ச்சிக்குத் தூண்டுதல் இல்லாத ஒரு நிலையைவிட, நிறைவான சக்திகளுடன் கூடிய ஒரு மனிதன், வெறும் சோற்றுத் துருத்தியாக இருக்கும் நிலையைவிட, கொடுக்க ஒன்றுமில்லை ; கேட்க ஒரு முயற்சி இல்லை என்ற வாழ்க்கை நிலையைவிட - யுத்தங்கூட விரும்பத்தக்க தாகத் தோன்றலாம்.

வேலையின்மையால் ஏற்படும் சமுதாயச் சுமை, சமுதாயச் செலவுபற்றியும் மறந்துவிட முடியாது. அமெரிக்கப் பொருளாதார மந்தம் (The American depression) என்றால் 350 மிலியன் டாலர் பெறுமான பொருள்கள், சேவைகள் நஷ்டம் என்று பொருள். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் உள்ள எல்லாக் கூட்டு வணிகக் களங்களின் (corporations) மூலதன இருப்பைவிட இத் தொகை இருமடங்குக்கு அதிகமாகும். டென்னஸி பள்ளத்தாக்குத் திட்டத்தின் (Tennessee Valley Authority) அளவைப்போல 350 நதிப் பள்ளத்தாக்குத் திட்டங்களை உருவாக்க இத் தொகை போது மானது. 5,000 டாலர்கள் வீதம் 70 மிலியன் குடும்பங்களுக்கு வழங்க இத்தொகை போதுமானது; அமெரிக்க ஐக்கிய நாடுகளி லுள்ள சேரிகள் அனைத்தையும் தூர்க்கத் தேவையான பணத்தைவிட இது மும்மடங்குக்கும் அதிகம். அவ்வாறே வேலையின்மை என்னும் கொடுநோயால் பிரதானமாகப் பாதிக்கப்பட்ட பிரிட்டனுக்கும் ஜெர்மனிக்கும் இது பொருந்தும்.

இரு உலக யுத்தங்களின் இடைப்பட்ட காலத்தின் பிரதான அம்சம், ஜெர்மனியிலாகட்டும்; பிரிட்டனிலாகட்டும்; அல்லது அமெரிக்காவிலாகட்டும்—பெருமளவு வேலையில்லாத் திண்டாட்டத் தைத் தடுக்கத் தனியார் தொழில் முயற்சி தவறியதாகும். இவ்வா றிருக்க, வேலைவாய்ப்பு உத்தரவாதம் என்பது காலத்தின் முக்கிய, ஆணித்தரமான கோரிக்கை ஆயிற்று. மற்ற எதையும்விட இந்த ஒன்றுக்காவது, ஏதாவது ஒரு வகையில், ஏதாவது ஓர் உருவத்தில் திட்டமிடுதலிலிருந்து தப்பமுடியாது என்ற நிலை ஏற்பட்டது. திட்டமிடுதலை யார் செய்வது என்பது ஒரே கேள்வியாகும். வேறு விதமாகச் சொல்வதெனில், உற்பத்தி யந்திரத்தின் சொந்தக்காரர் களாக இருக்கும் சமுதாயத்தின் ஒரு பிரிவினுடைய நன்மைக்காக வன்றிப் பொது நன்மைக்காகப் பொருளாதார ஓட்டத்தைப் பயன் படுத்துவதே இன்றுள்ள பிரச்சினை ஆகும்.

## திட்டமிடுதலும் திறன்முறைகளும்

சமுதாயத்தின் அளவு காரணமாகவும் இடைவிடாது தோன்றி வரும் புதிய திறன் முறைகளிலுள்ள சிக்கலான தன்மை காரண மாகவும் திட்டமிடுதல் அவசியமான ஒன்ருக மாறிவிட்டிருக்கிறது. ‘புதிய கண்டுபிடிப்புக்கள், அமைப்பு, நிர்வாகம், கல்வி, சமூக-ஒத்துழைப்பு ஆகியவற்றுக்கான புதிய வாய்ப்புக்களை ஏற்படுத்துகின்றன. இவற்ருல் மனித நடத்தைமீது ஆதிக்கம் செலுத்த முடிகிறது; அவற்றைக் கட்டுப்படுத்தி, சுதந்தரத்துக்காக அவற்றைப் பயன்படுத்த மனிதனுல் முடியாவிட்டால் சர்வாதிகார ஆட்சிமுறைகளுக்கு வழி அமைப்பதாகிவிடும். இங்குத்தான் திட்ட மிடுதல் வருகிறது. முழுமையாக ஒரு நிலைமையைப்பற்றிப் புரிந்து கொள்ளுதல், ஒன்றுக்கொன்று உள்ள தொடர்பை அறியும் ஆற்றல், நவீனகாலத் தோற்றத்தின் சிக்கலான தன்மை, அளவு ஆகியவற்றின் விளைவாக எழுந்த முழுமையான சமுதாய நிலைமை களை மனத்தில் கொண்டு சிந்திக்கும் பழக்கம்—இங்குத்தான் திட்ட மிடுதல் வருகிறது.’[1]

மனித அளவுகோலுக்கு அப்பால் திறன்முறைகள் செல்லும் போதெல்லாம் திட்டமிடுதல் அவசியமாகும். அதிகப்படியான ஏக போகங்கள் மூலமாகவோ, முழுமூச்சான போட்டி மூலமாகவோ, உற்பத்திக் கருவிகள் குறைபாடு அல்லது மிக விரைவில் புதுப்பிக்கப் படுதல் என்ற நிலைமை மூலமாகவோ, பிரச்சினைகளைத் தாண்டிச் சென்று அதன்மூலம் இன்றைய அமைப்பின் வியாபகத்துக்கு அப்பால் சென்று கஷ்டங்களை உண்டாக்கிக் கொள்வதன் மூல மாகவோ இந்த நிலை விளையக்கூடும்.

[1] மிதமிஞ்சிப் போய்விடுமோ எனப் பயந்து உற்பத்தியைக் கட்டுப்படுத்தும் எந்தக் கொள்கையையும் குறிப்பாக இது உள்ளடக்குகிறது. 1929-33 ஆண்டுகளின் ‘பொருளாதாரப் பனிப்’ புயலின்போது உணவுப்பொருள்கள் வேண்டுமென்றே அழிக்கப்பட்டதை ஓரளவு வயது வந்த அனைவரும் அறிவர். ஆனுல் 1942ஆம் ஆண்டுவாக்கில் பிரிட்டிஷ் தொழில் கூட்டமைப்பு (Federation of British Industries) தனது ‘Report on Post-War Reconstruction’ என்னும் அறிக்கையில், மூலப்பொருள்கள் மிதமிஞ்சிய அளவில் இருப்பதுபற்றி அச்சம் தெரிவித்தது ‘பிரதான உற்பத்தி நாடுகளில் உற்பத்தியைத் தீவிரமாக வெட்டுவதன் மூலம் இதற்குத் தீர்வு காணலாம்.’ ஆயினும். அத்தியாவசிய மூலப்பொருள்களுக்கும் உணவுப் பொருள்களுக்கும் செயற்கையான தட்டுப்பாடு ஏற்படுத்தும் கொள்கை, இதைவிடச் சுபிட்சமானதொரு உலகை உருவாக்குவதற்கு உறுதியானதொரு அடிப்படையாகத் தோன்றவில்லை என்றும் அந்த அறிக்கை மேலும் கூறியது. மெத்தச் சரி!

## திட்டமிடுதல் உத்தேசங்கள்

திட்டமிடுதலும் பல உத்தேசங்களின் மீதுதான் அமைகிறது. அதாவது, நிரூபிக்கப்பட முடியாத அபிப்பிராயத் தளங்களையும் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. இன்றைய உலகத்தில் முழுமையான சமுதாயக் கண்காணிப்பு இருக்கவேண்டும்—அரசால்தான் அவ்வாறு கண்காணிக்க முடியும் என்பது ஒன்று. மற்றொன்று, அத்தகைய கண்காணிப்பு, தேவைப்படக்கூடிய ஒரு பரந்தவெளி இருக்கும்போது, அரசு சாதாரணமாக ஊடுருவக்கூடிய சுய முயற்சிப் பரப்புகள் தெளிவாக அங்கீகரிக்கப்பட்டிருக்க வேண்டும்; அப்படியும் அந்தச் சுய முயற்சிப் பரப்புகள், நின்று, தம்மைக் காத்துக்கொள்ளும் திறன் பெற்றிருக்கவேண்டும் என்பது. மூன்றாவது, நவீன விஞ்ஞானம், தொழில் நுட்பம், கல்வி ஆகியவற்றைக்கொண்டு தீர்க்கமாகத் திருத்தியமைக்கப்பட வேண்டிய கண்காணிப்பு முறைக்கான தேவை. நான்காவது, அரசியல் ஐக்கியம் என்ற வட்டத்துக்குள் அரசியல் அல்லாத பிற மதிப்புக்களை (value systems) உரிய முறையில் அங்கீகரித்து, பாதுகாப்பு அளிப்பதற்கான தேவை. இறுதியாக, தலக் கொள்கைகளுடன் தேசீயக் கொள்கைகளையும் அரசாங்க, பகுதி - அரசாங்க, தனியார் திட்டங்களையும் மிகுந்த கவனத்துடன் ஒருங்கிணைப்பது அவசியமாகும்.

ஆனால் இவை எல்லாவற்றுக்கும் பின்னால் அடிப்படையானதொரு உத்தேசம் இருக்கிறது. திருமதி ஊட்டனின் (Mrs. Wootton) கருத்து இங்குக் குறிக்கத்தக்கது. 'சமுதாயத்தின் எல்லா உறுப்பினர்களின் நன்மைக்கு என்றில்லாவிட்டாலும் மிகப் பெரும்பான்மையோரின் நன்மைக்காக உள்ள இலட்சியங்கள் இருக்கவே செய்கின்றன. செயல் சுதந்தரத்தின்மீது ஓரளவு கட்டுப்பாடு வருவதையும் பொருட்படுத்தாது அந்த இலட்சியங்களுக்குப் பாடுபடுவது நல்லது; அந்த இலட்சியங்களை நியாயமான அளவு துல்லியத் தன்மையோடு தீர்மானிப்பதும் சாத்தியமே என்று அவர் கூறுகிறார். 'அனைவருடைய நன்மைக்குமாக முடிவுகளைச் செய்யும் கடமை வாய்க்கப்பெற்றோர் அந்த இலட்சியங்களைத் தொடர்ந்து பின்பற்றிச் செல்வர்' என்றும் அது கருதுகிறது.

திட்டமிடுதல் ஓர் அளவைப் பொறுத்த விஷயந்தான். ஒவ்வொரு துறையும் திட்டமிடப்படும் இடமோ, திட்டம் அறவே இல்லை எனத்தக்க இடமோ எங்குமில்லை. திட்டமிடுதலுக்கும் திட்டமில்லாத சமுதாயத்துக்குமுள்ள வேறுபாடு வற்புறுத்தலில்தான் இருக்கிறது; குறிப்பாகத் திட்டமிடுதலின் பகிரங்கத் தன்மை,

விளம்பரம் ஆகியவற்றில்தான் இருக்கிறது. ஒரு பொதுவான அதிகார அமைப்பைக்கொண்டு முதலில் மேற்கொள்ளவேண்டிய பொருளாதார முயற்சியை உணர்வு பூர்வமாகவும் பட்டவர்த்தனமாகவும் தேர்ந்தெடுக்க முடிவது - சமுதாயத்தைப் பிரதிநிதித்துவப் படுத்தும் ஓர் அமைப்பால் அவ்வாறு செய்ய முடிவது - திட்டமிடுதல் என்ற அம்சத்தில்தான்.

## திட்டமிடுதலும் குடிமக்களும்

திட்டமிடுதல் ஒரு குடிமகனை எவ்வாறு பாதிக்கும்? முதலில், உற்பத்தியாளன் என்ற முறையில் அவன் தேர்ந்தெடுக்கும் வேலைக்கு வரம்பு கட்டும். இதுபற்றி முன்னரே சிறிது பரிசீலித்திருக்கிறோம். வேலையிழந்த நிலையில் கிடைக்கும் உதவி, மற்றொரு மாவட்டத்துக்குக் குடிபெயர்ந்து செல்வது அல்லது புதியதொரு தொழிலுக்குப் பயிற்சிபெற ஒப்புக்கொள்வது ஆகிய நிபந்தனைக் குட்பட்டது என்பதைக் குறிப்பிட்டிருக்கிறோம். ஆனாலும் அந்த மாற்றங்களுக்கு உட்படவேண்டும் என யாரும் நிர்ப்பந்திக்கப்படுவதில்லை என்பதையும் குறிப்பிட்டிருக்கிறோம். சில தொழில்களை அல்லது உத்தியோகங்களை விட்டுவிடுவது அல்லது ஒருவகைப் பரீட்சார்த்தமாக வரம்பு கட்டிக்கொள்வது என்பது தவிர்க்க முடியாததே. ஆனால் திருமதி. ஊட்டன் (Mrs. Wootton) குறிப்பிடுவதுபோல 'ஒரு குறிப்பிட்ட தொழிலைத் தொடர்ந்தறியாத மக்களுக்கு அத்தொழிலை மூடிவிடுவதென்பது அவர்கள் சுதந்தரத்தைப் பாதிப்பதாகாது.' சில தொழில்களில் கூடுதலான சந்தடியும் சிலவற்றில் தொழிலாளர் பற்றுக்குறையும் இருக்கும்போது அங்குத் திட்டமிடுதல் இருக்கமுடியாது. அதிகச் சம்பளம் தர முன்வருவதன் மூலம் சமநிலை ஏற்படுத்தலாம்; அல்லது, தொழில் திறச் சோதனைகள் மூலம் தொழிலாளர்களை நிர்ப்பந்தமாக நீக்கலாம்.

நுகர்வோர் என்ற முறையில் குடிமகனின் நிலை என்ன? உற்பத்தியைத் தீர்மானிப்பதில் பழைய அளிப்பு, தேவை ஆகியவற்றின் (supply & demand) விதி மட்டும் ஒரே அம்சமாக இருக்க முடியாது. ஒரு பொருளை வாங்கும் சக்தி இருக்கிறதென்றால் அது மட்டுமே அதன் உற்பத்தியை உறுதிசெய்ய முடியாது. ஏனெனில் சமுதாயத்தின் செல்வாதாரங்கள் அந்தப் பொருளைவிடச் சமூக ரீதியில் பயனுள்ளவற்றைத் தயாரிக்கத் தேவைப்படலாம். நிர்ணய அளவில் விற்பதும், பங்கீட்டு முறையும் (rationing) நுகர்வோர் சுதந்தரத்துக்குள்ள வரம்புகளுக்குத் தெளிவான உதாரணங்களாகும்.

நுகர்வோர் தேவை இருப்பது, வாங்கும் சக்தி இருப்பதைக் குறிப்பதுதானே தவிர உண்மையான தேவையைக் குறிப்பதாகாது என்பதையும் நிரவல் உதவிகள் (subsidies) அளிப்பதன் மூலம் அடக்கவிலைக்கும் குறைவாகச் சிலவற்றை வழங்க நேரும் என்பதையும் திட்டமிடுதலின்போது கருத்தில் கொள்ளவேண்டும். இவையில்லாதிருக்குமானால் யுத்தகாலப் பொருளாதார அமைப்பே சீர் குலைந்து போயிருக்கும்.

நுகர்வோர் சுதந்தரத்தின்மீது மற்றொரு வரம்பும் இருக்கிறது. இது முதலீட்டுத் துறையில் வரும். அதாவது, தனது பணத்தைச் செலவு செய்ய உள்ள சுதந்தரத்தைவிடச் சேமிக்கும் சுதந்தரத்தின் மீது, குடிமக்கள், அரசாங்கத்தினர் ஆகிய இரு அம்சங்களால் பண்டங்கள், சர்வீசுகள் ஆகியவற்றுக்குச் செலவிடப்படும் தொகையைக்கொண்டே எந்தக் காலத்திலும் எந்த நாட்டிலும் வேலை வாய்ப்பின் மொத்த அளவு உருவாக்கப்படுகிறது என்பது தெளிவு. போதுமான அளவு மக்கள் வாங்காதபோதும் குறைபாட்டைச் சரிக்கட்ட அரசுக்கு விருப்பமில்லாத அல்லது முடியாதபோதும் வேலையில்லாத் திண்டாட்டம் எழுகிறது. பூரண வேலை வாய்ப்பு நிலையைக் கட்டிக் காக்கப் போதிய அளவு நிறைய ஜனங்கள் வாங்காதிருந்து, தங்களால் முடிந்த அளவு வாங்கிக்கொண்டிருந்தால் சம்பள அளவுகள் மிகக் குறைவாக இருக்கின்றன; வாங்காதிருக்க முடிந்தவர்களிடமும், முதலீடு செய்வதையே விரும்புபவர்களிடமும் அதிகப்படியான செல்வம் சேர்கிறது. ஆனால் ஓரளவு முதலீடு அவசியமானது என்பது பொதுக்கொள்கையாக நிறுவப்பட்டிருப்பதன் காரணமாகப் பூரண வேலை வாய்ப்பு நிலையைப் பாதுகாக்க ஓரளவு அரசாங்கம் செலவிட வேண்டியது அவசியமாகவிருக்கும்.

## திட்டமிடுதலும் தனியார் தொழில்முயற்சிகளும்

இவற்றிலெல்லாம் சோஷியலிசம் சம்பந்தப்பட அவசியமே இல்லை. இருந்தபடி தனியார் தொழில் முயற்சிகளுக்கு அவற்றின் முதன்மை இடத்தை வழங்கலாம்; சகஜமான விலைவாசி அமைப்பு, சுயேச்சையாக இயங்க அனுமதிக்கப்படலாம். வேலையில்லாத் திண்டாட்ட மட்டம் குறையத் தொடங்கினால் மாத்திரமே தனியார் தொழில் முயற்சிகள் பயன்படுத்தாத செல்வர்தாரங்களைப் பயன்படுத்த அரசு முனைகிறது. சேரி ஒழிப்பு, சாலை அமைப்பு, பெருமளவில் மரம் நடுதல் அல்லது உதவிப் பணம் (pensions), குடும்ப அலவன்சுகள், வேலையில்லா நிலை உதவிகள், உணவு நிரவல் உதவிகள் முதலியவற்றை நுகர்வோருக்கு நேரடியாக வழங்குதல் முதலியவற்றை அரசு மேற்கொள்கிறது. முதலாளித்துவத் தனியார்

தொழில் முயற்சிகளின்கீழ் 'ரூஸ்வெல்ட்டின் நியூ டீல்' (The Roosevelt New Deal) சிறந்ததோர் உதாரணமாகும். 'வேலை வாய்ப்புக்களை உருவாக்கும் கண்ணோட்டத்திலிருந்து பார்த்தால், ஏழைகளின் செலவைப் போன்றே பணக்காரர்களின் செலவும் நல்லது. இருக்கக் கூடிய வருமான விநியோக அமைப்பின்மீது எவ்விதத் தாக்குதலும் தொடுக்காமலேயே செலவுகளை அதிகரிக்கப் போதிய வசதி இருக்கிறது. எந்த விதத்திலும் முதலாளித்துவ அமைப்புக்குத் தொந்தரவு தராமலேயே வேலையில்லாத் திண்டாட்டப் பிரச்சினைக்குத் தீர்வு காணும் முறையில் புதிய ஏற்பாட்டுத் திட்டத்தை உருவாக்கலாம்.'[1]

போட்டி முறையை மீண்டும் கொண்டுவருதல், கட்டுப்படுத்தல் ஆகிய இரு அம்சங்களாகவும் திட்டமிடுதலைக் கருதலாம்.[2] அத்தியாவசியச் சர்வீசுகள் போட்டிக்குரியனவல்ல. அவற்றில் சமுதாயத்தைப் பாதிக்காத ஒரு கட்டுப்பாடு நிறுவப்படுவது அவசியம். அக் கட்டுப்பாடு, லாபமடிக்கும் அடிப்படையைக் கொண்ட போட்டியை நீக்கும். வேறுவிதமாகக் கூறவேண்டுமானால், குறிப்பிட்ட தொழிலின் தன்மை காரணமாக ஏகபோகம் தவிர்க்கப்பட முடியாத இடத்திலெல்லாம் அரசாங்கக் கட்டுப்பாடு அவசியமென்றே தோன்றுகிறது. ஆனால், எவ்விதப் பாதகமுமின்றிப் போட்டிச் சர்வீசுகளை அளிக்க முடியும்போது, உண்மையான போட்டிக்கு உத்தரவாதம் தர அரசு முன்வரலாம்; ஏகபோகமாக மாறிவிடத்தக்க நடைமுறைகளைத் தடுக்க, போட்டி நியாயமாக இருக்கும் என உறுதி செய்ய, பண்டங்களின் தரத்துக்கு உத்தரவாதம் தர, சம்பளம் அல்லது வேலை நிபந்தனைகளில் தொழிலாளர்களைப் பாதிக்காதபடிச் செய்ய அரசு முன்வரலாம். தொழில் சீர்கேடுகளைத் தடுத்தல், தொழில் தகராறுகளில் கட்டாய மத்தியஸ்தம் செய்தல், அவற்றில் நியாயத்தை நிலைநாட்டுதல் முதலியனவும் அரசாங்க உடைமைகளை நிறுவுதல் அல்லது செல்வத்தைப் புனர் விநியோகம் செய்ய வரி விதித்தல் அல்லது நிலத்தைப் பயன்படுத்துவதில் கட்டுப்பாடுகள் விதித்தல் ஆகியவற்றைப் போன்றவை திட்டமிடுதலின் முக்கிய அம்சங்களே.

திட்டமிடுவதெல்லாம் தனிநபர் சொத்துரிமைகளில் தீவிரத் [illegible]ப்படுத்தியவைதான். 'சொத்துரிமைகளில் கடுமையான [illegible]பாடு அல்லது அவற்றை முழுமையாக நீக்குதல் மூலமே சமுதாயத் திட்ட[illegible] சாத்தியமாகும். புத்தி நுட்பக் குறைவு

[1] Joan Robinson, 'Social[illegible] Planning', in the 'Political Quarterly.'



[2] போட்டி, நன்மை த[illegible]ம் [illegible]னியார் யுத்தம் ஆகும். மற்றவன் தோள்கள்மீது ஏறிச் செழிக்க அது வகை செய்கிறது; அது அங்கு நீடிக்கிறது. 'Equality' யில் (பக்கம் 140) டானே (Tawney) காட்டும் மேற்கோள். – Sir Henry

காரணமாகவே தன் பொருளாதார வழிமுறைகளைத் திட்டமிட நவீன சமுதாயம் தவறுகிறது என்று கருதப்படுகிறது. உண்மை என்னவென்றால், இன்றைய சமூக அமைப்பு முறையினால் பயன் பெறக்கூடிய வல்லமையும் சக்தியும் வாய்ந்த கூட்டத்தினரின் நலன்கள் தான் ஒரு தேசீய, நியாயபூர்வமான சமுதாய அமைப்புக்கு உண்மையான தடைகளாக இருக்கின்றன' என்று நீபர் (Niebuhr) கூறுகிறார்.[1]

## (vi) திட்டமிடுதலிலுள்ள சிக்கல்கள்

### வரம்புகள்

திட்டமிடுதலின் அபாயங்களும் குறைபாடுகளும் எண்ணற்றவை. முதலாவது, ஒவ்வோர் அரசும் அதன் எல்லைகளுக்குள் தான் அதை நிறைவேற்றமுடியும். எனவே, அரசுகளுக்கிடையே கூட்டுறவுக்கு நேர் - எதிராக நிற்கிறது. பலருக்கு, இன்றைய நிலையில் இந்தக் கூட்டுறவே அதிக அவசியமான ஒன்றாகப் படுகிறது. தனது 'சர்வதேசக் கண்ணோட்ட'த்தில் பெருமிதமடையும் சோஷியலிசம் கூட, இப்பொழுது உள்ளீட்டாகத் தேசீயத் தன்மைபூண்டு வருகிறது; ஏனெனில், சமதர்மச் சோதனையின் பொருட்டு, சமதர்மம் நிறுவப்படவிருக்கும் பரப்பாக உள்ள அரசை என்ன பாடுபட்டாலும் காப்பாற்ற வேண்டியிருக்கிறது.[2] புதிய பொதுவுடைமைத் தேச பக்தியை (Communist patriotism) உருவாக்கும் ருஷ்யா, இதற்காக ருஷ்யத் தந்தை நாட்டுக்குப் பழைய ஜார் கால விசுவாசத்தின் மரபுகளைப் பயன்படுத்தி வருவது இதற்கு ஒரு தெளிவான உதாரணமாகும். ஆயினும் உலகின் அவசரத்தேவை, மனித முயற்சியின் ஒவ்வோர் அம்சத்திலும் இராச்சிய எல்லைகளைக் கடந்து வருவதுதான்.

'அச்சம், பாதுகாப்பின்மை ஆகியவற்றின் விளைவுதான் திட்டமிடுதல்; பயப்பட்ட நிலையில் மனிதர்கள் செய்யக்கூடியவை அவசரக் கோலத்திலும் சீரில்லாத மனநிலையிலும் உருவானவை'[3] என்பது இரண்டாவது குறைபாடு ஆகும். அபாயத்தை, தட்டுப்பாடு அற்ற அபாயத்தை, திட்டமிடுதல் உத்தேசிக்கிறது. அது, ஜெர்மானியர்கள் கூறுவதுபோல அவசரகால, நெருக்கடிகாலச் சித்தாந்தமாகும்.

[1] 'Nature and Destiny of Man,' பக்கம் 213.

[2] போர்கெனுவ் (Borkenau) எழுதிய 'Socialism, National and International' என்ற நூலில் காண்க.

[3] Commonwealth Review—இதழில் Mitrany.

எனவே, அதற்கு ஒன்றுக்கொன்று தொடர்பான பெறுமானமே உண்டு.

கடைசியாக, அது அரசினிடத்தில் அதிகப்படியான அதிகாரக் குவியலுக்கு வகை செய்கிறது. ஒரு முறை கொடுத்த அதிகாரத்தை அவ்வளவு எளிதில் திரும்பப் பெறமுடியாது. அது வெறும் பொருளாதார அமைப்பு விஷயம் மட்டுமன்று; எளிதில் வரையறுத்துக் கொள்ளமுடியாத ஒன்று. பொருளாதாரச் சக்தி எளிதில் சமுதாயத்தின் முழு வாழ்க்கைமீதும் செலுத்தப்படும் பொதுவான அதிகாரமாக மாறிவிடுகிறது.

## திட்டமிடுதலும் சுதந்தரமும்

எல்லாத் திட்டமிடுதலிலும் உள்ள கேந்திரமான பிரச்சினையை இது கொண்டுவருகிறது. திட்டமிடுதலில் தனிநபர் சுதந்தரத்துக்கு இடமுண்டா? 'பெருமளவில் பொருளாதார—சமுதாயத் திட்டமிடுதலை முழு அளவு தனிநபர் உரிமைகளுடனும் சுதந்தரத்துடனும் இணைக்கும் முதற் பெருநாடு பிரிட்டன்' என்று 1946 அக்டோபரில் திரு. மாரிஸன் (Morrison) கூறினர். அது வெற்றிபெற முடியுமா?

இந்த வினவுக்கு எதிர்காலந்தான் விடையிறுக்கவேண்டும். ஆனால், பேராசிரியர் மான்ஹீம் (Professor Mannheim) எழுதிய 'Man and Society in an age of Reconstruction' என்னும் நூலின் விமர்சனத்திலிருந்து குறிப்பிடத்தக்கதொரு பகுதி இங்கு மேற்கோளாகக் குறிக்கத்தக்கது.[1]

'மனித சிந்தனையில் மூன்று முக்கியக் கட்டங்கள் - எதிர்பாராத கண்டுபிடிப்பு, ஆராய்ச்சி முடிவுகள், திட்டமிடுதல் ஆகியன. இதில் மூன்ருவது கட்டமாகிய திட்டமிடுதல், ஒவ்வொன்றையும் திட்டமிட்டு ஆய்ந்துகண்ட முடிவுகளிலிருந்து எழுந்த முன்னேற்றத்துடன் வருவதாகும்; அவற்றைத் திட்டமிட்டு ஒழுங்குபடுத்தி அந்த முடிவுகளுக்கிடையே உள்ள தொடர்புகளை விவேகபூர்வமாக நன்கு புரிந்துகொண்டதன்மூலம் கிடைத்த முன்னேற்றத்துடன் வருவதாகும்.' இது சுதந்தரத்துடன் இணைந்து நிற்கத்தக்கதே. ஏனெனில் சுதந்தரத்தின் உண்மையான பின்னணி, குழப்பம் என்பதைவிட இணைந்த நிலை என்று கூறலாம். 'சுதந்தரக் கருத்தைப் பிரச்சாரம் செய்வதற்குத் தனது முழுக் கவனத்தையும் இந்த விடுதலையுகம் அளிக்க முடியும். ஏனெனில், மத்திய காலங்களின் சமுதாய,

[1] The Times Literary Supplement இதழில்.

கலாச்சாரத்திலிருந்து பெற்ற பரம்பரை ஐக்கிய அடிப்படைகள்மீது அது உருவாக முடியும். எனவே, சுதந்தரத்தை நாம் தேடுகிறோம் என்றால் புதியதோர் ஐக்கியத்தையும் நாம் தேடுகிறோம் என்றாகிறது.' சமுதாயத்தின் இதர உறுப்பினர்களுடன் இணைதல், கூட்டுப் பொறுப்பு, நம் நோக்கங்கள், நடத்தை ஆகியவற்றுக்கு ஒரு பொதுவான பின்னணியை வைத்துக்கொள்ள வேண்டுவது அவசியம்.' இது சுயேச்சையான பாராளுமன்ற (Parliamentary) அமைப்புக்களின் வரம்புக்குள் கிடைக்கப்பட வேண்டும். 'சமுதாயத்தின் நுட்பமான பிரச்சினைகளுக்குத் தந்திரங்கள், வர்க்கப்போராட்டம் ஆகியவற்றால்மட்டுமே தீர்வு கண்டுவிட முடியாது. பொய்யான மாற்று வழிகள், ஜனநாயகம், திட்டமிடுதல் ஆகியவற்றை நம்புமாறு வளர்க்கப்பட்ட தலைமுறைகளுக்கு ஒரு வல்லமைமிக்க இறுதிநிலை இருக்கிறது.'

## திட்டமிடுதலும் பழைய லிபரலிசமும்

மனிதன் நீடித்து வாழவேண்டுமானால் பிற அரசுகளைச் சேர்ந்த மக்களுடன் சமாதானமாக வாழக் கற்றுக்கொள்ள வேண்டும் என்பதுபோல, தனது தனிப்பட்ட சுதந்தரத்தின் முக்கிய அம்சங்களைத் திட்டமிட்ட சமுதாயத்திலுள்ள வாழ்க்கையுடன் சமரசமாக இணைத்துக்கொள்ளவும் அவன் கற்றுக்கொள்ளவேண்டும். 'திட்டமில்லாத நிலை ஆட்சிக்குலைவும், குழப்பமும் என்றால், திட்டமிடுதல் சமுதாயத்திலுள்ள தங்குதடையற்ற சக்திகளுக்கு இம்சை புரிந்துவிடக்கூடாது' என்கிறார் மான்ஹீம் (Mannheim). பொருளாதாரத் துறையில் 'இருப்பதை இருக்கவிடு' என்னும் தலையிடாக்கொள்கை (laissez faire)யின் பழைய கருத்துக்கள் எவ்வாறு பூரணமாகச் செத்தொழிந்தன என்பது திரு. வால்டர் லிப்மனுக்கு (Walter Lippmann) நேர்ந்ததிலிருந்து தெளிவாகிறது. அவருடைய 'The New Society' என்னும் நூல், மிதவாத பாரம்பரியத்தை ஆதரித்து எழுதப்பட்டதாகும். பெருமளவில் திட்டமிடுதல் என்பது ஜனநாயகத்துடன் இருக்க இயலாது என்றும், 'படிப்படியான சமூகக் கூட்டுக்கொள்கை' கூட 'நிர்ப்பந்தக் குழு'க்களின் பிரிவுநலன்களைப் பறிப்பதில்தான் கொண்டுசெல்லும் என்றும் அவர் கூறுகிறார்; பிளவுண்ட தேசியம் நோக்கி, அதிகார-அரசியலை நோக்கி, 'முழு-யுத்த' அபாயம் நோக்கி அழைத்துச்செல்லும் என்று அவர் கூறுகிறார். எனினும் மித அரசு ஒன்று மேற்கொள்ளவேண்டும் என அவர் கருதும் பட்டியலில் பின்வருவனவெல்லாம் இருக்கின்றன. 'நுட்ப மானிடவியல், கல்வி ஆகியவற்றுக்குப் பெருமளவில் சமுதாயச்செலவு, நிலத்தில் மக்களின் தந்தைவழி உரிமையையும் இயற்கைச் செல்வாதாரங்களையும் பாதுகாத்தல், நிலத்தைப் பண்

படுத்திப் புனரமைக்கவும் வெள்ளங்களையும் வறட்சிகளையும் கட்டுப் படுத்தவும் நதிகள், துறைமுகங்கள், நெடுஞ்சாலைகள் ஆகியவற்றை அபிவிருத்தி செய்யவும், நீர் விசையைப் பெருக்கவும், தக்கவாறு பொது மராமத்துப் பணிகளை மேற்கொள்ளவும், பண்டங்கள், சர்வீசுகள் ஆகியவற்றைப் பரிமாறிக்கொள்ளவும், ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்கு அனுப்பவும் வசதிகளை நிறுவுதல், தகவலளிப்பு, கண்காணிப்பு முதலிய பிற சர்வீசுகள்மூலம் 'மார்க்கெட்' அமைப்பை உருவாக்குதல், உத்தேச நஷ்டங்கள், தொழில் நுட்ப, பொருளாதார மாறுதல் காரணமாக ஏற்படும் இழப்புகளுக்கெதிராகக் காப்புநிதிகள், ஈட்டுத் தொகைகள் வழங்குதல், ஒரு நோக்கும் சந்தடியும் உள்ள சமுதாயங்களில் இருக்கமுடியாத பொழுது போக்குக்கான வாய்ப்புக்கள் அளித்தல் போன்ற பிற வசதிகளைச் செய்தல் முதலியன.'

இவ்வாறே பேராசிரியர் ஃபிஷர் (Professor Fisher) தமது Economic Progress and Social Security என்னும் நூலில் பத்தொன் பதாம் நூற்றுண்டின் லிபரலிசத்தை வெகுவாக ஆதரித்துள்ளதை விமர்சகரொருவர்[1] குறிப்பிட்டுள்ளார். தொழிலாளர் ஓரிடத்தி லிருந்து மற்றோரிடத்துக்குச் செல்வதை ஊக்குவிக்கச் சமூகக் காப்பு நிதி, எல்லாவற்றையும் உள்ளடக்கியதாக இருக்கவேண்டும் என்று ஃபிஷரும் வாதிக்கிறார். குடும்ப அலவன்சுகள், இடம் மாறும் தொழி லாளருக்குப் 'போனசு'கள், சிறப்பான வீட்டு வசதிகள், 'உயர்தரத் திறமைகளை ஏராளமானோர் பெறத்தக்க விதத்தில்' கல்விக்கொள்கை, தொழில்மீது நேரடி வரிகள் குறைப்பு, எல்லாவற்றுக்கும் மேலாக, ஏகபோகத்தை உடைத்தெறிதல் ஆகியவற்றை அவர் வற்புறுத்து கிறார். முடிவாகக் குறிப்பிடுகையில், அதிகரித்த உற்பத்தித் திறனின் பயன்கள் அனுபவிக்கப்பட வேண்டுமாயின், வேலை வாய்ப்பு, முதலீடு ஆகியவற்றுக்காகப் பழைய துறைகளை விரிவுபடுத்தல் அல்லது புதியவற்றைத் திறப்பது முதலியவற்றுக்கு உற்பத்தி மூலாதாரங்கள் தொடர்ந்து இடம்பெயரச் செய்யவேண்டும் என்கிறார். இந்த மாற்றங்கள் எந்த அளவு எதிர்க்கப்படுகின்றனவோ, அந்த அளவு உயர்தர வாழ்க்கைத் தரத்தை அடைவது ஒத்தி வைக்கப்படுகிறது. பாதுகாப்பின்மையும் எதிர்பாரா விளைவுகளும் காரணமாகக் காட்டப்பட்டு இந்த எதிர்ப்பு நியாயப்படுத்தப்படுகிறது. ஆனாலும், எதிர்பாரா விளைவுகள் அதிகரிக்கவே செய்கின்றன. மாற்றங்களால் குறைந்த அளவுக் கஷ்டங்களே ஏற்பட்த் தக்க விதத்திலும் எதிர்ப்புகள் குறைந்த அளவே வெற்றி பெறத்தக்க விதத்திலும் நிலைமைகளை உருவாக்குதலே பொதுக்கொள்கையின்

[1] New York Times இதழில்.

பிரதான நோக்கமாக இருக்கவேண்டும். ஆர்வமிக்க ஒரு திட்டக்காரர் இதைவிட வேறென்ன கேட்கமுடியும்?

இந்த விவாதத்திலிருந்து எழும் ஒரு முக்கிய உண்மை, நவீன சமுதாயத்தில் தொழிலுக்கும் தொழிலதிபருக்கும் உள்ள பிரம்மாண்டமான முக்கியத்துவம் எனலாம். சமுதாயத்தின் பொருளாதார அம்சத்தை 'Banausia' என்று அரிஸ்டாடிலைப்போன்ற (Aristotle) அரசியல் சித்தாந்திகள் கூறினர். அலட்சியம் கலந்த வெறுப்புடன் உமிழப்பட்ட இச் சொல்லுக்கு, 'கைத்தொழில், ஒரு 'மெகானிக்'கின் வாழ்க்கையும் பழக்க வழக்கங்களும்—எனவே ஆபாசம், அபத்தம்' என்று அகராதி வரையறை செய்தது. தன்மானமுள்ள எவனும் இதை ஏற்கமாட்டான். அவர் காலத்தில் எல்லாப் பொது வாழ்க்கையின் பொருளாதார அடிப்படை உணரப்படவில்லை. எனவே அதன் பிரதிநிதிகள் வகிக்கும் முக்கியப் பங்கும் உணரப்படவில்லை. இன்று அதைவிட நம்மால் நன்கு உணர முடிகிறது. 'ஒரு சமுதாயத்தின் நடத்தையில் தொழில் மனத்தின் செல்வாக்கே மிகுதி. ஒரு பெரிய சமுதாயம் என்பது, அதன் தொழிலதிபர்கள் தம் கடமைகளைப்பற்றி வெகுவாகச் சிந்திக்கக் கூடிய சமுதாயமாகும். அற்ப சிந்தனைகள் குறைவான நடத்தை எனப் பொருள்படும்; அது சுரண்டலின் ஒரு சுருக்கமான போதை நிலையாகும். குறைவான நடத்தை என்றால் குறைந்துவரும் வாழ்க்கைத்தரம் என்று பொருள்படும்' என ஒயிட்ஹெட் (Whitehead) கூறுகிறார்.

## திட்டமிடுதலின் நிபந்தனைகள்

வெற்றிகரமான திட்டமிடுதலுக்கு இறுதியான நிபந்தனைகள் தாம் யாவை?

முதற்பெரும் நிபந்தனை, அதில் சம்பந்தப்பட்டுள்ள எதிர்பாரா விளைவுகளைப் புரிந்துகொள்வதாகும். திட்டமிடுதல் என்பது ஒரு நுட்பமான கருவி; இரு முனைகள் உள்ளன. அதன் விளைவுகள் வளைவுத்தன்மை உடையவை. அதிகமானாலோ அல்லது தவறான இடத்தில் பயன்படுத்தப்பட்டாலோ அது உற்பத்தி முறைகளை வெகுவாகப் பாதித்துவிடும்; ஸ்தம்பிதமடையச் செய்துவிடும்; மொத்தச் செல்வத்தை, அதிகரிப்பதற்குப் பதிலாகக் குறைத்துவிடும்.

இரண்டாவது, திட்டக்கருத்தாக்களை மிகக் கவனமாகத் தேர்ந்தெடுப்பதன் அவசியத்தை உணர்வதாகும். எவ்வளவு அதிகாரங்கள் அவர்களிடம் தரப்படுகின்றனவோ அவ்வளவு அவர்க

ளுடைய தவறுகளால் ஏற்படும் விளைவும் நாசகரமானதாக இருக்கும். தக்க இடத்தில் தக்க நபரை வைத்தல்—இவ்வாறு சொல்வது எளிது; நிறைவேற்றுதல்தான் கடினம். எனவே தக்காரை நியமிக்க எல்லா முயற்சியும் செய்யப்படவேண்டும்.

மூன்றாவது, தேர்தல் பிரச்சினைகளை எளிதாக்குதலாகும். வாக்காளர்கள் எளிதில் உணர்ச்சி வசப்பட்டுவிடுகின்றனர்; பிரச்சினைகள் அதற்கு அப்பாற்பட்டன எனக் கருதிவிடக்கூடும். அவ்வாறு அவை இல்லை என நாம் கருதினோமானால் அவற்றை விளக்கிக் கூறுவதில் கட்சிகள் பெரிதும் கவனத்துடன் முயலவேண்டும். பல அரசியல் பிரச்சினைகளையும் அவற்றின் முக்கிய அம்சங்களையும் எளிய மாற்று யோசனைகளாக மக்கள்முன் வைக்கமுடியும்.

நான்காவது, பரவலாக்குவதுபற்றியது. அதாவது ஒவ்வொரு பிரச்சினையையும் அதனதன் குறுகிய பரப்புக்குள் திறமையான முறையில் தீர்க்க வகைசெய்யவேண்டும். அப்போதுதான், பிரச்சினைகளைப்பற்றியும் சம்பந்தப்பட்ட நபர்களைப்பற்றியும் வாக்காளர்கள் எளிதில் தீர்மானிக்க முடியும். பரிசீலனை எந்த அளவு 'தல' ரீதியில் அமைகிறதோ அந்த அளவு குறைக்கமுடியாத பிழையின் அளவும் குறைவாக இருக்கும்; நேரடியான அனுபவத்தின் அடிப்படையில் பெற்ற அறிவின் சாத்தியக் கூறு அதிகமாக இருக்கும்.

இறுதியாக, கல்வியறிவு பெற்ற வாக்காளர்கள் இருக்க வேண்டும். இதற்குப் புத்தகப் படிப்பு என்பது அர்த்தமன்று. அதுவும் அவசியந்தானெனினும் ஒரு முடிவுக்கு வரக்கூடிய ஆற்றல், உணர்ச்சி-சொந்த விருப்புகளை ஒதுக்கி அறிவு பூர்வமாகச் செயல்படும் சக்தி, நுனிப்புல் வாதங்கள்—சுயநலம் ஆகியவற்றை ஒதுக்கிவிட்டு உண்மை காணும் திறமை—என்பது இதன் பொருள். பிறவற்றைப்போல இதையும் எளிதில் சாதித்துவிட முடியாது. ஆனால் இந்த அம்சம் இல்லாவிடில் திட்டமிடுதல் ஆற்றலில் குறைந்ததாகவோ அல்லது கொடுங்கோன்மைத்தன்மை கொண்டதாகவோ அல்லது சமுதாயத்தின் நலனுக்காகவன்றி ஒருசிலரின் நன்மைக்காக என்ற ரீதியிலோ அமைந்துவிடும்.

## (vii) சோஷியலிச அறைகூவல்

திட்டமிடுதலின் கேந்திரமான பிரச்சினை, தனிநபர் சுதந்தரத்துடன் அது இணைந்திருக்க முடிவதுபற்றியதெனச் சற்று முன்பு கூறினோம். ஆனால், இன்றைய தேவைகளைப் போதுமான அளவில் நிறைவேற்றத் திட்டமிடுதலால் முடிகிறதா என்பதுபற்றியே பலர்

அக்கறை கொள்கின்றனர்; மேலும் பொருளாதார வாழ்க்கைமீது பூரணமானதொரு கூட்டுக் கண்காணிப்பு முற்றிலும் அவசியம் எனக் கருதுகின்றனர். அவர்கள்தாம் சோஷியலிஸ்டுகள் (Socialists) ஆவார்கள்.

## சோஷியலிசமும் திட்டமிடுதலும்

திட்டத்தின் கர்த்தாவும் சமதர்மியும் சில பொதுவான உத்தேசங்களைக் கொண்டிருக்கின்றனர். விநியோகப் பிரச்சினையைப் போதிய முறையில் சமாளிக்கத் தனியார் தொழில் முயற்சிகள் தவறுகின்றன என்பதையும் ஏற்றத் தாழ்வையும் வேலையில்லாத் திண்டாட்டத்தையும் அவை உருவாக்குகின்றன என்பதையும் அவர்கள் ஒப்புக்கொள்கின்றனர். தட்டுப்பாடான காலத்தில், செல்வாதாரங்களை முறையாகப் பயன்படுத்துவதும் விரயத்தைத் தடுப்பதும் அவசியம் எனவும் அவர்கள் ஒப்புக்கொள்கின்றனர். எனவே, உற்பத்தித் திட்டமொன்றுக்குப் பொது அம்சங்களைத் தீர்மானிக்கின்றனர். அவை ஒரு திட்டமிட்ட, மிதமான சோஷியலிசத் தன்மையுடைய பொருளாதார அமைப்பைப் பெரிதும் ஒத்திருப்பவை எனலாம்.

## நீதி அல்லது திறமை

வேறுபாடு எங்கே இருக்கிறது? ஆதர்ச வேறுபாட்டில்தான் எனலாம். பொருளாதார அமைப்பு திறமையாகச் செயல்படுவதில் திட்டக் கர்த்தா பிரதானமாக அக்கறை கொள்கிறார். சமதர்மியோ எனில் அதன் நீதித் தன்மையில் அக்கறை கொள்கிறார். நமது இன்றைய அமைப்பிலுள்ள அநீதிகளை நம் திட்டப் படைப்பாளர்கள் உணர்ந்தே இருக்கின்றனர் என்பதில் ஐயமில்லை; அவ்வாறே அதன் திறமைக் குறைவான செயல்பாடு குறித்துப் பல சோஷியலிஸ்டுகள் உணர்ந்தே இருக்கின்றனர் என்பதிலும் ஐயமின்று. ஆனால், அடிப்படை அம்சத்திலுள்ள வேறுபாடு உண்மையானதென்றும் முக்கியமானதென்றும் நாம் கருதுகிறோம். சமுதாயத்தின் நலன்களைத் திட்டப் படைப்பாளர் ஊன்றிக் கவனிக்கிறார்; சோஷியலிஸ்டோ ஜனங்களின் கதியை ஊன்றிக் கவனிக்கிறார். இருவரும் ஒரு வழியில் சிறிது தூரம் சேர்ந்தே செல்லக்கூடும். ஆனால், புறப்படும் இடமும் சேருமிடமும் ஒன்றல்ல. திட்டப் படைப்பாளர் ஒரு 'பாசிஸ' (Fascist) முறைச் சர்வாதிகார அரசில்போய் நிற்கலாம்; ஒரு சோஷியலிஸ்ட் ஒரு கம்யூனிஸ்டாக முடியலாம். இவ்வகைத் தீவிரப் புள்ளிகளை அடையாமலேயே முற்றிலும் வேறுபட்ட தன்மை கொண்ட அரசுகளில் அவர்களுடைய

லட்சியங்கள் நிறைவேறலாம் ; ஒன்று அதிகாரத்துவ அரசு ; மற்றொன்று சமத்துவ சமுதாய அரசு.

இன்றைய அமைப்பின் அநீதிதான் அதன் ஃபிரெஞ்சு முன்னோடிகளான செயின்ட் சைமன் (St. Simon), ஃபூரியர், (Fourier), புருதான் (Proudhon) முதல், கார்ல் மார்க்ஸ் (Karl Marx) மற்றும் பல நாடுகளிலுள்ள அதன் பிரதிநிதிகள்வரை சோஷியலிசத்துக்கு ஆதர்சமாக, தூண்டுகோலாக விளங்கியது. நாம் முன்பே குறிப்பிட்ட கண்ணையுறுத்தும் ஏற்றத்தாழ்வுகளின் எதிர் விளைவுதான் அது. தொழில் புரட்சியின் ஆரம்ப நாட்களில் இந்த ஏற்றத்தாழ்வுகள் மிகவும் பளிச்செனத் தெரிந்தன. அன்று, சிலரைச் சுகபோகத்தில் வைக்கப் பலர் வியர்வை சிந்தினர் ; பட்டினி கிடந்தனர். இது எழுத்துக்கெழுத்து உண்மை நிலையாக இருந்தது. நிலத்தில், தொழிற்சாலையில், அரங்கத்தில், பட்டறையில் மனிதனை மனிதன் சுரண்டுவதை எதிர்த்து வெடித்த புரட்சி அது. இலாபத் தூண்டல் - சேவைத் தூண்டல் அன்று—லாப ஆசைமீது கட்டப்பட்ட பொருளாதார, சமுதாய அமைப்புக்கு எதிராக எழுந்த ஆட்சேபம் அது. ஓர் அநீதி இவ்வாறாக மனித இயற்கைக்கு விரோதமாக நீடித்துச் செயல்படுத்தப்பட்டு வந்திருக்கிறது என்ற கருத்தில் எழுந்தது அந்த எதிர்ப்பு. போட்டிக் கொள்கைக்கு அது எதிரானது ; உள்நாட்டில் நீடித்த அரை - மோதல் வெளிநாட்டில் யுத்தத்துக்கான பிரதான காரணங்களில் ஒன்றாகும் என அது கருதியது.

## சோஷியலிசத்தின் தார்மீக அம்சம்

எனவே, இன்றைய அமைப்புக்கு எதிராக எழுந்த சோஷியலிசச் சவால், பிரதானமாகத் தார்மீக ரீதியில் அமைந்ததாகும். விரயம், திறமைக் குறைவு முதலியன இரண்டாம் பட்சமானவைதான். ஒரு வர்க்கத்தின் உரிமைகளை அது உறுதி செய்வதாகும் ; அந்த வர்க்கம் எங்கும் நியாயமாக நடத்தப்பட்டதில்லை என அது பிரகடனப்படுத்தியது. இன்றைய அமைப்பு யாரைச் சார்ந்திருக்கிறதோ, அந்தத் தொழிலாளர்கள் அடங்கியதுதான் அந்த வர்க்கம். வரலாற்றில் ஒரு காலத்தில், இந்த வர்க்கம், உழைப்பாளி வர்க்கம் (Proletariat) பிரதானமாக அடிமைகளால் ஆனது ; பிறகு, அரை - சுயேச்சை அல்லது பெயரளவுக்குச் சுயேச்சையான விவசாயத் தொழிலாளர்கள் ; இறுதியாகத் தொழில் வளர்ச்சிபெற்ற நகர்ப்புறத்துத் தொழிலாளர்கள். இந்த வர்க்கத்துக்கு அதன் உழைப்பின் பயனிலிருந்து கிடைக்கும் பங்கு எப்போதும் மறுக்கப்பட்டு வந்திருக்கிறது ; உடைமை வர்க்கச் சிறுபான்மையினருக்கு இருந்த வாய்ப்புக்கள் மறுக்கப்பட்டு வந்தன ; இந்தச் சிறுபான்மை வர்க்கத்தினர்தான் சமுதாய

விவகாரங்களில் தீவிரமாகப் பங்குபெற்று வந்தனர்; அரசியல் அதிகாரம் மட்டுமிருந்து பொருளாதார அதிகாரம் இல்லாதிருப்பது பிழையும் தளைக்கட்டும் என்றுதான் கொள்ளப்படும் - இவ்வாறு சோஷியலிஸ்ட் வற்புறுத்தினர். உற்பத்திக்குத் தேவையான மூல தனத்தைச் சிலர் உடைமையாக்கித் தமது ஆதிக்கத்தின்கீழ் வைத்துக் கொள்வது, அதன்மூலம் உற்பத்தி, விநியோக அமைப்பு முழுவதை யும் தமது பிடியில் வைத்துக்கொள்வது நீடிப்பதுவரை, அதில் மாற்றம் ஏற்படாதவரை, அரசியலமைப்பு ரீதியான சீர்திருத்தமோ, அதிகார மாற்றமோ, சமூக நிலைமைகளில் அபிவிருத்திகளோ எவ்விதப் பயனையும் விளைக்கப் போவதில்லை. சமுதாய உடைமை, கண்காணிப்பு, பொது உபயோகத்துக்கான உற்பத்தி - தனியார் இலாபத்துக்காக இல்லை - செல்வத்துக்கும் வறுமைக்குமிடையேயுள்ள முரண்பாட்டை நியாயமான விநியோக ஏற்பாட்டின்மூலம் நீக்குதல், அனைவருக்கும் சமுதாயப் பாதுகாப்பு - இதுவரை எல்லாச் சோஷிய லிஸ்ட்டுகளும் சென்றனர்; ஒன்றுகவே சென்றிருக்கின்றனர்.

## சோஷியலிச வளர்ச்சி

இத்திட்டம் நிறைவேறத் தேவையானவையெல்லாம் நிறுவன அமைப்பும் பொறுமையுந்தான் என்று தோன்றும். சோஷியலிச சிந்தனையின் ஃபிரெஞ்சு, ஆங்கிலக் கருத்தோட்டங்களைப் பிரதிநிதித் துவப்படுத்தி நின்ற மரபுவழி சோஷியலிஸ்டுகள், தொழிலாளரின் இலட்சியங்களைச் சட்ட ரீதியாகச் சாத்வீக முறையில் நிறைவேற்றிவிட முடியும் என நம்பினர்; பிரதிநிதித்துவ நிறுவனங்களில் பெரும் பான்மையைப் பெறும் நிலையில், சுயேச்சையான வர்க்க பேதமற்ற ஜனநாயகத்தில் உற்பத்தி, விநியோக சாதனங்களின்மீது சமுதாயத் தின் மேலதிகாரத்தை நிறுவுதல் முடியும் எனக் கருதினர். தொழிலாளர் பாராட்டும் உரிமைகள் நியாயமானவை என்பதாலும் மிகப் பெரும்பான்மையினராக இருக்கும் உழைக்கும் மக்களை வெற்றி கொள்ள முடியும் என்ற நம்பிக்கையுடன் எதிர்த்து நிற்க இயலாது என்பதாலும், உடைமை வர்க்கம் இறுதியாகப் பணியவே தயாரா யிருக்கும் என்று அவர்கள் நம்பினர். வாக்குரிமை, தொழிற்சங்க அமைப்பு, கல்வி முதலியன இறுதியாக ஒரு சுவர்க்கத்தைப் பெற்றுத் தந்துவிட மாட்டா; எனினும் அனைவருக்கும் வசதி, நன்மைகள் ஆகியவற்றுக்குப் போதிய உத்தரவாதம் பெற்றுத்தரும். இதைவிடத் தீவிரமான அல்லது கம்யூனிச விடை என்ன என்பதைப் பின்னர்ப் பரிசீலிப்போம்.

இந்தச் சமதர்மம் தாமதமான ஆனால் ஓரளவு உறுதியான முன்னேற்றத்தை, தொழில் மயமாக்கப்பட்ட பல நாடுகளில், குறிப்பாகப் பிரிட்டன், ஃபிரான்ஸ், ஜெர்மனி, பெல்ஜியம், இத்தாலி, ஸ்காண்டிநேவியா ஆகிய நாடுகள் பெற்றன. முதல் உலக யுத்தத்துக்கு முன்னரேயே வலிமை வாய்ந்த 'தொழிலாளர்' கட்சிகள் பெரும் சீர்திருத்தத் திட்டங்களை அமல் செய்தன; சில அமைச்சரவைகளில் சோஷியலிஸ்டுகள் இடம்பெறவும் செய்தனர். ஆனால் 1945-ல் பிரிட்டன், ஒருங்கிணைந்ததொரு சோஷியலிஸ்ட் அமைச்சரவையைப் பெற்ற முதற் பெருநாடாயிற்று; அந்த அமைச்சரவை, சோஷியலிஸ்ட் மயமாக்கும் பூரணத் திட்டமொன்றை நிறைவேற்ற உறுதி கொண்டிருந்தது.

எனவே 'சட்டபூர்வ' (constitutional) சோஷியலிசத்தின் வெற்றி தோல்விகளைப்பற்றிப் பேச இது நேரமன்று. சோஷியலிசத் தன்மையூட்டப்பெற்றதொரு பொருளாதார அமைப்பைப்பற்றி, சிறிய உற்பத்தி விநியோகத் துறையில் பெருமளவு தனியார் தொழில் முயற்சிகளும் கருத்து வேறுபட, விமர்சிக்கச் சுதந்தரம் உட்பட உள்ள ஜனநாயக முறைகளும் இணைந்ததொரு அமைப்பைப் பற்றி—அவற்றின் நடைமுறை, விளைவுகள்பற்றிச் சில ஆண்டுகள் கழித்தே தீர்மானிக்க முடியும்.

## சோஷியலிசத்தின் இன்றைய பிரச்சினைகள்

உலகில் இன்று சமதர்மத்தின் பொதுவான நிலையைப்பற்றிச் சில அபிப்பிராயங்களை இங்குக் கூறுவது சாத்தியமே. முதலில் கவனிக்கப்பட வேண்டிய அம்சம், யுத்தத்தின்போது பெருமளவில் அரை - சோஷியலிசத் திட்டமிடுதல் நிறுவப்பட்டது; இது சோஷியலிசத்தின் இன்றைய நிலைக்குத் துணைசெய்தது. நோக்கம், சோஷியலிசம் அன்று; ஆனால் அதன் விளைவுகளில் அது வெகுதூரம் முன்னேறியது. யுத்தத்தி லீடுபட்ட ஒரு சமுதாயம், விரயத்தையும் தேவையையன்றி, இலாபத்தையே நோக்கமாகக் கொண்ட உற்பத்தி முறையையும் சகிக்க முடியாது; செல்வாதாரங்களும் உழைப்பும் துஷ்பிரயோகமாவதைச் சகிக்க முடியாது. சண்டை முடிந்துவிட்ட பின்பு பல தவிர்க்கமுடியாத கட்டுப்பாடுகள் தொடர்ந்து நீடித்தன; அவ்வாறு நீடித்தது தேசிய வாழ்க்கையின் நிரந்தரமான மாதிரியாக இணைக்கப்பட்ட வழியை அமைத்தது.

சோஷியலிசம் நடைமுறைச் சாத்தியமற்றது என்பது பழைய ஆட்சேபம்; யுத்தகாலக் கட்டுப்பாடுகளின் வெற்றி இந்த ஆட்சேபத்தை நீக்கியது. எனினும் அதிகச் செலவு என்னும் ஆட்சேபத்தை

அது நீக்கவில்லை. யுத்த காலத்தில் விலைவாசி ஒரு சாதாரண, சிறிய அம்சம்; சமாதான காலத்திலோ அது எல்லா முக்கியத்துவமும் உடையது. எல்லா வகையான பொருள்களுக்கும் தட்டுப்பாடு நிலவும் ஒரு வெற்றுலகம் நமது சமுதாயவுடைமை உற்பத்தி முறையை ஏற்றுக்கொள்ள இன்னும் தயாராகவே இருக்கிறது; ஆனால் இதைவிடச் சாதாரண காலங்களில் பிற பொருளாதார அமைப்பு முறைகளுடன் போட்டிப் பிரச்சினை இன்னும் அப்படியே இருக்கிறது. மற்றோர் ஆட்சேபம், பிரம்மாண்டமான அதிகாரவர்க்கம் உருவாக்கப்படுவதாகும்; மிகு செலவுக்கு வகை செய்வதாகப் பெரும் பாலும் மந்த கதியில் இயங்குவதாக, தானேமுடிந்த முடிவு - தான் ஒரு கருவிதானே தவிர வேறில்லை என்று நினைக்க விரும்பும் அதிகார வர்க்கம் உருவாக்கப்படுவதாகும். முன்னைய அத்தியாயமொன்றில் விரிவாக இதுபற்றிப் பரிசீலிக்கப்பட்டிருக்கிறது. எனவே மீண்டும் இப் பிரச்சினைக்குப் போகவேண்டியதில்லை; ஆனால் அது இன்றும் ஒரு பிரச்சினையாக இருக்கிறது என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

மூன்றாவது அம்சம், தொழிலாளி - முதலாளி உறவுப் பிரச்சினைக்குச் சோஷியலிசம் உண்மையில் தீர்வு காணவில்லை என்பதாகும். இப்பொழுது சமுதாயமே முதலாளியின் இடத்தைப் பெற்றிருக்கிறது என்பது உண்மையே; இலாப வேட்டையையே குறிக்கோளாகக் கொண்ட ஒரு தனிநபரோ அல்லது ஒரு கம்பெனியோ அல்ல. ஆனால் இதுவே திருப்திகரமான வேலை நிலைமைகளுக்கோ அல்லது போதிய ஊதியத்துக்கோ உத்தரவாதம் அளிப்பதாகிவிடாது. அரசாங்க ஊழியர்களின் வேலை நிறுத்தங்கள் நடைபெற்றுள்ளன. தொழில் உற்பத்தித் துறையில் தூய்மையான ஜனநாயகத்தை நிறுவும் பிரச்சினை இன்னும் இருக்கத்தான் செய்கிறது. சமுதாய உடைமையாக்கப்பட்ட அமைப்பு இனிதாகவும் திறமையாகவும் நடைபெறும்போது இதற்குத் தீர்வுகாண முடியும்.

நான்காவது, திறமைக்கோ அதுபோன்ற நாணயத்துக்கோ சமதர்மம் உத்தரவாதம் அளிக்கவில்லை என்பதாகும். இங்குப் பெர்னார்ட் ஷா (Bernard Shaw)வின் கருத்து குறிப்பிடத் தக்கதாகும். 'சோஷியலிச அரசு ஊழல்களுக்கு அப்பாற்பட்டது என்று பல சோஷியலிஸ்டுகள் நம்புகின்றனர். சோஷியலிச அரசாங்கமல்லாத ஒன்றைவிட அது ஊழல் அதிகமுடையதாகவே இருக்கும்; விவசாயம் தொழில் உற்பத்தி போன்றவற்றைத் தனியே விட்டு விடுவதற்குப் பதிலாக அவற்றை அபிவிருத்தி செய்ய அரசாங்கம் அதிகாரத்தைப் பயன்படுத்துகிறது. மற்றதோவெனில், போலீசுத் துறைப் பணிகள், மற்றும் வர்த்தக ரீதியான இலாபங்களைத் தரமுடியாத

தன்மையுள்ள அத்தியாவசியச் சர்வீசுகள் அல்லது தனியார் மூல தனச் செல்வாதாரங்களுக்கு அப்பாற்பட்டவை—ஆகியவற்றை நிறை வேற்றுவதுடன் அமைகிறது'. அரசாங்க அதிகாரமும் தலையீடும் இந்த அளவு பெருமளவில் விரிவாக்கப்படுவது அவற்றின் சாத்திய பூர்வ துஷ்பிரயோகத்தையும் தவிர்க்க முடியாதபடி விரிவுபடுத்தக் கூடும்.

இறுதியாகத் திட்டமிடுதலின் இதர முறைகளைவிடச் சோஷிய லிசம் சுதந்தரப் பிரச்சினையையும் எதிர்க்க வேண்டியிருக்கிறது. திட்ட மிடுதல், எதிர்பாரா விளைவுகளையும் உள்ளடக்கியதுதானே. அங்குத் திறமைதான், நபர் அல்ல முக்கிய அம்சம். ஆனால் சோஷியலிசமோ பிரச்சினையை அலட்சியப்படுத்துவதில்லை. தன் கட்டுப்பாடுகள் காரணமாக ஒரு தொழிலாளி ஒரு சுயேச்சையுள்ள மனிதனைவிடக் கீழாக ஆகிவிடமாட்டான் என்று அவனுக்கு நிரூபிக்க முடிய வேண்டும். இல்லாவிடில், நடைமுறை விளைவுகள் எப்படியிருப்பினும் அடிப்படை இலட்சியங்களை அது காட்டிக் கொடுப்பதாக ஆகி விடுகிறது; அவற்றின் அத்தியாவசிய நோக்கத்தை அடையத் தவறி விடுகிறது. 'சோஷியலிசம் என்றால் நெருங்கிப் பிணைந்த நான்கு அம்சங்கள் கொண்டதாகும்-வர்க்க வேறுபாடுகளை மறுக்கக் கூடியதும் நீக்கக்கூடியதும் ஆன மனிதாபிமானச் சகோதரத்துவம், அண்டை அயலாரைவிடப் பணக்காரராகவோ அல்லது ஏழைகளாகவோ இருந்து சமத்துவமாக அவர்களுடன் கலந்து உறவாடமுடியாத நிலை நீங்கியதொரு சமுதாய அமைப்பு, மிக முக்கிய உற்பத்திச் சாதனங்கள் அனைத்தையும் கூட்டு உடைமையாக்கிக் கூட்டாகப் பயன்படுத்துதல், தத்தமக்குரிய திறமைகளுக்கேற்ப ஒருவருக் கொருவர் சேவை செய்யக் குடிமக்கள் அனைவருக்கும் உள்ள கடமை— ஆகியன இந் நான்கு அம்சங்கள்' என்று கோல் (Cole) கூறுகிறார்.

## விட்டுக்கொடுத்தல் பிரச்சினைகள்

கடைசியாக, எப்படியும், (எந்தக் கண்ணோட்டத்திலிருந்து பார்த் தாலும்) அரசுக்கும் பொருளாதார அமைப்பை உருவாக்குவோருக்கு மிடையேயுள்ள உறவு, சுதந்தர சமுதாயத்தில், இடைவிடாத, நுட்பமான விட்டுக்கொடுத்தல் அம்சமாகவே ஓரளவுக்கு இருக்கும். ஒயிட்ஹெட் (Whitehead) குறிப்பிடுவது போன்று 'ஒருபுறம் தொழில், சுதந்தரத்துக்காக மன்றாடும்; மறுபுறம் கூட்டுறவு வேண்டும் எனக் கூறும்.' இது அந்தப் போக்குகளில் ஒன்றிலிருந்து மற்றொன்றுக்கு இடைவிடாது தாண்டிச் சென்றுகொண்டே இருக்கும். ஒருநாள், அந்நியப் போட்டியிலிருந்து பாதுகாப்பு வேண்டுமென

வற்புறுத்துகிறது. அல்லது, சில போட்டி அமைப்புக்களின் நியாய மற்ற போட்டியிலிருந்து பாதுகாப்பு வேண்டுமெனக் கூறும். அடுத்து எந்தவிதத் தலையீடும் கூடாது எனக் கூக்குரலிடும். ஆனால் அரசோ, ஒரு சமநிலையைப் பாதுகாக்க வேண்டும். அது அதிகமாக அதிகாரப் பிரயோகத்தையும் செய்யக்கூடாது; ஆனால் எல்லா மூலதனப் பிரயோகமும் பொது நன்மைக்கே என்ற உண்மையைப் பொருளா தார நடைமுறைக்குள் கொண்டுவர வேண்டும். ஃபிராங்க்ஃபர்ட்டர் (Frankfurter) கூறுவதைப்போல, இது ஒரு பொருளாதார அம்சம் மட்டுமன்று. 'அரசாங்கத்தை நம்பாது அதற்குப் பாரமாகவும் இருக்கும் தன்மை, உணர்வு பூர்வமானதோர் அரசியல் சிந்தாந்த மின்மையையே காட்டுகிறது. அரசுக்கும் சமுதாயத்துக்கு மிடையே யான உள்ளீட்டுத் தொடர்புபற்றிய தீர்க்கப்படாத உள் - மோதலை அது வெளிப்படுத்துகிறது.'

# 14. சுதந்தரமும், ஜனநாயகமும் இல்லாத அரசு

தனியாள் சுதந்தரத்தைக் காப்பாற்றியாக வேண்டும் என்ற அனுமானத்தின் பேரில் இதுவரை எழுதினோம். ஆனால் எல்லோரும் இந்த அனுமானத்தை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். 'சுதந்தரம் நல்லதென்று எவர் சொன்னார்?' எனத் தமது சொற்பொழிவொன்றின் இறுதியில் சீலி (Seeley) அவர்கள் கேட்டார். 'விடுதலை என்பது ஒரு கனவு. அதுவும் நல்ல கனவுகூட இல்லை'[1] என்று கூறி, அதிகாரத்துவ (authoritarian) அரசு இனிச் சுதந்தரமாக இருக்கப் போகும் அரசுக்குச் சவால் விடுகிறது.

## (i) கம்யூனிசத்தின் அதிகாரத்துவக் கொள்கை

### பூரணவாழ்க்கை வழியாகக் கம்யூனிசம்

இரண்டு வகை அமைப்புக்களில் அதிகாரத்துவம் இருப்பதை நாம் அறிவோம். ஒன்று ருஷ்யாவில் உள்ள கம்யூனிச அமைப்பு; மற்றொன்று இத்தாலி, ஜெர்மனி, போர்ச்சுகல், ஸ்பெயின் போன்ற நாடுகளில் காணப்படும் பாசிச அமைப்பு.[2] இவ்விரு அமைப்புக் களுக்கும் பல விஷயங்கள் பொதுவானவை. ஆனால் அவைகளின் ஆரம்பக்கட்டம் மிகவும் வேறுபட்டதாகும். வரலாற்று ரீதியிலும், கோட்பாட்டு ரீதியிலும் சோஷியலிசத்தில் வேரூன்றியது கம்யூனிசம்.

[1] முதன் முதலில் இச் சொற்றொடரை, பிஸ்மார்க் (Bismarck)கின் சமகாலத்தவரான மார்ஷல் வான் மோல்ட்கே (Marshall Von Moltke) எப்பொழுதும் நிலைத்து நிற்கும் அமைதியைக் குறிக்கும்படி உபயோகித்தார்.

[2] தென் அமெரிக்காவின் குடியரசுகள் பலவற்றையும் இவைகளோடு சேர்த்துக்கொள்ள வேண்டும். இதே பாதையில் மார்ஷல் பெடய்ன் (Marshal Petain) ஆட்சியிலிருந்த ஃபிரான்சும் சென்றது. கமால் பாஷா (Kemal Pasha)வின் துருக்கியுங்கூட இவ்வழியே சென்றது. ஆனால் பல சமனப்படுத்தும் வேறுபாடுகளோடு இவை இருந்தன.

நிலைநாட்டப்பட்ட சித்தாந்தத் தொகுதிக்கும்,போக்குகளுக்குமிடையே யுள்ள வேறுபாடே இவை இரண்டிற்குமுள்ள முக்கிய வேறுபாடு என்று விளக்கம் கூறப்படுகிறது. கம்யூனிசமானது ஒரு பூரணக் கோட்பாட்டு அமைப்பும், வாழ்க்கை முறையுமாகும்.' கம்யூனிசம் ஓர் ஆதிக்கத் தன்மையுள்ள சமயம் ஆகும். மனித வாழ்க்கையின் இரகசியத்தை மனிதனுக்கு வெளிப்படுத்துவதாக அது கூறுகிறது. வாழ்க்கையின் எல்லா அடிப்படைப் பிரச்சினைகளுக்கும் பதிலளிப்ப தாகவும் கூறுகிறது.'[1] எல்லோருக்கும் தெரிந்தபடி, விசுவாசத்தைக் கோரக்கூடிய, வேறு எந்த மத அமைப்போடும் பொருந்தாது என்று அதன் தலைவர்கள்—(அதன் உயர் மத குருக்கள்) கூறுகிறார்கள். எல்லா மார்க்சீய வாதிகளாலும் (Marxists) விடாது பேசுப்படுவது நாத்திகம் (atheism) ஆகும். இது அதன் சமுதாய அமைப்பினால் ஏற்பட்ட விளைவன்று. ஆனால், இது அதன் கொள்கையாகவும் துவக்கமாகவும் கொள்ளப்படுகிறது. 'மார்க்ஸ் (Marx) ஒரு கம்யூனிஸ்டாக மாறுவதற்கு முன்பே நாத்திகராக இருந்தார்' என்று ஒரே சொல்லில் சொல்லலாம். அவரது கம்யூனிசம் பொருளாதாரத்தைச் சார்ந்ததன்று. ஆனால், அப்பாலைத் தத்துவ ரீதியிலும் (metaphysical), தத்துவ (Philosophical) அடிப்படையிலு மாக அமைந்ததே அவரது கம்யூனிசத் தத்துவம். தனியார் சொத் தினால் மனிதன் தன்னிடமிருந்தும், தன் வேலையினிடமிருந்தும் பிரிக்கப்படுகிறான். தன்னுடைய சொந்த சாரத்தைப் புகுத்திய கடவுட் கருத்தினாலும், மதத்தினாலும் அவன் தன்னிடமிருந்தே பிரிக்கப்படுகிறான்.'

'தனியார் சொத்துரிமையைக் கம்யூனிசம் நீக்கி விடுவதால் மானிட வாழ்க்கைக்கு மனிதன் திரும்பியதை அது குறிக்கும். கம்யூனிசத் தத்துவத்தின் மீட்சியானது அதனோடு இணைந்த நாத்திகம் என்னும் மத மீட்பையும் குறிக்கும்.'[2]

மார்க்சீயக் கம்யூனிசத் தத்துவத்தின் சித்தாந்தத்தையும், சர்வ வியாபகத் தன்மையையும் நாம் வலியுறுத்துவது, அந்த நம்பிக்கைக்கு அது கேந்திரமானது என்பதாலும், அதைப் புரிந்துகொள்வதற்கு அவசியம் என்பதாலுந்தான். நாம் அதன் போதனையைப் பல கூறுகளாகப் பகுக்கலாம். மக்களில் சிலர் அவற்றில் சிலவற்றை ஒப்புக்கொள்ளக்கூடும். சிலர் அவற்றை ஒப்புக்கொள்ளாது, வேறு கூறுகளை ஒப்புக்கொள்ளக்கூடும். ஆனால், ஒரு மார்க்சீயவாதிக்கு அவையெல்லாம் என்றும் இணைந்துள்ள முழுமை ஒன்றின் பாகங்

[1] லாஸ்கி (Laski) அவர்களின் 'Communism' என்ற நூலிலிருந்து.

[2] கார்னு (Cornu) எழுதிய Karl Marx லிருந்து.

களாகவே தோன்றுகின்றன. அவற்றில் ஏதாவது ஒன்றைத் தேர்ந்தெடுப்பது என்பது அவருக்கில்லை. ஒன்று முழுவதையும் ஏற்றுக்கொள்ள வேண்டும்; இல்லை, முழுவதாக விட்டுவிட வேண்டும்.

## மார்க்சீயத்தின் அடிப்படைகள்

மார்க்சீயத்தில் நான்கு முக்கிய அம்சங்களாக ஆய்வாளர்கள் பிரித்திருக்கின்றனர்—வரலாற்றுத் தத்துவம், சமூக வளர்ச்சிக் கோட்பாடு, புரட்சிகரமான பிரச்சார தந்திரம், பொருளாதாரக் கோட்பாடு ஆகியவையே இவை.[1] கடைசியாகச் சொல்லப்பட்டதை விட்டு விடலாம். ஏனெனில், அதன் மத்திய தத்துவமாகிய உழைப்பளவைக் கூலிக்கோட்பாட்டை (Labour Theory of Value) இப்பொழுது எவரும் ஆதரிப்பதில்லை.

முதல் மூன்றும் அரசியல்—சமூகக் கம்யூனிசத் தத்துவத்தை உருவாக்குவனவாக இருக்கின்றன. வரலாற்றை உருவாக்கிய சக்திகளுள் தலையான சக்தி பொருளாதாரச் சக்தி என்ற அடிப்படையான நம்பிக்கையின்மீது இது அமைந்திருக்கின்றது. பொருளாதாரச் சக்திமாத்திரம் இதை ஆக்குகிறது என்று சொல்லாமல் மற்றெல்லாச் சக்திகளையும்விட முக்கியமானதாக இருப்பதால் இது பிரதம காரணமாக ஆகிறது. இது இவ்வாறிருப்பதால், ஒரு குறிப்பிட்ட காலத்தில் நிலவும் பொருளாதார உற்பத்தி முறையும், அத்துடன் சேர்ந்த சொத்து முறையும் எந்தச் சமுதாயத்திலும் முக்கியமான காரணியாகும். ஒரு சமுதாயத்தின் கொள்கைகளையும், பிரதான கருத்துக்களையும் சொத்து ஆக்கித் தருகிறது. இவைகள் அந்தச் சமுதாயத்தில் மனிதரின் இடத்தை (அந்தஸ்தை) நிர்ணயிக்கின்றன. ஆகவே 'வர்க்க அந்தஸ்தினால் ஆக்கப்பெற்றும், அழிக்கப்பெற்றும் உள்ள அனுபவங்களின் வாயிலாக மனிதர்கள் சிந்திக்கவும், செயலாற்றவும் செய்கிறார்கள்.' 'அன்றாட வாழ்க்கைக்கான அவர்களின் சமூக உற்பத்தியின்போது, மனிதர்கள் சில உறவுகளை ஏற்படுத்திக்கொள்கிறார்கள். இந்த உறவுகள் அவர்களது விருப்பாற்றலுக்கு அப்பாற்பட்டதாகவும், தவிர்க்க முடியாததாகவும், நிர்ணயிக்கப்பட்டதாகவும் இருக்கின்றன. இந்த உற்பத்தி உறவுகள், பொருள் உற்பத்திச் சக்திகளின் வளர்ச்சியோடு ஒத்திருக்கின்றன. இந்த உறவுகளின் மொத்தந்தான் சமுதாயத்தின் பொருளாதாரக் கட்டமைப்பு ஆகிறது. இந்த உண்மையான அஸ்திவாரத்தின்மீதுதான் நீதி, அரசியல்

[1] ஹூக் (Hook) கின் 'Towards the Understanding of Karl Marx,' லாஸ்கி (Laski) யின் 'Communism', லிண்ட்சே (Lindsay) யின் 'Karl Marx's Capital' என்ற நூல்களைக் காண்க.

ஆகிய மேல்மாடிகள் எழுந்திருக்கின்றன. சில நிர்ணயிக்கப்பட்ட சமூக உணர்வு முறைகள் இதனோடு ஒத்தவையாக இருக்கின்றன.'[1] 'வரலாற்று வளர்ச்சியின் மகத்தான விதியை முதன்முதலில் கண்டு பிடித்தவர் மார்க்ஸ் ஆவர். இந்த விதியின்படிதான், அரசியல், சமயம், தத்துவம், கொள்கைகள் ஆகிய துறைகளில் நடைபெற்ற வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த போராட்டங்கள், சமூக வர்க்கங் களால் நிகழ்த்தப்பெற்ற போராட்டங்களைச் சற்றேறக்குறைய வெளியிடுவதாகும்' என்று மார்க்சின் சீடரான எங்கல்ஸ் (Engels) எழுதினர்.

## வரலாற்றின் பொருளாதார விளக்கம்

'வரலாற்றின் பொருளாதார விளக்கம்' என்று அழைக்கப்படும் தத்துவம் உண்மையில் மார்க்சீயத்தின் மிக உறுதியான பகுதி என்று பல வழிகளிலும் கூறலாம். வரலாற்று ஆய்வுக்குள்ளாக வரலாற்று ஆசிரியர்கள் கொண்டுவராமல் விட்ட எத்தனையோ புதிய காரணிகளை இது கொண்டுவந்தது. மார்க்சுக்குப் பிறகு எந்த வரலாற்று ஆசிரியனும் ஒரு நிகழ்ச்சியின் பொருளாதாரக் காரணங் களை விட்டுவிடத் துணிந்ததில்லை. அவை மேலெழுந்தவாரியாகத் தெரியாவிட்டாலுங்கூட அவற்றை வரலாற்று ஆசிரியன் ஒதுக்கத் துணிவதில்லை. பொருளாதார நன்மைகளை நிலைநிறுத்துவதற்காக அல்லது பெறுவதற்காக உள்ள மனிதரின் விருப்பு அவரது சிந்தனையை எந்த அளவுக்குப் பாதிக்கிறது என்பதை அவர் ஆராய முற்படுவார். பல தத்துவங்கள், நிறுவனங்கள் ஆகியவற்றின் ஆதாரம் பொருளாதாரக் கற்பனை நினைவுகளாக எந்த அளவில் இருக்கிறது என்றும் பார்ப்பார். அவர் இதற்காக மற்ற காரணிகளை ஒதுக்கவோ அல்லது அவர்களின் உண்மையை மறுக்கவோ மாட்டார். மார்க்ஸைக் காட்டிலும் அதிகமாக இதை யாரும் செய்ய முடியாது. அவரைப் பின்பற்றும் சிலர், இதுதான் மார்க்ஸ் கூறிய கருத்து என்று வரலாற்று நிர்ணயக் கோட்பாடுபற்றிக் கூறியதைக் கேட்ட மார்க்ஸ், 'அப்படியானல் நான் ஒரு மார்க்சீய வாதியல்லேன்' என்று கூறியதாகச் சொல்லப்படுகிறது.

வரலாற்றுப் பிரச்சினைகளுக்கு வரலாற்றின் பொருளாதார விளக்கம் மிகுந்த பயனளிக்கக்கூடிய ஒரு முறையாகும். வரலாற்றின் இருண்ட நிகழ்ச்சிகளை இது வெட்ட வெளிச்சமாக்கியிருக்கிறது. பல சிக்கல்களையும் தீர்த்திருக்கிறது. எல்லாத் தத்துவங்களையும் போல இதையும் மிகுந்த எச்சரிக்கையோடு பயன்படுத்தவேண்டும்.

[1] 'Critique of Political Economy', 1859.

அது வரலாற்று ஆசிரியனுக்குச் சேவை செய்யும் பணியாளாக இருக்கலாமேயொழிய அவனது எஜமானுகிவிடக் கூடாது.

## அரசும் பொருளாதார அதிகாரமும்

பொருளாதார அஸ்திவாரத்தின்மீது கட்டப்பட்டிருக்கும் அரசியல் கட்டமைப்பு என்று மார்க்ஸ் கூறியதற்கு வருவோம். 'பொருளாதார அதிகாரம் பெற்றவர்கள் அரசைக் கட்டுப்படுத்துவார்கள்' என்பது இதிலிருந்து பெறப்படுகிறது.[1] 'தனியாக ஒழுங்குறுத்தப்பட்ட கட்டாயப்படுத்தும் பொது அதிகாரமே அரசாகும். 'அரசாங்கத்தைக் கட்டுப்பாடு செய்யும் தொகுதியின் முடிவுகளை அமலாக்கவே அது இருக்கிறது'. சமுதாயத்தின் உடைமை முறையைக் கட்டுப்பாடு செய்வதால் இவ்வாறு செய்கிறது. இந்த முறையைப் பூரணமாக நிலைக்கச் செய்வதே அதன் நோக்கமாகும். சொத்தில்லாதவர்களின் தாக்குதல்களிலிருந்து இதைக் காப்பாற்றுவதும் அதன் நோக்கமாகும். ஏனெனில், சொத்தில்லாதவர்கள் இந்த முறையைத் தங்களுக்கு அனுகூலமாக மாற்றிக்கொள்ள விரும்பக்கூடும். அத்துடன் சொத்துடைமை அளிக்கும் எல்லாச் சமூக, அரசியல் தனியுரிமைகளையும் காத்துக்கொள்வதும் இதன் நோக்கமாகும். விவசாய வாழ்க்கை வாழ்ந்த பழைய நாட்களில் நிலச் சொந்தக்காரர்கள் அரசைக் கட்டுப்படுத்தி வந்தார்கள். இயந்திரத் தொழில் காலத்தில் அப்படிக் கட்டுப்படுத்துபவர்கள் முதலின் சொந்தக்காரர்களாவர். இவர்களைப் பூர்ஷுவாக்கள் (Bourgeois) அல்லது நகரங்களில் வசிக்கும் மத்தியதர வர்க்கம் என்று அழைக்கிறார்கள். இந்தப் பூர்ஷுவா முதலாளியும், அவரைச் சார்ந்தவர்களுந்தான் தங்கள் உண்மையான அதிகார ஏகபோகத்தைக் காத்துக்கொள்ளும் வகையில் தற்கால அரசை அமைக்கிறார்கள். பொருளாதார வலிமைநிலை மாருமல் இருக்கும்வரை அரசியல் சலுகைகளைத் துணிவாக அனுபவித்துக்கொள்ளலாம்.

## வர்க்கப் போராட்டம்

சமூக - பொருளாதார வர்க்கங்களுக்கிடையே நடைபெறும் போராட்டமே அரசியலாகும். உற்பத்திமுறை மாறும்போது புதிய

[1] 'நிலச் சொந்தக்காரர்கள், முதலாளிகள், அரசின் சுழலும் செல்வத்தின் சொந்தக்காரர்கள் ஆகியவர்களின் நலன்களைக் கருதாது, பழமை விரும்பும் அல்லது சோஷியலிஸ்ட், அல்லது லிபரல் அல்லது பொது உடைமை ஆகிய எந்த அரசாங்க முறையும் ஒரு லிபரல் ஜனநாயக அரசிற்குள் அரசாங்கத்தை அமைக்க முடியும் என நினைப்பது ஒரு மாயையேயாகும்' என்று 'Forward from Liberalism' என்ற தமது நூலில் ஸ்பெண்டர் (Spender) எழுதுகிருர்.

முறையின் ஆதரவாளர்கள் பழைய முறையினரைத் தள்ளி ஒதுக்கி வைக்கின்றனர். அதே சமயத்தில், அதிகாரத்திலுள்ள வர்க்கமானது உடைமை பறிக்கப்பட்டவர்கள் அல்லது பாட்டாளி மக்களுக்கு எதிராகத் தங்களது நிலையைக் காத்துக்கொள்ள விழைகிருர்கள். 'வர்க்கப் போராட்டம் என்பது வரலாறு கண்ட உண்மையாகும். இது நமது முறையின் இயல்பான தன்மையாகும். இதற்கு ஒருவரும் வக்காலத்து வாங்க வேண்டியதில்லை. இதை மறுப்பது வெறும் வீண் வேலையே. தாங்கள் வைத்திருப்பதைச் சுயநலத்தோடு வைத்துக்கொள்ளும் நபர்களையே இதற்குரிய முழுப் பொறுப்பும் சாரும்' என்று மார்க்ஸ் கூறுகிருர். 'சிறுபான்மையானது நாகரிகத்தையும், அதன் பலன்களையும் பெரும்பான்மையோடு பகிர்ந்துகொள்ள மறுப்பதே இன்றைய சமுதாயத்தின் புற்று நோயாகும்' என்று லீயோனுர்டு உல்ப் (Leonard Wolff) கூறிய சொற்களை மார்க்ஸ் அப்படியே எதிரொலித்திருக்கக்கூடும்.

ஆகவே, வர்க்கப் போராட்டத்தின் உண்மைநிலை கம்யூனிசத் தத்துவத்திற்கு ஆதாரமானது. கம்யூனிசத் தத்துவத்தின்படி வர்க்கம் என்பது எது? ஒரு தொழில் புரியும் தொகுதியன்று அது. சமுதாயத்தின் பொது நோக்கத்திற்காக ஒத்துழைக்கும் ஒரு சமுதாயக்கூறும் அன்று. வர்க்கம் என்பது பொதுவான நோக்கங்களை ஒப்புக்கொள்வதில்லை. அது ஏனைய வர்க்கங்களின் பொருளாதார நலன்களுக்கு விரோதமாகப் பொதுவான பொருளாதார அக்கறை கொண்டிருக்கும் தன்மையுடையதாகும். 'அது சுதந்தரமான ஒரு தொகுதியாகும். அது பொது நன்மைக்குரிய பொதுக் காரணமிருப்பதை ஒப்புக்கொள்வதில்லை. வர்க்கப் போராட்டத்தின் நாடு அல்லது சமயத்தோடு உள்ள தொடர்புகளைக் கருதாது 'தனியாக்கிய' கருத்தை வெளியிட்டது மார்க்ஸின் மேதைத் தன்மையால் எழுந்தது இது' என்று மாரிடெயின் (Maritain) கூறுகிருர்.

வர்க்கப்பற்றின் பிரதானத் தன்மையை எது உண்டாக்குகிறது? ஒரு வகையில், தாழ்ந்த கூலிகளும், குறைந்து செல்லும் வாழ்க்கைத் தரமும், ஏனைய வளம்மிக்க வர்க்கங்களினிடமிருந்து பிரிந்திருக்கும் பொதுவான உணர்ச்சியும் காரணமாக இருக்கின்றது. மற்ருெரு வகையில் ஒழுங்காக அமைக்கப்பட்ட கட்சிகள் இருப்பதனுலும் இது நேர்கிறது. 'வர்க்க உணர்ச்சிக்குத் தடையாக உள்ள சமூக—உளவியல் சார்ந்த இடையூறுகளை நீக்கிவிடும் செயலாண்மை நிலையங்களே' கட்சிகளாகும். இன்ஞெரு வகையில் அரசும், மற்றைய தொகுதிகளும் பாட்டாளி மக்களின் நலன்களில் காட்டும் அக்கறையை எதிர்ப்பதும் ஒரு காரணமாகும்.

வர்க்க அடிப்படையின் புறத்தே பிறந்த கூரான உணர்ச்சி மார்க்சியத்தின் வெற்றிக்கு அத்தியாவசியத் தேவையாகும். பாட்டாளி மக்களின் பொதுவான இன்னல்கள், பொதுவான இலட்சியம், அவர்களது இறுதி வெற்றி ஆகியவைபற்றி, உலக மெங்கணும் உள்ள பாட்டாளி மக்கள் அதிகமாக அறியும்படி என்னென்ன செய்யவேண்டுமோ, அவ்வளவையும் செய்யவேண்டும். 'பூமியிலே சபிக்கப்பட்டவர்கள்' என்ற உங்கள் பொதுவான தலைவிதி உண்டாக்கியது தவிர மற்றெல்லாத் தடைகளையும் தாண்டி 'உலகத்தின் பாட்டாளி மக்களே ஒன்றுபடுங்கள்'. ஒவ்வொரு மனித நடவடிக்கைத் துறையிலும் வர்க்க உணர்ச்சி புகுத்தப்படவேண்டும் அல்லது வலியுறுத்தப்படவேண்டும். இது வெறும் பாட்டாளி மக்களுக்கு மாத்திரமன்று. ஏனெனில், மற்ற வர்க்கங்கள் எவ்வளவுக் கெவ்வளவு வர்க்க உணர்ச்சி பெற்றிருக்கின்றனவோ, அவ்வளவுக் கவ்வளவு பாட்டாளிகளும் வர்க்க உணர்ச்சி பெறுவார்கள். இப்படியாக 'ஒவ்வொரு வர்க்கமும் மற்றவர்களுக்குச் சிரமம் தரும் வகையில் தன் இலட்சியங்களையும், வேலைத் திட்டங்களையும் வளர்க் கின்றது. தன் கோரிக்கைகளுக்கு உகந்த மாதிரி, தத்துவங்களை யும், போக்குகளையும் வளர்க்கின்றது. இவைகளை ஆதரிக்கின்ற வகையில் விவரங்களையும் தேர்ந்தெடுத்துக்கொள்கிறது.' கொடுக்கப் பட்ட ஒரு காலத்தில் எந்த நாட்டிலும் ஆதிக்கம் பெற்றிருக்கும் பொருளாதார வர்க்கத்தின் இலட்சியங்களும், கலாச்சாரமும் அந் நாட்டின் பிரதானமாக இருக்கும்.

## பாட்டாளி மக்களின் சர்வாதிகாரம்

வாழ்க்கையை 'வர்க்க' அடிப்படையில் விளக்கம் தருவது மார்க்சீய முடிவுகளை ஏற்றுக்கொள்ளாமலேயே ஒப்புக்கொள்ளக் கூடியது என்பதைக் கவனித்திருக்க முடியும் பாட்டாளி வர்க்கம் மற்ற வர்க்கங்களை ஒதுக்கித் தள்ளிவிட்டு, ஆதிக்கம்பெறும் என்ற கூற்றுதான் குறிப்பாக மார்க்ஸ் இதில் சேர்த்ததாகும். இதனோடு இதை அடையும் வழிகளும் மார்க்ஸால் சேர்க்கப்பட்டவையாகும்.

அமைதியாக இந்த மாற்றம் ஏற்படவே முடியாது இது சோஷிய லிசத்தின் மாயையாகும். 'எந்த வர்க்கமும் தன் அதிகாரத்தைத் தானகவே விட்டுக்கொடுக்காது என்ற முடிவுக்கு வரும்படித் தூண்டப்பட்டேன். உற்பத்தி மூலங்கள் தனியார் உடைமையாக இருப்பதானது வர்க்கங்கள் தங்கள் எல்லைக்கோடுகளை மீறவேண்டும் என்ற ஜனநாயகக் கருத்தைச் செயல்படுத்த முடியாததாக்கி விடுகிறது. எனவே, பாட்டாளி வர்க்கம் அதிகாரத்தைக் கைப்பற்றின லொழிய இது நடவாது என்பதை அறிந்துகொண்டிருக்கிறேன்.

மனிதர்கள் தங்களது வர்க்க அந்தஸ்து தரும் அல்லது எடுத்து விடும் அனுபவத்தின் வாயிலாகவே சிந்திக்கிறார்கள். பொது வாகப் பார்க்குமிடத்து, நம்முடைய நிறுவனங்கள், அவற்றின் பணிகள் ஆகியவையெல்லாம் கொடுக்கப்பட்ட ஒரு சமுதாயத்தில் அதன் சொத்து உடைமைகள் ஏற்படுத்தும் உறவுகள் ஆகியவற்றால் கட்டுப்படுத்தப்பட்டிருக்கின்றன '[1] பத்து ஆண்டுகளுக்கு முன்பு பிரபலமான சோஷியலிஸ்ட் ஒருவர் இவ்வாறு எழுதினார். இவருடைய முடிவுகளைக் கடந்து சென்ற சில ஆண்டுகள் பொய்யாக்கிவிட்டன என்று கூறுதல் பயனற்ற செயலாகும்.

அமைதியான மாற்றம் சாத்தியமில்லையாகையால், பாட்டாளி வர்க்கம் அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்குத் தன்னைத் தயார் செய்து கொள்ளவேண்டும். எல்லா எதிர்ப்புகளும் மறைந்தொழியும் காலம் வரை அதன் சர்வாதிகாரம் ஸ்தாபிக்கப் படவேண்டும். எப்பொழுது சுதந்தரமான வர்க்கமற்ற சமுதாயம் அமைக்கப்படுகிறதோ அப்பொழுது கட்டாயப்படுத்தும் அதிகாரம் பெற்றிருக்கும் அரசு கருகி உதிர்ந்துவிடும். புரட்சிகரமான யுக்திகளைத் தரவேண்டி இதனால் நேருகிறது. மாற்று வழிகளை ஒப்புக்கொள்ளாமல் தள்ளுவதும் நேருகிறது.

'புரட்சிகரமான யுக்திகள்' என்றால் சதா பலாத்காரம் இருப்பது என்பதன்று பொருள். குழப்பமான நிலையை நிலைக்கும்படிச் செய்யவேண்டும். ஏனெனில், குழப்பம் நீங்கி உறுதியான நிலை தோன்றின் தொழிலாளர் தமக்குக் கிடைத்திருப்பதில் திருப்தி அடைந்துவிடுவர். பூர்ஷுவாக்களும் அச்சமின்றி இருந்துவிடுவர். இதைத் தடுப்பதற்கே புரட்சிகரமான யுக்திகள் தேவைப்படுகின்றன. நன்றாக வெளுத்த வானத்தில் புரட்சி தோன்றாது. ஆனால், மேகம் மண்டிக்கிடக்கும் - புயல் அடிக்கும் - ஒரு சூழ்நிலையில்தான் புரட்சி தோன்றும். இதை ஊக்குவிக்கக்கூடிய எதையும் ஊக்கவேண்டும். குறிப்பாக யுத்தங்களையும், வேலை நிறுத்தங்களையும் ஊக்குவிக்க வேண்டும்.

## வன்முறை அதிகாரத்தின் அவசியம்

வன்முறை அதிகாரத்தை உபயோகிப்பதுபற்றி என்ன சொல்வது? சொந்தமாக அதற்கென்று ஒரு மதிப்பும் இல்லை. மாற்று வழிகளோடு ஒப்பிட்டுப் பார்த்துத்தான் அதற்குரிய மதிப்பைக் கூற முடியும். புதிய உற்பத்திச் செயல்களை அது விடுவிக்கவேண்டும்.

[1] 'Why I am a Marxist' by H. J. Laski in the New Republic, 1939.

அதை விவேகமான முறையில் எப்படி உபயோகிப்பது என்பதே பிரச்சினை. ஆனால், ஒன்றுமட்டும் கூற முடியும். தேவைப்படலாம் என்ற சாத்தியத்தை ஓரத்தே ஒதுக்க முடியாது. அமைதியான முறையில் வெற்றிகாணமுடியும் என்ற கற்பனையோடு ஒரு கொள்கையை ஆரம்பிக்க முடியாது. சர்வாதிகாரம் என்பது ஒரு வன்முறை அதிகாரமே. பாட்டாளி மக்களின் சர்வாதிகாரம் நியாயமானதெனக் கருதப்படுகிறது. ஏனெனில், இதன் மாற்றாக இருப்பதில் சுதந்தரம் இல்லை. ஆனால், பூர்ஷுவாக்களின் சர்வாதிகாரமே இருக்கிறது. அடிப்படையான மாற்றம் ஒன்றிற்குப் புரட்சி தேவையானால் அதற்கென்று சில நிபந்தனைகளுண்டு. எந்தக் காலத்திலும், எங்கு வேண்டுமானாலும் அது தோன்ற முடியாது. புரட்சி மனப்பான்மை கொண்ட அரசியல் கட்சி தன்னைத் தயாராக வைத்திருக்கலாம். ஆனால், அதற்குத் தேவையான சூழ்நிலையை உற்பத்தி செய்துவிட முடியாது. பெரிய அளவு எண்ணிக்கையுள்ள தொழிலாளர்களும், வல்லமை மிக்க முதலாளி வர்க்கமும் கொண்ட, நன்ருக வளர்ச்சியடைந்த முதலாளித்துவ உற்பத்தி முறையைப் பின்னணியாகக் கொண்டுதான் புரட்சி தோன்ற முடியும். இத் தொழிலாளர்கள், மக்கள் தொகையில் பெரும்பான்மையாக நல்ல கட்டுப்பாடு உடையவர்களாகவும், அமைப்புக்குட்பட்டவர்களாகவும், தங்கள் முதலாளிகளோடு வர்க்கப் போராட்டத்தில் தீவிரமாக ஈடுபட்டவர்களாகவும் இருத்தல்வேண்டும். இதற்குமேல் மூன்று நிபந்தனைகள் பூர்த்தியான பிறகு தொழிலாளர் உடனடியாக நடவடிக்கை எடுக்கவேண்டிய நெருக்கடிக் கட்டம் தோன்றும். முதலாவதாக உற்பத்தி, பங்கீடு ஆகியவற்றின் சக்தி வீழ்ச்சியுறும். தொழிலாளருக்கும், உற்பத்தியாளருக்கும் இடையேயுள்ள பகிர்வின் மிகையான இவ் வேறுபாடு, மிக மோசமான வேலையில்லாத் திண்டாட்டத்தை உண்டாக்கும். அத்துடன் செலாவணித் தட்டுப்பாட்டையும், பொருளாதார நெருக்கடியையும் ஏற்படுத்தும். இரண்டாவது ஆளும் வர்க்கத்தினிடையே அரசியல் ஒருமைப்பாடு இல்லாமை ஆகும். இது யுத்தம் அல்லது அதுபோன்ற நெருக்கடியின் விளைவாகத் தோன்றும். இதன் பயனாகப் பிரிவினைகளும் குழப்பமும் ஏற்படும். மூன்றாவது தாமாகவே தங்கள் வர்க்க உணர்ச்சியையும், போராட்ட மனப்பான்மையையும் வேலை நிறுத்தங்கள், கலகங்கள் மூலமாகத் தொழிலாளி வர்க்கம் காட்டும். குருட்டுத்தனமாகக் கீழ்ப்படிந்துவந்த பழைய பழக்கமானது உடைந்துபோகும். ‘பெரும்பாலான மக்கள் கூட்டம் எப்பொழுது பழைய ஆட்சியை வேண்டாம் என்று சொல்கிறதோ, அப்பொழுது புரட்சி சாத்தியமாகும். ஆள்பவர்களும் பழைய மாதிரி ஆட்சிசெய்ய முடியாமற் போவார்கள். தானாகவே தோன்றும் தன்மை அதற்கில்லை’ என்று லெனின் (Lenin) கூறினர்.

## மார்க்சீயத்தின் போர்த் தந்திரம்

எப்பொழுதும் தயாராகவே இருப்பது, பழைய தோல்விகளால் மனவூக்கம் குன்ருமல் தருணம் வாய்க்கும்போது அதைப் பயன் படுத்துவது ஆகியவை மார்க்சீயப் போர்த் தந்திரத்தின் சாரமாகும். இதில்தான் லெனினி (Lenin)ன் மேதைத்தன்மை காணப்படுகிறது. 1817ஆம் ஆண்டின் இலையுதிர்க் காலத்தில் தத்துவ ரீதியான பல நிபந்தனைகள் நிறைவெய்தாமல் இருக்கும்போதே, புரட்சிக்கு மக்கள் தயார் என்பதைத் தெரிந்து, அதை நடத்தியது அவரது மேதைத் தன்மையைக் காட்டுகிறது. மார்க்சீயவாதி இவ்வாருகத் தன்னைத் தயார் செய்துகொண்டு காத்திருக்கும்போது அவர் ஒன்றை உணர வேண்டும். தனக்கு வரக்கூடிய பேராபத்து, முதலாளித்துவப் பகைவனிடமிருந்து வராமல் சோஷியலிசவாதியான அரைகுறை சிநேகிதனைப்பற்றிக் கவனமாக இருக்கவேண்டும். முதலாளித்துவ வைரி விஷயத்தில் அவன் நிலை தெரியும். அவனேடு எந்தவிதச் சமாதானமும் இருக்கமுடியாது. அவனை எதிரியாகத் தவிர வேறு எந்த வழியிலும் எடுத்துக்கொள்ள முடியாது. ஆனல் சோஷியலிசம் பேசும் அரை நண்பனைப்பற்றி எச்சரிக்கையாக இருக்கவேண்டும். ஏனெனில் அவனும் தொழிலாளரது துயரங்களைப்பற்றிப் பேசித் தொழிலாளரின் ஆதரவைப் பெறுகிருன். அவர்களுக் கிழைக்கப்பட்டிருக்கும் அநீதியைத் தானும் உணர்ந்ததாகக் காட்டிக்கொள்கிருன். ஆனல் புரட்சியின் மூலமாக ஏற்படும் நிவாரணத்தை அவன் மறுக்கிருன். உழைப்பாளருக்கு வெற்றியளிக்கக்கூடிய ஒரே வழியினின்றும் அவர்களைத் திருப்பிவிட முயற்சி செய்கிருன். சமரச முயற்சிகளுக்கும், சலுகை காட்டுவதற்கும் அவன் முயல்வதன் பயனக முடிவில் தொழிலாளர் தோல்வியே அடைவர். ஆகவே தான் மார்க்சீயவாதிகள் சமூக ஜனநாயகத் தொழிலாளர் கட்சிகளைக் (Social Democratic and Labour parties) கடுமையாகத் தாக்குகின்றனர்.[1] இதனல்தான் மிகவும் தீவிரமான வைதீகத்தை அவர்கள் வலியுறுத்துகின்றனர். ஆகவேதான் மிகச் சாதாரணக் கொள்கை வேறுபாடு அல்லது தந்திர மாற்றத்தைக்கூடப் பொறுக்காமல் கசப்பான உட்பூசல்கள் ஏற்படுகின்றன. மார்க்சீயச் சித்தாந்தம் எந்தவிதக் கொள்கை முரண்பாடுகளையும் பொறுத்துக் கொள்வதில்லை.

[1] பிரிட்டிஷ் தொழிலாளர் கட்சியின்மீது குறிப்பாக டிராட்ஸ்கியின் (Trotsky) தாக்குதலைக் கவனிக்க.

## (ii) கம்யூனிசச் செயல்பாடு

### சோவியத் ருஷ்யா

மார்க்சீயச் சித்தாந்தத்தின் செயல்முறையை இப்பொழுது பார்ப்போம். கூடிய மட்டில் நீண்டகாலம் நிலைத்து நிற்கும் முழுக் கம்யூனிச அரசு சோவியத் ருஷ்யா ஒன்றுதான். அதன் கூறுகள் எல்லாம் கம்யூனிசக் கொள்கையின் பிரயோகங்கள் என்றில்லை. ருஷ்யா மார்க்ஸ் கற்பித்தபடியான ஒரு கம்யூனிச அரசுமன்று. அல்லது ஒரு கம்யூனிச அரசு லெனின் ஆட்சியைப் போலவோ அல்லது அவருக்குப்பின் வந்தவர்கள் அதைத் தொடர்ந்து நடத்தியதைப் போலவோ அவ்வளவு கொடூரமாகவும், எதேச்சாதிகாரமாகவும் இருக்க வேண்டுமென்ற அவசியமுமில்லை.

### சோவியத்துகளும் கட்சியும்

இந்த எச்சரிக்கையை மனத்தில்கொண்டு மேலே தொடர்வோம். முதலாவது, விரிவானதொரு பிரதிநிதித்துவ அடிப்படையின் பேரில் ருஷ்யமுறை அமைந்திருக்கிறது. ஜனநாயகச் செயல்பாட்டிற்குக் கொள்கையளவில் இது பொருந்தக்கூடியதே. கம்யூனிசப் பொதுக் கொள்கைகளை ஒப்புக்கொள்ளும் பல கட்சிகள் தங்கள் பிரயோக முறைகளிலும் தலைவர்களிடத்துள்ள விசுவாசத்திலும் ஒன்றுக்கொன்று வேறுபட்டு இருப்பதும் கம்யூனிசக் கொள்கைக்குப் பொருந்தக்கூடியதே. ஆனால் ருஷ்யா ஒரே கட்சி அரசாகும். ஆனால் கம்யூனிசத்தின் உட்பொருள் அப்படி அன்று. சமீப காலத்திய ருஷ்ய நிகழ்ச்சிகள் எடுத்துக் காட்டுவன போன்று, பொதுவான கம்யூனிச ஆசாரத்துக்குள், பல்வகை விளக்கங்களுக்கு அங்கு இடமுண்டு.[1]

### சுதந்தரம்

இரண்டாவதாக, மேற்கத்திய வழக்கில் சுதந்தரம் என்பது அரசாங்கத்தைக் குறைகூறி அதைப் பலவீனப்படுத்தும் உரிமையாகும். இந்தப் பொருளில் ருஷ்யாவில் சுதந்தரம் ஏற்படுத்தப் பட்டிருப்பதாக ஒருவரும் கூறுவதில்லை. அதன் ஆட்சியாளர்கள் எதிர்ப்பைச் சமாளிக்கும் திறமையில்லாதிருப்பது ஒருவேளை இதற்குக் காரணமாக இருக்கலாம். ஆனால் இன்னொன்றையும் நாம் மறக்கக்

[1] பல 'களையெடுப்புகளி' (Purges)னால் தண்டனைக் குட்பட்டவர்களெல்லாம் மார்க்ஸ் என்ன கருத்துக் கொண்டிருந்தார் என்பதை மற்றெவரையுங் காட்டிலும் தாங்கள் தெரிந்து கொண்டிருப்பதாகத்தான் கூறினார்கள்.

கூடாது. ருஷ்யர்கள் எப்பொழுதும் நம்முடைய சுதந்தர வாழ்க்கையை வாழ்ந்ததே இல்லை. ஆகவே அவர்கள் எதையும் இழந்துவிடவில்லை. முடிவாகப் பயனுள்ள சுதந்தரத்தை அவர்கள் பெற்றிருப்பதாகவும் வாதிக்கக்கூடும். அதாவது, அவர்கள் பொருளாதாரச் சமத்துவமும், இலாப நோக்கிற்காக முதலாளிகள் சுரண்டலிலிருந்து விடுதலையும் பெற்றிருப்பதாக வாதிக்கக் கூடும். 'கம்யூனிஸ்டுக்குச் சுதந்தரம் என்பது முழுவதாகக் கூட்டுரிமையே' ஆகும் என்று ருஷ்யத் தத்துவப் பேரறிஞர் பெர்டியாவ் (Berdyaev) கூறுகிறார். மதச் சுதந்தரம், எண்ணச் சுதந்தரம் ஆகியவை இருக்க முடியாது. ஏனெனில் சமுதாயத்தின்மீது சாராத ஆன்மீகக் கொள்கை தனியாளுக்கிருப்பதாக இது அனுமானித்துக்கொள்கிறது. இதைக் கம்யூனிசம் ஒப்புக்கொள்வதற்கில்லை.'

## கம்யூனிச அரசின் பணிகள்

மூன்றாவதாக, கம்யூனிச அரசு தன் பணிகள் எல்லாவற்றையும் உள்ளடக்கும் தன்மை பெற்றிருப்பதாகக் கூறுகிறது. இங்கேயும் இதை நாம் வேறுபடுத்திப் பார்க்கவேண்டி யிருக்கிறது. மார்க்சீய அரசு ஒவ்வொரு கலாச்சார அமைப்பையும், ஒவ்வொரு அறிவுக் கருத்த செயலையும், கட்டுப்பாடு செய்யவேண்டும் என்ற கட்டாய மில்லை. 'பட்டாளி மக்கள் கலை' என்ற ஒன்று இருப்பதாகக் கொண்டாலும் அது பல முறைகளில் காணப்படலாம். ஓவியம், சங்கீதம் ஆகிய கலைகளுக்கு இக் கால மார்க்சீயவாதிகள் வழுவாத தன்மையோடு விதிகள் வகுப்பதுபோன்று, மார்க்ஸ், விதிகள் வகுத்திருக்க முடியும் என்று கற்பனைகூடச் செய்துபார்க்க முடியாது இதற்கு மாறாக, தொழில், விவசாயம் ஆகியவற்றில் பெருவாரியான உற்பத்தி, பங்கீடு முதலியவைகளையும் வெளிநாட்டு வாணிகத்தையும் அரசின் ஏகபோக உரிமையாகக் கொண்டிருப்பது மார்க்சின் கொள்கைக் குட்பட்டதே. இவ்வாறான ஏகபோக உரிமையின்றி இதைச் சாதிக்கவும் கூடாது. இலாபவேட்டை நோக்கை நீக்கி விடுதல், சமுதாயக் கட்டுப்பாட்டை ஏற்படுத்தல், பொருளாதாரப் படிமுறையில் தனியாளுக்கென்று இடம் ஏற்படுத்தித் தருதல் ஆகியவை ஐந்தாண்டுத் திட்டங்களைப்போலவே மார்க்சீயத்தின் உறுதியான ஆதாரங்களாகும்.

## கம்யூனிசத்தின் பொருளாதார அடிப்படை

ருஷ்யாவின் உண்மை இயல்பை ஆராய்பவர் அது ஓர் அதிகாரத்துவப் போலீஸ் அரசு என்பதைப் பெருமளவுக்கு மறந்து

விட்டுச் சரியான வெளியீடாக அதன் பொருளாதார அமைப்பை மாத்திரம் எடுத்துக்கொள்ளலாம் என்று நாம் சொல்லக்கூடும். கம்யூனிசம் ருஷ்யாவில் வெற்றி பெற்றிருக்கிறதா, இல்லையா என்னும் கேள்விக்குப் பதிலே கூறமுடியாது. வெற்றிக்கு அளவுகோல் எது? இது நடைபெறுமல் இருந்தால் வேறென்ன நடந்திருக்க முடியும்? ருஷ்யாவில் அது வெற்றி அடைவதோ, தோல்வியடைவதோ, வேறு நாடுகளிலும் அதுவே ஆகும் என்பதற்கு உத்தரவாதம் ஒன்றுமில்லை. கம்யூனிசப் புரட்சிக்கும், பரிசோதனைக்கும் ருஷ்ய நாடு ஒரு சரியான நிலைக்களனாக மார்க்சீயவாதிகளுக்குத் தோன்றவில்லை என்பதை நாம் நினைவில் கொள்ளவேண்டும். பிரிட்டன், ஃபிரான்சு, பெல்ஜியம் ஆகிய நாடுகளிலாவது அல்லது இத்தாலியிலாவது புரட்சி நடப்பது கொள்கையளவில் சாத்தியம் என நம்பினார்கள்.[1] ஏனெனில், இந் நாடுகளில் உள்ள மக்கள் அரசியல் முதிர்ச்சி பெற்றவர்களாயும், நல்ல அமைப்புக்குட்பட்டவர்களாயும், நல்ல அனுபவசாலிகளான தலைவர்களைப் பெற்றவர்களாயும் இருந்தார்கள். இந் நாடுகளில் ஏதாவதொன்றில் கம்யூனிசப் புரட்சி ஏற்பட்டிருந்தால் அது மார்க்சீயக் கோட்பாடுகளுக்கும், தந்திரங்களுக்கும் சரியான பரிசோதனைக் களமாக விளங்கியிருக்குமெனப் பல கம்யூனிஸ்டுகள் கருதினார்கள். ஆனால், விசித்திரமாக, உண்மை வேறுவிதமாக இருந்தது. ருஷ்யா கம்யூனிச ஆட்சியைத் திணித்த நாடுகளெல்லாம் விவசாய நாடுகளாகவே இருந்தன. ஒரு மார்க்சீயவாதி பரிசோதனைக்குத் தேர்ந்தெடுக்கக் கூடிய வகையாகவே இந் நாடுகள் இல்லை.

## கம்யூனிசத்தின் மூன்று மண்டலங்கள்

மூன்று வேறுபாடான மண்டலங்களைக் கவனத்தோடு மாணவர் பகுத்து உணரவேண்டும் என்பதே கம்யூனிசத்தைப்பற்றி நாம் எழுதுவதின் முடிவுரையாகும். முதலாவது, மார்க்சின் தத்துவம். இரண்டாவது, முக்கியமாக லெனின் (Lenin) அவர்களாலும் மற்ற மார்க்சின் சீடர்களாலும் மார்க்சின் தத்துவத்திற்குக் கொடுக்கப்படும் விளக்கம். மூன்றுவது, சோவியத் ருஷ்யாவின் இன்றைய ஆட்சியாளர்கள் பின்பற்றும் கொள்கை.

மூன்றுவதாகக் கூறப்பட்டிருப்பதைப்பற்றி நாம் இப்பொழுது கவனிப்பதற்கில்லை. மூன்றுவது உலக யுத்தம் ஒன்றில் ருஷ்யா

[1] இது முழுவதும் வெறும் கற்பனையுமன்று. 1919-க்கும் 1922-க்கும் இடையேயுள்ள காலத்தில் ஃபிரான்சிலும் இத்தாலியிலும் கம்யூனிசப் புரட்சி வெகு அருகிலிருப்பதுபோல் தோன்றியது. இத்தாலியில் முசோலினி அதிகாரத்தைக் கைப்பற்றியது தீவிர இட சாரிகள் அதிகாரத்தைக் கைப்பற்றிவிடாது இருப்பதற்காகச் செய்யப்பட்ட ஒரு யுக்தியாகப் பலர் கருதினார்கள்.

உலகத்தை இழுத்துவிட்டு இரத்தக் காடாக்கி நாகரிகத்தையே அழிக்கக்கூடும். அல்லது கிழக்கு ஐரோப்பாவிலும், வடக்காசியா விலும் தான் பெற்றிருக்கும் ஆதிக்கத்தில் திருப்தி அடைந்து, சோஷியலிச அமைப்பு, முதலாளித்துவ அமைப்பு ஆகியவைகளோடு சமாதானத்தோடு கூடிவாழ முடிவு செய்யலாம். அது வெளிப் பார்வைக்குத் தோன்றுவதைப்போல் அல்லாமல் உண்மையில் மிகவும் பலவீனமுள்ளதாயிருந்து உள்நாட்டுக் குழப்பங்களாலும், பூசல்களாலும் வீழ்ச்சியுறலாம். யார்தான் சொல்ல முடியும்? இப்போதைக்கு Times Literary Supplement-ல் சமீபகாலத்திய எழுத்தாளர் ஒருவரின் வார்த்தைகளோடு இதை முடிப்போம்.'

'பெப்ருவரி 25ஆம் தேதி பிராக் (Prague) நகரில் மாணவர்கள் ஜனாதி பதியின் மாளிகைக்கு ஊர்வலமாக வந்தார்கள். மஸாரிக் (Masaryh) கின் அரசியல் கருத்துக்களுக்குத் தங்களது ஆதரவைத் தெரிவிக்க வும், கம்யூனிசத் திடீர்ப் புரட்சிக்கு எதிராகத் தங்களது வெறுப்பை வெளியிடவும் அவர்கள் வந்தபோது, அவர்கள் காப்புப்படையின் ஓர் அணியினராலும், தொழிலாளர்படையின் அணியாலும் நிறுத்தப் பட்டார்கள். இந்த அணிகள் இராணுவ உடையில் இல்லாமல் தோலால் ஆன உடையணிந்திருந்த ஒரு சாதாரண மனிதரின் தலைமையின்கீழ் இயங்கியதாக ஒரு குறிப்புக் கூறுகிறது. உள் நாட்டு அமைச்சர் காரியாலயத்தைச் சேர்ந்த அதிகாரியாக இவர் இருக்கக்கூடும் என்று மேலும் அந்தக் குறிப்பு கூறியது.

'ஐரோப்பியத் தலைநகரங்கள் பலவற்றில் இவ்வாறு தோலுடை யணிந்தவர்கள் அரசாங்கக் காரியாலயங்களில் அமர்ந்திருக்கின்றனர். சாதாரண உடையணிந்த சிவில் பணியாளரைக்காட்டிலும் இவர்கள் அதிக அதிகாரம் பெற்றவர்களாக விளங்குகிறார்கள். ஒருவேளை ஸ்பானிய உள்நாட்டுப் போரின்போது இப்படிப்பட்டவர்களை முதன் முதலாக நாம் பார்த்தபோது, அவர்களது சக்தியையும், கொடூரத் தன்மையையும்பற்றிக் கற்பனையாக ஏதோ கூறி மூடிமறைத்தோம். அசிங்கமானவன் என்றாலும் உண்மையான ஜனநாயகவாதி என்று கூறினோம். அன்றிலிருந்து இவர்களை வானளாவப் புகழும் ஒரு துருவத்துக்கும், பயங்கரமானவன் என்று வெறுக்கும் இன்னொரு துருவத்துக்கும் இடையே ஆங்கிலப் பொதுமக்கள் அபிப்பிராயம் தொங்கி நின்றது. ஆனால் இன்று, அறிவுக்கூர்மையற்ற ஊழல் மலிந்த சில மதகுருக்களைத் தவிர வேறு எவரும் இந்தத் தோலுடை தரித்த மனிதனைக் 'கற்கால மனிதன்' என்றுதான் உணர்ந்து கொண்டிருக்கிறார்கள். நிகழ்ச்சிகளின் வற்புறுத்தலால் இவர்களின் விருப்பமின்றியே இவர்களது முந்தைய அபிப்பிராயம் உருவா யிருந்தது. கீஸ்லெர் (Koestler) அவர்களின் அரசியல்நெறி நாடகம் ஒன்றில் வரும் 'கற்கால மனிதனே' இவன். மனச்சாட்சி,

இரக்க உணர்ச்சி ஆகியவை அற்றவனாகவும், மேற்கத்திய நாகரிகத்துக்குப் பரம வைரியாகவும், அவனது சுயபுராணம் கூறுவது போல முதலாளித்துவத்துக்குக் குழிதோண்டுபவனாக இராமல், எல்லாச் சுதந்தரச் சமுதாயங்களுக்கும் குழிதோண்டுபவனாகவும் இவன் இருக்கிறான்.'

## மார்க்ஸ் உண்மையில் போதித்தது என்ன?

லெனினைப்பற்றியும் அவரது கொடூரமான எதேச்சாதிகார ஆட்சி எத்துணை அளவுக்கு, மார்க்ஸ் போதித்த பாட்டாளி வர்க்கத்தின் சர்வாதிகாரத்தோடு பொருந்தக்கூடியது என்பதைப் பற்றியும் விவாதிக்கப்போவதில்லை. ஏனெனில், நம்மால் அதைக் கூற இயலாது. மார்க்சின் உண்மையான போதனைகளை மதிப்பீடு செய்வது பயனுள்ளதாக இருக்கும்.[1] இதைச் செய்வதற்கு 'The Highway' என்ற பத்திரிகையில் டாக்டர் பி. ஃபோர்டு (Dr. P. Ford) அவர்கள் எழுதிய 'மார்க்சீயத்தில் உயிருள்ளது எது? செத்தது எது?' என்ற கவர்ச்சியான கட்டுரையைப் பயன்படுத்துவோம்.

மார்க்சின் தத்துவத்தையும், உளவியலையும் காலங்கடந்தவைகள் என்று கூறி டாக்டர் ஃபோர்டு (Dr. Ford) ஒதுக்கிவிடுகிறார். இதேபோன்று மார்க்சின் உழைப்பளவைக் கூலிக்கோட்பாடும் இன்று மதிக்கப்படுவதில்லையெனக் கூறி ஒதுக்குகிறார். தொழிலாளரது நிலை வரவர மோசமாகிக்கொண்டே போகும். கூலி குறைவாகப்பெறும் உழைப்பாளர்களும், சிறுசிறு கடைக்காரர்களும், பெரிய கடைக்காரர் - ஏகபோக உரிமை பெற்றவர் ஆகியோரை எதிர்த்துப் பாட்டாளிவர்க்கத்துடன் சேர்ந்துகொள்வார்கள் என்றெல்லாம் மார்க்ஸ் கூறிய பொருளாதாரத் தீர்க்கதரிசனங்களனைத்தும் பொய்யாகப் போய்விட்டன. சிறு கடைக்காரர்கள்தான் இப்பொழுது இருக்கும் பூர்ஷ்வாக்களின் அமைப்பை மிகவும் தீவிரமாக ஆதரிக்கிறார்கள். நுட்பப் பொறியாளர்கள், மேலாளர்கள் (managers) ஆகியோரின் தோற்றத்தை மார்க்ஸ் எதிர்பார்க்கவில்லை. அவர்கள் வேலையளிப்போராகவும் இல்லாமல், பாட்டாளி வர்க்கத்தோடும் சேராமல் சமூகப் போராட்டத்தில் அவர்களின் இடம் எது என்று இன்னும் நிச்சயமாக அறிந்துகொள்ளாதிருக்கிறார்கள். ஜெர்மனி, ஃபிரான்சு, இத்தாலி, ஸ்பெயின் ஆகிய நாடுகளில் உழைப்பாளர் வர்க்கத்தைப் பிரிக்கத்தான் மார்க்சீயத் தந்திரம் உதவியது. இதனால் சர்வாதிகார ஆட்சி ஏற்பட வகை

[1] எல்லா மாணவரும் 'Communist Manifesto of 1848' என்ற நூலைக் கட்டாயம் படிக்கவேண்டும். அது சிறியது; தெளிவானது. மார்க்சின் உண்மையான கருத்தை அது வெளியிடுகிறது.

செய்தது. முடிவாக, மார்க்ஸின் 'வரலாற்றின் பொருளாதார விளக்கம்' மிகையான நெகிழாத் தன்மைபெற்றதும், மிகவும் குறுகிய கண்ணோட்டம் கொண்டதும் ஆகும்.

'இப்படிப்பட்ட குறைகள் எல்லாம் கூறப்பட்டபின் என்ன விடப்பட்டிருக்கிறது?' என்று கேட்கிறார் டாக்டர் ஃபோர்டு (Dr. Ford). விடப்பட்ட முக்கியமானவை எவையென்று அவரே விடையளிக்கிறார். முதலாவது, பொருளாதார வாழ்க்கையைப் பற்றிய புதிய கருத்துத் தொகுதிக்கு உலகத்தின் கவனத்தை மார்க்ஸ் திருப்பினார். இக் கருத்துத்தொகுதி இன்று, வரலாறு, அரசியல் ஆகிய போதனைகளுக்குள் கொஞ்சங் கொஞ்சமாக இடம் பெற்று வருகின்றது. வெவ்வேறு வர்க்கங்களின் அளவையும், அக்கறையையும் பாதிக்கக்கூடிய பொருளாதார மாற்றங்களின் முக்கியத்துவம், வேலைகளையும், உலகத்தின் உற்பத்தி மூலங்களையும் அடையமுடியாதபடித் தடைசெய்யும் நிறுவனங்களின் முக்கியத்துவம் ஆகியவற்றுக்கு இன்று நம் சமூக இயல்களில் முக்கியமான இடம் அளிக்கப்பட்டிருக்கக் காண்கிறோம். மேலும், முன்னொரு காலத்தில் நூல் நூற்பவர்களையும், நெசவுத் தொழிலாளரையும் அவர்களின் ஆட்சியாளரின் பணம் பிடுங்கலிலிருந்து காப்பாற்றிய உற்பத்திக் கருவிகளின் சொத்துரிமை இன்று முரணாகச் சொத்தை மரபுரிமையாகப் பெறுபவர்களின்மீது சார்ந்திருக்கச் செய்கிறது. இதுவும் நம் சமூக இயல்களில் முக்கிய இடம் பெற்றுவருவது மார்க்ஸின் சிந்தனையின் செல்வாக்கு விரிவடைந்ததால்தான். சமத்துவமற்ற சமுதாயத்தின் பாராளுமன்ற ஜனநாயகத்தைப்பற்றி அவர் குறை கூறியது இன்று சமூக இயலாரின் பொதுக் கருத்தின் பெரும்பகுதியாக விளங்குகிறது. மார்க்ஸ்தான் இக் கருத்துக்களை வெளியிட்ட முதலாவது ஆசிரியர் என்று சொல்வதற்கில்லை. எனினும், அப்படி வெளியிட்டவர்களில் மார்க்ஸ்தான் மிகவும் படித்தவர்; மிகவும் திறமை உடையவர். அதனுடன் அக் கருத்துக் களைக் கோவையாகச் சேர்த்து ஒரே கொள்கையாக வெளியிட்ட காரணத்தால்தான் இவற்றின் முக்கியத்துவம் மெதுவாக உணரப் பட்டது. வரலாற்றைப்பற்றிய அவரது நோக்கு மிகவும் குறுகிய தாக இருந்தாலும், வர்க்கப் போராட்டக் கொள்கை நமது காலத்தின் வாழ்க்கைப்புதிரை விளங்கச்செய்யும் திறவுகோலாகும். பல திறவு கோல்களில் இது ஒன்று எனினும் இது சிறப்பானதாகும். தந்திரங் கள் அளிக்கும்வகையில் இது மிக முக்கியமான திறவுகோல் என்பதை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும்.

## (iii) சர்வாதிகாரக் கொள்கை

இதுகாறும் கம்யூனிசத்தின் நோக்கங்களையும் முறைகளையும் பற்றி ஆராய்ந்தோம். கம்யூனிசம் தனது பொருளாதார அம்சங்களிலிருந்து அரசியல் சக்தியாக மாறும்போது சுதந்தரம், பெரும்பான்மை ஆட்சி ஆகிய ஜனநாயகக் கோட்பாடுகளை மறுதலித்து விடுகிறது, 'தங்கள் வைரிகளை அடக்குவதற்காகவே பாட்டாளி வர்க்கம் அரசை நாடுகிறதேயொழியச் சுதந்தரத்தின்மீதுள்ள அக்கறையால் அன்று. எப்பொழுது சுதந்தரத்தைப்பற்றிப் பேச முடிகிறதோ, அப்பொழுது அரசு மறைந்துபோகும்' என்று மார்க்ஸின் நண்பரும், சீடருமாகிய எங்கல்ஸ் (Engels) எழுதினர். அரசும், சுதந்தரமும் ஒன்றுக்கொன்று பொருந்தாத சொற்களாகும்.

### கம்யூனிச, பாசிசக் கொள்கைகளும் சுதந்தரமும்

ஜனநாயகத்தின் ஆதாரமான அடிப்படைக் கொள்கைகளை மறுப்பதில் கம்யூனிசக் கொள்கையும், பாசிசக் கொள்கையும் பொதுவான ஒருமைப்பாடுடையனவாகும். அவை இரண்டும் தனியாளிடமிருந்து தங்கள் வாதத்தைத் தொடங்காமல் சமுதாயத்திலிருந்து துவக்குகின்றன. சமுதாயத்தின் பிரதிநிதியான அரசின் கோரிக்கைகளுக்கு எப்பொழுதும் முதலிடமுண்டு என்று அவைகள் கருதுகின்றன. தனியாள் உரிமையாலோ அல்லது அடிப்படைச் சட்டங்களாலோ அரசின் அதிகாரம் வரையறுக்கப்படுவதை அவைகள் மறுக்கின்றன. அரசாங்கம் பொதுமக்கள் அபிப்பிராயத்துக்கோ அல்லது வேறு எதற்குமோ அல்லது வேறு எவருக்குமோ எந்த வழியிலும் பொறுப்புள்ளதாக இருக்கவேண்டும் என்பதை இவை மறுக்கின்றன. அரசாங்கத்தின் பொறுப்பற்ற தன்மை இவர்கள் அடிப்படைக் கோட்பாடுகளில் ஒன்ருகும். அரசின் தொடர்ச்சியானதும் வழக்கமானதுமான முழு அதிகாரத்துக்கும் வெளியே கூட்டாகவோ அல்லது தனியாளாகவோ முழு வாழ்க்கையையோ அல்லது ஒரு பகுதியையோ வாழமுடியும் என்பதையும் அவைகள் மறுக்கின்றன. எல்லாவற்றின்மேலும் அரசு மேலாண்மை பெற்றிருக்கிறது. அதன் எல்லைக்குள் நடக்கும்—பொருளாதார, அரசியல், சமய, கலாச்சார நடவடிக்கைகள் அனைத்தும் அரசின் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டனவே. அரசு அதிகாரத்துவமும், சர்வாதிகாரத்

துவமும் பெற்றது.[1] ஒருவர் வேடிக்கையாகக் கூறியபடி, 'எவை தடை செய்யப்படவில்லையோ அவை கட்டாயமானவை. எவை யெல்லாம் கட்டாயமானவை இல்லையோ அவை தடை செய்யப் பட்டவை யாகும்.'

## பழங்கால வரம்பிலா ஆட்சிகள்

ஒரு பொருளில் பார்க்கப்போனால் இதில் புதியது ஒன்றும் இல்லை. 'போர் செய்யவும், சமாதானத்தை ஏற்படுத்தவும், கட்டாய இராணுவ சேவையை அமல் நடத்தவும் வரி விதிக்கவும், சொத்தைப் பராமரிக் கவும், சொத்தை எடுத்துக்கொள்ளவும், குற்றம் என்ன என்று விளக்கவும், மீறுபவர்களைத் தண்டிக்கவும், கல்வி முறையைக் கட்டுப்படுத்தவும், குடும்பத்தை மேற்பார்க்கவும், சொந்த வழக்கங்களை ஒழுங்குபடுத்தவும், அபிப்பிராயத்தைத் தணிக்கை செய்யவுமான சமுதாயத்தின் அதிகாரங்களை ஏகபோக உரிமையாகக் கோரும் வரம்பிலா அரசின் ஒரு வகையே சர்வாதிகார ஆட்சி' என்று லிப்மான் (Lippmann) கூறுகிறார்.[2] குடும்பத் தொகுதிக்குத் தலைவராக இருந்த தகப்பனை எடுத்துக்கொண்டாலுஞ் சரி, அல்லது வெற்றிபெற்ற படைத் தலைவனை எடுத்துக்கொண்டாலுஞ் சரி, ஏதாவது ஒரு முறையில் வரம்பிலா ஆட்சியானது மிகப் பழைமை யான அரசாங்க வகைகளுள் ஒன்றாக இருந்தது. பலவிதமான தன்னிச்சை அரசுகளுக்கு எதிராகத்தான் ஜனநாயகங்கள் தங்கள் உரிமைகளைப் பெறுவதற்காகப் போராடின. இந்தவிதத் தாக்குதலைச் சமாளித்து நிற்கும் தன்னிச்சை அரசு எதுவுமே யில்லை.

பரம்பரைப் பிறப்பையும், தெய்வீக உரிமையையும் ஆதாரமாகக் கொண்ட பழங்கால வரம்பிலா ஆட்சிகள் ஒன்றுக்குப்பின் ஒன்றாக மறைந்து போயின. ஜப்பானியப் பேரரசின் மாற்றத்திற்குப் பிறகு, ஹெட்ஜாசின் மன்னராகிய இபுன் சவூது (Ibn Saud of Hedjaz) அவர்கள்தான் பழைய முறைப்படி இன்னும் அதிகாரத்திலிருக்கும் மன்னவராவர். புதிதாக ஏற்பட்ட முறைகளில் சமய ஆதாரமோ, பரம்பரை மரபுரிமை ஆதாரமோ கிடையாது. ஆனால், அவை சர்வாதி காரக் கோட்பாட்டைச் சேர்ந்தவையாகும். இதுவும் பழையதுதான் என்றாலும் 'புதுப்பிக்கப்பட்டதாகும்.'

[1] சர்வாதிகாரம் பற்றிய காபன் (Cobban) அவர்களின் 'Modern Dictatorship' என்ற நூலைப் படிக்கவும். அதிகாரத்துவமில்லாமல் சர்வாதிகாரமாய் இருக்க முடியாது. ஆனால் அதிகாரத்துவ அரசு சர்வாதிகார அரசாக இருக்க வேண்டும் என்பதில்லை. 18-ஆம் நூற்றாண்டின் எதேச்சாதிகார நல்லாட்சி கள் (benevolent despotism) மிகுந்த சமரச மனப்பான்மையுடன் நடந்து கொண்டன.

[2] அவருடைய நூலாகிய 'Preface to Morals' லிருந்து.

## வரலாற்றில் சர்வாதிகாரம்

சர்வாதிகாரம் என்றால் என்ன? 'மரபுரிமையாகத் தன் பதவியைப் பெறாமல், வன்மையாகவோ அல்லது ஒப்புதல் மூலமாகவோ அல்லது இரண்டின் மூலமாகவோ ஒரு மனிதன் ஏற்படுத்தும் அரசாங்கத்தைச் சர்வாதிகாரம் என விளக்கலாம். 'வரம்பிலா இறைமை அதிகாரத்தை அவன் பெற்றிருக்கவேண்டும். இவ்வதிகாரத்தைச் சட்டத்தின் மூலமாக அல்லாமல் எதேச்சாதிகாரமான தன் ஆணைகளால் உபயோகப்படுத்தவேண்டும். சற்று முன்னர்க் கூறியதுபோல, பொறுப்பின்மை அதன் சாரமாகும். கால வரையறை இல்லாமை என்ற தன்மையையும் நாம் சேர்த்துக்கொள்வோம்.

பழைய ரோமிலிருந்து இச் சொற்றொடர் எடுக்கப் பட்டிருக்கிறது. அங்கு நெருக்கடிக் காலங்களின்போது ஒரு மனிதனுக்கு, செனட் வரம்பிலா அதிகாரங்களை வழங்கி விடுவதுண்டு. இன்றைய வழக்கில் இல்லாத மூன்று நிபந்தனைகள் அதற்கிருந்தன. அது ஒரு சாதாரண வழக்கமாக இல்லாமல் விசேடமான காலங்களில் மட்டும் பயன்படுத்தப்பட்ட உபாயமாகும். குறுகிய காலத்திற்குட் பட்டதாயும் இருந்தது. வழக்கமாக ஆறு மாதங்களுக்குள்ளாகத் தான் இருக்கும். எப்பொழுதும் ஓர் ஆண்டிற்குமேல் கொடுக்கப் பட்டதில்லை. இந்தப் பதவிக்காலம் முடிந்தவுடன் தனக்கு அளிக்கப் பட்ட ஆட்சி அதிகாரம்பற்றிச் சர்வாதிகாரி கணக்குக் கொடுக்க வேண்டும்.

ஆரஞ்சு நாட்டு வில்லியம் (William of Orange), கிராம்வெல் (Cromwell), டான்டன் (Danton), ராபஸ்பியர் (Robespierre) ஆகிய ஆட்சியாளர்கள் சில தனிப்பட்ட தருணங்களில் வரம்பிலா அதிகாரத்துக்கு உயர்த்தப்பட்டபோது அவர்களும் 'சர்வாதிகாரிகள்' என்றுதான் அழைக்கப்பட்டனர். அவர்களாகத் தங்களை அவ்வாறு அழைத்துக் கொள்ளவில்லை. ஆனால் பிற்காலம் அவர்களை அவ்வாறு அழைத்தது. ஆனால், தற்காலத்தின் உண்மையான சர்வாதிகாரியும், இவ்வித அமைப்பை ஏற்படுத்தியவரும் முதலாம் நெப்போலியன் (Napoleon I) ஆவார். அவர் ஒரு நெருக்கடிக் கட்டத்தில் அதிகாரத்திற்கு வந்தார். ஆனால், தமது ஆட்சியை நிரந்தரமானதாக்கிக்கொண்டார். புது வகையான மேலாண்மைக்குரிய கொள்கைகளை வகுத்தவரும் அவரே. பொது ஒப்புதலையும், வெறும் வன்முறையில் அதிகாரத்தையும் கலந்த ஒரு சேர்க்கையை ஆதாரமாகக்கொண்ட வரம்பிலா ஆட்சி அது. 'பழைய மன்னர்களின் நிலைமையினின்றும் என் நிலைமை வேறுபட்டதாகும். முறைப்படியான அவர்களது ஆட்சியை எவரும் எதிர்க்கவில்லை. அவர்களை நீக்கிவிட வேண்டும் என்று எவரும் நினைப்ப

நினைப்பதில்லை. என்னுடைய விஷயத்தில் ஒவ்வொன்றும் வேறு பாடானது. உள்ளும், புறமும், எனது ஆட்சி அச்சத்தில் உருவான தாகும்' என்று அவர் ஒருசமயம் கூறினர். அவர் உறவினராகிய மூன்றும் நெப்போலியன், தாமே இக் கொள்கையைப் பிரயோகிப் பதற்கு முன்னர்த் தம் உறவுக்காரராகிய நெப்போலியனின் ஆட்சியைப் பற்றி எழுதும்போது இதற்கொரு விளக்கம் தருகிருர்.

'இந்த ஏகாதிபத்திய அரசு முறையானது ஜனநாயக அடிப் படையாலானது. ஏனெனில், எல்லா அதிகாரங்களும் மக்களிட மிருந்தே வருகின்றன. அதன் அமைப்பு, படிமுறையானது. ஏனெனில் சமுதாயத்தில் காணப்படும் பல திறன்களையும் தூண்டு வதற்கு வெவ்வேருன படிவங்கள் அவசியமாகின்றன.' இவ்வாருன புதிய 'பொதுமக்களின் தன்னிச்சை அரசு' முறையை அவர் மக்கள் தீர்ப்பு (Plebiscite) போன்ற உபாயங்களால் ஓர் ஒழுங்குமுறைக்குட் படுத்தினர். இம் முறைகளால்தான் அவர் அதிகாரத்துக்கு வந்தார். அதன் செயல் முறையில் பல திருத்தங்களையும் படிப்படியாகக் கொண்டுவந்தார்.

பத்தொன்பதாம் நூற்ருண்டில் தென் அமெரிக்காவில் இது போன்ற அரசாங்கங்கள் நிறுவப்பட்டன. இவை சாதாரணமாக ஏதாவது இராணுவப் புரட்சியின் விளைவாகத்தான் நிறுவப்பட்டன. ஆனல், இன்றுள்ள முறையில் 1917-ல் ருஷ்யாவில் லெனினைத் தலைவராகக்கொண்ட சர்வாதிகார ஆட்சி தோன்றியது. அவரைப் பின்பற்றித் துருக்கியில் கமால் ஆட்டாடர்க் (Kemal Ataturk) கும், ஸ்பெயினில் பிரைமோ டி ரிவேரா (Primo de Rivera)வும், இத்தாலி யில் முஸோலினி (Mussolini)யும் சர்வாதிகார ஆட்சியை நிறுவினர் கள். போலந்து, கிரீஸ், போர்ச்சுகல், ஜெர்மனி, யுகோஸ்லேவியா முதலிய நாடுகளும் சிறிது காலத்திற்குப் பின்னர் இவைகளைப் பின்பற்றின. ஸ்பெயினில் சிறிது காலத்திற்கு ஜனநாயகம் இருந்தது. ஆனல் மீண்டும் சர்வாதிகார ஆட்சி முறைக்கே திரும்பியது. 1940-ல் ஃபிரான்சும் இந்தத் தொத்து நோய்க்குப் பலியாயிற்று. சமீப காலத்தில் பல்கேரியா, ஹங்கேரி, ருமேனியா, யுகோஸ்லேவியா, செக்கோஸ்லோவேக்கியா போன்ற நாடுகளில் கம்யூனிச வகையைச் சேர்ந்த அதிகாரத்துவ ஆட்சி நிறுவப் பட்டிருக்கின்றது. ஆயினும், கம்யூனிச அமைப்பிற்கு ருஷ்யாவும், பாசிச அமைப்பிற்கு ஜெர்மனியும் தரமான எடுத்துக்காட்டுக்களாக இருப்பதாகக் கூறலாம்.

## தற்காலச் சர்வாதிகாரத்தின் தோற்றுவாய்

சர்வாதிகார ஆட்சிகளின் செயல்பாடு, கொள்கைகள் ஆகியவற்றை ஆராய்வதற்கு முன்பு அவைகளின் தோற்றத்தின் ஆரம்பங்கள் எவ்வளவுக்கு ஒரே மாதிரியாக இருந்தன என்று பார்ப்பது பயனுள்ளதாக இருக்கும். மிகக் குறுகியகால அளவு 'விச்சி' (Vichy) ஆட்சி ஃபிரான்சிலிருந்தது. இந் நாட்டைத் தவிர, சர்வாதிகார ஆட்சி தோன்றிய வேறு எந்த நாடும் ஜனநாயகப் பரம்பரைகளுடையதாகவோ அல்லது அரசியலில் தனிநபர் சுதந்தரம், தனியாள் பொறுப்பு முதலியவை மிக ஆழமாக வேரூன்றி யிருந்ததாகவோ சொல்லமுடியாது. எங்காவது ஜனநாயகம் தோன்றினுலும் அது அந் நாட்டின் மண்ணில் வளரமுடியாத வேற்று நாட்டுச் செடி போன்றுதான் இருந்து வேரூன்ருமலே போய்விடுவதுண்டு.

சர்வாதிகாரம் தோன்றிய ஒவ்வொரு நாட்டிலும் அது நம்பிக்கையின்மை, ஏமாற்றம் ஆகியவற்றினுலே பிறந்ததுதான். யுத்தங்களில் தோல்வி, பொருளாதார நெருக்கடி, பழைய பரம்பரை சிதைவுறல், ஒழுங்கான வேறு மாற்று வழிகள் இல்லாததுபோல் தோன்றியது ஆகியவைதான் சர்வாதிகார ஆட்சி பிறப்பதற்குக் காரணங்களாயிருந்தன. 'இதற்கு மேலும் மோசமாகப் போக முடியாது. நாம் இனி இழக்கக்கூடியது ஒன்றுமே யில்லை' என்ற நினைப்பும் ஒரு காரணமாக இருந்தது. நெறிமுறை, மனிதத் தன்மை, ஒழுங்கு ஆகிய கட்டுப்பாடுகள் எதுவும் இல்லாத சில மனிதர்கள் அல்லது ஒரு மனிதர் தெளிவான திட்டத்தோடு அதே சமயத்தில் இருந்ததும் ஒரு காரணமாகும். அப்படியானுல் எல்லாச் சர்வாதிகார ஆட்சிகளும் அல்லது அதிகாரத்துவ ஆட்சிகளும் நாஜிகொள்கையின் தன்மைகள் பெற்றிருந்தன என்பதன்று பொருள். ஜெர்மனியைக் காட்டிலும், இத்தாலியின் பாசிசம் 'கறைபடாத கைகளை' உடையதாயிருந்தது. கமால் பாஷாவோ, சாலாசாரோ (Kemal Pasha or Salazar) ஹிட்லரோடு (Hitler)ரோடு சேர்த்து எண்ணப்படக் கூடியவர்கள் அல்லர். ஆயினும் அரசின் சர்வ வல்லமையான உரிமைகள் கொள்கையும், நாட்டிற்கு அவசியம் என்பது தவிர வேறு எக்காரணங்களாலும் அரசின் நடவடிக்கைகளைத் தடைசெய்ய அனுமதிக்காததும் ஆகிய அடிப்படைக் கொள்கைகள் எல்லா இடங்களிலும் ஒன்ருகத்தான் இருந்தன.

## சர்வாதிகாரத்தின் தற்போதைய தன்மைகள்

### 1. குறைகூறும் உரிமையின்மை

எதிர்க்கவோ அல்லது குற்றங் கூறவோ உள்ள எவ்வித உரிமையையும் அறுதியாக மறுத்துவிடுவது இவ்வகை ஆட்சிகளின் பிரதான தன்மையாக இருக்கிறது. நீங்கள் உங்கள் வாழ்வையும், சுதந்தரத்தையும் இழக்கத் தயாராக இருந்தால் அவர்களிடமிருந்து வேறுபடலாம். இந்த ஆட்சிகளின் துவக்க காலத்திலிருந்து கைதிகள் முகாம்கள் (Concentration Camps) பிரிக்கப்பட முடியாதவையாக இருந்துவருகின்றன. எப்பொழுதாவது பிளிபிசைட் (Plebiscite) அல்லது தேர்தல் மூலமாகப் பொதுமக்களின் ஆலோசனையைக் கோருவதுண்டு. ஆனால் 'முடியாது' என்று சொல்லக்கூடிய வாய்ப்பைத் தருவதில்லை. அவ் வமைப்பில் ஈடுபாடு கொண்ட இரு நபர்களில் ஒருவரைத் தேர்ந்தெடுக்கச் சொல்வார்கள். கம்யூனிஸ்டுகளுக்கும் சரி, பாசிசவாதிகளுக்கும் சரி, எதிர்ப்பு என்பது துரோகம் ஆகும். நாட்டின் நல்வாழ்வோடு இந்த ஆட்சி ஓரினப் படுத்தப்பட்டிருப்பதால் இதை எதிர்ப்பது நாட்டின் நலனுக்கும், அதன் விருப்பாற்றலுக்கும் எதிராக நிற்பதாகத்தான் பொருளாகும். எனவே, பத்திரிகைச் சுதந்தரம், கூட்டச் சுதந்தரம், சங்கம் அமைக்கும் உரிமை ஆகியவை இருக்கமுடியாது. பேச்சு மேடையினின்று பேசும் சமயச் சொற்பொழிவாளர்கூடக் குறைகூறுவதைத் தவிர்த்தாக வேண்டும்.'[1] ஆட்சியை மகிமைப்படுத்தும் வகையில், ஆட்சியாளர் விதித்திருக்கும் ஒரு முறையில் எல்லாப் பாடங்களையும், சிறப்பாக வரலாற்றுப் பாடத்தை ஆசிரியர்கள் நடத்தவேண்டும். வெறுங்கல்வி மாத்திரம் என்றில்லாமல் கலாச்சாரம், விஞ்ஞானம் ஆகிய அனைத்தும் ஆட்சியின் கைப்பாவைகளே. ருஷ்யாவில் இலக்கியம், சங்கீதம், ஓவியம் ஆகிய துறைகளைச் சரியான சோவியத் கலையாக மிளிரச்செய்ய நடைபெற்ற 'களையெடுப்புகளை' (Purges)க் கேட்ட அனைவருக்கும் அவை அதிர்ச்சியாகவும், வேடிக்கையாகவும் தோன்றின. பூர்ஷுவாக் கலாச்சாரத்திலிருந்தும் பாட்டாளி வர்க்கத்தின் கலாச்சாரம் வேறுபட்டிருக்க வேண்டும் போலத் தோன்றுகிறது. ஆனால் ஜெர்மனி 'பன்னாட்டு உறவுகளைப்பற்றிய இயல், கல்வி ஸ்தாபனங்களில் பன்னாட்டுறவுப் போதனை, ஆராய்ச்சி ஆராய்ச்சிக்காகவே என்ற முடிவு ஆகியவைகளை மறுத்தது. எவ்வாறு நிகழ்ச்சிகள் நடைபெற்றன என்பதைப்பற்றி வரலாறு

[1] எனினும் 1936 ஆம் ஆண்டு ஜெர்மனியில் ஒரு லுத்தரன் போதகரால் இரண்டு துணிச்சலான சொற்பொழிவுகள் ஆற்றப்பட்டன எனக் கேள்வியுற்றோம். இவர் நாஜி ஆட்சியை நேரடியாகக் கண்டனம் செய்யாமல், அதன் இனக் கொள்கைகளையும், திருச்சபைகளைக் கட்டுப்படுத்த முயல்வதையும் கண்டிக்கத் தயங்கவில்லை.

போதிக்காமல், ஜெர்மானியர்களின் பழங்காலத்திலிருந்த நிகழ்ச்சிகளால் அவர்களை வழி நடத்துவதற்காகவே வரலாறு போதிக்கப்பட்டது.'[1] ஒரு ஜெர்மன் பௌதிக நிபுணர் (Physicist) கூறியது போல, 'இயல் பன்னாட்டுச் சார்புடையதாக இருப்பதாக என்னிடம் சொல்லக்கூடும். ஆனால் அது பொய்யாகும்; மற்றெல்லாப் பொருள்களையும்போல இயலும் இனத்தினாலும் இரத்தக் கலப்பினாலும் ஏற்படுவதாகும்.'

## 2. தேசியப் போக்குகள்

இரண்டாவதாகத் தோல்வியின் புறத்தே இச் சர்வாதிகார ஆட்சி தோன்றியமையால் தேசியப் புனர்வாழ்வு, தேசியப் புனரமைப்பு ஆகியவைகளின் வெளியீடாகவே அமைந்தன. எனவே அவைகள் தீவிரமான தேசியச் சுதந்தரம், முழுவதான சுயதேவைப் பூர்த்தி ஆகிய கொள்கைகளைக் கடைப்பிடித்தன. அத்துடன் 'கீழ்த்தர' நாடுகள்மீது ஆதிக்க உரிமை இருப்பதாகவும் அவை கூறிக் கொண்டன. இன்றுள்ள முறையில் தேசியமானது 1806-ல் பிரஷியாவின் தோல்விக்குப் பிறகு பிறந்ததாகும். 1919-ல் ஜெர்மனியின் தோல்விக்குப்[2] பிறகு இது புதுப்பிக்கப்பட்டு வெளியிடப்பட்டது. இத்தாலி வெற்றிபெற்ற நாடாக இருந்தும் வெற்றியில் ஏற்பட்ட ஏமாற்றத்தின் விளைவாகப் பாசிசம் தோன்றியது. நாட்டைக் காட்டிலும் வர்க்கத் தொடர்புகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து ஆதியில் கம்யூனிசப் புரட்சித் தோன்றியது என்றாலும், பின்னர் நாளடைவில் பழைய தேசிய வீரர்களை வரலாற்றில் பழைய நிலைக்குத் திரும்பவும் கொணர்ந்ததுமல்லாமல் அவர்களைப் பொது மக்களின் புகழ்ச்சிக்கும் இலக்காக்கினார்கள். இவ்வாறாகக் கம்யூனிசப் புரட்சி தேசியத்தோடு ஓரினப்படுத்தப்பட்டது.

இவ்வகையான தேசியம் மற்ற நாடுகளின் உரிமைகளை மறுதலிக்கிறது என்பது வெளிப்படை. 'விஞ்ஞானம், பொறிநுட்பம் ஆகியவற்றில் ஏற்பட்டிருக்கும் விரைவான வளர்ச்சியினால் மனித சமுதாயம் நிறைவெய்திவிட்டதாக நாம் நம்புகிறோம். இந்தப் பருவ காலத்தில் உலகமெங்கும் தனியாள் உரிமைகளை ஒதுக்கித்

[1] at Gottingen University, 1937.

[2] 'எங்களுக்காக மாத்திரமல்லாமல், எல்லா மனித சமுதாயத்திற்காகவும் நெறிவாழ்வின் பூரணத்தைப் பெறச் செய்வதற்காக உலக அரங்கில் நாங்கள் வைக்கப்பட்டிருக்கிறோம் என்ற நம்பிக்கை உணர்ச்சியோடு நாங்கள் எங்கள் பணியைத் துவங்குகிறோம். மனித சமுதாயத்தின் முன்னேற்றத்திற்கு ஏதாவதொரு முக்கியமற்ற நாட்டினத்தை அரசியல் கூறாக நிலைக்கச் செய்வது, தரமான கலாச்சாரத்தின் ஒளி விளக்கங்களாகத் திகழும் உலக நாடுகளின் வளர்ச்சியைக் காட்டிலும் அவசியமானது என்பதை நாங்கள் ஒப்புக்கொள்ள முடியாது.' (Dr. Rohrbach, 1912).

தள்ளிவிட்டுப் புரட்சிகரமானதொரு மாற்றம் ஏற்படும் என்று நம்புகிறோம். தனியாள் உரிமை, தனியுரிமை முன்னேற்றக் கருத்து என்றழைக்கப்படும் பூதங்கள் எல்லாம் ஒதுக்கித் தள்ளப்படும் பருவத்தை மனித சமுதாயம் அடைந்திருப்பதாக நாங்கள் நம்புகிறோம்.

'சக்திகளுக்கு அணைபோடும் வேலிகள் போன்று வளைந்து செல்கின்ற 'சீனத்துச் சுவர்'களென விளங்கும் கேலிக் கூத்தான வரம்புகளைத் தகர்த்துப் போடுங்கள். தவறான இடங்களில் தேவையில்லாமல் கட்டப்பட்டு நிற்கும் தொழிற்சாலைகளை இடமாற்றம் செய்யுங்கள்; அல்லது தகர்த்துப் போடுங்கள்; அவர்கள் வேண்டப்படாத இடங்களில் வாழும் மிகையான மக்கள் தொகையைக் கலைத்து ஒழுங்குபடுத்துங்கள். அவர்கள் வேண்டப்படும் இடங்களுக்கு மக்கள் தொகையைக் குடிபெயரச்செய்து, அவரவர் திறன்களுக்கேற்ப உற்பத்தி முறையை மாற்றியமையுங்கள். சக்திகளின் சமநிலைக்கு இடைஞ்சலுண்டாக்கித் தங்களது செல்வாக்கை நிலைநிறுத்த விரும்பும் சக்திகளை அழித்துவிடுங்கள். பொதுவாக இப்படிப்பட்ட செல்வாக்கு, திருச்சபைகளிலிருந்தோ, வெளிநாட்டு மூலதனத்திலிருந்தோ, அல்லது முற்காலத் தத்துவங்கள், சமயங்கள், நெறிக்கலை, அழகுக்கலை ஆகியவற்றிலிருந்தோ வரக்கூடும்.'[1]

## 3. அரசை வழிபடுதல்

எவ்வளவுதான் தேசீய வாதிகளெனினும், அதிகாரத்துவ வாதிகள் பிரதானமாக அரசை வழிபடுபவர்கள்தாம். இது அவர்களின் மூன்றாவது தன்மையாகும். இங்கு முக்கியமாயிருப்பது அரசன்றி வேறன்று. பாசிசக் கொள்கையின் தீர்க்கதரிசிகளில் ஒருவரான ஜென்டைல்(Gentile) கூறுவதுபோல, 'அரசாக இருக்கும் அளவுக்குத்தான் நாட்டிற்கு உயர்ந்த ஆள்தத்துவம் இருக்கிறது. அரசை ஊக்குவிப்பதற்காக நாடு இருக்கவில்லை. அரசால் அது ஆக்கப்பட்டது. தங்களது நெறி ஒருமைப்பாட்டை உணர்ந்து கொண்ட மக்களுக்கு அது விருப்பாற்றலை அளித்து, அதன் பயனாக அதற்கு ஆற்றலுள்ள வாழ்வளிக்கிறது'. முசோலினி குறிப்பிடுவது போல அரசு பாசிசத்தன்மை பெற்றிருக்க வேண்டுமானால், 'எல்லாவற்றையும் தழுவியதாக அது இருக்கவேண்டும். மானிட அல்லது ஆத்மீகப் பண்புகள் அதற்கு வெளியே இருக்கமுடியாது. அவைகளுக்கு யாதொரு மதிப்பும் இருக்கமுடியாது. பாசிசம் சர்வாதிகாரம் பெற்றது. எல்லாப் பண்புகளையும் உள்ளடக்கிய ஒருமைப்பாடே பாசிச அரசாகும். மக்களின் முழு வாழ்க்கையையும் ஆற்றலுள்ள

[1] கீஸ்ட்லர் (Koestler) அவர்களின் நூலாகிய 'Arrival and Departure.'

தாக்கி, வளர்ச்சியுறச் செய்து, அதற்கு விளக்கமுந் தருகிறது. ஒவ்வொன்றும் அரசுக்குட்பட்டதாக இருக்கவேண்டும். எதுவும் அதற்கு வெளியில் இருக்கமுடியாது.'

ஒரே சீராக அமைப்பதன்மூலம் ஒருமைப்பாட்டைப் பெறுவது என்று இதன் அடிப்படைக் கருத்தை விளக்கலாம். பல முறைகளைக் கண்டு அச்சம், ஜனநாயகம் எதை மிகவும் முக்கியமானதாகவும், பயனுள்ளதாகவும் கருதுகிறதோ அவ்வேறுபாடுகளிடம் அச்சம், ஒத்துப்போகாதவனைக் கண்டு அருவருப்பு, தானாகவே நடந்து கொள்ளவும், தானாகவே சிந்திக்கவும் விரும்பும் மனிதனிடம் அச்சம், அரசு விதிக்கும் முழுவாழ்க்கைத் திட்டத்தில் நம்பிக்கை—ஆகியவையே பாசிசத்தின் அடிப்படைக் கருத்துக்கள் என்று கூறலாம்.[1] மனித இயல்பை ஓர் அச்சுக்குள் வார்த்து, உறுதியான அமைப்பை அளிப்பது என்ற கருத்து இதன் உட்பொருளாகும். மனித வர்க்கம் தன்மீது திணிக்கப்படும் வாழ்க்கை வழிகளை ஒப்புக் கொள்வது அல்லது அவர்கள் சொந்த சுதந்தரத் துவக்க உரிமையால் அவற்றை அடைய முடியாத நிலையை உணர்வது என்ற உட்பொருளை இதன் கருத்தாகக் காணலாம்.

4. ஒரே கட்சி

அரசாங்க முறைகளுக்கு வருவோமானால் வல சாரியோ இட சாரியோ எல்லா அதிகாரத்துவ ஆட்சிகளும் ஒரேமாதிரியான செயல் நுட்ப முறையைப் பின்பற்றுவதைக் காண்கிறோம். இதன் தலைமைப் பதவியை வகிக்கும் தலைவரோ அல்லது சர்வாதிகாரியோ ஒவ்வொரு காரியத்தையும் தானே செய்ய இயலாது; அவர் சமுதாயத்தின் சிறந்த சில நபர்கள் அல்லது பொறுக்கி யெடுக்கப்பெற்ற ஆளும் வர்க்கம் ஆகிய ஏதாவதொன்றின் மூலமாகத்தான் தமது ஆட்சியை நடத்த முடியும். இந்த வர்க்கந்தான் இவ்வமைப்பின் ஆதாரமான கட்சியாகும்.

சர்வாதிகாரம், கட்சி அரசியலை நிராகரிக்கிறது. ஏனெனில் அது எப்பொழுது ஒருமைப்பாடு தேவையோ அப்பொழுது அபிப்பிராய பேதம் இருக்கலாம் என அனுமதிக்கிறது. என்றாலும் சர்வாதிகார

[1] அதிகாரத்துவக் கோட்பாடானது ஆன்மீகச் சக்திகளில் பல வகைகள் இருப்பதாலும், அவைகளுக்கிடையே மோதல்கள் நேருவதாலும் வாழ்க்கை வளமும் உயர்வும் பெறுகின்றது என்று கூறும் முன்னேற்றக் கோட்பாட்டை முக்கியமாக மறுக்கிறது. அதற்கு மாறாகத் தானாகத் தோன்றும் சக்திகள் தங்களுக்குள் மோதிக்கொள்வதை அது நம்புவதில்லை. இவ்வாறான மோதல்களை நிறுத்தவோ அல்லது தவிர்க்கவோ அது முயற்சி செய்து அவைகள் பின்பற்றவேண்டிய வழிமுறைகளையும் போதிக்கின்றது' (குரோசே–Croce)

மானது ஒரு கட்சி தன் விதிகளை மீறியதன் விளைவாகவே ஏற்படுவதாகையால் அது கட்சி அமைப்பின் புறத்தே தோன்றியது எனக் கூறலாம். பெரும்பான்மை முடிவுகளை ஏற்றுக்கொள்ளுதல், சிறுபான்மையாக இருக்கும்போது தன் போக்கில் நடப்பதற்காக வன்முறையைப் பின்பற்றுவது, சுதந்தரமான பொதுமக்கள் அபிப்பிராயத்தின் ஆதரவு பெறுவதற்குச் செய்யும் பிரச்சார சுதந்தரத்தில் நம்பிக்கை ஆகிய விதிகளை ஒரு கட்சி மீறும்போது சர்வாதிகாரம் தோன்றுகிறது. முதலில் ருஷ்யக் கம்யூனிஸ்ட் கட்சியும், பிறகு இத்தாலியில் உள்ள பாசிச வாதிகளும், பின்னர் ஜெர்மனியின் தேசீய சோஷியலிஸ்ட்டுகளும் தங்கள் சிறுபான்மை அந்தஸ்தை ஒப்புக்கொள்ள மறுத்து, வன்முறைப் பிரயோகத்தின்மீது அதிகாரத்துக்கு வந்தன. வன்முறை என்றால், நேரடியான பலாத்காரம் என்று கூறமுடியாவிட்டாலும், அரசியல் அமைப்புச் செயல்பாட்டையும், விதிகளையும் சிதைப்பதன் மூலம் அவை அதிகாரத்துக்கு வந்தன. அதிகாரத்துக்கு ஒரு தடவை வந்தவுடன் அவை இதர கட்சிகளை அடக்குமுறை செய்ய ஆரம்பித்தன. கட்டுப்பாடற்ற தேர்தல் நடத்த மறுத்தும், பொதுமக்கள் அபிப்பிராயத்தை வெளியிடும் சுதந்தரத்தை அடக்கவும் செய்ததன் விளைவு இவைகளுக்கு அதிகாரம் ஏகபோக உரிமையாயிற்று.

முக்கியமான எப்பதவி வகிக்கவும் கட்சியில் அங்கத்தினராக இருப்பது அத்தியாவசியமானதாக ஆயிற்று. சந்தர்ப்பத்துக்குத் தகுந்தவாறு கட்சியின் கதவுகள் மூடப்பட்டும், திறக்கப்பட்டும், திறந்தே வைக்கப்பட்டும் இருக்கும். ஆனால் அங்கத்தினராவதற்கு மிகக் கடுமையான உழைப்பும், தகுதிகளும் தேவைப்படுகின்றன. 'ஒரே கட்சி' முறை என்பது முரண்பாடான சொற்றொடர் ஆகும். ஏனெனில் ஒரு கட்சி இருப்பது என்பது மற்ற கட்சிகள் இருக்கின்றன என்பதன் உட்பொருளாகிறது. எப்படி ஒரு பகுதி முழுமையைக் காட்டிலும் சிறியதோ அப்படித்தான் இதுவும். இவ்வாறாகக் 'கட்சி' என்ற சொல்லைச் சிதைத்தது அவர்களின் முதல் தந்திரம் என்றும் சொல்லமுடியாது; கடைசித் தந்திரம் என்றும் கூறமுடியாது.

ஆக, இக்கட்சி புதிய ஆளும் வர்க்கமாகிறது. தீவிர வைதீகத்தோடு கூடிய கட்சியின் கோட்பாடு, தலைவரிடத்துத் தீவிர விசுவாசம், கட்சியின் பெரியவர்கள் விடுக்கும் ஆணைகளுக்குத் தயங்காமல் கீழ்ப்படிதல் ஆகியவைகளின் ஆதாரத்தின்மீது இக் கட்சி நடைபெறுகிறது. ஆனால் கட்சி பெரியதாயிருக்கிறது. உண்மையான அதிகாரம் கட்சியின் உட்குழு ஒன்றின் கைகளில் இருக்கிறது. கட்சியின் ஆரம்ப ஸ்தாபகர்கள், செல்வாக்கு மிக்க பிரமுகர்கள்,

தெரிந்தெடுக்கப்பட்ட விசுவாசமுள்ள சிலர் ஆகியவர்களைக் கொண்டதே இவ்வுட்குழுவாகும். இவ்வுட்குழு, தனது பதவிக் காலத்தைத் தானே நீடித்துக் கொள்ளும் தன்மை பெற்றது. அதுதான் தலைவரை முதலில் தேர்ந்தெடுத்தது. அதேபோன்று அவருக்குப் பிறகு வரப்போகிறவரையும் அதுவே தேர்ந்தெடுக்கக் கூடும்.[1]

## முப்படிச் சர்வாதிகாரம் (Three-fold Dictatorship)

சர்வாதிகார ஆட்சி நடைமுறையில் மூன்று வகையான சர்வாதிகாரங்களின்மீது சார்ந்து நிற்கிறது. பொதுமக்களைப் பொறுத்தவரையில் கட்சியும், கட்சியைப் பொறுத்தவரையில் அதன் உட்குழுவும், உட்குழு, கட்சி, நாடு ஆகியவை பொறுத்தமட்டில் தலைவரும் சர்வாதிகாரம் பெற்றிருக்கின்றனர். இலட்சிய நோக்கின்படி நாம் இதைப்பற்றி என்னதான் நினைத்தாலும், இது ஆற்றல் மிக்கதோர் அரசாங்கமுறை என்பதை நிரூபித்துவிட்டது. ஜெர்மனியில் பதினேரு ஆண்டுகளுக்குப் பின்னும், இத்தாலியில் இருபத்திரண்டு ஆண்டுகளுக்குப் பின்னும் இச் சர்வாதிகாரங்கள் போரில் நேர்ந்த தோல்வியால் முடிவுற்றன. ருஷ்யாவில் முப்பத்தோராண்டுகளாகின்றன. அது இன்னும் மேலோங்கி வளர்ந்து கொண்டே இருக்கிறது என்பது வெளிப்படையாகும்.

## (iv) பாசிச 'அதிகாரத்துவ'க் கொள்கை

### பாசிசத்தின் அரசுக்கொள்கை

அதிகாரத்துவ ஆட்சிகளின் பணிமுறை இயல்புகளைப்பற்றி இதுவரை ஆராய்ந்தோம். இவை கம்யூனிசத்திற்கும் பாசிசத்திற்கும் பொதுவானவையாகும். அவைகளின் கோட்பாட்டுத் தோற்றுவாய்களையும், நோக்கங்களையும்பற்றி ஆராயும்போது இவ்வித இணையான தன்மை சிதைந்துவிடுகிறது. வெவ்வேருன அரசின் தத்துவங்களின்மீது அவைகள் ஆழமாக வேரூன்றி இருக்கின்றன என்பது தெளிவு. முதலில் பாசிசத்தை எடுத்துக்கொள்வோம்.

[1] பாசிச நாட்டிலும், நாஜி நாட்டிலும், அவர்களது ஆரம்பநாள் தலைவர்களே இக் கட்சிகள் வீழ்ச்சியுறும்வரை தலைவர்களாக இருந்திருக்கிருர்கள் என்பது கவனிக்கவேண்டிய ஒன்ருகும். இக் கட்சிகளில் உள்ள உட்குழு முக்கியமான மாற்றங்களை அடைந்தனவென்ருலும் இவ்வாறு நேர்ந்தது. 1924-ல் லெனினிடமிருந்து ஸ்டாலினுக்கு அதிகாரம் கைமாறியபோது ஆரம்பகாலக் கம்யூனிஸ்டுகளில் கிட்டத்தட்ட எல்லோரும் படிப்படியாக விலக்கப்பட்டார்கள். முழுவதும் வேருன உட்குழு ஒன்று, அதன்பின் அமைக்கப்பட்டது.

'பாசிசம் ஒரு கோட்பாடு என்பதை மறுப்பது பயனற்றதும், ஆழ மற்றதும் ஆகும். பொருளாதாரமே அதிகாரத்தின் பிறப்பிடம் என்ற கொள்கையின் நிறைவுத் தன்மையைப் பாசிசக் கொள்கை திட்டமாக மறுக்கிறது. அதற்குப் பதிலாக, நபர் சார்ந்த அதிகாரத்தைக் கொள்கையாக விவரிக்கிறது. இது பிளேட்டோவின் ஆதிகால எதிர்ப்பாளர்களும் அவர்கள் கொள்கைகளையும்போலப் பழைமையானது. 'அதிகாரம் இருப்பதே அது இருப்பதற்குரிய நியாயமாகும்' என்று அவர்கள் கூறுகிறார்கள். 'பாசிசம் ஆட்சியாக மட்டுமல்லாமல் கோட்பாடாகவும் இப்பொழுது நிறைவு பெற்றுவிட்டது' என்று அதிகாரபூர்வமான 'பாசிசக் கோட்பாடு' (Dottrina fascista) ஒருமுறை வெளியிட்டது.

'திட்டமான நிகழ்ச்சிநிரலினால் அதன் வல்லமையானதும் சிக்கலானதுமான மனப்போக்கிற்கு உருவம் சமைக்க முயற்சி செய்த தில்லை. ஆனால் எப்பொழுதும் மாறிக்கொண்டே இருக்கும் தனியாள் உள்ளுணர்வைப் பின்பற்றுவதன்மூலம் பாசிசம் வெற்றிபெற்றது. கடந்த சில ஆண்டுகளில் நான் சொன்னதும், செய்ததும் உள்ளுணர்வு மூலம் பெறப்பட்ட ஒப்பீட்டடித் தத்துவமே (Relativism). உறுதியாக நிலைபெற்ற வகைகளிடத்து அருவருப்பும், புறநோக்கான உண்மையைத் தாங்கள்தான் தாங்குவதாகக் கூறும் மனிதர்களிடத்து அருவருப்பும் கொள்வதுதான் ஒப்பீட்டடித் தத்துவமாயின், பாசிசத்தைக் காட்டிலும் ஒப்பீட்டடித் தன்மையுள்ள கொள்கை வேறொன்றுமில்லை. பாசிசவாதிகளான நாங்கள் எல்லாக் கொள்கைகளிடத்தும் அக்கறையற்ற தன்மையை எப்பொழுதும் முழுவதாகக் காட்டி வந்திருக்கிறோம். பரம்பரை பரம்பரையாக ஒப்புக்கொள்ளப்பட்டு வந்த அரசியற் கொள்கைகளை விலக்கி வைக்கும் துணிச்சல் எங்களுக்கிருந்தது. நாடு என்ற ஒரே கண்ணோட்டம் இருப்பது போதுமானது. கருத்துக்கொள்கைகள் அனைத்தும் சம மதிப்புடையவை என்பதோடு அவை வெறுங் கற்பனைகளுங்கூட. இந்த உண்மையினின்று, ஒவ்வொருவரும் தங்கள் சொந்தக் கருத்துக்கொள்கையை ஆக்கிக்கொள்ள உரிமை யுண்டு என்று ஒப்பீட்டடித் தத்துவவாதி உய்த்துணருகிறார்,' என்ற முசோலினியின் கருத்து இங்குக் கவனிக்கப்படல் வேண்டும். இருப்பினும் இப்படிப்பட்ட அறிக்கைகளுக்கு முக்கியத்துவம் அளித்து விடவேண்டியதில்லை. எந்தவித அமைப்பும் ஆதாரத் தத்துவமின்றி நீடித்து நிலைக்கமுடியாது. ஆகவே பாசிச, நாஜி ஆட்சிகளும், ஏனைய அதிகாரத்துவ ஆட்சிகளும் தெளிவானதும், திட்டவட்ட மானதுமான அரசியல் தத்துவம் உடையனவாகவே இருக்கின்றன. அதன் உண்மையை வேண்டுமானால் மறுக்கலாம். ஆனால் அது இருப்பதை நாம் மறுக்கமுடியாது.

## வரலாற்றில் பாசிசத்தின் தோற்றுவாய்

ஃபிரஞ்சுப் புரட்சி, அதன் கோட்பாடுகள் ஆகியவற்றிற்கு ஏற்பட்ட எதிர்ப்பின் புறத்தே பிறந்ததுதான் தற்கால அதிகாரத் துவக் கொள்கையாகும். 'மாற்றமுடியாத அளவுக்கு நவீன காலத்திற்கு எதிரானவர்களாக இருக்கிறோம்' என்று ஓர் இளம் பாசிசவாதி எழுதுகிறார். தற்கால அதிகாரத்துவக் கொள்கையின் முதலாவது ஸ்தாபகர் என்று கூறத்தகும் ஜோசப் டி மேஸ்திரே (Joseph de Maistre) என்பவரின் கொள்கையை எதிரொலிப்பது போல மேற்கூறிய இளம் பாசிசவாதியின் கூற்று இருக்கிறது. புரட்சிக்கும், அதன் எல்லா நோக்கங்களுக்குமான எதிர்ப்பு என்று இவரது கொள்கையைச் சுருக்கிக் கூறலாம். 'ஃபிரஞ்சுப் புரட்சிக்கும் நற்பண்பிற்கும் இடையே இயல்பான வெறுப்பு இருக்கிறது. அதே போன்று அது வருவதை முன்னறிவித்தவர், தீர்க்கதரிசிகள் ஆகிய வர்களுக்கும் நற்பண்பிற்குமிடையே இயல்பான வெறுப்பு இருக் கிறது' என்று அவர் எழுதினர். 'உண்மையைப் பேசும்போது கூட ரூசோ (Rousseau) ஏமாற்றுகிறார். வால்ட்டேரி (Voltaire)ன் எழுத்தால் கவரப்படுபவன் எவனையும் கடவுள் நேசிக்கமாட்டார் என்பதை நிச்சயமாக அறிந்துகொள்ளலாம்.' 'சமுதாய ஒழுங்கு எவ்வாறு பெறப்பட்டதெனினும், தனியாள் சுதந்தரத்தைக் காட்டிலும் முக்கியமானதாகும். சமத்துவத்தின் மீதல்லாமல் இயற்கையான வேறுபாடுகளின்மீதே சமுதாயம் அமைந்திருக்கிறது,' என்ற வலியுறுத்தலின்மூலம் 1789ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட முக்கியக் கொள்கைகளை அவர் தள்ளிவைக்கிறார்.

'எவ்வாறு பெறப்பட்டதெனினும்' என்ற சொற்றொடர் முக்கிய மானது. அளவிலாவது அல்லது அடையும் விதத்திலாவது மேலாண்மைக்கு வரம்பு இருக்கமுடியாது.' எப்படி ஆட்சி செய்ய வேண்டும் என்பதைத் தேர்ந்துகொள்ளக்கூடியவராக மன்னர் இருக்கவேண்டும். தருணங்கள் வாய்க்கச்செய்யும் சில வழிகளை அவர் கடைப்பிடிக்கக்கூடாது என்று நீங்கள் அவரைத் தடைசெய்யக் கூடாது. ஒரு தந்தை தன் மகனின் கடிதங்களை எப்பொழுதும் திறந்து பார்ப்பதில்லையென்றோ அல்லது எப்பொழுதும் திறந்து பார்ப்பேன் என்றோ உறுதிமொழி அளிக்க முடியாது'. எனவே தனி யாள் உரிமைகள்பற்றிப் பேசுவது பயனற்ற செயலாகும். 'சமுதாய அமைப்பின் ஆதாரம் ஆட்சியாளர்களின் கைகளில் எல்லா உரிமை களையும் குவித்துவைப்பதே ஆகும். ஆளப்படுபவர்களின் உரிமை கள் என்பது ஆட்சிக்குலைவு என்றுதான் பொருளாகும். சமுதாயத் தின் அடிப்படைகளையே நாள்தோறும் ஒவ்வொருவரும் மறுக்க

நிரந்தரமான உரிமையுண்டு என்பது சமுதாய அமைப்பிற்கு எப்பொழுதும் பொருத்தமில்லாததாகவே இருக்கும்.'

## நம்பிக்கை என்னும் ஆதாரத்தின்மீதெழுந்த கீழ்ப்படிதல்

அவ்வாறெனின் அரசியல் அமைப்பின் ஆதாரந்தான் என்ன? பகுத்தறிவின் புறத்துப் பிறக்கும் கீழ்ப்படிதல் அல்லாமல் 'நம்பிக்கை'யின் புறத்துப் பிறந்த கீழ்ப்படிதலேயாகும். தகுதி வாய்ந்த மேலாண்மையால் வெளியிடப்படும் கோட்பாடுகளில் வெளியரங்கமான நடைமுறை தெரிந்துகொள்வதற்கு முன்னரே தாங்களாகவே அவைகளில் நம்பிக்கை கொள்ளவேண்டும். அறிவியலிலும், நெறியியலிலும் மனித சமுதாய ஒருமைப்பாட்டை ஏற்படுத்தவும், நிலைக்கச்செய்யவும் இது முக்கியமானதொரு நிபந்தனையாகும்.

அரசியல் வாழ்வில் எவ்வளவு குறைவாகச் சிந்தித்தீர்களோ அவ்வளவுக்கு நல்லது. 'மனிதனின் தொட்டிலானது கோட்பாடு களால் சூழப்பட்டிருக்கவேண்டும். அவன் மனம் விழிப்படையும் போது அவனுடைய அபிப்பிராயங்கள் அவனுக்காக ஏற்கெனவே உருவாக்கப்பட்டுத் தயாராக இருக்கவேண்டும். இது அவனது நடத்தையைப் பாதிக்கும் காரியங்கள் ஒவ்வொன்றிலுமாவது இது நடைபெற்றாக வேண்டும். ஒருதலையான கருத்துக்கொள்ளச் செய் வதைவிட முக்கியமானது வேறொன்றுமில்லை.[1]

## பகுத்தறிவிடம் அச்சம்

முந்தைய அதிகாரத்துவக் கோட்பாடுகளின் தன்மையாக இருந்த பகுத்தறிவினிடத்து அவர்கள் கொண்ட அச்சமானது தற்காலத்துக் கோட்பாட்டின் தன்மைகளுள் ஒன்றாகவும் இருக்கிறது. நெடுங்காலத்துக்குப் பின்னர் டி மேஸ்திரே (de maistre)யின் சீடரான சார்லஸ் மாராஸ் (Charles Mauras) என்ற இன்னொரு ஃபிரெஞ்சுக் காரர் இதுபற்றி எழுதியுள்ளார். 'பழக்கங்கள் உணர்ச்சியற்றதொரு நிலையில் பின்பற்றப்படுவதால் அவை மேலும் வலுவடைகின்றன. அவ்வாறான பழக்கங்களைப் போற்றுவதே முக்கியமானது. அவற்றை உணர்ச்சிநிலைக்குக் கொணர முயல்வது கிட்டத்தட்ட தெய்வ நிந்தனை போன்றது. அரசின் விவகாரங்களைப்பற்றிக் குடிமகன் சொந்த அபிப்பிராயம் கொண்டிருக்கவேண்டும் என இக் காலத்தில்

[1] மாரிஸ் பாரெஸ் (Maurice Barres) அவர்களின் 'Scenes et Doctrines du Nationalisme.'

எதிர்பார்க்கப்படுவது நம் காலங்களில் நேரும் பேரிழப்பு ஆகும்.' ஹிட்லர் செய்ததெல்லாம் இவ்வாறாகப் பகுத்தறிவைப் புறம்பே ஒதுக்கச் செய்ததும், மனவெழுச்சிக்கு முக்கியங் கொடுத்ததுந்தான்.

'இறைவன் எனக்குக் காட்டிய வழியில் தூக்கத்தில் நடப்பவனின் உறுதிப்பாட்டோடு நடந்து செல்வதே' என்று தன் நிலையைப்பற்றி ஹிட்லர் விளக்கினார். 'இரத்தத்தினால் ஒருவன் சிந்திக்கவேண்டுமேயொழிய, தன் மூளையால் அல்ல' என்ற இன்னொரு நாஜி சுலோகத்தின் கருத்தை இது நிச்சயப்படுத்துகிறது. நாஜித் தலைவரான கிரீக் (Krieck) சொன்னதுபோல, 'சாதாரணப் பகுத்தறிவுக்கு எதிராக இரத்தமும், பயனுள்ள பகுத்தறிவுத் தன்மைக்கு எதிராக இனமும், இலாபத்திற்கு எதிராக மானமும், பூர்ஷுவாக்கள் அளிக்கும் பாதுகாப்பிற்கு எதிராக மண வாழ்க்கையின் தூய பண்பும், தனியாளுக்கும், மனிதக் கூட்டத்துக்கும் எதிராக மக்கள் இனமும் எழும்பியுள்ளன.'

## 'தலைவர்-கருத்துப்படிவம்' (Leader-Concept)

அதிகாரத்துவத்தின் ஆழத்தில் காணப்படும் 'தலைவர் - கருத்துப்படிவ'த்தைக் காட்டிலும் பகுத்தறிவுக்கு ஒத்தவைகளை ஒதுக்கி வைக்கப்படுவது வேறெங்கும் விளக்கமாகத் தெரிவதில்லை. டாக்டர் காபன் (Dr. Cobban) அவர்கள் கூறுவதுபோல், 'சர்வாதிகாரத்துவத்தின் இயல்புகளில் வேறெந்த இயல்பைவிட இதற்கு, அறிவியல் சார்ந்த முறையில் விரிவான விளக்கம் காண்பது மிகவும் கடினமானது. கட்சியின் தலைவராகவும், பின்னர் அரசு, கட்சி ஆகிய இரண்டின் தலைவராகவும் ஹிட்லர் மக்களிடத்தில், 'நீங்கள் உங்களது விருப்பாற்றலை என்னுடையதோடு ஒன்றாகக் கலந்துவிட வேண்டும்' என்று கேட்டார். 'ரோம் களையெடுத்தலு' (Rohm purge)க்குப் பிறகு, கோயரிங் (Goering), ரீச்ஸ்டாகி (Reichstag)ல் இவ்வாறு கூறினார்: 'ஜெர்மனியைக் குழப்பமான நிலை அச்சுறுத்துகிறது என்ற வெளிநாட்டாரின் எண்ணத்திற்கு, ஜெர்மன் மக்கள் ஒரே குரலில் பதிலிறுக்கின்றனர். 'நாங்கள் எப்பொழுதும் எங்கள் தலைவர் செய்யும் எதையும் அங்கீகரிக்கிறோம்.' 'தலைவரின் பொருளாதார, அரசியல் நிகழ்ச்சித் திட்டங்களைச் சோதித்துப் பார்த்து அதனால் நான் அத் தலைவரைப் பின்பற்றவில்லை. மாறாக அதுதான் சரியானதென்று நான் உணர்வதால் எனது தலைவர்பற்றை வெளியிடுகிறேன்.' எங்கு உண்மையான தலைமை காணப்படுகிறதோ அங்கு அத் தலைவரின் நோக்கங்களின் ஒரு பகுதியையே நான் அறிய முடிந்தாலும் அத் தலைவரின் தலைமைக்கு என்னை உட்படுத்தியிருக்கிறேன். என்னுடைய முழு நம்பிக்கையையும் அவருக்களிக்

கிறேன். என்னை முழுவதாக அவர் கவர்ந்துவிட்டார். வாழ்விற்கோ சாவிற்கோ அவர் இப்பொழுது என்னை வழிநடத்துவார். இருள் மண்டிக்கிடக்கும் பிற்காலம் என்னும் கருவிலிருந்துதான் பின்வரப் போகும் எல்லா முடிவுகளும் வெளிவர வேண்டும். கருவுற்றிருக்கும் இவ் விரவில்தான் அவை பிறக்கமுடியும்.'[1]

## நம்பிக்கை இழந்த நிலையின் விளைவால் தலைவர் தோன்றல்

இவ்வித மறைபொருளான தத்துவம் இவ்வாட்சி தோன்றிய சந்தர்ப்பங்களால் ஓரளவுக்கு விளக்கப்படுகிறது. 'தலைவர் நம்பிக்கை இழந்த நிலையினால் ஆக்கப்பெற்றவராவர். ஜனநாயக யுகத்தில் சிதைந்துபோன நிறுவனங்களுக்குப் பதிலாகத் தலைவர் தோன்றுகிறார். அரசியல் நிறுவனங்களின் மறைவு, ஆளும் வர்க்கத்தின் வீழ்ச்சி, ஒப்புக்கொள்ளப்பட்ட மதிப்பீட்டுத் தொகுதியின் சிதைவு ஆகியவை தலைவர் தோன்றியதற்குரிய காரணங்களை விளக்குகின்றன. எல்லாவற்றிற்கும் மேலாக மனிதர்கள் எப்பொழுது அரசாங்கம் ஏதோ தங்களுக்கு வெளியேயுள்ள ஒன்று என நம்ப ஆரம்பிக்கிறார்களோ, அப்பொழுது தலைவர் தோன்றுகிறார். எப்பொழுது தேவையான முயற்சிகள் எடுக்காமல் மனிதர்கள் களைப்புற்று, வேண்டுமென்றே தங்கள் பொறுப்புக்களைத் தட்டிக் கழிக்கிறார்களோ அல்லது சுயாட்சி நடத்துவதிலுள்ள கஷ்டங்களினால் இவ்வாறு செய்கிறார்களோ, அப்பொழுது தலைவர் தோன்றுகிறார். நாகரிகமுள்ள மனிதனின் இதயத்தில் அப்பொழுதுதான் சொந்தத் தலைவன் வேண்டுமென்னும் ஆதிகாலத்திய உணர்ச்சி தோன்றுகிறது. சமுதாயங்கள் நாகரிகத்தில் மிக முன்னேற்றமானதொரு கட்டத்தை அடையும்போது சொந்த அடையாளக் குறியீடுகளை அதன் அங்கத்தினர்கள் களைந்துவிடுவார்கள் என்றும், ஒரு கருத்தின்மீதுள்ள பற்றை ஒரு நபர் மூலமாக அல்லாமல் நிறுவனம் ஒன்றின் மூலமாக வெளியிட முடியும் என்றும் கூறப்படும் பொதுமைகளை எல்லாம் இது பொய்யாக்குகிறது. ஆனால் ஓர் அடையாளக் குறியீடாகத்தான் சர்வாதிகாரி ஒப்புக்கொள்ளப்படுகிறார். தற்காலச் சர்வாதிகாரத்துவங்களில் அவர் முக்கியமானதோர் அம்சமல்லர். சர்வாதிகார அரசு என்னும் கருத்துத்தான் வளமான கற்பனையின் மூலம், சர்வாதிகாரி என்ற கற்பனையைத் தற்காலத்தில் ஆக்கித் தந்திருக்கிறது. அதனுடைய வளர்ச்சிப்போக்கில், அதன் தன் விருப்பிற்கிணங்கச் சர்வாதிகாரியை உண்டாக்கிக்கொண்டிருக்கிறது.'

[1] 'New Statesman' என்ற பத்திரிகையில் வெளியான கட்டுரை ஒன்றிலிருந்து.

## தலைவர்-வழிபாட்டின் உளப்பாங்கு

*தற்காலச் சர்வாதிகாரங்களின் ஆதாரமாய் விளங்கும் ' தலைவர் தத்துவத் 'திற்கு, சிறிய அளவினதாகிய இதைப்போன்ற ஆராய்ச்சி நூலில் எவ்வளவு முக்கியத்துவமும் இடமும் அளிப்பது என்பது தெரிவதில்லை. இது கருதப்படத் தேவையில்லாது கடந்து செல்லும் ஒரு நிகழ்ச்சியா அல்லது அரசியலில் புதியதும் முக்கியமானதுமான ஓர் அம்சமா ?*

நபரின் திருவுரு வேண்டுமென்ற விருப்புடைய தற்காலப் பொது மக்கள் இயக்கங்களின் விளைவே தலைவர் வழிபாடு என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. தலைவர்மீது முழுவதாக நம்பிக்கைகொண்டு அவரைப் பின்பற்றும் ஒவ்வொரு நபரிலும் உள்ள வழுவாத தன்மையின் பிரதிபலிப்பே சர்வாதிகாரியின் வழுவாத தன்மையாகும். இத்தாலி முழுவதிலும் காணப்பட்ட, ' முசோலினி எப்பொழுதும் சரியாகத்தான் இருக்கமுடியும் ' என்ற சுலோகம் இதை விளக்குகிறது. தலைவரின்மீது நம்பிக்கை கொண்டவர்கள் தங்கள் தலைவர் தெய்வீக ஊக்கம்பெற்றவர் என்று நம்புவதானது அவரது ஆட்சியைத் தெய்வீக வழி நடத்துதலாகவே கருதுகிறார்கள். ' நம்முடைய தலை சிறந்த மனிதர்கள், முக்கியமாக நம் மாபெருந் தலைவர் (Duce) மிக உயர்வான இடத்திலிருந்து ஊக்கமும் உற்சாகமும் பெறுகிறார். ஒவ்வொரு மனிதனிலும் விருப்பாற்றல் என்னும் ஆக்கப்பெருக்கு ஊற்றெடுக்கும் உயர்வான பண்புகள் இருக்கின்றன ; இதிலிருந்து தான் சர்வாதிகாரிகள் பெறும் ஊக்கமும், உற்சாகமும் பிறக்கின்றன ' என்று 1926-ல் பாசிஸ்ட் கட்சி அறிக்கை கூறியது. ஃபிராய்டு (Freud) அவர்கள் பயன்படுத்திய சொற்களில், ' தலைவராக இருப்பது என்பது ஏறத்தாழ, ' தந்தையின் மாற்றாள் ' (Father-Subtitute) தன்மை பெற்றிருக்கிறது என்று மிகவும் பொருத்தமாகக் கூறப்பட்டிருக்கிறது. பெட்டெயின் (Petain) அவர்கள் ஆட்சி விஷயத்தில் இது மிகவும் பொருத்தமாக இருந்தது. ஏனெனில், அவருடைய தந்தைத் தன்மைபெற்ற ஆட்சியை ஓரளவுக்கு அவரது வயதின் மூப்பு, பார்வைக்கு நியாயமானதாகத் தோன்றச் செய்தது. ' ஒரு தந்தை போன்று உங்களுடன் பேசுகிறேன் ' என்பது அவர் வழக்கமாக உபயோகிக்கும் சொற்றொடர் ஆகும். அவரிடத்து மற்றவர்கள் குழந்தைகள் போன்ற போக்குடன் நடந்துகொள்ள வேண்டும் என்று அவரைப் பின்பற்றியவர்கள் அடிக்கடி அறிவுரை கூறினார்கள். ஆனால் ஒருவேளை இந்த இடத்தில் ' குழந்தை போன்ற போக்கு ' என்பதற்குப் பதிலாகக் ' குழந்தைத் தன்மை ' என்று கூறுவது மிகவும் பொருத்தமாக இருக்கக்கூடும். தந்தை முறைமை, சமத்துவத்தை நீக்கிவிடுகிறது. அன்பும், நற்பயன்

விளைவிக்கும் அச்சமும் கலந்த ஒரு கலப்புத்தான் குழந்தையின் தோரணையாகும். இந்த உறவின் நெருக்கமானது, தலைவரின், நற்பண்புகளையும், வெற்றிகளையும் பின்பற்றுபவர் தமதாக்கிக்கொள்ள வகை செய்கிறது.

இவ்வாறான மறைபொருள் தன்மைபெற்ற அடையாளம் காணும் இயல்புக்குக் காலத்தால் முற்பட்டது 'என் தலைவரைப் பின்பற்று' என்ற உள்ளுணர்வாகும். ஒரு நூற்றாண்டுக்கு முன்பு கார்லைல் (Carlyle) எழுதியதுபோல, 'எந்த நாடாயினும் அங்குக் குற்றமற்ற மனிதன் ஒருவனைக் கண்டுபிடித்து, மிக உயர்வான பதவிக்கு அவனை உயர்த்தி, உண்மையோடு அவனுக்கு மரியாதை செலுத்துங்கள். அந்த நாட்டிற்குக் குற்றமற்ற அரசாங்கம் அமையும் - வாக்குப் பதிவுப்பெட்டி இல்லை. பாராளுமன்றப் பேச்சுத் திறன் வாக்குப் பதிவு, அரசியல் அமைப்பு ஏற்படுத்தல், அல்லது வேறு உபாயங்கள் எவையும் இதைக் காட்டிலும் சிறப்பாக இருக்க முடியாது. அவ்வாறு உயர்த்தப்பட்ட தலைவர் செய்யச் சொல்பவை, நிச்சயமான ஞானமுடையதாகவும், பொருத்தமானதாகவும் இருக்கும். வேறெங்கும் எப்படியும் இதை நாம் தெரிந்துகொள்ள முடியாது. அது செய்யக்கூடிய காரியம் எல்லா வழிகளிலும் நம்மை நன்றியுடையவர்களாக இருக்கச் செய்யும். அவ்வாறு செய்வதற்கு எவ்வித ஐயப்பாடும் நேராது.' இது யாராவது வேறொருவருக்குத் தம் பொறுப்புக்களை விட்டுவிடக் கூடுமானால் அநேக மனிதர்கள் மகிழ்ச்சியிலிருப்பார்கள் என்பதைச் சுற்றிவளைத்துச் சொல்வதாகத் தான் இருக்கிறது. அவர்களுக்குப் பதிலாக இன்னொருவர் சிந்திக்கும்படி விட்டுவிட முடியுமானால் மகிழ்ச்சியளிக்கும். இவ்விதச் சிந்தனை பொதுவாக அங்கு நிலவும் உணர்ச்சிகள், வெறுப்புக்கள், மனவெழுச்சிகள் ஆகியவற்றிற்கு ஒத்ததாக அமையவேண்டும் என்ற கட்டுப்பாட்டின்பேரில் வேறொருவரிடம் தமக்காகச் சிந்திக்கும் பொறுப்பை விட்டுவிடலாம். 'தனி நபர்களின் அருவமான ஆனால் விடாப்பிடியான விருப்பங்களை வெளியிடச் செய்யும் அளவுக்கும், அவற்றைக் குவிமையமாகச் செய்யும் அளவுக்கும் தலைமையானது தற்காலிக வெற்றிபெற்றதாக இருக்கும்' என்று கிரிப்பித் (Griffith) எழுதுகிறார். மனிதனின் உள்ளியல்போடு பொருந்தியதாக அது இருக்கவேண்டும். முடிவுகளை நிறைவேற்றுவதில் பங்களித்து ஆக்க உணர்ச்சியைச் சம்பந்தப்பட்டவர்களுக்கு அதன் வழிமுறைகள் அளிக்கவேண்டும்.[1] இங்குத்தான் குறிப்பாக நாஜிக் கொள்கை வெற்றி அடைந்திருக்கிறது. ஹிட்லர் இதைச் சில சொற்களில் சுருக்கமாகக் கூறி இருக்கிறார். 'பொறுப்பை உணர்ந்த தலைமையின்

[1] 'ஒரு சர்வாதிகாரிக்காக – நாம் சொல்வனவற்றைக் கேட்டு நடக்கும் சர்வாதிகாரிக்காக'—மெரிடித் (Meredith—'Diana of the Crossways')

விளைவாக மேலிருந்து அதிகாரமும், கீழிருந்து நம்பிக்கையும், ஒழுங்கும் விழைகின்றன.' ஆனால், ஷெல்லி (Shelley)யின் கருத்து உண்மையாகவே இருக்கிறது:

'நற்பண்புள்ள இதயங் கொண்ட மனிதன் ஆணை இடுவது மில்லை; கட்டளைகளை ஏற்பதுமில்லை. பாழாக்கும் கொள்ளை நோயைப்போலத் தான் தொடுகின்றவற்றை யெல்லாம் அதிகாரம் அசுத்தமாக்குகிறது. ஞானம், நற்பண்பு, சுதந்தரம், சத்தியம் ஆகிய எல்லாவற்றிற்கும் சாபக்கேடாக விளங்கிக் கீழ்ப்படிதல் மனிதர்களை அடிமைகளாக்குகிறது. அத்துடன் மனித உடலைத் தானே இயங்கும் ஒரு பொறியாக மாற்றுகிறது.'

## பிரச்சார முறைகள்

இவ்விதமாக மனிதனின் உள்ளுணர்ச்சிக்கும், பகுத்தறிவற்ற தன்மைக்கும் விடப்பட்ட வேண்டுதல்கள் சர்வாதிகாரப் பிரச்சாரத் திலும் காணப்படுகின்றன. பிரச்சாரக் குறியீடுகள், ஆர்ப்பாட்டங் கள், சுலோகங்கள், உணவு கொடுத்தல், சர்க்கஸ் விளையாட்டுக்கள் முதலியன மூலமாகப் பிரச்சாரம் செய்வது சர்வாதிகார முறையாகும். 'மக்கள் கூட்டத்தின் கற்புநிலை யழித்தல்' என்று இவற்றை மிகப் பொருத்தமாக விவரித்திருக்கிறார்கள். 'லிட்டரரி சப்ளிமெண்ட்' (Literary Supplement) குறிப்பிடுவதுபோல, 'சர்வாதிகார ஆட்சிகள் தங்களின் சுய நலனுக்காகத் தங்கள் சமுதாயங்களில் விருப்பாற்றலுக் குட்படாதவற்றைக் கட்டுப்படுத்தும் முறையினால், காரியங்களின் பரிணாம ஒழுங்கு முறையைத் தலைகீழாக மாற்றிவிடுகின்றன.' 'பெரும்பாலான மக்கள் கூட்ட மனவெழுச்சியின் ஆதிக்கத் திற்குள்ளான சாதாரண உள்ளங்களை உடையவர்கள்' என்ற கருத்தை இது ஆதாரமாகக் கொண்டது என்று அதே கட்டுரை கூறுகிறது. அவர்கள், 'அறிவொளி பெறாதவர்கள்; குறுகிய கால நோக்கு உடையவர்களும்' ஆவார்கள். இதன் விளைவு: 'அரை வேக்காடான பிற்போக்குக் கொள்கைகளாலும், பச்சைப் புளுகுக ளாலும் தாக்கப்பட்டபோது அரசியல் பிராணியின் அறிவு மழுங்கிப் போயிற்று.'

மக்களுக்குள் மிகவும் அறிவாற்றல் பெற்றவர்களும், நன்றாகப் படித்தவர்களும் ஆன - ஒருவேளை எல்லா மக்களையும்விட அதிகமான அறிவாற்றல், கல்வியறிவு பெற்றவர்களான - இவர்கள் தங்களது அமைப்புத்திறன் முழுவதையும் சிந்திப்பதை நிறுத்திக்கொள்வதற்கு உபயோகித்தது மிகவும் விசித்திரமான முரணாகும். பைத்தியக்காரத் தனமான இனக் கருத்துக்கள், இனத் தூய்மைக் கருத்து, இன

உயர்வு ஆகியவை ஏன் உயிரியல் விதிகளின் நிரூபணங்கள்மீது வெற்றிகாண முடிந்தன? விடுதலைக் கருத்தையும், அதனோடு சேர்ந்த மனித கலாச்சாரத்தின் ஆக்க உணர்ச்சியையும் ஐரோப்பாவின் பெரும்பகுதியில் சர்வாதிகாரிகள் அழித்துவிட முடிந்தது ஏன்? சுருக்கமாக, அரசியல் பிராணியின் அறிவு, பச்சைப் புளுகுகளினாலும், அரை வேக்காடான கொள்கைகளினாலும் உண்டான தாக்குதலால், மழுங்கிப் போனது ஏன்? சர்வாதிகார ஆட்சிகள் தங்கள் சமுதாயங்களில் தங்களின் நலனுக்காக விருப்பாற்றலுக் குட்படாதவற்றைக் கட்டுப்படுத்தும் முறையினால், காரியங்களின் பரிணாம ஒழுங்கு முறையைத் தலைகீழாக மாற்றிவிட்டார்கள் என்பது தான் இதற்கு விடையாகும். 'பாவ்லா (Pavlov)வின் தத்துவங்களைத் தெரிந்து கொள்ளாமலேயே ஹிட்லர், சொன்னால் கேட்கக் கூடிய ஜெர்மன் மக்களிடம், இத் தத்துவங்களை ஈடு இணையற்ற ஒரு விதத்தில் பிரயோகித்துவிட்டார். போரிடும் இயல்பாகிய மனித இயல்பை மிகவும் தூண்டிவிட்டுவிட்டார். நாஜிப் பிரச்சாரத்தின் உபாயங்களான குறியீட்டு முறைகளை உபயோகித்து இவ்வாறு தூண்டி விட்டிருக்கிறார். எங்கணும் காணப்படும் 'சுவஸ்திகா' அடையாளம், கட்சிக் கூட்டங்களின் தடபுடல் ஆகியவற்றை மிகச் சிறப்பாகப் பயன்படுத்திவிட்டார். மக்களின் விருப்பாற்றலுக்கு உட்படாத மன உணர்ச்சியை இவ்வாறு கட்டுப்பாடு செய்திருப்பது நாஜி முறையின் அரசியல், சமுதாய அம்சங்களை விளக்குவதாகும். பிரம்மாண்டமானதும், துணிச்சலானதுமான முயற்சிகளைச் செய்து ஜெர்மன் மக்களின் மனத்தைக் கட்டுப்படுத்தி, எதை வேண்டுமானாலும் அல்லது கிட்டத்தட்ட எதையும் - அவர்கள் நம்பும்படியாகச் செய்து விட்டார்கள்.'[1]

'ஸ்டடி ஆப் ஹிஸ்டரி' (Study of History) என்ற தமது நூலில் டாயீன்பீ (Toynbee) நாஜி முரட்டாட்டங்களின் எழுச்சி போன்ற காரியங்களுக்கு விளக்கந் தருகிறார். 'உயர்ந்த நாகரிகக் கேந்திரத்தைச் சுற்றிலும் கீழான கலாச்சாரம் ஒன்று வளர்வதற்கு ஏது இருக்கிறது. தனது நாகரிகமடைந்த அயலாரின்மீது சார்ந்து புல்லுருவி போன்று இருக்கும் தன்மையது. ஆனால், அதே சமயத்தில் அதற்கு அதிக விரைவாக இயங்கும் சக்தியும் போருக்கான மன நிலை மற்றவர்களைக் காட்டிலும் அதிகமாகவும் இருக்கும் தன்மை பெற்றிருக்கிறது.' அராபிய நாகரிகத்தில் பெடூயீன்கள் (Bedouins) சீன நாகரிகத்தில் மங்கோலியர்கள் என்று சில எடுத்துக்காட்டுக்களையும் அவர் குறிப்பிடுகிறார். அவர் மேலும் கூறுகிறார். 'நாகரிகமற்று இவர்களுக்குத்தான் இறுதியான நலன்கள் கிடைக்கின்றன.

[1] 'New Statesman' பத்திரிகையில் வெளியான ஒரு கட்டுரையிலிருந்து.

ஒவ்வொரு புதிய படையெடுப்பும் அவர்களது போர்த் திறமையைச் சிறப்பாக்கியது. அதற்கு மாறாக, உயர்நாகரிகம் பெற்றவர்கள்மீது யுத்தங்களின் நாச விளைவானது குவிக்கப்பட்ட நாசத்தை உண்டாக்கியது. ஆனால் நம் காட்டுமிராண்டிகள் நமக்குள்ளேயே இருப்பவர்கள் தான்.'

## பாசிசத்தின் பல்வகைக் கவர்ச்சிகள்

சர்வாதிகாரக் கோட்பாடானது வெவ்வேறு வகையான மக்களிடம் வெவ்வேறான காரணங்களைக் காட்டிக் கவரும் திறமை பெற்றிருந்தது ஒரு விசித்திரமேயாகும். 'பாட்டாளி வர்க்கத்திடமிருந்து தன்னைக் காப்பாற்றிக்கொள்ள மத்தியதர வர்க்கம் எடுத்துக் கொள்ளும் மாற்றுமுயற்சி இது' என்று வருணிக்கும்படியாகச் செய்யும் பூர்ஷுவாத் தந்திரமாக ஒரு வழியில் இருந்தது. அது செல்வர்கள், தொழிலதிபர்கள் ஆகியவர்களின் தோழமை பெற்றிருந்தது. அது இல்லாதிருந்தால் பண முறிவு ஏற்பட்டு அது சரிந்திருக்கும். எல்லா உழைப்பாளர்களையும் கட்டுப்பாட்டிற்குக் கீழ் அது கொண்டுவந்தது. வேலை நிறுத்தங்களைச் சட்ட விரோதமாக்கியது. வலசாரி இயக்கங்களின் எல்லா முயற்சிகளுக்கும் எதிராகப் போர்ப் பிரகடனம் செய்தது. அப்படி இருந்தும் பெருவாரியான அளவுக்குப் பாட்டாளி வர்க்கத்தின் ஆதரவையும் பெற்றது. சில, உலகத்துக் கடுத்த நன்மைகளை அவர்களுக்கு அளிப்பதாகக் கூறின. குறைவான செலவில் ஓய்வு நாட்களைக் கழித்தல், கட்டணமில்லாத திரைக் காட்சிகள், வேலையளிப்பு அல்லது யுத்த தளவாடங்கள் செய்வதன்மூலம் வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒழித்தல் ஆகிய நன்மைகளை அது தருவதாகக் கூறியது. மேலும் சிறுபான்மையரிடம் மக்களிடத்தில் உள்ள வெறுப்பை மேலும் தூண்டிவிடுவது, தேசீய விஸ்தரிப்பு உள்ளுணர்வைத் தூண்டி விடுவது ஆகியவையும் மேற்கூறிய நன்மைகளோடு கவர்ச்சியளிக்கும் வகையில் சேர்த்துக்கொள்ளப் பட்டன. அதிகாரத்துவக் கொள்கை பூர்ஷுவாக்கள், பாட்டாளி வர்க்கம் ஆகிய இரண்டையும் ஒரே சமயத்தில் இவ்வாறாக ஏமாற்ற முடிந்தது. சாதாரண சந்தர்ப்பங்களில் இவ்வாறான ஏமாற்று வித்தைகள் எத்துணைக் காலத்திற்கு நீடித்து இருக்க முடியும் என்று சொல்ல முடியாது.

'பாசிசம் என்பது சமூக, ஆத்மீகச் சிறப்புப்பெற்ற நிகழ்ச்சி. இது சமூகத் தொகுதிக்குரிய உலக அமைப்பைப்பற்றிய அறிவையுடையது. இச் சமூகத் தொகுதியில் சில தனிப்பட்ட நபர்கள் வேண்டுமானால் இந்த அறிவுக்கு எதிரான உணர்ச்சிகொண்டு,

அதிலிருந்து தப்பவும்கூடும். ஆனால், இதர சமூக அமைப்புக்களை யெல்லாம் அது கவர்ந்து கொள்ளக்கூடும். முக்கியமாகப் பாசிசத்தைச் சமூக, அரசியல் இயக்கமாக வருணிக்கலாம். முதல் உலக யுத்தத்திற்குப் பிறகு ஏற்பட்ட ஐரோப்பிய முதலாளித்துவ வளர்ச்சியின் விளைவாகப் பிறந்தது இது. பல சமூக, பொருளாதார அமைப்புக்களில் எண்ணற்ற பல மாற்றங்கள் இவ்விதமான சூழ்நிலையைத் தயார் செய்தன. அத்துடன் 19 ஆம் நூற்றாண்டின் மத்தியிலிருந்து கருத்துக் கொள்கையும் மிகச் செறிவான முறையில் தன்னைத் தயார் செய்துகொண்டே வந்தது.

'பூர்ஷுவாக்கள் கட்ட விரும்பும் உலக-நோக்கு எத்தன்மையது? பரம்பரை வழியாக வந்த சமயம் அதற்குப் பிறகு ஒப்புக்கொள்ளப்படுவதில்லை. பூர்ஷுவாக்கள் இருக்கும் ஆதாரத்தையே எடுத்துவிடும் அளவுக்கு ஒரு கொள்கையை மார்க்சீயம் அளித்தது. ஆகவே, மத்தியதர வர்க்கம் நிலைக்கச் செய்யக்கூடிய உண்மைகளின்பேரிலான ஏதாவதொரு தத்துவம் புதிதாகத் தேவைப்பட்டது. அது தேசீயம், தனிச் சிறப்புடைய சிலரின்மீது வைக்கும் நம்பிக்கை, அல்லது இயல்பான இன அடிப்படையில் ஆளும் வர்க்கம் எனப் பெயர் சூட்டப்படுதல் ஆகிய கருத்துக்களாக மலர்ந்தது.'[1]

## பாசிசமும், பூர்ஷுவாக்களும்

பூர்ஷுவாக் கருத்துப் படிவம், ஆளும் வர்க்கம், தனியுரிமை ஆகிய கருத்துக்கள் பாசிசத்திற்கு அடிப்படையானவையாகும். இங்குப் பூர்ஷுவாக்கள் என்று அழைக்கப்பெறுபவர்கள் என்றால், பாட்டாளி வர்க்கத்தை எதிர்ப்பவர்கள் என்பது பொருளாகும். 'சிறு பூர்ஷுவா வர்க்கம்' அல்லது தாழ்ந்த மத்தியதர வகுப்பார், (Lower middle class) உயர்ந்த மத்தியதர வகுப்பா (Upper middle class) ரைக் காட்டிலும் செல்வத்திலும், உலக அந்தஸ்திலும் எவ்வளவு குறைவுள்ளவர்களாக இருந்தபோதிலும் அவர்களும் உலகத்தைப் பற்றிய அதே கருத்துக் கொண்டவர்களாக இருக்கின்றனர். அதாவது உலகத்தில் அவர்கள் இழந்துவிட்ட தனியுரிமைகளை ஒரு நாள் திரும்பப் பெறமுடியும் என்று நம்புகின்றனர். அல்லது தாங்கள் இதுவரை அனுபவித்திராத தனியுரிமைகளைப் பெறமுடியும் என்று நம்புகின்றனர். தாங்கள் மிகுந்த சிரமத்தோடு வெளியேறி வந்த அதே சொத்தில்லாத வகுப்பிற்குத் திரும்பவும் தள்ளப்பட்டுப் போவோமோ என்ற பயத்துடனேயே வாழ்கின்றனர். அல்லது

[1] ரோயன் (Royan) 'Dans la Pause du Fascisme', Revue Socialiste.

தங்கள் அந்தஸ்தை இழப்பதன் மூலமாகவும், படிப்படியாக ஏழையாகப் போவதன் மூலமாகவும் அந்த வகுப்போடு சேர்க்கப்பட்டு விடுவோமோ என்ற அச்சத்தோடு வாழ்கின்றனர். பாட்டாளி வர்க்கத்தைவிட்டு வெளியேறிய பிறகு, அத் தாழ்ந்த மத்தியதர வர்க்கம், உயர்ந்த மத்தியதர வகுப்பாரின் 'பட்லர்'களாகவோ (butler) அல்லது அவர்களை அண்டிப் பிழைப்பவர்களாகவோ இருந்தாலும், அப்பொழுது நிலவும் சமுதாய ஒழுங்கை அப்படியே நிலைக்கச் செய்யவேண்டும் என்று கூறுபவர்களாக இருக்கிறார்கள். 'இல்லாதவர்களு (have-nots) க்கு எதிராக 'இருப்பவர்களை' (haves) ஆதரிப்பவர்களாக விளங்குகின்றனர். அவர்கள் 'இல்லாதவர்களின்' வகுப்பில் கிட்டத்தட்டச் சேர்ந்தவர்கள்தான் எனினும் இவ்வாறு அவர்களுக்கு எதிராக விளங்குகின்றனர். 'தனியுரிமை' என்பது இரு காரியங்களைக் குறிக்கும். நான் என்ன பெற்றிருக்கிறேன், மற்றவர்கள் என்ன பெற்றிருக்கவில்லை என்பதே முக்கியமானதாகும். அதுவும் தனியுரிமைகள் விஷயத்தில் கீழே போகப் போக இக் கண்ணோட்டம் மிக முக்கியத்துவமடைகிறது. 'இல்லாதவர்கள்' கூட்டத்தைச் சேர்ந்தவனாக இல்லாதமட்டில், நான் ஒரு நாள் உண்மையாகவே 'இருப்பவனாக' மாறமுடியும் என்று நம்பலாம்.

## நாஜிக் கொள்கையின் கவர்ச்சி

முதல் மகா யுத்தத்திற்கு முன்புள்ள சில ஆண்டுகளில் ஆஸ்திரியப் பேரரசின் தலைநகரில் ஹிட்லர் பெற்ற கசப்பான அனுபவங்களின் பிரதிபலிப்பே தேசீய சோஷியலிஸ்ட் கட்சியின் அடிப்படைக் கொள்கைகள் என்று கூறலாம். ஜெர்மனி நாட்டின் கருத்துக் கொள்கையின் தத்துவத்தின்மீது நாஜிக் கொள்கை வேரூன்றாமல் வியன்னா (Vienna) நகரின் பொது விடுதிகளிலும், இரவில் தங்குமிடங்களிலும் பிறந்த ஒன்றாகும். இவ்வகை அனுபவங்களோடு போர் அனுபவங்களையும் சேர்த்துக்கொண்டாக வேண்டும். ஜெர்மனியின் தோல்வி, போர்க்களங்களில் தற்காப்புக்காக வெட்டப்பட்டிருந்த குழிகளில் ஏற்பட்ட சகவாசம், அப்பொதுவாழ்க்கையை இழந்தது ஆகிய அனுபவங்களே நாஜிக் கொள்கையின் ஆதாரங்களாகும். நொறுக்கப்பட்டுப் போயிருந்த ஓர் உலகத்தின் மனிதன் தன் தனிமையை உணர்ந்தான். அவன் அறிந்திருந்த ஒரே தொழில் படைவீரனாக இருக்கும் தொழில்தான். 'கொல்லுவதே வாழ்க்கையின் பொருளாகும்' எர்னஸ்ட் யுங்கர் (Ernest Junger). 'மனிதர்கள் வாழ விரும்புவதால், பிறரைக் கொல்லவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது' (ஹிட்லர்). ஜெர்மன் குடியரசு சகிப்புத் தன்மை, பன்னாட்டுச் சமரச மனப்பான்மை குழப்ப

முற்றிருக்கும் சமுதாயத்தைச் சீரமைக்கும் ஒளியற்றனவும் எழுச்சியற்றனவுமான பணிகள் ஆகியவற்றைப் பின்பற்றப் போவதாகப் பிரகடனம் செய்தது. இவ்வாறான ஊக்கமளிக்காத வேலைத் திட்டத்திற்குப் பதிலாக, மனிதர்களுக்குப் போரிடும் பணியைத் தருவதாகத் தேசீய சோஷியலிஸ்ட்டுகள் (நாஜி) கூறினார்கள். இந்த விதமான பணியை மக்கள் நன்றாக அறிந்திருந்தார்கள். எல்லாவற்றிற்கும் மேலாக இவ்வகைப் பணி அவர்களுக்கு ஒரு புதிய சகவாசத்தை (Gemeinschaft), அதாவது, வாழ்க்கைக்குப் பொருள் உண்டாக்கக் கூடிய ஒரு தொகுதியைச் 'சேர்ந்த' தன்மையை அது அளித்தது. நியாயத்திற்குப் பதிலாக வெறியையும், சகிப்புத் தன்மைக்குப் பதிலாகப் பயங்கர வெறுப்புத் தன்மையையும் தேசீய சோஷியலிசம் (நாஜி) அவர்களுக்கு அளித்தது. அத்துடன் இவ்வாறாகப் புதிதாகப் பிறக்கும் சொந்த சமுதாயமானது முடிவில் எல்லா ஜெர்மன் மக்களையும் கொண்டதொரு சமுதாயமாக (Volksgemeinschaft) ஆக்கப்படும் என்ற நம்பிக்கையையும் இக் கட்சி அளித்தது. தேசீய சோஷியலிஸ்டுகளின் கவர்ச்சிமிக்க பிரச்சாரத்தைப் புரிந்துகொண்டால் அதன் பாசக் குறிப்பை நாம் அறிந்துகொள்ள முடியும். அது மனிதர்களுக்குப் புதியதொரு பற்றுறுதியை அளித்தது. 'புதியதொரு சமயத்தின் பற்றுறுதியை வெளியிடுவதாக அமைந்திருக்கிறது கட்சியின் வேலைத் திட்டம். அனல் கக்கும் நெருப்பைப் போன்றதும், மனவெழுச்சி மிக்கதுமான விருப்பாற்றல் ஊக்குவிக்குமானால் மிகச் சிறிய சிறுபான்மையோர்கூட மகத்தான விளைவுகளைச் சாதிக்கக்கூடும்.' - ஹிட்லர்.

## இன மரபுத் தத்துவம்

ஜெர்மனியின் சர்வாதிகாரத்தில் இனச்சார்பு அடிப்படை பெற்றிருந்த பாகத்தைப்பற்றி இதுவரை நாம் குறிப்பிடவில்லை யென்பதைக் கவனித்திருக்கலாம். இது முக்கியமல்லாததும், தற்செயலாக நிகழ்ந்ததும் ஆகும் என்ற காரணத்தைக் கூறலாம். வலசாரியிலிருந்த இதர சர்வாதிகார முறைகள் இப்படிப்பட்ட இன மரபுத் தத்துவ அடிப்படை இல்லாமல் இருந்தன என்பதை இதற்கு எடுத்துக்காட்டாகக் காட்டலாம். மேலும் அதிகாரத்துவத்தின் அடிப்படைகளைப்பற்றி மாத்திரமே நாம் இங்கு அக்கறை கொண்டிருக்கிறோம். பகுத்தறிவு, சுதந்தரம் ஆகிய இரண்டையும் நாஜிகள் நிராகரித்ததை வலுப்படுத்துவதாக இனமரபுத் தத்துவம் இருந்தது என்று மாத்திரம் சொன்னால் போதுமானது. 'உலகத்தை இனமரபு அடிப்படையில் கருதுவது, இயற்கையின் அந்தரங்க விருப்பிற்கு ஒத்ததாக இருக்கிறது. ஏனெனில் இயற்கைத் தேர்வுக்குத் (Natural Selection) தேவையான முன்னேற்றத்திற்கு அடிப்படையான சக்திகளின்

சுதந்தர இயக்கத்தை இது மீண்டும் ஏற்படுத்துகிறது. போராட்டமே இனங்களை விருத்திசெய்யும் சாதனமாக எப்பொழுதும் இருக்கிறது. ஆகவே, அதன் முன்னேற்றத்திற்கும் அதுவே பிரதான நிபந்தனையாக உள்ளது.' – ஹிட்லர்.

## கூட்டுத் தற்பெருமை (Collective Egotism)

பாசிசச் சர்வாதிகாரங்களைப்பற்றி நடுநிலையான கருத்தைத் தெரிவிப்பது முடியாது என்று சொல்லக் கூடாவிட்டாலும் கடினமானது என்று கூறலாம். அவர்கள் உலகத்திற்கு இழைத்த தீங்கு மிகச் சமீப காலத்தியது. சொந்தக் கருத்தொன்றை ஒருவர் கூறக் கூடுமானால், இறுதியானதாக அவர்கள் பிரகடனப்படுத்திய தற்பெருமையே அவர்களைப்பற்றிய முடிவான கண்டனத்துக்குக் காரணமாகிறது. அது தனியாளின் தற்பெருமையாக இல்லாமல் கூட்டான தற்பெருமையாக இருப்பதால் அதன் பிழை அளவில் ஒன்றும் குறைந்துவிடாது. மூன்று நூற்றாண்டுகளுக்கு முன்பு ஃபிரஞ்சுத் தத்துவஞானி பாஸ்கல் (Pascal) 'வெறுக்கத்தக்க தற்பெருமை'யைப்பற்றிக் குறிப்பிட்டார். ஜெர்மன் லிபரலாகிய ஃபோயர்ஸ்டர் (Foerster) 'அரசியல் இலட்சியமாக வெறுக்கத்தக்க கூட்டுத் தற்பெருமை காட்டப்படுகிறது' என்று சர்வாதிகாரத்தை மிகப் பொருத்தமாகக் கண்டித்தார். பாசிச இளைஞர் அணியின் தலைவரான ஸ்கோட்சா (Scotza) 'பகைவர்களை வெறுக்காமல் இருப்பது அல்லது அதற்கு இன்னும் மோசமாக நம் பகைவர்களிடம் அன்பு காட்டுவது என்பது எந்த இயக்கமும் ஒப்புக்கொள்ளக் கூடாத கோழைத்தனமாகும்' என்று இன்னொருவரிடம் சொல்லும் போது, அவர் கம்யூனிஸ்களோடு கூட்டுச் சேர்ந்த மாதிரியாகிறது. பிராவ்டா (Pravda)வில் (March, 1934) புக்காரின் (Bukharine) எழுதுகிறார்: 'முதலாளித்துவத்திற்கு எதிரான வர்க்க வெறுப்பு கம்யூனிசத்தின் வெற்றிக்குச் சிறிது முன்பு ஏற்படும். அதனால்தான் பகைவரிடத்து அன்பு காட்டச் சொல்லும் கிறிஸ்தவச் சமயம் கம்யூனிசத்தின் பரம வைரியாக இருக்கிறது.' இதற்கு அதிகமாக ஒன்றும் சொல்லவேண்டியதில்லை.

## பாசிசமும், கம்யூனிசமும்

கம்யூனிச சர்வாதிகாரத்துக்கு மீண்டும் வருவோம். அதன் கொள்கையிலும், நோக்கங்களிலும் பாசிசத்திலிருந்து பெரிதும் வேறுபட்டதாகக் கம்யூனிசம் இருக்கிறது. ஏமாற்றத்தின் விளைவாகப் பாசிசம் பிறந்தது என்றால் நம்பிக்கையின் விளைவாகக்

கம்யூனிசம் பிறக்கிறது. தனியுரிமைகளைக் காப்பதற்காகப் பின்னணியில் பாசிசம் போரிடுகிறது. ஆனால், சமூகநீதியின் பெயரால் இத் தனியுரிமைகளைத் தகர்த்தெறிய நேர் எதிரான போராட்டத்தைக் கம்யூனிசம் தொடருகிறது. பாட்டாளி மக்களை மீட்பது என்ற கருத்து ஒருவேளை குறுகியதாகவும், வரையறைக்குள்ளான நோக்கம் கொண்டதுமாக இருக்கலாம். ஆனால், அதன் ஆதி ஊக்க உணர்ச்சியோ அல்லது அதன் முதல் தீர்க்கதரிசியோ மகத்தானதோர் இலட்சிய நோக்கிற்குப் பொருத்தமற்றவர்களல்லர்.

கொள்கையிலும், நடைமுறையிலும் இந் நோக்கமானது சிதைக்கப்படுவது நமக்குத் தெரிந்த வரலாறு ஆகும். ருஷ்யாவில் இன்று நிலவி வருவதைக் கம்யூனிசம் என்று அழைப்பதா அல்லது மார்க்சீயம் என்று அழைப்பதா என்பதே ஐயப்பாடான காரியமாகும். அது நிச்சயமாக அதிகாரத்துவச் சர்வாதிகாரம் ஆகும். எவ்வாறு மார்க்சீயக் கம்யூனிசத்தின் பொருளாதார, சமூக இலட்சியங்கள் சோஷியலிசத்தைப்பற்றிய அத்தியாயத்தில் சேர்க்கப்பட்டனவோ அவ்வாறே இதுவும் இவ்வத்தியாயத்தில் சேர்க்கப்பட வேண்டியது தான். ஒரே கட்சியின் ஆதிக்கம், தனிநபரின் சர்வாதிகாரம், எண்ணத்திலும் செயலிலும் தனியாளுக்குரிய உரிமையைக் கடுமையாக அடக்குமுறை செய்தல், தனிநபரைத் தொகுதியில் இரண்டறக் கலந்துவிடச் செய்தல் ஆகியவையெல்லாம் சமகாலத்தில் காணப்படும் நடைமுறைச் செயல்களாகும். இன்று இவை மாஸ்கோவில் காணப்படுவதுபோல, பெர்லினிலும், ரோமிலும் அன்று காணப்பட்டன. இருப்பினும், பைத்தியமாகிப்போன கூட்டுத் தற்பெருமையானது ஓர் அதிர்ச்சியை உண்டாக்கக்கூடிய தவறானதோர் வழியில் வெளியிடப்பட்டதுதான் பாசிசம். ஆனால், 'சமூக நீதியின் தீர்வு காண முடியாத புதிருக்கு'த் தீர்வுகாணும் விருப்பத்தால் ஏற்பட்டதே ஆதி கம்யூனிசமாகும் என்று நினைக்கும் பலருண்டு.

## (v) 'பாசிச' அதிகாரத்துவத்தின் நடைமுறை

நாம் இவ் வத்தியாயத்தை முடிக்குமுன், பொறிநுட்ப வளர்ச்சியால் அரசாங்கங்கள் செயல்படும் விதத்தையும் மிக இலகுவாக்கப்பட்டிருக்கும் தன்மையையும் குறிப்பிடவேண்டும். விமானம், வானொலி, தொலைபேசி, மோட்டார் கார் ஆகிய சாதனங்கள் ஆட்சித்துறை நிலைமையைப் புரட்சிகரமாக மாற்றிவிட்டன. புரட்சிகள் கிட்டத்தட்ட ஏற்படவே முடியாது; அல்லது புரட்சிக்காரர்கள் சில கேந்திர நிலைகளைக் கைப்பற்றிக் கொண்டால் வெற்றியும் நிச்சயம் என்றாகிவிட்டது.

## அதிகாரத்துவ அரசு

அரசியல் அமைப்புச் சட்டத்தின் கண்ணோட்டத்தில், அதிகாரத்துவ அரசு சாதாரண வகைப்படுத்தல்களுக்கெல்லாம் உட்படாமல் வெளியே இருக்கிறது என்று கூறலாம். அதிகாரப் பங்கீடு, நடு நிலையான சட்டம், அரசுக்கும் சமுதாயத்திற்குமுள்ள வேறுபாடு, அரசுக்கும் அரசாங்கத்திற்குமுள்ள வேற்றுமை ஆகிய கூறுகளை அதிகாரத்துவ அரசு ஒப்புக்கொள்ள மறுக்கிறது. எல்லா அதிகாரங்களும், தலைவரின் அதிகாரத்தோடு இணைக்கப்பட்டிருக்கின்றன. அவர் விருப்பப்படி அவைகளை யாருக்கு வேண்டுமானாலும் கொடுக்கலாம். தலைவர் நாட்டின் விருப்பாற்றலை விளக்குவது சட்டம் ஆகும். அரசையோ அல்லது அதன் பதிலாட்களையோ தடை செய்யக்கூடிய விதிகள் என்று சட்டத்தைக் கருதினால் அப்படிப்பட்ட சட்டங்கள் அதிகாரத்துவ அரசில் பொருளற்றவையாகும். 'இன்றைக்குத் தேவையான சட்டத்தன்மைக்கு மேலாக நாளைக்கேனும் அதைத் தயார் செய்தாக வேண்டும்' என்று டெல் வெச்சியோ (Del Vecchio) என்ற பாசிஸ்டு கூறுகிறார். 'தேசீய சோஷியலிஸ்டுகளின் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்ட சட்டங்களும், விதிகளும் ஜெர்மன் மக்களின் எண்ணத்தைச் சூத்திரங்களாக மாற்றி அதன் பூர்வீக நிலைக்குக் கொண்டுவந்தன' என்று கோயபெல்ஸ் (Goebbels) ஒருமுறை கூறினார். ஜெர்மன் சட்டக் கழகம் கூறியதை இது உறுதிப்படுத்துகிறது: 'யாராவது தண்டனை பெறுவதற்குரியவராயிருந்து சட்டப்படி அவரைத் தண்டிக்க முடியாதிருந்தால், நீதி மன்றங்கள் பீனல் கோடின் (penal code) உட்கருத்தின்படியோ அல்லது வளமான பொதுமக்களின் உணர்ச்சியின் படியோ அவரைத் தண்டிக்கலாம். ஏனெனில், பொதுமக்கள் உணர்ச்சி, சட்டத்தின் உட்கருத்து ஆகியவைகளின் பிரதிநிதியே நீதிபதியாவர்.' ஜெர்மன் சட்டக் கழகம் பொது நலத்தையே அதன் பணியின் அளவுகோலாகக் கருதுகிறது. 'கொள்கைகளுக்குச் சேவை செய்வதற்கல்லாமல், மக்களின் அவசியத் தேவைகளைப் பூர்த்தி செய்யும் சேவைக்கே சட்டம் இருக்கிறது என்பது ஜெர்மனியின் சட்டப் பாதுகாவலரின் கருத்தாகும்.' 'சுதந்தரமான நீதித்துறை என்ற கருத்துக்கு நாங்கள் வெகுதொலைவில் இருக்கிறோம். அரசாங்கத்தின் எதேச்சாதிகாரக் குறுக்கீடுகளிலிருந்து குடிமக்களைக் காப்பாற்றும் நோக்கத்திற்காகச் சட்ட அமைப்பைக் காப்பாற்றும் பாதுகாவலர்களாக நீதித்துறை இருக்கிறது என்ற கருத்துக்கு வெகு தொலைவில் நாங்கள் இருக்கிறோம்; அல்லது குறிப்பிட்ட காலத்தின் ஆட்சியாளர்களின் விருப்பங்களுக்கு அப்பாற்பட்ட சட்டம் என்ற கருத்துக்கும் நாங்கள் வெகு தொலைவில் இருக்கிறோம்.' சோவியத் ருஷ்யாவின் சட்டம், நீதி ஆகியவைபற்றிய கருத்து அதன்

களையெடுப்புக்கள், விசாரணைகள் முதலியனவற்றில் காணப்படுவதே போதுமானது.

சர்வாதிகார ஆட்சிகள், மனித வர்க்கத்தின் ஒழுங்கு விருப்பம், ஆட்சிக் குலைவில் அச்சம் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டவை. எனினும், அவ் விருப்பத்தைத் தவருன வழியில் பயன்படுத்தியதாகும். வழுவாத தன்மையும், உண்மையைத் தாங்கள் மாத்திரமே அறிந்துகொண்டதாகக் கூறும் எல்லா அமைப்புக்களும் தவருன வழியில் பயன்படுத்தியதுபோல இதுவும் தவருன வழியில் அதைப் பயன்படுத்தியதாகும். மிகையான சுதந்தரத்தினுல் விளையும் குழப்பங்களை நீக்க முற்பட்டுச் சுதந்தரத்தையே இவர்கள் நீக்கி விடுகிருர்கள். அதன் ஒப்பீட்டு மதிப்பைக்கூட ஒப்புக்கொள்ளவும் மறுக்கிருர்கள்.

## பாசிசத்தில் தனியாள்

'தனியாளுக்கும் சுதந்தரமில்லை. வர்க்கங்களுக்கும் சுதந்தரமில்லை. தனியாள் சுதந்தரம் என்பது என்ன கருத்துடையது? மனிதன் தனக்குப் பிரியமளிக்காததைச் செய்யும்படி இயற்கை விடாமல் கட்டாயப்படுத்துகிறது. ஒரே ஒரு வகையான சுதந்தரந் தான் உண்டு. அது நாட்டின் சுதந்தரமாகும். ஒவ்வொரு தனியாளும் இச் சுதந்தரத்துக்காகத் தன் பங்காகத் தியாகம் செய்யத் தயாராக இருந்தால் மாத்திரமே இச் சுதந்தரம் உத்தரவாதம்பெறும். எல்லாவற்றிற்கும் மேலாக, வாழ்க்கையை நடத்துவதற்குரிய விதியைப் பெற்றுத்தருவதே நாட்டின் சுதந்தரம் என்பதன் பொருளாகும்.'

இவ்வாறு ஹிட்லர் பேசினுர். இச் சொற்களில் தனது குறுகிய கண்ணேட்டத்தைவிட்டு வெளியே நோக்க மறுக்கும் மன நிலையைக் காண்கிருேம். சுதந்தரம் சில ஆபத்துக்களை உடையதாகையால், அதை முழுவதாகத் தள்ளிவிடுகிருேம். நாம் இதற்கு முந்திய அதிகாரத்தில் குறிப்பிட்ட சுதந்தரத்திடம் அச்சம் என்பதற்கு வலசாரி இடசாரி ஆகிய இரண்டுவகையான அதிகாரத்துவ ஆட்சிகள் எடுத்துக்காட்டாகும். நாம் முன்னரே கூறியபடி பொறுப்புக்கள் இருக்கின்ற காரணத்தால் சுதந்தரத்தை வேண்டாத மனிதர்கள் பலருண்டு. என்ன செய்ய வேண்டும், என்ன சிந்திக்க வேண்டும் என்றெல்லாம் பிறர் சொல்லித் தாங்கள் கேட்டுக்கொள்ள அவர்கள் விரும்புகிருர்கள். புகலிடம் பெறவும், கட்டளைகளைப் பெறவும் மகிழ்ச்சியோடு அவர்கள் மேலாண்மையிடம் ஓடுகிருர்கள். 'சமூக அமைப்பு அல்லது நாட்டின் மேன்மைபற்றி இராணுவ ஆட்சியின்

கருத்தும், முதலாளித்துவ ஆட்சியின் கருத்தும் தற்காலச் சுதந்தரத்தைவிட அடிமைத்தனத்தோடு அதிகப் பொருத்தமுடையதாயிருக்கின்றன.'

எந்த விதமான விவேகமான திட்டமிடுதலும், கட்டுப்பாடும் சர்வாதிகாரத் தீங்கைக் கொண்டுவந்துவிடும் என்று, அதிகாரத்துவத்தின் வெற்றியைக் கண்டு அஞ்சும் பலர் நினைக்கிறார்கள். எட்வின் பெவான் (Edwin Bevan) கூறுவதுபோல, 'நமக்கு முன்னாலிருக்கும் ஆபத்து ஆட்சிக் குலைவு அன்று. ஆனால் எதேச்சாதிகாரம், ஆத்மீகச் சுதந்தர இழப்பு, உலக சர்வாதிகார அரசு...ஆகியவையேதான் ஆபத்தாகும். ஆட்சிக் குலைவு ஒரு கட்டந்தான். ஏனெனில், அது அடிப்படையில் பலவீனமானது. அப்படிப்பட்ட ஆட்சிக் குலைவான உலகில் விஞ்ஞான அறிவும், சிறப்பான அமைப்புங்கொண்ட எந்தத் தொகுதியும் தனது ஆதிக்கத்தைப் பிறர்மீது இலகுவாகப் பரப்ப முடியும்.'

பிறகு இவ்வுலகம் ஆத்மீகத் துறையில் மங்கிப்போகும் காலத்திற்குள் பிரவேசிக்கும். மனிதத் தன்மையின் உயர்ந்த நடவடிக்கைகளுக்கெல்லாம் சாவை உண்டாக்கும். ரோமாபுரி அல்லது சீனு ஆகிய நாடுகளின் சிதைவைக் காட்டிலும் அதிக நெகிழ்ச்சியற்றதாக இருக்கும். ஏனெனில், ஆளும்வர்க்கம் மிக அதிகமான அதிகாரத்துக்குரிய விஞ்ஞான சாதனங்களைப் பெற்றிருக்கின்றது. 'சீனுவுக்கு நேர்ந்த கதி நேராமல் ஐரோப்பா தப்புவதற்காக ஆயிரம் வருடங்கள் அது காட்டுமிராண்டி வாழ்க்கை வாழ வேண்டியிருந்தது,' என்று மெக்காலே (Macaulay) கூறுகிறார். ஆனால், எதிர்கால உலக சர்வாதிகார அரசைக் குலைப்பதற்கு எந்த நாகரிகமற்ற இனங்களும் உயிரோடிரா.

'அப்படிப்பட்டதோர் அரசில் தத்துவமும், வறுமையும் ஊக்கமின்றிச் சோர்வடையும் அதே சமயத்தில் விஞ்ஞான ஆராய்ச்சி தொடர்ந்து பல புதிய படைப்புக்களை உண்டாக்கும்.'

இந்த ஆபத்தின் உண்மையை எவரும் மறுக்கமாட்டார்கள். ஆனால், தெரிந்துபோன ஆபத்துக்கு எதிராகப் பாதுகாத்துக்கொள்ள முடியும். பெரும்பான்மையானது கருத்தோடு அளிக்கும் அபிப்பிராயத்துக்கு அதிகாரத்தில் உள்ளவர்களை முடிவான பொறுப்புள்ளவர்களாகவும், கணக்குக் கொடுக்க வேண்டியவர்களாகவும் வைத்துக் கொள்வது முக்கிய காரியமாகும்.

# 15. இனி அடுத்து என்ன?

இந்த நூல் இரு நோக்கங்களை மனத்தில் கொண்டு எழுதப் பட்டது. இதன் வாசகர்களில் சிலர் இதைக் காட்டிலும் விரிவான நூல்களைப் படிக்கக்கூடும். இந் நூல் அவர்கள் மேற்கொண்டு காணப்போகும் பிரச்சினைகளின் பல வகைகளையும், அவற்றின் சிக்கல்களையும் அவர்களுக்கு அறிமுகம் செய்து வைத்திருக்கும். அவர்களுக்கு இவ் வறிமுக நூல் தெளிவானதாகவும், போதுமான தாகவும் இருக்கும் என்ற நம்பிக்கை மாத்திரம் கொள்ளமுடியும். மற்றவர்கள் இந்தப் படிப்பிற்குமேல் போகாமல் இருக்கலாம். அதே போன்று இந் நூலில் பரிந்துரைத்திருக்கும் இதர நூல்களைப் படிக்கவும் கூடாமலிருக்கலாம். ஆனால், அரசாங்கக் கலைக்கு அவர்கள் ஏதாவது கருத்துத் தராத நாட்களே இரா. அன்றன்றைய பிரச்சினை கள் ஒவ்வொன்றையும்பற்றி அவர்கள் தங்கள் கருத்துக்களை வெளி யிடக்கூடும். இவ்வாறான கருத்தைத் தெரிவிப்பதன் மூலம் பொது மக்கள் அபிப்பிராயத்தை அவர்கள் வளர்க்கத் துணைபுரியக்கூடும். சுதந்தர சமுதாயத்தின் பொது விவகாரங்கள் எவ்வாறு நடத்தப்பட வேண்டும் என்பதை இப் பொதுமக்கள் அபிப்பிராயம் நிர்ணயிக்கும். இடையிடையே அவர்கள் வாக்களிக்கவுங் கூடும். ஒருவேளை பதவி களுக்கு அவர்களே போட்டியிடவும் செய்யலாம். அவர்களுக்குரிய சில பிரச்சினைகளுக்கு விளக்கந்தர நம்மால் முடிந்திருக்கும் என்று நம்புகிறோம். அவர்களுடைய பொது வாழ்வின் கடமைகளையும், பொறுப்புக்களையும் விவேகமான முறையில் நிறைவேற்றுவதற்கு நம் வாசகர்களுக்குத் துணைபுரிந்திருப்போம் என்றும் நம்புகிறோம்.

தனிச் தேர்ச்சி பெற்றவருக்கும் (specialist) சாதாரணக் குடி மகனுக்கும் நாம் இப்பொழுது பொதுவாகப் படித்தவைகளிலிருந்து சில முக்கியப் படிப்பினைகளை நினைவூட்டுவது நலம் பயக்கலாம். இப் படிப்பினைகளை அவர்களுடைய அனுபவங்களின் மூலம் சோதித்து உண்மையென உணரும்போது அவற்றைப் பயன்படுத்தவும், குறை

பாடுள்ளது என அறியும்போது அவற்றைச் சரிசெய்து கொள்ளவும் இது பயன்படலாம்.

## அரசியலின் ஆறு படிப்பினைகள்

### மாற்றத்தின் விதி

அனவரதமும் மாறிக்கொண்டேயிருக்கிறது என்னும் உண்மை பிரதானமானதோர் உண்மையாக இருக்கிறது. நீக்ரோ நாடோடிப் பாடல் ஒன்றில் சொல்லப்பட்டிருக்கும் முதுமைபெற்ற நதியைப் போன்று ஒவ்வொன்றும், 'உருண்டுகொண்டே போகின்றது' (Panta rhei). இவ்விதமான சுழற்சிக்குத் தகுந்த முறையில் நம்மையும், நம் நிறுவனங்களையும் சதா மாற்றியமைத்துக்கொண்டே இருக்க வேண்டியிருக்கிறது. ஏனெனில், இவ்வித முடிவுறுத சுழற்சிகளில் நாமே ஒரு பாகமாக இருக்கிறோம். 'சமூகக் கட்டமைப்பிற்குள் மாற்றப் பிரச்சினைகளுக்குத் தீர்வுகாண மனிதன் எடுத்துக்கொண்ட முயற்சிகளைப் பகுத்தாய்வதும், பதிவுசெய்து வைத்துக்கொள்வதுந் தான் அரசியல் வரலாறு ஆகும்' என்று பேராசிரியர் சிலிசிங்கர் (Schlesinger) கூறுகிறார்.

மூன்று எச்சரிக்கைகள் இங்கு அவசியமாகின்றன. முதலாவது, விளைவுகள் நேர்வதற்கு எத்துணைத் தாமதம் ஆகிறது என்பதை நாம் நினைவில் கொள்ளவேண்டும். விளைவுக்கும், காரணத்துக்கும் இடையே நேரும் 'காலதாமதம்' (Time - lag) எத்துணை முக்கியமானது என்பதையும் நினைவில் கொள்ளவேண்டும். உண்மையோடு ஒவ்வாத வகைகளில் மனிதன் இன்னும் நினைக்கவும், உணரவும், பேசவும் செய்துகொண்டே இருக்கிறான். மனிதன் தன் தனி வாழ்க்கையிலோ அல்லது கூட்டு வாழ்க்கையிலோ விஷயங்களை விரைவாகக் 'கிரகிக்கும்' தன்மையற்று இருக்கிறான். பொருளாதாரப் பரிணாம வளர்ச்சிக் கட்டங்களும், அறிவு மலர்ச்சிக் கட்டங்களும் ஒன்றின்மேல் ஒன்று படிந்திருக்கின்றன. புதியன எவ்வகையானும் பழையனவற்றை உடனடியாகத் துரத்திவிடுவதும் இல்லை; பழையன வெளிப்படையாக ஒவ்வாதன என்று உணரும்போதுகூட அவை கழிக்கப்படுவதில்லை.[1] மாற்றம் நியாயமாகத் தவிர்க்கப்பட முடியாததாயிருக்கலாம். ஆனால், உடனடியாக அது ஏற்படுவது அபூர்வம். இரண்டாவதாக, வேண்டுமென்றே உண்டாக்கும் மாற்றங்களுக்கு வரையறை உண்டு என்பதையும் இதனுடன்

[1] எடுத்துக்காட்டாக அடிமை முறையைப் பாருங்கள். அது நம்முடைய காலம் மட்டும் தொங்கி நிற்கிறது. அல்லது அணுச் சக்தியின் நல்லதும், கெட்டதுமான உட்தன்மையை நாம் இன்னும் கிரகிக்க முடியவில்லை.

சேர்த்து ஒப்புக்கொள்ளவேண்டும். 'முன்னரே நிர்ணயிக்கப் பட்டதும், பொதுவாக அறிந்துகொள்ளப் பட்டதுமான அதிகார எல்லைக் கோட்டிற்குள்ளாகத்தான் ஒரு தலைவர் பணியாற்ற முடியும். இவைகளில் சில தாமாகவே உண்டானவையாகவும், சில வேண்டு மென்றே உண்டாக்கப்பட்டனவாகவும் இருக்கும்' என்று மிரியம் (Merriam) கூறுகிறார். சர்வாதிகாரிகளோ அல்லது புரட்சிகளோ தம் நோக்கங்களின் ஒரு பகுதியையே பூர்த்தி செய்துகொள்ள முடிகிறது என்ற இதன் உண்மையை எடுத்துக் காட்டுகிறது. மூன்றாவதாகச் சாதாரண மனிதனில் காணப்படும் திகிலுண் டாக்கும் மந்த கதியை நினைவிற் கொள்ளவேண்டும். எந்த அரசியல் விஞ்ஞானிக்கும் இதை ஒதுக்கித்தள்ளும் துணிவிராது. மனிதன் இயல்பாகவே ஓர் 'ஒப்புக்கொள்ளும்' பிராணி. 'இல்லை' என்று சொல்வதைக் காட்டிலும் 'ஆம்' என்று சொல்வது அவனுக் குச் சுலபமாக இருக்கிறது. சோதனை மிக்கதும், கடினமானதுமான சூழ்நிலைகளை, மறுப்போ அல்லது எதிரான கிளர்ச்சியோ இன்றிப் பல நூற்றாண்டுகளுக்கு அவன் சகித்துக்கொண்டிருக்க முடியும். நேரடி யான எதிர்ப்பைக் காட்டிலும் சினமூட்டும் இவ் வுண்மை, வருங்காலச் சீர்திருத்தவாதிக்குப் பெருத்த இடையூறாக இருப்பதை உணர்வான். 'எதற்காக இந்த வீண் தொந்தரவு' என்ற நினைப்பு அரசியல் சமூக முன்னேற்ற நம்பிக்கைகள் பலவற்றின் சமாதியாக விளங்குகிறது! எவற்றையெல்லாம் மக்கள் பொறுத்துக்கொள்கிறார்கள் என்பது மிகவும் ஆச்சரியமாக இருக்கிறது. எத்தனை அளவிற்கு இவ்வித மாக மக்கள் 'பொறுத்துக்கொள்வார்கள்' என்பதைச் சரியாக அறிந்துகொள்வது அரசியல்வாதிகளின் பிரச்சினையாகும். இவ் வாறாகப் பொறுமை, நீண்டதொரு காலத்துக்கு இருக்கத்தான் செய்கின்றதெனினும், ஒருநாள் அதில் விரிசல் கண்டுவிடுகிறது. ஏன் அவ்வளவு காலத்திற்கு மாத்திரம் பொறுத்திருந்தார்கள், அப்புறம் ஏன் பொறுத்துக்கொள்ளவில்லை என்பது விளங்காத புதிராகும். அதனால்தான் புரட்சிகள் அரசாங்கங்களைத் திகைக்க வைத்து விடுகின்றன.

## சமரச உடன்பாட்டு விதி

அரசியலானது விஞ்ஞானமாக இராத காரணத்தால், கூட்டு வாழ்க்கையின் சிக்கல்களுக்கு அது அளிக்கும் தீர்வுகள் முழுமையற்ற வையும், ஆய்வு நிலையானவையுமாகும் என்பது நமது இரண்டாவது முடிவாகும். 'எவையெல்லாம் தீர்மானமான முடிவுகளாக இருக்கும் என்று ஒரு கையேட்டில் வரிசையாக எழுத முயன்றால், பொது மெய்ம்மை சார்ந்த பகுதியை விட்டு வெளியேறும் அதே கணத்தில் மிகத் தீவிரமான வாத—எதிர்வாதங்களுக்கு உள்ளாவதை நீங்கள்

அறிந்துகொள்வீர்கள்' என்று வின்ஸ்டன் சர்ச்சில் (Winston Churchill) முன்னொரு சமயத்தில் எழுதினர். இதன் விளைவாக உங்கள் கேள்விகளுக்குத் துல்லியமானவையும், முழுமையானவையுமான விடைகளை அரசியலில் நீங்கள் பெறுவது அபூர்வமாகும். இதற்கு மாருக, இன்னொரு அரசியல்வாதியாகிய யூஸ்டேஸ் பெர்சி பிரபு (Lord Eustace Percy) கூறுவதை மேற்கோள் காட்டலாம். 'தீவிரமான வரையறைக்குட்பட்ட மனங்களுக்கும், அதேபோன்று நெகிழாத் தன்மையுடன் விளங்கும் அக்கறைகளுக்கும் இடையே சமரச உடன்பாடுகளை ஏற்படுத்த எடுத்துக்கொள்ளும் விடாமுயற்சிகளே இன்றைக்குள்ள அரசியலாகும்.'

உண்மையில் சமரச உடன்பாடானது அரசியலின் சாரம் போன்றது. அதை அவ்வாறே ஒப்புக்கொள்ளவும் வேண்டும். கோழைத்தனமாகக் கொள்கைகளை விட்டுக்கொடுப்பது சமரச உடன்பாடு ஆகாது என்பதை அதைச் சரியாக அறிந்துகொண்டால் புரிந்துகொள்ள முடியும். ஆனல், அதற்கு மாருக, மற்றவர்களைப் பற்றிக் கருதுவதற்குரிய விருப்பம், அல்லது தவிர்க்கமுடியாத விட்டுக்கொடுப்பது என்று ஆகும். இது இல்லாமல் எந்தவிதமான ஒழுங்கான பொது வாழ்க்கையும் அமையமுடியாது. இப் பொருளின் மீது ஜான் மார்லி (John Morley) அவர்கள் எழுதிய மிகச் சிறந்த கட்டுரையை மாணவர் ஒவ்வொருவரும் அவசியம் படித்தாக வேண்டும். அவர் கூறுகிருர்: 'அபிப்பிராயங்களை உருவாக்குவதில் விவேகமான ஊசலாட்டம், அவற்றை வெளியிடுவதில் விவேகமான அடக்கம், அவற்றை அடைய முயல்வதில் மந்த இயல்பு ஆகியவற்றையும், மறைவான வஞ்சகம், சுயமான பொய்த் தோற்றம், வேண்டுமென்றே செய்யும் பாசாங்கு, சோம்பல் தன்மை, இழிந்த திடமற்ற நிலை ஆகியவற்றையும் இரண்டாகப் பிரிக்கும் கோட்டின் மீது சமரசம் சம்பந்தப்பட்ட முக்கிய பிரச்சினை திரும்புகிறது.'

ஒரு சுதந்தரச் சமுதாயத்தில் எந்த ஒரு தனியாளோ, தொகுதியோ, நாடோ, அதைத் தன் சொந்த வழியில் இருக்க எதிர்பார்க்கக்கூடாது என்ற படிப்பினையை நாம் மனத்தில்கொள்ள வேண்டும். அது அவ்வாறு நேருமானுல் அது சம்பந்தப்பட்ட ஒவ்வொருவருக்கும் மிகவும் ஆபத்தானதாகும். மனிதன் உள்ளூர மிகவும் சுயநலமானவன். தன் சகாக்களின்மீது மிக்க அதிகாரம் வகிப்பதற்குரிய அறிவற்றவன். எனவே, ஒரு பிரச்சினையின் திருப்திகரமான தீர்வு என்பது வழக்கமாக ஒருவரையும் முழுவதாகத் திருப்தி செய்யாத ஒன்ருகும்.

## மனிதனின் குறைபாடுகள்

பொது வாழ்க்கையில் மனிதனின் சுயநலமும், அறியாமையும் மூன்றுவது உண்மைகளாம். மனிதனின் பொறியியல் அறிவு, சிறப்பாக அமைப்பு ஏற்படுத்தும் திறன், சுற்றுப்புறச் சூழ்நிலையின் மீது அவனுக்குள்ள கட்டுப்பாடு, சக வாழ்வு வாழும் மனிதன்மீது செல்வத்தின் அதிகாரம் ஆகியவற்றிற்கும் வறுமையையும், பாதுகாப்பின்மையையும் நீக்கிவிடுவதாலோ அல்லது யுத்தங்களையும் அவற்றுல் ஏற்படும் அபாயங்களையும் தவிர்ப்பதாலோ மக்களுக்கு நல்லதொரு வாழ்க்கையை ஆக்குவதில் ஏற்பட்ட தோல்விக்கும் இடையேயுள்ள மகத்தான வேறுபாடு பொது வாழ்க்கையில் நாம் காணும் உண்மையாகும். 'Salt and Leaven' என்ற தமது நூலில் ஹே (Hay) அவர்கள் குறிப்பிட்டிருப்பதுபோல, நபர்களின் உண்மையான தேவைகளைத் திருப்தி செய்யவும், அவற்றைப் புரிந்துகொள்ளவும் மனிதன் திறமையற்றவன் என்று தோன்றுகிறது. 'பிற மனிதர்களைச் சூழ்ச்சித் திறத்துடன் அடக்கியாளும் கலையானது சிறப்பானதொரு நுட்பத் திறமை பெற்றிருக்கிறது. ஆனுல், பிறரைப் புரிந்துகொண்டு போற்றும் கலை அவ்வளவாக முன்னேற்றமடையவில்லை. கூட்டங்களை அடக்கியாளவும், அமைப்புக்குள் கொண்டுவரவும் தேவையான நுட்பங்கள் முன்னேற்றம் அடையும்போது அவை மிகுந்த பரப்பில் பிரயோகிக்கப்படுகின்றன. இவ்வாறு பிரயோகிப்பவர்களுக்கு நபர்களைப் புரிந்துகொள்ளும் திறன் குறைந்து விடுகிறது. ஏனெனில், வழக்கமாக அடக்கியாண்டு, சூழ்ச்சித் திறத்துடன் கையாண்டு, கட்டுப்பாடு செய்துவரும் ஒன்றின்மீது உண்மையான மரியாதை காட்டுவது இயலாத காரியம். எனவே, அங்கு விரோத மனப்பான்மையும், வேறுபாடும் காணப்படுகின்றன.'

தன் சகாக்கள்மீது அதிகமான ஆதிக்கம் செலுத்துவதற்கு மனிதன் தகுதியற்றவன். ஏனெனில், அவர்களின் தேவைகளை அறிந்துகொள்ளுமளவுக்கு அவன் பிறர் நலம் பேணுபவன் அல்லன். தன்னுடைய விருப்பங்களையும், நலன்களையும் சதா கருதாமல் பிறர் நலம் பேணுவது அவனுல் இயலாததாகும். அவனுடைய சொந்த உறவுகளில் அவன் அடிக்கடிக் காட்டுகின்ற தியாக உணர்ச்சியும், பொதுநலப் பண்பும், சமூக அமைப்பிற்குள் அவனுல் காட்டப்பட முடியவில்லை என்பது அவலமானதோர் உண்மையாகும். டாக்டர் நீபர் (Dr. Niebuhr) அவர்கள், 'நெறி தவருத மனிதனும், நெறியற்ற சமுதாயமும்' என்று எழுதுகிருர். அவர் எழுதியிருக்கும் தனித்தன்மைபெற்ற, ஆழ்ந்த கருத்துடைய நூலை நம் வாசகர்களுக்குச் சிபாரிசு செய்கிருேம். 'சமுதாயத்தின் தேவைகளுக்கும், உணர்ச்சிமிக்க மனச்சாட்சியின் ஆணைகளுக்கும் ஏதோ ஒரு சமரசமேற்படுத்த

முடியாத சச்சரவு இருப்பதாகத் தோன்றுகிறது.' 'தொகுதி–உறவுகள் அறத்தின் அடிப்படையில் அல்லாமல் அதிகார அடிப்படையில் அமைந்திருப்பதே இவ்விதச் சச்சரவின் காரணமாகும். சமூக அறிவும், நெறிமிக்க நல்லெண்ணமும் வளரச் செய்வதன் மூலம் இச் சச்சரவின் மிருகத்தனத்தைக் குறைக்கலாமேயொழியச் சச்சரவையே அகற்றிவிட முடியாது. அதிகாரத்துக்கு அதிகாரமே சவால் கொடுக்க முடியும்.'

## மனித இயல்பின் இரட்டைத் தன்மை

இவ்விதக் கருத்தை மிகையானதென்றும் எடுத்ததற்கெல்லாம் குறைகூறும் தன்மையோடு சேர்ந்தது என்றும் கூறி இதைத் தள்ளி வைத்துவிட ஒருவர் விரும்பலாம். ஆனால், இதன் ஆதாரமான உண்மை, மனித இயல்பு, மனித உறவுகள் ஆகியவற்றில் தமது ஆராய்ச்சியின்போது காணக்கிடைத்த இரட்டைத் தன்மையோடு பிணைந்து கிடக்கிறது. மனிதன் சமூக உணர்வு, தனியாள் உணர்ச்சி ஆகிய இரண்டும் பெற்றவன். அவன் ஒரு சுயநலமி; அதே சமயம் கூடிவாழும் இயல்புடையவன். ஒருமைப்பாட்டின் அளவை நாம் முயற்சிகள் பல செய்து அதிகப்படுத்தலாம். போராட்டத்தின் விரயத்தையும், அறியாமையையும் சுட்டிக்காட்டலாம். ஆனால், அவனுக்குள் காணப்படும் குறைபாடுகள், அவனது சுயநல நாட்ட உணர்ச்சிகளின் வெளியீடுகள் பலவற்றைத் தவிர்க்க முடியாததாக்குகின்றன. மனித இயல்பில் புரட்சிகரமான மாற்றம் ஏற்படாத வரையில் சச்சரவுகளை நீக்கிவிட முடியாது. இதுவரை அவ்வாறு மாற்றம் ஏற்படும் என்பதற்குரிய அறிகுறிகள் ஏதும் தென்படவில்லை.

அப்படியானால், அரசியலை நெறிக்குட்படுத்தும் முயற்சிகளையும், 'சச்சரவுகளின் மிருகத் தன்மையைக் குறைக்கும்' முயற்சிகளையும் கைவிட்டுவிட வேண்டும் என்பது பொருளாகாது. எதிர்க்கும் சக்திகளின் மனிதத் தன்மையை மறந்துவிடாமல் நினைவில் கொள்வதன்மூலம் ஓரளவுக்கு இதைச் சாதிக்க முடியும். பொறிகளாக அவைகளை நடத்த மறுப்பதன் மூலமும், அல்லது முடிவுகளுக்குரிய சாதனங்களாக அவைகளை நடத்த மறுப்பதன் மூலமும் இதைச் சாதிக்கலாம். நம் செயல்களனைத்தையும் தனியாள் வாழ்க்கை அளவாக மாற்றுவதன் மூலமும் இதைச் சாதிக்கலாம். நேர்மையற்றதும் ஆதிக்கவெறி கொண்டதுமான அதிகாரத்தின் சுழலிலிருந்து தனியாளின் வாழ்க்கையைக் காப்பாற்ற முயற்சி செய்கிறோம் என்பதை நாம் நினைவிற்கொண்டு இதைச் சாதிக்கலாம். 'திறமையையும், நல்ல குணத்தையும் எவ்வாறாகிலும் இணைப்பதுதான் நாம் செய்யவேண்டியதாகும். விஞ்ஞான ரீதியில் இயங்கும் மனத்தைக்

கருணையுள்ள இருதயத்தின் சேவைக்குப் படிய வைப்பதே நாம் செய்யவேண்டியதாகும். இவ்விதமான சவாலை ஏற்கெனவே ஏற்றுக் கொண்டுள்ள எண்ணற்ற ஆண், பெண் ஆகியவர்களின்மூலம் இந்தச் சவாலுக்கு நாம் பதில் சொல்லக்கூடும். (இவ்வாறு சவாலை ஏற்றுக்கொண்ட பலரை எனக்குத் தெரியும்.) இவர்கள் தங்கள் அறிவையும், ஆட்சித்துறை ஞானத்தையும் நற்பண்பின் சேவைக்கு அளித்திருக்கின்றனர். இவர்கள் அமைப்புக்களைப் பயன்படுத்தத் தெரிந்துகொண்டு வருகிறார்கள். ஆனால், அதே சமயத்தில் ஆண்களையும், பெண்களையும் தனிநபர்களாகக் கருதி நடத்தவும் தெரிந்திருக்கிறார்கள்' என்று 1948-ஆம் ஆண்டு மே மாதம் வானொலிப் பேச்சொன்றில் லிண்ட்சே பிரபு (Lord Lindsay) கூறினார்.

## அரசியலின் சிக்கல்கள் (The Complexities of Politics)

இப் பிரச்சினை நமது நான்காவது முடிவிற்கு நம்மைக் கொண்டு வருகிறது. இது சுலபமானதன்று. அரசியலை ஒருவர் அதிகமாகப் படிக்கப்படிக்க, அது எவ்வளவு கடினமானதொரு கலை என்பதை அதிகமதிகமாக அவர் உணரக்கூடும். அது மிகவும் எளிதானதென்று தன் நிறைவுணர்ச்சியோடு கூறுகின்றவர்களின் கூற்றிலிருந்து எவ்வளவு தொலைவானது என்பதையும் உணரக்கூடும். மனிதனின் எண்ணற்ற பல்குண வகைகளும், விவகாரங்களும், நம்மைத் திக்கு முக்காடச் செய்கின்றன. நமக்குக் கிடைத்திருக்கும் சாதனங்களோ போதுமானவையாக இல்லை. நம்முடைய குறுகிய நோக்கமும், வெறுப்புக்களால் பீடிக்கப்பட்டிருப்பதும், நாம் வாதிக்க முடியாத அனுமானங்களும் நமக்கிருக்கும் இடையூறுகளில் சிலவாகும். 'சில கோட்பாடுகள் ஒரு குறிப்பிட்ட காலத்தில் கோட்பாடுகளாகத் தோன்றாமல், மனித மனத்தின் தவிர்க்கமுடியாத வகைகளாகத் தோன்றுவதுண்டு. இவைகளைச் சரியான அபிப்பிராயங்களாக மனிதர்கள் எடுத்துக்கொள்வதில்லை. ஏனெனில், அவை மனித மனத்தின் பாகமாகவே ஆகிவிட்டன. அவைகள் மனத்தின் ஆழத்தில் இருப்பதால் அவற்றை அவர்கள் உணரவே முடிவதில்லை. அவற்றை அவர்கள் தேடுவதில்லை. ஆனால் அவைகளின் மூலமாகப் பிற விஷயங்களைத் தேடுகிறார்கள். சரியானதுதான் என்று எடுத்துக் கொள்ளும் பருப்பொருள் தன்மையற்ற இக் கருத்துக்கள்தான் ஒரு காலத்தை விளக்கும் கூறுகளாக இருக்கின்றன. கேந்திரத்திலுள்ள கண்ணுக்குப் புலனாகாத இக் கருத்துக்கள் உண்மை நிகழ்ச்சிகளாகக் கருதப்பட்டு விடுகின்றன. ஒரு காலத்தின் பொருள் தன்மைகளின் ஆதாரமாக இவை விளங்குகின்றன.' இதனோடு பர்ன்ஹாம் (Burnham) அவர்களின் சொற்களையும் இணைத்துப் பார்க்கலாம். 'மனிதர்களின் சொற்களையும், நம்பிக்கைகளையும், அவைகளின் தோற்ற

மதிப்பையுங்கொண்டு அரசியல் வாழ்வின் விதிகளைக் கண்டுபிடிக்க முடியாது.'

சரியானதுதான் என்று எங்கும் எடுத்துக்கொள்ளப்படும் நம்பிக்கைகளை, அறிவுத் திறத்தால் கூர்ந்து அறிந்துகொள்ளக் கூடியவர்களே, அவர்கள் வாழும் காலம், வரப்போகும் சந்ததி ஆகியவற்றின் முன்னேற்றத்திற்கு உண்மையாகத் துணைபுரிபவர்களாவர் என்பது இதிலிருந்து பெறப்படுகிறது. இவ்வாறு ஏற்றுக் கொள்ளப்படும் நம்பிக்கைகளைக் கனவு நிலையிலிருந்து பகுத்தறிவின் ஒளிக்குள் இவர்கள் கொண்டுவருகிறார்கள். அவை பொய்யாக இருக்குமானால் அவற்றை எதிர்க்கிறார்கள். அல்லது வேண்டுமென்றே ஒப்புக்கொண்ட அறிவுணர்ச்சியோடு அவற்றை உண்மைகளாகத் திரும்பக் கூறுகிறார்கள்.

## 'மறைவில் வாழ்ந்தோரின் விசுவாசமுள்ள வாழ்க்கை'

நம்முடைய பிரச்சினைகளின் பல்வகைகளாலும், நாம் அவற்றைச் சமாளிப்பதற்குப் போதுமான சாதனங்கள் இன்மையாலும், நாம் சில சமயங்களில் காரியங்கள் ஒன்றும் மோசமாகிவிடவில்லை என்று நினைக்கிறோம். சிற்சில சமயங்களில் ஏற்படும் பிற்போக்குகளைத் தவிரப் பொதுவாக உண்மையான முன்னேற்றம் ஏற்படத்தான் செய்திருக்கிறது என்று நாம் ஆச்சரியப்படுகிறோம். ஜார்ஜ் எலியட் (George Eliot) அவர்கள் எழுதிய 'Middlemarch' நூலில் இதற்கு மிகக் கவர்ச்சிகரமான சொற்றொடரில் பதிலளிக்கப்பட்டிருக்கிறது. 'உனக்கும், எனக்கும் காரியங்கள் இருந்திருக்க வேண்டிய அளவுக்கு மோசமாக இல்லை என்றால் அதற்குக் காரணம் எண்ணற்ற பலர் மறைவில் மிக விசுவாசமுள்ள வாழ்க்கையை நடத்தி இறுதியில் பார்ப்போரற்ற கல்லறைகளில் துஞ்சுகிறார்களே அவர்களால்தான்.' எண்ணற்ற பல சாதாரண மக்கள் அன்றாடம் தங்களது கடமையைச் செவ்வனே புரிந்தார்கள். அவர்கள் வெளியுலகத்துக்குக் காணப்படவில்லை. தங்களுடன் வாழும் சகோதரர்களிடத்தில் அன்பு காட்டினோம் என்பதில் பூரண திருப்தி அடைந்தார்கள் அவர்கள்.

## தனியாளின் நிலை

இந் நூலின் பல பக்கங்களிலும் நாம் அடிக்கடிக் குறிப்பிட்ட ஒரு அம்சந்தான் ஐந்தாவது படிப்பினையாகும். பேராசிரியர் மேயர் (Professor Mayer) தமது 'Political Thought', 'The European Tradition' என்ற நூலில் அரசியலில் உள்ள நான்கு பிரச்சினைகளை இனம் பிரித்துக் காட்டுகிறார். சுதந்தரம், சமத்துவம் இவை போன்ற

தத்துவங்களின் பொருள்; திருச்சபைகள், இதர தொகுதிகள் ஆகிய வற்றிற்கும் அரசுக்கும் இடையேயுள்ள உறவு; சொத்துபற்றிய பிரச்சினையின் பல அம்சங்கள்; அமைதிக்கும், பன்னாட்டு உறவு களுக்குமான நிபந்தனைகள் ஆகியவையே இவை. இதன் கடைசி அம்சத்தை, இந் நூலின் எல்லைக்கு அப்பாற்பட்டதாகக் கொண்டு அதை நீக்கி, இதர மூன்றையும் பார்க்கும்போது அவையனைத்தும் ஒரே அடிப்படைப் பிரச்சினைகளாக, உருவாவதை நாம் பார்க்கலாம். தனியாளுக்கும், அரசுக்கும் இடையேயுள்ள உறவைப்பற்றியதே இப் பிரச்சினையாகும். இவ் வுறவுச் சச்சரவுடன் கூடியதாக இருக்கலாம். அல்லது கூடி வாழும் இயல்பினதாக இருக்கலாம் அல்லது சுதந் தரமானதாகவும் இருக்கலாம். ஒவ்வொரு குறிப்பிட்ட அரசின் இயல்பிற்கு ஏற்ப இதுவும் மாறிக்கொண்டே இருக்கும். ஒவ்வோர் அரசும் எந்த அளவுக்கு ஆக்கப் பணிகளுக்கும், கூட்டுறவுப் பணி களுக்கும் அந் நாட்டு மக்களுக்குத் தருணங்களை வாய்க்கச் செய் கின்றதோ, அந்த அளவுக்கு இதுவும் மாறும். எந்த அளவுக்கு அந் நாட்டு மக்களுக்குத் துவக்க உரிமை அளிக்கப்பட்டிருக்கிறது என்பதையும், அரசு தங்களது நலனுக்காக இருக்கிறது என்ற உணர்ச்சியை எந்த அளவுக்கு உண்டாக்கி இருக்கிறது என்பதையும், தங்களுக்கு நலம் பயக்காத நோக்கங்களை அரசு பின்பற்றுவதில்லை என்ற உணர்ச்சியையும் பொறுத்து இது மாறும் தன்மையது. 'தனியாளின் சுய நிர்ணய உரிமையைப் பிரதான முக்கியமுள்ளதாகக் கருதுபவர்களுக்கும், அரசு எல்லாவற்றிற்கும் மேலானதொரு உண்மை என்பதை ஒப்புக்கொள்வோருக்கும் இடையே உண்மை யானதும், குறைக்க முடியாததுமான வேறுபாடு இருக்கத்தான் செய் கிறது' என்று வெல்டன் (Weldon) அவர்கள் கூறிய சொற்களோடு நாம் இதை முடிக்கலாம்.

## மதிப்பீடுகளின் பிரச்சினை

முடிவாக, இவை எல்லாவற்றிலும் பொதிந்து கிடக்கும் உண்மைக்கு வருவோம். அரசியல் என்பது இறுதியாகப் பார்க்கப் போனால் ஒரு மதிப்பீட்டுப் பிரச்சினையாகத்தான் இருக்கிறது. மனிதனுக்கு எது முக்கியமானது? மனிதனுக்காக முக்கியமாகிறது எது? இக் கேள்விக்கு அரசியல் நூல் பதிலளிக்க முடியாது. முடிவு கூறுவதற்கு அது யாதொரு தராதர அளவுகோலையும் நமக்கு அளிக்க வில்லை. இருப்பினும் நாம் முடிவு சொல்லியாக வேண்டும். நமக்கும், சமுதாயத்துக்கும் எது நல்லது என்பதை உணர்ந்தோ அல்லது உணராமலோ செய்கின்ற தேர்வுத் தீர்மானங்களே நமது வாழ்க்கை யின் ஒவ்வொரு செயலுமாகும். நல்லது என்று நாம் சொல்லுவதன் அளவுகோல் எது? இவ் வகண்டத்தைப்பற்றி நாம் கொண்டிருக்கும்

பொதுக் கருத்தைப் பொறுத்தது இது. அரசியல் துறையில் அல்லாமல் இறை இயலி (Theology)லும், அறவியலிலும் (Ethics) இதற்குரிய விடைகளைக் காணலாம்.[1]

கான்டர்பரியின் ஆர்ச் பிஷப்பாகப் (Arch-Bishop of Canterbury) பின்னர்ப் பதவியேற்ற டாக்டர் வில்லியம் டெம்பிள் (Dr. William Temple) அவர்கள் கல்வியைப்பற்றிக் கீழ்க்கண்ட விளக்கம் அளித்தார்.[2] 'முழு அறிவோடும், மிக உயர்ந்ததும் சாத்தியமானதுமான இலட்சியங்களோடும் ஒரு காலத்தின் போக்குகளுக்கு ஆண்களும், பெண்களும் துணைபுரியச் செய்வது அல்லது எதிர்க்கச் செய்வதுதான் கல்வியின் நோக்கமாகும்.' சமூக உறவுக் கலையைப் பயில்வதற்கு வேண்டிய மூலப்பொருள்களையும், அறிவையும் அரசியல் தரக்கூடும். ஆனால், இலட்சியங்களை அது தரமுடியாது. மனிதனையும், அகண்டத்தையும்பற்றி நிரூபிக்க முடியாத சில அனுமானங்களின்பேரில் தனியாள்மீதுள்ள நம்பிக்கையானது வேரூன்றியிருக்கிறது. இவ் வனுமானங்கள் எல்லோருடைய ஒப்புதலையும் பெற முடியாது. இத்துடன் அதை விட்டுவிட வேண்டியதுதான்.

இந் நூலின் துவக்கத்தில் சாதாரண மனிதனுக்கு அரசியலின் முக்கியத்தைப்பற்றி வலியுறுத்தினோம். இந் நூல் அந்த முக்கியத்தை உறுதிப்படுத்தியிருக்கும் என்று நம்புகிறோம். அரசியல் எல்லாமாகிவிடாது என்பதை நமக்கும் நம் வாசகர்களுக்கும் நினைவூட்டாமல் இதை முடிக்கமுடியாது. மனித வாழ்க்கையின் பிரச்சினைகளுக்கு உண்மையான விடைகள் பாராளுமன்றம், வாக்குச்சாவடி ஆகியவற்றிற்கு வெளியேதான் காணக் கிடைக்கும். இரு நூறு ஆண்டுகளுக்கு முன்பு டாக்டர் ஜான்சனின் (Dr. Johnson) சொற்களுக்கு எவ்வளவு கருத்து இருந்ததோ அதே உண்மை இன்னும் உண்டு.

'மனித இருதயம் படும் துன்பங்களில் மிகச் சிறிய ஒரு பகுதியே அரசர்களாலும், சட்டங்களாலும் உண்டாக்கப்பட முடியும் அல்லது துடைக்கப்பட முடியும்.'

[1] ஆதி கிரேக்கர்கள் அரசியலுக்கும் அறவியலுக்கும் வேறுபாடு காணவில்லை. இடைக் காலத்தில் வாழ்ந்தோரும் இவ் விரண்டிற்கும், இறையியலுக்கும் இடையே வேறுபாடு காணவில்லை. ஒருவேளை அது சரியாக இருந்திருக்கலாம்.

[2] 40 ஆண்டுகளுக்கு முன்பு பிரிஸ்டல் (Bristol) நகரில் நிகழ்த்திய சொற்பொழிவொன்றிலிருந்து இது எடுக்கப்பட்டது. இச் சொற்பொழிவு நூலாக வெளியிடப்படவில்லை. நம்முடைய குறிப்புக்களிலிருந்து மேற்காணும் மேற்கோளை வெளியிட அப்பொழுதே டாக்டர் டெம்பிள் அவர்கள் அனுமதி தந்தார்கள்.

# கலைச்சொல் அகராதி

| | |
|---|---|
| அதிகாரத்துவம் | Authoritarian |
| அதிகாரக் குவிப்பு | Centralisation |
| அதிகார வர்க்கம் | Bureaucracy |
| அதிகாரப் பங்கீடு | Distribution of Powers |
| அதிகாரப் பிரிவினை | Separation of Powers |
| அமைச்சரவை | Cabinet |
| அரசாங்கம் | Government |
| அரசியலமைப்பு | Constitution |
| அரசியலமைப்புத் திருத்தம் | Amendment of the constitution |
| அரசியல் கடமை | Political obligation |
| அரசியல் சூழ்ச்சித்திறம் | Diplomacy |
| அரசு | State |
| ஆட்சி குலைந்த நிலை | Anarchy |
| ஆட்சித் துறை | Administration |
| ஆணை | Decree |
| இடைக்காலம் | The middle ages |
| இணங்காதார் | Non conformists |
| இயற்கை நிலை | State of Nature |
| இறைமை | Sovereignty |
| இறைவழி உரிமை | Divine Right |
| உயர்குடிப் பிறந்தோர் ஆட்சி | Aristocracy |
| உயர் நீதி மன்றம் | Supreme Court |
| உருமலர்ச்சி, பரிணமம் | Evolution |
| எதேச்சாதிகார ஆட்சி | Autocracy |
| ஏகாதிபத்தியம் | Imperialism |
| ஐக்கியநாட்டுச் சபை | The United Nations Organisation |
| ஒப்புதல் | Consent |
| ஒப்பந்தவாதி | Contractualist |
| குடிமை | Citizenship |
| குடியுரிமைப்பேறு | Naturalisation |
| குடியரசு | Republic |
| கூட்டுடைமை வாதம் | Collectivism |
| கூட்டாட்சி | Federation |
| கொடுங்கோன்மை | Tyranny |
| சமயச்சார்புள்ள அரசு | Theocratic State |

| | |
|---|---|
| சமுதாய ஒப்பந்தம் | Social contract |
| சட்டத் தொகுப்பு | Code |
| சர்வதேச சங்கம் | League of Nations |
| சர்வாதிகார அரசு | Totalitarian State |
| சர்வாதிகாரம் | Dictatorship |
| சிறு குழுவாட்சி | Oligarchy |
| தலையிடாக் கொள்கை | Laissez faire |
| தடுப்பாணை | Veto |
| தனியார் துறை | Private sector |
| திருச்சபை | Church |
| துவக்க உரிமை | Initiative |
| நகர அரசு | City State |
| நடுவர் தீர்ப்பு | Arbitration |
| நாட்டினம் | Nationality |
| நிலப்பிரபுத்துவம் | Feudalism |
| நெகிழும் அரசியல் அமைப்பு | Flexible constitution |
| நெகிழா அரசியல் அமைப்பு | Rigid constitution |
| நேரடி மக்களாட்சி | Direct Democracy |
| பழைமை விரும்பிகள் | Conservatives |
| பன்னாட்டுச் சட்டங்கள் | International laws |
| பிரதிநிதித்துவம் | Representation |
| பிரபுக்கள் சபை | House of Lords |
| பேரரசு | Empire |
| பொதுநல அரசு | Welfare State |
| பொதுநலக்கூட்டு | Commonwealth |
| பொதுமக்கள் அபிப்பிராயம் | Public opinion |
| பொது விருப்பாற்றல் | General will |
| மக்கள் சபை | House of Commons |
| மக்கள் தீர்ப்பு | Referendum |
| மக்கள் ஜனநாயகம் | People's Democracy |
| மரபுரிமை | Inheritance |
| முடியாட்சி, மன்னராட்சி | Monarchy |
| வர்க்கப் போராட்டம் | Class struggle |
| வரம்பிலா அரசு | Absolute State |
| வழக்காறு | Convention |
| விசாரணைக் குழு | Tribunal |
| ஜனநாயகம் | Democracy |

# BIBLIOGRAPHY

## AND SUGGESTIONS FOR FURTHER READING

### I. General Works

#### A. *Introductory*

BARKER, Sir Ernest. *The Citizen's* (Cambridge University Press), 1937

BOWMAN, E. F. *Introduction to Political Science* (Methuen), 1927

COLE, G. D. H. *Social Theory* (Methuen), 1920

GARNER, J. W. *Introduction to Political Science and Government* (American Book Co., N.Y.), 1910

GETTELL, R. G. *Introduction to Political Science,* Revised edition (Ginn, Boston), 1922

GINSBERG, M. *Sociology* (Home University Library), 1934

JENKS, E. *The Ship of State* (Duckworth), 1949

LASKI, H. J. *An Introduction to Politics* (Allen and Unwin), 1931

LEACOCK, S. D. *Elements of Political Science* (Constable), 1921

MABBOTT, P. J. *The State and the Citizen* (Hutchinson), 1948

SEELEY, Sir John. *Introduction to Political Science* (Macmillan), 1896

SMELLIE, K. B. *Civics, The How and Why of Self-government* (Bell), 1939

#### B. *More Advanced Works*

BARKER, Sir Ernest. *Reflections on Government* (Oxford University Press), 1942

CATLIN, G. E. C. *The Science and Method of Politics* (Kegan Paul), 1926

— *A Study of the Principles of Politics* (Allen and Unwin), 1930

GARNER, J. W. *Political Science* (American Book Co.), 1928

GETTELL, R. G. *Political Science,* Revised Edition (Ginn, Boston), 1949

HAINES, C. G. *Principles and Problems of Government* (Harper), 1926

LASKI, H. J. *The State in Theory and Practice* (Allen and Unwin), 1935

LORD, A. R. *Principles of Politics* (Oxford University Press), 1921

MACIVER, R. M. *Community* (Macmillan), 1917

— *The Modern State* (Oxford University Press), 1926

— *The Web of Government* (Oxford University Press), 1947

MCLEOD, W. *Origins and History of Politics* (Willey Social Science Series, N.Y.), 1931

MERRIAM, C. E. *Systematic Politics* (Chicago University Press), 1945
SIDGWICK, H. *Elements of Politics* (Macmillan), 1920
SPENDER, J. A. *The Government of Mankind* (Cassell), 1938
WILSON, F. G. *Elements of Modern Politics* (McGraw Hill), 1936
WILSON, T. Woodrow. *The State* (Harrap), 1919

## II. WORKS DEALING MAINLY WITH THE THEORY OF POLITICS

ALLEN, C. K. *Democracy and the Individual* (Oxford University Press), 1945
BOSANQUET, B. *The Philosophical Theory of the State* (Macmillan), 1920
BURNS, C. D. *Political Ideals*, 4th edition (Oxford University Press), 1929
DEWEY, J. *Individualism, Old and New* (Allen and Unwin), 1931
GREEN, T. H. *Principles of Political Obligation* (Longmans), 1895
HOBHOUSE, L. T. *Elements of Social Justice* (Allen and Unwin), 1921
— *The Metaphysical Theory of the State* (Allen and Unwin), 1922
HOCKING, W. E. *The Lasting Elements of Individualism* (Oxford University Press), 1937
— *Man and the State* (Yale University Press), 1926
LASKI, H. J. *Authority in the Modern State* (Oxford University Press), 1919
— *Problem of Sovereignty* (King), 1917
LEACOCK, S. D. *The Unsolved Riddle of Social Justice* (Lane), 1920
LLOYD, R. *The Glorious Liberty* (Longmans), 1946
MANNHEIM, K. *Man and Society in an Age of Reconstruction* (Kegan Paul), 1940
WARD, P. W. *Sovereignty* (Routledge), 1928

## III. WORKS DEALING MAINLY WITH THE PRACTICE OF POLITICS

### A. *General*

BENTLEY, A. F. *The Process of Government* (University of Chicago Press), 1908
BRYCE, Lord. *Modern Democracies* (Macmillan), 1921
CORRY, J. A. *Democratic Government and Politics* (University of Toronto), 1946
FINER, H. *The Theory and Practice of Modern Government* (Methuen), 1932
FRIEDRICH, C. J. *Constitutional Government and Politics* (Harper), 1937
LASKI, H. J. *A Grammar of Politics* (Allen and Unwin), 1925
LASSWELL, H. D. *Politics, Who Gets What? How? When?* (McGraw Hill), 1936

LINDSAY, Lord. *The Modern Democratic State* (Oxford University Press), 1943
MARRIOTT, Sir J. A. R. *The Mechanism of the Modern State* (Oxford University Press), 1927
ROBSON, W. A. *Civilisation and the Growth of Law* (Macmillan), 1935
SAIT, E. C. *Political Institutions* (Appleton Century, N.Y.), 1938

B. *Particular Countries*

BEARD, C. A. *American Government and Politics* (Macmillan), N.Y.), 4th edition, 1924
BERDYAEV, N. *Origin of Russian Communism* (Bles), 1937
CECIL, Lord Hugh. *Conservatism* (Home University Library), 1912
CHASE, E. P., VALEUR, R., and BUELL, R. L. *Democratic Governments of Europe* (Nelson), 1935
CORWIN, E. S. *The [American] Constitution and What it Means To-day* (Oxford University Press), 1946
GORDON, A. S. *Our Parliament*, 3rd edition (Hansard Society), 1948
HOBHOUSE, L. T. *Liberalism* (Home University Library), 1929
LASKI, H. J. *The American Democracy* (Allen and Unwin), 1948
MIDDLETON, W. L. *The French Political System* (Benn), 1932
MUIR, Ramsay. *How Britain is Governed* (Constable), 1937
OGG, F. A. *European Governments and Politics* (Macmillan, N.Y.), 1939
SMELLIE, K. B. *The American Federal System* (Williams and Norgate), 1928
SOLTAU, R. H. *French Parties and Politics* (Oxford University Press), 1930
THOMSON, D. *The Democratic Ideal in France and England* (Cambridge University Press), 1940
WEBB, S. and B. *Soviet Communism* (Longmans), 1935

IV. WORKS ON PARTICULAR TOPICS

A. *On the Problem of Freedom*

ACTON, Lord. *Lectures on the History of Freedom* (Macmillan), 1907
BURNHAM, J. *The Machiavellians, Defenders of Freedom* (Putnam), 1943
COBBAN, A. J. *Dictatorship* (Cape), 1939
FORD, G. S. *Dictatorship in the Modern World* (University of Minnesota Press), 1939
FROMM, E. *The Fear of Freedom* (Kegan Paul), 1942
JAEGER, M. *Liberty v. Equality* (Nelson Discussion Books), 1943
LASKI, H. J. *Liberty in the Modern State* (Faber and Faber), 1930

MARITAIN, J. *The Rights of Man and Natural Law* (Bles), 1944
MUIR, Ramsay. *Civilisation and Liberty* (Cape), 1940
ORTON, W. A. *The Liberal Tradition* (Yale University Press), 1945
POWICKE, Sir F. M. *History, Freedom and Religion* (Oxford University Press), 1938
SCHERGER, J. L. *The Evolution of Modern Liberty* (Longmans, N.Y.), 1904
TAWNEY, R. H. *Equality* (Allen and Unwin), 1931
WOOTTON, Barbara. *Freedom under Planning* (Allen and Unwin), 1945

B. *Morals and Politics*

CARRITT, E. F. *Ethical and Political Thinking* (Oxford University Press), 1947
CROCE, B. *Politics and Morals* (Allen and Unwin), 1936
DICKINSON, G. Lowes. *A Modern Symposium* (Dent), 1930
NIEBUHR, Reinhold. *Moral Man and Immoral Society* (Scribner), 1933
—— *The Nature Destiny of Man* (Nisbet), Vol. I, 1946, Vol. II, 1948
STAPLETON, L. *Justice and World Society* (Oxford University Press), 1944
WELDON, T. D. *States and Morals* (Murray), 1946

C. *Psychology and Politics*

KOHN, H. *Force or Reason?* (Oxford University Press), 1937
LEBON, G. *The Crowd, A Study in Collective Psychology* (T. Fisher Unwin), 1896
MURCHISON, C. *Social Psychology, The Psychology of Political Determination* (Clark University Press), 1929
ORTEGA Y GASSETT, J. *The Revolt of the Masses* (Allen and Unwin), 1932
RUSSELL, B. *Power* (Arnold), 1938
SMELLIE, K. B. *Reason in Politics* (Duckworth), 1939
WALLAS, Graham. *The Great Society* (Macmillan), 1914
—— *Human Nature and Politics* (Constable), 1914
WHITEHEAD, T. N. *Leadership in a Free Society* (Oxford University Press), 1937

D. *Economics and Politics*

BORKENAU, F. *Socialism, National or International?* (Routledge), 1942
BURNHAM, J. *The Managerial Revolution* (Putnam), 1943
COLE, G. D. H. *Some Relations between Political and Economic Thought* (Macmillan), 1934
LIPPMANN, W. *The Good Society* (Allen and Unwin), 1937
LEWIS, W. A. *Principles of Economic Planning* (Dobson), 1949

MERRIAM, C. E. *The Role of Politics in Social Change* (Chicago University Press), 1936
SHAW, G. B. *Everybody's Political What's What?* (Constable), 1944
— *The Intelligent Woman's Guide to Socialism, Capitalism, Sovietism and Fascism* (Constable), 1928
TAWNEY, R. H. *The Sickness of an Acquisitive Society* (Allen and Unwin), 1920

E. *Geography and Politics*

MACKINDER, Sir H. *Democratic Ideals and Reality* (Constable), 1919
MOODIE, A. E. *The Geography Behind Politics* (Hutchinson), 1949

V. ORIGINAL TEXTS

The scope of this book does not allow of any treatment of the evolution of ideas concerning the State and Politics. Students should try, however, to read one of the following books, which give a brief and simple sketch of this evolution:

BURNS, C. D. *Political Ideals* (Oxford University Press), 1931
CROSSMAN, R. H. S. *Government and the Governed* (Christopher), 1939

Useful selections from the chief authors will be found in:

GETTELL, R. G. *Readings in Political Science* (Ginn, Boston), 1911
SAIT, E. C. and FOSTER, M. B. *Masters of Political Thought* (Harrap), Vol. I, 1942, Vol. II, 1947

But all students should endeavour to read at least two or three of the following works, which are indicated in their chronological order:

PLATO. *The Republic*
ARISTOTLE. *The Politics*
AUGUSTINE. *The City of God*
AQUINAS. *The Government of Princes*
DANTE. *On Monarchy*
MACHIAVELLI. *The Prince*
BODIN. *The Republic*
MORE. *The Utopia*
HOBBES. *Leviathan*
LOCKE. *Second Treatise on Civil Government*
MONTESQUIEU. *The Spirit of Laws*
ROUSSEAU. *The Social Contract*
BURKE. *Reflections on the French Revolution*
HEGEL. *Lectures on the Philosophy of History*
MARX and ENGELS. *The Communist Manifesto*
MILL. *Essay on Liberty*

